MADRAS UNIVERSITY TAMIL DEPARTMENT
PUBLICATION NO. 18 - 1.
*General Editor*:

DR. R. P. SETHU PILLAI, B.A., B.L., D. LITT.,
*Professor of Tamil*
UNIVERSITY OF MADRAS.

---

# TIRUVAYMOLI

## ĪṬṬIN TAMILĀKKAM

**VOLUME - I (Hymns 1 - 110.)**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பகவத் விஷயம்

# திருவாய்மொழி

பகுதி - 1 (முதற்பத்து)

## ஈட்டின் தமிழாக்கம்

சென்னைப்
பல்கலைக் கழகத்து ஓய்வு பெற்ற
தமிழ் விரிவுரையாளர்
வித்துவான்
பு. ரா. புருஷோத்தம நாயுடு
ஆக்கியது.




சென்னைப் பல்கலைக் கழகம்

1971

மூன்றும் பதிப்பு] [விலை ரூ. 17-00

Sri

Srīmatē Rāmānujāya namaha

# Bagavat Vishayam

# TIRUVĀYMOḺI

ĪṬṬIN TAMIḺĀKKAM

VOLUME - I (Hymns 1-110)

By

VIDVAN

B. R. PURUSHOTHAMA NAIDU

*Lecturer in Tamil (Retd.)*

UNIVERSITY OF MADRAS.




UNIVERSITY OF MADRAS

1971.

Third Edition.

# பொருளடக்கம்

# FOREWORD

The Sacred hymns of Saint Nammāḻwar known as Tiruvāymoḻi are held in the highest reverence by the Vaishnavas. Elaborate commentaries have been written on this work by competent scholars. The first of them is known as 'Āṟāyirappaḍi'—a name which signifies that it contains Six thousand granthas. Other commentaries followed, of which the one, written by Vaḍakku Tiruveethi Pillai consisting of Thirty six thousand granthas, is considered to be the most exhaustive. It is commonly known as the 'Īḍu'. In the religious parlance the Īḍu is known as 'Bagavat Vishayam'.

The commentators of Tiruvāymoli were men of profound learning in Sanskrit and Tamil and their style was a mixture of the two languages. In the medieval period of Tamil Literature this style known as 'maṇipravāḷam' was largely employed by learned commentators of the Jaina and Vaishnava religions. To the modern Tamils, 'Maṇipravāḷam' is generally unintelligible. It has therefore become necessary to render the commentaries written in that style into Tamil. The following is a specimen of the Maṇipravāḷa style of the Īḍu:

" பரஸ்வரூபம் - அகில ஹேயப்ரத்யநீகத்வத்தாலும் கல்யாணைகதாநத்வத்தாலும் ஸ்வேதர ஸமஸ்தவஸ்து விலக்ஷணமாய், விபுத்வாத் தேஶத: பரிச்சேதரஹிதமாய் நித்யத்வாத்காலத: பரிச்சேத ரஹிதமாய் ஸர்வமும் தனக்கு ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய்த் தனக்கு ஒரு ப்ரகார்யந்தரமில்லாமையாலே வஸ்து பரிச்சேத ரஹிதமுமாய் ஜ்ஞாநாநந்தமயமாய் ஜ்ஞாந பலைஶ்வர்ய ஸீலாத்யநந்த கல்யாணகுணகண மஹோததியாய் ஸ்ரீயப:தியாய்" - முதற்பத்து, பகவத் விஷயம் : பக். 86-87.

The Tamil rendering of this passage is as follows:—

“பரம்பொருளின் சொரூபம்: எல்லாக் குற்றங்கட்கும் எதிர்த்தட்டாயிருக்குந்தன்மையாலும் மங்களம் பொருந்திய நற்குணங்கட்கெல்லாம் இருப்பிடனாயிருக்குந் தன்மையாலும் தன்னின் வேறுபட்ட எல்லாப் பொருள்கட்கும் வேறுபட்டதாய்; எங்கும் நிறைந்திருப்பதனால் இன்ன இடத்திலிருப்பதென்று இடத்தால் அளவிட்டுக் கூறமுடியாததாய், என்றும் உள்ளதாதலின் இன்ன காலத்திலிருப்பதென்று காலத்தால் அளவிட்டுக் கூற முடியாததாய், எல்லாப் பொருள்களும் தனக்குச் சரீரமாகத் தான் ஆத்துமாவாய்த் தனக்கு வேறோர் ஆத்துமா இல்லாமையாலே ஒரு பொருளைக்கொண்டு அளவிட்டு அறிய முடியாததாய், ஞானானந்தமயமாய், ஞானம் பலம் ஐஸ்வரியம் சீலம் முதலான எல்லையில்லாத நற்குணங்கட்கெல்லாம் பெருங்கடல் போன்றதாய், திருமகள் கேள்வனாய்”—ஈட்டின் தமிழாக்கம்: பக்கம், 35.

In this commentary, the explanation of philosophic thoughts and sequence of the Sacred hymns, the connotations of words and expressions and the citation of authoritative texts are characterised by great erudition and profound devotion.

The Tamil rendering of the Īḍu is entitled ‘Īṭṭin Tamiḻākkam.’ This is the first attempt to make the spiritual treasures of the Īḍu accessible to the student of Tamil. Sri B. R. Purushothama Naidu, Lecturer in Tamil, University of Madras, has done a service to the Tamil Country by rendering the commentary in a lucid and intelligible language and adding explanatory notes and references wherever necessary. This volume relates to the First Ten (‘Mutal Pattu’) of the Tiruvāymoḻi consisting of One hundred hymns. The author proposes to render the remaining ‘Nine Tens’ in the successive nine volumes. It is hoped that this publication will lead to a greater appreciation of the literary and philosophical merits of the Tiruvāymoḻi in the Tamil country.

Madras,
15-11-1951

R. P. SETHU PILLAI

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# முகவுரை

*மனையும் பெருஞ்செல் வமுமக்க ளுமற்றை வாழ்வுந்தன்னை*
*நினையும் பதமென நின்றபி ரான்குரு கூர்நிமலன்*
*புனையுந் தமிழ்க்கவி யால்இருள் நீங்கிப் பொருள்விளங்கி*
*வினையுந் திரிவுற் றனகுற்ற நீங்கின வேதங்களே.*

செந்தமிழ்நாடு, கன்று எறிந்த தோளான்றன் கனைகழலே காண்பதற்கு நன்கு அறிந்த நாவலஞ்சூழ் நாடாதலின், இந்நாட்டினைச் '**சித்திக்குஒரு விதையாகிய தென்னாடு**' என்பர். கன்று எறிந்த தோளான் கனைகழலைக் காண்பதற்குக் கருவிகளாக இருப்பன், ஆழ்வார்கள் அருளிச்செய்த திருவாய்மொழி முதலிய திவ்வியப் பிரபந்தங்களும், அவைபோன்ற பிற நூல்களும் ஆகும். அவற்றுள், திருவாய்மொழியினைத் '**தமிழ்மறை**' என்பர் சான்றோர். திருவாய் மொழியின் சிறப்பு ஒப்புயர்வற்றது. திருவாய்மொழி தோன்றிய தனானே தமிழ்மொழி ஈடும் எடுப்பும்இல்லாத சிறப்பினையடைந்தது[1] என்று கூறின், அது மிகையாகாது. '**தமிழ் நூல்களில் தோன்று கிற ஐயந்திரிபுகளை வடமொழி நூல்களைக்கொண்டு தெளிக,**'[2] என்று கூறினர் திருவாவடுதுறையாதீனத்துச் சுவாமிநாத தேசிகர்.

---

1. '*மொழிபல வாயின செப்பம் பிறந்தது முத்தியெய்தும்*
*வழிபல வாயவிட்டு ஒன்று யதுவழு வாநரகக்*
*குழிபல வாயின பாழ்பட் டனகுளிர் நீர்ப்பொருநை*
*சுழிபல வாய்ஒழு குங்குரு கூரெந்தை தோன்றலினே.*'

*என்றார் கம்பநாடர்* (*சடகோபரந்தாதி*, 5).

2. '*பல்காற் பழகினுந் தெரியா உளவேற்*
*றெல்காப் பியந்திரு வள்ளுவர் கோவை*
*மூன்றி னு முழங்கும்; ஆண்டினு மிலையேல்*
*வடநூல் வெளிபெற வழங்கும் என்ப.*'

*என்பது இலக்கணக்கொத்து*, *பா. சூ.* 7.

'வடமொழி வேத வேதாந்தங்களில் தோன்றுகின்ற ஐயந் திரிபுகளைத் திருவாய்மொழியினைக் கொண்டு தெளிகின்றேம்,' [1] என்று அருளிச்செய்தனர் வேதாந்த தேசிகர் முதலிய பெரியோர். இதனால், தமிழிற்கு மிகுந்த சிறப்பு ஏற்பட்டது தெளிவாகும்.

திருவாய்மொழி இறைவனால் மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வாரால் அருளிச்செய்யப்பட்டதாதலின், இதன் உட்பொருள்களை அறிந்து கூறல் எத்தகைய புலமை நிரம்பினோர்க்கும் இயல்வது அன்று; கருவிலே திருவுடைய பெரியோர்கட்கே இயல்வதாகும். இதன் உரை மணிப்பிரவாள நடையில்[2] அமைந்ததாகும். இதற்கு உரை வகுத்த பெரியோர்கள், தென்சொற்கடந்து வடசொற்கடற்கு எல்லை தேர்ந்தவர்கள்; இறைவனுடைய திருவருளுக்குப் பூரண பாத்திரமானவர்கள்; ஞானம் அநுட்டானமிவை நன்றாகவே யுடை

---

1. 'பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார்தண்
பொருநல்வருங் குருகேசன் விட்டு சித்தன்
துய்யகுல சேகரன்நம் பாண நாதன்
தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி
வய்யமெலா மறைவிளங்க வாள்வேல் ஏந்தும்
மங்கையர்கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகள்நாந் தெளிய வோதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றேமே.'

என்பது ஸ்ரீ தேசிகப் பிரபந்தம், அதிகார சங். 1.

'பாஷியகாரர் இதுகொண்டு சூத்திர வாக்கியங்களை ஒருங்கவிடுவர்,' என்பது ஆசாரியஹ்ருதயம்.

'உயிர்த்தா ரையிற்புக் குறுகுறும் பாமொரு மூன்றனையுஞ்
செயிர்த்தார் குருகைவந் தார்திரு வாய்மொழி செப்பலுற்றால்
மயிர்த்தா ரைகள்பொடிக் குங்கண்கள் நீர்மல்கு மாமறையுள்
அயிர்த்தார் அயிர்த்த பொருள்வெளி யாமெங்கள் அந்தணர்க்கே.'

என்றார் கம்பநாடர் (சடகோப. 33).

2. மணிப்பிரவாளமாவது, இருமொழிச் சொற்கள் விரவி, கற்போர்க்கு இன்பம் பயக்குமாறு அமைந்ததொரு நடை. ஈண்டு இருமொழியாவன, வடமொழியும் தென்மொழியுமாம். முத்தும் பவழமுங் கோத்தாற்போன்று வடமொழி தென்மொழிச் சொற்கள் விரவிய நடையை மணிப்பிரவாளம் என்பர்.

'இடையே வடவெழுத் தெய்தில் வரவியல் ஈண்டெதுகை
நடையேது மில்லா மணிப்பிர வாளநற் றெய்வச்சொல்லின்
இடையே முடியும் பதமுடைத்தாம்'

என்பது வீரசோழியம். அலங்காரப். 2.

யவர்கள். ‘அந்தமிழின்பப் பாவினை அவ்வடமொழியை’ என்கிற படியே, இறைவன் இரு மொழிகளின் வடிவமாகவுமிருத்தலின், அவனைப்பற்றிக் கூறுகின்ற இத்தமிழ் மறைக்கு உரை எழுதிய பெரியோரும் இருமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதலாயினர்.

திருவாய்மொழிக்கு ஆறுயிரப்படி, ஒன்பதினுயிரப்படி, பன்னீராயிரப்படி இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறுயிரப்படி என்னும் ஐந்து உரைகள் உள்ளன. இவ்வுரைகள் ஒன்றற்கொன்று விரிவுரையாக எழுந்தன வாகும். இவற்றுள், ஈடு முப்பத்தாறுயிரப்படியே பின்னர் எழுந்ததும் விரிந்ததுமான உரையாகும். இவ்வுரை, ‘சொன்னேக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும் துறையின் நோக்கோடு எந்நோக்கும் நோக்க இலக்கியமாய்’ அமைந்தது; கற்போர் மனத்தைக் கவருந் தன்மையது; புத்தியும் பத்தியும் தோற்றுவிப்பது.

இத்தகைய இவ்வுரை மணிப்பிரவாளநடையில் அமைந்திருத்தலின், தமிழ் நாட்டினர் அனைவர்க்கும் பயன்படாமலிருக்கிறது. இந்நிலைமை கருதி, உயர்திரு. செந்தமிழ்ச்செல்வர், தமிழவேள், உமாமகேசுவரன் பிள்ளையவர்கள் ‘**அருமையான இவ்வியாக்கியானங்களைத் தமிழ் நடையில் எழுதினல் என்னைப்போன்றவர்களும் கற்கலாமே!**’ என்று, யான் திருவையாற்று அரசர் கல்லூரியில் தமிழ்த்தொண்டு புரிந்த காலத்தில் என்னிடத்திற்கூறினர்கள். யான் சென்னைச் சர்வகலாசாலையில் தமிழ்ப்பணியேற்றுத் தமிழ்த் தொண்டு புரிய வருங்காலத்தில் உயர்திருவாளர், திவான்பஹதூர், T. M. **நாராயணசாமிப் பிள்ளை**, M.A., B.L., அவர்கள் (Chairman, Board of Studies, University of Madras., Chairman, Public Service Commission, Madras) ‘**திருவாய்மொழியின் வியாக்கியானத்தைத் தமிழ் நடையில் எழுதுங்கள்; அது அனைவர்க்கும் பயன்படல் வேண்டும்**,’ என்று கூறியதனுலும், ஆழ்வாருடைய திருப்பாசுரங்களின் ஆழ்பொருளை ஆசையுடையாரனைவரும் படித்துணர்தல் வேண்டும் என்ற பேரவாவினுலும் இத் தெய்வத் தமிழ்த்திருப்பணியை அடியேன் மேற்கொண்டேன்.

இருமொழிகளிலும் வல்லுநராய் வைணவமதத்தின் உண்மைப் பொருள்களை உள்ளவாறு உணர்ந்தவராய் உணர்ந்தவாறே ஒழுகுபவராய் உள்ள ஒருவரே இதனை எழுதுதற்கு உரியவர் என்பதனை அடியேன் நன்கு அறிவேன். ஒரு மொழியினையும் முற்றும் உணராத

அடியேன் எழுதுதல் அடியேற்கே நகையினை விளைக்கின்றது ! காணும் உலகு இன்று என் சொலாது ! ஆயின், எம் குலக்கொழுந் தாகிய ஆழ்வாருடைய திருவருளும், அடியேனுக்குப் பெரிய தந்தை யாரான ஸ்ரீமத். புவனகிரி அழகிய மணவாள ஏகாங்கி ஸ்வாமி களுடைய திருவருளும் இருபாலும் நின்று எழுதுவிக்க, 'இருசிறகு எழுப்ப எழும் உடலது போல்' அடியேன் இதனை எழுதத் தொடங் கினேன். அடியேன் செய்தது யாதொன்றுமின்று. சில உளவாயின், அவை இதிற்காணப்படும் சொற்குற்றங்களும் பொருட்குற்றங் களுமேயாகும்.

பெரியோர் சிலர் விரும்பியவாறு ஒவ்வொரு பாசுரத்துக்கும் சுருக்கமாகச் சொற்பொருள் விளங்குமாறு பாசுரங்கட்குப் பிண்டப் பொருளும், அதன்பின் இன்றியமையாத இடங்களில் சில இலக்கணக் குறிப்புகளும், வேறு நூல்களிலிருந்து ஒப்புமைப்பகுதிகளும் எழுதப் பட்டிருக்கின்றன. அவற்றின்பின் ஈடு முப்பத்தாறுயிரப்படி வியாக் கியானம் வேண்டியவளவு தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கின்றது. ஆங்காங்கு வருகின்ற மேற்கோள் வடமொழிச் சுலோகங்களை எழுதாமல், அவற்றின் பிண்டப்பொருள் மட்டும் எழுதப்பட்டும், அறியப்பட்டவளவில் மேற்கோள் விளக்கமும் ஆங்காங்கு அடியிலே கொடுக்கப்பட்டும் இருக்கின்றன. பெரும்பாலும் வடசொற்களை நீக்கி அவற்றிற்குத் தகுதியான தமிழ்ச்சொற்கள் எழுதப்பட்டும், மரபு பற்றி வரும் வடசொற்கள் சிலவற்றை அங்ஙனமே வைத் துக்கொண்டு அவற்றிற்கு அடியில் குறிப்புரை எழுதப்பட்டு முள்ளன.

பொருள் எளிதில் விளங்குதற்கேற்றவாறு ஒரு சில இடங்களில் வியாக்கியான வாக்கியங்களை முன்னும் பின்னும் மாற்றியமைத் திருக்கின்றேன். வியாக்கியானத்தில் சொல்லாற்றல் பொருளாற் றல்களால் கிடைக்கும் தொனிப்பொருளை இவ்வுரையில் அவ்வள வாக அறிய இயலாது. மணவாள மாமுனிகள் அருளிச்செய்ததும், ஒவ்வொரு திருப்பதிகத்தின் கருத்தையும் சுருக்கமாகத் தெரிவிப்பது மான திருவாய்மொழி நூற்றந்தாதியின் பாசுரங்களை ஒவ்வொரு திருப்பதிகத்தின் இறுதியிலும் சேர்த்திருக்கின்றேன். வியாக்கியா னத்தில் இடையிடையே வருகின்ற ஐதிஹ்யங்களும், பெரியார் களுடைய நிர்வாஹங்களும், உவமைகளும் ஒரு சேரத் தொகுத்துத் தனித்தனியே ஈற்றில் அநுபந்தமாகத் தரப்பட்டிருக்கின்றன. ஆங்

காங்கு வருகின்ற பெரியார்களைப்பற்றி எழுதிய குறிப்பு ஒன்று அதன் ஈற்றில் சேர்க்கப்பட்டிருக்கின்றது. மேற்கோள் சுலோகங்களைத் தொகுத்து ஈற்றில் பிற்சேர்க்கையாகச் சேர்த்திருக்கிறேன். **ஆழ்வார் வரலாறும், வியாக்கியானங்கள் வந்த வரலாறும்** முதலில் தரப்பட்டிருக்கின்றன. இம்முறையில், இவ்வுரை, திருவாய்மொழி முதற்பத்திற்கு '**ஈட்டின் தமிழாக்கம்**' என்ற பெயரோடு வெளி வருகின்றது. தொடர்ந்து வெளி வருவதற்கு இரண்டாம் பத்தின் உரையும் முடிவுற்றிருக்கின்றது.

இரு மொழிப் புலமையும் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாய கிரந்தங்களில் நிறைந்த ஞானமுமுடையவரும், ஆசாரசீலரும், அரிய பல தமிழ் நூல்களுக்கு உரையெழுதி வெளியிட்டவருமாகிய ஸ்ரீமத். உ. வே., வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகள் இவ்வுரையின் கையெழுத்துப் பிரதியை முழுவதும் படித்து, ஆங்காங்கு வேண்டிய இன்றியமையாத திருத்தங்களைச் செய்து உதவினார்கள். அடியேனுடைய நலனையே நாடுபவரான பல்கலைக்குரிசில் ஸ்ரீமான், வித்துவான், வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள், இவ்வுரை அச்சாகும்போது அன்புடன் ஒரு முறை நோக்கி உதவினார்கள். இப்பெரியார்களை எழுமை எழுபிறப்பும் உள்ளுதலன்றி, இவர்கட்கு அடியேன் செய்யுங்கைம்மாறு யாதுளது? 'தலையல்லால் கைம்மாறு இலனே' என்பது சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் திருவாக்கு. அதனையே அடியேனும் கூற நினைக்கின்றேன்.

இவ்வுரை நூலை எழுதுங்காலத்து இடையிடையே உண்டான ஐயங்களைப் போக்கி உதவி செய்த பிரபந்த வித்துவான், ஸ்ரீமத். R. வேங்கட ராமாநுஜ ஸ்வாமிகட்கும், அவ்வப்பொழுது வேண்டிய உதவி புரிந்த அறிஞர் சிலர்க்கும் அடியேன் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

இந்நூலைச் சருவகலாசாலையார் அச்சிடுவதற்குக் காரணராயிருந்த சொல்லின் செல்வர் தமிழ்ப்பேராசிரியர் உயர்திரு. R. P. சேதுப்பிள்ளை, B.A., B.L., அவர்கட்கும், சருவகலாசாலைப் பதிப்பாக வெளியிட்டு உதவிய கரும்பு தின்னக் கூலி கொடுக்குங் குலத்தோன்றல்களாகிய சருவகலாசாலை அதிகாரிகட்கும் அடியேன் என்றென்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

நல்ல முறையில் விரைவில் இந்நூலை அச்சிட்டு உதவிய சென்னை இரத்தினம் பிரஸ் தலைவர்க்கு நன்றி செலுத்துகிறேன்.

சென்னை,
15-11-1951.

இங்ஙனம் :
**B. R.** புருஷோத்தம நாயடு.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# நம்மாழ்வார் வரலாறு

'தேன ருமகிழ்த் தொடையலும் மௌலியுந்
திருக்கிளர் குழைக்காதும்
கான ருமலர்த் திருமுகச் சோதியும்
கயிரவத் துவர்வாயும்
மோன மாகிய வடிவமும் மார்வமும்
முத்திரைத் திருக்கையும்
ஞான தேசிகன் சரணதா மரையும்என்
நயனம்விட் டகலாவே.'[1]

பாண்டி நாட்டில் திருநெல்வேலி ஜில்லாவில், பொருநை, பொருநல் என்னும் பெயர் வழக்குடைய தாமிரவர்ணி நதிக்கரையில் உள்ள ஆழ்வார் திருநகரி என்று கூறப்படும் திருக்குருகூரில் வேளாளர் குலத்தில் திருமாலிடத்து வழிவழியாக அன்பு பூண்டொழுகுங்குடியிற்பிறந்த **காரியார்** என்ற ஒரு வைணவப் பெருஞ் செல்வர் இருந்தார். அவர் திருவெண்பரிசாரம் என்னும் திருப்பதியிலுள்ள திருவாழ்மார்பர் என்பவருடைய திருமகளாராகிய **உடைய நங்கையார்** என்பவரை மணம் புரிந்து, இல்லறம் மேற்கொண்டு ஒழுகும் நாளில், மக்கட்செல்வம் இல்லாமையால், அக்குறை தீர்த்தருளுமாறு திருக்குறுங்குடியில் உள்ள எம்பெருமானை வேண்டினர். அப்பெருமான் திருவருளால் அவர்கட்குப் புதல்வராய் வைகாசி மாதம் விசாகநக்ஷத்திரத்தில் ஸ்ரீ சடகோபர் அவதரித்தார்.

ஸ்ரீ சடகோபர் பிறந்த நாள் தொட்டுப் பால் உண்ணுதல் முதலிய மக்கள் இயல்புகளுள் ஒன்றும் இன்றி இருந்தனர். அது கண்ட பெற்றோர் மனம் வருந்தினர். குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாளில் **மாறன்** என அக்குழந்தைக்குப் பெயரிட்டு, அவ்வூரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள பொலிந்து நின்ற பிரான் திருமுன்பு அக்குழந்தையை விட்டனர். அக்குழந்தை, அங்குள்ள ஒரு புளிய மரத்தடியிற்சென்று அமர்ந்தது. (நம் ஆழ்வார் அப் புளியமரத்து அடியில் எழுந்தருளியிருந்ததனால் அதனைத் '**திருப் புளியாழ்வார்**' எனப் பின்னுள்ளோர் சிறப்பாக வழங்குவாராயினர்.) அவ்வாறு சென்று அமர்ந்த குழந்தையாகிய நம்மாழ்வார் பதினாறு ஆண்டு வரையில் கண் விழித்துப் பார்த்தல், பேசுதல் முதலியன

1. பெருந்தொகை, 1824.

ஒன்றும் இன்றி இறைவனை நினைந்து அமர்ந்திருந்தனர். அவருடைய நிலைமையை அறியாமல் பெற்றோர் மிக வருந்தியிருந்தனர். அந் நிலைமையில் மற்றொரு நிகழ்ச்சி நிகழ்வதாயிற்று.

**மதுரகவிகள்** என்பவர், திருக்கோளூர் என்னுந்திருப்பதியில் அந்தணர் குலத்தில் சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்தில், நம்மாழ்வார் அவதாரத்திற்குச் சில ஆண்டுகள் முன்னரே அவதரித் திருந்தார். அவர் தக்க காலத்தில் நான்மறை ஆறங்கம் முதலி யனவும், தமிழ் நூல்களும் கற்றுத் தேர்ந்து, இறைவன் எழுந்தருளி யுள்ளதும், முத்தி தரும் நகரம் எனச் சிறப்பித்துக் கூறப்படுவது மான திருவயோத்தி முதலிய திருப்பதிகளில் இறைவனை வணங்க எண்ணிச்சென்று, கங்கைக்கரையில் தங்கியிருந்தார். அவர் ஒரு நாள் இரவில் வெளியே வந்த போது தெற்கே ஒரு பேரொளியைக் கண்டு ஆச்சரியமடைந்தார். மறுநாளிரவிலும் அவ்வாறே அவ் வொளி தோன்றிற்று. உடனே மதுரகவிகள், 'தெற்கே ஏதோ ஓர் அதிசய நிகழ்ச்சி இருக்கிறது! அதனைச் சென்று காணுதல் வேண்டும்,' என்றெண்ணினார். அன்று முதல் அவர் பகலில் உறங்குவதும், இரவில் அவ்வொளியைப் பார்த்துக்கொண்டே வழி நடப்பதுமாகப் பல நாள் நடந்து வந்தார். திருக்குருகூர் வந்ததும் இரவில் அவ்வொளி தோன்றவில்லை. பின்னர், மதுரகவிகள் அவ் வூரிலுள்ளவர்களிடம், "இங்கு ஏதேனும் அதிசய நிகழ்ச்சி உண்டோ?" என்று வினவி அறிந்து, திருப்புளியின்கீழ் எழுந்தருளி யுள்ள நம்மாழ்வாரைக் கண்டார்.

ஆழ்வார் கண் விழித்தல் பேசுதல் முதலிய செயல் ஒன்றும் இன்றி மௌனமாய் இருத்தலைக் கண்டு, அவருடைய நிலைமையை ஆராய்ந்தறிய எண்ணி, ஒரு கல்லை எடுத்து அவர்முன் இட்டு ஒலி உண்டாக்கினார். உடனே நம்மாழ்வார் கண் விழித்துப் பார்த்தார். பின்னர் மதுரகவிகள் அவரோடு பேசி அறிய எண்ணிச்

*'செத்ததன் வயிற்றிற் சிறியது பிறந்தால்*
*எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'*

என்று கேட்டார். அதற்கு நம்மாழ்வார்,

*'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'*

என்றார்.

செத்தது - உடல். உடம்பு மூலப்பகுதியின் விகாரமாய் உள் ளது; அறிவற்றது; அதனால், அதனைச் 'செத்தது' என்றார். சிறியது - உயிர். உயிர் அணு வடிவினதாயுள்ளது; அது உடம்பு முழுவதும் தன் ஞானத்தினால் வியாபித்து, உடம்பு முழுவதிலும் நடை பெறுகிற நிகழ்ச்சிகளை அறிகிறது; அதனால், அதனைச்

'சிறியது' என்றார். பிறத்தல் - உயிர் தன் வினைகளுக்கு ஏற்ப உடம்பை அடைதல். 'எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' (அவ்வாறு உடம்பையடைந்த உயிர்) எதனை அனுபவித்து எங்கே இருக்கும்?) என்றார்.

'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'—உடம்பை அடைந்த உயிர் தன் வினைப்பயனை அநுபவித்துக்கொண்டு, அவ்வுடம்பிலேயே இருக்கும் என்பது நம்மாழ்வார் விடை. (உயிர் அவ்வப் பிறப்பிற்குரிய வினை முடியும் வரை அவ்வவ்வுடம்பில் இருக்கும் என்பது கருத்து.)

அவ்வாறு ஆழ்வார் கூறிய விடையைக் கேட்ட மதுரகவிகள், மிக்க மகிழ்ச்சி அடைந்து, ஆழ்வாரை ஆசாரியராகக் கருதி, அவரை வணங்கி, அவரிடத்தே இருந்தார். அப்படியிருந்த மதுரகவிகளுக்கு நம்மாழ்வார், '**சித்து, அசித்து, ஈசுவரன்**' என்னும் தத்துவம் மூன்றன் இயல்புகளை எல்லாம் விரிவாக உபதேசித்தார்; மற்றும் அறிய வேண்டிய பல உண்மைகளையும் உபதேசித்தருளினார்.

இவ்வாறு உலகியலைச் சிறிதும் நினையாது, இறைவனையே எண்ணி எழுந்தருளியிருந்த ஆழ்வார், அவ்விறைவனை நினைத்தலால் உண்டான பெருமகிழ்ச்சியினால் அவனைப்பற்றிக் கவி பாடத் தொடங்கினார். அக்கவிகளே **திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி** என்னும் நான்கு பிரபந்தங்களாய் வழங்குகின்றன. நான்கு வேதங்களின் சாரமாக இந்நான்கு பிரபந்தங்களும் அமைந்துள்ளன என்பது அறிஞர் கொள்கை.

ஒவ்வோர் ஆழ்வாரைப்பற்றியும் கூறும் போது, அவர் ஏனையர் எல்லாரினும் மிகச்சிறந்தவர் என்று கூறுவது உண்டாயினும், நம்மாழ்வாரே மற்ற எல்லாரினும் சிறந்தவர் என்பது பொதுவாக எல்லாருடைய கருத்துமாகும். ஏனைய ஆழ்வார்களுள் ஒவ்வொருவரையும் ஒவ்வோர் அவயவமாகவும், நம்மாழ்வாரை அவயவியாகவும் கூறுகின்றனர். '**பிரபந்ந ஜன கூடஸ்தர்**' என்று நம்மாழ்வாருக்கு ஒரு சிறப்புப்பெயர் உண்டு. 'பிரபத்தி மார்க்கத்தை அநுஷ்டிக்கும் வைணவர் எல்லோருக்கும் தலைவர்,' என்பது பொருள். ஆழ்வார்களுடைய நூல்கள் எல்லாவற்றிற்கும் ஒவ்வொரு வகையாகப் பெயர் கொடுத்த அறிஞர், நம்மாழ்வாருடைய நான்காவது நூலிற்குத் திருவாய்மொழி எனச் சிறப்பாகப் பெயர் இட்டனர்: வாய்மொழி - வேதம். திருவாய்மொழி - மற்றைய வேதங்களினும் மிக்க சிறப்புடைய வேதம் என்பது கருத்து. நம்மாழ்வாருடைய பெருமைகளையும், அவர் நூல்களின் பெருமைகளையும், அவற்றுள்ளும்

சிறப்பாகத் திருவாய்மொழியின் பெருமைகளையும் '**ஆசாரிய ஹிருதயம்**' என்னும் நூல் மிக அழகாக விளக்கிக் கூறுகின்றது.

ஆழ்வார் மங்களாசாசனம் செய்த (தம் பாசுரங்களில் எடுத்துக் கூறிய) திருப்பதிகள் முப்பத்தைந்து என்பர். அவற்றுள், தனிப் பதிகங்களாற்கூறப்பட்டவை சில. சில திருப்பதிகள் இடை இடையே எடுத்துக் கூறப்பட்டவை. ஆழ்வார் பாண்டி நாட்டில் அவதரித்தவர் ஆதலின், பாண்டி நாட்டுத் திருப்பதிகளையும் மலை நாட்டுத் (திருவாங்கூர்ப் பகுதி) திருப்பதிகளையுமே மிகுதியாகப் பாடியுள்ளார். திருமால் கோயில் கொண்டுள்ளவைகளும் ஆழ்வார் களால் மங்களாசாசனம் செய்யப்பெற்றவைகளுமான நாற்பது திருப் பதிகள் உள்ள சோழ நாட்டில் ஐந்து திருப்பதிகளையே நம்மாழ்வார் பாடியுள்ளார்; பாண்டி நாட்டிலும் மலை நாட்டிலும் இருபத்து நான்கு திருப்பதிகளைப் பாடியுள்ளார். ஏனையவை, திருவேங்கடம் முதலிய வடநாட்டுத் திருப்பதிகள். மலை நாட்டுத் திருப்பதிகளிற்சில, இவரால் மட்டுமே பாடப்பட்டவைகளாகும். திருவேங்கடத்தை மிகுதியாகப் பல இடங்களிற் பாராட்டியுள்ளார். திருவிருத்தமே ஆழ்வாருடைய முதற்பிரபந்தமாக அறிஞர் கொண்டுள்ளனர். பாற் கடலும் பரமபதமும் நீங்கலாக இங்குள்ள திருப்பதிகளில் திரு வேங்கடத்தையே திருவிருத்தத்தில் முதலில் எடுத்துக் கூறியுள்ளார்.

இவ்வாறு நம்மாழ்வார் இறைவனை நினைந்து இன்புற்றுப் பாசுரங்களைப் பாடிக்கொண்டும், மதுரகவிகளுக்கு உபதேசித்துக் கொண்டும் முப்பத்தைந்து ஆண்டளவும் இவ்வுலகில் எழுந்தருளி யிருந்து, அதன்மேல் அந்தமில் பேரின்பவீடாகிய பரமபதத்தை அடைந்தார்.

நம்மாழ்வார் திருமால் திருவடியில் எப்போதும் விளங்கு கின்றார் என்பது வைணவசமயக் கொள்கை. அதனால் திருமால் திருக்கோயில்களில் அப்பெருமானைச் சேவிக்கச் செல்வோர் முடி மீது அவர் திருவடியாக வைக்கப்படுவதை 'சடகோபன், சடாரி' என்று வழங்குகின்றனர். சடகோபன், சடாரி என்பன நம்மாழ்வா ருடைய திருப்பெயர்கள்.

நம்மாழ்வாரை அடைந்தவுடன், அவரிடத்துப் பேரன்புபூண்ட மதுரகவிகள், அவரையே தெய்வமாக எண்ணி, அவர்மீது பத்துப் பாசுரங்களடங்கிய நூல் ஒன்றைப் பாடினார். அந்நூல் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்று தொடங்குவதனால், 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்றே பெயர் கூறப்பட்டு, நாலாயிரப் பிரபந்தத்தில் சேர்க்கப் பட்டுள்ளது. அந்நூல், எட்டெழுத்து மந்திரமாகிய பெரிய திரு

மந்திரத்தில் மிக முக்கியமான நடுப்பதத்தின் பொருளை விளக்கு வதாகக் கொண்டுள்ளனர்.

மதுரகவிகள் இவ்வுலகத்தில் உள்ள அளவும் நம்மாழ்வாருக்குத் திருக்கோயில் அமைத்து வழிபாடு எல்லாம் செய்துவந்தார்.

நம்மாழ்வார் அவதரித்த காரணத்தால், திருக்குருகூர், அப் பெயர் வழக்கு மாறி, 'ஆழ்வார் திருநகரி' என்ற பெயரானே வழங்கப்படுகின்றது. திருக்குருகூர் என்னும் பெயர் நூல் வழக்கில் மட்டுமே உளது.

இப்பெரியாரது காலம், கி. பி. ஏழாம் நூற்றாண்டு என்று சரித்திர அறிஞர் கூறுவர் 5,6-ஆம் நூற்றாண்டுகளின்பின் முன் பகுதிகளில் வாழ்ந்திருந்தவர்களான பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற மூவரும் தம் நூல்களை வெண்பாவாலேயே அருளிச் செய்திருத்தலும்; 6, 7-ஆம் நூற்றாண்டுகளின் பின் முன் பகுதி களில் வாழ்ந்திருந்தவரான திருமழிசைப்பிரான், தம் நூல்களை வெண்பா, கலிப்பா என்னும் இருவகைப் பாக்களால் அருளிச்செய் திருத்தலும்; நம்மாழ்வார், தம் நூல்களை வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா என்னும் மூவகைப் பாக்களால் அருளிச்செய்திருத்தலும்; ஏனைய ஐவரும் தம் நூல்களை வெண்பாவால் அருளிச்செய்யாமையும் ஈண்டுச் சிந்தித்தல் தகும். மேலும், ஒன்பதாம் நூற்றாண்டில் (கி. பி. 825இல் அவதரித்தவர்) வாழ்ந்திருந்தவரான ஸ்ரீமந் நாதமுனிகள், 'திவ்வியப் பிரபந்தங்களைப் பெறல்வேண்டும் என் னும் பெருவிருப்போடு சடகோபர் அவதரித்தருளின திருக்குருகூர்ப் பிரதேசத்திலே உண்டாகவேணும் என்று திருநகரிக்கு எழுந் தருளினர் என்றும், அங்கே ஆழ்வாரையும் பொலிந்து நின்ற பிரானையும் சேவித்து, ஸ்ரீமதுரகவிகளுடைய சிஷ்யரான ஸ்ரீ பராங்குச தாசரைக் கண்டு, 'இவ்விடத்துத் திருவாய்மொழி ஓதினவர்கள் உண்டோ? ஸ்ரீகோசம் உண்டோ?' என்று கேட்டருள, அவரும், 'திருவாய்மொழியும் மற்றுமுள்ள திவ்வியப்பிரபந்தங்களும் நெடுங் காலமுண்டு பிரமுஷிதமாய்த்து,' என்று கூறினர் என்றும் வரலாறு கூறும் உண்மையையும் ஈண்டு நோக்குக. மேலும்,

*'பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை*
*அய்யன் அருள்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட*
*நாதனன்பர் தாள்தூளி நற்பாணன் நற்கலியன்*
*ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு.'*

என்று மணவாளமாமுனிகள் நம்மாழ்வாரை ஐந்தாம் எண் வரிசை யில் வைத்து அருளிச்செய்திருத்தலும் அதனை வலியுறுத்தும்.

# நம்மாழ்வாரும் திருவாய்மொழியும்

ஆழ்வார் எல்லாரும் பெரிதும் போற்றப்படுபவராயினும், அவர்களுள் நம்மாழ்வார் மிகச் சிறந்தவராகப் போற்றப்படுகின்றார். அவருடைய நூல்களும் அவ்வாறே போற்றப்படுகின்றன. அவருடைய நூல்களுள்ளும் திருவாய்மொழி மிகச் சிறப்பாகப் பாராட்டப்படுகின்றது. நம்மாழ்வாரையும் அவருடைய திருவாய்மொழியையும் பாராட்டித் தமிழிலும் வடமொழியிலும் பல நூல்கள் தோன்றியுள்ளன. நம்மாழ்வாரது காலத்திலேயே, அவருடைய சிஷ்யராய் இருந்த மதுரகவிகள் என்பவர், நம்மாழ்வாரையும் அவருடைய நூல்களையும் சிறப்பித்துக் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் பத்துப் பாசுரங்கள் அடங்கிய ஒரு நூலை அருளிச்செய்தார். அவர், 'நம்மாழ்வாருடைய பாசுரங்களைப் பாடுதல் எனக்குப் பேரின்பமாய் உள்ளது; அவரே எனக்குத் தெய்வம்; அவரையன்றி வேறு தெய்வம் அறியேன்; அவர் பாசுரங்களை இசையோடு பாடுதலே எனக்கு இன்பமான பொழுது போக்காகும்,' என்று பலவாறாகப் போற்றியுள்ளார். அவர் மதுரகவி என்றும், மதுரகவிகள் என்றும், மதுரகவியாழ்வார் என்றும் பெயர் கூறப்பட்டு, ஆழ்வார்களோடு சேர்த்து எண்ணப்பட்டுள்ளார். அவர் அருளிச்செய்த கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் நூல், ஏனைய ஆழ்வார்களுடைய நூல்களோடு நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் சேர்க்கப்பட்டுள்ளது என்றால், நம்மாழ்வாரை எவ்வளவு பெருமையாக மதித்துள்ளனர் என்பது புலனாகும்.

கவிச்சக்கரவர்த்தியாராகிய கம்பர் நம்மாழ்வாரைப் பற்றிச் **சடகோபரந்தாதி** என்ற ஓர் அரிய நூலை இயற்றியுள்ளார். அந் நூல் நூறு பாக்களையுடையது. அந் நூலில் நம்மாழ்வாரைப் புகழ்ந் திருப்பதைவிட அவருடைய திருவாய்மொழியை மிகச் சிறப்பாகப் புகழ்ந்துள்ளார். திருமாலினுடைய சிறப்புகள் எல்லாவற்றினும் நம்மாழ்வாருடைய திருவாய்மொழி அவருக்குக் கிடைத்தது மிகப் பெரிய சிறப்பு என்கிறார்; திருவாய்மொழியை '**ஆராவமுதக் கவியாயிரம்**' என்கிறார்; திருவாய்மொழியின் முன் பிற கவிகள் பொருள் அற்ற கவிகளே என்கிறார்.

**திருவாய்மொழி நூற்றந்தாதி** என்ற ஒரு நூல் உளது. அது திருவாய்மொழியில் ஒவ்வொரு பதிகத்தின் கருத்தையும் தொகுத்து ஒவ்வொரு வெண்பாவில் அடக்கிக் கூறுகின்றது.

திருக்குருகூரில் நம்மாழ்வார் பரம்பரையில் தோன்றி, கல்வியிலும் கவி பாடுவதிலும் சிறந்து விளங்கிய புலவர் சிலர், நம்மாழ்வார் சிறப்புகளையும் அவர் நூல்களின் சிறப்புகளையும் அமைத்துப் பல நூல்களை இயற்றியுள்ளனர். **மாறன் அலங்காரம், மாறன் பாப்பாவினம், மாறன் திருப்பதிக்கோவை, மாறன் அகப்பொருள்** முதலிய பல நூல்கள் அவ்வாறு இயற்றப்பட்டுள்ளன. **திருவேங்கடத்துறைவான் கவிராயர்** இயற்றிய **மாறன் கோவை** என்ற ஓர் அரிய நூலும் உளது.

திராவிடவேதோபநிஷத் சங்கதி, திராவிடவேதோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலி என்ற இரண்டு வடமொழி நூல்கள் திருவாய்மொழியின் சிறப்பைக் கூறத் தோன்றியுள்ளன. தமிழ் நூலைப் பாராட்டி வடமொழி நூல்கள் தோன்றின எனின், அத்தகைய பாராட்டிற்குரியது திருவாய்மொழி ஒன்றேயாகும். திருவாய்மொழியை ஆயிரம் தெலுங்குச் செய்யுளாகவும், ஆயிரம் வடமொழிச் செய்யுளாகவும் பாடியிருக்கிறார்கள். அதற்கு '**ஆந்திர கீர்வாண சகஸ்ரம்**' என்பது பெயர். இவ்வாறு கன்னடத்திலுஞ் செய்யப்பட்டுள்ளது.

தமிழிலும் வடமொழியிலுமாக இவ்வாறு பல நூல்கள் திருவாய்மொழியைப் புகழ்ந்து கூறுகின்றன என்றால், திருவாய்மொழியின் செய்யுள் நயமும், இலக்கியச் சுவையும், சமயக் கருத்துகளும், பிறவுமே அதற்குக் காரணம் என்பதில் ஐயம் இல்லை.

திருவாய்மொழி எல்லாவற்றினுஞ் சிறந்த ஒரு நூலாய் இருப்பதனால், சிறந்த தமிழ் நூல்களின் உரையாசிரியர்கள், இதிலிருந்து இலக்கியக் கருத்துகளுக்கும், சமயக் கருத்துகளுக்கும், இலக்கணக் குறிப்புகளுக்கும் பல மேற்கோள்கள் எடுத்துக்காட்டி உள்ளார்கள்.

திருக்குறளுக்குச் சிறந்த உரை எழுதிய பரிமேலழகர், 'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று, நிலையாமை காணப்படும்,' என்ற குறளின் உரையில் 'அற்றது பற்றெனில், உற்றது வீடு,' என்ற பாசுரப் பகுதியையும், 'ஆரா வியற்கை அவாநீப்பின் அந்நிலையே, பேரா வியற்கை தரும்,' என்ற குறளின் உரையில், 'நன்றாய் ஞானங் கடந்து போய் நல்லிந்திரியம் எல்லாம் ஈர்த்து, ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பி லதனை உணர்ந்துணர்ந்து, சென்றாங் கின்பத்துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால், அன்றே அப்போதே வீடு மதுவே வீடு வீடாமே,'[1] என்ற பாசுரத்தையும், அரசனுக்கு

1. *'வீடு அதுவே வீடு வீடாமே,' என்றும் பாடம் உண்டு.*

இறைவன் என்று பெயர் கூறப்படுவதை விளக்குமிடத்தில், ‘திருவுடை மன்னரைக் காணின் திருமாலேக் கண்டேனே என்னும்,’ என்ற பாசுரப் பகுதியையும் எடுத்து மேற்கோள் காட்டினர். மற்றும், ‘ஆரா வியற்கை அவாநீப்பின்’ என்ற குறளின் உரையில் ‘களிப்புங் கவர்வும் அற்றுப் பிறப்புப் பிணி மூப்பு இறப்பு அற்று, ஒளிக் கொண்ட சோதியுமாய் உடன் கூடுவது என்றுகொலோ,’ என்ற பாசுரப் பகுதியை, “களிப்புக் கவர்ச்சிகளும் பிறப்புப் பிணிமூப்பு இறப்புகளும் முதலாயின இன்றி உயிர் நிரதிசய இன்பத்ததாய் நிற்றலின், வீட்டினைப் ‘பேராவியற்கை’ என்ருர்,” என உரை நடையாகவும் அமைத்து எழுதியுள்ளார்.

சேனவரையர் ‘நீட்டும் வழி நீட்டல்’ என்ற இலக்கணக் குறிப்பிற்கு ‘வீடுமின் முற்றவும்’ என்ற பாசுரப் பகுதியாகிய ‘வீடுமின்’ என்பதனை எடுத்துக் காட்டினர்.

நச்சினர்க்கினியர் தொல்காப்பியச் செய்யுளியலில் ‘தரவின்ருகித் தாழிசை பெற்றும்’ என்ற 149-ஆம் சூத்திரத்தின் உரையில் திருவாய்மொழியை எடுத்துக்கூறி இதன் ஒவ்வொரு பதிகத்திலும் (ஒவ்வொரு திருவாய்மொழியிலும்) உள்ள பாக்கள் தாழிசைகள் என்றும், இவை நான்கடியின் மிகாமல் வந்தவை என்றும் கூறினர். ஒவ்வொரு பதிகப் பாக்களும் ஒரு பொருள்மேல் அடுக்கி வந்தன என்றும் கூறினர். அவர் எழுத்து எண்ணி வரும் கட்டளைக் கலித்துறை தரவு கொச்சகம் என்றனர்.

எனவே, திருவாய்மொழிப் பாசுரங்கள் எல்லாம் பிற்கால இலக்கண நூல் கொண்டு விருத்தப்பாக்கள் என்று கூறலாகாது என்பதும், திருவிருத்தப் பாசுரங்கள் எல்லாம் அவ்வாறே கட்டளைக் கலித்துறை என்று கூறுதல் ஆகாது என்பதும், இவற்றைத் தொல்காப்பிய இலக்கணங் கொண்டு ‘தாழிசைகள்’ என்றும் ‘தரவு கொச்சகம்’ என்றும் கூறுதல் வேண்டும் என்பதும் அறியப் படுகின்றன.

பிரயோக விவேக நூலார், பல இலக்கணக் குறிப்புகளுக்குத் திருவாய்மொழியிலிருந்து பல மேற்கோளை எடுத்துக்காட்டியுள்ளனர். இரண்டாம் பாட்டின் உரையில் ‘திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்து உய்மினே’ என்பதனையும், பதினேராவது பாட்டின் உரையில் ‘பற்பநாபன் உயர்வற வுயரும் பெருந்திறலோன்’ என்ற பாசுரத்திலிருந்து ‘எனக்கே தன்னைத் தந்த கற்பகம்’ என்ற பகுதியையும், முப்பத்தைந்தாம் பாட்டின் உரையில் ‘வைத்த நாள்வரை’ என்ற

பாசுரப் பகுதியாகிய 'பைத்த பாம்பணையான்' என்பதனையும், முப்பத்தாறுவது பாட்டினுரையில் 'பற்பநாபன் உயர்வற உயரும் பெருந்திறலோன் என்பான்' என்ற பகுதியையும், முப்பத்தொன்ப தாம் பாட்டின் உரையில் 'கருநாய் கவர்ந்த காலர், சிதைகிய பானையர், பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்' என்ற பகுதியையும், நாற்பத்தேழாம் பாட்டின் உரையில் 'வைகல் பூங்கழிவாய் வந்து மேயுங் குருகினங்காள், கைகள் கூப்பிச் சொல்லீர்' என்ற பகுதியையும்; நாற்பத்தொன்பதாம் பாட்டின் உரையில் 'பால்வாய்ப் பிறைப்பிள்ளை ஒக்கலைக் கொண்டு பகலிழந்த, மேல்பால் திசைப்பெண் புலம்புறு மாலை', 'வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ்பாலை' என்ற பகுதிகளையும் மேற்கோளாகக் காட்டி உள்ளனர். வேறு சில சொற்றொடர்களும், 'காரி மாறன்' என்ற ஆழ்வார் பெயரும் காட்டப்பட்டுள்ளன.

இலக்கணக் கொத்து ஆசிரியராகிய சுவாமிநாத தேசிகர் 'கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்' என்ற பகுதியை மேற் கோளாகக் காட்டினர்.

திருவாய்மொழி பல வகைகளிலும் சிறப்புற்று விளங்குவதனால் உரையாசிரியர் பலரும், பிற்கால நூலாசிரியர்களும் இதிலிருந்து இவ்வாறு மேற்கோள் காட்டுவார் ஆயினர்.

### சில அகச்சான்றுகள்

நம்மாழ்வாரைப்பற்றிய சில குறிப்புகள் அவர்தம் நூல்களி லிருந்து கிடைக்கின்றன. நம்மாழ்வாருடைய பெற்றோராகிய காரி யாரும் உடைய நங்கையாரும் சில காலம் பிள்ளைப்பேறு இல்லா திருந்து திருக்குறுங்குடி நம்பியை வேண்டி நம்மாழ்வாரைப் பெற் றெடுத்தனர் என்பது வரலாறு. திருவிருத்தத்தில்,

*'கொடுங்காற் சிலையர் நிரைகோள் உழவர் கொலையில்வெய்ய*
*கடுங்கால் இளைஞர் துடிபடுங் கௌவைத்து அருவினையேன்*
*நெடுங்கால மும்கண்ணன் நீண்மலர்ப் பாதம் பரவிப்பெற்ற*
*தொடுங்கா லொசியும் இடைஇள மான்சென்ற சூழ்கடமே.'*

என்பது 37-ஆம் பாசுரமாகும். இது, தலைவி தலைவனுடன் செல்லு தலாகிய 'உடன்போக்கு' என்னும் பகுதியில், தாய், தலைவியின் மென்மைத் தன்மையும், அவள் தலைவனுடன் சென்ற சுரத்தின் கொடுமையும் நினைந்து இரங்கலாகிய துறைப்பொருளுடையது. இது, நம்மாழ்வார் ஒரு தலைவியின் மனநிலையைத் தாம் அடைந்து,

அதே நிலையில் தலைவி தலைவனுடன் சென்றமைக்குத் தாய் வருந்துவதாக அருளிய பாசுரமாகும்; தாய் தன் மகளைத் தான் பெற்ற அருமைப்பாட்டைக் கூறுமுகத்தால் நம்மாழ்வாருடைய அவதாரச் சிறப்புக் குறிப்பாக வெளியிடப்பட்டுள்ளதாகும்.

"நெடுங்காலமும் கண்ணன் நீள்மலர்ப் பாதம் பரவிப் பெற்ற இளமான், தொடுங்கால் ஒசியும் இடை இளமான்" என்று கூட்டிப் பொருள் கொள்ளுதல் வேண்டும். உடைய நங்கையார் நெடுங்காலம் திருமால் திருவடிகளை வணங்கி அவர் அருளால் நம்மாழ்வாரைப் பெற்றார் என்ற குறிப்புக் கிடைக்கின்றது. நம்மாழ்வாராகிய தலைவி, 'நல்கூர்ந்தார் செல்வமகள்' என்றாற்போல, அரிதாகப் பெற்றுச் செல்வமாக வளர்க்கப் பெற்றவள்; மிக்க மென்மைத் தன்மையுடையவள்; மிக்க இளமைப்பருவமுடையவள் என்ற இத்தன்மை எல்லாம் நம்மாழ்வாருடைய சிறப்பு இயல்புகளைக் குறிப்பால் உணர்த்துவன எனக் கொள்ளலாகும்.

நம்மாழ்வார் ஓதாது உணர்ந்த ஞானச் சிறப்புடையவர் என்று வரலாறு கூறுகின்றது.

*"அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து*
*அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால்"* (2.3:3.)

என்பது திருவாய்மொழிப் பாசுரம்.

அறிவு தோன்றுதற்கு உரியதல்லாத மிக்க இளம்பருவத்திலேயே நம்மாழ்வார் இறைவனிடத்துப் பேரன்பு கொண்டவராயினர்; அங்ஙனம் அன்பு கொள்ளுமாறு இறைவன் அருள் புரிந்தான் என்று இப்பகுதியில் கூறுகின்றார். இதனால், ஆழ்வார் ஓதாது உணர்ந்த ஞானச்செல்வர் என்பது ஒருவாறு கிடைக்கின்றது.

நம்மாழ்வாருடைய பெயர் சடகோபன், மாறன் என்பவை, நம்மாழ்வார் என்பது பின்னுள்ளோர் அவர் பெருமை கருதி வழங்கிய பெயராகும்.

*"நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை*
*என்ப ரவரவர்தம் ஏற்றத்தால்"*

என்று **உபதேச ரத்தினமாலை** கூறுகின்றது. மேற்கூறப்பட்ட இரண்டு பெயர்களுள் சடகோபன் என்ற பெயரே பெருவழக்காயுளது. திருவிருத்தத்தின் இறுதியிலும் திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் பலன் கூறும் பாசுரம் ஒவ்வொன்று அமைத்துள்ளனர். அவற்றில் பெயரையும் கூறுகின்றார். அவற்றில் பெரும்பாலும் 'குருகூர்ச் சடகோபன்' என்ற தொடரே காணப்படுகின்றது.

'மாறன்' என்ற பெயர் ஆறு இடங்களில் கூறப்பட்டுள்ளது. 'மாறன்' என்பதனோடு அவர் தந்தையார் பெயரையும் சேர்த்துக் 'காரி மாறன்' என்றும் கூறப்பட்டுள்ளது. சடகோபன் என்பது இயற் பெயராகவும், மாறன் என்பது பின்னர்க் கூறப்பட்ட பெயராகவும் கொள்ளலாம். ஆனால், மாறன் என்பது இயற்பெயராக வரலாறு கூறுகின்றது. திருக்குருகூர் உள்ள பகுதியை 'வழுதி நாடு' என்றும், 'வழுதி வளநாடு' என்றும் கூறுகின்றார். இத்தொடர் பொதுவாகப் பாண்டிநாடு என்ற பொருளையும் கொடுக்கும். 'தென்னன் குருகூர்ச் சடகோபன்' என்றும் ஓரிடத்திற்கூறியுள்ளார். 'வழுதி நாடு' என்பது பாண்டி நாட்டின் ஒரு பகுதியின் பெயர் என்றும், அப்பகுதியிலுள்ள குருகூர் என்றும் கொள்வது பொருத்த மாகும். தம்முடைய அவதாரத் தலமாகிய குருகூரைப் பல இடங் களில் பலவாறாகச் சிறப்பித்துக் கூறியுள்ளனர். நம்மாழ்வாருக்கு மகிழம்பூ மாலையைச் சிறப்பு மாலையாக வழங்குகின்றனர்.

நான்காம்பத்து, பத்தாந்திருவாய்மொழியின் இறுதியில், 'நாட் கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்' என்று கூறப்பட் டிருப்பதனால், அவ்வழக்கு ஆதாரமுடையதாகின்றது.

நம்மாழ்வாருடைய நூல்கள் நான்கும் அந்தாதியாய் அமைந் துள்ளன. திருவாய்மொழியை 'அந்தாதி' என அவரே பல இடங் களிற் கூறியுள்ளனர். இவற்றுள், திருவாசிரியம் நீங்கலாக ஏனைய மூன்றும் முதற்பாவின் முதற்சொல், ஈற்றுப் பாவின் ஈற்றுச்சொல் லாகப் பெற்றுள்ளன. திருவாசிரியம் மட்டும் அவ்வாறு இல்லை. செய்யுள்களை அந்தாதித் தொடையாற்பாடுவது பழங்கால வழக்கே யாகும். பதிற்றுப்பத்து நான்காம் பத்தின் பத்துப் பாட்டுகளும் அந்தாதித் தொடையால் அமைந்திருத்தலைக் காணலாகும்.

மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறு அங்கம் கூற அவதரித்த திருமங்கை மன்னர், தம்முடைய நூல்கள் ஆறையும் அந்தாதித் தொடையாக அருளிச்செய்திலர்; ஆயினும், பெரிய திருமொழி **11**-ஆம் பத்து மூன்றாந்திருமொழி பத்துப்பாடல்களையும் அந்தாதித் தொடையாக அமைத்துள்ளனர். நம்மாழ்வாருடைய வழியை விட வில்லை என்பதற்காக ஒரு திருமொழியை அவ்வாறு அமைத்தனர் போலும்!

நம்மாழ்வார் பிறந்த நாள் தொட்டே எம்பெருமானிடத்துப் பேரன்பு பூண்டு, அவ்வன்பே தம் இன்பமாகக் கருதி வாழ்ந்தவர்!

உலக இன்பங்களை அவர் ஒரு சிறிதும் எண்ணவில்லை என்று வரலாறு கூறுகின்றது. 'அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து' என்ற அகச்சான்றினாலும் மிக்க இளம்பருவந் தொட்டே எம்பெருமானிடத்துக் கொண்ட அன்பில் மூழ்கி உலக இன்பங்களை எண்ணாது இருந்தனர் என்பது அறியப்படுகின்றது. அவர்தம் நூலை ஆராய்ந்து பார்த்தால், இந்நிலைமை மிக நன்றாகத் தெரியும். 'பெண்களின் காமவலைப்பட்டு உழன்றேன்,' என்று வேறு சிலர் பலவாறாகக் கூறுவது போல நம்மாழ்வார் கூறிற்றிலர். மிக அரிதாக இரண்டோரிடங்களில் மட்டும் இத்தகைய கருத்து வந்துள்ளது. அங்ஙனம் மிக அருமையாக வந்துள்ளதனால் அவை களும் உலகியல் நோக்கிப் பொதுவாகக் கூறப்பட்டவை என உய்த் துணரலாம். எனவே, நம்மாழ்வார் பிறந்த நாள் தொட்டு, அல்லது அறியாக்காலந்தொட்டு இறைவன் இடத்துக்கொண்ட அன்பே இன்பமாக வாழ்ந்தவர்; 'உண்ணுஞ்சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்' அன்பே என்று வாழ்ந்தவர் என்பது தெளிவாகின்றது.

## ஆழ்வார் செய்யுள் பாடிய முறை

ஆழ்வாருக்கு அறியாக்காலந்தொட்டு இறைவனிடத்து உண்டாகிய அன்பு நாளுக்கு நாள் பெருகுவது ஆயிற்று. 'இறைவனை அன்போடு எண்ணுதல் வேண்டும்; அன்போடு வணங்குதல் வேண்டும்,' என எண்ணி நடைபெறுவதாக இல்லாமல், இறைவனை நினைத்தலும், அவனை வணங்குதலும் அவருக்கு இயல்பாகிவிட்டன. அவர் அவனை நினையாமல் இருக்க இயலாதவராகிவிட்டார். மக்கள் உணவு இன்றி உயிர் வாழ இயலாதவராய் இருக்கின்றார்கள். நம்மாழ்வார் எம்பெருமானை நினையாதிருக்க—அவ்வன்பை விட்டிருக்க—இயலாதவராகிவிட்டார். எம்பெருமான் நினைவு அவர் உள்ளத்தில் இன்ப ஊற்றாகிவிட்டது. அதனால், 'ஆழ்வார் பிரபத்தியை மேற்கொண்டவரே; ஆனால், பத்தி அவருக்குத் தேகயாத்திரா சேஷம்' (பத்தி இன்றி உயிர்வாழ இயலாதவர்) என்று நம் முன்னோர் அறுதியிட்டுரைத்தனர்.

மக்களுக்கு உள்ளத்தில் இன்பம் உண்டாவதற்கு இரண்டு வழிகள் உண்டு. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளால் அறிதற்கு உரிய பொருள்களை அனுபவிக்கும்போது உள்ளத்தில் இன்ப உணர்ச்சி உண்டாகும். தமக்கு இனிய உறவினரை, நண்பர்களை, இனிய காட்சிகளைக் கண்ணுற்றுக் காணும்போது உள்ளத்தில் இன்பம் உண்டாகும்; தம் மக்கள் மழலைச்சொற்கள்,

இனிய இசை முதலியனவற்றைக் காதால் கேட்கும்போது உள்ளத்தில் இன்பம் உண்டாகும். இவ்வாறே பிறவற்றையும் கொள்க. இப்படி ஐம்பொறிகளின் சம்பந்தத்தால் இன்பம் உண்டாவதேயன்றி, இவற்றின் சம்பந்தம் இல்லாமலே உள்ளத்தில் இன்பம் உண்டாதலும் உண்டு. அது மிக உயர்ந்த இன்பமாகும். துன்பமான காரியத்தை அனுபவித்துக்கொண்டே மனத்தில் இன்பம் உறுதலும் உண்டு.

"தனது ஆத்துமாவைக்கொண்டு அகமகிழ்ச்சி அடையும் மனிதனே 'ஸ்திதப்பிரஞ்ஞன்' என்று கூறப்படுவான்," என்பது பகவத் கீதையின் கருத்து. "பிச்சை எடுப்பேன்; உணவின்றி வருந்துவேன்; ஆனால், திருட்டுப் போன்ற இழிதொழிலைச் செய்யேன்," என்பதில் கிடைக்கும் உணர்ச்சி ஆனந்தம்; இதுவே ஆத்துமாவின் அகமகிழ்ச்சி," என்பது மகாத்துமா காந்தியடிகள் குறிப்பு.

தன் குடும்பத்தை நன்னிலை அடையச் செய்யவேண்டுமென்று எண்ணி மிக அதிகமாக உழைக்கும் ஒருவன், அவ்வுழைப்பாலாகும் வருத்தத்தை வருத்தமாக எண்ணுவது இல்லை; இன்பமாகவே எண்ணுவான். தம் நாடு நன்னிலை அடைய வேண்டுமென்று எண்ணி உழைத்தவரும் அவ்வுழைப்பைத் துன்பமாக எண்ணாமல் இன்பமாக எண்ணியதை அனுபவத்திற் கண்டோம்.

'அஞ்சிறைய மடநாராய்' என்று தொடங்கும் பாசுரத்தில் 'வன்சிறையில் அவன்வைக்கில் வைப்புண்டால் என்செயுமே' என்ற அடியின் பொருளை விளக்குமிடத்தில்' 'பரார்த்தமாகச் சிறையிருக்கும் இருப்புக் கிடைக்கவேண்டுமே!' என்றார் இராமாநுசர். பரார்த்தமாகச் சிறை இருக்கும் இருப்பு உடலளவில் துன்பமாயினும், மன அனுபவத்தில் இன்பமாகும் - பேரின்பமாகும் என்பது இராமாநுசர் கருத்தாகும்.

இன்பம் துன்பம் என்பன, அவரவர் உள்ளத்தில் உண்டாகும் ஒரு கொள்கையே. ஆதலால், உடற்சம்பந்தம் இன்றியும், உடலளவில் துன்பம் இருப்பினும் மனத்தில் இன்பம் உண்டாதல் கூடும்.

*'இடுக்கண் வருங்கால் நகுக; அதனை*
*அடுத்தூர்வ தஃதொப்ப தில்.*

*'இன்னாமை இன்ப மெனக்கொளின் ஆகுந்தம்*
*ஒன்னார் விழையுஞ் சிறப்பு.'*

என்ற திருக்குறளின் கருத்தைக் காண்க.

இவ்வாறு உடல் தொடர்பு இன்றி உள்ளத்தே உண்டாகும் இன்பம் மிகச் சிறந்ததாகும். ஆழ்வாருக்கு எம்பெருமானை நினைக்க நினைக்க, அவர் உள்ளத்து எழுந்த இன்பவெள்ளம் உடல் தொடர்பு இல்லாதது (ஐம்பொறி இன்பமன்று); உயிரை ஒட்டிய இன்பமாகும். ஐம்பொறி இன்பமாயின், அவ்வப்பொறிகளால் அனுபவிப்பதற்கு உரிய பொருள்கள் இல்லாதபோது இன்பம் உண்டாகாது. ஆழ்வார் எம்பெருமானைக் கண்ணுற்கண்டிலர்; நினைந்து நினைந்தே இன்புற்றனர். ஞானக்கண்ணுற்கண்டு இன்புற்றனர். அதனால், அவருடைய இன்பம் தடையின்றி நிகழ்ந்தது. உலகப்பொருள்களில் இன்பந்தரத் தக்க பல்வேறு பொருள்களால் உண்டாகும் இன்பம் எல்லாம் ஒன்று சேர்ந்தாற்போல, எம்பெருமானை நினைதலால், ஆழ்வார் உள்ளத்தில் இன்பம் உண்டாயிற்று அத்தகைய அவர் நிலைமையை அவர் பாசுரங்களிற்காணலாம்.

"தேனும் பாலும் கன்னலும் அமுது மாகித் தித்திப்ப
யானும் எம்பி ரானையே ஏத்தி னேன்யான் உய்வானே"

என்பதில் 'தேன், பால், சருக்கரை, அமுதம் ஆகிய எல்லாவற்றின் இன்பமும் எம்பெருமானை நினைதலால் எனக்கு உண்டாகின்றது,' என்கிறார்; 'அப்படி இன்பம் உண்டாவதனால் யான் எம்பிரானை எப்போதும் ஏத்துகின்றேன்,' என்கிறார். 'அப்படி அப்பெருமானை நினைந்து ஏத்தி இன்பம் அடைவதால்தான் யான் உயிர் வாழ்ந்திருக்கின்றேன்; அப்படி இல்லாவிட்டால் யான் உயிர் வாழ்தல் இயலாது,' என்கிறார். 'யான் உய்வான் ஏத்தினேன்,' என்பது இக்கருத்தைக் காட்டுகின்றது. உய்தல் - நற்கதியடைதல் என்பதன்று இங்கு; உயிர் பிழைத்திருத்தல் என்பது பொருள். 'மக்கள் வாழ்வுக்கு இன்றியமையாத சோறும் நீரும் போல, அப்பெருமானை நினைக்கும் அன்பே, எனக்கு உண்ணும் சோறும் பருகும் நீரும் ஆகும்,' என்கிறார்.

'உள்ளுந்தோறும் தித்திப்பான்' என்றும், 'எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழிதொறும், அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆரா அமுதமே' என்றும் கூறுகின்றார். நினைக்க நினைக்க முன்னைய இன்பம்போல அல்லாமல் புதிய புதிய இன்பமாய் உளது. புதிய புதிய ஆராவமுதம் உண்டாற்போல இன்பம் உண்டாகின்றது என்பது கருத்தாகும்.

இறைவன் அன்பினால் உண்டாகிய இவ்வின்பம் பொறி உணர்ச்சியாலாயது அன்று; பொறியுணர்ச்சியைக் கடந்து உயிரின்கண் உண்டாகிய இன்பம் என்று அவரே கூறுகின்றார்.

'வாரா வருவாய் வருமென் மாயா மூர்த்தியாய்
ஆரா வமுதாய் அடியேன் ஆவி யகமே தித்திப்பாய்'' (5. 8, 10.)
'வண்ணம் மருள்கொள் அணிமேக வண்ணா! மாய அம்மானே!
எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே! இமையோர் அதிபதியே!'(6.10.3)

என்பனவற்றால் ஆழ்வார்க்கு உண்டான இன்பம் மிகச்சிறந்தது; உயிரை ஒட்டியது என்பதை அறியலாம். இவ்வாறு இன்னும் பல இடங்களிற்கூறியுள்ளார் ஆழ்வார்.

அவ்வாறு ஆழ்வார் உள்ளத்தில் எம்பெருமானை நினைப்பதனால் அப்பொழுதைக்கு அப்பொழுது புதிய புதிய ஆராவமுதம் உண்டாற் போன்ற இன்பம் பெருகி வளரவே, அவ்வின்ப உணர்ச்சி உள்ளடங் காத நிலையில் இறைவனைப்பற்றிப் பாடத்தொடங்கினர். சிறந்த கவி பாடும் ஆற்றல் உள்ள ஒருவன், ஒரு நல்ல நிகழ்ச்சியைக் கண்டால், அந்நிகழ்ச்சியை அமைத்துக் கவி பாடாதிருத்தல் அவனுக்கு இயலாத ஒன்றாகும். கோவல கண்ணகியர் வரலாற்றைக் கேட்ட சிறந்த புலமையும் கவி பாடும் ஆற்றலுமுடைய இளங்கோவடிகள், உடனே அவ்வரலாற்றை அமைத்துக் கவி பாடுவாராயினர். அவ் வரலாற்றைக் கேட்டும் கவி பாடாதிருத்தல், இளங்கோவடிகளால் இயலாத காரியம் எனக் கொள்க. அவ்வாறே, எம்பெருமானை நினைந்து நினைந்து இன்பவுணர்ச்சி பெருகப்பெற்ற ஆழ்வார், அப்பெரு மானைப்பற்றிக் கவி பாடாது இருக்க இயலாத நிலையையுடைய வராய்ப் பாடத் தொடங்கினார்.

'கண்டுகொண்டு என்கண்ணிணை யாரக் களித்துப்
பண்டை வினையாயின பற்றோ டறுத்துத்
தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்
அண்டத் தமரர் பெருமா னடியேனே.' (9. 4. 9.)

திருவாய்மொழி முழுவதும் ஆராய்ந்த நம்முன்னோர், இறைவனைக் கண்டதாக மகிழ்ந்து கூறும் இடமெல்லாம் அவர் ஞானக்கண்ணாற் கண்டதேயாகும் என்றும், அவர் அனுபவம் எல்லாம் மானசானு பவமே என்றும் முடிவு செய்துள்ளனர். ஆதலால், இங்குக் 'கண்டு கொண்டு என் கண்ணிணை ஆரக்களித்து' என்று தம் ஞானக் கண்ணாற்கண்டு களித்ததையே கூறுகின்றார் எனக் கொள்க.

ஆழ்வார் எம்பெருமானை ஞானக்கண்ணாற்கண்டு களித்தார்; அக்களிப்பினால் சொன்மாலைகள் சொல்லல் ஆயினார். 'சொன் மாலைகள் சொன்னேன்' என்றதனால், திருவாய்மொழி முழுவதும் ஒரே மாலை என்று கொள்ளுதல் ஆகாது. ஒவ்வொரு பாசுரமும் இறைவனுக்கு அணிந்த ஒவ்வொரு மாலை எனக் கொள்ளுதலே பொருத்தமாகும். ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மலர்; ஒவ்வொரு

பாசுரமும் ஒவ்வொரு மாலை என்க. ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மலர். அச்சொல்லின் பொருள் அம்மலரின் நறுமணம், நறுந்தேன் ஆகும்.

*'சொல்லென்னும் பூம்போது தோன்றிப் பொருளென்னும்*
*நல்லிருந் தீந்தாது நாறுதலால்—மல்லிகையின்*
*வண்டார் கமழ்தாம மன்றே மலையாத*
*தண்டாரான் கூடற் றமிழ்?'*

என்றது காண்க.

எம்பெருமானைத் தம் ஞானக்கண்ணாற்கண்டு மகிழ்ந்து சொன் மாலைகள் சொன்னார். கண்டு மகிழ்ந்ததன் பயன் சொன்மாலை சொல்லுதலேயாகும். 'பண்டை வினையாயின பற்றோடு ஒழிந்தது' இடைப்பிற வரலாய் வந்த மற்றொரு பயனாகும். அது முக்கியப் பயன் அன்று. இறைவனிடத்து அன்பு செலுத்துதல் நம் கடமை. வினைகள் அவ்விடத்து நிற்க இயலாமல் தாமே ஒழியும்; அல்லது, அவற்றை ஒழித்தல் இறைவன் கடமை. அதனை முக்கியப்பயனாக எண்ணுதல் ஆகாது என்பது அறிஞர் கருத்து.

ஆழ்வார் ஞானக்கண்ணால் எம்பெருமானைக் கண்டு மகிழ்ந்து சொன்மாலைகள் சொன்னார். அதனால், மற்றொரு பயனும் உண்டா யிற்று. அச்சொன்மாலைகள் ஏனைய அடியார்கட்குச் செவியால் நுகரும் அமுதமாயின; அவர்கள் அச்சொன்மாலைகளாகிய பாசுரங் களைப் பாடிப்பாடி, அவற்றின் பொருளை எண்ணியெண்ணி அமுதம் உண்டாற்போல மகிழ்வார்கள் என்றபடி.

*'கண்ட வாற்றால் தனதே உலகென நின்றான் தன்னை*
*வண்டமிழ் நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்ப மாரியே.'*(4.5,10.)

எனப் பிறிதோரிடத்தும் அருளிச்செய்துள்ளார்.

இவ்வாறு ஆழ்வார் பாசுரங்கள் கற்பார்க்கு இன்பவெள்ளமாய் இருத்தலால், திருவாய்மொழியை 'ஆரா அமுதக்கவியாயிரம்' என்றார் கம்பர்.

"ஆழ்வார் தம்முடைய கவிகளைத் 'தொண்டர்க்கு அமுதம்' என்றும், 'அடியார்க்கு இன்பமாரி' என்றும் தாமே புகழ்ந்து கூறுதல் தகுமோ?' எனின், ஆழ்வார் தம்முடைய ஆற்றலால் தாம் ஒன்றைச் செய்வதாக எண்ணுபவர் அல்லர்; எல்லாம் இறைவன் அருளால் நிகழ்பவை என்றே எண்ணும் இயல்பினர். இறைவனைக் கண்டு மகிழ்ந்ததனாலே சொன்மாலைகள் சொல்லப்பட்டன என்ற தனால் இச்சொன்மாலைகள் தோன்றியதற்குக் காரணம் இறைவன் அருளே என்பது பெறப்படும். அப்படி அவன் அருளால் சொல்லப் பட்ட சொன்மாலைகள் அடியார்க்கு அமுதம் போன்றவை என்றால்,

அது இறைவனைப்புகழ்ந்ததாகுமேயன்றித் தம்மைப் புகழ்ந்துகொண்டது ஆகாதென்க. ''மயர்வற மதிநல மருளினன்'' என்று முதற் பாசுரத்திலே கூறியிருத்தலால், ஆழ்வார் பாடிய பாக்களெல்லாம் இறைவனருளாற் பாடப்பட்டவை என்பது பெறப்படும். அன்றியும்,

'என்னெஞ்சத் துள்ளிருந்திங் கிருந்தமிழ்நூல் இவைமொழிந்து' 10.6:4.
'பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி' 10. 7: 5.

என்பவற்றால் இறைவனே தம் உள்ளத்திலிருந்து இக்கவிகளைப் பாடுகின்றான் என்பது ஆழ்வார் நினைவாய் உளது. ஆகவே, அக்கவிகளைப் புகழ்வது அப்பெருமானைப் புகழ்வதேயாகும் எனக் கோடல் தவறாகாது. 7-ஆம் பத்து 9-ஆம் திருவாய்மொழி முழுவதும் இக்கருத்தையே ஆழ்வார் பலவாறாக வெளியிட்டுள்ளனர். இறைவனைப் பற்றிய மெய்யுணர்வு பெற்ற பெரியோர் எச்செயலும் இறைவனால் நிகழ்கின்றது என்றெண்ணுவது இயல்பு. அவ்வாறே ஆழ்வாரும் எண்ணினர்.

அன்றியும், இப்பாசுரங்கள் பாடுகின்ற தமக்கு இன்பமளிப்பதையுணர்ந்த ஆழ்வார், அவ்வாறே இறைவனிடத்தன்புகொண்ட ஏனையோர்க்கும் இன்பமளிக்கும் என எண்ணுவது தவறாகாது. தம்முள்ளத்தில் நிகழும் எண்ணங்களுக்குத் தக்கபடி பிறரை எண்ணுதல் மக்கள் மனவியல்பன்றோ? ஆழ்வார் எண்ணியபடி அவருடைய சிஷ்யராகிய மதுரகவிகள்,

'நாவி னால்நவிற் றின்ப மெய்தினேன்'

என்றும்,

'குருகூர்நம்பி, பாவி னின்னிசை பாடித் திரிவன்'

என்றும் கூறுதலையும், பிற நூல்கள் பாராட்டுதலையும் காண்க.

ஆழ்வார் தமது அன்பு எத்தன்மையது என்பதை அவரே பிறிதோரிடத்துக் கூறியுள்ளனர். ஆசையின் தன்மை யாது? (ஆசை-அவா) விரும்பிய பொருளை அனுபவித்து முடிவடையாதது ஆசையாகும். ஒரு பொருளை அனுபவிக்க அனுபவிக்க ஆசை பெருகுவதல்லது முடிவடையாது. பிற காரணங்களால் அவ்வனுபவத்திற்கு இடையூறு நிகழ்ந்தால் ஒருவேளை அவ்வாசை தணிவதல்லது அனுபவித்தலால் முடிவடையாது. அனுபவிக்க அனுபவிக்க, விறகு மேன்மேலும் இடப்பட்ட நெருப்புப்போல அவ்வாசை பெருகுவதல்லது தணியாது என்பர். (குறள். 343. உரை.) அதனால், அவ்வாசையை முயன்று தடுத்தே ஒழித்தல் வேண்டும். அதனால், அவ்வாசையின் தன்மையைக் கூறத் தொடங்கிய திருவள்ளுவர், 'ஆரா இயற்கை அவா' என்றார்.

ஆழ்வாருக்கு அந்த ஆராவியற்கையையுடைய அவா முழுவதும் இறைவன்பாற்செல்லுவதாயிற்று. அதனால், அவர், 'ஆராத காதற் குருகூர்ச் சடகோபன்' என்று தம்மைத்தாமே கூறியுள்ளனர்.

இவ்வாறான அவர் இயல்பை அவருடைய பாசுரங்களிற் காணலாம்.

*'கூவிக்கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோர நின்றால்*
*பாவிநீ என்றொன்றும் சொல்லாய் பாவியேன் காண வந்தே'* (4.7:3.)

ஞானக்கண்ணாற்கண்ட எம்பெருமானை ஊனக்கண்ணாலும் காண விரும்பினார். காட்சி எய்தவில்லை. கண்ணீர் பெருக நெஞ்சம் உருகிப் பன்முறை அழைத்தார். அப்போதும் அக்காட்சி எய்த வில்லை. 'நான் இவ்வூனக் கண்ணாற் காணும்படி நீ அன்போடு காட்சியளிக்க விரும்பவில்லையாயினும், அவ்விருப்பமின்மையை என் கண்ணெதிரே தோன்றிக் கூறுக. 'நீ பாவி. அதனால் உனக்குக் காட்சியளித்தல் இயலாது,' என்றாவது என் கண்முன் தோன்றிக் கூறுக. அதுவும் எனக்கு அமையும். நீ வெறுப்போடு கூறியதா யினும், விருப்போடு கூறியதாயினும், அவ்வேற்றுமையை யான் கருத வில்லை. உன்னைக் காண்டல், உன் சொற்கேட்டல் அவ்வளவே என் ஆசை,' என்கிறார்.

*"சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்*
*இறப்பில் எய்துக எய்தற்க யானும்*
*பிறப்பில் பல்பிற விப்பெரு மானை*
*மறப்பொன் றின்றிஎன் றும்மகிழ் வேனே"*

இப்பாசுரத்தில், ஆழ்வார் எம்பெருமானை நோக்கி, 'நீ எனக்கு வீடு பேறு அளிப்பினும் அளிக்க; சுவர்க்கம் அளிப்பினும் அளிக்க; நரகமே அளிப்பினும் அளிக்க; என்னை எங்கு வைப்பினும் வைக்க; அது பற்றி எனக்குக் கவலையில்லை; எப்போதும் உன்னை நினைந்து நினைந்து மகிழ்வேன்; இதுவே யான் விரும்புவது,' என்கிறார். 'இவ் வாறு அவன் வெறுப்போடு கூறினும், அவன் சொல்லே யான் வேண்டுவது; அவன் என்னை எங்கே வைப்பினும் அவனை நினைந்து மகிழ்வதே யான் வேண்டுவது,' என்று ஆழ்வார் கூறுவாராயின், அவர் அன்பு இத்தகையது என்று எடுத்துரைத்தல் இயலுமோ?

*"நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு*
*இசையும் இனிய செவிக்கு"*

என்ற திருக்குறட்கருத்தும், "பாவி நீ என்றொன்று சொல்லாய் பாவியேன் காண வந்தே," என்ற ஆழ்வார் கருத்தும் ஒத்திருத்தல்

காண்க. சிற்றின்ப வேட்கையை யுடையார்க்குக் கூறப்பட்ட இக் கருத்துப் பேரின்ப வேட்கையுடையார்க்கு எளிதேயன்றோ ?

## சமயக் கருத்துகள்

ஆழ்வார் எம்பெருமானிடத்துக் கொண்ட அளவிறந்த பத்தியினல் அப்பெருமானைப் பற்றிக் கவி பாடினுராயினும், அவருள்ளத்தே தேங்கிய வைணவ சமயக் கருத்துகள் அவர் பாசுரங்களில் ஆங்காங்கே வெளிப்படுவனவாயின. ஆழ்வார் தமிழ் நாட்டிலே அவதரித்தவர். தமிழ் நாட்டிலே தொன்று தொட்டுக் கடவுள், உயிர், உடம்பு இவற்றைப் பற்றி வழங்கிய சீரிய கருத்துகளே ஆழ்வார் உள்ளத்தே அமைந்து அவர் பாசுரங்கள் வழியாக வெளிப்படுவனவாயின. அவைகளே வைணவ சமயத்தின் அடிப்படையான கொள்கைகளாம்.

(1) வைணவ சமயத்தவர் தத்துவம் மூன்று எனக் கொண்டனர். அவை சித்து, அசித்து, ஈசுவரன் என்பன. சித்து - உயிர். அசித்து - மக்கள் விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது. பிரகிருதியை மூலப்பகுதி என்பர். ஈசுவரன் - இறைவன். இவை மூன்றும் தனித்தனி இயல்புடைய வேறு வேறு பொருள்கள் ; என்றும் அழிவில்லாதவை ; ஆயினும், எக்காலத்தும் இவை மூன்றும் சேர்ந்தே இருக்கின்றன. இவற்றுள், இறைவன், சித்து அசித்து இரண்டனுள்ளும் அந்தரியாமியாய் உள்ளான். இதுவே இவற்றின் நுண்ணிய நிலை (சூக்ஷ்ம நிலை). மூலப்பகுதி, விரிவடைந்து மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்புகளும், மற்றுமுள்ள பொருள்களும் ஆகின்றது. உயிர், தன்னுடைய புண்ணிய பாவங்கட்கேற்ப ஒவ்வோருடம்பை அடைகின்றது. அதுவே உயிருக்குப் பிறப்பாகும். இறைவன், மூலப்பகுதியின் விகாரமாகிய எல்லாப் பொருள்களுள்ளும் எல்லா உயிர்களுள்ளும் அந்தரியாமியாய் மறைந்துள்ளான். இதுவே இவற்றின் பருநிலை. (ஸ்தூல நிலை). மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பிற்கு வளர்தல் பருத்தல் குறைதல் முதலிய விகாரங்கள் உண்டு. அவ்வுடம்பினுள்ளிருக்கும் உயிருக்கு அத்தகைய விகாரம் ஒன்றுமில்லை. ஆயினும், தான் செய்த புண்ணிய பாவங்கட்கேற்ப உடம்பைப் பெற்றிருத்தலால், அவ்வுடம்பைப் பற்றிய இன்ப துன்பவுணர்ச்சிகள் உயிருக்கு உண்டு. இவ்வுடம்பினுள்ளும் உயிரினுள்ளும் அந்தரியாமியாய் உள்ள இறைவன், உடம்பினுடைய விகாரங்களையும், உயிரினுடைய இன்பதுன்பவுணர்ச்சி

களையும் அடைவதில்லை. இறைவன் வினை காரணமாக இல்லாமல் தன் விருப்பினால் இவ்விரண்டனுள்ளும் அமைந்திருத்தலால், இவ்விரண்டின் தன்மைகளையும் அவன் அடைவதில்லை. உயிர் மூலப் பகுதியின் விகாரமாகிய உடம்பைத் தனக்கு உடம்பாகக் கொண்டிருத்தல் போல, இறைவன் உடம்பு, உயிர் ஆகிய இரண்டையும் தனக்கு உடம்பாகக் கொண்டிருக்கின்றான். இவ்வாறு, இம்மூன்று தத்துவங்களும் ஒன்றை விட்டொன்று பிரியாமல் எக்காலத்தும், தத்தம் இயல்பை விடாமல் ஒன்று சேர்ந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கையாகும். இக்கொள்கையை விளக்க வைணவ சமயத்துறவிகள் மூன்று கோல்களை ஒன்றாகப் பிணைத்துக் கையில் ஏந்தியுள்ளார்கள். இதனை 'முக்கோல்' என்று கூறுவர். துறவிகள் இவ்வாறு முக்கோல் ஏந்தும் வழக்கம் தமிழ் நாட்டில் தொன்று தொட்டு வழங்கிய வழக்கமாய் உளது. தொல்காப்பியர்,

> *"நூலே கரகம் முக்கோல் மணையே*
> *ஆயுங் காலை அந்தணர்க் குரிய"*

என அந்தணர்க்கு முக்கோல் கூறினர். இங்கே அந்தணர் எனப் பட்டவர், முற்றத் துறந்த முனிவராவர். தொல்காப்பியத்தில் பார்ப்பார், அறிவர், அந்தணர், தாபதர் எனப் பல சொற்கள் வழங்கப் பட்டுள்ளன. இவையெல்லாம் ஒரே வகையாரைக் குறிக்கவில்லை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையாரைக் குறிக்கவுமில்லை. பார்ப்பார் வேறு, அறிவர் அந்தணர் வேறு. அறிவர் அந்தணர் இவர் முற்றத் துறந்தவராக, மனத்தையடக்கி இறைவனையே எண்ணும் இயல்பினராக, மூன்று கால நிகழ்ச்சிகளையும் அறிபவராக உள்ளனர். தாபதர், அறிவர் நிலையை அடைதற்குத் தொடக்கமாகவுள்ள தவத்தை மேற்கொண்டு ஒழுகுபவராய்க் காணப்படுகின்றனர். பார்ப்பார், வேதம் ஓதுதல் மட்டும் உடையவராய்க் (இந்நிலைகட்கு வாராதவராய்க்) காணப்படுகின்றனர். வேறு சில சொற்களும் உள்ளன; அவை பொதுவாய் உள்ளன.

> *"எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்*
> *உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்*
> *நெறிப்படச் சுவல்அசைஇ வேறோரா நெஞ்சத்துக்*
> *குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை யந்தணீர்!"*

என்பது கலித்தொகைச் செய்யுட்பகுதி. தொல்காப்பியத்தாலும் இக்கலித்தொகைச் செய்யுட்பகுதியாலும் கூறப்பட்ட அந்தணர் ஒரு நிலையுடையவரேயாதல் காணலாம். முக்கோல் ஏந்திய அவ்வந்தணர்

ஐம்பொறிகளையும் வென்றவர் ; மனம் இறைவனையல்லாது வேறு ஒன்றையும் விரும்பாத இயல்பினர் என்பது தெளிவாகின்றது.

இவ்வந்தணர்கள் முக்கோல் ஏந்தக் காரணம் யாது? இம் முக்கோலை 'உரைசான்ற முக்கோல்' எனக் கலித்தொகைச்செய்யுட் பகுதி புகழ்ந்து கூறுகின்றது. 'உடம்பு, உயிர், இறைவன் எனத் தத்துவம் மூன்று என்னுங் கொள்கையுடையேன்' எனத் தம்முடைய தத்துவக் கொள்கையினைக் குறிக்க முக்கோல் ஏந்தினர் எனக் கொள்வதே பொருத்தமாகும். தத்துவ வேறுபாடே சமய வேறுபாடு கட்கு முக்கியக் காரணமாகும். இம்முக்கோலைப் பற்றிய குறிப்பு நெய்தற்கலியிலும் முல்லைப்பாட்டிலும் வந்துளது.

இவ்வாறு இன்றளவும் வைணவ சமயக் கொள்கைகளாக வுள்ள சித்து, அசித்து, ஈசுவரன் எனத் தத்துவம் மூன்று என்பதும், அதற்கு அறிகுறியாக முக்கோல் ஏந்துதலும் தமிழ் நாட்டின் மிகத் தொன்றுதொட்ட வழக்கமாதல் காண்க.

இவ்வாறு முக்கோலேந்திய துறவிகளைப் 'பகவர்' எனக் கூறுதல் வழக்கம். தஞ்சைவாணன் கோவை முதலிய கோவைக ளெல்லாம் இத்தகைய துறவிகளை 'முக்கோற்பகவர்' என்றும், 'மிக்கோர்' என்றும் கூறுகின்றன. தத்துவஞானமும் இறைவ னிடத்தன்பும் ஆகிய இரண்டும் இன்றியமையாதவை; தத்துவ ஞானத்தின் பயன் இறைவனிடத்து மாறாத பத்தியுடையராதல் என்பர். ஆயினும், இவ்விரண்டும் எல்லாரிடத்தும் சமமாய் இருப்ப தில்லை தத்துவஞானத்தில் மனம் அதிகம் பதிந்தவராய்ச் சிலர் இருப்பர்; பத்தியில் மனம் மிகப் பதிந்தவராய்ச் சிலர் இருப்பர். இருவரும் துறவுள்ளமுடையவராயிருப்பர். தத்துவ ஞானத்தில் மனம் மிக ஊன்றியவர் பகவர் என்றும், பத்தியில் மனம் மிக ஊன்றிய இல்லறத்தார் அடியார் என்றும் கூறப்படுவர். ஆழ்வார் இவ்விரு திறத்தாரையும் திருவாய்மொழியிற்கூறுகின்ருர்.

"மேவித் தொழுதுய்ம்மின் நீர்கள் வேதப் புனித இருக்கை
நாவிற்கொண் டச்சுதன் தன்னை ஞான விதிபிழை யாமே
பூவிற் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து
மேவித் தொழும்அடி யாரும் பகவரும் மிக்க துலகே." (5. 2 : 9.)

என்ற பாசுரத்தில் ஆழ்வார் இவ்விரு திறத்தாரையும் கூறுதல் காண்க. தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு வழங்கி வரும் முக் கோற்பகவரையே இங்குப் பகவர் என்கிருர்.

வைணவ சமயத்தின் கொள்கையாகிய தத்துவம் மூன்றும் அவற்றின் இயல்புகளும் ஆழ்வார் பல இடங்களில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறியுள்ளார்.

"யாவையும் யவருந் தானாய் அவரவர் சமயந் தோறும்
தோய்விலன் புலனைந் துக்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரி னுள்ளால் ஆதுமோர் பற்றி லாத
பாவனை அதனைக் கூடில் அவனையுங் கூட லாமே." (3. 4 : 10.)

என்ற பாசுரத்தில் அழகாக வெளியிட்டுள்ளார்.

யாவையும் யவரும் தானாய் - உயிரில்பொருள்கள் உயிர்கள் ஆகிய எல்லாவற்றுள்ளும் தான் அந்தரியாமியாய் நின்று, அவரவர் சமயந்தோறும் தோய்விலன் - அவ்வப்பொருள்களின் விகாரங்களைத் தான் அடையான். சமயம் - அவஸ்தை, விகாரம். பாசுரத்தில் அவரவர் சமயந்தோறும் என்றிருந்தாலும், அவையவை சமயந்தோறும் என்பதையும் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும். உயிர்களின் விகாரங்களாவன, அவ்வவ்வுயிர் கொண்டுள்ள உடம்பிற்கேற்ப உண்டாகும் இன்பதுன்பங்கள். உயிரில் பொருள்கட்குரிய விகாரங்களாவன, வளர்தல் பருத்தல் முதலியவை. இருவகைப் பொருள்கட்குள்ளும் அந்தரியாமியாய் நிற்கும் இறைவன் அவற்றின் விகாரங்களை அடைவதில்லை என்பது கருத்து. இதனை ஓர் உதாரணத்தால் விளக்குகின்றார் மேல்: ஆவி சேர் உயிரினுள்ளால் ஆது மோர் பற்றிலாத பாவனை அதனைக் கூடில் அவனையுங் கூடலாமே - உடம்பினுள் இருக்கின்ற உயிர் அவ்வுடம்பின் விகாரங்களை அடைவதில்லை என்பதை நன்கு தெளிவோமாயின், அவ்வுடம்பு, உயிர் இரண்டனுள்ளும் இருக்கின்ற இறைவன் அவ்விரண்டன் விகாரங்களையும் அடைவதில்லை என்பதையும் நன்கு தெளியலாம் என்பது கருத்து. ஆவி - உடம்பு; ஆகுபெயராகக் கொள்க. 'யாதும்' என்பது 'ஆதும்' எனத் திரிந்தது. அவனை - இறைவனை. எம்பெருமான் எல்லாப்பொருள்களுள்ளும் அந்தரியாமியாய் நிற்கின்றான் என்னும் கருத்தைப் பல இடங்களில் ஆழ்வார் வெளியிட்டுள்ளனர்.

(2) 'வீடுபேறு என்பது யாது ?' என்பது பற்றிச் சமயநூல்கள் வேறு வகையாகக் கூறும். வீடு என்பது ஒரு தனி உலகம் என வைணவ சமயம் கூறுகின்றது. இதுவும் தமிழ் நாட்டின் பழங் கொள்கையேயாகும். திருக்குறளில்,

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்ற பாட்டில் வீட்டை (மோக்ஷத்தை) 'நிலம்' என்றார். அதனால் வீடு (மோக்ஷம்) ஓருலகம் என்பது திருவள்ளுவர் கருத்து என்பது தெளிவாகின்றது. இக்கருத்தை அவர்,

*'உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்*
*வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.'*

*'யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு*
*உயர்ந்த உலகம் புகும்.'*

*'ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்*
*வானம் நணிய துடைத்து.'*

என்ற பாட்டுகளிலும் வெளியிட்டுள்ளார். வரனென்னும் வைப்பு - எல்லா உலகத்தினும் மேம்பட்ட வீட்டுலகம். வானோர்க்கு உயர்ந்த உலகம் - தேவர்களாலும் அடைய முடியாத வீட்டுலகம். வானம் - வீட்டுலகம் ; தத்துவஞானம் பெற்றவர் அடையுமிடமாகக் கூறப் பட்டமையால் இங்கு வானம் என்றது, வீட்டுலகம்.

தத்துவ ஞானம் பெற்றவர்கட்கு இவ்வுலகத்தைவிட வீட்டுலகம் அண்மையிலிருப்பதாகத் தோன்றும்.

'பொன்னுலகு ஆளீரோ புவனிமுழுது ஆளீரோ' என்பதனால், தத்துவ ஞானிகட்கு இவ்வுலகத்தினும் வீடு அண்மையதாகத் தோன்றும் என்ற குறிப்பை ஆழ்வாரும் வெளியிட்டுள்ளனர்.

மோக்ஷம் ஒரு தனியுலகம் என்ற வைணவ சமயக் கொள் கையை ஆழ்வார் பல இடங்களில் வெளியிட்டுள்ளனர்.

*"புலனைந்து மேயும் பொறியைந்தும் நீங்கி*
*நலமந்த மில்லதோர் நாடு புகுவீர்*
*அலமந்து வீய அசுரரைச் செற்றான்*
*பலமுந்து சீரிற் படிமின்ஓ வாதே."*

என்ற பாசுரத்தில் 'நலமந்த மில்லதோர் நாடு' என்றது காண்க. 'நலம் அந்தமில்லதோர் நாடு' என்பதில் 'அந்தம் இல்லது' என்பதை நலம் நாடு இரண்டிற்கும் சேர்த்துப் பொருள் கொள்ளல் வேண்டும். அந்தமில்லதோர் நாடு - அழிவில்லாத ஒப்பற்ற நாடு. நலம் அந்த மில்லதோர் நாடு - அழிவில்லாத இன்பத்தையுடைய நாடு. நலம் - இன்பம். நாடும் அழிவில்லாதது; அதனையடைந்தார்க்கு உண் டாகும் இன்பமும் அழிவில்லாதது என்றபடி. 'அந்தமில் இன்பத்து அழிவில் வீடு' என்பர் பரிமேலழகர். 'அந்தமில் பேரின்பம்' என்றும், 'வைகுந்தம்' என்றும் ஆழ்வார் கூறியுள்ளனர்.

(3) உயிரல்லாத உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் பிரகிருதியே (மூலப்பகுதி) காரணமாகும். ஆயினும், உலகத் தோற்றத்திற்கு இறைவன் என்ன நிலைமையில் உள்ளான் என்பது பற்றியும் சமய நூல்கள் வேறு வேறு கருத்துடையன.

ஒரு பொருள் உண்டாவதற்கு மூன்று காரணங்கள் கூறுவதுண்டு. மண் குடமாகச் செய்யப்படுமிடத்து, மண் முதற்காரணம்; (காரியமாக மாறுவது முதற்காரணம்) அக்குடத்தைச் செய்பவன் நிமித்த காரணம்; அவன் குடத்தைச் செய்வதற்குக் கருவியாய் உள்ள சக்கரம் முதலியவை துணைக்காரணம். உலகத் தோற்றத்திற்கு இறைவன் இம்மூன்று காரணங்களாகவும் இருக்கின்றான். என்பது வைணவ சமயக் கொள்கையாகும். சித்தும் அசித்தும் சூக்ஷ்மமாக (நுண்மையாக) இருக்கும் நிலையில்—உலக உற்பத்திக்குமுன்— அவற்றுக்குள் இறைவன் அந்தரியாமியாய் நிற்கும் நிலையையே இறைவன் உலகத்திற்கு முகற்காரணம் என்றும், 'சூக்ஷமமாக (நுண்ணிய நிலையில்) இருக்கும் சித்து அசித்துகளை வெளிப்படுத்தி உலக உற்பத்தி செய்வோம்,' என்று இறைவன் எண்ணுகிற நிலையையே இறைவன் உலகிற்கு நிமித்த காரணம் என்றும், இறைவனுடைய ஞானம் சத்தி முதலியவை துணைக் காரணம் என்றும், இம்முறையில் இறைவன் உலக உற்பத்திக்கு மூன்று காரணங்களுமாய் உள்ளான் என்றும் முடிவு செய்துள்ளனர்.

இவ்வாறு இறைவன் உலகிற்கு மூன்று விதக் காரணங்களாகவும் உள்ளான் என்ற கருத்தை ஆழ்வார் பல இடங்களில் வெளியிட்டுள்ளார்.

*"நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் முதலிற் சிதையாமே*
*மனஞ்செய் ஞானத் துன்பெருமை மாசூணாதோ மாயோனே"* (1.5:2.)

*"தானோர் உருவே தனிவித்தாய்த் தன்னின் மூவர் முதலாய*
*வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய்"* (1. 5 : 4.)

*"எப்பொருட்கும், வேர் முதலாய் வித்தாய்ப் பரந்து தனிநின்ற,*
*கார்முகில்போல் வண்ணன்"* (2. 8 : 10.)

என்ற பாசுரங்களிலும், வேறு பல பாசுரங்களிலும் காணலாம். இவற்றுள், இறைவன் உலகிற்கு முதற்காரணம் என்பது மிக முக்கியமானது. பின் காரியப் பொருளாக மாறுவது முதற்காரணம் என்பது பொது விதி. இங்கு இறைவனே இவ்வுலகப் பொருள்களாக மாறி விட்டானோ என்றால் அங்ஙனமின்று.

இவ்வுலகப் பொருள்கட்கு (உடம்பு உயிர் எல்லாவற்றிற்கும்) அவற்றின் நுண்ணிய நிலை முதற்காரணம். பருப்பொருளாக (ஸ்தூலப் பொருளாக) உள்ள இந்நிலைமை காரியம். இறைவன் நுண்ணிய நிலையிலுள்ள சித்து அசித்துகளுள்ளேயும் அந்தரியா மியாய் உள்ளான் ; பருப்பொருளாய் உள்ள இந்நிலையிலும் அந்தரியா மியாய் உள்ளான் ; நுண்மையான சித்து அசித்துகளில் இறைவன் அந்தரியாமியாய் இருக்கும் நிலை முதற்காரண நிலையாகும். பருப் பொருளாய் உள்ள சித்து அசித்துகளில் இறைவன் அந்தரியா மியாய் உள்ள நிலையே காரியநிலையாகும். அதனால், இறைவன் முதற்காரணமாயுள்ள நிலையிலும், காரியமாயுள்ள நிலையிலும் சிறிதும் வேறுபடுவதில்லை. இக்கருத்தை ஆழ்வார் பாசுரத்தில், 'முதலிற் சிதையாமே' என்ற தொடர் அழகாக விளக்குகின்றது. தன் னுடைய நிலையில் சிறிதும் வேறுபாடின்றியே எல்லாப்பொருள் கட்கும் வித்தாக உள்ளவன் என்பது கருத்து. அங்ஙனமிருத்தல் இறைவனுடைய ஆற்றல் என்றபடி. இங்ஙனம் இறைவன் உலகிற்கு மூன்று காரணங்களாகவும் இருக்கின்றான் என்ற கருத்து ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்குக் காணப்படுகின்றது.

(4) வைணவ சமயத்தில் சிறப்பாகச் சில மந்திரங்களைக்கூறி வருகின்றனர். அவற்றுள், இறைவனது நாராயணன் என்னும் பெயரைக்கொண்ட எட்டெழுத்து மந்திரம் ஒன்றாகும். இதனைப் பெரிய திருமந்திரம் எனச் சிறப்பாகக் கூறுவர். இதற்கு விரிவாகப் பொருள் எழுதியுள்ளனர் நம் முன்னோர். நாராயணன் என்பதற்கு 'நீரையிடமாக உடையவன்' என்று பொருள் கூறுவது உண்டு. நம்முன்னோர் அப்பொருளைக் கொண்டிலர்.

நாராயணன் என்பது, நாரம் அயனம் என்னும் இரண்டு சொற் களாலான தொடர். அதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறி யுள்ளனர். நாரம் - அழிவில்லாப் பொருள்களின் கூட்டம் ; அவை யாவன, மூலப்பகுதியின் விகாரமாயுள்ள எல்லாப் பொருள்களும, எல்லா உயிர்களும், மோக்ஷமாகிய பரமபதத்திலுள்ள எல்லாப் பொருள்களுமாம். அயனம் - இடம். நாராயணன் என்னும் இத் தொடர், அழிவில்லாப் பொருள்களின் கூட்டத்திற்கு இடமாய் உள்ளவன் என்றும், அழிவில்லாப்பொருள்களை இடமாக உடையவன் என்றும் இருபொருள் கொள்ளுதற்கு உரியது. அழிவில்லாப் பொருள் களின் கூட்டத்திற்கு இடமாய் உள்ளவன் என்பது, இறைவன்

எல்லாப்பொருள்களையும் தனக்குள் அடக்கி எங்கும் வியாபித்துள்ள நிலையை உணர்த்தும். அழிவில்லாப் பொருள்களை இடமாக உடையவன் என்பது, இறைவன் எல்லாப் பொருள்கட்கும் அந்தரியாமியாய் உள்ள நிலையை உணர்த்தும். இவ்வாறு நம் முன்னோர் பொருள் கொண்டனர். இவ்வாறு நம் முன்னோர் பொருள் கொண்டதற்கு ஆதாரமாக உள்ளது, ஆழ்வார் பாசுரம் எனலாம்.

*‘அறிகிலேன் தன்னுள் அனைத்துலகும் நிற்க*
*நெறியினால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்’* 9. 6: 4.

என்ற பாசுரத்தில், ‘தன்னுள் அனைத்துலகும் நிற்க’ என்றது, அழிவில்லாப் பொருள்களின் கூட்டத்துக்கு இடமாய் உள்ளவன் என்ற கருத்தைக் குறிப்பிடுவதாகவும், ‘நெறியினால் தானும் அவற்றுள் நிற்கும்பிரான்’ என்பது, அப்பொருள்கட்குள்ளே அந்தரியாமியாய் உள்ளவன் என்ற கருத்தைக் குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம். எனவே, ஆழ்வாருடைய கருத்தை ஒட்டியே நம் முன்னோர் நாராயணன் என்ற தொடருக்குப் பொருள் கூறினர் எனக் கொள்க.

சங்க இலக்கியங்களுள் ஒன்றாகிய நற்றிணையின் கடவுள் வாழ்த்துச் செய்யுள் இக்கருத்துகளை அழகாக விளக்குகின்றது.

*‘மாநிலம் சேவடி யாகத் தூநீர்*
*வளைநரல் பௌவம் உடுக்கை யாக*
*விசும்புமெய் யாகத் திசைகை யாகப்*
*பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக*
*இயன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய*
*வேத முதல்வன் என்ப*
*தீதற விளங்கிய திகிரி யோனே.’*

என்பது அச்செய்யுள். இதன்கண், ‘இயன்ற எல்லாம் பயின்று அகத்தடக்கிய வேதமுதல்வன் என்ப’ என்பதே இங்கு வேண்டுவது. இயன்ற - உலகத்தில் தோன்றியுள்ள, எல்லாம் பயின்று - எல்லாப் பொருள்களினுள்ளும் (உயிர் உயிரல் பொருளாகிய எல்லாப்பொருள் களினுள்ளும்) அந்தரியாமியாய் நின்று, அகத்தடக்கிய - அவ் வெல்லாப் பொருள்களையும் தன்னுள்ளே அடக்கியுள்ள (வியாபகமாக வுள்ள), வேதமுதல்வன் என்ப - வேதத்தாலுணர்த்தப்படும் முதற் பொருள் என்று மெய்யுணர்ந்தோர் கூறுவர் என்பது அப்பகுதியின் கருத்தாகும். (விரிவு கருதிச் செய்யுள் முழுவதுக்கும் பொருள்

எழுதப்படவில்லை.) எனவே, நாராயணன் என்பதற்கு ஆழ்வார் கருத்தும், அதனை ஒட்டி நம் முன்னோர் கொண்ட கருத்தும் தமிழ் நாட்டில் வழங்கிய கருத்தேயாகும் எனக் கொள்க.

எட்டெழுத்து மந்திரத்தில் நாராயணன் என்பது நீங்கலாக எஞ்சிய பகுதிகட்குக் கூறப்பட்ட பொருள்களும் ஆழ்வார் பாசுரங் களில் ஆங்காங்கே காணப்படுவனவேயாகும்.

இறைவன் திருப்பெயர்களில் கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், இருடிகேசன், பதுமநாபன், தாமோதரன் என்னும் பன்னி ரண்டு திருப்பெயர்களை ஒன்று சேர்த்து மந்திரமாக வழங்கி வருகின் றனர். அவற்றை ஆழ்வார் 'கேசவன் தமர்' என்று தொடங்கும் திருவாய்மொழியில் ஒவ்வொரு பாசுரத்தில் ஒவ்வொரு திருப் பெயராக அமைத்துப் பன்னிரண்டு பாசுரங்களில் வெளியிட்டுள் ளனர். அப்பாசுரங்கட்குப் 'பன்னிரு நாமப் பாட்டு' என்று அவரே பெயர் கூறியுள்ளனர். இவ்வாறு வைணவ சமயக் கருத்துகள் இன்னும் பல ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்கு அமைந்துள்ளன.

## ஆழ்வார் இறைவனிடத்து வேண்டுவன

ஆழ்வார் இறைவனிடத்துக் கொண்ட அளவிறந்த அன்பினால், அவனையன்றி வேறொருவரையும் நினைக்க முடியாத நிலையில், அவனை மறக்க முடியாத நிலையில், அவனை நினைக்க நினைக்க உள்ளத்தில் உண்டான மகிழ்ச்சி மிகுதியால் கவி பாடுவாராயினர். அவ்வாறு இறைவனிடத்து அன்பு கொண்ட ஆழ்வார், அவனிடத்து என்ன பயனை விரும்பினார் என்பது ஆராய்ந்து அறியத்தக்கது.

பொதுவாக, எல்லாரும் கடவுளை எண்ணுவதும் துதிப்பதும் வணங்குவதும் தங்கட்குத்துன்பம் நீங்கவும் இன்பம் உண்டாகவுமே யாம். அப்பயன்கள் உண்டாகிவிட்டால், பலருக்குக் கடவுள் நினைப்புக் குறையும்; அன்றி, மறந்தும் போகும். துன்பம் நீங்கவில்லை யாயினும் இன்பம் உண்டாகவில்லையாயினும் அவ்வாறே கடவுள் நினைப்பைக் கைவிடுவர். பயன் கருதிக் கடவுளை நினைப்பதால் வரும் தீமை இவையேயாகும்.

ஆழ்வார் நிலை அஃது அன்று. ஆழ்வார் பயன் கருதித் திருமா லிடத்து அன்பு கொண்டிலர்; இயல்பாகவே அன்பு கொண்டனர். பிறவித் துன்பத்தினின்றும் நீங்கிப் பரமபதம் அடைதல் ஆழ்வார் விரும்பும் பயனே எனினும், அது முக்கியப்பயனன்று. இறைவ

னிடத்து நீங்கா அன்பும், அவனை வணங்குவதும், அவன் புகழ்களைப் பாடி மகிழ்வதுமே ஆழ்வார் விரும்பும் பயன்களாம். இக்கருத்துகள் ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

'யான் மோக்ஷம் அடைந்தாலும், அதனில் தாழ்ந்த சுவர்க்கம் அடைந்தாலும், அல்லது நரகமே அடைந்தாலும் அஃது ஒன்றையும் யான் எண்ணவில்லை. அஃது எவ்வாறாயினும் ஆகுக. எம்பெருமானை இடைவிடாது நினைந்து மகிழும் இன்பமே யான் வேண்டுகின்றேன். அவ்வின்பத்தை யான் எங்கிருந்து அடைந்தாலும் அடைக. இடத்தின் உயர்வு தாழ்வுகளை யான் கருதவில்லை,' என்கிறார்.

*'சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்*
*இறப்பில் எய்துக எய்தற்க யானும்*
*பிறப்பில் பலபிற விப்பெரு மானை*
*மறப்பொன் றின்றிஎன் றும்மகிழ் வேனே.'* (2. 9: 5.)

என்ற பாசுரம் மேற்கூறிய கருத்தைக் காட்டுகின்றது.

இறைவனை நினைப்பது மட்டும் அன்றி, அவனுக்கு வேண்டிய தொண்டுகளையும் செய்ய விரும்புகின்றார் ஆழ்வார். இன்னதொண்டு தான் செய்வது என்ற நியதியின்றி, இறைவனுக்குரிய எல்லாத் தொண்டுகளையும் செய்தல் வேண்டும்; அத்தொண்டுகளை ஒரு காலம் செய்து, பின் விடுவது என்றில்லாமல், எப்போதும் செய்தல் வேண்டும் என்று விரும்புகின்றார். 'ஒழிவில் காலமெல்லாம்' என்று தொடங்குகின்ற திருவாய்மொழி இக்கருத்தையே விரிவாகக் கூறுகின்றது. 'அங்ஙனம் எல்லாத் தொண்டுகளையும் செய்யுமிடத்தும் அவற்றை என் விருப்பத்திற்காகச் செய்தல் ஆகாது; அவன் விருப்பத்திற்காகவே செய்தல் வேண்டும்; யான் செய்யும் தொண்டைக் கண்டு எம்பெருமான் மகிழ்ச்சியடைந்தால், அம்மகிழ்ச்சியைக் காண்பதே எனக்குப் பேரின்பமாகும்,' என்று கூறுகின்றார்.

*'எனக்கே யாட்செய்எக் காலத்தும் என்றுஎன்*
*மனக்கே வந்திடை வீடின்றி மன்னித்*
*தனக்கே யாக எனைக்கொள்ளு மீதே*
*எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே.'* (2. 9: 8.)

என்ற பாசுரம் மேற்கூறிய கருத்தைக் காட்டுகின்றது.

சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய குறுந்தொகையில் 'முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்' என்று தொடங்கும் செய்யுள், இக்கருத்தோடு ஒத்துளது. ஒரு தலைவி, தன் காதலனுக்காக மிக

வருந்தி அன்போடு உணவு சமைத்து வைத்தனள். அவள் காதலன் அவ்வுணவு மிக இனிமையாய் இருக்கிறது என்று சொல்லிக் கொண்டே உண்டான். அது கண்ட அத்தலைவியின் மனம் மகிழ்ந்தது! அம்மகிழ்ச்சியால் முகம் மலர்ந்தது. 'இனிதெனக் கணவன் உண்டலின், நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே,' என்று அச்செய்யுள் கூறுகின்றது. இங்கு மனைவிக்கு உண்டான அன்பின் நிலையே ஆழ்வார்க்கு இன்னும் பெருகிய அளவில் இறைவனிடத்துத் தோன்றியுள்ளது எனக் கொள்க. இங்கு மற்றொன்றும் சிந்தித்தல் வேண்டும். தன் காதலி அன்போடு சமைத்த உணவாதலின், அதனைக் கணவன் இனிமையாய் இருக்கிறது என்று மகிழ்ந்து உண்டான்; அதுபோல, இறைவன் ஆழ்வாருடைய அன்பின் பெருக்கைக் கண்டு பெருமகிழ்ச்சி அடைந்திருப்பான் என்று கொள்ளுதல் வேண்டும்.

"எம்பெருமான் 'அடியார்க்கு எளியன்,' என்றும், 'அன்பு வலையில் அகப்படுமவன்,' என்றும் உலகம் கூறும். அப்பெருமான் என்னை நினைந்து எனக்கு அருள் செய்யாவிட்டாலும், என் மனம் அவனை மறவாது; என் மனம் அவனையன்றிப் பிறரை நினையாது," என்று கூறுகின்றார். இந்நிலைமை இறைவனிடத்துக் கொள்ளும் உண்மை அன்பிலும் உலகியல் உண்மைக்காதலிலும் ஒத்திருக்கின்றது.

*'கால சக்க ரத்தொடு வெண்சங் கங்கை யேந்தினாய்*
*ஞால முற்றும் உண்டுமிழ்ந்த நாரா யணனே என்றென்று*
*ஓல மிட்டு நானழைத்தால் ஒன்றும் வாரா யாகிலும்*
*கோல மாமென் சென்னிக்குன் கமல மன்ன குரைகழலே'* (4. 3: 6.)

இப்பாசுரத்தில், 'நான் அன்பினால் நெஞ்சுருகி உன் திருப்பெயர்களைக் கூறிப் பலவாறு அழைத்தாலும், நீ வந்து என் ஆசை தீரச் சிறிதும் காட்சி தருகின்றிலை; ஆனாலும், என் தலைக்கு உன் திருவடியே அணியாய் விளங்குவது,' என்று கூறுகின்றார். 'நீ அருள் புரியாவிட்டாலும் நான் உன் திருவடியையே வணங்குவேன்,' என்பது கருத்து. ('என் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழல் கோலமாம்,' என்று கூட்டிப்பொருள் கொள்க.) அஃதாவது, 'நீ என்னை மறந்தாலும், நான் உன்னை மறவேன்,' என்றபடி.

*'தம்முடைய தண்ணளியும் தாமுந்தம் மான்தேரும்*
*எம்மை நினையாது விட்டாரே விட்டகல்க*
*அம்மென் இணர அடம்புகாள் ! அன்னங்காள் !*
*நம்மை மறந்தாரை நாம்மறக்க மாட்டேமால்.'* (கானல் வரி.)

என்ற சிலப்பதிகாரச் செய்யுளின் ஈற்றடியும்,

*'அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே*
*நீஎமக் காகா தது?'*

என்ற திருக்குறளும் ஆழ்வார் பாசுரக் கருத்தோடு ஒத்து விளங்குதல் காண்க. 'நெஞ்சமே, நம் தலைவர் நம்மை நினைத்து வந்து அருள் செய்யவில்லை; நீ மட்டும் ஏன் அவரையே நினைக்கின்றாய்?' என்பது திருக்குறளின் கருத்தாகும்.

இறைவன் தம்மை அன்போடு ஏற்றுக்கொண்டு அருள் செய்யாமை மட்டுமோ, அவன் தம்மை வெறுத்துக் கூறினாலும், அவ் வெறுப்புரைகளும் தமக்கு இன்பம் பயப்பனவேயாகும் என்று எண்ணுபவர் ஆழ்வார்.

*'கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோர நின்றால்*
*பாவிநீஎன் றொன்று சொல்லாய் பாவியேன் காண வந்தே.'* (4. 3: 7.)

என்ற பாசுரப்பகுதி இக்கருத்தைக் காட்டுதல் முன்னர்க் கூறப்பட்டது.

பொதுவாக, மக்கள் தாங்கள் கருதிய பயனைப்பெற முயல்வார்கள்; அப்பயன் எவ்வழியாற்கிடைப்பினும், யாராற்கிடைப்பினும் பெறுவார்கள். ஆனால், அறிஞர் தாம் விரும்பும் பயன் தீய வழியாற்கிடைப்பின், அதனைப் பெற விரும்பமாட்டார்; அன்றியும், தம்மிடத்து விருப்பமில்லாதார் கொடுத்தாலும் பெற விரும்ப மாட்டார். ஆனால், ஆழ்வார் நிலைமை அதுவன்று. ஆழ்வார் விரும்பும் முக்கியப்பயன், எம்பெருமானிடத்து மாறாத அன்பே. பிறவி நீங்குதலும் மோக்ஷம் அடைதலும் இரண்டாந்தரமானவைகளே. அவ்விரண்டாந்தரமான பயன்களும் எம்பெருமானால் அல்லது பிறராற்கிடைக்க மாட்டா. 'நாறிணர்த் துழாயோன் நல்கி னல்லது, ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்?' எனப் பரிபாடல் கூறுகிறது. ஆழ்வார் பாசுரங்களில் இக்கருத்தை ஆங்காங்குக் காணலாம்.

'ஒருகால் இப்பயன்கள் எம்பெருமான் அல்லாத பிறராற் கிடைக்குமாயினும், அன்னார் மிக்க அன்போடு இப்பயன்களைக் கொடுப்பராயினும், இப்பயன்களை அவரால் யான் பெறமாட்டேன்,' என்கின்றார் ஆழ்வார்.

*என்நான் செய்கேன்? யாரே களைகண்? என்னை என் செய்கின்றாய்?*
*உன்னால் அல்லால் யாவ ராலும் ஒன்றும் குறைவேண்டேன்;*
*கன்னார் மதிள்சூழ் குடந்தைக் கிடந்தாய்! அடியேன் அருவாழ்நாள்*
*சென்னாள் எந்நாள்? அந்நாள் உனதாள் பிடித்தே செலக்காணே.* (5.8:8.)

என்ற பாசுரத்தின் இரண்டாவது அடி ஆழ்வாரது கருத்தை அழகாகக் காட்டுகின்றது. இறைவனிடத்து மாருத அன்பை ஆழ்வார் விரும்புகின்ருர். அவ்வன்பும் பிறராற்கிடைப்பதாயின், அதனையும் விரும்பாமை ஆழ்வாரது நிலைமை எனக்கொள்க. ஆழ்வாரது இத்தகைய அன்பின் நிலைமை உலகியலிலும் அருமையாகக் காணப்படுகின்றது.

*‘ அலங்குளை அணிஇவுளி*
*நலங்கிள்ளி நசைப்பொருநரேம்*
*பிறர்ப்பாடிப் பெறல்வேண்டேம்*
*அவற்பாடுதும் அவன்ருள் வாழியவென ’* (புறம். 382)

என்ற செய்யுட்பகுதியில் கோவூர் கிழார் என்ற புலவர், ‘சோழன் நலங்கிள்ளி என்ற அரசனைப்பாடுதல், அவனுற்பரிசில் பெறுதல் அன்றி, பிறரைப் பாடவும் மாட்டேன் ; அவராற் பரிசு பெறவும் மாட்டேன்,’ என்று கூறுதல் காணலாம்.

ஆழ்வாரது ஆழ்ந்த சீரிய அன்பின் நிலை இவ்வாறு இருத்தலால், அவர் எம்பெருமானிடத்து மாருத அன்பை அல்லது பிறிதொன்றையும் விரும்பவில்லை எனக்கொள்க.

ஆழ்வாரது அன்பை அடிப்படையாகக் கொண்ட இன்னும் பல வகையான மனநிலைகளைத் திருவாய்மொழியிற்காணலாம்.

*‘ உண்டோவை காசி விசாகத்துக் கொப்பொருநாள் ?*
*உண்டோ சடகோபர்க் கொப்பொருவர் ?—உண்டோ*
*திருவாய் மொழிக்கொப்பு ? தென்குருகைக் குண்டோ*
*ஒருபார் தனில்ஒக்கும் ஊர் ?’* [1]

1. *நம்மாழ்வார் திருநட்சத்திரத் தனியன் - ஸ்ரீ குருபரம்பரா பிரபாவம் - ஸ்ரீ நம்மாழ்வார் வைபவம்.*

ஸ்ரீ:

# திருவாய்மொழியின் வியாக்கியான வரலாறு

*பிள்ளான்நஞ் சீயர் பெரியவாச் சான்பிள்ளை*
*தெள்ளார் வடக்குத் திருவீதிப்—பிள்ளை*
*மணவாள யோகிதிரு வாய்மொழியைக் காத்த*
*குணவாளர் என்றுநெஞ்சே! கூறு.*

திருவாய்மொழிக்கு ஆறுயிரப்படி, ஒன்பதினுயிரப்படி, பன்னீ ராயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறுயிரப்படி என்னும் ஐந்து வியாக்கியானங்களும், அவற்றுள் முப்பத்தாறுயிரப்படி வியாக் கியானத்துக்குச் சீயர் அரும்பதம், அடைய வளைந்தான் அரும்பதம் என்னும் இரண்டு குறிப்புரைகளும் உள்ளன.

திருவாய்மொழிக்கு முதல் உரையாசிரியர், ஸ்ரீ ஆளவந்தாரே ஆவர். இதனை ஈடு வியாக்கியானத்தில் "இத்திருவாய்மொழி தன்னை ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பிரபத்தி விஷயமாக்கி நிர்வஹித்துக்கொண்டு போந்து, எம்பெரு மானாரும் அப்படியே அருளிச்செய்துகொண்டு போந்து, பாஷ்யம் தலைக்கட்டின பின்பு பக்திவிஷயமாக அருளிச்செய்துகொண்டு போருவர்" (வீடுமின் முற்றவும் - முன்னுரை) என்றும், **தேனும் பாலும்** இத்யாதி - இதற்கு ஆளவந்தார் அருளிச் செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி, 'ஏகஜாதீய திரவியங்கள் தன் னிலே கலந்தாற்போலே' என்று; அதாவது, தேனும் தேனும் கலந்தாற் போலவும், பாலும் பாலும் கலந்தாற்போலவும், நெய்யும் நெய்யும் கலந் தாற்போலவும், கன்னலும் கன்னலும் கலந்தாற்போலவும், அமுதும் அமுதும் கலந்தாற்போலவும் என்று. அங்ஙனம் அன்றியே, எம்பெரு மானார் அருளிச்செய்யும்படி: இவற்றை - ரஸவத்பதார்த்தங்களுக் கெல்லாம் உபலக்ஷணமாக்கி, 'தானும் நானுமான கல்விக்குள்ளே எல்லா ரசங்களும் பிறக்கும்படி ஸம்ஶ்லேஷித்தோம் என்கிறார் என்று.' (2.3:1.) என்றும், ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலை யாண்டான் பணிக்கும்படி: 'அறிவு நடையாடாத தசையிலே சம்பந்த ஞானத்தைப் பிறப்பித்து, பிறந்த ஞானத்தை அழிக்கக் கடவதான

தேக சம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய் என்கிற இழவாலே சொல்லுகிறார்,' என்றும். இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "முன்னிற்பாட்டுகளும் பின்னிற்பாட்டுகளும் பிரீதியோடே நடவா நிற்க, நடுவே அப்ரீதி தோற்றச் சொல்லுமது சேராது; ஆன பின்பு, இங்ஙனேயாம் இத்தனை. ' அறியா மாமாயத்து அடியேனை - அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து - வைத்தாயால் என்கிறார்' என்று இத்தையும் ஓர் உபகாரமாக்கி அருளிச் செய்தார்" (2. 3 : 3.) என்றும் இன்னோரன்ன பல இடங்களில் வருதல்கொண்டு தெளிதல் தகும்.

இனி, திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்களையும் அவற்றின் அர்த்த விசேடங்களையும் ஆழ்வாரிடம் நேரில் பெற்று அவற்றை உலகில் பரவச் செய்தவர் ஸ்ரீமத் நாதமுனிகள் ஆதலின், அப்பெரியாரையே முதல் உரையாசிரியராகக் கூறினும் இழுக்காது, [1] அவர் முதலாக வந்த அவ்வுரை எம்பெருமானார் காலம் வரையிலும் கேள்வி வாயிலாகவே வழங்கி வந்தது; நூல் வடிவில் வெளி வரவில்லை. எம்பெருமானார் காலத்திலேதான் வியாக்கியானம் என்ற பெயரால் நூல் வடிவில் வெளி வந்தது.

## உரை வந்த வரலாறு

உறு பெருஞ்செல்வமும் தந்தையும் தாயும் உயர் குருவும் வெறிதரு பூமகள் நாதனும் மாறன் விளங்கிய சீர் நெறிதரு செந்தமிழ் ஆரணமே என்று இந்நீள் நிலத்தோர் அறிதர நின்றவரும், தூய் நெறி சேர் எதிகட்கு இறைவன் யமுனைத் துறைவன் இணை யடியாம் கதிபெற்றுடையவருமான எம்பெருமானாருடைய காலத்தில், ஆசாரியர்கள் அனைவரும் ஒன்று கூடி, எம்பெருமானாருக்கு மானச புத்திரரான திருக்குருகைப் பிரான் பிள்ளையை அடைந்து, ' ஆழ்வார் களின் அருளிச்செயலின் அரும்பொருளை அனைவரும் அறியலாம்படி

---

1 *ஸ்ரீமந் நாதமுனிகள்*
|
*உய்யக்கொண்டார்*
|
*மணக்கால் நம்பி*
|
*ஸ்ரீ ஆளவந்தார் (ஸ்ரீமந் நாதமுனிகள் பௌத்திரர்)*
|
*பெரிய நம்பிகள்*
*அல்லது*
*திருமாலையாண்டான்*
|
*இராமாநுசர்*

ஒரு வியாக்கியானம் செய்தருளல் வேண்டும் என்று உடையவரை வேண்டிக்கொள்ளல் வேண்டும்,' என்று பிள்ளானுக்கு விண்ணப் பஞ்செய்ய, பிள்ளானும், உடையவர் பெருங்கூட்டத் திருவோலக்க மாக எழுந்தருளி இருக்குஞ் சமயத்தில், தாளுந்தடக்கையுங் கூப்பி விழுந்து வணங்கி எழுந்து மடியொதுக்கி வாய் புதைத்துப் பணி வோடு நின்று, 'ஒரு விண்ணப்பம் உண்டு' என்று சொல்ல, உடையவரும் 'என் ?' என்று கேட்டருளி, 'வேதவியாசர் அருளிச் செய்த பிரமசூத்திரத்தின் உண்மைப்பொருளை உலகம் எல்லாம் அறிந்து உய்வு பெறுமாறு அச்சூத்திரங்கட்குத் தேவரீர் ஸ்ரீபாஷ்யம் அருளிச்செய்தது போன்று, திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்கட்கும் வியாக்கியானம் அருளிச்செய்து காத் தருளல் வேண்டும்,' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் திருவுள்ளத்தில் ஆய்ந்தோய்ந்து உணர்ந்து, 'அப்படியாம்; நாம் அருளிச்செயல்களுக்கு வியாக்கியானம் செய்தால், மந்தமதிகட்கு 'இதற்கு இத்துணையே பொருள் உள்ளது,' என்று தோன்றும்; அங்ஙனந் தோன்றுமிடத்து அபசாரமாம்; ஆழ்வார்களுடைய அருளிச்செயல்கட்குப் பொருள் அவரவர்களுடைய அறிவிற்கும் பத்திக்கும் ஈடாகப் பலவாறு[1] சுரக்கும்; ஆகையால், நாம் செய்யின் அருளிச்செயல்கட்கு வரம்பு கட்டியது போன்றுகும்; நீர் ஒரு படி திருவாய்மொழிக்கு வியாக்கியானம் செய்யும்,'' என்று நியமித்தருள, பிள்ளானும் உடையவர் நியமனத்தால் திருவாய் மொழிக்கு முதன்முதலில்[2] 'ஆறாயிரப்படி' என்னும் வியாக்கி யானத்தை இனிதாக உரைத்தருளினர்.

---

1. ''உரிக்கின்ற கோடலி னுந்துகந் தம்மென வொன்றும்இன்றி
விரிக்குந் தொறும்வெறும் பாழாய் விடும்பிறர் புன்கவிமெய்
தெரிக்கின்ற கோச்சட கோபன்தன் தெய்வக் கவிபுவியில்
சுரிக்கின்ற நுண்மணல் ஊற்றெக்கும் தோண்டச் சுரத்தலினே.

''துறவா தவர்க்குந் துறந்தவர்க் குஞ்சொல்ல வேசுரக்கும்
அறவா அவையிங்குஓர் ஆயிரம்'' (சடகோபரந். 63,37.)

என வருகின்ற பாசுரங்களை ஒப்பு நோக்குக.

2. 'தெள்ளாரும் ஞானத் திருக்குரு கைப்பிரான்
பிள்ளான் எதிராசர் பேரருளால்—உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப்பொருளை யன்றுரைத்தது
இன்பமிகும் ஆறு யிரம்.'

என்பது உபதேசரத்தின மாலை, 41.

**ஆறுயிரப்படி :** ஆறுயிரம் கிரந்தங்கள் என்னும் அளவினை யுடையது என்பது இதன் பொருளாம். ஒற்று ஒழித்து உயிரும் உயிர் மெய்யுமான முப்பத்திரண்டு எழுத்துகளையுடையது ஒரு கிரந்தம் எனப்படும். 'படி' என்பது, அளவு என்னும் பொருளையுடையது. ஆக, ஆறுயிரம் கிரந்தங்களையுடையதாக இவ்வியாக்கியானம் செய்யப் பட்டது ஆதலின், '**ஆறுயிரப்படி**' என்னும் பெயரைப் பெற்றது. இறைவனைப் பற்றிக் கூறுகின்ற ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஆறுயிரம் கிரந்தங்களையுடையது ஆதலின், இறைவனைப்பற்றிக் கூறுகின்ற இத்தமிழ் மறைக்கும் அத்தொகை அளவிலேயே இவ்வியாக்கி யானத்தை அருளிச்செய்தார். இதனால், இப்பெரியாருடைய செய்ந் நன்றியறிதலும், பெரியார் சென்ற நெறியிலேயே செல்லும் பீடுடை மையும், இத்திருவாய்மொழியில் வைத்துள்ள பெருநன்மதிப்பும் தோன்றும். இனி, கூறப்புகும் ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறுயிரப்படி என்ற தொகைகளில் அவரவர் அவ்வவ்வியாக்கியானங்களைச் செய்தமைக்கும் காரணம் இத்திருவாய்மொழியில் வைத்துள்ள பெருநன்மதிப்பே என அறிக. இப்பெயர்கள் எல்லாம் அகநானூறு, புறநானூறு, நாலடி நானூறு என்பன போன்று அளவினாற்பெற்ற பெயர்கள். நூல்களின் அளவையினைக் கிரந்தம் என்னும் அளவுப்பெயரால் அளவிட்டுக் கூறுதல் தமிழிலும் வழக்கு உள்ளது என்பதனை [1] யாப்பருங்கலக் காரிகை உரையால் உணர்க.

**ஒன்பதினாயிரப்படி :** இதனை அருளிச்செய்தவர் [2] நஞ்சீயர். பிரமசூத்திரத்திற்கு இராமாநுசர் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யம் ஒன்பதினாயிரம் கிரந்தங்களையுடையதாதலின், அத்தொகையளவில் ஒன்பதினாயிரப்படி என்னும் இவ்வியாக்கியானம் எழுந்தது.

---

1. "'இந்நூல் எவ்வளவைத்தோ?' எனின், ஓத்து வகையால் மூன்றும், காரிகை வகையால் நாற்பத்து நான்கும், கிரந்த வகையால் தொண்ணூறு கிரந்தமும் இருபத்தெட்டெழுத்தும் எனக்கொள்க. அவற்றுள், ஒரு கிரந்தமாவது, ஒற்றொழித்து உயிரும் உயிர்மெய்யுமாகிய முப்பத்திரண்டெழுத்தும் எனக்கொள்க," என்பது யாப்பருங்கலக் காரிகைப் பாயிர உரை.

2. 'தஞ்சீரை ஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி
நஞ்சீயர் தாம்பட்டர் நல்லருளால்—எஞ்சாத
ஆர்வமுடன் மாறன் மறைப்பொருளை ஆய்ந்துரைத்தது
ஏரொன் பதினா யிரம்.'

என்பது உபதேச ரத்தினமாலை, 42.

தம் ஆசாரியராகிய பட்டரிடத்தில் ஆறுயிரப்படி வியாக்கியானத்தைப் பெற்ற நஞ்சீயர், அதனைச் சிறிது விரிவாகச் செய்யத் திருவுள்ளம் பற்றி, அதனைப் பட்டரிடத்தில் விண்ணப்பஞ்செய்து அவர் அனுமதி கொண்டு, 'ஒன்பதினுயிரப்படி' என்னும் இவ் வியாக்கியானத்தை அருளிச்செய்தார். பட்டர் திருநாடு அலங் கரித்த பின்னர், ஆசாரிய பதவியினை ஏற்ற நஞ்சீயர், இவ்வியாக்கியானத்தை முற்றப் பட்டோலை கொண்டு 'இதனை ஒரு சம்புடத்திலே நன்ருக எழுதித் தரவல்லார் உண்டோ?' என்று தம் ஸ்ரீ பாதத்து முதலிகளைக் கேட்க, அவ்வடியார்களும், 'பலகாலும் இங்கு வருகின்ற, காவேரியின் தென்கரையிலுள்ள 'நம்பூர் வரதராசர்' என்பவர் நன்ருக எழுதுவார்,' என்று விண்ணப்பம் செய்ய, நஞ்சீயரும் வரதராசரை அழைப்பித்து, 'ஒரு கிரந்தம் எழுதிக் காட்டும்,' என்ன, வரதராசர் எழுதிக் காட்டியதை நஞ்சீயர் பார்த் தருளி, 'எழுத்து முத்துப் போன்று நன்ருய் இருக்கின்றது; ஆயினும், இது திருவாய்மொழி வியாக்கியானம் ஆகையாலே, ஒரு விலக்ஷணரைக்கொண்டே எழுதுவித்தல் வேண்டும்; திரு இலச்சினை திருநாமம் மாத்திரமுண்டான இவரைக்கொண்டு எழுதுவித்தல் தவறு,' என்று திருவுள்ளத்தில் நினைந்து, வரதராசரது திருமுகத்தை நோக்க, சீயருடைய திருவுள்ளக் கருத்தினைத் திருமுகத்தால் அறிந்த வரதராசரும், 'அடியேனைத் தேவரீர் திருவுள்ளக் கருத்தின்படியே திருத்திப் பணிகொள்ளல் ஆகாதோ?' என்று விண்ணப்பஞ் செய்தார்.

அதனைக் கேட்ட நஞ்சீயரும், மிகவும் திருவுள்ளம் உவந்து வரதராசரை அங்கீகரித்தருளிப் பிரபந்நர்களுக்கு உரிய நிஷ்டை எல்லாம் இவருக்கு நிறைவுறும்படி விசேடமான திருவருளைச் செய்து, பட்டோலையில் எழுதின ஒன்பதினுயிரப்படியை ஒரு முறை அருளிச்செய்து காட்டியருளி, 'இப்படியே தவருமல் எழுதித் தாரும்,' என்று பட்டோலையை வரதராசர் கையில் கொடுத்தனர். பெற்ற வரதராசரும், 'அடியேன் ஊரிற்குச் சென்று அங்கு எழுதிக் கொண்டு வருகிறேன்,' என்று விண்ணப்பஞ்செய்து, நஞ்சீயரிடத்தில் விடைபெற்று ஏகினுர். ஏகினவர், காவேரியில் இறங்கிச் செல்லும்போது, காவேரி சிறிது தூரம் நீந்திச் செல்லவேண்டியதாய் இருந்ததாதலின், பட்டோலையைத் தலையிலே கட்டிக்கொண்டு நீந்தினர். நீந்திச்செல்லுங்கால், அவ்வெள்ளத்திலே அப்பட்டோலையினை அவர் இழக்க நேர்ந்தது. கரையினை அடைந்த வரதராசர், 'பட்டோலை போய்விட்டதே! இனி என்செய்வது!' என்று வருந்தி, தமது வீட்டினை அடைந்து, தமது நித்திய கருமங்களை

முடித்துக்கொண்டு, தம் திருவாராதனப் பெருமானுக்குச் செய்ய வேண்டுவன அனைத்தும் செய்து, தாம் மாத்திரம் உண்ணுமல் சயனித்துக்கொண்டார். அவ்விரவில், திருவரங்கத்து இறைவன், அவரது கனவில் தோன்றி, 'ஏன்காணும் வருந்துகிறீர்? உம்முடைய ஆசாரியனை முன்னிட்டுக்கொண்டு நீர் எழுத ஆரம்பித்தால் நாம் உமது நினைவில் இருந்து உம்முடைய ஆசாரியன் சொன்னவற்றுள் ஒன்றும் தவருது உதகரிப்போம்,' என்று கூறி மறைந்தனன்.

மற்றைநாள் சிற்றஞ்சிறுகாலையிலேயே துயில் உணர்ந்து எழுந்த வரதராசர், தம் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு, அன்று முதல் எழுதத் தொடங்கிச் சில நாளில் ஒன்பதினுயிரப் படியையும் எழுதி முடித்து, தாம் தமிழில் பண்டைய இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்று அவற்றிற்சிறந்த அறிவு படைத்தவராதலின், பற்பல இடங்களில் அவ்வவ்விடங்கட்குச் சேர விசேடப் பொருள்கள் சிலவற்றையும் எழுதிக்கொண்டு சென்று நஞ்சீயர் திருக்கரத்தில் தந்தனர். நஞ்சீயரும், அதனை அவிழ்த்துப் பார்த்த அளவில், அது, தாம் அருளிச்செய்த கட்டளையாய் இருந்தும், பல இடங்களில் சொற்களுக்குத் தகுதியாகப் பல விசேடார்த்தங்கள் எழுதியிருத்தலைக் கண்டு மிகவும் திருவுள்ளம் உவந்து, வரதராசரைப் பார்த்து, 'இது என்?' என்று கேட்க, வரதராசரும் அச்சங்கொண்டு ஒன்றும் விண்ணப்பஞ்செய்யாது இருக்க, 'நீர் அஞ்ச வேண்டா; உண்மையினைச் சொல்லும்,' என்ன, வரதராசரும் நடந்ததனை விண்ணப்பஞ்செய்ய, கேட்ட நஞ்சீயரும், 'இவருடைய அறிவின் விசேடம் இருந்தபடி என்னே! இவர் தருப்பையின் நுனி எனக் கூர்த்த அறிவினர்; மிக்க ஆற்றல் வாய்ந்தவர்; மிகவும் நன்ருக எழுதினர்,' என்று கூறி, சால மனம் உவந்து, வரதராசரைத் தழுவிக்கொண்டு, '**இவர் நம் பிள்ளை**; இவருடைய பெயரும் திருக்கலிகன்றி தாசர்,' என்று அருளிச்செய்து, தம் அருகிலேயே இவரை வைத்துக்கொண்டார். இவரும், நஞ்சீயரை அல்லது தேவுமற்று அறியாது, இரவினும் பகலினும் முன்னும் பின்னும் அகலாராகி அன்போடு கெழீஇக் குணத்தோடு பழகிக் குறிப்பின்வழி நின்று அடிமை செய்து வர, சீயரும் வேதவேதாந்தங்கள் முதலிய சகல சாஸ்திரங்களின் பொருளையும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று இவர் உணருமாறு திருவருள் புரிந்தார். நஞ்சீயர் 'நம் பிள்ளை'

என்று அருளிச்செய்த அன்று முதற்கொண்டு வரதராசருக்கு '**நம்பிள்ளை**' என்ற திருப்பெயர் வழங்கலாயிற்று.

ஆக, இவ்வகையில் தோன்றியது ஒன்பதினாயிரப்படி.

**பன்னீராயிரப்படி ;**[1] இதனை அருளிச்செய்தவர் வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர்.[2] ஸ்ரீபாகவதம் பன்னீராயிரம் கிரந்தங்களை யுடையது ஆதலின், அத்தொகையளவில் இவ்வியாக்கியானம் எழுந்தது.

இவ்வுரையாசிரியர் இல்லறவாழ்க்கையில் வாழ்ந்து வருகின்ற நாள்களில் ஒரு நாள், ஓரிடத்தில் சேர்ந்து படிக்கும் மாணவர்களைக் கண்டு, 'நீங்கள் கற்பது என்?' என்று கேட்க, இவர்க்கு எழுத்து வாசனையே இல்லை என்பதனை அவர்கள் அறிந்தவர்களாதலின், 'முசலகிசலயம்[3] படிக்கிறோம்,' என்று கூறினார்கள். இவரும் அதனை யறியாது, 'இப்படியும் ஒன்றுண்டோ?' என்று திகைத்து, இதனைத் தமது ஆசாரியரான பெரியவாச்சான் பிள்ளைக்கு விண்ணப்பஞ் செய்ய, கேட்ட பிள்ளை நகைத்து, 'நீர் கல்வி வாசனையே அறியாதவராதலின், 'உலக்கை தளிர்க்குமோ? ஆதலால், இதனை நீர் ஏன் கேட்கிறீர்? உமக்கு இதனால் காரியம் யாது?' என்று எள்ளி நகையாடிக் கூறியுள்ளார்கள்,' என்று அருளிச்செய்ய, கேட்ட இவரும் பெருநாணங்கொண்டு, பிள்ளை திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்து நின்று, 'அடியேன் வித்துவானாகும்படி திருவருள் புரிதல் வேண்டும்,' என்று வேண்டிக்கொள்ள, பிள்ளை திருவுள்ளமுவந்து, முப்பத்திரண்டு வயதான இவர்க்குக் கல்வி கற்பித்து, இவரைக் காவியம் நாடகம் அலங்காரம் வியாகரணம் பூர்வ உத்தரமீமாம்சை முதலிய சகல சாஸ்திரங்களிலும் வல்லவராம்படி செய்தருளினார். இவரும், பிள்ளையினுடைய திருவருளால் வித்வசிரோமணியாய் '**முசலகிசலயம்**' என்ற காவியம் ஒன்றையும் அருளிச்செய்து, முன் தம்மை எள்ளி நகையாடிய அவர்கட்குக் காண்பித்து, அவர்களைத்

---

1. இது இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி என்னும் வியாக்கியானங்கட்குக் காலத்தாற் பிற்பட்டதாயினும், எண் வரிசை நோக்கி இங்கு எழுதப்படுகின்றது.

2. 'அன்போ டழகி யமணவா ளச்சீயர்
பின்போருங் கற்றறிந்து பேசுகைக்காத்—தம்பெரிய
போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்தது
ஏதமில்பன் னீரா யிரம்.'

என்பது உபதேச ரத்தினமாலை, 45.

3. முசல கிசலயம் - உலக்கைக் கொழுந்து ; கிசலயம் - தளிர்.

தலை குனியச் செய்தனர். பின்னர், மகாவிரக்தராய்த் துறவறத்தை மேற்கொண்டு மற்றைச் சமயங்களை எல்லாம் வென்று, ‘வாதி கேசரி’ என்ற சிறப்புப் பெயரையும் பெற்றனர்.

பின்னர், முன்புள்ள பெரியோர்கள் அருளிச்செய்த வியாக்கி யானங்களை எல்லாம் கண்டு, அவற்றின் சார தமமான அர்த்த விசேடங்களை எல்லாம் சுருக்கி, எல்லார்க்கும் எளிதாகவும் விளக்க மாகவும் இருக்குமாறு, இப்பன்னீராயிரப்படி என்னும் வியாக்கியா னத்தை அருளிச்செய்தனர். இவர் செய்த வேறு நூல்கள், ‘தீபப் பிரகாசிகை, தீபசங்கிரகம், தத்துவ நிரூபணம், தத்துவதீபம், தத்துவ பூஷணம், தத்துவதீபசங்கிரகம், கீதாசாரம், தமிழ்க்கவி பிரபந்தம், இரகசியவிவரணமாலை, இருபத்துநாலாயிரப்படி பிரமாணத்திரட்டு, சுலோக ரூபத்தால் திருவாய்மொழி சங்கதி என்பன.

**இருபத்துநாலாயிரப்படி :** இதனை அருளிச்செய்தவர், [1]பெரிய வாச்சான்பிள்ளை. ஸ்ரீராமாயணம் இருபத்து நாலாயிரம் சுலோகங் களையுடையது. ஆதலின், அத்தொகையளவில் இவ்வியாக்கியானம் எழுந்தது.

நம்பிள்ளை, கூரத்தாழ்வானுடைய திருப்பேரனரான நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டருக்குத் திருவாய்மொழியின் வியாக்கியா னத்தை ஒரு முறை தனியே அருளிச்செய்துகொண்டு வந்தார். நம்பிள்ளை அருளிச்செய்யும் பொருள்களை ஒன்றும் தப்பாமல் பதருமல் கேட்டு வந்த பட்டரும், பகலில் கேட்ட அப்பொருள்களை எல்லாம் நாடோறும் இரவில் எழுதி வரலாயினர். இவ்வாறே பகலில் கேட்டலும் இரவில் எழுதுதலும் செய்துகொண்டு வர, பின்னர், நூலும் முடிந்தது ; இவர் எழுதுதலும் முடிவுற்றது. முடிந்த பின், பட்டர், தாம் எழுதின வியாக்கியானத்தை நம்பிள்ளை திருமுன்னர்க் கொண்டு சென்று வைக்க, பிள்ளை, ‘இது என் ?’ என்று கேட்க, பட்டர், ‘தேவரீர் ஒருமுறை திருவாய்மொழிக்கு நிர்வஹித்த கட்டளை’ என்ன, நம்பிள்ளையும் ‘ஆமோ !’ என்று ஏட்டினை அவிழ்த்துப்பார்த்த அளவில் மகாபாரதத்தின் தொகையளவில் இலட்சத்து இருபத் தையாயிரம் கிரந்தங்களாய் இருக்கக் கண்டு, பெருக்க வியாகுலப் பட்டுப் பட்டரைப் பார்த்து, ‘நம்முடைய அநுமதி இன்றி நாட்டுக்குப்

1. *‘நம்பிள்ளை தம்முடைய நல்லருளால் ஏவியிடப்*
*பின்பெரிய வாச்சான்பிள் ளையதனல்—இன்பா*
*வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது*
*இருபத்து நாலா யிரம்.’*

*என்பது உபதேச ரத்தினமாலை,* 43.

பாட்டு உரையாம்படி நீர் நினைத்தவாறு திருவாய்மொழியினை வெளியிடுவான் என்?' என்ன, பட்டரும், 'தேவரீர் அருளிச்செய்த திவ்விய சூக்திகளை எழுதினேன். அஃதொழிய, கால் கொம்பு சுழி ஏறினது உண்டாகில் பார்த்தருளல் வேண்டும்,' என்றார்.

அதனைக்கேட்ட நம்பிள்ளை, பட்டரைப் பார்த்து, 'வாரீர் பட்டரே! திருவாய்மொழி நிமித்தமாக நாம் வாக்கால் சொன்னதை எழுதினீராகில், நம் மனத்திலே தங்கி இருக்கும் விசேடார்த்தங்களை எல்லாம் எழுதப்பெற்றீரோ?'[1] என்று முனிந்து அருளிச்செய்து, 'உடையவர் காலத்தில் திருக்குருகைப்பிரான் பிள்ளான், திருவாய்மொழிக்கு விஷ்ணுபுராணத்தின் தொகை அளவில் ஓர் உரை வகுக்க உடையவரிடத்தில் அனுமதி பெறுவதற்குச் செய்த முயற்சிக்கு அளவில்லை; ஆன பின்பு நம் காலத்தில், நம்மையும் கேளாமே இலட்சத்து இருபத்தையாயிரம் கிரந்தமாக இப்படிப் பரக்க எழுதினால், ஆசாரிய சிஷ்ய சம்பிரதாயத்துக்கு அசம்பிரதாயமாகப் போங்காணும்,' என்று அருளிச்செய்து, கிரந்தங்களை அவர் கையினின்றும் வாங்கி, நீரினைச் சொரிந்து, கறையானுக்குக் கொடுத்து அதனை அதற்கு இரை ஆக்கினர். பின்னர், நம்பிள்ளை, தமது விருப்பத்திற்கு உகந்த மாணவராய்த் தம் பக்கலில் எல்லாச் சாஸ்திரங்களையும் அலகு அலகாகக் கற்று இருப்பவராயுள்ள பெரியவாச்சான்பிள்ளையைப் பார்த்து, 'நீர் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்யும்,' என்று நியமித்தருள, ஆசாரிய நியமனத்தை மேற்கொண்டு இவ்வியாக்கியானத்தைச் செய்தருளினார் பெரியவாச்சான் பிள்ளை.

இதைத் தவிர, மற்றைய மூவாயிரங்கட்கும் வியாக்கியானமும், பரந்த ரகஸ்ய விவரணம், மாணிக்கமாலை, நவரத்தினமாலை,

---

1. *தாமே இங்ஙனம் கூறுவாராயின், கல்வியில் இப்பெரியாருடைய வீறு இருந்தவாறு என்னே! இச்சிறப்பினை நோக்கியே,*

*'இந்திரன் வார்த்தையும் நான்முகன் வார்த்தையும் ஈசனுடன்*
*கந்தன்சொல் வார்த்தையுங் கற்பவர் யார்இந்தக் காசினியில்?*
*நந்தினம் முத்தெறி நம்பூர் வரதர்தம் மாளிகையில்*
*சிந்தின சொற்கள்கொண் டேசில நாடு திறைகொள்வரே,'*

*என்ற செய்யுள் எழுந்தது போலும்! வரதர் என்பது நம்பிள்ளையின் இயற்பெயர். நம்பூர் - அவர் அவதரித்த ஊர்.' "என்னப்பன்தன் மாயங்களே நினைக்கும் நெஞ்சுடையேன் எனக்கு இனி யார் நிகர் நீணிலத்தே," "நண்ணி நான் வணங்கப் பெற்றேன் எனக்கு ஆர் பிறர் நாயகரே?" (6.4: 7,9.) என்றாரன்றே பிரபந்த ஜன கூடஸ்தரான ஆழ்வார்?*

சகலபிரமாணதாத்பரியம், உபகார ரத்தினம், கத்தியத் திரயத்துக்கு வியாக்கியானம், ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்திரத்திற்கு வியாக்கியானம், சரம ரகஸ்யம், நிகமனப்படி, தனிச்சுலோகி முதலிய வேறு நூல்களும் உரைகளும் இவர் இயற்றியுள்ளார்.

**முப்பத்தாறுயிரப்படி :** இதனை எழுதி உபகரித்தவர், வடக்குத் திருவீதிப்பிள்ளை [1] ஆவர். பிரமசூத்திரத்திற்கு இராமாநுசர் செய்தருளிய ஸ்ரீபாஷ்யத்தின் ஆழ்பொருள் எல்லாம் விளங்கும் பொருட்டுச் சுதரிசன பட்டர் என்பவர் சுருதப்பிரகாசிகை என்னும் நூல் ஒன்றினைச் செய்தார் ; அது, முப்பத்தாறுயிரம் கிரந்தங்களை யுடையது ; அத்தொகையளவில் இவ்வியாக்கியானமும் எழுந்தது.

இவ்வியாக்கியானத்தை 'ஈடு' என்ற பெயராலேயே வழங்குவர். 'இடு' என்னும் பகுதி முதல் நீண்டு 'ஈடு' என நிற்றலின், இது முதனிலை திரிந்த தொழிற்பெயர். இதனை, அடுதல் (அடு) என்பது 'ஆடு' என வருதல் போலக் கொள்க. ஆடு என்பது 'ஆடுகொள் வென்றி அடுபோர் அண்ணல்' (புறம். 67) என்ற இடத்துக் கொல்லுதலையும், 'ஆடுகொளக் குழைந்த தும்பைப் புலவர், பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே' (புறம். 24), 'ஆடு பெற்று அழிந்த மள்ளர் மாறி, நீகண் டனையேம் என்றனர்' (பதிற். 63) என்ற இடங்களில் ஆகு பெயராய் வெற்றியினையும் காட்டுதல் போன்று, 'ஈடு' என்பதும் உடலின்மேல் அணிந்து கோடலையும், ஆகுபெயராய் அணிந்துகொள்ளுகின்ற கவசத்தையும் உணர்த்தும். உடலானது குளிர் முதலியவற்றால் வருந்தித் தன்னிலை கெட்டு வேறுபடாவாறு காப்பது கவசம். உடலை மறைத்துக் காப்பதனால் கவசத்திற்கு 'மெய்ம்மறை' என்ற பெயரும் உண்டு ; 'குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை' (பதிற். 21), 'நோன்புரி தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை' (ஷை. 14.) என்ற இடங்களைக் காண்க. ஆக, கவசமானது உடலைக் காத்தல் போன்று இம்முப்பத்தாறுயிரப்படி வியாக்கியானமும், கற்போராலும் எழுதுவோராலும்

---

1. *'தெள்ளியதாம் நம்பிள்ளை செப்பு நெறிதன்னை*
*வள்ளல் வடக்குத் திருவீதிப்—பிள்ளை இந்த*
*நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது*
*ஈடுமுப்பத் தாறு யிரம்'*

என்பது உபதேசத்தினமாலை. 44.

வேற்று மக்களாலும் தன்னிலை திரிந்து மாறுபடாதபடி[1] திருவாய்மொழியினைக் காத்து நிற்றலின், இவ்வியாக்கியானத்திற்கு 'ஈடு' என்ற தனிச் சிறப்புப்பெயரினை நம் பெருமக்கள் இட்டு வழங்கினார்கள். "கீழ்ச்செய்த செயல் அடங்கலும் தன் ஸ்வாதந்தர்யம் கிடக்கச் செய்தே செய்தவையிறே. ஸ்வரக்ஷணத்துக்குத் திரு உகிராகிலும் உண்டே அங்கு; அவை போல அன்றிறே இங்கு; ஆஶ்ரிதபரதந்திரனாய்த் தன்னை அழிய மாறி, பாண்டவர்களுக்காக உடம்புக்கு 'ஈடு' இடாதே எதிரிகள் அம்புக்கு இலக்கு ஆக்கின இந்நீர்மைக்குப் போருமோ கீழ்ச்சொன்ன குணங்கள்!" (திருவாய். ஈடு. 7. 5. 9.) என்ற இடத்து ஈடு என்ற சொல் 'கவசம்' என்ற பொருளில் வந்திருத்தல் காண்க. 'மாடியந் தானை மன்னர் மாமணி நாகமாக' (சிந். 537.) என்ற செய்யுளின் விசேட உரையில் 'மாடியம்-உடம்புக்கு ஈடு' என்றனர் நச்சினார்க்கினியர்.

இனி, இது நம்பிள்ளை நாடோறும் காலக்ஷேபத்தில் அருளிச் செய்தனவற்றை வடக்குத் திருவீதிப்பிள்ளை எழுதிவைத்ததாதலின்,

---

1. *பண்டை இலக்கியங்கள் தம் நிலை திரிந்து மாறுபடுதல் பெருவழக்கு என்பதனை,*

*"சங்கம் என்னும் துங்கமலி கடலுள்*
*அரிதின் எழுந்த பரிபாட் டமுதம்*
*அரசுநிலை திரீஇய அளப்பருங் காலம்*
*கோதில் சொன்மகள் நோதகக் கிடததலின்*
*பாடிய சான்றவர் பீடுநன் குணர*
*மிகைபடு பொருளை நகைபடு புன்சொலின்*
*தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்*
*எழுதினர் பிழைப்பும் எழுத்துரு வொக்கும்*
*பகுதியில் வந்த பாடகர் பிழைப்பும்*
*ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்*
*திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலின்"*

*(பரிபா. உரைச்சிறப்.)*

*என்றதனாலும்,*

*சீவகசிந்தாமணியுள், 'வேந்தொடு மாறு கோடல்' என்ற செய்யுளின் உரையில் 'கந்தியாரும் இடையிடையே பாடியிட்ட செய்யுள்களிலும் அப்பொருள் தரக் கட்டி என்று செய்யுள் செய்தார் என்று கொள்க' என்றும், 'முந்நீர் வலம்புரி' என்ற செய்யுளின் உரையில் 'எனவே, தேவர் அருளிச்செய்த செய்யுள் 2700 என்றே கொள்க,' (இப்போது உள்ள செய். 3145) என்றும் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலானும் அறிக. மற்றும் கம்பராமாயணம், வில்லிபாரதம் என்னும் இவற்றில் அவர்கள் பாடல் அல்லாத பாடல்கள் பல இடையிடையே புகுந்திருத்தல் அறிஞர் பலரும் அறிவர்.*

இதனை 'ஈடு' என்று வழங்கினர் என்று கோடலும் அமையும். இடுதல் - எழுதுதல். இனி, இது சுருதப்பிரகாசிகையினை அளவால் ஒத்து இருத்தலின்,[1] இதனை ஈடு என்று வழங்கினர் என்றும், தன்னைக் கற்பார் எல்லாரையும் இறைவனிடத்து ஈடுபடச் செய்வது ஆதலின், ஈடு என வழங்கினர் என்றும் கூறுவதும் உண்டு.

நம்பிள்ளை தமது பரம கிருபையால் நாடோறும் காலக்ஷேபத்தில் அருளிச்செய்துகொண்டு போந்தவற்றை வடக்குத் திருவீதிப்பிள்ளை எழுதி வைத்தது ஆதலானும், இதற்குப் பிரவர்த்தகர் நம்பிள்ளையே ஆதலாலும் அப்பெரியார் திருப்பெயரைச் சேர்த்து, இதனை '**நம்பிள்ளை ஈடு**' என்றும் வழங்குவர்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை, தம் ஆசாரியரான நம்பிள்ளை ஒரு முறை திருவாய்மொழி சம்பந்தமாக நாடோறும் அருளிச்செய்து கொண்டு வரும் பிரசங்கங்களைக் கேட்டுக் குறிப்பு எடுத்துத் தனியே ஏடுகளில் எழுதிவரலாயினர். அவ்வாறு எடுத்து எழுதி வைத்த குறிப்பே **ஈடு முப்பத்தாறுயிரப்படி** என்பது. வடக்குத் திருவீதிப் பிள்ளை, ஒரு நாள் இதனைக் கொண்டு சென்று தம் ஆசாரியரான நம்பிள்ளை திருமுன்னர் வைத்தனர்; நம்பிள்ளை 'இது என்?' என்று கேட்டருள, வடக்குத் திருவீதிப்பிள்ளை, 'தேவரீர் இம்முறை திருவாய்மொழிக்கு நிர்வஹித்த கட்டளை,' என்று விண்ணப்பஞ் செய்ய, பிள்ளையும் ஏட்டினை அவிழ்த்துப் பார்த்த அளவில், மிகச் சுருக்கம் இன்றி மிக விரிவும் இன்றி யானை கோலஞ்செய்து புறப் பட்டாற்போன்று கம்பீரமான நடை அழகோடு கூடியதாய், சுருதப் பிரகாசிகை அளவில் முப்பத்தாறுயிரம் கிரந்தங்களோடு கூடியதாய் இருக்கக் கண்டு, மிகவும் திருவுள்ளம் உவந்து, தம் மாணுக்கரைப் பார்த்து, 'நன்றுக எழுதினீர்! ஆகில், நம்முடைய அனுமதி இன்றியே எழுதினீர். ஆதலால், அதனைத் தாரும்,' என்று வாங்கிக் கட்டி உள்ளே வைத்தருளினுர்.

இஃது இங்ஙனம் இருக்க, இதனைக் கேள்வியுற்ற நம்பிள்ளையின் மாணுக்கருள் ஒருவரான மாதவப்பெருமாள் என்பவர், அதனை அடைய வேண்டும் என்ற பெருவிருப்பால் திருவரங்க நாதனை வேண்டிக்கொள்ள, அவர்தம் வேண்டுகோட்கு இரங்கிய அரங்க நகரப்பன், ஒரு நாள் தன்னைத் திருவடி தொழவந்த நம்பிள்ளையை அர்ச்சகர் மூலமாகப் பார்த்தருளி, 'நீர் ஈடு முப்பத்தாறுயிரப்படியை மாதவப்பெருமாளுக்குப் பிரசாதியும்,' என்று கட்டளையிட, நம்

---

1. 'ஈடும் எடுப்பும்இல் ஈசன்' (திருவாய். 1. 6: 3.) என்ற இடத்து ஈடு என்ற சொல் ஒப்பு என்ற பொருளில் வந்திருத்தல் காண்க.

பிள்ளையும், மகாப்பிரசாதம் என்று பெருமான் கட்டளையைத் தலைமேற் கொண்டு, பின்னர், பெருமானைத் திருவடி தொழுது திருவருள் பெற்றுக் கோயிலினின்றும் புறப்பட்டுத் தம் திருமாளிகைக்கு எழுந்தருளித் தம் மாணுக்கரான மாதவப் பெருமாள்[1] என்னும் சிறியாழ்வான் அப்பிள்ளைக்கு ஈடு முப்பத்தாறுயிரத்தைக் கொடுத்து, அவரை வாழ்வித்து, அவர் மூலமாக உலகையும் வாழ்வித்தருளினுர்.

திருவாய்மொழி '**பகவத்பிரபந்தம்**' என்று கூறப்படுவது போன்று, இவ்வியாக்கியானங்களும் '**பகவத்விஷயம்**' என்றே கூறப்படும். 'ஆயின், வேத இதிகாச புராணங்கள் அனைத்தும் பகவானைப் பற்றிப் பேசுகின்றவையாய் இருக்க, இவற்றிற்கு மட்டும் பகவத்விஷயம் என்று பெயர் வைத்த காரணம் யாது?' எனின், வேதங்கள் முக்குணங்களோடு கூடியவையாய் 'ஜ்யோதிஷ்டோமம்' முதலிய நிலையற்ற கர்மங்களையும் 'சுவர்க்கம்' முதலான மிகச்சிறிய புருஷார்த்தங்களையும் பரக்கப் பேசுகின்றன. உபநிடதங்கள் பேதவாக்கியத்தாலும், அபேதவாக்கியத்தாலும் தத்துவங்களைக் கூறுகின்றன. ஆதலின், 'பொருள் ஒன்றே, பலவோ!' என்று ஐயம் தோன்றுதற்கு இடம் தருகின்றன. ஸ்ரீவான்மீகி பகவான், ஸ்ரீ ராம காதை என்று தொடங்கிக் கங்கையின் தோற்றம் முதலிய வேறு பொருள்களைப் பற்றிய வரலாறுகளையும் பேசினுர். 'நாராயண காதை கூறத் தொடங்குகிறேன்,' என்று கூறிய வியாசரும், வீடுமன் முதலிய அரசர்களுடைய பிறப்பு முதலாயவற்றையும் பேசினர்.

இத்திருவாய்மொழியும் இதன் வியாக்கியானங்களும், அத்தகைய குற்றம் ஒன்றும் இல்லாமல், 'திருமாலவன் கவி' (திருவிருத். 48.) என்கிறபடியே, முற்றும் பகவான் விஷயமாகவே இருக்கையால், இவற்றிற்கே பகவத் விஷயம் என்ற சிறப்புப் பெயரை நம் பெருமக்கள் வழங்கினுர்கள். 'மண்ணுடிய சஹ்யஜலம் தோதவத்திச் சங்கணித் துறையில் துகில் வண்ணத் தெண்ணீராய்,

---

1. 'சீரார் வடக்குத் திருவீதிப் பிள்ளை எழு
தேரார் தமிழ்வேதத் தீடுதனைத்—தாருமென
வாங்கிமுன் நம்பிள்ளை ஈயுண்ணி மாதவர்க்குத்
தாங்கொடுத்தார் பின்னதனைத் தான்.'

என்பது உபதேச ரத்தினமாலை, 48.

அந்தஸ்தத்தைக் காட்டுமா போலே, அல்பசுருதர் கலக்கின சுருதி நன்ஞானத்துறை சேர்ந்து ஆழ்பொருளை அறிவித்தது' (சூ. 71). "ராமாயணம் நாராயணகதை என்று தொடங்கி, கங்கா காங்கேய சம்பவாத் அசத்கீர்த்தனம் பண்ணின [1] எச்சில்வாய் சுத்தி பண்ணுமல். 'திருமாலவன் கவி' என்ற வாயோலைப்படியே, மாற்றங்கள் ஆய்ந்து கொண்டு உரிய சொல் வாய்த்த இது, வேதாதி களில் பௌருஷமானவை கீதா வைஷ்ணவங்கள் போலே அருளிச் செயல் சாரம்' (சூ. 63.) என்றார் ஆசார்ய ஹ்ருதயத்தில் அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும்.

திருவாய்மொழி, இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வாரால் அருளிச்செய்யப்பட்டது போன்று, வியாக்கியா னங்களும், இறைவனுடைய திருவருளுக்கு முற்றும் இலக்காய் ஆழ்வாருடைய பேரருளுக்கும் பாத்திர பூதர்களாய் வடமொழி தென் மொழி ஆகிய இரு மொழிகளிலும் பேரறிவு படைத்தவர்களாய் இருந்த பெருமக்களால் அருளிச்செய்யப்பட்டவையாதலின், திரு வாய்மொழியினைப் போன்றே வியாக்கியானங்களும் அருமை பெரு மைகளை உடையன. 'திருவாய்மொழியினால் வியாக்கியானங் களுக்கு ஏற்றமோ, வியாக்கியானங்களால் திருவாய்மொழிக்கு ஏற்றமோ!' என்று ஐயம் தோன்றுதலும் கூடும். இவ்வியாக்கியா னங்கள் மணிப்பிரவாள நடையில் அமைந்தவை; சுவானுபவத் தோடு செய்யப்பட்டவையாதலின், கற்போர்க்கும் சுவானுபவத்தை உண்டாக்கக் கூடியவை. இவற்றுள், ஈட்டின் நடையழகு தனிச் சிறப்பு வாய்ந்தது; பொருள் உணர்வோடு பயிலப்பயிலப் பேரின்பம் பயப்பது; சொல்லாற்றல் பொருளாற்றல்கள் அமைந்தது; 'சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல்' என்னும் வனப்பு வாய்ந்தது; கூறப் புகும் பொருளை விளக்குவதற்குக் காட்டப்படும் மேற்கொள்கட்குப் பொருள் கூறும் முறை எத்தகையோரும் வியக்கத்தக்கது; பதசாரம் கூறுவதில் இந்த ஈட்டின் ஆசிரியருக்கு ஒத்தாரும் மிக்காரும் இத்தமிழ் நாட்டில் இலர்; பிற நாட்டிலும் இலர் என்றே கூறலாம்; ஒரு பதிகத்தோடு மற்றொரு பதிகத்திற்கும், ஒரு பாசுரத்தோடு

---

1. *பாவைத் திருவாய் மொழிப்பழத் தைப்பசுங் கற்பகத்தின்*
*பூவைப் பொருகடற் போதா அமுதைப் பொருள்சுரக்கும்*
*கோவைப் பணித்தஎங் கோவையல் லாவென்னைக் குற்றங்கண்டென்*
*நாவைப் பறிப்பினும் நல்லரன் றேமற்றை நாவலரே.* (சடகோ. 57)

*என்று, ஆழ்வாரைப் பாடுதற்கு முன்னர் மற்றையோரைப் பாடிப் பயனின்றிக் கழிந்த காலத்திற்கு இரங்குகின்றார் கவிச்சக்கரவர்த்தி கம்பநாடரும்.*

மற்றொரு பாசுரத்திற்கும் உள்ள பொருள் தொடர்பைக் கூறிச் செல்லும் பண்பு வேறு எவ்வுரையிலும் காண்டல் அரிது.

இவ்வியாக்கியானம் இன்றேல், இத்தமிழ் மறையின் அர்த்த விசேடங்களை எல்லாம் அறிந்து கூற வல்லார் ஒருவரும் இலர்.[1] இத்தகைய வியாக்கியானங்களைத் தமது பேரருளால் செய்து உதவிய பெரியார்கட்கு நாம் செய்யும் கைம்மாறு யாது உளது ?

*'ஆரியன் அவனை நோக்கி ஆருயிர் உதவி யாதும்*
*காரியம் இல்லான் போனான் ; கருணையோர் கடமை ஈதால் ;*
*பேரிய லாளர் செய்கை ஊதியம் பிடித்தும் என்னார் ;*
*மாரியை நோக்கிக் கைம்மாறு இயற்றுமோ வையம் ?' என்றான்.*
(கம்ப. நாக. 271.)

என்ற அருமைச் செய்யுள் ஈண்டுக் கருதத் தக்கது.

இதன் பெருமைக்குச் சான்றாக முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றனை ஈண்டுக் கூறுகின்றேன். தம் ஆசாரியரான திருவாய் மொழிப்பிள்ளையிடம், திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்களினுடைய அர்த்த விசேடங்களை எல்லாம் ஐயந்திரிபு அறக் கேட்டுத் தெளிந்த ஸ்ரீமத் மணவாளமாமுனிகள், தாம் அறிந்த அர்த்த விசேடங்களை அனைவரும் கேட்டு அறிந்து உஜ்ஜீவிக்கும்படி கூறல் வேண்டும் என்ற எண்ணம் மிக்கவராய்த் திருவரங்கத்தில் வாழ்ந்திருந்த காலத்தில், செங்கோலுடைத் திருவரங்கச் செல்வனார் இவரை அர்ச்சகர் மூலமாக அழைத்தருளித் 'திருவாய்மொழியின் அர்த்தத்தை நாமும் நம் அடியார்களும் கேட்டு வாழும்படி பெரிய திருமண்டபத்தில் தொடங்கி நடத்தும்'[2] என்று தம் திருவடிகளை ஊன்றுவித்து அருளப்பாடிட்டு நியமித்தருளினார். இவரும், இறைவர் இட்ட கட்டளையைத் தலைமேற்கொண்டு அப்படியே தொடங்கி

---

1. *'முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்*
*அந்த வியாக்கியைகள் அன்றாகில்—அந்தோ !*
*திருவாய் மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்க வல்ல*
*குருவார்இக் காலம்?நெஞ்சே ! கூறு.'* (உபதேசரத். 40.)

*என்றார் மணவாளமாமுனிகள்.*

2. *'நாமார் பெரியதிரு மண்டபமார் நம்பெருமாள்*
*தாமாக நம்மைத் தனித்தழைத்து—'நீமாறன்*
*செந்தமிழ்வே தத்தின் செழும்பொருளை நாளும்இங்கு*
*வந்துரை'என்று ஏவுவதே வாய்ந்து.'*

*என்பது அப்பெரியார் திருவாக்கு.*

நடத்திவரல் ஆயினர். பெரிய பெருமாளும், ‘உயர்வற உயர்நலம்’ என்றது முதல் ‘அவாவறச் சூழ் அரியை’ என்றது முடிய உள்ள திருப்பாசுரங்கட்கு இவர் உபந்யசிக்கிற உபந்யாசத்தைக் கேட்டருளி, மிகவும் மனம் உவந்து, ‘முப்பாத்தாறுயிரப்பெருக்கர்’ என்ற திருப்பெயரையும் இவருக்குச் சாற்றியருளினர்.

பொங்கு ஓதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்கு ஆதும் சோராமல் ஆள்கின்ற தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனர் தாம்மாணுக்கராய் இருந்து கேட்டமையால், மாணுக்கன் என்ற முறையில், ஈடு முப்பத்தாறுயிரம் முடிவு பெறுகின்ற அன்று, ‘திருவாய்மொழிப்பிள்ளை என்கிற சிறப்புப் பெயர் பூண்ட திருமலையாழ்வாருடைய சீர் அருளுக்கு ஏற்ற கலமாக உள்ளவரும், ஞானம் பத்தி முதலான குணங்கட்குக் கடல் போன்றவரும், எம்பெருமானரிடத்தில் மிக்க அன்பு வாய்ந்தவருமான மணவாளமாமுனிவரை நான் வணங்குகிறேன்,’ [1] என்ற பொருள் அமைந்த வடமொழிச் சுலோகம் ஒன்றையும் இயற்றினர் என்று வரலாறு கூறுகின்றது. இவ் வரலாற்று உண்மையானும், மற்றும் பல காரணங்களாலும் இவ் வியாக்கியானம் அவனுக்கும், அவன் அடியார்கட்கும் திருவாய் மொழியினைப் போன்றே ஆரா அமுதாய், இன்பமாரியாய், எங்ஙனே சொல்லினும் இன்பம் பயப்பதாய் இருப்பது ஒன்றுகும் என்று கொள்க. [2]

*ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல்வாழி*
*தாழ்வியாதும் இல்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்*
*உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி*
*செய்யமறை தன்னுடனே சேர்ந்து.*

---

1. *ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணர்ணவம்*
*யதீந்த்ர ப்ரணவம் வந்தே ரம்யஜா மாதரம் முநிம்.*

*என்பது அத்தனியன்.*

2. “*தென்னு என்னும் என்னம்மான் திருமாலிருஞ் சோலையானே*” (10. 7 : 5.) *என்றும்,* “*பாட்டாய தமிழ்மாலை யாயிரத்துள் இப்பத்தும், கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே*” *என்றும்,* “*தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன், அண்டத் தமரர் பெருமானடியேனே*” (9. 4: 9.) *என்றும்,* “*அடியார்க்கு இன்பமாரியே*” (4. 5 : 10.) *என்றும் வருவனவற்றைக் காண்க.*

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க !

# திருவாய்மொழித் தனியன்கள்

1. ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்தது

பக்தாம்ருதம் விச்வஜநாநு மோதனம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீ சடகோபவாங்மயம்
ஸஹஸ்ர சாகோபநிஷத் ஸமாகமம்
நமாம்யகம் த்ராவிட வேத ஸாகரம்.

**பொ - ரை:** 'அடியார்கட்கு அமிர்தமாய் இருப்பதும், எல்லா மக்களையும் ஆனந்திக்கச் செய்வதும், எல்லா உறுதிப்பொருள் களையும் கொடுக்க வல்லதும், ஆயிரக்கணக்கான கிளைகளையுடைய உபநிடதங்களின் தொகுதியாய் இருப்பதும், நம்மாழ்வாரால் அருளிச் செய்யப்பட்டதுமான தமிழ் வேதக்கடலை அடியேன் வணங்குகிறேன்' என்றவாறு.

நூலுள் அடங்காது தனியே பாயிரமாய் நிற்றல் பற்றி, இப்பாடல் ஒவ்வொன்றும் '**தனியன்**' என்று பெயர் பெறும். 'அன்' உயர் வுப்பொருளது. 'தொண்டர்க்கு அமுது உண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்' (9. 4: 9.) என்பர் ஆதலின், 'பக்தாம்ருதம்' என்றும், 'எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்கும்' (7. 9: 11.) 'அடியார்க்கு இன்ப மாரியே' (4. 5: 10.) என்பர் ஆதலின், 'விச்வ ஜநாநு மோதனம்' என்றும், 'மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள், நிற்கப் பாடிஎன் நெஞ்சுள் நிறுத்தினான்' (கண்ணி நுண். 9.) என்பர் ஆதலின், 'சர்வார்த்ததம்' என்றும், 'தடங்குரு கூர்ச் சடகோபன், துயக்கு இன்றித் தொழுது உரைத்த ஆயிரம்' (3. 1: 11.) என்பர் ஆதலின், 'ஸ்ரீ சடகோப வாங்மயம்' என்றும், 'சந்தங்கள் ஆயிரத்து' (10. 9: 11.) என்பர் ஆதலின், 'ஸ ஹஸ்ர சாகோப நிஷத் ஸமாகமம்' என்றும், 'எய்தற்கு அரிய மறைகளை இன்தமிழால் செய்தற்கு உலகில் வருசடகோபன்' (சடகோபரந்.) என்பர் ஆதலின், 'திராவிட வேத ஸாகரம்' என்றும், 'பார்பரவு இன்கவி' என்பர் ஆதலின், 'நமாம்யகம்' என்றும் அருளிச் செய்கிறார். (1)

2. ஈசுவரமுனிகள் அருளிச்செய்தது

*திருவழுதி நாடென்றும் தென்குருகூர் என்றும்*
*மருவினிய வண்பொருநல் என்றும்—அருமறைகள்*
*அந்தாதி செய்தான் அடியிணையே எப்பொழுதும்*
*சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து.*

**பொ - ரை :** 'மனமே, திருவழுதி நாடு என்றும், அழகிய திருக்குருகூர் என்றும், நீராடுவதற்கு இனியதாயுள்ள அழகிய தாமிரபரணி என்றும், அரிய வேதங்களை அந்தாதித்தொடையால் திருவாய்மொழியாக அருளிச்செய்த ஆழ்வாருடைய இரண்டு திருவடிகளையே எப்பொழுதும் தெளிவுடனே நினைக்கக் கடவாய்,' என்கிறார்.

'வழுதி நாடன் சடகோபன்' (9. 2: 11.) என்றும், 'தென் குருகூர்ச் சடகோபன்' (1. 7: 11.) என்றும், 'மொய்புனல் பொருநல் துகில்வண்ணத் தூநீர்ச் சேர்ப்பன்' (7. 2: 11.) என்றும் ஆங்காங்கு வருதலால், 'திருவழுதி நாடென்றும், தென்குருகூர் என்றும், மருவினிய வண்பொருநல் என்றும், அந்தாதி செய்தான்,' என்கிறார். இனி, 'என்றும் என்றும் என்றும் நினைந்து, அடி இணையை எப்பொழுதும் சிந்தியாய்,' என்று கூட்டி முடிப்பினும் அமையும். இங்ஙனம் கொள்ளுங்கால், உத்தேசியமான பொருளின் சம்பந்த சம்பந்தம் பெற்ற பொருள்களும் உத்தேசியம் என்ற சாத்திரப் பொருள் வெளியாம். இங்கு உத்தேசியப் பொருள் - ஆழ்வார்; சம்பந்தம் பெற்ற பொருள் - தென்குருகூர், வண்பொருநல்; சம்பந்த சம்பந்தம் பெற்ற பொருள் - திருவழுதி நாடு. (2)

3. சொட்டை நம்பிகள் அருளிச்செய்தது

*மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்*
*இனத்தாரை அல்லாது இறைஞ்சேன்—தனத்தாலும்*
*ஏதும் குறைவிலேன் எந்தை சடகோபன்*
*பாதங்கள் யாமுடைய பற்று.*

**பொ - ரை :** 'வளம் பொருந்திய திருக்குருகூரை மனத்தாலும் வாக்காலும் விரும்புகிற கூட்டத்தாரை அல்லாமல் மற்றையோரை வணங்கமாட்டேன்; செல்வத்தாலும் சிறிதும் குறைவுடையேன் அல்லேன்; என் தந்தையாராகிய ஸ்ரீ சடகோபருடைய திருவடிகள் எமக்குப் பொருந்திய செல்வமாகும்,' என்கிறார்.

'மாட மாளிகை சூழ்ந்து அழகாய திருக்குருகூர் அதனைப், பாடி ஆடிப் பரவிச் சென்மின்கள் பல் உலகீர் பரந்தே,' (4 10 : 2.) என்றும், 'வளங்கொள் தண்பணை சூழ்ந்து அழகாய திருக்குருகூரதனை, உளங்கொள் ஞானத்துவைம்மின் உம்மை உய்யக்கொண்டு போகுறிலே,' (4. 10 : 9) என்றும் ஆழ்வாருடைய திருவாக்குகள் இருப்பதனுல், 'வண்குருகூர் பேணும் இனத்தாரை அல்லாது இறைஞ்சேன்,' என்கிருர். 'எல்லாச் செல்வமும் எழில் காரிமாறப் பிரானே,' என்பர் ஆதலின், 'தனத்தாலும் ஏதும் குறைவிலேன்' என்கிருர். 'அன்னையாய் அத்தனுய் என்னை ஆண்டிடும், தன்மையான் சடகோபன் என் நம்பியே' எனப்படுதலால், 'எந்தை சடகோபன்' என்கிருர். 'தகையான் சரணம் தமர்கட்கு ஓர் பற்று' என்கிறபடியே, 'சடகோபன் பாதங்கள் யாமுடைய பற்று,' என்கிருர். பற்று - செல்வம் ; கதியுமாம்.

4. *அனந்தாழ்வான் அருளிச்செய்தது*

*ஏய்ந்தபெருங் கீர்த்தி இராமா நுசமுனிதன்*
*வாய்ந்தமலர்ப் பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்தபெருஞ்*
*சீரார் சடகோபன் செந்தமிழ்வே தம்தரிக்கும்*
*பேராத உள்ளம் பெற.*

பொ - ரை : 'எல்லாராலும் கொண்டாடப்படுகின்ற பெரிய மிக்க புகழையுடைய ஸ்ரீ சடகோபர் அருளிச்செய்த செம்மை பொருந்திய தமிழ் வேதத்தைத் தாங்கிக்கொள்ள வல்ல, வேறு ஒன்றிலும் செல்லாத மனத்தினைப் பெறும்பொருட்டு, தக்க கீர்த்தியை யுடைய எம்பெருமானுருடைய பொருந்திய திருவடித் தாமரைகளை வணங்குகிறேன்,' என்கிருர்.

'தரிக்கும் உள்ளம்' என்றும், 'பேராத உள்ளம்' என்றும் தனித்தனியே கூட்டுக. 'பெற வணங்குகின்றேன்' என முடிக்க. 'ஏற்கும் பெரும்புகழ் வானவர் ஈசன்' என்னுமாறு போன்று, 'ஏய்ந்த பெருங்கீர்த்தி இராமாநுசமுனி' என்கிருர். 'ஆய்கொண்ட சீர்' என்றும், 'ஆய பெரும்புகழ்' என்றும் சொல்லுலுகிறபடியே, இவரும் 'ஆய்ந்த பெருஞ்சீர்' என்பதனைச் 'செந்தமிழ் வேதத்திற்கு' அடைமொழி ஆக்குதலுமாம். 'சீர்த்தொடை ஆயிரம்' என வருதல் காண்க. எம்பெருமானுர், மாறன் அடி பணிந்து உய்ந்தவராதலாலும், மாறன் பணித்த மறையை உணர்ந்தவராத லாலும, தென்குருகைப்பிரான் பாட்டு என்னும் வேதப் பசுந்தமிழ்

தன்னைத் தம் பத்தி என்னும் வீட்டின்கண் வைத்தவர் ஆதலாலும், பண்தருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய் மதமாக உடையவர் ஆதலாலும், திருவாய்மொழி இன்னிசை மன்னும் இடந்தொறும் நிற்குமவர் ஆதலாலும், 'உறுபெருஞ்செல்வமும் மாறன் விளங்கிய சீர் நெறிதரும் செந்தமிழ்,' என்று அறிதர நிற்குமவர் ஆதலாலும், அத்தகைய இராமாநுசரைப் 'பேராத உள்ளம் பெற வணங்கு கின்றேன்' என்கிறார்.

5. பட்டர் அருளிச்செய்தவை

*வான்திகழும் சோலை மதிள்அரங்கர் வண்புகழ்மேல்*
*ஆன்ற தமிழ்மறைகள் ஆயிரமும்—ஈன்ற*
*முதல்தாய் சடகோபன்; மொய்ம்பால் வளர்த்த*
*இதத்தாய் இராமா நுசன்.*

பொ - ரை : 'ஆகாயத்து அளவும் ஓங்கி விளங்குகிற சோலைகளையும் மதில்களையுமுடைய திருவரங்கத்தில் எழுந்தருளி யிருக்கின்ற இறைவனுடைய வளப்பம் பொருந்திய நற்குணங்கள் விஷயமாக அமைந்த தமிழ் வேதமாகிய ஆயிரம் திருப்பாசுரங் களையும் பெற்ற நற்றாய், ஸ்ரீ சடகோபர் ஆவார்; அவற்றை வலிமை யோடு வளர்த்த நன்மையுடைய செவிலித்தாய் எம்பெருமானார் ஆவார்,' என்றவாறு.

பத்துப் பத்தாலும் சொல்லப்படுகின்ற 'பரபரன்' என்றதனால் சொல்லப்படுகிற முதன்மையும், 'சோராத எப்பொருட்கும் ஆதி' என்றதனால் சொல்லப்படுகிற காரணமும், 'முழுதுமாய் முழுது இயன்றாய்' என்றதனால் சொல்லப்படுகிற நிறைவும், 'மறுகல்இல் ஈசன்' என்றதனால் சொல்லப்படுகின்ற ஏவுதலும், 'ஆஆ என்று அருள்செய்து' என்றதனால் சொல்லப்படுகிற அருளும், 'ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள்', 'வரங்கொள் பாதம் அல்லால் இல்லை யாவர்க்கும் வன்சரண்', என்கிறவற்றால் சொல்லப்படுகிற பற்றுக்கோடாதலும், 'எண்ணிலாப் பெருமாயனே' என்றதனால் சொல்லப்படுகிற வரம்பில் ஆற்றலும், 'தேவிமார் ஆவார் திருமகள் பூமி ஏவ மற்று அமரர் ஆட்செய்வார்,' என்றதனால் சொல்லப் படுகிற விரும்பியவாறே செய்து முடித்தலும், "எண்திசையும் கீழுமேலும் முற்றவும் உண்டபிரான்' என்றதனால் சொல்லப்படுகிற ஆபத்துக்குத் துணையாதலும், 'சுரிகுழல் கமலக்கண் கனிவாய்க் காளமேகம்' என்றதனால் சொல்லப்படுகிற துன்பத்தைத் துடைத் தலும் ஆகிற இப்பத்து அர்த்தங்களும், திருவரங்கநாதன் விஷயமாக

அருளிச்செய்த 'கங்குலும் பகலும்' என்கிற திருப்பதிகத்தில், 'வடிவுடை வானோர் தலைவனே' என்றதனால் முதன்மையும், 'முன் செய்து இவ்வுலகம்', 'விண்ணோர் முதல்' என்பனவற்றால் காரணமும், 'கட்கிலீ', 'என்னுடை ஆவி' என்பனவற்றால் நிறைவும், 'பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய்', 'மூவுலகாளி' என்பனவற்றால் ஏவுதலும், 'இவள் திறத்து அருளாய்' என்றதனால் அருளும், 'பற்றிலார் பற்ற நின்றானே' என்றதனால் பற்றுக் கோடாதலும், 'அலைகடல் கடைந்த ஆரமுதே' என்றதனால் வரம்பில் ஆற்றலும், 'என் திருமகள் மார்பனே', 'நிலமகள் கேள்வனே', 'ஆய்மகள் அன்பனே' என்பனவற்றால் விரும்பியவாறே செய்து முடித்தலும், 'இவ்வுலகமுண்டு உமிழ்ந்து அளந்தாய்' என்றதனால் ஆபத்திற்குத் துணையாதலும், 'முகில்வண்ணன் அடியை அடைந்து அருள் சூடி உய்ந்தவன்' என்றதனால் துன்பத்தைத் துடைத்தலும் ஆகிய அப்பத்து அர்த்தங்களையும் அருளிச்செய்தாராதலின் 'மதிள் அரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற ஆயிரமும்' என்கிறார். இனி, ஆழ்வார்களுள் நம்மாழ்வார் அதிகர் ஆயினாற்போன்று, எம்பெருமான்களுள் நம்பெருமாள் அதிகராய் இருத்தலின், அங்ஙனம் அருளிச்செய்கிறார் என்றலுமாம்.

பிரமேய சாரத்தைப் பெற்றாள் தேவகி; தன் மிடுக்காலே வளர்த்தாள் யசோதை; பிரமாண சாரத்தைப் பெற்றார் ஆழ்வார்; தம் மொய்ம்பால் வளர்த்தார் இராமாநுசர். ஆண்டவனிட்ட பயிரை வளர்த்தல் அடியானுக்குக் கடன் ஆதல் போன்று, 'மாறன் அடி பணிந்து உய்ந்தவன்' என்கிறபடியே, அடியாரான இராமாநுசருக்கு ஆழ்வார் பெற்ற திருவாய்மொழியை வளர்த்தல் கடன் ஆதலின், 'வளர்த்த இதத்தாய் இராமாநுசன்' என்கிறார். இராமாநுசர் கால முதற்கொண்டே திருவாய்மொழியின் ஏற்றம் குன்றின்மேல் இட்ட விளக்குப் போன்று எங்கும் பிரகாசித்தது என்க. (5)

*மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்*
*தக்க நெறியும் தடையாகித்—தொக்குஇயலும்*
*ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்*
*யாழினிசை வேதத் தியல்.*

---

1. *'நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை, என்பர் அவரவர்தம் ஏற்றத்தால்' என்ற உபதேசரத்தினமாலைச் செய்யுளை இங்கு நினைவு கூர்க.*

**பொ - ரை :** 'திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபர் அருளிச்செய்த யாழின் இசை போன்ற திருவாய்மொழிப் பாசுரங்கள் அறப்பெரிய இறைவனுடைய சொரூபத்தையும், என்றும் நிலைத்துள்ள ஆத்துமாவின் சொரூபத்தையும், அவனை அடைவதற்குத் தக்கதான வழியின் தன்மையினையும், தடையாகிச் சேர்ந்து கிடக்கின்ற முன்னை வினைகளாகிற விரோதி சொரூபத்தையும், வாழ்வாகிற மோட்சத்தின் தன்மையினையும் கூறுவனவாம்' என்றவாறு.

ஸ்ரீமந் நாராயணனே அறப்பெரிய முதல்வன். ஆத்துமாவிற்குச் சொரூபம் 'அடியேன்' என்பதே. சரணுகதியே இறைவனைப் பெறுவதற்கு உரிய வழி. 'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கமும் அழுக்குடம்பும்' ஆகிய இவையே விரோதிகள். 'ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதுவே' பரம புருஷார்த்தம் என்னும் இவவைந்து பொருள்களுமே திருவாய்மொழியிற்சொல்லப்படுகின்றன என்றபடி. இதன் விரிவை அவதாரிகை 'திருமகள் கேள்வன் ஒன்றில்' காண்க. (6)

*மணவாள மாமுனிகள் அருளிச்செய்த*
*திருவாய்மொழி நூற்றந்தாதியின் தனியன்கள்*

*அல்லும் பகலும் அனுபவிப்பார் தங்களுக்குச்*
*சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான்—நல்ல*
*மணவாள மாமுனிவன் மாறன் மறைக்குத்*
*தணவாநூற் றந்தாதி தான்.*

*மன்னும் புகழ்சேர் மணவாள மாமுனிவன்*
*தன்னருளால் உட்பொருள்கள் தம்முடனே—சொன்ன*
*திருவாய் மொழிநூற்றந் தாதியாந் தேனை*
*ஒருவாது அருந்துநெஞ்சே! உற்று.*



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

நம்பிள்ளை திருவாய் மலர்ந்தருளின

# ஈடு முப்பத்தாறுயிரப்படியின் அவதாரிகை[1]

## மஹாப்பிரவேசம்[2] - ' திருமகள் கேள்வன்–ஒன்று '

[3] திருமகள் கேள்வனாய், அடையப்பட்ட எல்லா விருப்பத்தையு முடையனாய், மங்களம் பொருந்திய எல்லா நற்குணங்களையும்

1. *அவதாரிகை - முன்னுரை ; அதாவது, தோற்றுவாய்.*

2. *பிரவேசம் - புகுதல். மஹாப்பிரவேசம் - பெரிய புகுவு. மஹத் என்பது பெருமையை உணர்த்தும். இது, திருவாய்மொழியாகிய இந் நூலின் உட்பொருளைக் கூறுதற்குப் புகுகின்ற புகுவு ஆதலின், ' மஹாப் பிரவேசம் ' என்கிறார். பின், திருப்பதிகந்தோறும் கூறும் முன்னுரையைப் ' பிரவேசம் ' என்பர். இது, ' கருவமைந்த மாநகருக்கு உருவமைந்த வாயில் மாடம் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், தகை மாண்ட நெடுஞ்சுவர்க்கு வகை மாண்ட ஓவியம் போலவும் ' இருத்தலின், இந்நூலைக் கற்கப் புகுவோர் இவ்வவதாரிகையை முன்னர்ப் படித்து உணர்தல் வேண்டும்.*

3. *முதலில், இறைவன் ஆழ்வாரை விசேஷ கடாக்ஷம் செய்தருளின படியை அருளிச்செய்கிறார், ' திருமகள் கேள்வனாய் ' என்று தொடங்கும் முதல் வாக்கியத்தால். இவ்வாக்கியத்தால் இறைவனுடைய நிர்ஹேதுக மான திருவருளால் ஆழ்வாருக்கு உண்டான திவ்விய ஞான ரூபத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது. இத்தால் ஆப்த தமத்துவம் பெறப்படும். ஆப்த தமத்துவமாவது, உண்மைப் பொருள்களை உள்ளவாறு உணர்ந்து உணர்ந்தவாறே பிறர்க்கும் உரைக்குந் தன்மை. ஆப்தன் - நம்பத் தகுந்தவன் ; தமத்துவம் - உயர்வாம் தன்மை.*

*நித்திய சமுசாரிகளான இவ்வான்மாக்கள் விஷயத்தில் ஸ்வதந்தர னான சர்வேஸ்வரனுடைய திருவருள் பிராட்டி புருஷகாரமின்றிக் கூடாமையாலே ' திருமகள் கேள்வனாய் ' என்றும், பிராட்டி புருஷகாரம் இருப்பினும், இவ்வான்மாக்கள் இடுகின்ற பொருள்களை விரும்பும் படியான குறையுள்ளவன் (அபூர்ணன்) ஆயின், நிர்ஹேதுகமான திருவருள் கூடாது ஆகையாலே, அதனை நீக்குவதற்கு ' அடையப்பட்ட எல்லா விருப்பத்தையுமுடையவன் ' என்றும், ' அடையப்பட்ட எல்லா விருப் பத்தையுமுடையவன் ' விரும்பப் படுகின்ற எல்லாப் பொருள்களும் குறைவற நிறைத்தவன் என்றபடி. 'இப்படி எல்லாப் பொருள்களும் நிறைந்தவனாயினும், ஆன்மாக்களின் தோஷங்களைக் கண்டிருக்கச்செய்தே, பிராட்டியின் நிர்ப்பந்தத்திற்காகத் திருவருள் புரிவானோ?' என்னில், அங்ஙனமன்று ; தோஷங்களையே போக்கியமாகக் கொள்ளுவதற்குரிய வாத்சல்யம் முதலிய குணங்களையுடையவன் என்பார், ' மங்களம் பொருந்திய எல்லா நற்குணங்களையும் உருவமாகவுடையவன் ' என்றும்,*

உருவமாக உடையனான சர்வேஸ்வரன், 'மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து'[1] என்கிறபடியே, தொடர்ந்து வருகின்ற பிறவிகளிலே தோள் மாறி நித்திய சமுசாரியாய்ப் போந்த இவரை, 'அடியை அடைந்து உள்ளந்தேறி ஈறு இல் இன்பத்து இரு வெள்ளம் யான் மூழ்கினன்,'[2] என்று முதலிலே தம் திருவாயாலே சொல்ல வல்லராம்படியாக முதலடியிலே சிறந்த திருவருளைச் செய்தருளினான்.[3]

---

அந்தத் தோஷங்களைப் போக்கியமாகக் கொள்ளுவதற்குரிய சம்பந்தத்தைக் கூறுவார் 'சர்வேஸ்வரன்' என்றும் அருளிச்செய்கிறார். இந்நான்கு பெயர்களையும் முதலில் அடைவே அருளிச்செய்வதற்கு இன்னம் பல படியாக விசேடங் கூறுவர் பெரியோர்.

1. இறைவன் திருவருள் புரிதற்கு முன்னர் ஆழ்வார் இருந்த நிலையினை அருளிச்செய்கிறார், 'மாறிமாறிப் பல பிறப்பும்' (2. 6: 8.) என்றது முதல் 'சமுசாரியாய்ப் போந்த இவரை' என்றது முடிய. இதனால், இறைவனுடைய நிர்ஹேதுகமான திருவருளும் பெறப்படும். தோள் மாறுகையாவது, சிவிகையார் ஒரு தோள் நொந்தால் மற்றொரு தோளில் மாற்றிக்கொள்ளுமாறு போன்று, ஒரு பிறவி போனவுடன் வேறு பிறவியை அடைகை. 'நித்திய சமுசாரியாய்ப் போந்த இவரை' என்கையாலே 'நித்திய முக்த ஈஸ்வரர்களிலே ஒருவர் ஆழ்வாராக அவதரித்தார்' என்று கூறுதல் இவருடைய பிரபாவத்தின் மிகுதியை நோக்கியாகும்.

2. திருவருளின் பலத்தை அருளிச்செய்கிறார் 'அடியை அடைந்து' என்றது முதல் 'சொல்ல வல்லராம்படியாக' என்றது முடிய. 'அடியை அடைந்து உள்ளந்தேறி' என்கையாலே, கர்மங்களைச் செய்து மனம் குற்றமற்று இறைவனை அறிந்தவர்களில் வேறுபாடு. 'உள்ளந்தேறி' என்று ஞானத்தைச் சொல்லுகையாலே பிராமாண்யம் தோன்றும். 'ஈறு இல் இன்பம்' என்கையாலே, சுவர்க்கம் முதலிய இன்பங்களில் வேறுபாடு. 'இரு வெள்ளம்' என்கையாலே, கைவல்ய இன்பத்தில் வேறுபாடு. 'மூழ்கினன்' என்கையாலே, குமிழ் நீர் உண்ணும் போதில் தோன்றும் ஒலியைப் போன்று, இப்பிரபந்தமும் பத்தி வழிந்த சொல் என்பது தோன்றும். 'இரு வெள்ளம்' என்கையாலே, 'மூழ்கினன்' என்கிறார். 'முதலிலே' என்றது, பத்தி தோன்றிய நிலையிலே என்றபடி. அதாவது' கர்மம் ஞானம் பத்தி பரபத்தி பரஞானம் பரமபத்தி அர்ச்சிராதிகதியடைதல் தேசவிசேடத்தையடைதல் பகவானையடைதல் கைங்கரியத்தையடைதல் என்னும் இவற்றின் பின்னர்ச் சொல்லும் வார்த்தையை, முதலிலே சரீரத்தோடே இவ்வுலகத்தில் இருக்கச் செய்தேதானே, அதிலும் பத்தி தோன்றிய நிலையில்தானே, பிரபந்தத்தின் ஆதியில்தானே என்றபடி. 'சொல்ல வல்லராம்படி' என்றது, சொல்லுதலின் அருமை குறித்து நின்றது.

3. 'முதலடியிலே' என்றது, யாதொரு காரணமும் இன்மையைக் குறித்து நின்றது. 'சிறந்த திருவருளைச் செய்தருளினான்' என்றது, 'மயர்வற மதிநலம் அருளினன்' என்கிறபடியே, பத்தியின் நிலையினை அடைந்த ஞானத்தை உடையராம்படி நினைத்தான் என்றபடி.

[1] திருவருளைச் செய்ய, [2] 'பகவான்' என்னும் திருநாமத்தை யுடையவனும், எக்காரியங்களையும் வருத்தம் இன்றிப் பயனுடன் முடியும்படி செய்கின்றவனும், பசுக்களின் வளர்ச்சியை விரும்பு கின்றவனும் ஆன கண்ணபிரான், தனது தூய்மையான மனத்தினால் [3] 'பிருந்தாவனம் புற்கள் நிறைந்த காடாக மாறல்வேண்டும்,' என்று நினைந்த அளவில், [4] 'தோன்றிய புற்களாலே நிரம்பி, இந்திர கோபம் என்னும் பட்டுப்பூச்சிகள் பரவப் பெற்ற பூமியானது, இடையிடையே பதுமராகக் கற்கள் பதித்த மரகதமணி மயமானது ஓர் இடத்தைப் போலத் தோன்றியது,' என்னலாம்படி மாறியது போன்று, இவரும் உண்மைப் பொருள்களை உள்ளவாறு [5] விளக்கமாக அறிய வல்ல வரானார்.

[6] மற்றை மதங்களிலே தத்துவங்களைப் பதினாறு என்பாரும், ஆறு என்பாருமாய் இன்னோரன்ன பல வகைகளிலே மாறுபட்ட நம்பிக்கை உடையவர்களாய் இருப்பர். 'எங்ஙனம்?' என்னில், [7] '**உலோகாயதிகர்**, ஆகாயம் நீங்கலாக உள்ள மண் முதலான பூதங்கள் நான்கனுடைய கூட்டரவிலே அறிவு என்னும் ஒரு தர்மம் பிறக்கும்; அதற்கு உண்டான இன்ப துன்பங்களே சுவர்க்க நரகங்கள்; அவற்றினுடைய பிரிவிலே அறிவு அழியும்; அவ்வருகு ஒன்றும் இல்லை என்பர்.

---

1. *'அவன் செய்த திருவருள் பலித்த இடம் உண்டோ?' என்ன, 'உண்டு' என்றும், திருவருள் புரிந்ததும் இன்னதற்காக என்றும், பின் அவர்தாம் இன்னபடியானார் என்றும் அருளிச்செய்கிறார் 'திருவருளைச் செய்ய' என்றது முதல் 'அறிய வல்லவரானார்' என்றது முடிய. 'திருவருளைச் செய்ய' என்பதிலுள்ள 'செய்ய' என்னும் எச்சத்தை 'அறிய வல்லவரானார்' என்றதனுடன் முடிக்க. இடையிலுள்ளது, இறைவன் 'மதி நலம் அருள' இவர் 'மயர்வு அற்றதனை' விளக்க வந்த உவமை.*

2. *ஸ்ரீ விஷ்ணு புராணம்*

3. *பிருந்தாவனம் - நெருஞ்சிற்காடு*

4. *ஸ்ரீ விஷ்ணு புராணம்*

5. *விளக்கமாக அறிதலாவது, பரோபதேசம் செய்வதற்குத் தகுதியாக ஐயம் திரிபு அற அறிதல்.*

6. *'உண்மைப் பொருள்களை உள்ளவாறு விளக்கமாக அறிய வல்லவரானார்' எனின், 'உண்மைப்பொருள்களை அறிவதில் மயக்கம் உளதோ?' என்னும் வினாவிற்கு விடையாக, உண்மைப்பொருள் விஷயமாகவுள்ள மாறுபட்ட கொள்கைகளை அருளிச்செய்து, 'நம் தரிசனத்திற்குத் தத்துவங்கள் மூன்று,' என்று நமது கொள்கையினையும் அருளிச்செய்கிறார் 'மற்றை மதங்களிலே' என்று தொடங்கி. பதினாறு என்பவர், நையாயிகர். ஆறு என்பவர், வைசேஷிகர்.*

7. *உலோகாயதிகர் - உலகத்தில் பரந்த கொள்கையினையுடையவர்.*

[1] **ஆருகதர்**, 'உலகமானது காரிய காரண ரூபத்தாலே நித்திய அநித்தியமும், பிந்ந அபிந்நமும், சத்திய அசத்தியமுமாய் இருக்கும்; ஆன்மாக்கள் கர்மங்கட்குத் தகுதியாக எடுக்கின்ற சரீரங்களினுடைய அளவையே தமக்கும் அளவாகக்கொண்டிருக்கும்; பிறப்பு இறப்புகள் அநாதி; மலதாரணை முதலியவைகளாலும், ஆன்ம அறிவினாலும் உலகத் தொடர்பினின்றும் விடுபட்டு மேல் நோக்கிச் சேர்தல் மோட்சம்,' என்றனர்.

[2] பௌத்தமதத்தில் ஒரு சாராரான **வைபாஷிகர்**, 'உலகமானது பரமாணுக்களின் கூட்டத்தால் உண்டாயதாய், காட்சி அளவையால் அறியக்கூடியதாய் இருக்கும்; அதன் வழித்தோன்றிய அறிவும் கணநேரமே இருக்குந் தகையது; [3] வேறு ஓர் ஆன்மா இன்று; பொருள்கள் நிலைத்திருப்பவை என்று நினைக்கும் அறிவே பிறப்பு இறப்புகட்குக் காரணம்; கணந்தோறும் அழியக் கூடியவை என்று நினைக்கும் அறிவே [4] மோட்சம்,' என்றனர். மற்றொரு சாராரான **சௌத்ராந்திகர்** கொள்கைகளும் மேற்கூறியனவேயாயினும், 'அநுமானத்தால் பெறப்படுவது உலகம்,' என்பர். அதுவே அவர்களுடைய சிறப்பியல்பு. **யோகாசாரர்**, 'அறிகின்றவனும் அறியப்படும் பொருள்களும் மயக்குணர்வு; ஞானமே உள்ளது; அந்த ஞானமும் கணநேரமே இருக்கக்கூடியது என்றிருக்கை [5] மோட்சம்,' என்றனர். **மாத்யமிகர்**, 'அளவையும் அளவையால் அறியப்படும் பொருள்களும் அறிகின்றவனும் உண்டு என்று அறிதல் மயக்குணர்வு; சூந்யத்தாலே சூந்யம் என்று அறிதல் மோட்சம்,' என்றனர்.

[6] **நையாயிகர், வைசேடிகர்**, 'உலகிற்கு முதற்காரணம் பரமாணுக்கள்; அநுமானத்தால் அறியப்படும் இறைவன் நிமித்த காரணம்; பிறப்பு இறப்புகள் அநாதி; இறைவனை வணங்கும்

---

1. *ஆருகதர் - அருகனை வழிபடுகின்றவர்.*

2. *பௌத்த மதத்தில் நால்வகைப்பிரிவினர் உளராதலின், 'ஒரு சாராரான வைபாஷிகர்' என்கிறார்.*

3. *'வேறோர் ஆன்மா இன்று,' என்றது, 'ஞானத்தின் தோற்றமே ஆன்மா,' என்றபடி.*

4. *'மோட்சம்' என்றது, மோட்சத்திற்குக் காரணம் என்றபடி.*

5. *மோட்சம் - மோட்சத்திற்குக் காரணம்*

6. *நையாயிக வைசேடிகர்கள் ஆகிய இவ்விருவர்க்கும் கருத்து வேற்றுமை இருப்பினும், இங்குக் கூறப்படும் பொருள்களில் ஒற்றுமை இருத்தலின், இருவரையும் சேர்த்து அருளிச்செய்கிறார்.*

வணக்கத்தால் [1] இன்ப துன்ப ஞானம் அழிதல் மோட்சம்,' என்றனர். [2] பாசுபதர், 'உலகிற்கு முதற்காரணம் பரமாணுக்கள்; ஆகமங்களிற்கூறப்படுகின்ற சிவபெருமான் நிமித்தகாரணன்; பிறப்பு இறப்புகள் அநாதி; ஆகமங்களிற்கூறப்படுகின்ற கர்மங்களைச் செய்துகொண்டு வருவதால், சிவபெருமானுடைய சாரூப்பியத்தைப் பெறுதல் மோட்சம்,' என்றனர். [3] **சாங்கியர், யோகியர்,** 'மூலப்பகுதியானது வேறு ஒன்றன் உதவி இன்றித் தானாகவே உலகிற்குக் காரணம் ஆகின்றது; அந்த மூலப்பகுதியோடு ஆன்மாவிற்கு உண்டான அநாதி சம்பந்தமே பிறப்பு இறப்புகட்குக் காரணம்; அம்மூலப்பகுதி வேறு, புருஷன் வேறு என்று அறிதலே மோட்சம்,' என்றனர்.

[4] **பாட்டர், பிரபாகரர்,** 'உயிர்கள் என்றும் உள்ளவைகளாய், எண் இறந்தனவாய், எங்கும் நிறைந்தனவாய், அநாதி கர்மத்தாலே பிறந்து இறந்து வருகின்றன; இவ்வுலகம் [5] நீர்ப்பெருக்குப் போன்று என்றும் உள்ளது; [6] கர்ம அபூர்வமே ஆன்மாவை அடைதலாகிய

---

1. *இன்ப துன்ப ஞானம் அழிதலாவது, கல்லைப்போன்று இருத்தல்.*

2 *பாசுபதர் - பசுபதி மதத்தைப் பின்பற்றுபவர்; சைவர். இவர்களிலே சிலர் பரமாணுக்களே உலகிற்கு முதற்காரணம் என்கையாலே, பிரகிருதி முதற்காரணம் என்கிற ஸ்ருதப்பிரகாசிகையோடு விரோதமில்லை. அவ்வாறே, ஆகமசித்தேஸ்வரன் நிமித்த காரணம் என்று அவர்களிலே சிலர் சொல்லுகையாலே, ஆநுபாநிகேஸ்வரன் நிமித்தகாரணம் என்கிற வேதாந்த தீபத்தோடும் விரோதமில்லை என்பர் அரும்பதவுரைகாரர். ஆகமம் - சிவ ஆகமம். சாரூப்பியம் - கடவுளைப்போலும் வடிவம் பெறுதல்.*

3. *சாங்கியர் - கபில ஆகம நிஷ்டர். இறைவன் உளன் என்னும் சாங்கியரையும், இறைவன் இலன் என்னும் சாங்கியரையும் கூறியபடி. யோகியர் - பதஞ்சலிமதநிஷ்டராதல், ஹிரண்யகர்ப்பமத நிஷ்டராதல்.*

4. *இது முதற்கொண்டு, வேதவாக்கியங்களுக்கு நேர்ப்பொருள் காணாது, மாறுபடப் பொருள் காண்பவர்களைப்பற்றி அருளிச்செய்கிறார்.*

5. *'நீர்ப்பெருக்குப் போன்று' என்றது, கங்கை முதலிய நதிகளில் செல்லுந் தண்ணீர் சென்றுகொண்டேயிருக்கவும், மேலும் மேலும் தண்ணீர் வந்துகொண்டேயிருப்பதனால் வெள்ளம் நிலைத்திருப்பதாகக் காணப்படுதல்போன்று, உயிர்கள் இறந்துகொண்டேயிருக்கவும், மேலும் மேலும் பிறந்துகொண்டேயிருப்பதனால் உலகம் நிலைத்திருப்பதாகக் காணப்படுதலைத் தெரிவித்தபடி.*

6. *பூர்வம் - முன்பு; அபூர்வம் - முன்பு இல்லாதது. கர்ம அபூர்வம் - ஆன்மாக்கள் கர்மங்களைச் செய்யும்போது அதன் பயனாக முன்பு இல்லாத தொன்று புதியதாகத் தோன்றும்; அவ்வாறு தோன்றுவதனையே கர்மாபூர்வம் என்கின்றனர்.*

மோக்ஷத்திற்குக் காரணம்; இறைவன் என்று ஒருவன் தனியே இலன்,' என்றனர். **மாயாவாதியர்,** [1] 'நிர்விசேட சிந்மாத்திரமே மாயா சபளமாய்க் கொண்டு மயங்குதல் உலக நடப்பு; '**நீ அது ஆகின்றாய்,**' முதலான வாக்கியங்களால், உண்டாகின்ற ஞானத்தாலே அம்மயக்கம் போதல் மோட்சம்,' என்றனர். **பாஸ்கரீயர்,** [2] 'அந்தப் பரம்பொருள் தானே சத்ய உபாதி கலந்ததாய்க் கொண்டு மயங்குதல் சம்சாரம்; வர்ணாஸ்ரம தர்மங்களோடு கூடினதாய், '**நீ அந்தப் பிரமம் ஆகிறாய்,**' என்பது முதலான வாக்கியங்களால் உண்டாகின்ற ஞானத்தை முன்னிட்டுக்கொண்டுள்ள உபாசந உருவமாய் உள்ள ஞானத்தாலே உபாதி அழிதல் மோட்சம்,' என்றார். **யாதவப் பிரகாசர்,** [3] 'அப்பரம்பொருள் தானே சத்தியமான சித்து அசித்து ஈஸ்வர உருவமாய்க் கொண்டு மயங்குகிறது; அப்பரம்பொருளுக்கு உண்டான பேதஞானமே உலகத்தின் நடப்பு; ஞான கர்மங்களின் சேர்க்கையினாலே அவ்வேற்றுமை உணர்வு

---

1. *விசேஷமாவது, பேதம். அதாவது, சஜாதீய விஜாதீய ஸ்வகத பேதங்கள். சஜாதீயமாவது, ஜீவ பிரம பேதம்; விஜாதீயமாவது, அசித்து பிரம பேதம்; ஸ்வகதபேதமாவது, பிரமத்துக்கும் ஞானம் சக்தி முதலான குணங்களுக்கும் உண்டான பேதம். நிர்விசேடமாவது, இவையின்றி இருத்தல். ஆக, இம்மூன்று பேதமும் இல்லாத என்றபடியாம். சிந்மாத்திரம், ஸ்வயம்பிரகாசமாயிருக்கிற பரம்பொருள். மாயாசபளம், மாயை கலத்தல். மாயை, அவித்தியை. 'முதலான' என்றதனால், 'நான் நீயாக இருக்கின்றேன்', 'நான் எப்பொருளோ, அப்பொருளே பிரமம்; அப்பரம் பொருள் எதுவோ, அதுவே நான்,' என்பன முதலான வாக்கியங்களைக் கொள்க. 'அம்மயக்கம் போதலே மோட்சம்,' என்றது, பரம்பொருளோடு ஒன்று என்ற பாவமே மோட்சம் என்றபடி.*

2. *'அந்தப் பரம்பொருள்தானே' என்பதிலுள்ள 'அந்த' என்ற சுட்டு, பரம்பொருளினை மாத்திரம் சுட்டுகிறது; 'நிர்விசேஷம்' முதலியவைகளைச் சுட்டுகிறது அன்று. அவர்கள் பரம்பொருளைச் 'சகுணம்' என்று கொள்வார்கள் ஆதலின். உபாதியாவன, தேகம் இந்திரியம் முதலியவைகள்.*

3. *'அப்பரம்பொருள்தானே' என்பதிலுள்ள அகரச்சுட்டு, பரம் பொருளினை மாத்திரம் சுட்டுகிறது; நிர்விசேஷம் முதலியவைகளைச் சுட்டுகிறதன்று. காரணம், பரம்பொருள், சித்து அசித்து ஈஸ்வர ரூபங்களாக மாறுகின்றது என்று பரிணாம ரூப விசேஷத்தை அவர்கள் அங்கீகரிக்கை.*

நீங்குதல் மோட்சம்,' என்றார். [1] ஏகாயநர், 'இறைவன் சில சத்தி விசேடங்களையுடையவன்,' என்று கொண்டனர். பரம்பொருள் உலகிற்குக் காரணம் என்று கூறும் வைதிக மதத்திற்காட்டில், அதுவே அவர்கட்கு விசேடம்.

ஆக, மேற்கூறிய கொள்கைகள் பதினேழும் வேத நெறிக்குப் [2] புறம்பானவைகளும், மாறான நோக்கமுள்ளவைகளும் ஆகையாலே, பயன் அற்றவைகளாம்.

நம் [3] தரிசனத்திற்குத் தத்துவங்கள் மூன்று: அவையாவன, சித்தும் அசித்தும் ஈசுவரனும். 'ஆயின், [4] 'எல்லாப் பொருள்களும் பிரமம் ஆகவே இருக்கின்றன', 'பொருள் ஒன்றே; இரண்டாவது இல்லை,' என்று கூறப்படுகையில் மூன்று என்றல் என்னை?' எனின், [5] பிரகார பிரகாரிகள் ஐக்கியத்தால் ஒன்று என்னலாய், [6] சொரூப பேதத்தால் பல என்னலாயிருக்கும்.

---

1. *ஏகாயநர்-ஓரிடத்தையே பற்றினவர்; மத்துவ மதத்தினர். நாம் திருவோடுகூடிய நாராயணனைப் பற்றுகிறோம்; அவர்கள் நாராயணனை மட்டும் பற்றுபவர்களாதலின், அப்பெயரால் அருளிச்செய்கிறார். நாம் இறைவனை 'சர்வசத்தி' என்கின்றோம்; அவர்கள் 'சில சத்திகளையுடையவன்' என்கின்றனர். 'அதுவே' என்றது, பிராட்டியினுடைய சம்பந்தத்தை உடன்படாத அதுவே என்றபடி.*

2. *'உலோகாயதிகம்' முதற்கொண்டு 'யோகம்' இறுதியாக உள்ள பதினொரு மதங்களும் புறச்சமயங்கள்; 'பாட்டம்' என்றது முதல் 'ஏகாயநம்' இறுதியாக உள்ள ஆறு மதங்களும் வேத வாக்கியங்களுக்கு நேர்ப்பொருள் காணாது, மாறுபடப் பொருள் காண்பவர்களுடைய மதங்கள். 'வேதங்கட்குப் புறம்பாக உள்ள ஸ்மிருதிகளும், வேறுபட்ட குத்ருஷ்டி மதங்களும் மோக்ஷ உலகத்தை அடைவதற்குப் பயனற்றவை; தமோ குணத்தால் செய்யப்பட்டவை,' என்னும் மனுதர்மசாத்திரம் இங்கு ஒப்பு நோக்குக.*

3. *தரிசனம் - பார்த்தல்; 'முன்னோர்களால் பார்க்கப்பட்ட மதம்' என்பது பொருளாம்.*

4. *'சர்வம் கல்பிதம் பிரஹ்ம'*
*'ஏகமேவ அத்விதீயம்'*

5. *பிரகாரம் - அடை; அடை எனினும், விசேஷணம் எனினும் ஒக்கும். பிரகாரி - அடைகொளி; அடைகொளி எனினும், விசேஷியம் எனினும் ஒக்கும்.*

9. *'ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும்*
*வேற்றுமை நயத்தின் வேறே உடல்உயிர்.'* (நன். சூ. 450)
*என்னும் சூத்திரம் ஈண்டு நினைவு கூர்க.*

அவற்றுள், அசித்தாகிறது, முக்குணங்களோடு கூடியதாய்[3] என்றும் உள்ளதாய், எங்கும் நிறைந்ததாய், எப்பொழுதும் வேறு பாட்டினை அடையக்கூடியதாய், விடத்தக்கது என்று அறியத்தக்க தாய் இருக்கும். இப்படியிருக்கின்ற அசித்தில் இனிமை இருப்பதாக நினைத்துச் சம்சாரத்தை உறுதியாக்கிக்கொள்ளவேண்டும் என்று இருக்குமவனும் சர்வேஶ்வரனைப் பற்றல் வேண்டும்; இது விடத் தக்கது என்னும் நினைவு உண்டாகி, இதனைக் கழித்துக்கொள்ளல் வேண்டும் என்று இருக்குமவனும் சர்வேஶ்வரனைப் பற்றல் வேண்டும்; 'என்னை?' எனின், [1] 'சம்சாரத்தில் கட்டுப்பட்டு இருப் பதற்கும் விடுபட்டு மோக்ஷத்தை அடைவதற்கும் காரணமாக நிற் கின்றான் சர்வேஶ்வரன்,' என்று கூறும் சுவேதாஶ்வதர உபநிடதம். [2] 'என்னுடைய முக்குண ரூபமான இந்தப் பிரகிருதியானது என்னால் உண்டுபண்ணப்பட்டது; ஒருவராலும் கடக்க முடியாதது; ஆயின், என்னையே சரணமாக அடைகின்றவர்கள் இதனைத் தாண்டு கிறார்கள்,' என்கிறபடியே, 'நான் பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப் போகாது; என்னையே கால் கட்டி அவிழ்த்துக்கொள்ள வேண்டும்,' என்றான் இறைவன். அதுதன்னையே இவ்வாழ்வாரும் [3] 'பொல்லா ஆக்கையின் புணர்வினை அறுக்கலறா, சொல்லாய் யான் உன்னைச் சார்வதோர் சூழ்ச்சி,' என்று அருளிச்செய்தார். [4] 'ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப் போகிறது இல்லை; [5] சர்வ சத்தி கர்மங்கட்குத் தகுதியாகப் பிணைத்த பிணையை அவனையே கால் கட்டி அவிழ்த்துக்கொள்ளும் இத்தனைகாண்,' என்றார் **பிள்ளை திருநறையூர் அரையர்.**

சித்து ஆவது, என்றும் உள்ளதாய், அணு அளவினதாய், ஞான ஆனந்த லட்சணமாய், ஞானத்தைப் பண்பாக உடையதாய், விகாரம் அற்றதாய், இறைவனுக்கு என்றும் அடிமைப்பட்டதாய் இருக்கும். இப்படியிருக்கிற ஆன்மாவினுடைய வேறுபட்ட

---

1. *சுவேதாஶ்வதர உபநிடதம், அத். 6.*

2. *ஸ்ரீ கீதை 7 : 14.*

3. *திருவாய். 3. 2 : 3.*

4. *'வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்*
   *தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்'*

*என்ற தனிப்பாடல் ஈண்டு ஒப்பு நோக்கல் தகும்.*

5. *சர்வசத்தி - எல்லா ஆற்றல்களையுமுடையவன்; இறைவன்.*

தன்மையை நினைத்துப் [1] ‘பிறவித் துயர் அற, ஆழிப்படை அந்தணனை மனத்து வைத்து, ஞானத்துள் நின்று துறவிச் சுடர் விளக்கந் தலைப்பெய்வார்’ என்கிறபடியே, ஆத்தும அநுபவம் அமையும் என்று இருக்குமவனும் சர்வேஶ்வரனை வழிபட்டு வணங்கலும், [2] உடலை விட்டு உயிர் நீங்குங்காலத்து இறைவனை நினைத்தலும் வேண்டும். ஆத்தும அநுபவத்தை நெகிழ்ந்து சர்வேஶ்வரனுடைய குணங்களை அநுபவிக்க வேண்டும் என்று இருக்குமவனும் அவ்விறைவனையே [3] உபாயமாகப் பற்றல் வேண்டும்.

‘மேற்கூறிய தத்துவங்கள் மூன்றனுள் அசித்து, சித்து இவற்றின் தன்மைகளைக் கூறி, ஈஶ்வரன் தன்மையினைக் கூருது ஒழிவான் என்?’ என்னில், இவற்றுள், ஒன்றனை அறியிலும் அறியும் அவ்வறிவு [4] ‘ஒண்தாமரையாள் கேள்வன், ஒருவனையே நோக்கும் உணர்வு,’ என்கிறபடியே, சர்வேஶ்வரன் அளவிலே சென்று முடிந்து அல்லது நில்லாது. மற்றும், ‘ஒருவனையே’ என்ற பிரிநிலை ஏகாரத்தால் பகவானுக்கு வேறுபட்ட பொருள்களைப் பற்றிப் பிறக்கும் ஞானம் எல்லாம் அஞ்ஞானத்தோடு ஒக்கும்; ஆதலால், ஞானமாகில் திருமகள் கேள்வனைப் பற்றியல்லது நில்லாமையின் சர்வேஶ்வரனைப் பற்றித் தனியே ஈண்டுக் கூறப்படவில்லை. [5] ‘பகவானை அறிகிற அந்த ஞானந்தான் ஞானம் என்று சொல்லப்படும்; ஆகையால், மேற்சொல்லிய ஞானத்திற்கு வேருனவை எல்லாம் அஞ்ஞானமாகச் சொல்லப்பட்டன,’ என்றும், [6] ‘பந்தத்தை உண்டாக்காத தொழிலே தொழில்; மோக்ஷத்தை உண்டாக்கும் கல்வியே கல்வி; மற்றைத் தொழில்கள் எல்லாம் வருத்தத்தை

---

1. *ஸ்ரீகீதை.* 7: 29

2. *“‘உயிர் உடம்பின் நீங்குங்காலத்து அதனுன் யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த் தோன்றும்,’ என்பது எல்லா ஆகமங் கட்குந் துணிபாகலின், வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாகிய பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப்பொருளையே பாவித்தல் வேண்டும். அதனுல், அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்க உபாய மில்லையென்பது அறிக,” என்பர் பரிமேலழகர்.* (குறள். 358.)

3. *உபாயம் - வழி*

4. *முதல் திருவந்.* 67.

5. *ஸ்ரீவிஷ்ணு புரா.* 6. 5: 87.

6. *ஸ்ரீவிஷ்ணு புரா.* 1. 19: 41.

உண்டாக்குவன ; மற்றைக் கல்விகள் எல்லாம் தொழில்களின் சிறப்பைக் காட்டுவன ,' என்றும் கூறப்பட்டு உள்ளன ஆதலின், பகவத் விஷயத்தை ஒழியக் கற்ற கல்வி எல்லாம் தொழில்களின் திறமையினைக் காட்டுவனவேயாகும்.[1]

இப்படி இருக்கிற சித்து அசித்து ஈச்வரர்கள் சொரூப சுபாவங்களை அறியக்கடவார் ஒருவரும் இலர் ; [2] இவற்றை உள்ளபடி அறிவாருள், தலைவர் ஆவர் இவ்வாழ்வார்.

[3] இவர்க்கு ' [4] ஒப்புச் சொல்லலாவார் சம்சாரிகளிலும் இலர் ; நித்தியசூரிகளிலும் இலர் ; [5] ஒரு சாதனத்தைச் செய்து இந்த நன்மை நமக்கு வரும் என்று இருக்க வந்தது அல்லாமையாலே தமது படியைத் தாமும் அறியார் ; இவரைப் போலவே இருப்பாரைச் சம்சாரத்திற் காணாமையால், சம்சாரிகளும் அறியார்கள் ; தன் குணங்கள் புறம்பே ஒருவடிவில் இப்படிப்பலிக்கக் காணாமையாலே ஸர்வேச்வரனும் அறியான். சம்சாரிகளில் வேறுபட்டவர் ஆதலைப் போன்றே நித்தியசூரிகளிலும் வேறுபட்டவர். ' ஆயின், இவ்வுலகிலே இருக்க, நித்தியசூரிகளிலும் வேறுபட்டவர் என்றல் கூடுமோ ?' என்னில், பகவானுடைய அநுபவத்துக்குப் பாங்கான தேசத்திலே இருந்து அநுபவிக்கின்றவர்களைப் போல அல்லர், அவ்வநுபவத்துக்கு மேட்டு நிலமான சம்சாரத்திலே இருந்து அநுபவிக்கிறவர்கள் ; ஆதலால், [6] ' விண்ணுளாரிலும் சீரியரே '

---

1. *' அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது*
*உலகநூல் ஓதுவ தெல்லாம்—கலகல*
*கூஉந் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்*
*போஒந் துணையறிவா ரில்.'*

*என்ற நாலடியார் செய்யுள் ஈண்டுக் கருதுதல் தகும்.*

2 *' இவற்றை உள்ளபடியறிவார் ' என்றது, முதலாழ்வார்கள் போன்ற ஞானியர்களை.*

3. *' இவர்க்கு ' என்றது, தத்துவத்திரய உண்மை ஞானத்தால் பகவானுடைய அநுபவ ஆனந்த சாகரத்தில் மூழ்கின இவர்க்கு என்றபடி.*

4. *' என்னப்பன்தன் மாயங்களே நினைக்கும் நெஞ்சுடையேன் எனக்கு இனி யார் நிகர் நீணிலத்தே '* (6. 4: 8) ; *' சொன்மாலைகள சொல்லுமாறு அமைக்கவல்லேற்கு இனி யாவர் நிகர் அகல்வானத்தே "* (4. 5: 8.) *என்ற திருப்பாசுரங்களை ஈண்டு நினைவு கூர்க.*

5. *' வரலாறு ஒன்று இல்லையால் வாழ்வு இனிதால் '* (*பெரிய திருவந்.* 56) *என்பது இவருடைய திருவாக்கு.*

6. *திருவிருத்தம்.* 79.

என்னும்படி ஆயிற்று இவர் நிலை. ஆக, [1] ''அடியார் நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நும் நிலையிடம்?'' என்கிறபடியே, உபய விபூதியிலும் அடங்காது இருப்பார். [2] மற்றும், [3] 'ஓ மைத்திரேயரே, கலியுகத்தில், உலகத்திற்குத் தலைவனும் எங்கும் நிறைந்திருப்பவனும் எல்லாரையும் படைத்தவனும் ஈச்வரன் என்ற பெயரை உடையவனும் ஆன திருமாலை, [4] பாஷண்டிகளால் கெடுக்கப்பட்ட மக்கள் வழிபடுகின்றார்கள் இலர்,' என்கிறபடியே, 'கலிகாலத்தில் பகவானிடத்தில் ருசி ஒருவர்க்கும் பிறவாது,' என்றும், [5] 'மனிதசரீரம் கிடைத்தல் அரிது; கிடைப்பினும், கிடைத்த அச்சரீரமும் கணநேரத்தில் அழியுந்தன்மையது; அழியாதிருப்பினும், ஸ்ரீ வைகுண்டநாதனே நமக்குப் பற்றுக்கோடு என்னும் ஞானம் உண்டாதல் மிகவும் அரிது என்று நான் நினைக்கிறேன்,' என்கிறபடியே, 'முதலில் மனித சரீரம் கிடையாது; பெற்றாலும் சர்வேச்வரனே அடையத் தக்கவன் என்று அவனைப் பெறுகைக்குத் தக்கதாய் இருப்பது ஒரு வழியை மேற்கொள்ள வேண்டும் என்னும் ருசி ஒருவர்க்கும் பிறவாது; இது உண்டாகிலும் உண்டாம்; அடியார்கட்கு அடிமை என்னும் எண்ணம் உண்டாகாது என்னுமிடம் சொல்ல வேண்டாவே,' என்றும் வருவனவற்றை ஓர்க. மற்றும் [6] 'மனிதர்களில் ஆயிரவருள் ஒருவன் சித்தியின்பொருட்டு முயல்கின்றான்; அங்ஙனம் முயல்கிற ஞானிகள் ஆயிரவருள் ஒருவன் என்னை அறிகிறான்; இது உண்மை,' என்று சர்வேச்வரன் தானும் அருளிச்செய்தான்.

---

1. திருவிருத்தம், 75.

2. பகவானுடைய அநுபவத்துக்குத் தேசதோஷத்தால் மேட்டு நிலமான அளவேயன்றிக்கே காலத்தின்சுபாவத்தாலும் மேட்டு நிலம் என்கிறார் 'மற்றும்' என்று தொடங்கி.

3. ஸ்ரீவிஷ்ணு புரா. 6. 41.

4. பாஷண்டிகள் - நாஸ்திகர்கள்; பாவத்தை உண்டுபண்ணுகிறவர்கள்.

5. பாகவதம், 11. 2: 22.

'மானிட ராக வரலரி தோர்மண் டலத்தினெறி
மானிட ராக மிலாதவ ராதன் மலரயனார்
மானிட ராகமத் தாலன்ப ராய அரங்கத்துளெம்
மானிட ராக மலரடிக் காட்படும் வாழ்வரிதே.'

என்ற திவ்விய கவியின் திருவாக்கு ஈண்டு ஒப்பு நோக்குக.

6. ஸ்ரீகீதை. 7 : 3.

இப்படியிருக்கிற இல்வுலகத்திலே ஆழ்வார் வந்து அவதரித்த இது [1] சேதனர் செய்த நல்வினைப் பயன் ஆயிற்று. 'யாங்ஙனம்?' எனின், [2] 'தேவகி கருத்தரித்த பிறகு எல்லா உலகங்களாகிற தாமரையை மலர்த்துவதற்காக, தேவகியாகிற கீழைச்சந்தியில் மிக்க ஒளியையுடைய கிருஷ்ணன் ஆகிற சூரியன் உதித்தான்,' என்கிறபடியே, சர்வேஸ்வரன் வந்து அவதரித்தபடி. 'என்னை?' எனின், [3] சூரியன் புறவிருளைப் போக்குவான்; சர்வேஸ்வரன் மனவிருளைப் போக்கிக்கொண்டிருப்பான்; அப்படியே, இவ்வாழ் வாரும் [4] 'ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல் அவனுடைய பேருந் தார்களுமே பிதற்ற' என்றும், [5] 'மரங்களும் இரங்கும் வகை மணிவண்ணவோ என்று கூவுமால்' என்றும், [6] 'பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும்' என்றும், [7] 'பாட்டாய தமிழ்மாலை ஆயிரத்துள் இப்பத்தும், கேட்டு ஆரார் வானவர்கள்' என்றும், [8] 'பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடித்

---

1. *சேதனர் - ஆத்துமாக்கள்; சேதனம் - அறிவு. 'சேதனம் என்னுமச் சேறுஅகத்து இன்மையால், கோதென்று கொள்ளாதாங் கூற்று,' என்பது நாலடியார்.*

2. *ஸ்ரீவிஷ்ணு புரா.* 5. 3: 2.

3. *'சுடரிரண் டேபண்டு மூன்றா யினதுகள் தீர்ந்துலகத்*
*திடரிரண் டால்வரும் பேரிருள் சீப்பன வெம்பிறப்பை*
*அடரிரண் டாமலர்த் தாளுடை யான்குரு கைக்கரசன்*
*படரிருங் கீர்த்திப் பிரான்திரு வாய்மொழிப் பாவொடுமே.'*
(*சடகோபரந்.* 2.)

*'ஆதித்ய ராமதிவாகர அச்சுதபானுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, சோஷியாத பிறவிக்கடல் வற்றி, விகசியாத போதிற்கமலம் மலர்ந்தது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே.'* (*ஆசார்யஹ்ருதயம்*)

*'வெள்ளி வியாழன் விளங்கிரவி வெண்டிங்கள்*
*பொள்ளென நீக்கும் புறவிருளை;—தெள்ளிய*
*வள்ளுவ ரின்குறள் வெண்பா அகிலத்தோர்*
*உள்ளிருள் நீக்கும் ஒளி.'* (*திருவள்ளுவமாலை,* 52.)

*என்பனவற்றை ஈண்டு ஒப்பு நோக்குதல் தகும்.*

4. *திருவாய்.* 6. 7: 2.
5. *திருவாய்.* 6. 5: 9.
6. *திருவாய்.* 1. 5: 11.
7. *திருவாய்.* 10. 6: 11.
8. *திருவாய்.* 10. 7: 5.

தென்னு என்னும் என் அம்மான்' என்றும் சொல்லுகிறபடி இப்படியே தம்முடைய நன்மை எங்கும் உண்டான எல்லார்க்கும் உண்டாம்படி செய்துகொண்டிருப்பர்.[1]

[2] 'ஸ்ரீ ராமபிரானுடைய நகையினையும் பேச்சையும் நடையினையும் செயல்களையும் மற்றும் உண்டான எல்லாவற்றையும் என் சங்கற்பத்தால் அருளப்பெற்ற தவ வலிமையால் உண்மையாக நன்கு அறிவாய்,' என்கிறபடியே, பிரமனுடைய திரு அருளால் ஸ்ரீ வான்மீகி பகவான் எல்லாவற்றையும் அறிந்தது போன்று, இவரும் பகவானுடைய [3] சொரூப ரூப குண விபூதிகளைப் பகவானுடைய திருவருளால் அறிந்தவராய் இருப்பர். [4] 'ஐஸ்வரியம் ஆத்மலாபம் ஏதேனும் ஒரு புருஷார்த்தம் ஆகவுமாம். அவற்றை நம் பக்கலிலே கொள்ளுமவர்கள் உதாரர்; ஞானியானவன் எனக்குத் தாரகன்,' என்று சர்வேஸ்வரன் அருளிச்செய்த ஞானிகளுக்கு முதன்மை பெற்றவராய் இருப்பர்.

[5] 'கைங்கர்யத்தை வளர்த்துப் போருமவனை இலக்குமணன் இளமைப்பருவம் தொடங்கி ஸ்ரீ ராமபிரானிடத்தில் பரம சிநேகி தனாய் இருக்கின்றான்,' என்கிறபடியே, இளமைப்பருவந்தொடங்கிப் [6] பெருமாள் திருத்தொட்டிலோடு அணையத் திருத்தொட்டில் இடாத போது பள்ளி கொள்ளாத [7] இளைய பெருமாளைப் போன்று, [8] 'அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து'

---

1. ஆக, 'திருமகள் கேள்வனாய்' என்று தொடங்கி, 'இவ்வாழ் வார்' என்னுமளவும், இப்பிரபந்தம் தத்துவஞானம் அடியாகப் பிறந்தது என்பதனையும், புகழ் பொருள் பூசை இவைகள் காரணமாகப் பிறந்தது அன்று என்பதனையும் அருளிச்செய்து, பிரபந்தம் எல்லாராலும் ஏற்றுக் கொள்ளத்தக்கது என்பதனை அறுதியிட்டு, 'இப்படியிருக்கிற' என்று தொடங்கி 'உண்டாம்படி செய்துகொண்டிருப்பர்' என்றது முடிய, எல்லா ஆத்துமாக்களும் உய்வதற்கு வழியாக இருக்கின்றது இப்பிரபந்தம் என்பதனை அறுதியிட்டார்.

2. இனி, முதல் வாக்கியத்தால் அருளிச்செய்த ஞான பத்தி வைபவத்தை இப்பிரபந்தம் மூலமாக விரித்து அருளிச்செய்கிறார் 'ஸ்ரீராமபிரானுடைய நகையினையும்' என்று தொடங்கி. இது ஸ்ரீராமா. பால. 3 : 4.

3. சொரூப ரூப குண விபூதி - இறைவனுடைய தன்மை, உருவம், குணம், உலகம் ஆகிய செல்வங்கள்.

4. ஸ்ரீகீதை. 7 : 18.

5. ஸ்ரீராமா. பால. 18 : 27.

6. பெருமாள் - ஸ்ரீராமபிரான்.

7. இளைய பெருமாள் - இலக்குமணன்.

8. திருவாய்மொழி, 2. 3 ; 3.

என்றும், [1] ‘முலேயோ முழுமுற்றும் போந்தில பெருமான், மலேயோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகமே,’ என்றும் சொல்லுகிற படியே, இவரும் பருவம் நிரம்புவதற்கு முன்பே பகவானுடைய குணங்களேயே தாரகமாகக் கொண்டிருப்பர். [2] ‘தண்ணீரினின்றும் மேலே எடுக்கப்பட்ட மீன், நீர் நசை அறும் அளவும் பிழைத்து இருக்குமாறு போன்று, நிறுத்திப் போகிறேம் என்கிற வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலே உண்டு என்று அறியும் அளவுங்காணும் நாங்கள் பிழைப்பது; ஆதலால், உம்மை ஒழிந்த அன்று பிராட்டியும் இலள்; யானும் இலன்; பிழைத்து இருப்போமாயின், ஒரு முகூர்த்த நேரமே பிழைத்திருப்போம்,’ என்ருர் இளேய பெருமாள். [3] ‘எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போதும் ஒழியும்’ என்கிற படியே, அத்தலேயில் (இறைவன்) நினேவாலே அன்றே இத்தலே (உயிர்கள்) பிழைத்திருப்பது? அவன் நினேவு இல்லாத அன்று இவையும் இல்லே அன்றே? அப்படியே, இவரும் [4] ‘நின் அலால் இலேன்காண்’ என்று இருப்பார் ஒருவர். [5] “‘வானவர் நாடு’ என்கிற பரமபதம், ஆத்மலாபம், உலகங்களின் ஐஶ்வரியம் இவை இத்தனேயும், உமக்குப் புறம்பாக வரும் அன்று வேண்டேன்,’ என்ற இளேய பெருமாளேப் போன்று, இவரும் [6] ‘திருவொடு மருவிய, இயற்கை மாயாப் பெருவிறல் உலக, மூன்றினெடு நல்வீடு பெறினும், கொள்வது எண்ணுமோ?’ என்றும், [7] ‘எம்மா வீட்டுத் திறமும் செப்பம்’ என்றும், [8] ‘பாவியேனேப் பலநீ காட்டிப் படுப்பாயோ?’ என்றும் மற்றைப் புருஷார்த்தங்களேப் பற்றிப் பேசும் போதில்தானே

---

1. *திருவிருத்தம்*, 60.

2. *ஸ்ரீராமா. அயோத்.* 53 : 31.

3. *இவ்வாழ்வார், பத்தியினுல் இறைவனேயே தாரகமாகக்கொண்டிருப்பவர் மாத்திரமல்லர்; தத்துவ ஸ்திதியும் அப்படியே என்கிருர், ‘எத்தேவர் வாலாட்டும்’ என்று தொடங்கி. இது, நான்முகன் திரு.* 38.

4. *திருவாய்மொழி*, 2. 3 : 7.

5. *ஸ்ரீராமா. அயோத்.* 31 : 5. *‘வானவர் நாடு’ என்பது, திருவாய்.* 3. 9 : 9.

6. *திருவாசிரியம்*, 2.

7. *திருவாய்மொழி*, 2. 9 : 1.

8. *திருவாய்மொழி*, 9. 6 : 9.

அஞ்சுகின்ற தன்மையருமாய் இருப்பார். [1] 'நான் சக்கரவர்த்தி யிடத்தில் தமப்பன் முறையைப் பார்க்கின்றிலேன்; எனக்கு ஸ்ரீ ராம பிரானே தமையனும் சுவாமியும் உறவும் தமப்பனுமாக இருக்கின்றான்' என்கிறபடியே, பெருமாளையே எல்லா உறவுமாகப் பற்றின இளைய பெருமாளைப் போன்று, இவரும் [2] 'சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாந் தாய் தந்தையும் அவரே' என்று பகவானே அடையத் தகுந்தவர் என்னும் உறுதியை முடிவாக உடையராய் இருப்பார். [3] 'நான் இரவு பகல் எந்நேரத்திலும் எல்லா அடிமைகளையும் உமக்குச் செய்வேன்; நீரோ, பிராட்டியோடு மலை அடிவாரங்களில் இன்புற்றிரும்,' என்று இளைய பெருமாள் எவ்வகைத் தொண்டுகளையும் செய்து அல்லது தரியாதது போன்று, இவரும், [4] 'ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்,' என்று எல்லா அடிமைகளும் செய்து அல்லது தரியாத தன்மையராய் இருப்பார்.

[5] 'ஓ ஜனார்த்தனரே, உம்முடைய கல்யாண குணங்களின் சேர்க்கையையும், விபூதி நியமனத்தையும் மீண்டும் விரிவாகக் கூறுக; ஏன் என்றால், உம்முடைய மாகாத்மியமாகிய அமிருதத்தைக் கேட்கும் எனக்குத் திருப்தி கிடையாது,' என்று கூறிய அருச்சுனனைப் போலவும், [6] 'சமீபத்தில் வருகிற ஸ்ரீ ராமபிரானைப் பார்த்துக்கொண்டேயிருந்தும் தசரத சக்கரவர்த்தி திருப்தி அடைந்திலன்,' என்று கூறப்படுகின்ற தசரத சக்கரவர்த்தியைப் போலவும், இவரும் காலம் என்னும் ஒரு பொருள் உள்ள வரையிலும் அநுபவித்தாலும் [7] 'அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆரா அமுதமே' என்னும்படி மேன்மேல் எனப் பெருகி வருகின்ற அமையாத காதலையுடையராய் இருப்பார்.

'நன்று; மேல் [8] 'இவர்க்கு ஒப்புச் சொல்லல் ஆவார் ஒருவரும் இலர்,' என்று கூறி, இங்குச் சிலரை ஒப்புச் சொல்லல்

---

1. ஸ்ரீராமா. அயோத். 58 : 31.
2. திருவாய்மொழி, 5. 1 : 8.
3. ஸ்ரீராமா. அயோத். 31 : 25.
4. திருவாய்மொழி, 3. 3 : 1.
5. ஸ்ரீ கீதை. 10 : 18.
6. ஸ்ரீராமா. அயோத், 3 : 29.
7. திருவாய்மொழி, 2. 5 : 4.
8. பக். 16 பார்க்க.

பொருந்துமோ?' எனின், [1] 'அறத்தின் உருவமாயும் சத்தியம் ஒழுக்கம் முதலியவற்றிற்குக் கொள்கலமாயும் சாதுக்களுக்கு எல்லாம் உவமானமாகச் சொல்லத் தக்கவனும் எவனொரு பிரகலாதன் இருந்தான்' என்று பிரகலாதனைச் சாதுக்களுக்கு எல்லாம் உவமைக்கு எல்லையாகச் சொல்லுவது போன்று, இவரும் தம்முடைய ஒவ்வொரு வகையாலே எல்லார்க்கும் உவமை சொல்லத் தக்கவராக இருப்பர் என்பதனைத் தெரிவித்தபடி.

[2] 'நான் பின் பிறந்த தம்பி; அவருடைய குணங்களால் அடிமையை அடைந்துள்ளேன்,' என்று குணங்களுக்குத் தோற்று அடிமை புக்க இளைய பெருமாளைப் போன்று, இவரும் பகவானுடைய குணங்களிலே தோற்று, [3] 'உயர்வற உயர்நலம் உடையவன் துயரறு சுடரடி தொழுது எழு என் மனனே,' என்கிறார்.

இப்படிப் பகவானுடைய சொரூப ரூப குண விபூதிகளை [4] விசத விசததர விசததமமாக அநுபவித்து அவ்வநுபவம் உள் அடங்காமை வழிந்து புறப்பட்ட சொற்கள் ஆம், இப்பிரபந்தங்கள்.

'இங்ஙனம் ஆயின், இப்பிரபந்தங்கள் [5] 'எழுத்து அசை சீர் பந்தம் அடி தொடை' இவற்றோடு கூடிய பாவும் பா இனங்களுமாக அமைந்த வகை யாங்ஙனம்?' எனில், பகவானுடைய திருவருள் அடியாகப் பிறந்த பிரபந்தங்கள் இவை ஆதலின், இவற்றில் கூடாதன

---

1. ஸ்ரீ விஷ்ணு புரா. 1. 15 : 15.

2. ஸ்ரீராமா. கிஷ். 4 : 12.

3. திருவாய்மொழி, 1. 1 : 1.

4. விசத விசததர விசததமம் - பரபத்தி. பரஞான பரமபத்திகள். விசதம் - தெளிவு; விசததரம் - மிக்க தெளிவு; விசததமம் - நனிமிகு தெளிவு. பரபத்தி - சேர்க்கையில் சுகமும் பிரிவில் துன்பமும்; பரஞானம் - தெளிவாக நேரே அறிதல்; பரமபத்தி - பிரிவில் இருப்பிற்கே கேடு உண்டாதல். ஆக, விசதம் முதலானவைகள், பரபத்தி முதலானவைகளின் காரியங்கள். ஆதலால், பரபத்தி பரஞானம் பரமபத்தி இவைகளால் அநுபவித்ததை, 'விசத விசததர விசததமமாக அநுபவித்து' என்கிறார்.

5. 'எந்தம் அடிகள் இணையடி ஏத்தி எழுத்து அசை சீர், பந்தம் அடி தொடை பா இனங் கூறுவன்,' என்பது யாப்பருங்கலக்காரிகை, 1.

இல்லை. சோக வேகத்தாலே பிறந்த [1] 'மா நிஷாத' என்னும் சுலோகமானது [2] 'மச்சந்தாதேவ' என்னும் சுலோகத்தின்படியே, அத்திக்காயில் அறுமான் போன்று, பகவானுடைய விபூதியில் ஒரு கூறனை பிரமனது திருவருளால் எல்லா இலக்கணங்களும் அமைந்த ஸ்ரீ ராமாயணமாகத் தோன்றியதை ஈண்டு நினைவு கூர்க.

'நன்று ; உலகத்துப் பல திறப்பட்ட நூல்களுள், இவை எவ் வினத்தைச் சார்ந்தவை? இவை பிறந்தபடி யாங்ஙனம்? இவற்றுக்கு மூலம் யாது? ஒன்றை மூலமாகக் கூறின், அதுவே மூலம் என்று அறியும்படி எங்ஙனம்? இவை பிரமாணம் என்று அறிவது எதனுல்? இவற்றில் கூறப்படும் தலைவன் யாவன்? இவற்றைக் கற்கைக்கு அதிகாரிகள் யாவர்? இவற்றிற்குப் [3] போக்தாக்கள் யாவர்? இவை எதற்காகச் செய்யப்பட்டன?' என்று கல்வி அறிவு இல்லாதார் சிலர்

---

1. *மா நிஷாத பிரதிஷ்டாம் த்வமாகம: ஶாஶ்வதீ: ஸமா:*
*யத் க்ரௌஞ்ச மிதுநாத் ஏகமவதீ: காமமோஹிதம்.*

(இ - ள்.) *'நிஷாத - ஓ வேடனே, த்வம் - நீ, யத் - யாதொரு காரணத்தால், கிரௌஞ்ச மிதுநாத் — இரண்டாகக் கூடியிருந்த அன்றிற் பறவைகளில், காமமோஹிதம் - காமத்தால் மோகத்தையடைந்த, ஏகம் - ஓர் ஆண் பறவையை, அவதீ: - கொன்ருயோ, (அதனுல்) ஶாஶ்வதீ: - நிலைத்திருக்கிற, ஸமா: - வருஷங்களில், பிரதிஷ்டாம் - இருப்பை, மாகம: - அடையமாட்டாய்' என்றவாறு.*

*இச்சுலோகத்திற்கு உட்பொருள்: 'மா நிஷாத - ஸ்ரீநிவாசனே, த்வம் - நீ, யத் - யாதொரு காரணத்தால், கிரௌஞ்ச மிதுநாத் - இருவராகக் கூடியிருந்த இராக்கதர்களான இராவண மண்டோதரி என்னும் இவர்களில், காம மோஹிதம் - ஆசையால் பீடிக்கப்பட்ட, ஏகம் - ஒருவனை (இராவணனை), அவதீ: — கொன்ருயோ, (அதனுல்) ஶாஶ்வதீ: ஸமா: - நிலைத்துள்ள வருஷங்களில், பிரதிஷ்டாம் — இருப்பை, அகம: - அடையக்கடவாய்' என்பது.*

2. *மச்சந்தா தேவ தே ப்ரஹமந் ப்ரவ்ருத்தேயம் ஸாஸ்வதீ*
*ராமஸ்ய சரிதம் ஸர்வம் குரு த்வம் ருஷிஸத்தம.*

*ஹே பிரஹமந் - ஒ முனிவனே, இயம் ஸாஸ்வதீ — 'மாநிஷாத' என்னும் இந்தச் சுலோகமானது, மச்சந்தா தேவ - என்னுடைய திருவருளால், தேப்ரவிருத்தா - உனக்கு உண்டாயிற்று, ஹே ருஷி ஸத்தம - முனிபுங்கவனே, த்வம் - நீ, ஸர்வம் ராம சரிதம் - இராமசரிதம் எல்லாவற்றையும், குரு - செய்வாய்.*

3. *போக்தாக்கள் - சப்த அர்த்த ரசிகர்கள். 'கேட்டு ஆரார் வானவர்கள்"* (10. 6 : 11.) *என்றும், 'தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன், அண்டத்து அமரர் பெருமான் அடியேனே'* (9. 4 : 9.) *என்றும் சொல்லுகையாலே, போக்கியதா புத்தியால் இழிந்து போக்தாக்களாய் இருக்குமவர்களையும் தனியே அருளிச்செய்கிருர்.*

கேட்க, 'இவை உறுதிப் பொருளை விளங்கக் கூறுகின்ற பிரபந்தங்களுள் முதன்மை பெற்ற பிரபந்தங்கள்; பகவானுடைய குணங்களை அநுபவித்தலால் உண்டான அளவில்லாத பெருமகிழ்ச்சியானது வலியச் சொல்லுவிக்கப் பிறந்தன; பகவானுடைய திருவருளால் உண்டான ஞானம் மூலமாகப் பிறந்தன; இதனை ஆங்கு ஆங்கு வருகின்ற [1] இவருடைய பாசுரங்களில் அமைந்துள்ள ஒலியாலும் சொல் விளக்கத்தாலும் அறியலாம்; வேதார்த்தங்களை அறிந்த பெரியார் பலரும் அங்கீகரிக்கையாலும் சம்சாரத்தில் உத்வேகம் பிறந்தார்க்கு அறியவேண்டிய வேதார்த்தங்களை இப்பிரபந்தங்களிலே காண்கையாலும் இவை மிகச்சிறந்த பிரமாணம் என்று அறியலாம்; எல்லாரும் சென்று யாவரினும் மேம்பட்டவன் என்று பற்றப்படுமவனை [2] திருமகள் கேள்வன் இப்பிரபந்தங்களுக்குத் தலைவன்; சம்சாரத்தில் ருசி அற்று எம்பெருமான் திருவடிகளிலே எத்தகைய அடிமைகளும் செய்ய வேண்டும் என்று இருக்குமவர் இவை கற்கைக்கு அதிகாரி; [3] முமுக்ஷுக்களும் முத்தரும் நித்தியரும எம்பெருமானும் இவற்றின் சுவையை அனுபவிக்கின்றவர்கள்; பகவானுக்குச் செய்யப்படும் கைங்கரியமாகிற நிரதிசய [4] புருஷார்த்தம் இன்னபடிப்பட்டு இருக்கும் என்று அறிவிக்கைக்காகப் பிறந்த பிரபந்தங்கள் இவை,' என்று [5] சிரோபாசித சத்விருத்தராய் இருந்த பெரியோர்கள் விடை பகர்ந்து நீக்கினார்கள்.

---

1. 'மயர்வு அற மதிநலம் அருளினன்', 'திருமாலால் அருளப்பட்ட', 'யானாய்த் தன்னைத் தான் பாடி', 'தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்' என்பன முதலானவைகளால் அறிக.

2. 'திருமாலவன் கவி' என வருதல் காண்க.

3 'தொண்டர்க்கு அமுது உண்ண' என்கையாலே முமுக்ஷுக்களும், 'கேட்டு ஆரார் வானவர்கள்' என்கையாலே முத்தரும், 'தென்னா என்னும் என் அம்மான் திருமாலிருஞ்சோலையானே' என்கையாலே எம்பெருமானும் போக்தாக்கள் என்பது பெறுதும்.

4. 'புருஷார்த்தம் இன்னபடிப்பட்டிருக்கும்' என்றது, 'தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே' (2. 9. 4.) என்றதனை நோக்கி.

5. சிரோபாசித சத்விருத்தர்—சத்விருத்தர்களைப் பல காலம் சேவித்த பெரியோர்கள். சத்விருத்தர் - ஞான ஒழுக்கச் சீலர்கள்.

[1] 'இப்பிரபந்தங்கள் தோன்றிய மொழியானது, வைதிக காரியங்கள் செய்யப்படும் காலங்களில் பேசத் தக்கது அன்று என்று விலக்கப்பட்ட மொழி ஆதலானும், இப்பிரபந்தங்களை வேதத்திற்கு உரியர் அல்லாதார் கற்கின்றமையைக் காண்கையாலும், இவை கலி காலத்தில் ஞானத்துக்கு அடைவு இல்லாத நான்காம் வருணத்தில் பிறந்தார் ஒருவராலே செய்யப்பட்டன ஆதலானும், இவை வேறு தேசங்களில் இன்றித் தமிழ்தேசத்தில் மட்டும் வழங்குகின்றன ஆதலானும், வேதத்திற்குப் புறம்பான மதத்தினரும் கற்கையாலும், சுருதி ஸ்மிருதிகளில் விலக்கப்பட்ட காம புருஷார்த்தத்தைப் பல இடங்களிலும் பேசுகையாலும், சுருதி ஸ்மிருதிகளில் உறுதிப் பொருள்களாகச் சொல்லப்படுகிற ஐஸ்வர்ய கைவல்யங்களைக் காற்கடைக் கொள்ளுகையாலும் இப்பிரபந்தங்கள் பிரமாணம் ஆக மாட்டா,' என்று வைதிக கோஷ்டியில் பழக்கம் இல்லாத அறிவு கேடர் சிலர் வந்து முரண்பட்டுப் பேச;

[2] வேறு மொழியில் பாடிய கைசிகன் முதலியோரைத் தன் நாட்டினின்றும் வெளியே போகச் செய்த அரசனைப் பார்த்து, [3] 'மக்களுள் உயர்ச்சி பெற்ற அரசனே, பிராமணன், திருமாலின் புகழினைத் தவிர, ஏனையோர் புகழை வேறு மொழியில் பாடக் கூடாது; அங்ஙனம் இருக்கவும், வேறு மொழியில் பாடியதைக் கொண்டு அவனை வெளியே போகச் செய்த காரணத்தால் நீ பாவம் செய்தவன் ஆனாய்,' என்று இயமன் கூறியதாக மச்சபுராணத்திலே கூறப்படுகின்றது; இக்கூற்றின்படியே, மொழி விலக்கு, பகவானுடைய புகழ்கட்கு இன்று; ஏனையோர் புகழ்கட்கே என்பது பெறப்படுகிறது ஆகையாலும், அவ்வாறு அன்றி, மொழி ஒன்றனையே கொண்டு விதி விலக்குகளை அங்கீகரிக்கில் வடமொழியிலுள்ள வேதத்திற்குப் புறம்பான நூல்களையும் நாம் கற்கவேண்டுமாதலானும், ஆழ்வார் தம்முடைய பேரருளின் மிகுதியாலே வேதத்திற்கு உரியர் அல்லாத பெண்களும் நான்காம் வருணத்தாரும் இழவாதபடி வேதார்த்தத்தைத்

1. பாஷை முதலான காரணங்களால் சில அறிவிலிகட்கு விசுவாசக் குறைவு பிறக்கும் என்று எண்ணி அவர்கட்கு ருசி விசுவாசங்கள் பிறக்கைக்காக, இப்பிரபந்தங்கள் சிறந்த பிரமாணங்கள் என்று இவற்றினுடைய பிராமாண்ய அதிசயத்தை ஆக்ஷேப சமாதான ரூபமாக அருளிச்செய்கிறார், 'இப்பிரபந்தங்கள் தோன்றிய மொழியானது' என்று தொடங்கி.

2. 'வேறு மொழியில் பாடிய கைசிகன்' என்றது முதல் 'முன்கூறியவற்றை மறுத்தார்கள்' என்றது முடிய, முற்கூறிய வினாக்களுக்கு விடை.

3. மச்ச புராணம்.

தமிழ் மொழியிலே அருளிச்செய்கையாலும், எம்பெருமான் தானே பல பிறவிகள் எதிர்சூழல் புக்குத் தொடர்ந்து பற்றுவதற்கு அடியான பாக்கியத்தை உடையவராய் எப்பொழுதும் பகவானுடைய திருவருளுக்குப் பாத்திரமானவருமாய்த் தத்துவ ஹிதங்களில் வல்லவராய் அவற்றினுடைய உபதேசத்திலும் மூண்டவராய் விதுரர் சபரி முதலானவர்களினும் வேறுபட்டவரான ஆழ்வார் பக்கலிலே இப் பிரபந்தங்கள் பிறக்கையாலும், இம்மொழி நடையாடுவதால் பெரியோர்கள் மிக்குள்ள நாடுகள் எங்கும் வழங்குவனவாய் வேறு தேசங்களிலே பிறந்து சிறப்பு வாய்ந்தவராய் உள்ள பெரியோரும் இவற்றின் வேறு ஒன்றற்கு இல்லாத சிறப்பைக் கேட்டு, ‘இவற்றைக் கற்கைக்குத் தகுதியாக இம்மொழி நடையாடுந்தேசத்திலே பிறக்கப் பெற்றிலோமே!’ என்று இருக்கையாலும், இவற்றின் நன்மையினைக் கண்டு வேதார்த்த ஞானத்துக்கு அடைவு இல்லாத புறமதத்தாரும் கற்றல் இவற்றின் சிறப்பிற்கே காரணமாதலானும், [1] வேதனம் என்றும் [2] உபாசனம் என்றும் உபநிடதங்களில் சொல்லப்படுகிற பக்தியை இவற்றில் காமம் ஆகச் சொல்லுகையாலும், ஐஸ்வர்ய கைவல்யங்களைப் பழித்தது. சிறியது நிலையற்றது முதலிய குற்றங்களாலே ஆதலானும், இவற்றில் சொல்லப்படுகின்ற எம்பெருமானுடைய மாகாத்மியத்தாலும், எம்பெருமானை உள்ளங்கை நெல்லிக் கனி போன்று அறியலாம்படி கூறுகையாலும், பக்தியைத் தோற்றுவிக்கின்றவைகள் ஆதலானும், தோன்றிய பக்தியை மேன்மேலும் வளரச் செய்வன ஆதலானும், கேட்டல் கற்றல் செய்யும் அப்போதே எல்லை அற்ற பிரீதியை உண்டாக்குகின்றவைகள் ஆதலானும், இவற்றிற்சொல்லுகிற அர்த்தங்களுக்கு வேதங்களில் பல இடங்களையும் சான்றுகச் சொல்லுகையாலும், உலகின் தோற்றத்திற்கு இறைவனையே காரணமாகக் கூறுவதாலும், இறைவனை அறியும் அறிவாலேயே மோக்ஷம் உண்டாம் என்று சொல்லுகையாலும், உறுதிப்பொருள்களைக் கூறுகின்ற பிரபந்தங்களுள் மிக்க உறுதி வாய்ந்த பிரமாணங்களாகக் கூறி, வேதநெறி நின்ற வித்தகர்கள் முன் கூறியவற்றை மறுத்தார்கள்.

‘நன்று; பகவானுடைய திருவருளால் அவனை அநுபவித்து நிறைவுற்றவராய் இருக்கிற இவர்க்கு எம்பெருமானைப் பிரிகையும், பிரிவாலே நோவுபட்டுக் கூப்பிடுகையும் வந்தவாறு யாங்ஙனம்?’

---

1. வேதனம் - *அறிதல்*

2. உபாசனம் - *வழிபாடு*

என்னில், இறைவனுடைய ஒவ்வொரு குணத்தைத் தனித்தனியே அநுபவித்தால் அநுபவித்த குணங்களில் உண்டான மிகக விருப்பம், [1] 'எவன் ஒருவன் இறைவனிடத்தில் மிக்க பக்தியினையுடையவனாக இருக்கின்றானோ அவன் மற்றைப் பொருள்களில் வைராக்கியத்தை உடையவனாக இருக்கின்றான்,' என்றும், [2] 'மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு' என்றும் சொல்லுகிறபடியே, சிற்றின்ப விஷயங்களில் வைராக்கியத்தைப் பிறப்பித்து, இறைவனுடைய மற்றைக் குணங்களிலே ஆசையையும் பிறப்பிக்கும்; பின்னர், அக் குணங்களில் முறையாக அநுபவிப்போம் என்ற எண்ணம் பொருந் தாது; யாதொரு போது ஆசை மிக்கது, அப்போதே ஆசைப்பட்ட பொருள் கிடையாமையாலும், பகவானுடைய அநுபவத்திற்கு விரோதியான சரீரசம்பந்தத்தின் நினைவு முதலியவைகளாலும் பகவானிடத்தில் அநுபவித்த பகுதியையும் இழந்து, [3] 'எந்நாள் யான் உன்னை இனி வந்து கூடுவேன்?' என்றும் [4] 'பல நீ காட்டிப் படுப்பாயோ?' என்றும், [5] 'போர வைத்தாய் புறமே' என்றும். [6] 'கூவிக் கொள்ளுங் காலம் இன்னங்குறுகாதோ' என்றும் கூப்பிடா நிற்பர். அவனை அநுபவிக்கப் புக்கால், [7] 'அடியேன் அடைந்தேன் முதன்முன்னமே' என்றும், [8] 'பருகிக் களித்தேனே' என்றும், [9] 'உண்டு களித்தேற்கு உம்பர் என் குறை' என்றும், [10] 'தொண்டீர் எல்லீரும் வாரீர் தொழுது தொழுது நின்று ஆர்த்தும்' என்றும், [11] 'எமர் கீழ் மேல் ஏழ் எழு பிறப்பும், மா சதிர் இது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா' என்றும் தாமும் தம்முடைய சம்பந்தி சம்பந்திகளுமாகக் கூடக்களிப்பர். இப்படிப் பல குணங்களை யுடையனான எம்பெருமான் பக்கலிலே எல்லையற்ற பக்தியை யுடையராய், அவனுடைய சேர்க்கை பிரிவு இவற்றில் ஒத்த இன்ப

1. *பார்ஹஸ்பத்ய ஸ்மிருதி.*
2. *மூன்றாந் திருவந்*, 14.
3. *திருவாய்மொழி*, 3. 2 : 1.
4. *திருவாய்மொழி*, 6. 9 : 9.
5. *திருவாய்மொழி*, 5. 1 : 5.
6. *திருவாய்மொழி*, 6. 9 : 9.
7. *திருவாய்மொழி*, 2. 3 : 6.
8. *திருவாய்மொழி*, 2. 3 : 9.
9. *திருவாய்மொழி*, 10. 8 : 7.
10. *திருவாய்மொழி*, 5. 2 : 2.
11. *திருவாய்மொழி*, 2. 7 : 1.

துன்பங்களையுை..யராய், அவனை அல்லது அறியாதபடியாய் இருக்கிற இவர். டகவானை அநுபவிக்கும் சுகம் மிக்க போது மற்றைப் பொருள்களும் எல்லாம் தம்மைப் போன்றே எம்பெருமானைப் பெற்றுச் சுகிக்கின்றனவாகவும், பிரிவு என்று ஒரு வகை உண்டு என்றும் அறியாமல், உலக நடப்பினைப் போன்றே மறந்திருப்பார்; பிரிவின் துயரம் மிக்கால், புணர்ச்சி இன்பம் உண்டு என்றும் அறியாமல் மற்றைப் பொருள்களும் எல்லாம் தம்மைப் போன்றே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகின்றனவாகக் கொண்டு, [1] 'நீயும் திருமாலால் நெஞ்சங்கோட் பட்டாயே' இன்னோன்ன பாசுரங்களாலே அவற்றுக்குமாகத்தாம் நோவுபடாநிற்பர். ஆக, இவர்க்கு இன்ப துன்பங்கள் ஒரு காலும் முடியாமல் மாறிமாறி உண்டாய் இருக்கையாலே இவர்க்கு [2] சிந்தயந்தியின்படி நித்தியமாய்ச் செல்லுகையால் **நம் முதலிகள்** இவரைத் '**தீர்க்க சிந்தயந்தி**' என்று அருளிச் செய்வர்கள்.

'நன்று; ஆயின், சேதநர்கட்குப் பெண்கள் சோறு தண்ணீர் முதலியவைகளே [3] நிலைத்து இருக்கச்செய்வனவாயும் வளரச் செய்வனவாயும் நுகரப்படுவனவாயும் செல்லாநிற்க, இவர் பகவானுடைய குணங்களாலேயே தரித்து இருப்பவர் என்னுதல் கூடுமோ?' என்னில், திருவயோத்தியிலும் கோசல நாட்டிலும் உள்ள நிலையியற் பொருள் இயங்கியற்பொருள்கள் அனைத்தும் ஸ்ரீ ராமபிரானுடைய குணங்களையே நுகர்ந்து அதனாலேயே தரித்திருந்தன என்று ஸ்ரீ ராமாயணம் கூறுகின்றது ஆதலான், இதுவும் பொருந்தும் என்க.

இப்படி இருக்கிற இவர்க்கு எம்பெருமானோடு சேர்க்கையாவது, நேரிற்கண்டாற்போன்று அறிவினாற்காண்டல். பிரிவாவது, புறக் கண்களால் காணல் வேண்டும் என்று விரும்பி அது பெறாமையாலே மனத்தின் அநுபவத்துக்கு வந்த கலக்கம். 'முற்றறிவினனாய் வரம்பில் ஆற்றலுடையவனாய் எல்லாரையும் நியமிக்கின்றவனாய் எல்லையற்ற அருட்பெருங்கடலாய் இருக்கும் எம்பெருமான், இவருடைய அநுபவத்தை முடிய நடத்தாதே, இவ்வநுபவத்தைப் பிரித்ததற்குப் பயன் என்?' என்னில், திருவயோத்தியிலும் கிருஷ்ணவ

1. *திருவாய்மொழி*, 2. 1 : 1.

2. *36-ஆம் பாசுரம் வியாக்கியானம் பார்க்க.*

3. *தாரக போஷக போக்கியங்கள்.*

தாரத்தில் [1] திருக்குரவையிலும் பிரிந்த பிரிவு போன்று, இவர்க்கு [2] அநுபவித்த குணங்களைப் பொறுப்பித்தலும், [3] மேன்மேலென வேட்கை பிறப்பித்தலும் பயன் ஆம். 'ஆயின் ஆழ்வார்க்குச் சோக மோகங்கள் உண்டாகக் காரணம் யாது?' எனின், எம்பெருமான் பக்கல் பிறந்த காதல் முதிர்ந்து நினைத்தபடி பெருமற்போனவாறே சோக மோகங்கள் பிறந்தன. [4] இப்படியுள்ள சேர்க்கையாலும் பிரிவாலும் ஆழ்வார்க்கு வந்த நிலையே [5] அந்யாபதேசப் பேச்சைப் பேசுவித்தது.

இப்பிரபந்தங்களிலுள்ள ஸ்ரீ சூக்திகளுள் [6] சில, அடையத் தக்கவனை எம்பெருமானுடைய சொரூபத்தை எடுத்து விளக்குவன வாக இருக்கும்; [7] சில, அடைகின்ற ஆத்துமாவின் விஷயமாக

---

1. *குரவை என்றது, காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கை பிணைத்தாடுவது. 'குரவை என்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலும், எய்த உரைக்கு மியல்பிற் றென்ப,' எனவும், 'குரவை என்பது எழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோத்து, அந் நிலைக்கொப்பநின் ருடலாகும்', எனவும் சொன்னாராகலின். இதுவும் ஆய்ச்சியரிடத்து நிகழ்தலான் ஆய்ச்சியர் குரவையெனக் கூத்தாற்பெற்ற பெயர் என்பர் அடியார்க்கு நல்லார். (சிலப். பதிகம்).*

2. *'ஆற்ற நல்ல வகைகள் காட்டும் அம்மானே' என்ற திருப்பாசுரப் பகுதியை நோக்கி, 'அநுபவித்த குணங்களைப் பொறுப்பித்தலும்' என்கிறார்.*

3. *'காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி நங்கண்ணன்' என்னும் பகுதியை நோக்கி, 'மேன்மேலென வேட்கை பிறப்பித்தலும்' என்கிறார்.*

4. *இவ்வாறு உண்டாகும் சேர்க்கையும் பிரிவுமே காரணங்கள், ஆழ்வார் அகப்பொருள் துறைகள் அமைந்த பாசுரங்கள் பாடுதற்கு என்பதனைத் தெரிவிக்கிறார், 'இப்படியுள்ள சேர்க்கையாலும்' என்று தொடங்கும் வாக்கியத்தால்.*

5. *அந்யாபதேசம் - உள்ளுறையல்லாத வெளிப்படைப்பொருள். சேர்க்கையால் அந்யாபதேசம், 'கருமாணிக்கமலை', 'வேய்மருதோளிணை' என்பவை முதலான திருப்பதிகங்கள். பிரிவால் அந்யாபதேசம், 'அஞ் சிறைய மடநாராய்' என்றது முதலான திருப்பதிகங்கள்.*

6. *'சில' என்றது, 'உயர்வற', 'திண்ணன் வீடு', 'அணைவது', 'ஒன்றுந்தேவும்' என்னும் நான்கு திருப்பதிகங்களை.*

7. *'சில' என்றது, 'பயிலுஞ்சுடரொளி', 'ஏறாளும் இறையோனும்', 'கண்கள் சிவந்து', 'கருமாணிக்கம்' என்னும் நான்கு திருப் பதிகங்களை.*

இருக்கும் ; [1] சில, அடையும் வழியினைச் சொல்லும் ; [2] சில, பலத்தைச் சொல்லும் ; [3] சில, அடைவதற்குத் தடையாக இருப்பன வற்றைச் சொல்லும் ; [4] ஏனைய திருப்பாசுரங்கள் இவற்றை விளக்கிக் கூறுவனவாக இருக்கும். ‘ ஆயின், மேல், ‘ உறுதிப்பொருளைக்கூறும் பிரபந்தங்களில் முதன்மை பெற்ற பிரபந்தங்கள் ’ என்று கூறி வைத்து, இங்கு ‘ ஐம்பொருள்களைக் கூறுகின்றன ’ என்று கூறல் முரண் ஆகாதோ ?’ எனின், ஆகாது ; இவற்றில் [5] உத்தேசியம், பலம் ; அதன்பொருட்டு மற்றும் உள்ள நான்கு பொருள்களும் கூறப் படுகின்றனவாதலின்.

இவற்றுள், முதல் பிரபந்தமான திருவிருத்தத்தில், [6] எம்பெரு மானை அநுபவிப்பதற்கு விரோதியான சம்சார சம்பந்தத்தை அறுத்துத் தந்தருள வேண்டும் என்று விரும்புகிறார். திருவாசிரி யத்தில், [7] முத்தர்கட்கு இனிமையான தன்னுடைய வடிவழகைக் கலம்பக நன்மாலையைப் பணியாக எடுத்துக்காட்டுமாறு போன்று

---

1. ‘ சில ’ என்றது, ‘நோற்றநோன்பு’, ‘ஆராவமுதே’, ‘ மானேய் நோக்கு’, ‘ பிறந்தவாறும் ’ என்னும் நான்கு திருப்பதிகங்களை.

2. ‘ சில ’ என்றது, ‘எம் மா வீடு’, ‘ ஒழிவில் காலம்’, ‘ நெடுமாற் கடிமை ’, ‘ வேய்மரு ’ என்னும் நான்கு திருப்பதிகங்களையும்.

3. ‘ சில ’ என்றது, ‘ வீடுமின் முற்றவும்’, ‘ சொன்னால் விரோதம்’, ‘ ஒரு நாயகமாய் ’, ‘ கொண்ட பெண்டிர் ’ என்னும் நான்கு திருப்பதி கங்களையும்.

4. ‘ ஏனைய ’ என்றது, மற்றை எண்பது திருப்பதிகங்களையும்.

5. ‘உத்தேசியம், பலம்’ என்றது, கைங்கரியத்தை.‘அதன்பொருட்டு மற்றும் உள்ள நான்கு பொருள்களும் கூறப்படுகின்றன ’ என்றது, கைங் கரியத்தைச் செய்யும் ஆன்மாவின் தன்மையும், செய்யப்படுகின்ற இறைவன் தன்மையும், செய்யும் வழியின் தன்மையும், அதற்குத் தடை களாக உள்ளவற்றின் தன்மையும் கூறவேண்டியிருத்தலின், கூறப்படு கின்றன என்றவாறு.

6. ‘ இங்கின்ற நீர்மை இனி யாம் உறாமை ’ என்று தொடங்கி, ‘ அழுந்தார் பிறப்பாம், பொல்லா அருவினை மாய வன்சேற்று அள்ளல் பொய்ந்நிலத்தே ’ என்று முடித்து, முதலிலும் முடிவிலும் சரீர சம்பந்தத்தின் நீக்கத்தை அருளிச்செய்கையால் இதுவே திருவிருத்தத் துக்கு முக்கியக் கருத்தாம்.

7. ‘ செக்கர் மா முகிலுடுத்து ’ என்ற திருப்பாசுரத்தை நோக்கி, இங்ஙனம் அருளிச்செய்கிறார். ‘ வடிவழகை ’ என்கிற இடத்தில் அவயவ சௌந்தரியமும், ஆபரண சௌந்தரியமும் கொள்க. கலம்பக நன்மாலை - பலவகைப் பூக்களால் தொடுத்த அழகிய மாலை. பணியாக – வகுப்பாக ; இனிமையாக என்றபடி.

காட்டிக்கொடுக்கக் கண்டு பூர்ணமாக அநுபவித்தார். பெரிய திருவந்தாதியால், [1] எல்லை அற்ற இனியனை எம்பெருமானை அநுபவிக்கையாலே அதற்குத் தகுதியாக வேட்கை பிறந்து, வேட்கைக்குத் தகுதியாகப் பேசியும் நினைந்தும் தரிக்கிறார். திருவாய்மொழியில், [2] இவருடைய வேட்கைக்குத் தகுதியாக, திருமகள்

---

1. 'நற்பூவைப்பூ என்ற வண்ணன்' என்பது போன்றவைகளை நினைத்து, 'எல்லை அற்ற இனியனை எம்பெருமானை' என்கிறார். 'அநுபவிக்கையாலே' என்றது, 'அநுபவித்துப் பிரிகையாலே' என்றபடி. 'அன்பே, பெருகும் மிக' என்றதனை நோக்கி, 'அதற்குத் தகுதியாக வேட்கை பிறந்து' என்கிறார். 'நாவீன் தொடைக்கிளவி யுட்பொதிவோம், இயற்றுவாய் எம்மொடு நீ கூடி' என்றும், 'எத்த முயல்' என்றும், 'நீகதியா நெஞ்சே நினை' என்றும் வருவனவற்றை நோக்கிப் 'பேசியும் நினைந்தும் தரிக்கிறார்' என்கிறார்.

2. 'இவருடைய வேட்கைக்குத் தகுதியாக' என்பது முதல் 'எம்பெருமானைப் பெற்று முடிக்கிறார்' என்றது முடிய, இத்திருவாய்மொழியின் முதல் நூறு பாசுரங்களின் கருத்தைச் சுருங்க அருளிச்செய்து, அக்கருத்தை 'அவா அற்று வீடுபெற்ற' என்ற ஈற்றுப்பாசுரத்தோடு சேர்த்து முடிக்கிறார்.

இங்கு, 'இவருடைய வேட்கைக்குத் தகுதியாக' என்பதனைப் பின் வருகின்ற 'நிர்ஹேதுகமாகக் காட்டியருளக் கண்டு' என்றதனோடு முடிக்க. 'திருமகள் கேள்வனாய்' என்றது முதல் 'வேறுபட்ட சாதியனுமாய் இருந்து வைத்து' என்றது முடிய, இறைவனுடைய பரத்துவத்தை அருளிச்செய்கிறார். 'அடியார்களிடத்து உள்ள' என்றது முதல் 'தன்மையனுமாய்' என்றது முடிய, அவதாரத்தை அருளிச்செய்கிறார். வாத்ஸல்யம் - பசுவிற்குத் தன் கன்றினிடத்தில் தோன்றும் அன்பு. அதாவது, தோஷங்களைக் குணமாகக் கொள்ளுதற்கு ஏற்றதொரு தன்மை: வத்ஸம்-கன்று. 'தன்னுடைய அவதாரங்களிலும்' என்றது முதல் 'கோயில்களிலே வந்து நின்றருளியும்' என்றது முடிய, அர்ச்சாவதாரத்தை அருளிச்செய்கிறார். 'இழக்க வேண்டாதபடி' என்பதனைப் பின் வருகின்ற 'கோயில்களிலே வந்து நின்றருளியும்' என்பதனோடு முடிக்க. 'இப்படியுள்ள சர்வேஸ்வரனுந்தன்மைக்கு ஏகாந்தமான படிகளால் பரிபூர்ணனை எம்பெருமான்' என்றும், 'இப்படியுள்ள அடியார்கட்குத் திருவருள் புரிதற்கு ஏகாந்தமான படிகளால் பரிபூர்ணனை எம்பெருமான்' என்றும் தனித்தனியே கூட்டுக. 'திருமகள் கேள்வனாய்' என்றது முதல் 'வேறுபட்ட சாதியனுமாய் இருந்துவைத்து' என்றது முடிய, சர்வேஸ்வரனுந் தன்மைக்கு ஏகாந்தமானபடிகள். 'அடியார்களிடத்து' என்றது முதல் 'கோயில்களிலே வந்து நின்றருளியும்' என்றது முடிய, அடியார்கட்குத் திருவருள் புரிதற்கு ஏகாந்தமான படிகள்.

இனி, இத்திருவாய்மொழியில் வந்துள்ள 'உளன் சுடர்மிகு சுருதியுள்' என்றதனை நோக்கித் 'திருமகள் கேள்வனாய்' என்கிறார். 'நலமுடையவன்' என்றதனை நோக்கிச் 'சமஸ்த கல்யாண குணாத்மகனாய்'

கேள்வனுய்ச் சமஸ்த கல்யாணகுணுத்மகனுய்த் தனக்குத் தகுதியான திவ்விய தேகத்தையுடையனுமாய்த் திவ்விய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனுமாய்ச் சங்க சக்கரம் முதலிய திவ்விய ஆயுதங்களைத் தரித்தவனுமாய்ப் பரமபதத்திலே ஆனந்தமயமான திவ்விய ஆஸ்தான இரத்தின மண்டபத்திலே பெரிய பிராட்டியாரும் தானும் பிராட்டிமாருங்கூடத்திவ்விய சிம்மாசனத்திலே ஏழுலகுந் தனிக்கோல் செல்ல வீற்றிருந்தருளி, அஞ்சத்தகாத இடத்திலும் அச்சத்தால் ஐயுறுகின்ற அயர்வறும் அமரர்களாலே எப்பொழுதும் தொண்டு செய்யப்படுகின்ற திருவடித்தாமரைகளையுடையனுய்க் கொண்டு, அங்கு அங்ஙனம் சென்றுகொண்டிருக்க, தன் நினைவாலே மாத்திரம் ஏற்படுகின்ற சொரூபம் ஸ்திதி தொழில் நடத்தல் நடவாமைகளையுடைய தன்னின் வேறுபட்ட எல்லாப்பொருள்களும் தனக்குச் சரீரமாகையாலே அவற்றை அடிமையாக உடையனுய், உயிர்க்கு உயிராக இருப்பதனுல் அறிவுப்பொருள் அறிவில்பொருள்களை வியாபித்து அவ்வப்பொருள்களின் குற்றங்களால் தீண்டப்படாமல் இருப்பவனுய், நாராயணன் முதலான பெயர்களைத் தனக்குப் பெயராக உடையனுய், இப்படிப்பட்டவனுக 'உளன் சுடர்மிகு சுருதியுள்' என்கிறபடியே உபநிடதங்களால் அறுதியிடப்பட்ட பொருளனுமாய் இப்படி வேறுபட்ட சாதியனுமாய் இருந்து வைத்து

---

*என்கிருர். 'சுடரடி' என்றதனை நோக்கித் 'திவ்விய தேகத்தையுடையனுமாய்' என்கிருர். 'அந்தாமத்தன்பு' என்ற திருப்பதிகத்தை நோக்கித் 'திவ்விய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனுமாய்' என்கிருர். 'சங்கு வில் வாள் தண்டு சக்கரக் கையற்கு' என்றதனை நோக்கிச் 'சங்க சக்கரம் முதலிய திவ்விய ஆயுதங்களைத் தரித்தவனுமாய்' என்கிருர். 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்றதனை நோக்கிப் 'பரமபதத்திலே......வீற்றிருந்தருளி' என்கிருர். 'மற்று அமரர் ஆட்செய்வார்' என்றதனை நோக்கி, 'அஞ்சத் தகாத இடத்திலும்...திருவடித்தாமரைகளையுடையனுய் என்கிருர். முதல் திருப்பதிகத்தில் 'நாமவன்', 'அவரவர்', 'நின்றனர்' என்ற பாசுரங்களை நோக்கித் 'தன் நினைவாலே மாத்திரம்......எல்லாப் பொருள்களும்' என்கிருர். 'உடல்மிசை உயிர் என' என்றதனை நோக்கி, 'எல்லாப் பொருள்களும் தனக்குச் சரீரமாகையாலே அவற்றை அடிமையாகவுடைய' என்கிருர். 'புலனெடு புலனலன்' என்றதனை நோக்கி 'உயிருக்கு உயிராக இருப்பதனுல்...தீண்டப்படாமலிருப்பவனுய்' என்கிருர். 'வண்புகழ் நாரணன்' என்றதனை நோக்கி, 'நாராயணன் முதலான பெயர்களைத் தனக்குப் பெயராக உடையனுய்' என்கிருர். 'அளி பொறையாய் நின்ற பரன்' என்றதனை நோக்கி, 'இப்படி வேறுபட்ட சாதியனுமாய் இருந்து வைத்து' என்கிருர்.*

அடியார்களிடத்துள்ள வாத்சல்யத்தாலும் தன்னுடைய மேலான திருவருளாலும் தேவ மனித முதலான சாதியினனாய் வந்து [1] திருவவதாரம் செய்யும் தன்மையனுமாய், தன்னுடைய அவதாரத்திலும் உதவப் பெறாத கருவிலே திருவிலாதாரும் இழக்கவேண்டியபடி எல்லாக்குற்றங்களையும் பொறுக்கின்றவனாய், பத்திரம் புஷ்பம் முதலியவைகளால் எளிய முறையில் ஆராதிக்கப்படுகின்றவனாய், அடியார்கட்கு மிகவும் பரதந்திரனாய், அவர்களுடைய விருப்பத்துக்குத் தகுதியான உணவு படுக்கை முதலியவைகளையுடையனாய், எல்லாநற்குணங்களாலும் நிறைவுற்றவனான தானே, அடியார்கட்கு எளியவன் ஆவதற்காகக் கோயில்களிலே வந்து நின்றருளியும், இப்படியுள்ள சர்வேஶ்வரனாந் தன்மைக்கும் அடியார்கட்குத் திருவருள் புரிதற்கும் ஏகாந்தமான படிகளால் பரிபூரணனான எம்பெருமான், [2] தன்னை நிர்ஹேதுகமாகக் காட்டியருளக் கண்டு அநுபவித்துத் தம்முடைய உலகவாழ்க்கைத் தொடர்பாகிற தடை நீங்கி எம்பெருமானைப் பெற்று முடிக்கிறார்.

இனிச் சொல்லவேண்டுமவை எல்லாம் அவ்வத்திருவாய்மொழிகள்தோறும் கூறுதும் : ஆங்காங்குக் கண்டுகொள்வது.

இனி, [3] முதல் திருவாய்மொழியில் கூறப்படும் பொருளாவது, பல வித இரத்தினங்களால் நிறைவுற்றதாய் அளவிட முடியாததான

---

*1. 'பத்துடை அடியவர்க்கு' என்ற திருப்பதிகத்தை நோக்கித் 'திரு அவதாரம் செய்யுந்தன்மையனுமாய்' என்கிறார். 'அஞ்சிறைய மடநாராய்' என்ற திருப்பதிகத்தை நோக்கி, 'எல்லாக் குற்றங்களையும் பொறுக்கின்றவனாய்' என்கிறார். 'பரிவதில் ஈசனும்' என்ற திருப்பதிகத்தை நோக்கிப் 'பத்திரம் புஷ்பம் முதலியவைகளாலே எளியமுறையில் ஆராதிக்கப்படுகின்றவனாய்' என்கிறார். 'ஓடும் புள்ளேறி' என்ற திருப்பதிகத்தை நோக்கி 'அடியார்கட்கு மிகவும் பரதந்திரனாய்' என்கிறார். 'பொருமாநீள்படை' என்ற திருப்பதிகத்தில் 'நம்பியைத் தென்குறுங்குடி நின்ற' என்ற திருப்பாசுரத்தை நோக்கி, 'அவர்களுடைய ...கோயில்களிலே வந்து நின்றருளியும்' என்கிறார்.*

*2. 'வரலாறு ஒன்று இல்லையால்', 'வெறிதே அருள்செய்வர்' என்பனவற்றை நோக்கித் 'தன்னை நிர்ஹேதுகமாகக் காட்டியருளக் கண்டு' என்கிறார். 'என் அவா அறச் சூழ்ந்தாயே', 'அவா அற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன்' என்பனவற்றை நோக்கித் 'தம்முடைய உலக வாழ்க்கைத் தொடர்பாகிற தடை நீங்கி எம்பெருமானைப் பெற்று முடிக்கிறார்' என்கிறார்.*

*3. 'முதல் திருவாய்மொழியில்' என்றது, 'உயர்வற உயர்நலம்' என்று தொடங்கும் முதல் திருப்பதிகத்தை. முதற்பதிகமானது, திருவாய்மொழியாகிய இந்நூலின் சுருக்கம் என்று திருவுள்ளம்பற்றி அதற்குத் தக அருளிச்செய்கிறார் 'பலவித இரத்தினங்களால் நிறைவுற்றதாய்' என்று தொடங்கி.*

கடலை முந்துறத் திரளக் கண்டது போன்று, [1] சொரூப ரூப குண விபூதிகளால் நிறைந்தவனாய், எல்லாப்படியாலும் எல்லாரிலும் மேம்பட்டுச் சர்வேஶ்வரனாய், திருமகள் கேள்வனாகப் புருஷனால் செய்யப்படாததான மிக உறுதி வாய்ந்த சுருதிகளாலே எடுத்துக் கூறப்பட்டுள்ளவனாய் உள்ள எம்பெருமானைப் பாஹ்ய குத்ருஷ்டிகளால் அசைக்க முடியாதபடி அவன் திருவருளால் நேரே கண்டு அநுபவித்து, அவ்வநுபவத்தால் தோன்றின பிரீதி உள் அடங்காமை அநுபவித்தபடியே விபூதியோடு கூடினவனான எம்பெருமானைப் பேசி இத்தன்மையனானவன் திருவடிகளிலே அடிமை செய்து உய்வு பெறுவாய் என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார். [2] கடலைத் திரளக் கண்டான் ஒருவன் அதில் உண்டான முத்து மாணிக்கம் முதலானவைகளையும் தனித்தனியே காணுமாறு போன்று, முதல் திருவாய்மொழியிலே திரள அநுபவிக்கப்பட்ட எம்பெருமானுடைய குணங்களை [3] ஒவ்வொரு வகையிலே ஒவ்வொரு திருவாய்மொழியாக அருளிச்செய்கிறார் இரண்டாம் திருவாய்

---

1. *முதற்பாசுரத்தில் 'யவன்' என்றும், 'சுடரடி' என்றும், 'உயர்வற உயர்நலம்' என்றும், 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்றும் வருவனவற்றை நோக்கிச் 'சொரூப ரூப குண விபூதிகளால் நிறைந்தவனாய்' என்கிறார். 'மிகுநரை இலன்' என்றதனை நோக்கி, 'எல்லாப்படியாலும் எல்லாரிலும் மேம்பட்டு' என்கிறார். மூன்றாம் பாசுரம் முதலாக உள்ள நான்கு பாசுரங்களிலும் எல்லாப் பொருள்களினுடையவும் சொரூபம் ஸ்திதி முதலானவைகள் பகவானுக்கு அதீநப்பட்டவை என்று அருளிச்செய்கையால், அதனை நோக்கிச் 'சர்வேஶ்வரனாய்' என்கிறார். 'உளன் சுடர்மிகு சுருதியுள்' என்றதனை நோக்கித் 'திருமகள் கேள்வனாக ......எம்பெருமானை' என்கிறார். 'சுரரறிவருநிலை', 'உளன் எனில் உளன்' என்ற இரண்டு பாசுரங்களையும் நோக்கிப் 'பாஹ்ய குத்ருஷ்டிகளால் அசைக்க முடியாதபடி' என்கிறார். 'அளிபொறையாய் நின்ற பரன் அடி மேல்' என்றதனை நோக்கி 'விபூதியோடு கூடினவனான எம்பெருமானை' என்கிறார். 'தொழுது எழு' என்கையாலே, 'அடிமை செய்து உய்வு பெறுவாய்' என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்,' என்கிறார்.*

2. *'இறைவனுடைய சொரூப ரூப குணம் முதலானவைகளை முதல் திருப்பதிகத்திலேயே அருளிச்செய்தாராயின், மற்றைத் திருப்பதிகங்களில் கூறப்படும் பொருள் யாது?' என்னும் வினாவிற்கு விடையாகக் 'கடலைத் திரளக் கண்டான் ஒருவன்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.*

3. *'ஒவ்வொரு வகையிலே' என்றது, முதன்மை, வழிபடுந்தன்மை, எளிமை என்கிற ஒவ்வொரு வகையிலே என்றபடி.*

மொழி தொடங்கி மேலுள்ள திருவாய்மொழிகளில் எல்லாம். [1] இப்படிச் செய்தார் இவர் மாத்திரம் அல்லர் ; பாரத இராமாயணங்களைச் செய்த வியாச வான்மீகி முனி புங்கவர்களும் சுருக்கியும் விரித்தும் தங்கள் பிரபந்தங்களை இயற்றினர்கள்.

[2] **பரம்பொருளின் சொரூபம்**, எல்லாக் குற்றங்கட்கும் எதிர்த்தட்டாய் இருக்குந்தன்மையாலும் மங்களம் பொருந்திய நற்குணங்கட்கு எல்லாம் இருப்பிடனாய் இருக்குந்தன்மையாலும் தன்னின் வேறுபட்ட எல்லாப் பொருள்கட்கும் வேறுபட்டதாய், எங்கும் நிறைந்திருப்பதனால் இன்ன இடத்தில் இருப்பது என்று இடத்தால் அளவிட்டுக் கூற முடியாததாய், என்றும் உள்ளதாதலின், இன்ன காலத்தில் இருப்பது என்று காலத்தால் அளவிட்டுக் கூற முடியாததாய், எல்லாப் பொருள்களும் தனக்குச் சரீரமாகத் தான் ஆத்துமாவாய்த் தனக்கு வேறோர் ஆத்துமா இல்லாமையாலே ஒரு பொருளைக்கொண்டு அளவிட்டு அறிய முடியாததாய், ஞானனந்த மயமாய், ஞானம் பலம் ஐஸ்வரியம் சீலம் முதலான எல்லை இல்லாத நற்குணங்கட்கெல்லாம் பெருங்கடல் போன்றதாய் திருமகள் கேள்வனாய்த் தன்னின் வேறுபட்ட எல்லாப் பொருள்களையும் [3] வியாபிக்குமிடத்தில், பிரகிருதி சம்பந்தம் இல்லாததாய்ச் சுத்த சத்துவமயமாய்த் தனக்கே உரியதாய் மலரின் மலர்ச்சியினுடைய சுகுமாரதையையுடையதாய், தெய்வத்தன்மை பொருந்திய தனது நறுமணத்தால் நிறையப்பெற்ற எல்லை இல்லாத திசைகளையுடையதாய், எல்லார்க்கும் பற்றுக்கோடாய் இருக்கும் திவ்விய விக்கிரகத்தைப் போன்று வியாபித்துத் தரித்து நியமித்து, இப்படி எல்லாப்படியாலும் இரக்ஷகமாய்க் கொண்டு சேஷியாக இருக்கும்.

---

1. *'இப்படித் தொகுத்தும் விரித்தும் செய்தார் பிறரும் உளரோ?' என்னும் வினவிற்கு விடையாக, 'இப்படிச் செய்தார்' என்று தொடங்கும் வாக்கியத்தை அருளிச்செய்கிறார்.*

2. *முன்னர்ச் சுருங்கக் கூறிய தத்துவத் திரயத்தை மீண்டும் விவரிக்கத்திருவுள்ளம்பற்றி, முன்னர்ப் பரம்பொருளின் சொரூபத்தை விளக்கமாக அருளிச்செய்யாமையால், அதனை முந்துற அருளிச்செய்கிறார், 'பரம்பொருளின் சொரூபம்' என்று தொடங்கிச் 'சேஷியாக இருக்கும்' என்றது முடிய.*

3. *'வியாபிக்குமிடத்தில்' என்றதனைப் பின் வருகின்ற 'திவ்விய விக்கிரகத்தைப் போன்று வியாபித்து' என்னுமிடத்துள்ள 'வியாபித்து' என்றதனோடு இயைக்க. இடையில் 'பிரகிருதி சம்பந்தமில்லாததாய்' என்றது முதல் 'பற்றுக்கோடாய் இருக்கும்' என்றது முடிய உள்ளவை திவ்விய விக்கிரகத்துக்கு அடைமொழிகள்.*

**பிரகிருதியின் சொரூபம்,** [1] மகான் முதலான விகாரங்களை யுடையதாய், நித்தியமாய், முக்குணவடிவாய், வெண்மை கருமை செம்மை என்னும் இந்நிறங்களையுடையதாய், பெருந்திரளான பிரஜை களுக்கு உண்டாதற்கு இடமாய், எம்பெருமானுக்குச் சரீரம் ஆகை யால் சேஷமாய், சேதநர் கர்மங்கட்குத் தகுதியாக விரும்ப அவ்விருப் பத்திற்குத் தகுதியாகப் பகவானுடைய சங்கற்பத்தாலே இருபத்து நான்கு தத்துவங்களாய் விரிந்து விகாரப்படக்கூடியதாய் இப்படி எம்பெருமானுக்கு இஷ்ட விநியோகத்திற்குத் தகுதியாய் இருக்கும்.

**ஆத்ம சொரூபம்,** [2] அணுவளவாய், ஒளிப்பொருளாய், அறி வதாய், அறிவு ஆனந்த குணங்களையுடையதாய், நித்தியமாகையாலே காலத்தால் அளவிடக் கூடாததாய், அறிவுப் பொருளாகையாலே பொருள்களால் அளவிடக் கூடாததாய், இறைவனை விட்டுத்தனியே பிரிப்பதற்கும் தனியே குறித்துக் காட்டுவதற்கும் தகுதி அற்றதாய், இறைவனுக்கே அடிமைப்பட்டதாய், இறைவனுக்குத் தொண்டு செய்தலையே தனக்கு இன்பமாகக் கொள்ளக்கூடியதாய், எம்பெரு மானுக்கு மிகவும் பரதந்திரப்பட்டதாய் இருக்கும்.

---

1. *'மகான் முதலான விகாரங்களையுடையதாய்' என்றது முதல் 'இஷ்ட விநியோகத்திற்குத் தகுதியாக இருக்கும்' என்றது முடிய, அசித்தின் தன்மையை அருளிச்செய்கிறார். 'பகவானுடைய சங்கற்பத் தாலே இருபத்து நான்கு தத்துவங்களாக விரிந்து விகாரப்படக்கூடிய தாய்' என்ற இவ்விடத்தில், செவ்வைச்சூடுவார் இவற்றிய பாகவதம், சுகமுனி தத்துவமுரைத்த அத்தியாயம், 5 முதல் 11—ஆம் செய்யுள் முடிய உள்ள பாகத்தையும், பரிபாடல் மூன்றாம் பாடலில் 77 முதல் 80 முடிய வுள்ள அடிகளும், 'தத்துவம் இருபத்தைந்தனையும் தெரிதலாவது, மூலப்பகுதி ஒன்றில் தோன்றியது அன்மையின் பகுதியே ஆவதல்லது விகுதி ஆகாதெனவும், அதன்கண் தோன்றிய மானும் அதன்கண் தோன்றிய அகங்காரமும் அதன்கண் தோன்றிய தன் மாத்திரைகளும் ஆகிய ஏழும் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும் தங்கண் தோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலும் உடைய எனவும், அவற்றின்கண் தோன்றிய மனமும் ஞானேந்திரியங்களும் கர்மேந்திரி யங்களும் பூதங்களும் ஆகிய பதினாறும் தங்கண் தோன்றுவன இன்மை யின் விகுதியேயாவதல்லது பகுதியாகா எனவும் சாங்கிய நூலுள் ஓதிய வாற்றான் ஆராய்தல்' (குறள். 27.) என்ற பரிமேலழகர் உரையும் ஒப்பு நோக்கல் தகும்.*

2. *'அணு அளவாய் என்றது முதல் 'பரதந்திரப்பட்டதாயிருக்கும்' என்றது முடிய, ஆத்துமாவின் தன்மையை அருளிச்செய்கிறார்.*

[1] இவற்றை உள்ளபடி அறிவாருள் தலைவர் ஆவர் இவ்வாழ்வார்.

[2] 'இவ்வாழ்வார், திருவாய்மொழிப் பிரபந்தத்தால் செய்ததாயற்ற பொருள் எவை?' என்னில், [3] முதல் திருவாய்மொழியிலே 'உயர்வற உயர்நல முடையவன்' என்று தொடங்கி, 'உணர் முழு நலம் மிகுநரை இலன்', 'நிலனிடை விசும்பிடை உருவினன் அருவினன்', 'ஆமவை ஆயவை ஆய் நின்ற அவர்' என்று கூறிக்கொண்டு போந்து, 'கரவிசும்பு எரி வளி நீர் நில மிவைமிசை, வரன் நவில் திறல் வலி அளி பொறையாய் நின்ற பரன்' என்று முடிக்கையாலே, நாராயணனே பரம்பொருள் என்கைக்காக நாராயண சப்தத்தின் பொருளை அருளிச் செய்தார். [4]நாராயணன் என்னும் மொழியின் பொருள் எல்லாரிலும் மேம்பட்டிருத்தலும், எல்லா நற்பண்புகட்கும் உறைவிடமாய் இருத்தலும், நித்தியவிபூதி லீலாவிபூதி என்கிற இரண்டு உலகங்கட்கும் தலைவன் ஆதலுமேயாம். [5] 'ஒன்றும் தேவும்', 'திண்ணன்வீடு' என்னும் இவ்விரண்டு திருப்பதிகங்களும் இத்திருப்பதிகத்தின் பொருளை விரித்துப் பேசுவனவாம். இரண்டாந்திருப்பதிகத்திலே [6] இப்பொருளுக்கு வாசக

---

1. *தத்துவத்திரயத்தைப்பற்றி அருளிச்செய்து வந்தாராதலின், அவற்றின் ஞானத்திலே மேம்பட்டவர் ஆழ்வார் என்பதனை நினைப்பூட்டுகிறார். 'இவற்றை உள்ளபடி அறிவாருள் தலைவராவர் இவ்வாழ்வார்' என்று.*

2. *மேல் சுருங்கக் கூறிய அர்த்தபஞ்சகத்தை விவரிக்கிறார், 'இவ்வாழ்வார் திருவாய்மொழிப் பிரபந்தத்தால் செய்ததாயற்ற பொருள் எவை?' என்று தொடங்கி.*

3. *முதலில் பரம்பொருளின் சொரூபத்தை நிரூபிக்கக் கோலி 'அப்பரம்பொருளாகிறான் நாராயணன்,' என்கைக்காக, நாராயண சப்தார்த்தத்தை முதல் திருப்பதிகத்தில் அருளிச்செய்தார் என்று காட்டுகிறார், 'முதல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி.*

4. *'முதல் திருப்பதிகம் நாராயண சப்தார்த்தம் ஆயினவாறு யாங்ஙனம்?' என்னும் வினாவிற்கு விடையாக, 'நாராயணன் என்னும் மொழியின் பொருள்' என்றது முதல் 'தலைவன் ஆதலுமேயாம்' என்றது முடிய அருளிச்செய்கிறார்.*

5. *'ஆயின், 'திண்ணன் வீடு', 'ஒன்றும்தேவும்' என்ற திருப்பதிகங்களும் இப்பரத்துவத்தைப் பற்றியே பேசுகின்றனவே?' எனின், அவ்விரண்டும் இத்திருப்பதிகத்தின் பொருளை விரித்துப் பேசுகின்றன என்கிறார், 'ஒன்றும் தேவும்' என்று தொடங்கி.*

6. *'இப்பொருளுக்கு' என்றது, எல்லாரினும் மேம்பட்டிருத்தல் முதலான பொருளுக்கு என்றபடி.*

மான திருப்பெயரை [1] 'வண்புகழ் நாரணன்' என்று அருளிச் செய்தார். [2] வியாபக மந்திரங்களாகிய விஷ்ணு, வாசுதேவ மந்திரங்களும் இப்பொருளையே அறிவிக்கின்றனவாயினும், நாராயணன் என்னும் இத்திருப்பெயரே தம் திருவுள்ளத்திலே அறுதியிட்ட வாசகம் என்னும் ஆகாரம் தோற்ற. [3] 'செல்வ நாரணன்', [4] 'திருநாரணன்', [5] 'நாரணன் முழு ஏழ் உலகுக்கும் நாதன்', [6] 'காராயின காள நன்மேனியன் நாரணன்', [7] 'திண்ணம் நாரணம்.' என்று ஆதரித்துக்கொண்டு போந்து, [8] 'வாழ் புகழ் நாரணம்,' என்று [9] அர்ச்சிராதி கதியைப் பற்றிக் கூறுமிடத்தும் அருளிச்செய்து முடித்தமையால், இதுவே வாசகம் என்கிற நிர்ப்பந்தத்தை அருளிச்செய்தார்.

இனி, [10] 'மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்' என்று தொடங்கி [11] 'திருவுடை அடிகள்' என்றும், [12] 'மையகண்ணாள் மலர் மேல் உறைவாள் உறைமார்பினன்' என்றும், [13] 'நமக்கும் பூவின்

---

1. *திருவாய்.* 1. 2 : 10.

2. *'பொருளை மட்டும் கூறின் அமையாதோ ? மொழியையும் கூறல் வேண்டுமோ ?' என்னும் வினாவிற்கு விடையாக, 'வியாபக மந்திரங்களாகிய விஷ்ணு' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிறார். வியாபகம் - எங்கும் பரந்திருக்குந் தன்மை.*

3. *திருவாய்.* 1. 10 : 8.

4. *திருவாய்.* 4. 1 : 1.

5. *திருவாய்.* 2. 7 : 2.

6. *திருவாய்.* 9. 3 : 1.

7. *திருவாய்.* 10. 5 : 1.

8. *திருவாய்.* 10. 9 : 7.

9. *அர்ச்சிராதிகதி — அர்ச்சிஸ் என்ற தெய்வத்தை முதலாகக் கொண்ட கதி என்பது பொருள். கதி - வழி.*

10. *திருவாய்.* 1. 3 : 1. *பரம்பொருளின் உயர்வற உயர்ந்த முதன்மைக்குரிய காரணங்கள் பலவற்றுள், திருமகள்கேள்வனாய் இருத்தலும் ஒரு காரணமாதலின், அதனை அருளிச்செய்கிறார், 'மலர்மகள் விரும்பும்' என்றது முதல் 'பரம்பொருள் என்றும் அருளிச்செய்தார்' என்றது முடிய.*

11. *திருவாய்.* 1. 3 : 9.

12. *திருவாய்.* 4. 5 : 2.

13. *திருவாய்.* 4. 5 : 8.

மிசை நங்கைக்கும் இன்பன்' என்றும், [1] 'கோலத் திருமாமகளோடு உன்னைக் கூடாதே' என்றும் சொல்லிக்கொண்டு போந்து, [2] 'திரு ஆணை' என்றும், [3] 'கோலம் மலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பே' என்றும் முடிக்கையாலே, **திருமகள் கேள்வனான நாராயணனே பரம்பொருள்** என்றும் அருளிச்செய்தார். [4] இத்தால் நம் **ஆசாரியர்கள்** [5] இரஹஸ்யத்தில் இரண்டு பதங்களாலும் அருளிச் செய்துகொண்டு செல்லும் பொருளுக்கு அடி, இவ்வாழ்வாரே ஆவர் என்பது போதரும். இறைவனைப் பற்றுகின்ற காலத்தில் 'மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்' என்று தொடங்கி, போக வேளையிலே 'கோலம் மலர்ப் பாவைக்கு அன்பாகிய என் அன்பே' என்று சொல்லுகையாலே, பற்றும் வேளையோடு போக வேளையோடு வேற்றுமை அற ஒரு மிதுநமே உத்தேசியம் என்னுமிடம் அருளிச் செய்தார் ஆவர். ஆக, இவ்வகையில் பரம்பொருளின் சொரூபத்தை அறுதியிட்டார்.

**'பரம்பொருளின் சொரூபத்திற்கு எதிர்த்தொடர்புள்ள** [6] **தன் சொரூபம்** இருக்கும்படி என்?' என்னில், [7] 'உடல்மிசை உயிர் எனக்கரந்து எங்கும் பரந்துஉளன்' என்று சரீர ஆத்ம பாவத்தைத்

---

1. *திருவாய்.* 6. 3 : 9.

2. *திருவாய்.* 10. 10 : 2,

3. *திருவாய்.* 10. 10 : 7.

4. *இத்தால் - 'ஆழ்வார் அங்ஙனம் அருளிச்செய்தமையால்' என்றபடி. நம் ஆசாரியர்கள் என்றது, ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமாகவுள்ள பெருமக்களை.*

5. *இரகஸ்யம். துவயம் என்னும் மந்திரம். 'இரண்டு பதங்களாலும்' என்றது, 'ஸ்ரீமத், ஸ்ரீமதே' என்கிற பதங்களை. 'அருளிச்செய்யும் பொருள்' என்றது, முதல் பதத்தால் புருஷகாரமும், இரண்டாம் பதத்தால் பிராப்பியமும், 'நாளும் நம் திருவுடையடிகள்தம் நலங்கழல வணங்கி' என்ற இடத்தில் புருஷகாரமும், 'கோலத் திருமா மகளோடு உன்னைக் கூடாதே' என்ற இடத்தில் பிராப்பியமும் காண்க. பிராப்பியம்-அடையத்தக்கது, பேறு.*

6. *'தன்' என்றது - ஆன்மாவை.*

7. *'உடல்மிசை உயிர்என' என்றது முதல் 'பகவத்சேஷத்வமே சொரூபம் என்பதனை அருளிச்செய்தார்' என்றது முடிய, ஆன்மாவின் சொரூபத்தை அருளிச்செய்கிறார். 'உடல்மிசை உயிர்' - திருவாய்.* 1. 1: 7. *சரீர ஆத்துமபாவமாவது, இறைவனுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள ஒற்றுமை சரீரத்திற்கும் ஆத்துமாவிற்கும் உள்ள தன்மையைப் போன்றது என்பது, ஏழாம் பாசுரத்தின் வியாக்கியானத்திற்காண்க.*

தாம் சொல்லி, பிறர்க்கு உபதேசிக்கிற இடத்திலே [1]'உம் உயிர் வீடு உடையானிடை' என்று அந்தச் சரீர ஆத்ம பாவத்தையே உபதேசித்து, இந்தச் சரீர ஆத்ம பாவத்தால் பலிப்பது [2]'வேறு ஒருவர்க்கும் இன்றி இறைவனுக்கே அடிமையாக இருத்தல்' என்னும் இடத்தை [3]'தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே' என்றும், [4]'அடியேன் உள்ளான் உடல் உள்ளான்' என்றும் சொல்லி, இது அவனுக்கு அடிமை என்ற அளவிலே நிற்பது ஒன்று அன்று, அவன் அடியார்கட்கு அடிமை என்ற அளவிலும் சென்று சேர்தல் வேண்டும், அப்பொழுதுதான் அவனுக்கு அடிமையாதலும் கைகூடும் என்னும் இடத்தைப் [5]'பயிலும் சுடர்ஒளி', [6]'நெடுமாற்கு அடிமை' என்னும் திருவாய்மொழிகளிலே பரக்க அருளிச்செய்து, [7]'அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்றுகொலோ!' என்று பிரார்த்தித்து, பிரார்த்தித்தபடியே [8]'அடியரோடு இருந்தமை' என்று முடிக்கையாலே, பாகவதர்கட்கு அடிமைப்பட்டிருத்தலை எல்லையாகவுடைய பகவத்சேஷத்வமே சொரூபம் என்பதனை அருளிச் செய்தார்.

'சொரூபத்திற்கு ஏற்ற [9]புருஷார்த்தம் இருக்குமாறு யாங்ஙனம்?' என்னில், [10]'தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே' என்று தொடங்கி, [11]'வழுவிலா அடிமைசெய்ய வேண்டும் நாம்' என்றும், [12]'பணிமானம் பிழையாமே அடியேனைப் பணி கொண்ட' என்றும், [13]'முகப்பே கூவிப் பணிகொள்ளாய்' என்றும் இப்படி

1. திருவாய். 1. 2 : 1.
2. 'அநந்யார்ஹசேஷத்வம்' எனப்படும்.
3. திருவாய். 2. 9 : 4.
4. திருவாய். 8. 8 : 2.
5. திருவாய். 3. 7 : 1.
6. திருவாய். 8. 10 : 1.
7. திருவாய். 2. 3 : 10.
8. திருவாய். 10. 9 : 11.
9. புருஷார்த்தம் - புருஷனால் வேண்டப்படுவது; பலம். புருஷன் என்பதற்குச் 'சரீரத்தில் வசிப்பவன்' என்பது பொருள்.
10. திருவாய். 2. 9 : 4. 'தனக்கேயாக' என்றது முதல் 'தொண்டே புருஷார்த்தம்' என்றது முடிய, புருஷார்த்த சொரூபத்தை அருளிச் செய்கிறார்.
11. திருவாய். 3. 3 : 1.
12. திருவாய். 4. 8 : 2.
13. திருவாய். 8. 5 : 7.

களாலே அடிமையே புருஷார்த்தம் என்னுமிடத்தை அறுதியிட்டு, 'இவ்வடிமைதான் சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டது என்று செய்யுமது அன்று; சொரூபத்திற்குத் தக்கது என்றும் செய்யுமது அன்று; ஆகையாலே செய்யத் தக்கது,' என்பதனைத் தெரிவிப்பதற்காக, முதலிலே [1] 'உயர்வற உயர்நலமுடையவன்' என்று அடைவதற்கு உரிய குணங்களைச் சொல்லிச் [2] 'சுவையன் திருவின் மணாளன்' என்றும், [3] 'தூய அமுதைப் பருகிப் பருகி' என்றும் குணங்களோடு கூடிய பொருளினுடைய இனிமையையுஞ்சொல்லி, [4] 'அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆராவமுதம்' என்றும், [5] 'ஆரா அமுதே' என்றும், [6] 'ஆரா அமுது ஆனாயே' என்றும் நாடோறும் புதிது புதிதாக இருக்கும் இந்த இனிமையின் தன்மையைச் சொல்லி, [7] 'உகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன்' என்று குணங்களை அநுபவித்தலால் உண்டாகும் பிரீதியினால் செய்யப்படும் கைங்கரியமே புருஷார்த்தம் என்னுமிடத்தைச் சொல்லி, இதுதான் உயிர் உள்ள அளவும் உள்ளதான புருஷார்த்தம் என்கைக்காக, [8] 'ஈதே இன்னம் வேண்டுவது எந்தாய்' என்று முடிக்கையாலே பகவானுடைய குணங்களை அநுபவித்தால் உண்டாகும் பிரீதியாலே செய்யப்படும் தொண்டே புருஷார்த்தம் என்று அருளிச்செய்தார்.

'**இப்புருஷார்த்தத்துக்கு இடைச்சுவரான விரோதியின் தன்மை இருக்கும்படி என்?**' என்னில், [9] இரண்டாந்திருப்பதிகத்திலே 'வீடுமின் முற்றவும்' என்று கட்டடங்கச் சொல்லி, அவற்றையே மேல் மூன்று திருப்பதிகங்களாலே விரித்து அருளிச்செய்தார், 'அவை எவை?' என்னில், [10] 'சொன்னால் விரோதம்' என்ற

---

1. *திருவாய்.* 1. 1 : 1.
2. *திருவாய்.* 1. 9 : 1.
3. *திருவாய்.* 1. 7 : 3.
4. *திருவாய்.* 2. 5 : 4.
5. *திருவாய்.* 5. 8 : 1.
6. *திருவாய்.* 10. 10 : 5.
7. *திருவாய்.* 10. 8 : 10.
8. *திருவாய்.* 10. 8 : 10.
9. *'இரண்டாந் திருப்பதிகத்திலே' என்றது முதல் 'ஆகையால், புத்தித் தியாகமே தியாகம் என்றபடி' என்றது முடிய, விரோதியின் சொரூபத்தை அருளிச்செய்கிறார்.*
10. *திருவாய்.* 3 : 9.

திருப்பதிகத்திலே, ‘ பணியத் தகாதாரைப் பணிதல் விடத் தக்கது,’ என்றார் ; [1] ‘ ஒருநாயகமாய் ’ என்ற திருப்பதிகத்திலே, ‘ ஐஶ்வர்ய கைவல்யங்கள் விடத் தக்கன ,’ என்றார் ; [2] ‘ கொண்ட பெண்டிர் ’ என்ற திருப்பதிகத்திலே, ‘ சரீர சம்பந்தம் காரணமாக வருமவை விடத்தக்கன ,’ என்றார். ‘ நன்று ; சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட ஐஶ்வர்ய கைவல்யங்கள் புருஷார்த்தமாகத் தடை என் ?’ என்னில், பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திலே அதிகரித்தவனுக்கு ஐஶ்வர்யம் - [3] ஐங்கருவி கண்ட இன்பமாகையாலும், கைவல்யம் - தெரிவு அரிதாய் அளவு இறந்து இருந்ததேயாகிலும் பகவானுடைய அநுபவத்தை நோக்கச் சிற்றின்பமாகையாலும் இவற்றைத் ‘ தியாச்சியம் ’ என்றார். ஆக, இவற்றால் விரோதியின் தன்மையினை அருளிச் செய்தார்.

‘ தியாச்சியத்தின் வகை இருக்கும்படி என் ?’ என்னில், ‘ தியாச்சியம் என்றால் விடுவது அத்தனையன்றே ? விடுகின்ற வகை இருக்கும்படி அறிதல் வேண்டுமோ ?’ எனின், அறிதல் வேண்டும் ; ‘ விஷயங்களினின்றும் தான் கடக்க நின்று ஒழுகவோ, அன்றி, விஷயங்களை அழிப்பித்து ஒழுகவோ ?’ என்றால், இரண்டும் ஒண்ணாது ; கடக்க இருக்க என்று நினைத்தால், லீலா விபூதிக்கு அவ்வருகே போதல் வேண்டும் ; அழிப்பித்து ஒழுகவோ என்றால், பகவானுடைய விபூதியை அழிக்கையாய்விடும். இனி, ‘ இரண்டும் ஒழியப் பொருள்களின் அண்மையினின்றும் நீங்கி மனித சஞ்சாரம் அற்ற காற்றிலே வசித்தாலோ ?’ எனின், எல்லாவற்றையும் விட்டுக் காட்டிலே இருந்த [4] ஆதிபரதனுக்கு மானின்பக்கல் அன்பு உண்டாய் ஞானக்கேடு பிறந்தது ; [5] சௌபரி நீருக்குள்ளே முழுகிக் கிடக்கவும்

1. *திருவாய்.* 4 : 1.
2. *திருவாய்.* 9 : 1.
3. *திருவாய்.* 4. 9 : 10.

4. *ஆதிபரதன், ஐம்பொறிகளையும் அடக்கிய அருந்தவனாயினும் தன்னால் வளர்க்கப்பட்ட மான்பக்கல் வைத்த அன்பினால் தனது இறுதிக் காலத்து அந்த மானின் நினைவோடு உயிர் விட்டானாதலின், அடுத்த பிறவியில் மானாய்ப் பிறந்தான் என்பர்.*

5. *‘ புல்லறிவுக்கு எட்டாத தண்டலையார்*
*வளந்தழைத்த பொன்னிநாட்டில்*
*சொல்லறமா தவம்புரியும் சௌபரியுந்*
*துறவறத்தைத் துறந்து மீண்டான் ;*
*நல்லறமாம் வள்ளுவர்போல் குடிவாழ்க்கை*
*மனைவியுடன் நடத்தி நின்றால்*
*இல்லறமே பெரிதாகும் ; துறவறமும்*
*பழிப்பின்றேல் இயற்கை தானே,’*

*என்ற தண்டலையார் சதகச்செய்யுள் ஈண்டுக் காணல் தகும்.*

அங்கே திரிகின்ற மீன்கள் சிலவற்றைக் கண்டு சிற்றின்பத்தில் அன்பு உள்ளவன் ஆனன்; ஆகையாலே, விடுகின்ற வகை இவையல்ல; 'ஆயின், மற்று என்னே?' எனின், [1] 'நீர் நுமது என்ற இவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின்,' என்று தேகத்தை ஆன்மா என்று கருதும் அறிவையும், தேகத்தோடு சம்பந்தப்பட்டிருக்கின்ற பொருள்களில் எனது என்னும் அறிவையும் தவிர்தல் விடுகின்ற வகை என்று பிறர்க்கு உபதேசித்தார்; [2] 'யானே என்னே அறியகிலாதே, யானே என்றனதே என்று இருந்தேன்' என்று தாமும் சொல்லிப் போந்தார். ஆகவே, [3] 'ஆசை இல்லாதவனுக்குத் தான் வசிக்கும் வீடே தவம் செய்வதற்கு உரிய வனமாம்,' என்கிற படியே, ஆசை நீக்கியவனுக்குத் தான் இருந்த தேசமே தவம் செய்வதற்கு ஏகாந்தத் தலம் என்பது போதரும். 'இதனை எங்கே கண்டோம்?' என்னில், [4] ஸ்ரீ சனகராசன் பக்கலிலும், ஸ்ரீ குலசேகரப் பெருமாள் பக்கலிலும் கண்டுகொள்வது. ஆகையால், புத்தித் தியாகமே தியாகம் என்றபடி.

[5] '**இவ்விரோதியைக் கழிப்பதற்கும் புருஷார்த்தம் கைகூடுவதற்கும் உபாயம் எது**?' என்னில், மூன்று வருணத்தார் மேற்கொள்ளக்கூடிய பத்தியும், ஒரு கதியும் இல்லாதவன் மேற்கொள்ளக்கூடிய பிரபத்தியும் என்னும் இரண்டு வழிகள் அன்றோ வேதாந்தங்களிற் பெறப்படும் உபாயம்? இவற்றுள், பிரபத்தியே உபாயம் என்று தமக்குச் சிந்தாந்தம் என்னும் ஆகாரம் தோற்ற உபாயத்தின் தன்மையினை அருளிச்செய்தார். 'யாங்ஙனம்?' எனின், [6] 'நோற்ற நோன்பு இலேன்' என்று தொடங்கி, [7] 'ஆறு எனக்கு

1. *திருவாய்.* 1. 2 : 3.
2. *திருவாய்.* 2. 9 : 9.
3. *இதிசாச சமுச்சயம்*
4. *ஸ்ரீஜனகராஜன் - மிதிலா நகரத்தரசன்; சீதா பிராட்டியின் தமப்பன்; தத்துவஞானி; இருவகைப் பற்றுகளையும் அறவே விட்டவன். குலசேகரப் பெருமாள் - குலசேகர ஆழ்வார்; சேரநாட்டு அரசர், அரசராயினும், பற்றற்றவர். 'பேயரே எனக்கு யாவரும் யானுமோர், பேயனே எவர்க்கும் இது பேசி என்?' 'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ, வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்' என்பன இவருடைய திருவாக்குகள்.*
5. *உபாய சொரூபத்தை அருளிச்செய்கிறார், 'மூன்று வருணத்தார்' என்றது முதல், 'எல்லாவற்றையும் தரவல்ல உபாயம் என்பதனையும் அருளிச்செய்தார்' என்றது முடிய.*
6. *திருவாய்.* 5. 7 : 1.
7. *திருவாய்.* 5. 7 : 10.

நின்பாதமே சரணுகத் தந்தொழிந்தாய்' என்றும், [1] 'உழலை என்பின் பேய்ச்சி முலையூடு அவனை உயிர் உண்டான், கழல்களவையே சரணுகக் கொண்ட' என்றும், [2] 'நாமங்கள் ஆயிரமுடைய நம்பெருமானடிமேல், சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்' என்றும், [3] 'நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு' என்றும் சொல்லிக்கொண்டு போந்து, [4] 'ஆவிக்கு ஓர் பற்றுக்கொம்பு நின் அலால் அறிகின்றிலேன்,' என்று முடிக்கையாலே திருவடிகளே உபாயம் என்று அருளிச்செய்தார். [5] இதனைப் பிறர்க்கு உபதேசிக்குமிடத்திலும் 'திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ,' என்றார். மற்றும், 'ஆறு எனக்கு நின் பாதமே' என்றும், 'கழல்கள் அவையே' என்றும், 'சரணே சரண் நமக்கு' என்றும் போந்த பிரிநிலை ஏகாரத்தால், 'உபாயம் வேறு ஒன்று இன்று; [6] அத்திருவடிகளே எல்லாவற்றையும் தரவல்ல உபாயம்,' என்பதனையும் அருளிச்செய்தார்.

'இவ்வுபாயத்துக்கு அதிகாரிகள் ஆவார் யாவர்?' என்னில், 'மயர்வற மதிநல மருளினன்' என்ற இடத்தில் 'எனக்கு அருளினன்' என்கைக்குத் தம்மைக் காணுமையாலே [7] ஆகிஞ்சந்யத்தையே முற்கொண்டு, உபாயத்தை அறுதியிடும் வேளையில் 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்' என்று, மூன்று வருணத்தார் மட்டும் செய்யக்கூடிய வேறு உபாயங்களில் [8] அநந்வயமுகத்தால் ஆகிஞ்சந்யத்தைப் பேசி, பற்றுகிற வேளையில் [9] 'புகல் ஒன்று இல்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே,' என்று சொல்லி,

---

1. *திருவாய்.* 5. 8 : 11.
2. *திருவாய்.* 5. 9 : 11.
3. *திருவாய்.* 5. 10 : 11.
4. *திருவாய்.* 10. 10 : 3
5. *ஆழ்வார் நான்காம் வருணத்தில் அவதரிக்கையால், பத்தி செய்வதற்கு அதிகாரம் இல்லாதவரானுர்; ஆதலால், பிரபத்தி நிஷ்டரானுர். 'இதனுல், பத்தி உபாயமன்று; பிரபத்தியே உபாயம் என்று தோன்றுமோ?' என்னும் வினுவிற்கு விடையாக, 'இதனைப் பிறர்க்கு உபதேசிக்குமிடத்திலும்' என்று தொடங்கி அருளிச்செய்கிருர்.*
6. *இதனுல், உபாயபூர்த்தியைத் தெரிவித்தபடி.*
7. *ஆகிஞ்சந்யம் - வேறு உபாயமும் வேறு கதியும் இல்லாமை. 'நோற்ற நோன்பிலேன்' என்ற பாசுரத்தால் வேறு உபாயமின்மையையும், 'புகலொன்று இல்லா அடியேன்' என்ற பாசுரத்தால் வேறு கதியின்மையையும் அருளிச்செய்தார். 'என்று' என்னும் எச்சத்தைப் பின் வருகின்ற 'ஆகிஞ்சந்யத்தைப் பேசி' என்றதனேடு முடிக்க.*
8. *அநந்வயமுகம் - சம்பந்தமில்லாத தன்மை.*
9. *திருவாய்.* 6. 10 : 10.

போகவேளையில் தமக்கு உண்டானவை அடங்கப் பகவானுடைய திருவருளால் வந்தவை என்கைக்காக, [1] ‘நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன்’ என்று கருந்தரையைப் பேசி, [2] ‘ஒப்பில்லாத் தீவினையேனை உய்யக்கொண்டு’ என்று முடிக்கிறார் ஆதலின், பாவமே செய்து பாவிகளான ஆத்மாக்களும் சென்று சேரலாம் என்று தோற்று கையாலே, எல்லாரும் அதிகாரிகள் என்று அருளிச்செய்தார்.

அதிகாரியைப் பெற்றாலும், உபாயம் சித்தம் ஆனாலும் பற்றுதல் இல்லாதபோது உய்வதற்குக் காரணம் ஆகாமையாலே, அப்பற்றுந் தன்மையைக் [3] ‘கழல்கள் அவையே **சரணாகக் கொண்ட**’ என்றும், சாங்க அநுஷ்டான வேளையில் [4] ‘அடிக்கீழ் அமர்ந்து **புகுந்தேன்**’ என்றும் அருளிச்செய்தார். [5] இங்ஙனம் பற்றுதல் கைகூடுதல் தானும் இறைவனாலேயே என்னுமிடத்தை [6] ‘நின் பாதமே சரணாகத் **தந்தொழிந்தாய்**’ என்றும், [7] ‘அதுவும் அவனது **இன்னருளே**’ என்றும் அருளிச்செய்தார். பற்றும் தலைவனுடைய மனநிலையின் தன்மையினைக் [8] ‘களைவாய் துன்பம் களையாது ஒழிவாய் களைகண் மற்றிலேன்’ என்றும், [9] ‘நாடொறும், ஏக சிந்தையனாய்’ என்றும் அருளிச்செய்தார். இவ்வுபாயத்தைப் பிறர்க்கு உபதேசிக்கிற இடத்தில் [10] ‘மற்று ஒன்று இல்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்து எவ்வுயிர்க்கும், சிற்ற வேண்டா சிந்திப்பே அமையும்,’ என்று உபாயத்தின் சுலபத்தை அருளிச்செய்து, இப்பிரபத்தியை வகைப் படுத்தி அருளிச்செய்கிற இடத்திலே இப்பிரபத்தி பக்திக்கு அங்கம் அன்று; தானே உபாயமாக இருந்து காரியத்தைச் செய்ய வல்லது’

---

1. *திருவாய்.* 3. 3 : 4. *கருந்தரை - பாழ்நிலம்; ‘ஒன்றும் இல்லாத இடம்’ என்றபடி.*

2. *திருவாய்.* 7. 9 : 4.

3. *திருவாய்.* 5. 8 : 11.

4. *திருவாய்.* 6. 10 : 10.

5. *‘ ‘சரணாகக்கொண்ட’ என்றும், ‘அமர்ந்து புகுந்தேன்’ என்றும் கூறுதல், இறைவன் நிர்ஹேதுகமாகத் திருவருள் புரிகிறான் என்று கூறு தற்கு முரணாகாதோ?’ என்னும் வினாவிற்கு விடையாக, ‘நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்’ என்றும், ‘அதுவும் அவனது இன்னருளே’ என்றும் அருளிச்செய்கிறார். அந்த இச்சைதானும் இறைவனுடைய நிர்ஹேதுகமான திருவருள் காரணமாக உண்டானதே என்பது பொருள்.*

6. *திருவாய்.* 5. 7 : 10.

7. *திருவாய்.* 8. 8 : 3.

8. *திருவாய்.* 5. 8 : 8.

9. *திருவாய்.* 5. 10 : 11.

10. *திருவாய்.* 9. 1 : 7.

என்கைக்காக, [1] ‘சரணமாகும்’ என்று தொடங்கி, ‘மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்’ என்று பேறு முடிய முழுதினையும் நடத்தும் என்று அருளிச்செய்தார். ‘இவ்வுபாயத்தையே உறுதியாக நம்பி இருக்கும் அவனுக்குக் காலக்ஷேபத்தின் வகை இருக்கும்படி என்?’ என்னில், [2] ‘தொண்டர்க்கு அமுது உண்ணச் சொன் மாலைகள் சொன்னேன், அண்டத்து அமரர் பெருமான் அடியேனே’ என்பதனால், ‘இத்திருவாய்மொழிதானே காலக்ஷேபப் பிரகாரம்,’ என்று அருளிச்செய்தார்.

‘இப்படி உபாயத்தை மேற்கொண்டு இதுவே போதுபோக்காகத் திரியும் அதிகாரிக்குப் [3] பலம் யாது?’ எனின், ஐம்பொறிகளையும் அடக்கல் முதலாகக் கைங்கரிய சித்தி முடிவாக இருக்கும் இத்தனையும் உபாய பலம் என்பதனை அருளிச்செய்தார். உபாசகர்கள் இறைவனைப் பற்றுவதற்கு இழியும்போது ஐம்பொறிகளையும் அடக்கினவர்களாய்க்கொண்டு இழிதல் வேண்டும்; இந்தப்பிரபத்தி அதிகாரிக்கு ஐம்பொறிகளை அடக்குதலும் இவ்வுபாயத்தின் பலமாம்; ‘யாங்ஙனம்?’ எனில், [4] ‘என்னைத் தீமனங் கெடுத்தாய்’ என்றும், [5] ‘மருவித் தொழும் மனமே தந்தாய்’ என்றும் இவர் தாமே அருளிச்செய்தார் ஆதலின், ஐம்பொறிகளை அடக்குதலும் அவன் திருவருளாலேயாம் என்க.

‘ஐம்பொறிகளையும் அடக்கினவன் ஆனவாறே பகவானுடைய அநுபவத்துக்கு உபகரணமான பக்தி முதலானவைகள் தமக்குத் தாமே உண்டாகின்றனவோ?’ என்னில், [6] ‘மயர்வற மதிநல மருளினன்’ என்று பக்தியின் நிலையினை அடைந்த ஞானத்தையும் தானே தந்தான் என்று அருளிச் செய்கையாலே, பக்தி முதலானவைகள் தோன்றுதலும் அவன் திருவருளாலே என்பதனை அருளிச் செய்தார். ‘ஆயின், தோன்றிய பக்திக்கு வர்த்தகர் யார்?’ என்னில், [7] ‘காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி நங்கண்ணன்’

---

1. *திருவாய்.* 9. 10 : 5.
2. *திருவாய்.* 9. 4 : 9. *காலக்ஷேபம் - பொழுது போக்கல்.*
3. *மேலே பலத்தின் தன்மையை அருளிச்செய்திருந்தும், ஈண்டும் ‘அதிகாரிக்குப் பலம் யாது எனின்’ என்று அருளிச்செய்கிறார், அங்குக் கூறியது உபாசகர்கட்கு என்றும், இங்கு அருளிச்செய்வது பிரபந்நர்கட்கு என்றும் வேறுபாடு தெரிவிப்பதற்காக.*
4. *திருவாய்.* 2. 7 : 8.
5. *திருவாய்.* 2. 7 : 7.
6. *திருவாய்.* 1. 1 : 1.
7. *திருவாய்.* 5. 3 : 4.

என்கையாலே அவனே வர்த்தகன் என்பதனையும் அருளிச்செய்து, 'வளர்வதற்கு எல்லை ஏது?' என்னில், [1] அதனில் பெரிய என் அவா' என்கையாலே தத்துவத் திரயங்களையும் விளாக்குலை கொள்ளும்படி பெருகினபடியை அருளிச்செய்து, [2] 'என் அவா அறச் சூழ்ந்தாயே' என்று தம் திருவாயாலே அருளிச்செய்கை யாலே சரீர சம்பந்தத்தை அறுத்துத் தேச விசேஷத்திலே கொண்டு போய்த் தன் திருவடிகளிலே சேர்ப்பித்துத் தலைக்கட்டினான் என்பதனை அருளிச்செய்தார்.

ஆக, இவ்வைம்பொருள்களுமே திருவாய்மொழியால் சொல்லப் படுகின்றன. அல்லாதவை [3] ஆநுஷங்கிக சித்தமாய் வந்தன இத்தனை. 'யாங்ஙனம்?' என்னில், பரம்பொருள் ஸ்ரீமந் நாராயணன் என்றும், அநந்யார்ஹ சேஷத்துவமே சொரூபம் என்றும், இறைவ னுடைய குணங்களை அநுபவிப்பதால் உண்டாகும் பிரீதியால் செய்யப்படும் கைங்கரியமே புருஷார்த்தம் என்றும், அகங்கார மமகாரங்கள் அதற்கு விரோதி என்றும், அவை நீங்குதற்கும் கைங்கரிய சித்திக்கும் சர்வ சுலபனான சர்வேஶ்வரன் திருவடிகளே உபாயம் என்றும், ஐம்பொறிகளையும் அடக்கல் தொடக்கமாகக் கைங்கரியம் முடிவாக உள்ளவை அவ்வுபாயத்திற்குப் பலம் என்றும் சொல்லப்பட்டன.

[4] 'அடையத் தகுந்த பரம்பொருளின் சொரூபத்தையும், அடைகின்ற ஆத்துமாவின் சொரூபத்தையும், அடையும் உபாயத் தையும், அடைவதற்குப் பலத்தையும், அப்படியே அடைவதற்கு விரோதியையும் இதிகாச புராணங்களுடன் கூடின எல்லா வேதங் களும் கூறுகின்றன; மகாத்துமாக்களும் வேதங்கள் வேதங்களின் பொருள்கள் இவற்றை அறிந்தவர்களுமான முனிவர்களும் சொல்லு கிறார்கள்,' என்பதை விவரிக்கும் முறையில் எல்லா வேதங்களி னுடைய கருத்து இவ்வைம்பொருள்களுமே என்றும், இவ்வைம் பொருள்களும் திருவாய்மொழிக்கு வாக்கியார்த்தமாக அமைந் துள்ளன என்றும் **பெரியவங்கிப் புரத்து நம்பி** அருளிச்செய்தார்.

---

1. *திருவாய். 10. 10 : 10. தத்துவத் திரயங்கள் - சித்து, அசித்து, ஈஸ்வரன். விளாக்குலை கொள்ளுதல் - தனக்குள் அடங்கும்படி செய்தல்.*

2. *திருவாய். 10. 10 : 10.*

3. *'ஆநுஷங்கிக சித்தமாய் வந்தன' என்றது, 'இடையிலே வந்தவை' என்றபடி.*

4. *'திருவாய்மொழியில் கூறப்படும் பொருள், ஐம்பொருள்களுமே' என்பதற்குப் பெரியவங்கிப்புரத்து நம்பியின் கூற்றை மேற்கோளாகக் காட்டுகிறார், 'அடையத்தகுந்த பரம்பொருளின் சொரூபத்தையும்' என்று தொடங்கி.*

ஸ்ரீ:

# சது-மஹாப்பிரவேசம்—திருமகள் கேள்வன் - இரண்டு

[1] திருமகள் கேள்வனாய், அடையப்பட்ட எல்லா விருப்பத்தையு முடையவனாய், மங்களம் பொருந்திய எல்லா நற்குணங்களையும் உருவமாக உடையனான சர்வேஶ்வரன், 'மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து' என்கிறபடியே, தொடர்ந்து வருகிற பிறவிகளிலே தோள் மாறித் திரிகிற இவரை இவ்வைம்பொருள்களையும் விசத தமமாக அறிய வல்லராம்படி முதலடியிலே நிர்ஹேதுகமாகச் சிறப்புறத் திருவருளைச் செய்தருளினான்.

நம்மாழ்வார் திருவாய்மொழிப் பிரபந்தத்தாலே துவயத்தின் பொருளை விவரணம் செய்கிறார். இதில், முதல் மூன்று பத்துகளாலே இரண்டாம் வாக்கியத்தின் பொருளை விவரிக்கிறார்; மேல் மூன்று பத்துகளாலே முதல் வாக்கியத்தின் பொருளை விவரிக்கிறார்; மேல் மூன்று பத்துகளாலே [2] உபாயத்திற்குத் தகுதியான குணங்களையும், ஆன்மாவிலும், ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும்

---

1. 'இறை, உயிர், நெறி, தடை, பேறு' ஆகிய இவ்வைம்பொருள்களின் நிலையினைப் பற்றிக் கூறுகின்றது திருவாய்மொழி என்று, மேல் பரக்க அருளிச்செய்து நின்ற ஆசிரியர், இப்பொழுது 'துவயம்' என்னும் மந்திரத்தினது பொருளைக் கூறுகின்றது திருவாய்மொழி என்று அருளிச் செய்யத் திருவுள்ளம் பற்றி, ஆழ்வாருடைய ஞானத்தின் சிறப்பினை மீண்டும் அருளிச்செய்கிறார், 'திருமகள் கேள்வனாய்' என்று தொடங்கி. இனி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் மூன்று பிரபந்தங்களும் திருமந்திரம், சரமஶ்லோகம் இவற்றினுடைய பொருளைக் கூறுகின்றன என்று திருவுளங்கொண்டு, 'நம்மாழ்வார் திருவாய்மொழிப் பிரபந்தத்தாலே துவயத்தின் பொருளை விவரணம் செய்கிறார்,' என்று அருளிச்செய்கிறார் என்று கோடலுமாம்.

'நன்று; துவயத்தின் பொருளை அடைவே அருளிச்செய்யாது, பின் வாக்கியத்தின் பொருளை மூன்னும், முன் வாக்கியத்தின் பொருளைப் பின்னும் அருளிச் செய்யக் காரணம் யாது?' எனின், அநுஷ்டான நிலையிற்போலே உபாயம் முற்பட்டுப் பலம் பிற்படுகையின்றி, அறிவு நிலையில் பலம் முற்பட்டு உபாயம் பிற்பட வேண்டுகையாலே துவயத்தின் பின் வாக்கியப் பொருளை முதல் மூன்று பத்துகளாலும், முன் வாக்கியப் பொருளை மேல் மூன்று பத்துகளாலும் அருளிச்செய்கிறார்.

2. 'கடல் ஞாலங் காக்கின்ற மின்னு நேமியினாய்' (7. 1 : 2.) என்றதனை நோக்கி, 'உபாயத்திற்குத் தகுதியான குணங்களையும்' என்கிறார். 'உங்களோடு எங்கள் இடையில்லை' (8. 2 : 7.) என்றதனை நோக்கி, 'ஆன்மாவிலும், ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் தமக்கு நசையற்றபடியையும்' என்கிறார்.

தமக்கு நசையற்ற படியையும், [1] அவனோடு தமக்கு உண்டான நிருபாதிக சம்பந்தத்தையும் அருளிச்செய்கிறார். பத்தாம் பத்தாலே தாம் வேண்டினபடியே பெற்றபடியைச் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

இவற்றுள், முதற்பத்தாலே [2] 'உயர்வற உயர்நலமுடையவன் யவன் அவன் - அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன் அவன் - துயரறு சுடரடி தொழுது எழு என் மனனே!' என்றதனால் மங்களம் பொருந்திய எல்லா நற்குணங்களையும் உருவமாகவுடையவனாய் வானவர்கட்கு இனியனானவன் திருவடிகளில் தொண்டு செய்தலே பேறு என்று உறுதி செய்து, கூறிய பொருளுக்கும், இனிக்கூறப் புகும் பொருளுக்கும் பிரமாணம், [3] 'உளன் சுடர்மிகு சுருதியுள்' என்றதனால் குற்றங்கள் அற்ற சுருதியே பிரமாணம் என்றும், 'இத் தன்மைகளையுடையவன் யார்?' என்ன, [4] 'வண்புகழ் நாரணன்' என்றும், [5] 'திருவுடை அடிகள்' என்றும், [6] 'செல்வ நாரணன்' என்றும் சிறப்புற ஓதி, 'தொழுது எழு என் மனனே!' என்று தொடங்கி, [7] 'அயர்ப்பிலன் அலற்றுவன் தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே' என்றதனால் முக்கரணங்களாலும் அடிமை செய்து தலைக்கட்டுகையாலே [8] 'பகவானுக்குச் செய்யும் கைங்கரியமே புருஷார்த்தம்,' என்று அறுதியிட்டார்.

---

1. *'நாராயணன் நங்கள் பிரான் அவன்'* (9. 3 : 1.) *என்றதனை நோக்கி, 'அவனோடு தமக்குண்டான நிருபாதிக சம்பந்தத்தையும்' என்கிறார். 'தாம் வேண்டினபடியே பெற்றபடியைச் சொல்லித் தலைக் கட்டுகிறார்' என்றது, முதல் முன்னம் 'தொழுது எழு' என்று தாம் வேண்டிக்கொண்டபடியே 'அவா அற்று வீடுபெற்ற' என்று தாம் பெற்ற படியைச் சொல்லி முடிக்கிறார் என்றபடி. நிருபாதிகம் - காரணம் இல்லாதது.*

2. *திருவாய்.* 1. 1 : 1.

3. *திருவாய்.* 1. 1 : 7.

4. *திருவாய்.* 1. 2 : 10.

5. *திருவாய்.* 1. 3 : 8.

6. *திருவாய்.* 1. 10 : 8.

*'வண்புகழ்' என்றும், 'திருவுடை' என்றும், 'செல்வம்' என்றும் வருகின்ற பதங்களைத் திருவுளங்கொண்டு, 'சிறப்புற ஓதி' என்கிறார்.*

7. *திருவாய்.* 1. 3 : 10. *'அயர்ப்பிலன்' என்றதனால் மனமும், 'அலற்றுவன்' என்றதனால் வாக்கும், 'தழுவுவன்' என்றதனால் காயமும் போதருதலின், 'முக்கரணங்களாலும் அடிமை செய்து' என்கிறார்.*

8. *'தொழுது எழு' என்று தொடங்கி, 'சொல் பணிசெய் ஆயிரம்'* (1. 10 : 11.) *என்று முடிக்கையாலே, 'பகவானுக்குச் செய்யும் கைங் கரியமே புருஷார்த்தம் என்று அறுதியிட்டார்' என்கிறார்.*

இரண்டாம் பத்தால், இந்தக் கைங்கரியத்துக்கு விரோதியான [1] உலகத் தொடர்பின் சம்பந்தத்தையுங்கழித்து, ' ஒளிக்கொண்ட சோதியுமாய், இக்கைங்கரியத்துக்குத் தேசிகரான அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்று கொலோ ?' என்றதனால், தாமும் வேண்டிக்கொண்டு, [2] ' நலம் அந்தம் இல்லது ஓர் நாடு புகுவீர் ' என்றதனால், பிறர்க்கும் உபதேசிக்கையாலே, ' இவர்க்குப் பரமபதத்திலே நோக்காய் இருந்தது' என்று நினைந்து, இறைவன் பரமபதத்தைக் கொடுக்கப் புக, [3] ' எம் மா வீட்டுத் திறமும் செப்பம் ' என்றதனால், ' எனக்கு அதில் ஒரு நிர்ப்பந்தம் இல்லை' என்றும், [4] ' தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே ' என்றதனால், ' அவனுக்கேயாய் இருக்கும் இருப்பே எனக்கு வேண்டுவது,' என்றும் இப்புருஷார்த்தத்தை அறுதியிட்டார்.

மூன்றாம் பத்தால், [5] இவர்க்குக் கைங்கரியத்தில் உண்டான ருசியையும், விரைவையும் கண்ட இறைவன், கைங்கரியத்துக்கு [6] ஏகாந்தமான திருமலையில் நிலையைக் காட்டிக் கொடுக்கக் கண்டு, [7] ' வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம் ' என்று பாரித்து, பாரித்தபடியே, [8] பாகவதர்களுக்கு அடிமை அளவாக வாசிகமாக

---

1. *' களிப்பும் கவர்வும் அற்றுப் பிறப்புப் பிணி மூப்பு இறப்பு அற்று ' என்றதனைத் திருவுளத்தே கொண்டு, ' உலகத் தொடர்பின் சம்பந்தத்தையுங் கழித்து ' என்கிறார். இது, திருவாய். 2. 3 : 10.*

2. *திருவாய்.* 2. 8 : 4.

3. *திருவாய்.* 2. 9 : 1.

4. *திருவாய்.* 2. 9 : 4.

5. *' இஃதே யான்உன்னைக் கொள்வது எஞ்ஞான்றும் என்*
*மைதோய் சோதி மணிவண்ண எந்தாய் '*

*என்ற பாசுரத்தைத் திருவுளத்தே கொண்டு, ' இவர்க்குக் கைங்கரியத்திலுண்டான ருசியையும் ' என்கிறார். ' ஞானக் கைதா ; காலக் கழிவு செய்யேலே ' என்றும், ' என்னை உன் பொன்னடி சேர்த்து ஒல்லை ' என்றும் வருவனவற்றை நோக்கி, ' விரைவையும் கண்ட இறைவன் ' என்கிறார்.*

6. *' கிளர் ஒளி இளமை,' ' ஒழிவில் காலமெல்லாம் ' என்ற திருப்பதிகங்களைத் திருவுளத்தே கொண்டு, ' ஏகாந்தமான திருமலையில் நிலையைக் காட்டிக் கொடுக்கக் கண்டு ' என்கிறார்.*

7. *திருவாய்.* 3. 1 : 1.

8. *' பயிலுஞ்சுடரொளி மூர்த்தியை ' என்ற திருப்பதிகத்தைத் திருவுளத்தே கொண்டு, ' பாகவதர்களுக்கு அடிமை அளவாக வாசிகமாக அடிமை செய்து தலைக்கட்டுகிறார் ' என்கிறார். ' வாசிகமாக அடிமை செய்து ' என்றது, பாசுரங்கள் மூலமாக அடிமை செய்து என்றபடி.*

அடிமை செய்து தலைக்கட்டுகிறார்.[1] ஆக, முதல் மூன்று பத்துகளால் துவயத்தின் பின் வாக்கியத்தின் பொருள் கூறப்பட்டது.

இனி, நான்காம் பத்தால், இப்புருஷார்த்தத்துக்கு உபாயம் [2] 'திருநாரணன் தாள்' என்றும், விரோதி [3] 'குடிமன்னும் இன் சுவர்க்கம்,'[4] 'எல்லாம் விட்ட இறுகல் இறப்பு' என்பனவற்றால், ஐசுவரிய கைவல்யங்களே விரோதி என்றும் பிறர்க்கு உபதேசித்து, [5] 'ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவு அரிய அளவு இல்லாச் சிற்றின்பம்' என்று தாமும் சொல்லிப் போந்தார். ஐந்தாம் பத்தால், விரும்பியனவற்றை அடைவதற்கும், விருப்பம் இல்லாதனவற்றை நீக்குவதற்கும் [6] 'ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந் தாய்' என்றதனால், இறைவன் தன் திருவடிகளையே உபாயமாகத் தந்தான் என்றார். ஆறும்பத்தால், அவன் தந்த உபாயத்தைச் [7] சேர்ப் பாரை முன்னிட்டுப் பெரிய பிராட்டியார் புருஷகாரமாக [8] 'அலர்மேல் மங்கை உறைமார்பா, உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்' என்ற

1. 'ஆக, முதல் மூன்று பத்துகளால் துவயத்தின் பின் வாக்கியத்தின் பொருள் கூறப்பட்டது' என்றது, 'ஸ்ரீமதே நாராயணாய நம:' என்னும் பின் வாக்கியத்தின் முதல் இரண்டு பதங்களின் பொருளை முதற் பத்தாலும், 'நம:' என்னும் மூன்றாம் பதத்தின் பொருளை இரண்டாம் பத்தாலும் அருளிச்செய்தார் எனவும், முதலிரண்டு பத்துகளில் கூறப்பட்ட இறைவனுக்குச் செய்யும் கைங்கரியம், அவனுடைய 'அடியார்கட்கு அடிமை' என்ற அளவிலும் சேறல் வேண்டுமென்று அறுதியிட்டு, அங்ஙனம் அறுதியிட்டதற்குத் தகுதியாகத் தமது அநுஷ்டானத்தையும் அருளிச் செய்தார் மூன்றாம் பத்தால் எனவும் தெரிவித்தபடி.

2. திருவாய். 4. 1 : 1.

3. திருவாய். 4. 1 : 9.

4. திருவாய். 4. 1 : 10.

5. திருவாய். 4. 9 : 10.

இங்கு, 'குடிமன்னும் இன்சுவர்க்கம்' என்றதனால் செல்வமும், 'எல்லாம் விட்ட இறுகல் இறப்பு' என்றதனால் கைவல்யமும், 'ஐங்கருவி கண்ட இன்பம்' என்றதனால் செல்வமும், 'தெரிவு அரிய அளவு இல்லாச் சிற்றின்பம்' என்றதனால் கைவல்யமும் கொள்க.

6. திருவாய். 5. 7 : 10.

7. 'சேர்ப்பாரை முன்னிட்டு' என்றது, 'வைகல் பூங்கழிவாய்,' 'பொன்னுலகாளீரோ' என்ற இரண்டு திருப்பதிகங்களில் தூது விடுகின்ற முகத்தால் ஆசாரியனை முன்னிட்டு என்றபடி.

8. திருவாய். 6. 10 : 10.

தனுல் ஏற்றுக்கொண்டார். ஆக, இம்மூன்று பத்துகளாலும் (4 - 6) [1] துவயத்தின் முன் வாக்கியத்தின் பொருள் கூறப்பட்டது.

ஏழாம்பத்தால், [2] இப்படிச் சித்தோபாயத்தை ஏற்றுக்கொண்டிருந்தும் சடக்கெனப் பலியாமையாலே துயர் உற்றவராய்க் [3] 'கடல் ஞாலம் காக்கின்ற மின்னு நேமியினுய்' என்று தொடங்கி, உபாயத்திற்கு உபயோகியான குணங்களைச் சொல்லிக் கூப்பிட [4] 'கூரார் ஆழி வெண்சங்கு ஏந்திக் கொடியேன்பால், வாராய்' என்று இவர் ஆசைப்பட்டபடியே, [5] 'வெள்ளைச் சுரிசங்கொடு ஆழி ஏந்தி' வந்து காட்சியளித்தான்; அளித்த இது, மானச அனுபவ மாத்திரமேயாய்ப் புறச்சேர்க்கைக்குக் கிடையாமையாலே [6] பிரிந்தபடியை அருளிச் செய்தார்.

எட்டாம் பத்தால், [7] மேலே கிடைத்த மனக்காட்சி, வெளியில் புறக்கண்களாலும் காண இவர் விரும்பியவாறு கிடையாமையாலே

---

1. 'ஆக, இம்மூன்று பத்துகளாலும் துவயத்தின் முன் வாக்கியத்தின் பொருள் கூறப்பட்டது,' என்றது, 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே' என்ற முன் வாக்கியத்தின் 'ஸ்ரீமத்,' 'நாராயணசரணௌ' என்னும் முதல் இரண்டு பதங்களின் பொருளை நாலாம் பத்தாலும், 'சரணம் பிரபத்யே' என்னும் மூன்றும் பதத்தின் பொருளை ஐந்தாம் பத்தாலும் அருளிச்செய்தார் எனவும், அங்ஙனம் அருளிச்செய்தவாறே, ஆசாரியனை முன்னிட்டுப் பெரிய பிராட்டியார் புருஷகாரமாக இறைவனைப் பற்றும் தம்முடைய அநுஷ்டானத்தை ஆறும்பத்தால் அருளிச் செய்தார் எனவும் தெரிவித்தபடி.

'செய்யவளைக்குரு வின்அரு ளால்திருத் தாள்வணங்கி
செய்ய வளைக்குலஞ் சூழரங் கேசன் சிறிதமுது
செய்ய அளைக்கும் புவிக்கும்அங் காந்தசெவ் வாய்முகுந்தன்
செய்ய வளைக்குஞ் சிலம்பணி பாதங்கள் சேர்ந்தனமே.'

(திருவரங்கத். 2.) என்னும் திவ்விய கவியின் திருவாக்கை இங்கு ஒப்பு நோக்குக.

2. சித்தோபாயம் – சித்தமாக இருக்கும் உபாயம்; அதாவது, இறைவன். 'துயருற்றவராய்' என்றது, 'உண்ணிலாவிய' என்னும் திருப்பதிகத்தை நோக்கி.

3. திருவாய். 7. 1 : 2.

4. திருவாய். 6. 9 : 1.

5. திருவாய். 7. 3 : 1.

6. 'பாமரு மூவுலகும் படைத்த,' 'ஏழையர் ஆவி உண்ணும்' என்ற திருப்பதிகங்களை நோக்கிப் 'பிரிந்தபடியை அருளிச்செய்தார்' என்கிறார்.

7. 'ஆழி எழச் சங்கும் வில்லும் எழ,' 'கற்பார் இராமபிரானை அல்லால் மற்றுங் கற்பரோ' என்னும் திருப்பதிகங்களில் கூறப்படும் அனுபவத்தை நோக்கி, 'மேலே கிடைத்த மனக்காட்சி' என்கிறார்.

[1] 'உமர் உகந்து உகந்த உருவம் நின் உருவமாகி உன்றனக்கு அன்பரானுர், அவர் உகந்து அமர்ந்த செய்கை உன் மாயை' என்கிற படியே, [3] அடியார்கட்கு அதீனப்பட்ட சொரூபம் ஸ்திதி முதலான வைகளையுடையவன் நமக்குத் தன்னைக் காட்டி மறைக்கைக்குக் காரணம், ஆத்துமாவிலும் ஆத்துமாவோடு சம்பந்தப்பட்ட பொருள் களிலும் ஏதேனும் நசை உண்டாகவேண்டும் என்று ஐயங்கொண்டு, [3] அவற்றில் நசை அற்றபடியை அருளிச்செய்தார்.

ஒன்பதாம் பத்தால், [4] 'நீர் என்றிய ஐயங்கொண்டு படுகிறீர் இப்படி ?' என்று தன்னுடைய நிருபாதிக சம்பந்தத்தையும் காட்டி, 'நாம் நாராயணன்; எல்லா ஆற்றல்களோடும் கூடினவன்; உம் முடைய விருப்பமனைத்தையும் முடிக்கிறேம்' என்று அருளிச்செய்ய, [5] 'சீலம் எல்லை இலான்' என்று அவனுடைய சீல குணங்களிலே ஆழங்கால்பட்டார்.

பத்தாம் பத்தால், ஆழ்வாருடைய ஆற்றுமையைக் கண்டு, [6] 'திருமோகூரிலே தங்கு வேட்டையாக வந்து தங்கி, இவர்க்கு [7] அர்ச்சிராதிகதியையுங் காட்டிக்கொடுத்து, இவர் வேண்டிக் கொண்டபடியே [8] 'என் அவா அறச் சூழ்ந்தாயே' என்று இவர் திருவாயாலே அருளிச்செய்யும்படி பேற்றினை அளித்தபடியை அருளிச்செய்கிருர்.

---

1. *திருவாய்.* 8. 1 : 4.

2. *'மனக்கோள் நினக்கென வடிவு வேறு இலையே' என்ற பரிபாடற்பகுதி ஒப்பு நோக்குக. (பரிபா.* 4 - 56.)

3. *'உங்களோடு எங்கள் இடையில்லை'* (8. 2 : 7.) *என்றதனை நோக்கி, 'அவற்றில் நசை அற்றபடியை அருளிச்செய்தார்' என்கிருர்.*

4. *'ஓராயிரமாய் உலகு ஏழ் அளிக்கும்' என்ற திருப்பதிகத்திலே நோக்காக, 'நீர் என்றிய ஐயங்கொண்டு படுகிறீர் இப்படி ?' என்று தொடங்கி அருளிச்செய்கிருர். என்றிய - எதற்காக ?*

5. *திருவாய்.* 9. 3 : 11.

6. *'தாள தாமரை' என்ற திருப்பதிகத்தைத் திருவுளம் பற்றித் 'திருமோகூரிலே தங்குவேட்டையாக வந்து தங்கி' என்கிருர்.*

7. *'சூழ்விசும்பு அணிமுகில் தூரியம் முழக்கின' என்ற திருப்பதிகத்தைத் திருவுளம் பற்றி 'அர்ச்சிராதிகதியையும்' என்கிருர். அர்ச்சிராதிகதி - அந்தம் இல் இன்பத்து அழிவில் வீட்டிற்குச் செல்லும் வழி.*

8. *திருவாய்.* 10. 10 : 10.

ஸ்ரீ:

# ௬௫ - மஹாப்பிரவேசம்—திருமகள் கேள்வன் - மூன்று

[1] திருமகள் கேள்வனுய், அடையப்பட்ட எல்லா விருப்பத்தையும் உடையவனுய், மங்களம் பொருந்திய எல்லாநற்குணங்களையும் உருவமாக உடையனுன சர்வேஸ்வரன், 'மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து' என்கிறபடியே, தொடர்ந்து வருகிற பிறவிகளிலே தோள் மாறி நித்திய சம்சாரியாய்ப் போந்த இவரை 'அடியை அடைந்து உள்ளந்தேறி ஈறு இல் இன்பத்து இருவெள்ளம் யான் மூழ்கினன்' என்று தம் திருவாயாலே அருளிச்செய்யலாம்படி முதலடியிலே விசேஷ கடாக்ஷத்தைச் செய்தருளினுன்.

முதல் முன்னமே சித்தின் சொரூபமாதல், அசித்தின் சொரூப மாதல், இறைவன் சொரூபமாதல் அறியாதே இருக்கிற இவர்க்கு, அசித்து விடத் தக்கது என்னுமிடத்தையும், சித்தாகிய சேதனன் ஏற்றுக்கொள்ளத்தக்கவன் என்னுமிடத்தையும், இறைவனுகிய தான் ஏற்றுக்கொள்ளத்தக்க பொருள்களுள் உயர்ந்தவன் என்னுமிடத் தையும் அவன் தானே காட்டிக் கொடுக்கக் கண்டு, இறைவனுடைய அனுபவத்திற்கு இச்சரீர சம்பந்தம் தடையாய் இருக்கையாலே, அவனுடைய அனுபவத்திற்குத் தடையாக உள்ள இச்சரீர சம்பந் தத்தை அறுத்துத் தந்தருள வேண்டும் என்று விரும்பினுர், [2] திரு விருத்தத்தில்; சம்சார சம்பந்தம் அற்று ஒரு தேச விசேஷத்திலே போனுல் அனுபவிக்கக்கூடிய [3] தன்னுடைய மேன்மையையும் நீர்மையையும் வடிவழகையும் இங்கே இருக்குங் காலத்திலேயே அனுபவிக்கலாம்படி தெளிநிலையைச் செய்து கொடுக்க, பரப்பு அற ஏழு திருப்பாசுரங்களால் அவ்வழகை அனுபவித்தார், திருவாசிரி யத்தில்; இப்படி அனுபவித்த பொருளில் பொருளுக்குத் தகுதியான

---

1. *திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய் மொழி என்னும் இந்நான்கு பிரபந்தங்களிலும் ஆழ்வார்க்கு உண்டான நிலை வேறுபாட்டிற்கு, ஸ்ரீ பரதாழ்வானுடைய நிலையை உவமையாக எடுத்துக் காட்டுகின்ற முகத்தால் திருவாய்மொழி பத்தி யோகத்தின் முதன் மையைக் கூறுகின்றது என்று அருளிச்செய்யத் திருவுள்ளங்கொண்டு, ஆழ்வாருடைய ஞானதிக்கிய உருவத்தின் சிறப்பினை மீண்டும் அருளிச் செய்கிறுர், 'திருமகள் கேள்வனுய்' என்று தொடங்கி.*

2. *'இந்நின்ற நீர்மை இனி யாம் உருமை' என்று தொடங்கி, 'அழுந்தார் பிறப்பாம், பொல்லா அருவினை மாய வன்சேற்று அள்ளல் பொய்ந்நிலத்தே' என்று முடிக்கையாலே, திருவிருத்தத்திற்கு இதுவே முக்கியமான கருத்து என்று தெளிக.*

3. *'தன்னுடைய மேன்மையையும் நீர்மையையும் வடிவழகையும்... அனுபவித்தார்' என்றது, 'செக்கர் மாமுகில் உடுத்து' முதலிய திருப்பா சுரங்களைத் திருவுள்ளம்பற்றி என்க.*

ஆசை கரை புரண்டபடியை அருளிச்செய்தார், [1] பெரிய திருவந்தாதியில்; [2] ஆமத்தை அறுத்துப் பசியை மிகுத்துச் சோறு இடுவாரைப் போன்று, தமக்கு ருசியைப் பிறப்பித்தபடியையும், அந்த ருசிதான் பரபத்தி பரஞான பரம பத்திகளாய்க் கொண்டு பக்குவமானபடியையும், பின்னர்ச் சரீர சம்பந்தமும் அற்றுப் பேற்றோடே தலைக்கட்டினபடியையும் அருளிச்செய்கிறார், திருவாய்மொழியில்.

[3] தமையனாராகிய ஸ்ரீ ராமபிரானுக்கு அவர் மனம் உவக்கும் அடிமைகளைச் செய்யவேண்டும் என்ற வேணவாவோடு வந்து சேர, கைகேயி [4] 'ராஜந்' என்ற சொல் கேட்டு ஸ்ரீ பரதாழ்வான் பட்ட பாடு போலே இருக்கிறது, திருவிருத்தத்தில் நிலை; திருச்சித்திரகூட மலையிலே பெருமாள் எழுந்தருளியிருந்தார் என்று கேட்ட ஸ்ரீ பரதாழ்வான், [5] 'என் ஒருவன் கண்ணில் கண்ணநீர் பொறுக்கமாட்டாதவர் இத்தனை பேர் ஆற்றாமை கண்டால் மீளாது ஒழிவரோ? எனக்கு விருப்பமான காரியங்களைத் தம் தலையாலே இரந்து செய்யக்கடவ அவர், நான் என் தலையாலே இரந்த காரியத்தை மறுப்பரோ? நான் தம் பின் பிறந்தவன் அல்லனோ? பின் பிறந்தவன் என்று கூறு

---

1. '*ஆசை கரை புரண்டபடியை அருளிச்செய்தார்.*' என்பதனை,

> '*அருகும் சுவடும் தெரிவுணரோம் அன்பே*
> *பெருகும் மிகஇதுஎன் பேசீர்—பருகலாம்*
> *பண்புடையீர்! பாரளந்தீர்! பாவியேம்கண் காண்பரிய*
> *நுண்புடையீர்! நும்மை நுமக்கு*' (பெரிய திரு. 3)

*என்ற திருப்பாசுரத்தால் உணர்தல் தகும்.*

2. '*ஆமத்தை அறுத்தல்*' முதலிய மூன்றற்கும், '*தமக்கு ருசியைப் பிறப்பித்தபடியையும்*' என்பது முதலான மூன்றையும் முறையே பொருத்திக்கொள்க. ஆமம் - பசியின்மை. பரபத்தியாவது, இறைவனைக் காணும்போது இன்பமும், காணாதொழியும்போது துன்பமும் அடைதல்; பரஞானமாவது, இறைவனைத் தெளிவாக நேரே அறிதல்; பரமபத்தியாவது, இறைவனுடைய பிரிவில் சத்துக்குக் கேடு உண்டாதல். அதாவது, தான் உளனாந் தன்மை இன்றியே ஒழிதல். '*மயர்வுஅற மதிநலம் அருளினன்,*' '*அதனில் பெரிய என் அவா அறச் சூழ்ந்தாயே*' என்பன முதலான திருப்பாசுரங்களைத் திருவுளத்தேகொண்டு, '*தமக்கு ருசியைப் பிறப்பித்தபடியையும்*' என்பது முதலாக அருளிச்செய்கிறார்.

3. இப்பிரபந்தங்களை அருளிச்செய்யுங்காலத்தில் ஆழ்வாருக்கு இருந்த நிலை வேறுபாடுகளை, ஸ்ரீ பரதாழ்வானுக்கு இருந்த நிலை வேறுபாடுகளை மேற்கோளாகக் காட்டி விளக்குகிறார், '*தமையனாராகிய ஸ்ரீராமபிரானுக்கு*' என்றது முதல், '*இவர்க்குத் திருவாய்மொழியில் பேறு*' என்றது முடிய.

4. ஸ்ரீராமா. அயோத்.

5. ஸ்ரீராமா. அயோத். 101 : 12.

கொள்ள இருக்கிறேனே? [1] மந்திர சம்பந்தமும் தம்மோடே அன்றோ? சிஷ்யனாய்க் [2] கிரய விக்கிரயங்கட்குத் தகுதியற்றவனாய் இருக்கிறேனோ? ஆன பின்னர், என் பக்கல் திருவருள் புரியாது இருப்பாரோ?' என்று எண்ணமிட்டுக்கொண்டு போகிற போதைத் தரிப்புப்போலே - திருவாசிரியத்தில் நிலே; [3] 'ஸ்ரீ ராமபிரான் வருவார் என்ற பேரவாவோடு நந்திக்கிராமத்தில் இருந்து அரசை நடத்திக்கொண்டிருந்தார்' என்கிறபடியே, பதினான்கு ஆண்டும் ஆசையை வளர்த்துக்கொண்டிருந்தாற்போலே இருக்கிறது - பெரிய திருவந்தாதியில்; மீண்டு எழுந்தருளித் திருவபிஷேகம் செய்து கொள்ள, ஸ்ரீ பரதாழ்வானும் [4] சொரூபத்திற்குத் தகுதியான பேறு பெற்றாற்போல இருக்கிறது, இவர்க்குத் திருமொழியில் பேறு.

[5] 'இருக்கு யஜுர் சாமவேதங்களும், அப்படியே அதர்வணமும், மற்றும் ஒலி உருவமாக உள்ளவை அனைத்தும், எட்டு எழுத்துகளையுடைய திருமந்திரத்திற்குள் அடங்கி இருப்பனவாம்' என்கிறபடியே, நான்கு வேதங்களின் சுருக்கம் திருமந்திரமாய், அதனுடைய சுருக்கம் பிரணவமாய், அதனுடைய சுருக்கம் [6] அகரம் ஆயினாற்போன்று, திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களின் சுருக்கம், முதல் திருப்பதிகம்; முதல் திருப்பதிகத்தின் சுருக்கம் முதல் மூன்று திருப்பாசுரங்கள்; முதல் மூன்று திருப்பாசுரங்களின் சுருக்கம், முதல் திருப்பாசுரம்; முதல் திருப்பாசுரத்தின் சுருக்கம், முதல் அடி. [7] மற்றும், ஸ்ரீ ராமாயணம் மகாபாரதம் முதலானவைகளைச் செய்த முனி புங்கவர்களும் சுருக்கியும் விவரித்தும் செய்து போந்தமை அவ்வந் நூல்களால் தெளிக.

அவதாரிகை முற்றிற்று

---

1. 'மந்திர சம்பந்தமும்' என்றது, வசிஷ்டர் பெருமாளுக்கு உபதேசித்தார்; பெருமாள், தம்முடைய தம்பிமார்கட்கு உபதேசித்தார் என்பதனைத் தெரிவித்தபடி.

2. கிரய விக்கிரயம்—விலைக்கு வாங்கலும் விலைக்கு விற்றலும்.

3. ஸ்ரீராமா. பாலகா. 1 : 38.

4. சொரூபத்திற்குத் தகுதியான பேறு - பாரதந்திரிய சேஷத்வம், அதாவது, அவனுக்கேயாகத் தன்னைக் கொடுப்பது.

5. பாஞ்சராத்திர ஆகமம்.

6. இங்கு, 'அகரமுதல எழுத்தெல்லாம்' என்ற திருக்குறள் ஒப்பு நோக்குக.

7. 'முதல் பாசுரத்திற்கு முதலடி சுருக்கமாகும் போது முதற் பாசுரத்திற்கூறிய விக்கிரகம் விபூதி இவைகள் எங்கே சொல்லப்படுகின்றன?' எனில், விக்கிரக விபூதிகள் ஆனந்தத்தைப்பற்றி இருப்பனவாதலின், 'நலம்' என்று ஆனந்தத்தை அருளிச்செய்த போதே விக்கிரக விபூதிகளும் பொருள் ஆற்றலாற் பெறப்படுவனவாம்.

8. இங்ஙனமே, ஆசிரியர் தொல்காப்பியனார் முதலாயினாரும் தொகுத்தும் விரித்தும் செய்திருத்தலையும் இங்கு ஒப்பு நோக்குக.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க!

# திருவாய்மொழி

## முதற்பத்து[1]

## முதல் திருவாய்மொழி - 'உயர்வற'

### 1

**உயர்வற உயர்நலம் உடையவன் யவன்அவன்**
**மயர்வற மதிநலம் அருளினன் யவன்அவன்**
**அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன்அவன்**
**துயரறு சுடரடி தொழுதுஎழுஎன் மனனே.**

**பொழிப்புரை:** என் மனமே, தேவர்கள் முதலிய மற்றையோருடைய மேன்மைகள் முழுதும் இல்லை என்று கூறலாம்படி மேன்மேல் உயர்ந்துகொண்டே செல்லுகின்ற நற்குணங்களையுடையவன் யாவனோ அவன், என்னிடத்துள்ள அறிவின்மை யாவும் நீங்க, பத்தியின் நிலையை அடைந்த அறிவைத் தந்தான்; அந்த அறிவைத் தந்தவன் யாவனோ அவன், மறதி என்பது சிறிதும் இல்லாத நித்தியசூரிகட்குத் தலைவன்; அந்நித்தியசூரிகட்குத் தலைவன் யாவனோ அவனுடைய, எல்லாத் துன்பங்களையும் நீக்குகின்ற ஒளி பொருந்திய திருவடிகளைத்தொழுது பிறவிப் பெருங்கடலினின்றும் கரை ஏறுவாய்.

**விசேடக்குறிப்பு:** 'யவன்' என்பது 'யாவன்' என்ற சொல்லின் விகாரம். மனன் - மனம்; மகரத்திற்கு னகரம் போலி என்பர்.

இப்பதிகம் நாற்சீர் நாலடியான் வருதலின் **கலி விருத்தம்** எனப்படும்.

---

1. நூறு பாசுரங்கள் கொண்டதொரு தொகுதியைப் 'பத்து' என்றும், பத்துப் பாசுரங்கள் கொண்ட பதிகத்தைத் 'திருவாய்மொழி' என்றும் வழங்குவர்; 'பத்துப்பாட்டு ஒரு திருவாய்மொழியாய், பத்துத் திருவாய்மொழி ஒரு பத்தாய், இப்படிப் பத்தான ஆயிரம்' (2. 3 : 11.) என்ற வியாக்கியானம் காண்க. இம்முறையில், முதற்பத்து என்பதற்கு முதல் நூறு பாசுரங்கள் என்றும், முதல் திருவாய்மொழி என்பதற்கு முதல் பத்துப் பாசுரங்கள் என்றும் கொள்க. இங்ஙனமே பின் வருவனவற்றிற்கும் பொருள் கொள்க.

ஈடு: [1] 'இறைவன் எல்லா நற்குணங்கட்கும் தான் இருப்பிடனாய் இருக்கிற இருப்பைக் காட்டி உபகரித்தான்; [2] அக்குணங்களும் தன்னைப் பற்றி நிறம் பெற வேண்டும்படியாக இருக்கிற திவ்வியாத்ம சொரூபத்தின் வேறுபாட்டினைக்காட்டி உபகரித்தான்; இப்பேற்றுக்கு என் பக்கல் சொல்லக்கூடிய நன்மை சிறிதும் இன்றி இருக்கவும், [3] நிர்ஹேதுகமாகத் தானே உபகாரகன் ஆனான்; [4] தம் தன்மைகளை அடைந்தவர்களாக இருக்கின்ற [5] நித்தியசூரிகட்கும் அவ்வருகாக இருக்கிற இருப்பைக் காட்டி உபகரித்தான்; தன்னுடைய திவ்விய விக்கிரகத்தின் வேறுபாட்டினைக் காட்டி உபகரித்தான்,' என்று அவன் செய்த உதவிகள் அடையச் சொல்லி, 'இப்படி உபகாரகனானவன் திருவடிகளிலே நித்தியமான [6] கைங்கரியத்தைச் செய்து உய்வு பெறுவதற்கு வாராய்,' என்று தம் திருவுள்ளத்துக்கு உபதேசிக்கிறார். இனி, 'ஆறு [7] கிண்ணகம் எடுத்தால் நேர் நின்ற மரங்கள் பறி உண்டு போய்க் கடலிலே புகும்; நீர் வஞ்சிக்கொடி முதலானவை வளைந்து பிழைக்கும்; அவை போன்று, இறைவனுடைய குணங்களின் எடுப்பு இருந்தபடி கண்ட நமக்கு எதிரே நான் என்று பிழைக்க விரகு இல்லை; அவன் திருவடிகளில் தலை சாய்த்துப் பிழைக்க வாராய் நெஞ்சே,' என்கிறார் எனலுமாம். [8] இளைய பெருமாளை 'நீர் இவருக்கு என் ஆவீர்?' என்ன, 'பெருமாளும் ஒரு படி

---

1. இங்கு 'இறைவன்' என்பது தொடக்கமாகவுள்ள ஐந்து வாக்கியங்களும் முறையே, இத்திருப்பாசுரத்திலுள்ள 'உயர்நலமுடையவன்' என்பதனையும், 'யவன்' என்பதனையும், 'அருளினன்' என்பதனையும், 'அமரர்கள் அதிபதி' என்பதனையும், 'சுடரடி' என்பதனையும் நோக்காகக்கொண்டு எழுதப்பட்டவை.

2. 'குணங்களை என் கூறுவது கொம்பினைச்சேர்ந் தவையுய்யப், பிணங்குவன அழகு இவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்!' (கம்பரா. கார்முகப். 18.) என்பது, இங்கு நினைவிற்கு வருகின்றது.

3. நிர்ஹேதுகம் - காரணமில்லாமை.

4. தீவினை இல்லாதிருத்தல் முதலிய தன்மைகள்.

5. நித்தியசூரிகள் - சமுசாரத்தின் வாசனை சிறிதும் இல்லாதவர்களாய், இறைவனுடைய அனுபவத்தில் ஒரு நாளும் குறைதல் இல்லாதவர்களாய் இருக்கும் தேவர்கள். அவர்களாவார் - ஆதிசேடன், கருடன், சேனை முதலியார் முதலானோர்.

6. கைங்கரியம் - தொண்டு.

7. கிண்ணகம் - வெள்ளம்.

8. இளையபெருமாள் என்றது இலக்குமணனை. பெருமாள் என்றது ஸ்ரீராமபிரானை. இங்ஙனம் கூறுதல் வைணவப் பெருமக்கள் மரபு.

நினைத்திருப்பர்; நானும் ஒருபடி நினைத்திருப்பன்,' என்றார். 'அவர் நினைத்திருக்கிறபடி என்? நீர் நினைத்திருக்கும்படி என்?' என்ன, [1] 'அவர் தம் பின் பிறந்தவன் என்று இருப்பர்; நான் அவர் குணங்களுக்குத்தோற்று அடியேனாய் இருப்பன் என்று இருப்பன்,' என்றார். அப்படியே இவரும் 'உயர்வற உயர்நலம் உடையவன் துயர் அறு சுடர் அடி தொழுது எழு என் மனனே,' என்கிறார். [2] 'ஆயின், இவர் தாம் முற்படக் குணங்களில் இழிந்து பேசுதற்குக் காரணம் யாது?' எனில், தாம் அகப்பட்ட துறை அக்குணங்களாகையாலே அவற்றையே முதன்முன்னம் பேசுகிறார். இறைவன், இவரைக் குணத்தை இட்டாயிற்று வணங்குவித்தது.

உயர்வு அற உயர்நலம் உடையவன் யவன் - பகவானுடைய ஆனந்தத்தைப் பேசப்புக்க வேதங்கள் மனிதர்களுடைய ஆனந்தம் தொடங்கிப் பிரமானந்தத்து அளவும் சென்று பின்னையும் அதற்கு மேல் [3] உத்பிரேக்ஷித்துக்கொண்டு சென்று பின்னையும் அளவிட்டு அறியமாட்டாது, [4] 'அந்த ஆனந்த குணத்தினின்றும் மனத்தோடு வாக்குகள் திரும்புகின்றனவோ' என்கிறபடியே மீண்டன; இவ்வாறு மீண்டமையும் ஆனந்தகுணம் ஒன்றைப் பற்றியேயாம்; குணங்கள் எல்லாம் இப்படியே அன்றோ இருப்பன? இக்குணங்கள் எல்லாம் தமக்கு நிலையமாகப் பேசுகிறார் இவர். [5] இறைவனின் வேறுபட்ட எல்லாப் பொருள்களிலும் எல்லா வகையாலும் வருகின்ற மேன்மையினை ஈண்டு '**உயர்வு**' என்கிறார். அற - அம்மேன்மை இன்றியே ஒழிய; ஈண்டு 'அற' என்றது, மற்றைத் தெய்வங்கள் உயர்வே இல்லாதவர்கள் என்பதனைக் குறிக்க வந்தது அன்று; இறைவனுடைய மேன்மையினையும் பிற தெய்வங்களினுடைய

---

1. *ஸ்ரீராமா. கிஷ்.* 4 : 12. *இது, அனுமன் கேட்ட கேள்விக்கு இலக்குமணன் கூறும் விடை.*

2. *முதற்பாட்டுக்கு இரண்டுவகையில் அவதாரிகை. ஒன்று, 'மனமே, நமக்குப் பல உதவிகளைச்செய்த இறைவனுடைய் திருவடிகளை வணங்கு,' என்பது. மற்றொன்று, 'இறைவன் நற்குணக்கடலாதலின், இளைய பெருமாளைப்போன்று, நீயும் குணங்கட்குத் தோற்று அவனை வணங்கு,' என்பது. இரண்டாவது அவதாரிகை, 'உயர்வற உயர்நலமுடையவன், துயரறு சுடர்அடி தொழுதெழு' என்பதில் நோக்காக எழுந்தது.*

3. *உத்பிரேக்ஷித்தல் - தாம் எண்ணியவாறு புனைந்துரைத்தல்; தற்குறிப்பேற்றம்.*

4. *தைத்திரீ. ஆன.* 9 : 1.

5. *'உயர்வற உயர்நலமுடையவன் யவன்' என்றதனை நோக்கிப் 'பேசுகிறார் இவர்' என்கிறார்.*

மேன்மையினையும் பார்த்தால், சூரியன் முன் நட்சத்திரங்கள் போலவும், மஹாமேருமலையின் உச்சியில் நின்றவனுக்குக் கீழுள்ள கடுகு முதலியவை போலவும், உள்ளனவாக இருக்கச்செய்தே இல்லை என்னலாம்படி இருக்கையைத் தெரிவித்தபடி. இதனால், அவர்கள் உயர்வின் சிறுமையைத் தெரிவித்தபடி. இனி, [1] 'உயர்வற' என்பதற்கு, 'எல்லாருக்கும் உயர்வு உண்டாகும் போது வருத்தமுண்டு; அப்படி வருந்த வேண்டுமோ?' என்றால், 'உயர்வற உயராநிற்கும்' என்று உரைத்தலுமாம். உயர்வு - வருத்தம். இத்தைப் பற்றியே ஸ்ரீ ஆளவந்தாரும் [2] 'ஸ்வாபாவிகம்' என்று அருளிச்செய்தார்.

'ஆயின் மற்றையோருடைய உயர்வுகளை எல்லாம் இல்லை என்னலாம்படி செய்தால் தனக்கு ஓரெல்லை உண்டாய் இருக்குமோ?' என்னில், உயர் - காலம் என்னும் ஒரு பொருள் உள்ள வரையில் அனுபவித்தாலும் அப்பாற்பட்டு, வாக்காலும் மனத்தாலும் அளவிட்டு அறிய முடியாதபடி உயராநிற்கும். ஆயின், [3] 'செல்வம், அழிதலை முடிவாகவுடையன; உயர்வு, இறங்குதலை முடிவாகவுடையன; சேர்க்கை, பிரிதலை முடிவாகவுடையன; வாழ்தல், சாதலை முடிவாகவுடையன,' என்கிறபடியே, இங்குக் கூறப்படும் உயர்வும் ஒரு காலத்தில் தாழுமோ?' எனின், அன்று; 'உயர்' என்ற சொல்லால் இவ்வளவு என்று அளவிட்டுக் கூற முடியாமையைக் கூறியபடி. 'ஆயின், [4] கரை கட்டாக் காவிரி போன்று குணங்கள் பரந்திருந்தால் இவற்றுள் யாதாயினும் ஒன்று பயன் இல்லாமல் பாடு பட்டுக் கிடக்குமோ?' என்னில், நலம் - கண்ட இடம் எங்கும் பயிர் பட்டு இருக்கும் நன்செய் நிலம் போன்று எல்லாக்குணங்களும் ஒக்கக் கொள்ளத் தக்கனவாக இருக்கும். இங்கு 'நலம்' என்றது, ஆனந்த

---

1. உயர்வு என்பதற்கு, வருத்தம் என்பது நேர்ப்பொருளன்று; உயர்வு என்பது வருத்தப்பட்டு அடையவேண்டுவது ஒன்று. ஆதலால், வருத்தம் - காரணம்; உயர்வு - காரியம், ஆகவே, இங்கு வருந்துதலாகிய காரணத்தை 'உயர்வு' எனக் காரியமாக உபசரித்துக் கூறியுள்ளதாகக் கொண்டு உரைகாரர் இவ்வுரை அருளிச்செய்கின்றார் என்று கோடல் அமையும். 'அருளல்லதியாதெனில்' என்ற திருக்குறள் உரையில், ''ஊன் தின்கை' ஆகிய காரணத்தைப் 'பாவம்' எனக் காரியமாக்கிக் கூறினர்,' என்ற பரிமேலழகர் உரை இங்கு நோக்கல் தகும்.

2. ஸ்வாபாவிகம் - இயற்கை. இது, தோத்திரரத்நம். 11.

3. ஸ்ரீராமா. அயோத். 105. 16.

4. ஒரு காலத்தில் காவேரி கரை கட்டப்படாமல் இருந்ததையும், பின்னர்க் கரிகாற்பெருவளத்தானால் கரை கட்டப்பட்டமையும் இங்கு நினைவு கூர்க.

குணம் ஒன்றனையே சொல்லுகிறது. அன்றி, குணங்களின் தொகுதியினைச் சொல்லுகிறது என்றும், ஆனந்தம் உண்டாவதற்குக் காரணமான [1] விபூதிகளைச் சொல்லுகிறது என்றும் கோடலும் பொருந்தும். உடையவன் - இக்குணங்களை உள்ளவை என்று கூறுதலோடு அமையாது, இவற்றைக் கொண்டு நிரூபிக்கவேண்டும்படியாக இருப்பவன். இதனால், இக்குணங்கள் இடையில் தோன்றியவையல்ல; இறைவன் தன்மையோடு சேர்ந்தவைகளாய் இருப்பன என்பதனைத் தெரிவித்தபடி. [2] **ஆழ்வான், பிள்ளைப் பிள்ளையைப்** பார்த்து, 'நிர்க்குணம் என்பார் மிடற்றைப் பிடித்தாற்போலே ஆழ்வார் '**நலமுடையவன்**' என்றபடி கண்டாயே!' என்று பணித்தான். [3] 'அந்த இறைவன் எல்லா நற்குணங்களையும் இயற்கையாக உடையவன்'; [4] 'எங்கும் நிறைந்து இருக்கின்ற கண்ணபிரானுடைய கல்யாண குணங்கள் எல்லா உலகங்களும் சேர்ந்து பதினாயிரம் வருடங்கள் கூறினும், கூறுதற்கு முடிவு பெறுவன அல்ல;' [5] 'மகாத்துமாவாகிய ஸ்ரீ ராமன், தாதுக்களுக்கு எல்லாம் இருப்பிடமாய் இருக்கும் இமய மலையினைப் போன்று, எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாய் இருக்கின்றான்'; [6] 'அரசனே, உன்னுடைய மகனான ஸ்ரீ ராமனுக்குப் பல நற்குணங்கள் இருக்கின்றன,' என வருவனவற்றை இங்கு உணர்தல் தகும். [7] 'இயற்கையில் அமைந்தனவாய், எல்லை அற்றனவாய், மேன்மையினையுடையனவாய், எண் இல்லாதனவாய் உள்ள கல்யாண குணங்களின் கூட்டத்தையுடையவன்,' என்றார் ஸ்ரீ ஆளவந்தாரும்.

'இப்படி, குணங்கள் கரை புரண்டு இருந்தால் இக்குணங்களாலே தனக்கு நிறமாகும்படி இருக்கின்றானோ இறைவன்?' என்னில், அங்ஙன் இரான்; தன்னைப் பற்றிக் குணங்கள் நிறம் பெறவேண்டும்படி இருக்கின்றான் இறைவன் என்பதனை அருளிச் செய்கிறார் '**யவன்**' என்ற சொல்லால். [8] 'உப்புக்கட்டி உள்ளும் புறமும் உப்புச்சுவையே ஆயினாற்போன்று, இறைவன் உள்ளும் புறமும் ஞானமயமாய் இருக்கின்றான்,' என்ற பிரசித்தமான பிரமா

1. விபூதி - உலகம்.
2. ஆழ்வான் — கூரத்தாழ்வான்.
3. ஸ்ரீ விஷ்ணுபு. 6. 5 : 84.
4. வியாசபார. வீடுமபருவம்.
5. ஸ்ரீராமா. கிஷ். 15 : 20.
6. ஸ்ரீராமா. அயோத். 2 : 26.
7. ஸ்தோத்திரரத்தினம். 11.
8. பிரஹதா. உபநி. 6. 5 : 23.

ணத்தைப் பற்ற 'யவன்' என்கிறார். [1] இதனால், குணங்களை வேண்டாத இறைவனுடைய பிரசித்தியைச் சொல்லுகிறார் என்றுதல், குணங்களோடு கூடி இருக்கின்ற இறைவனுடைய வேறுபாட்டினைச் சொல்லுகின்றார் என்றுதல் கொள்க. அவன் - இதற்கு அப்பால் ஓர் உபகாரத்தைச் சொல்ல நினைந்து கீழ் நின்ற நிலையை அமைத்து மேலே [2] தோள்படி கொள்ளுகிறார். 'அவ்வுதவி தான் யாது ?' என்னில், மயர்வு அற - ஞாநாநுதயம், அந்யதா ஞானம், விபரீத ஞானம் என்கிற இவை [3] வாசனையோடே போகும்படியாக. ஞாநாநுதயமாவது, தேகத்தையே ஆத்துமாவாக நினைத்தல். அந்யதா ஞானமாவது பிற தெய்வங்கட்குத் தன்னை அடிமையாக நினைத்தல். விபரீத ஞானமாவது, தனக்குத்தானே உரியவனாகவும் ஆத்துமாவோடு அனுபவிக்கின்ற இன்பமே இன்பமாகவும் நினைக்கும் [4] கேவலனுடைய ஞானம். தம் திருவாயாலே 'மயர்வற' என்று சொல்லலாம்படி காணும் இறைவன் தான் இவர்க்கு அறிவு இன்மையை வாசனையோடே போக்கினபடி. மதி நலம் - ஞான பத்திகள் இரண்டனையுந் தந்தான் என்று [5] கூறுவாரும் உளர். இனி, நலம் மதி என முன்பின்னாகக் கூட்டி 'நலமான மதி' என்று பொருள் கொண்டு, 'முளைக்கும்போதே வயிரம் பற்றி முளைக்கும் [6] பொருள்களைப்போலே

---

1. இதனால் - 'யவன்' என்கிற இதனால். 'குணங்களை வேண்டாத இறைவனுடைய பிரசித்தியைச் சொல்லுகிறார்' என்பதற்கு இயைய, 'யவன் உயர்வற வுயர்நல முடையவன்' என 'யவன்' என்னும் சொல்லை முன்னே கூட்டிப் பொருள் கொள்க. இரண்டாவது பொருளுக்குச் சொற்களை உள்ளவாறே கொள்க.

2. தோள்படி கொள்ளுதலாவது, அரசன் யானைமீது வீற்றிருத்தற்கு ஏதுங்காலத்துச் சாமந்தர் தோள்களைப் படியாகக்கொள்ளுதல்.

3. முன்பு செய்து போந்தவற்றில் மீளவும் மூளுகைக்கு உறுப்பான சம்ஸ்காரம் 'வாசனை' எனப்படும்.

4. கேவலன் ஆவான், கைவல்ய நிஷ்டன். கைவல்யமாவது, ஆத்துமானுபவம். ஒரு பெண்ணானவள் பதியோடு சேர்ந்து பதியினுடைய குணம் உருவம் செல்வம் முதலியவற்றை அனுபவிப்பதை விட்டுத் தான் தனியே இருந்துகொண்டு, தன் அழகினைத் தான் அனுபவிப்பது போன்று, விரசைக்கு அக்கரையில் பரமபதத்துக்கு வெளியில் ஒரு மூலையில் இருக்கும் கைவல்ய லோகத்தில் தன்னைத்தானே அனுபவிப்பது.

5. 'கூறுவாருமுளர்' என்றது, இராமாநுசருக்கு முன்னர் இருந்த பெரியார்களை.

6. பொருள்கள் - கருங்காலி மரம் முதலியவை.

பத்தியின் உருவத்தை அடைந்த ஞானத்தைத் தந்தான் என்கிறூர்,' என்று **பட்டர்** அருளிச்செய்வர். கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டாகக் கூடியது பத்தி. அந்தப் பத்தியின் நிலையிலே இறைவனுடைய திருவருள் நிற்க, பின்னர்த் தொண்டு செய்வதற்குக் காரணமாய் முன்னே உண்டான பத்திதான் இவ்வாழ்வாருடைய பத்தி. 'ஆழ்வார் [1] பிரபந்நரோ, பத்தி நிஷ்டரோ?' என்று **எம்பாரை**ச் சிலர் கேட்க, 'ஆழ்வார் பிரபந்நர்; பத்தி இவர்க்கு [2] தேக யாத்ரா சேஷம்,' என்று அருளிச்செய்தார். 'எவ்வாறு?' எனின், 'நாம் அனைவரும் பிரபந்நர்களாய் இருப்பினும், ஓர் ஆண்டிற்கு அல்லது ஆறு மாதங்கட்கு வேண்டும் உணவுப் பொருள்களை முன்னரே தேடிக்கொள்ளுகின்ரோம் அன்ரோ? அது போன்று, [3] 'உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனே'யாவான் இவர்க்கு.

அருளினன் - ஒரு விதக்காரணமும் பற்ருமல் அருளிக் கொண்டு நிற்கக் கண்ட இத்தனை. இறைவன் திருவருள் புரிதற்கு முன்னர் ஆழ்வார் தம்மை இல்லாத பொருளுக்குச் சமமாக நினைத்திருந்தார் ஆதலின், 'எனக்கு அருளினன்' என்றிலர். இனி, தாம் விரும்பாமல் இருக்கவும், மார்பின் கடுப்பாலே தரையிலே பாலைப் பீச்சுவாரைப் போன்று, தாஞகவே அருள் செய்துகொண்டு நின்ருன் ஆதலின், 'அருளினன்' என்கிருர் எனலுமாம். [4] 'மிக்க பெருமையோடு கூடியவனும் எல்லாப் பொருள்களையும் நியமிக்கின்றவனுமான

---

1. *பிரபந்நர் - பிரபத்தி நெறியில் நின்றவர். பிரபத்தி என்பது, இறைவனைப் பற்றுதற்குரிய நெறிகளுள் ஒன்று; 'பிரபத்தி' என்பதற்கு நன்ருக அடைதல் என்பது பொருள். 'அடியேன் நான் முயற்சி இன்றி நின்னருளே பார்த்திருப்பன் நீசனேனே,' என்கிறபடியே அடைந்திருத்தல். பத்தி நிஷ்டர் - பத்தி நெறியில் நின்றவர்.*

2. *தேகயாத்ராசேஷம் - உடல் உயிரோடு கூடி நிலைத்திருப்பதற்குக் காரணமாக இருப்பது. அதாவது, நாம் உடலோடு கூடி வாழ்ந்து இருப்பதற்கு உணவு இன்றியமையாதது போன்று, ஆழ்வார், தம் உடலோடு கூடி வாழ்ந்து இருப்பதற்குப் பத்தி இன்றியமையாதது என்பதாம். 'பத்தி' என்றது, பத்தி காரணமாகச் செய்யப்படும் கைங்கரியங்களை.*

3. *'பத்தி அல்லது பத்தியிஞற் செய்யப்படும் கைங்கரியங்கள், உணவினைப்போன்று தேகயாத்திரைக்குக் காரணமாமோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'உண்ணுஞ்சோறு' என்று தொடங்கி. இது, திருவாய்.* 6. 7 : 1.

4. *தைத். நாராயண.* 6 : 10.

பரம்பொருள் தனது நிர்ஹேதுக கிருபையால் எப்பொழுது எவனைப் பார்க்கின்றானோ, அப்பொழுது அவன் சோகம் நீங்கினவன் ஆகின்றான்,' என்று உபநிடதம் புகலும். 'ஆயின், இத்தலையில் நினைவு இன்றியே இருக்கவும், வந்து அருளினன் தன் அருள் கொள்வார் இல்லாதான் ஒருவனோ?' என்னில், அயர்வு அறும் அமரர்கள் அதிபதி - தான் அருளாத அன்று [1] சத்தை இன்றிக்கே இருப்பாரை ஒரு நாடாகவுடையவன். அயர்வாவது, மறதி. அஃது இன்றிக்கே இருப்பவர்கள், அயர்வறும் அமரர்கள். அவர்கள், நித்தியர்கள். [2] மறதி இருந்து பின் நீங்கினவர்கள், முத்தர்கள். அவரின் வேறுபட்டவர்கள் இவர்கள். ஈண்டு 'அமரர்கள்' என்றது, கேவலம் மரணம் இல்லாதவர்கள் என்பதனைக் குறிக்க வந்தது அன்று; பகவானுடைய அனுபவம் தடைபடுமேயானால், அப்பொழுது தங்களை உள்ளவர்களாகக் கருதாதவர்கள் என்பதனைத் தெரிவிக்க வந்தது. அதாவது, பிரிவில் தரியாதவர்கள் என்றபடி. [3] 'இராகவரே, உம்மைப் பிரிந்து பிராட்டி பிழைக்க மாட்டாள்; நானும் பிழைக்க மாட்டேன்,' என்பது இளைய பெருமாள் திருவார்த்தை. 'அமரர்கள்' என்பதில் 'கள்' விகுதிமேல் விகுதி, சத்தியலோகம் முடிவாக உள்ள இவ்வுலகங்கள் எல்லாம் காற்பங்காகவும், மோக்ஷ உலகம் முக்காற் பங்காகவும் உள்ள பெருமையினைக் குறிக்க வந்தது.

மோக்ஷ உலகத்திலிருப்பவர்கள் எல்லாவகையாலும் இறைவனை ஒத்திருப்பவர்களாய் இருக்கையாலே, ஓலக்கம் இருக்குங்காலத்திலே தான் அவர்களுக்கும் அவனுக்கும் வாசி அறியலாமாதலின், 'அமரர்கள் அதிபதி' என்கிறார். 'ஆயின், ஓலக்கம் இராத காலத்தில் அறியுமாறு யாங்ஙனம்?' எனின், பிராட்டி மாராலேயாதல், ஸ்ரீ கௌஸ்துபம் முதலியவைகளாலேயாதல் சேஷி என்று அறியுமத்தனை. 'ஆயின், இப்படி இருக்கிற இவர்கள் பலராகத் தான் ஒருவனாக இருப்பதனால், இவர்களைப் பின் பற்றிக்கொண்டு தன்னுடைய [4] சேஷியாந்தன்மை ஆகும்படி இருக்கின்றானோ இறைவன்?' என்னில், அதிபதி - அவர்களுக்கும் 'தொட்டுக்கொள்'

---

1. சத்தையின்றிக்கேயிருப்பார் - நித்தியசூரிகள். 'ஒரு நாடு' என்றது, ஈண்டுப் பரமபதத்தைக் குறித்தது.

2. நித்தியர்கள் எப்பொழுதும் மறதியில்லாதவர்கள்; 'அயர்வறும்' என்பது எப்பொழுதும் மறதியின்மையினைக் குறிக்கவந்த இயற்கையடை.

3. ஸ்ரீராமா. அயோத். 53 : 31.

4. சேஷி - தலைவன்; இறைவன்.

தொட்டுக்கொள்' என்ன வேண்டும்படி [1] யானைக்குக் குதிரை வைத்து அவ்வருகாய் இருப்பான் என்பதாம். இனி, அதிபதி - தலைவன் என்று கோடலுமாம்.

இதற்கு அப்பால், விக்கிரகத்தின் வேறுபாட்டினைச் சொல்ல ஒருப்பட்டுக் கீழ் நின்ற நிலையினைக் [2] குலுக்கி '**அவன்**' என்று அவ்வருகே போகிறார். துயர் அறு சுடர் அடி - துயர் அறுக்குஞ் சுடர் அடி என்று முன்புள்ள [3] முதலிகள் அருளிச்செய்வர்; அதாவது, எல்லா ஆத்துமாக்களினுடைய எல்லாத் துன்பங்களையும் போக்குதலையே தம் இயல்பாகவுடைய திருவடிகள் என்பதாம். இனி, [4] **எம்பெருமானார்**, [5] 'ஸ்ரீ ராமன், தன் கீழ் வாழும் மக்கட்குத் துன்பம் வருங்காலத்துத் தானும் துன்பத்தை அடைந்தவன் ஆகின்றான்' என்று கூறுகின்றது ஸ்ரீராமாயணம்; இதனால், துன்பத்தை நீக்குதலும் அவனதாக இருக்கும் என்பதும், மக்கள் இன்புறுங் காலத்துத் தானும் இன்புறுகின்றான் என்பதும் பெறப்படும். அது போன்று, இவர் துயர் அறத்தான் துயர் தீர்ந்தானாய் இருக்கை. இத்தால், [6] இவர் மயர்வு அற அவன் துயர் அற்றபடி,' என்று அருளிச் செய்வர். சுடர் அடி - எல்லையற்ற ஒளி உருவமான திவ்விய மங்கள விக்கிரகத்தைச் சொல்லுகிறார். சுடர் - [7] பஞ்ச சத்தி மயமான புகரை அருளிச்செய்கிறார். அடி - அடியவன் இறைவனிடத்தில் விரும்புவது திருவடிகளை. பால் குடிக்கும் குழந்தைகள், தம் தாயின் மார்பிலே

---

1. 'யானைக்குக் குதிரை வைத்தல்' என்றது, பிடி கொடுக்குமாறு போன்று இருந்து பிடி கொடாமையைப்பற்ற. யானைக்குக் குதிரை வைக்கையாவது, யானையின் வேகத்தைப் பரீக்ஷிக்கின்றவர்கள், குதிரையை முன் நடத்தி யானையைப் பின் நடத்துவார்கள்; யானையும் துதிக்கையாலே குதிரையைத் தொடும்படி கிட்டச் சென்று பின்னையும் தொடமாட்டாதே ஒழியும். அப்படியே, நித்தியசூரிகட்கும் அப்பாற்பட்டவன் இறைவன் என்றபடி.

2. குலுக்குதல் - விக்கிரகத்தின் இனிமையினை அனுபவித்தற்கும் இடம் உண்டாகும்படி செய்தல்.

3. முதலிகள் - முதன்மையினையுடையவர்கள்; பெரியோர்கள்.

4. எம்பெருமானார் - இராமாநுசர்.

5. ஸ்ரீராமா. அயோத். 2 : 42.

6. 'இவர்' என்றது ஆழ்வாரை; 'அவன்' என்றது இறைவனை.

7. பஞ்ச சத்திகள் - பரமேஷ்டி, புமான், விஸ்வம், நிவிருத்தி, சர்வம் என்பன. இவ்வுலகம் ஐந்து பூதங்களால் ஆக்கப்பட்டது. அவ்வுலகம் பஞ்சசத்திகளாலாயது என்பர்.

வாய் வைக்குமாறு போன்று, இவரும் [1] 'உன் தேனே மலருந் திருப்பாதம்' என்கிற [2] திருவடிகளிலே வாய் வைக்கிறார்.

தொழுது - நித்திய சமுசாரியாகப் போந்த இழவு எல்லாந் தீரும்படி ஆத்துமாவின் தன்மைக்கு ஏற்ற தொழிலை (தொழுதலை)ச் செய்து. எழு - [3] 'கடவுளை உள்ளபடி அறிதல் என்பது இல்லையானால் அவன் இல்லாதவன் ஆகிறான்,' என்னும் நிலை கழிந்து, 'கடவுளை உள்ளபடி அறிதல் என்பது உண்டானால் அவன் உள்ளவன் ஆகிறான்,' என்கிறவர்கள் கோட்டியிலே எண்ணலாம்படியாக நன்னெறியில் செல்லப் பார்ப்பாய். [4] அடியிலே தொழாமையால் வந்த குறைவு தீரும்படி அடியிலே தொழுது பிழைப்பாய்,' என்கிறார். என் மனனே - இப்போதாயிற்று தம்மைக் கண்டது; 'அருளினன்' என்று நின்ற இத்தனையே முன்பு. இருவர் கூடப் [5] பள்ளியில் ஓதியிருந்தால், அவர்களுள் ஒருவனுக்கு உயர்வு உண்டாயின், மற்றையவன் அவனோடே ஒரு சம்பந்தத்தைச் சொல்லிக்கொண்டு கிட்டுமாறுபோன்று [6] 'மனமே மனிதர்கள் உலக பாசத்தாற் கட்டுப்படுவதற்கும், உலக பாசத்தினின்று நீங்குவதற்கும் காரணமாக இருக்கின்றது,' என்கிற படியே, நெடுநாள் பிறப்பிற்குக் காரணமாகப் போந்தது இப்போது முந்துற்ற நெஞ்சாய் முற்பட்டு நிற்கிறபடியாலே அத்தோடு தமக்கு ஒரு சம்பந்தத்தை ஆசைப்பட்டு '**என் மனனே**' என்கிறார்.

'பாட்டை முடியச்சொல்லி, ஈற்றில் 'அவன்' என்று கூறின் அமையுமே? அடிதோறும் 'அவன், அவன்' என்று 'கூறுவதற்குக் கருத்து யாது?' எனின், இவ்வாழ்வார்தாம், [7] இத்திருவாய்மொழியில் இறைவனுடைய இறைமைத்தன்மையினை ஆயிற்று அருளிச் செய்கிறது; அவ்விறைமைத்தன்மைக்கு ஒவ்வோரடியிலும் கூறுகின்ற அவ்வக்குணமே வேறு குணங்களை வேண்டாததாய் இருத்தலின், அங்ஙனம் அருளிச்செய்கின்றார்.

---

1. *திருவாய்.* 1. 5 : 5.

2. *திருவள்ளுவரும் தமது திருக்குறளில் கடவுள் வாழ்த்தில் எழு திருக்குறள்களால் திருவடிகளையே கூறல் ஈண்டு நினைவு கூர்க.*

3. *தைத்திரீய. ஆன* : 6.

4. *அடியில் - முதற்காலத்தில், அடியிலே - திருவடிகளில்.*

5. *பள்ளியிலோதியிருந்தால்-பள்ளிக்கூடத்தில் கல்வி கற்றிருந்தால்.*

6. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 6. 7 : 28.

7. *'இத்திருவாய்மொழி' என்றது, 'உயர்வற' என்பது முதலாகவுள்ள பத்துப்பாசுரங்களையும். பத்துப் பாசுரங்கள் கொண்டது ஒரு பதிகத்தைத் 'திருவாய்மொழி' என்று அருளிச்செய்வர் என்று முற்கூறியதை நினைவுகூர்க.*

'உயர்வு அற உயர்நலம் உடையவன் யவன்? அவன் மயர்வு அற மதி நலம் அருளினன்; மயர்வு அற மதி நலம் அருளினன் யவன்? அவன் அயர்வு அறும் அமரர்கள் அதிபதி; அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன்? அவன் துயரறு சுடரடி தொழுது எழு,' என்று ஒரே தொடராகக் கொள்க. இனி, 'உயர்வற உயர்நலம் உடையவன் யவன் அவன், துயரறு சுடரடி தொழுது எழு; மயர்வற மதிநலம் அருளினன் யவன் அவன், துயரறு சுடரடிதொழுது எழு' எனத் தனித்தனி தொடராகக் கோடலும் பொருந்தும் அங்ஙனம் கொள்ளுமிடத்து, [1] 'கிருஷ்ணரே! முன்பக்கத்திலும் வணக்கம்; தேவரீர்பொருட்டு பின்பக்கத்திலும் வணக்கம்,' என்று அருச்சுனன் பல முறை வணக்கங்கூறியதுபோன்று, இங்கும் பல முறை வணக்கங் கூறியதாகக் கொள்க. ஆயின், 'உயர்வற உயர்நலம் உடையவன் அயர்வறு மமரர்கள் அதிபதி' என்று இறைவனுடைய தன்மைகளை ஒருசேரக் கூறி, பின் அவன் செய்த உதவியை 'மயர்வற மதிநலம் அருளினன்' என்ன வேண்டியிருக்க, 'உயர்வற உயர்நலமுடைய வன்' என்ற பின்னர், 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்று அவ்வளவும் போகமாட்டாமல் [2] உபகாரத்தின் நினைவாலே 'மயர்வற மதி நலம் அருளினன்' என்கிறார்.

இப்பாட்டால், 'இறைவனுக்குக் குணமில்லை; விக்கிரகம் இல்லை; விபூதி இல்லை' என்று சொல்லுகின்றவர் எல்லாரும் மறுக் கப்பட்டவராவர். அவர்களை எதிரிகளாக்கிச் சொல்ல வேண்டா; தமது மதத்தை நிலை நிறுத்தவே, மற்றைய மதங்கள் மறுக்கப் பட்டனவாம். [3] நெற்செய்யப் புல்தேயுமா போலே, தாமாகவே மறுக் கப்பட்டவர் ஆவர்கள் அவர்கள். 'உயர்வற உயர்நலம் உடை யவன், அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்கையாலே [4] பிராப்பிய வேஷம் சொல்லிற்று; 'மயர்வற' என்கையாலே விரோதி போன படி சொல்லிற்று; 'அருளினன்' என்கையாலே அவனே சாத னம் என்றது; 'தொழுது எழு' என்கையாலே [5] பிராப்தி பலமான கைங்கரியத்தைச் சொல்லிற்று; 'என் மனனே' என்கையாலே பரிசுத்தமான அந்தக்கரணத்தையுடையவனே அதிகாரி என்னு மிடம் சொல்லிற்று.

---

1. *பகவத்கீதை.* 11 : 40.

2. *இறைவன் செய்த உபகாரங்களை இத்திருப்பாட்டின் அவதாரி கையின் முதலிலே காண்க.*

3. *'நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல நெடும்பகை*
*தற்செய்யத் தானே கெடும்'*

*என்பது பழமொழி நானூறு, செய்.* 53.

4. *பிராப்பிய வேஷம்-அடையப்படுகின்ற இறைவனுடைய தன்மை.*

5. *பிராப்தி பலமான கைங்கரியம்-அடைதற்குப் பலமான தொண்டு.*

2

**மனன்அகம் மலம்அற மலர்மிசை எழுதரும்**
**மனன்உணர் வளவிலன் பொறிஉணர் வவைஇலன்**
**இனன்உணர் முழுநலம் எதிர்நிகழ் கழிவினும்**
**இனன்இலன் எனனுயிர் மிகுநரை இலனே.**

**பொ-ரை:** 'மனத்தின் குற்றங்கள் எல்லாம் நீங்க, பின்பு மலர்ந்து, மேலே எழுகின்ற மனத்தினுடைய யோக ஞானத்தால் அறியப் படுகின்ற ஆத்துமாவின் தன்மையினையுடையன் அல்லன்; இந்திரியங் களால் அறியப்படுகின்ற உலகத்துப் பொருள்களின் தன்மையினை யுடையவன் அல்லன்; எதிர்வு நிகழ்வு இறப்பு என்னும் முக்காலங் களிலும் தனக்கு ஒத்தாரை இல்லாதவன்; மிக்காரையும் இல்லாதவன்; ஞான ஆனந்தமயமாக இருப்பவன்; இத்தகைய இறைவன் என் னுடைய சிறந்த உயிர் ஆவான்' என்றவாறு.

**வி - கு:** 'மனனகம்' என்பதில் அகம் ஏழனுருபு. 'அற மலர்ந்து எழுதரும் உணர்வு' என முடிக்க. முதலிலுள்ள உணர்வு என்னுஞ் சொல் ஈண்டு உயிரைக் காட்டிற்று. இரண்டாவது உணர்வு, உணரப் படுகின்ற பொருள்களைக் குறித்தது. 'எனனுயிர்' என்பதனை எனன், உயிர் எனப்பிரிக்க. மிகுநர், ஒரு சொல். ஐ என்பது, இரண்டனுருபு.

**ஈடு:** இரண்டாம் பாட்டு. [1]'எவனிடத்திலிருந்து இந்தப் பொருள்களெல்லாம் உண்டாகின்றனவோ, எவனால் உண்டானவை பிழைக்கின்றனவோ, அழிவினை அடைந்து பிரளயத்தில் எவனை அடைகின்றனவோ அவனை அறிவாய்; அவன்தான் பரம்பொருள்,' என்று மறைமொழி கூறியவாறே, [2]காரிய வடிவமான உலகத்தை முன்னர்க்கூறி, 'அவ்வுலகத்திற்கு எல்லாம் காரணமாக விளங்கு கின்ற இறைவன் ஒருவன் உளன்; அவன் தியானம் செய்யத் தக்கவன்,' என்று கூறுதல் ஒரு முறை; அவ்வாறு அன்றி, இறைவனை முன்னர்க் கூறி, பின்னர் அவனால் படைக்கப்பட்ட உலகங்களைக் கூறுதல் ஒரு முறை; இவ்விருமுறைகளுள் ஒன்றிலும் செல்லாது முற்படக் குணங்களிலே இழிவான் என்?' என்னில்,

---

1. தைத்திரிய. பிருகு. 1.

2. "காணப்பட்ட உலகாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின், 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என உலகின்மேல் வைத்துக் கூறினாரேனும், 'உலகிற்கு முதல் ஆதிபகவன்' என்பது கருத்தாகக் கொள்க' என்னும் பரிமேலழகருரை ஈண்டு ஒப்பு நோக்கல் தகும். (திருக்குறள். 1. பரி.)

சர்வேஸ்வரன் தம்மை வசீகரித்தது குணங்களைக் காட்டியாகையாலே, தாம் அகப்பட்ட துறையிலே முற்பட இழிந்து பேசினுர்; அக் குணங்கள்தாம் உருவினைப் பற்றி அல்லது இராமையாலே அவற் றுக்குப் பற்றுக்கோடான உருவினை '**அவன்**' என்று அருளிச் செய்தார் முதற்பாட்டில். அங்கு எடுத்துக் கூறப்பட்ட இறைவன் [1] எக்குற்றமும் தன்னைச் சாராது இருக்குந் தன்மையாலும் (ஹேயப் பிரத்யநீகதை), [2] எல்லா நற்குணங்கட்கும் இருப்பிடமாய் இருக்குந் தன்மையாலும் (கல்யாணகுணைகதாநதை) [3]உயிர்ப்பொருள் உயிரல் பொருள் ஆகிய இவற்றிற்கு முற்றிலும் வேறுபட்டிருப்பவன் என்று அவ்விறைவனை அனுபவிக்கிறுர் இப்பாட்டில்.

மனனகம் மலம்அற மலர்மிசை எழுதரும் மனன் உணர்வு அளவு இலன் - இதனுல், உயிர்களின் தன்மையைக்காட்டிலும் இறைவனுடைய தன்மை வேறுபட்டு இருக்கும் என்கிறுர். 'ஆயின், 'மனனகம் மலமற மலர்மிசை எழுதரும்' என்று இத்துணை அடை மொழிகளைச் சேர்த்துக் கூறுங்கருத்து யாது?' எனில், இறைவ னுடைய வேறுபட்ட தன்மையினை உணர்ந்து உணர்ந்து இன்புறு கின்ற இவ்வாழ்வாருடைய அனுபவ முறை இருக்கிறபடி. மனன் என்றது, மனம் என்றபடி. அகம் - உறுப்புகள் இல்லாத மனத்திற்கு ஓர் உள்ளும் புறம்பும் இல்லாமையாலே, 'மனனகம்' என்றது, மனத்திலே என்றபடி. இனி, மனமானது வெளிப்பொருள்களிலும் உட்பொருளிலும் செல்லுந்தன்மையது; இவ்விரண்டனுள் வெளிப் பொருள்களில் செல்லாது உட்பொருளில் மட்டும் செல்லுகின்ற மனம் என்று பொருள் கோடலுமாம். இப்பொருளுக்கு 'அகம் மனம்' என முன்பின் மாற்றுக. மலம் அற - மனத்தினிடத்தில் உண்டான அறிவின்மை முதலிய குற்றங்கள் முழுதும் நீங்க. உயிர்களும் அழிவற்றவை; ஞானமும் அழிவற்றது; ஆகையால், இக்குற்றங்கள் உயிர்களைச் சேர்ந்தவையும் அல்ல; ஞானத்தைச் சேர்ந்தவையும் அல்ல; உயிரினுடைய [4] தர்மபூத ஞானத்துக்குத் தோற்றம் மறைவுகளை வழங்குவது ஞானம் பரவுதற்கு வழியாக உள்ள

---

1. 'எக்குற்றமும் தன்னைச் சாராதிருக்கும் தன்மை இப்பாட்டில் கூறப்பட்டிலதே?' எனின், 'முழுநலம்' என்று கூறினமையின், எக்குற்ற மும் தன்னைச் சாராதிருக்குந் தன்மையும் தானே பெறப்படுதலின், அதனையும் கொண்டு கூறினுர். இவ்விரண்டும் ஒன்றுள்ள இடத்தில் மற்றென்று இராது என்க.

2. 'முழுநலம்' என்றதில் நோக்கு.

3. 'மனன் உணர்வு அளவிலன்; பொறி உணர்வு அவை இலன்', என்றதில் நோக்கு.

4. தர்மபூதஞானம் - தர்மமான அறிவு; கான் படிக்கிறேன்; நான் உணர்கிறேன்', என்பன போல உண்டாகும் அறிவு.

மனத்தைப் பற்றியேயாம்; ஆக, ஞானம் செல்லுதற்கு வழியாக இருக்கின்ற மனத்தினைப் பற்றிக் கிடக்கின்ற குற்றங்கள், யோக நூல்களிற்கூறுகிற முறையிலே, வெளிப்பொருள்களில் ஈடுபட்ட மனத்தை உட்பொருளை நோக்கச் செய்து [1] இயமம் நியமம் முதலிய முறைகளைக் கொண்ட அளவில் கழியக்கடவது என்றபடி.

பின், மலர்-மலர்ந்து, மிசை-மேல் நோக்கி, எழுதரும்-கொழுந்து விட்டு மேன்மேல் எனக் கிளராநின்றுள்ள, மனன் உணர்வு - மன அறிவு; இப்படி மலர்ந்து கொழுந்துவிட்டு மேன்மேல் எனக் கிளரா நின்றுள்ள மன அறிவினால் அறியப்படுவதாக இருக்கும் உயிர்; அளவு இலன் - 'அவ்வுயிரினுடைய அளவையுடையவன் அல்லன் இறைவன். 'உயிரின் தன்மை, மன அறிவினாலே அறியக்கூடியதாக இருக்கும்; இறைவன் தன்மை அங்ஙனம் இராது,' என்பதற்குக் கருத்து என்?' என்னில், ஒரே இந்திரியத்தால் அறியப்படுகின்ற தன்மையும் இல்லை என்கை. 'எங்ஙனம்?' எனின், பொன்னும் கரியும் முற்றும் வேறுபட்டு இருக்கவும், இவ்விரண்டனையும் அறியுங் கருவியாகிய கண் ஒன்றாகவே இருக்கின்றது அன்றோ? அவ்வாறு, ஒரே பிரமாணத்தால் அறியத்தக்க ஒப்புமையும் இல்லை என்கை. 'ஆயின், [2] 'மிக்க தூய்மையோடு கூடிய மனத்தால் அறியப் படுகிறான் இறைவன்,' என்னும் நூற்கருத்தோடு முரணுகாதோ?'

---

1. *இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. இவை யோகத்திற்குரிய எண்வகை உறுப்புகள்.*

*'பொய்கொலை களவே காமம் பொருணசை*
*இவ்வகை ஐந்து மடக்கிய தியமம்'.*

*'பெற்றதற் குவத்தல் பிழம்புநனி வெறுத்தல், கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை, பூசனை பெறும் பயம் ஆசாற் களித்தலொடு, நயனுடை மரபின் நியமம் ஐந்தே'.*

*'நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தலென்று, ஒத்த நான்கினொல்கா நிலைமையொடு, இன்பம் பயக்குஞ் சமய முதலிய, அந்தமில் சிறப்பின் ஆசனமாகும்.'*

*'உந்தியொடு புணர்ந்த இருவகை வளியும்*
*தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை.*
*பொறிஉணர் வெல்லாம் புறத்தின் வழாமை*
*ஒருவழிப் படுப்பது தொகைநிலை யாமே.*
*மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறைநிலை.*
*நிறுத்திய அம்மனம் நிலைதிரி யாமல்*
*குறித்த பொருளொடு கொளுத்துதல் நினைவே.*
*ஆங்ஙனம் குறித்த அம்முதற் பொருளொடு*
*தான்பிற னாகாத் தகையது சமாதி'*

*என்னுஞ் சூத்திரங்களை உணர்க.*

2. *வேதவாக்கியம்.*

என்னில், [1] ' இவ்வளவு மாத்திரமும் அல்லன் ; இப்படிப்பட்ட பொருள் வேறு இல்லை,' என்று அறிந்தால் அறியலாமன்றி, இப்படிப் பட்டது, இவ்வளவினையுடையது ' என்று அளவிட்டு அறிய முடியாது என்கை. ' ஆயின், மனன் உணர்வு அளவு இலன் என்பதற்கு மன அறிவினுல் அறிய முடியாதவன் என்று கூறின் வரும் குற்றம் உளதோ ?' என்னில், முதலிலே ஞான விஷயம் அன்று என்னில், பொருளே இல்லை என்று வரும் அன்றே ? ஆதலால், அணு அளவின தான ஆத்துமாவை அறியுமாறு போன்று, எங்கும் பரந்திருக்கிற இறைவனை அறியப்போகாது என்கை.

பொறி உணர்வு அவை இலன் -' பொறி' என்பன கண் முதலிய உறுப்புகள். அவற்றுல் அறியப்படும் பொருள்களின் தன்மையன் அல்லன், ' எந்த இறைவனை உயிர் அறியாதோ, எந்த இறைவனைப் பூமி அறியாதோ ' என்று இறைவனை அறியமாட்டாமையில் உயிர்ப் பொருளையும் உயிரல் பொருளையும் ஒரு சேரக் கூறியிருத்தலைப் போன்று, ஈண்டும் உயிர்ப்பொருள் உயிரல் பொருள் இவ்விரண்டன் தன்மையிலும் வேறுபட்டவன் இறைவன் என்று அருளிச்செய்கிருர். அதாவது. ' இறைவன் காணப்படுகின்ற உயிரல் பொருள்களின் தன்மையில் வேறுபட்டிருத்தலைப் போலவே, காணப்படாத உயிரின் தன்மையிலும் வேறுபட்டவன்' என்றபடி. பிறவிக்குருடன் பொருள் களைப் பார்க்கின்றிலன் எனினும், தெளிந்த பார்வையினையுடைய வனும் பார்க்கின்றிலன் எனினும் பார்க்கமாட்டாமையில் இருவரும் ஒப்பு ஆவர் என்க.

' இப்படி இரு பொருள்களின் தன்மையிலும் இறைவன் வேறு பட்டவனுக இருப்பானுயின், அவனை அறிவதுதான் யாங்ஙனம் ?' எனின், இனன் - இப்படிப்பட்டவன் என்னுமித்தனை. ' இனன் ' என்னுஞ் சுட்டால், முன்னிரண்டு அடிகளிற்கூறிய பொருள்களைக் குறிக்கின்ருர் என்ருயினும், மேல் கூறப்போகும் பொருள்களைக் குறிக்கின்ருர் என்ருயினும் கொள்க. ' எப்படிப்பட்டவன் ?' என்னில், உணர் முழுநலம் - உணர் - ஞானம் ; நலம் - ஆனந்தம். ' முழு ' என்பதனை உணர்வோடும் நலத்தோடும் கூட்டுக. கட்டடங்க ஞானமுமாய், கட்டடங்க ஆனந்தமுமாய் இருப்பான். இத்தால், பரமாத்தும சொருபத்தில் விளக்கம் அற்று இருக்கையோ அனுகூல மற்று இருக்கையோ இல்லை என்கை. இனி, ' ஆனந்தமாவதும் ஞானத்தின் விசேடம் ஆகையால், ஆனந்தத்தைக் கூறிய போதே ஞானத்தையுங் கூறியதாக முடியும் ; ஆதலால், இனன் உணர் முழு

1. *பிரஹதாரண்.* 4. 6 : 62.
2. *தைத்திரீய. பிருகு.* 6 : 1.

நலம் என்பதற்கு, நேருக்கு நேராகத் தன்னை அறிய முடியாமையாலே எப்போதுமாக உபமானத்தால் அறியப்படுவதான முழுநலமாக இருப்பான் எனலும் ஒன்று. இனன் - உபமானம். [1]'உப்புக் கட்டியானது உள்ளும் புறமும் உப்புச் சுவையதாகவே இருப்பது போன்று, இறைவனுடைய திருமேனியும் உள்ளும் புறமும் ஞானமயமாகவே இருக்கும்,' என உவமைமுகத்தால் விளக்குதல் காண்க. [2]'ஆனந்தமே இறைவன்', 'ஆனந்தமயமானவன்' எனக் கூறியிருத்தலும் ஓர்தல் தகும். மற்றும், [3]'கடி சேர் நாற்றத்துள் ஆலை இன்பத் துன்பக் கழி நேர்மை, ஒடியா இன்பப் பெருமையோன்' என்பது இவருடைய திருவாக்கு. இவற்றால் ஓர் உபமானத்தாலே அறியில் அறியலாமத்தனை; தன்னையே இழிந்து அறியப் போகாது என்றபடி. 'உணர் முழு நலம்' என்பதற்கு, மேற்கூறிய இருவகைப் பொருள்களுள், கட்டடங்க ஞானமுமாய், கட்டடங்க ஆனந்தமுமாய் இருப்பன் என்று கூறிய முதற்பொருளே சிறப்புடைத்து. 'என்னை?' எனின், நூல்களில் அநுகூலஞானம் ஆனந்தமாகவே இருப்பினும், வழக்கில் ஞானம் வேறாகவும் ஆனந்தம் வேறாகவும் பிரித்துப் பேசப்படும்.

எதிர் நிகழ் கழிவினும் இனன் இலன் - முக்காலத்திலும் ஒப்பு இல்லாதான். 'சித்து, அசித்து, ஈஸ்வரன்' என்னும் முப்பொருள்களே நம் மதத்தில் கூறப்பட்டுள்ளன; அவற்றுள், உயிர்ப்பொருள் உயிரல் பொருள் இவற்றின் தன்மையினின்றும் வேறுபட்டவன் இறைவன் என்பதை முன்னர் அருளிச்செய்தார்; 'இங்குக் கூறுவது என்?' என்னில், 'திரள ஒப்பு இல்லையாகில், ஒரு வகையாலேதான் ஒப்பு உண்டோ?' என்னில், அதுவும் இல்லை என்கிறார்,' என்று [4]அருளிச் செய்வாரும் உளர். அவ்வாறு அன்றி, [5]'சாதர்மிய திருஷ்டாந்தம் இல்லை என்றது முன்பு; இங்கு வைதர்மிய திருஷ்டாந்தம் இல்லை

1. *பிரஹ - உபநி. 6. 5 : 23.*

2. *தைத்திரீய உபநிடதம்.*

3. *திருவாய், 8. 8 : 2. இம்மேற்கோளின் பொருள்:—கடி, நாற்றம் இரண்டும் ஒருபொருட்சொற்கள். வாசனை என்பது பொருள். ஆலை என்பது தேன். இவ்விரண்டும் எல்லாவாசனைக்கும் எல்லாரசத்துக்கும் உபலக்ஷணம். பூவில் வாசனையையும் தேனில் ரசத்தையும் எடுத்து, அவற்றிலும், அல்பம் அஸ்த்ரத்வம் முதலிய தோஷங்களைக் கருத்து நிலையுள்ளதாக்கிச் சேர்த்துப் பார்த்தால் சிறிது ஒப்பாம் என்பதாம்.*

4. *'அருளிச்செய்வாரும் உளர்' என்றது, இராமாநுசருக்கு முன்னர் இருந்த பெரியோர்களைக் குறித்தது.*

5. *சாதர்மிய திருஷ்டாந்தம் - ஒத்த தர்மங்களையுடைய பொருள்களை எடுத்துக்காட்டாகக் கூறுதல். 'ஆசிரியர் அகத்தியனாரைப் போன்று, ஆசிரியர் தொல்காப்பியனாரும் தமிழில் இலக்கணநூலைச் செய்தார்,' என்பது அதற்கு உதாரணமாம். வைதர்மிய திருஷ்டாந்தம் - வேறுபட்ட தர்மங்களையுடைய பொருள்களை எடுத்துக்காட்டாகக் கூறுதல். உதாரணம், உரைக்கிடையிற்காண்க.*

என்கிறது,' என்று 'பட்டர் அருளிச்செய்வர். [1] 'சிறந்த போர் வீரர்கள் பகைவர்கள் விஷயத்தில் திருடர்களைப் போன்று வஞ்சனை யாகக் காரியங்களைச் செய்யமாட்டார்கள்,' என்பது வைதர்மிய திருஷ்டாந்தத்திற்கு உதாரணமாம். எனன் உயிர் - இப்படியிருக் கின்றவன் எனக்குத் தாரகன்; இனி, உபலக்ஷணத்தால், 'எவனுக்கு உயிர்கள் அனைத்தும் சரீரமோ' என்கிறபடியே, எல்லா உயிர் களுக்கும் தாரகன் என்று கோடலுமாம். 'இறைவனுடைய தன்மை யினைக் கூறும் இவ்விடத்தில் 'எனனுயிர்' என்று கூறவேண்டியது என்?' எனின், இவ்வுயிர்களை எல்லாம் தனக்குச் சரீரமாகக் கொண்டு தான் ஆத்துமாவாய்த் தாரகனாய் இருப்பவன் என்னும் அர்த்தமும் சொல்லவேண்டுவது ஒன்றாதலின் சொல்லுகிறார்: மிகுநரை இலன் - 'இறைவனாகிய தான் உயிர்களைச் சரீரமாகக் கொண்டு தாரகனாய் எல்லாரையும் ஏவுகின்றவனாய் இருப்பது போன்று, தன்னையும் ஏவக் கடவது ஒரு வேறு பொருள் உளதோ?' எனின், மேம்பட்டாரை யுடையன் அல்லன். [2] 'இறைவனுக்கு ஒப்பானவனும் மேம்பட்டவனும் காணப்படுகின்றிலன்,' என்பது போன்று, இவரும '**இனன் இலன், மிகுநரை இலன்**' என்று அருளிச்செய்கிறார்.

'மனனகம் மலமற மலர்மிசை எழுதரும் மனன் உணர்வு அளவிலன், பொறியுணர்வு அவையிலன், எதிர் நிகழ் கழிவினும் இனன் இலன், மிகுநரை இலன், உணர் முழுநலம், இனன் எனன் உயிர்' என்று சொற்களைக் கூட்டி முடிக்க. இனி, 'எனன்' உயி ரானவன் துயரறு சுடரடி தொழுது எழு என் மனனே,' என முதற் பாட்டோடே கூட்டி முடித்தலுமாம். (2)

3

*இலன்அது உடையன்இது எனநினைவு அரியவன்*
*நிலனிடை விசும்பிடை உருவினன் அருவினன்*
*புலனொடு புலன்அலன் ஒழிவிலன் பரந்தஅந்*
*நலனுடை ஒருவனை நணுகினம் நாமே.*

பொ - ரை: 'அதனை இல்லாதவன்; இதனையுடையவன்,' என்று இரு தன்மையாலும் நினைக்க முடியாதவன்; காணப்படுகின்ற இவ் வுலகமும் ஆகாயத்திலுள்ள தெய்வலோகங்களும் முதலாக எல்லா உலகங்களிலுமுள்ள உயிரல்பொருள்களை எல்லாமுடையவன்; உயிர்ப் பொருள்களை எல்லாமுடையவன்; காணப்படுகின்ற எல்லாப்பொருள் களும் தானாக இருப்பவன்; அவ்வாறு இருப்பினும், அப்பொருள்களின்

---

1. *மாகம்.* 16 : 52.
2. *ஶ்வேதாஶ்வதர உபநிடதம்.*

குணங்களும் குற்றங்களும் தன்னைச் சாராமல் இருப்பவன்; இவ்வகையில் எல்லாப்பொருள்களையும் விட்டு நீங்காதவனாகி எங்கும் பரந்திருக்கின்ற அந்நற்குணங்களையுடைய ஒப்பற்ற இறைவனை நாம் சேர்ந்தோம்.

வி - கு: உரு என்றது அசித்தினை. அரு என்றது ஆத்துமாவை. புலன் - காணப்படுகின்ற பொருள். இரண்டாவது புலன் - அப்பொருள்களின் தன்மைகள்.

ஈடு: மூன்றும் பாட்டு. [1] முதற்பாட்டிலே தலைமையாக நற்குணங்களையுடையனாக இருத்தல், அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டையுடையவனாக இருத்தல், வேறுபட்ட திவ்விய மங்கள விக்கிரகத்தையுடையனாக இருத்தல் ஆகிய இவற்றை அனுபவித்து, அவற்றுக்கெல்லாம் பற்றுக்கோடான இறைவன் உயிர்ப்பொருள் உயிரல்பொருள்களுக்கு எல்லாம் வேறுபட்டவனாய் ஒப்புயர்வு அற்றவனாய் இருப்பான் என்று இரண்டாம் பாட்டில் அருளிச்செய்து நின்றார்; [2] ததீயத்வ ஆகாரத்தாலே [3] லீலா விபூதியும் இவர்க்கு அவற்றோடே சேர ஒரு கோவையாய்த் தோற்றும். [4] 'மனிதர்களின் நடுவில் இருக்கும் இந்தச் சரீரத்தை நினையாமல் அந்த ஈஸ்வரனிடத்து நாலு பக்கங்களிலும் சஞ்சரிக்கின்றான் முத்தன்' என்று நூல்களிற் கூறியிருப்பினும், [5] 'முத்தன் ஆனவன் எல்லாப்பொருள்களையும் பார்க்கின்றான்,' என்கிறபடியே, ததீயத்வ ஆகாரத்தாலே லீலா விபூதியும் உத்தேஸ்யம் ஆகாநின்றது முத்தனுக்கு. 'ஆயின், இவர் முத்தரோ?' எனின், இவர்க்குக் கர்மம காரணமாக வந்த

1. 'முதல் இரண்டு பாக்களால் மிக உயர்ந்த பொருள்களைக் கூறிப் போந்த இவர், இப்பாட்டால் தாழ்ந்த இவ்வுலகங்களைப்பற்றிப் பேசக் காரணம் யாது?' என்னின், 'முதற்பாட்டிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. ததீயத்வ ஆகாரம் - இறைவனுடைய உடைமைப்பொருள் என்ற தன்மை.

3. லீலா விபூதி - விளையாட்டுக்குரிய உலகங்கள். அவை, இவ்வுலக முதல் சத்தியலோகம் ஈறாக உள்ள உலகங்கள். 'உலகம் யாவையுந் தாமுள ஆக்கலும், நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா, அலகிலா விளையாட்டுடையாரவர், தலைவ ரன்னவர்க்கே சரணாங்களே,' என்றார் கம்பநாடரும்.

4. 'மனிதர்களின் நடுவில்' என்று தொடங்கும் உபநிடத வாக்கியம், 'மோக்ஷலோகம் போல லீலா விபூதியும் உத்தேசியமாகத் தோற்றுமோ?' என்னும் வினாவிற்கு விடையாகக் காட்டப்படுகின்றது. இது, சாந்தோக்கியம். 8. 12 : 3.

5. சாந்தோக்யம். 7 : 26.

சரீரம் கிடக்கச்செய்தே மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் ஆகை யாலே, ததீயத்வ ஆகாரமும் தோற்றி அனுபவிக்கிறார். 'ஆயின், இவ்வுலகங்கள் இறைவன் உடைமை என்பதனை நாம் அறியுமாறு யாங்ஙனம்?' எனின், அரசர்கட்கு நாடு எங்கும் தமது ஆணை செல்லுமாயினும், தங்கள் தேவியரும் தாங்களுமாகப் பூந்தோட்டங்கள் சிலவற்றைக் குடநீர் வார்த்து ஆக்குவது அழிப்பதாய் விளையாட்டு இன்பம் துய்க்குமாறு போன்று, [1] 'திருவிண்ணகர் சேர்ந்த பிரான், பெய்த காவு கண்டீர் பெருந்தேவுடை மூவுலகே' என்கிறபடியே, இறைவனும் இறைவியுமாகக் கண் குளிரப் பார்த்த போது உண்டா தலும், இல்லையாயின் இல்லையாதலுமாகி, அவர்கட்கு விளையாட்டு இன்பம் துய்த்தற்குக் காரணமாய் இருத்தலால் உடைமை என்பதனை அறிதல் கூடும்.

இலன் அது உடையன் இது என நினைவு அரியவன் - 'அது இலன்; இது உடையன்,' என நினைத்தற்கும் அரியவன். நுகரப் படுபொருள்களுள் ஒன்றனைக் கூறி, 'அஃது இலன்' என்று சொன்னால், அஃது ஒழிய மற்றைப் பொருள்களையுடையவன் என்று தோன்றும்; ஒரு பொருளைக் காட்டி 'இதனை உடையவன்' என்று கூறின், இப்பொருளைத் தவிர மற்றைப் பொருள்கள் எல்லாம் இல்லாதவன் என்று தோன்றும்: 'இலன் அது' எனின், ஓர் அளவிற்கு உள் அடங்கிய ஐசுவரியத்தையுடையவன் ஆவன்; 'உடையன் இது' எனின், அற்ப ஐசுவரியத்தையுடையவனாவன்; ஆகவே, இரண்டுவழியாலும் இறைவனுடைய ஐசுவரியம் குறைந்து தோன்றும்; ஆதலின், '**இலன் அது உடையன் இது என அரியவன்**' என்கிறார். 'உலகத்துப் பொருள்களுள் ஒன்று சேராத வற்றையும் சேர்த்து நினைத்தல் கூடும்; ஓர் ஊசி நிற்கிறதாகவும், அதன் மேலே கலசம் இருக்கிறதாகவும், அதன்மேலே சால் இருக்கிற தாகவும், அதன்மேலே மகாமேரு இருக்கிறதாகவும், இப்படி, சேராத பொருள்களைச் சேர்த்து நினைக்கலாம்; அப்படி நினைத்தற்குத்தான் இறைவன் விஷயமாக இருப்பானோ?' என்னில், மனத்தால் அளவு இடுவதற்கும் அரியனாக இருப்பான் ஆதலின், '**நினைவரியவன்**' என்று அருளிச்செய்கிறார்.

'ஆயின், இறைவனுடைய செல்வத்தைப் பேசும்படிதான் என்?' என்னில், நிலனிடை விசும்பிடை உருவினன் அருவினன்- [2] 'உலகத் திற்குத்தலைவன்' என்னுமித்தனை. நிலனிடை என்கிற இது பாதாளத்

1. *திருவாய்.* 6. 3 : 5.
2. *தைத்திரீ. நாரா.* 6. 1 : 11

தளவும் நினைக்கிறது ; விசும்பிடை என்கிற இது பரமபதத்திற்கு இப்பால் உள்ளவற்றை எல்லாம் நினைக்கிறது. உருவினன் - சரீரங்களை யுடையான். ஆக, கீழ் மேல் உண்டான உயிர்ப்பொருள்களையும் உயிரல் பொருள்களையுமுடையான் என்றபடி. இதனால், 'ஒவ்வோர் இடப்பகுதியின் செல்வங்களை உடையவர்களது அன்று லீலாவிபூதி ; எல்லாக்கடவுளர்கட்கும் மேம்பட்ட இறைவனுடையது,' என்பதனைத் தெரிவித்தபடி. [1] 'காராயின காளநன் மேனியினன்' என்புழி, 'மேனியினன்' என்பது மேனியினையுடையான் எனப் பொருள்படுமாறு போன்று, ஈண்டு உருவினன், அருவினன் என்பனவும், உருவினை யுடையான், அருவினையுடையான் எனப் பொருள்படும்.

'ஆயின், இப்படி எல்லாவற்றையுமுடையவனாய் இன்பத்திலே கருத்து ஊன்றினவனாய் ஒப்பு உயர்வு அற்ற சாந்து அணிந்து கொண்டு அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டில் தங்கி இருப்பானோ இறைவன் ?' எனில், புலனொடு - இவை பட்டனவற்றைத் தானும் பட்டு, [2] உடன் கேடனாய் நின்று நோக்குவான் என்கிறார். புலன் என்றது, 'பார்க்கப்படுகின்றவை, கேட்கவும் படுகின்றவை' என்னுமாறு பிரமாணங்களால் அறியப்படுகின்ற பொருள்களை. இவற்றை உண்டாக்கி, உயிர் வழியாக அநுப்பிரவேசித்துப் பின்னர் இவற்றிற்குப் பொருளாகை, பெயர் பெறுகை என்னும் இவை உண்டாம்படி செய்து, [4] 'எல்லாச் சேதநர்களுடைய உள்ளத்திலும் பிரவேசித்து நியாமகனாய்ச் சர்வர்க்கும் ஆத்துமாவாய் இருக்கும் படியை' 'ஓநி' என்பது காட்டுகிறது. 'ஆயின், தான் எல்லா உயிர்களுக்குள்ளும் உயிராய் நின்றால், சரீரத்தினுடைய வளர்தல் தேய்தல் முதலிய நிலை மாறுபாடோ, உயிர்களுடைய இன்பதுன்பங்களோ தன்னையும் பொருந்தும்படி இருக்கின்றானோ ?' என்னில், புலன் அலன் - தான் ஒட்டு அற்று நின்று விளங்காநிற்பவன்; [5] அவ்வப்பொருள்களினுடைய தன்மை வேறுபாடுகளும் இன்பதுன்பங்களும் தன்னைத் தீண்டாவண்ணம் இருப்பான் என்பதாம். [6] 'பரமான்மா சீவான்மா என்று கூறப்படும் இருவர், சிறந்த ஞானரூபமான சிறகுகளையுடையவர்களாய், ஒத்த குணங்களையுடையவர்களாய்,

1. திருவாய். 9. 3 : 1.

2. உடன் கேடன் - தானும் கூடக் கெட்டுக்கிடக்குமவன்.

3. தைத்திரீய. ஆன. 6.

4. தைத்திரீயம்.

5. 'தோய்ந்தும் பொருள் அனைத்துந் தோயாது நின்ற சுடரே' என்றார் கம்பநாடரும்.

6. இருக்கு வேதம்.

'உடையவன், உடைமை' என்ற உறவையுடையவர்களாய், சரீரமான ஒரே மரத்தினைப் பற்றிக்கொண்டு இருக்கிறார்கள்; அவர்களுள் ஒருவனான சீவான்மா, இருவினைப் பயன்களை நுகர்ந்துகொண்டிருக்கின்றான்; மற்றொருவனாகிய பரமான்மா, அப்பயனை நுகராதவனாய் விளங்கிக்கொண்டிருக்கின்றான்,' என்பது மறைமொழி. ஒழிவிலன் பரந்த - பொருள்கள் ஒன்றும் ஒழிவின்றிப் பரந்து நிறைந்திருப்பான்; இனி, ஒழிவின்மையைக் காலத்தோடு சேர்த்து, எல்லாக் காலத்திலும் எல்லாப்பொருள்களிலும் பரந்து நிறைந்திருப்பான் எனலுமாம். அந்நலனுடை ஒருவனை - மேலிரண்டு பாட்டுகளாலும் அருளிச் செய்த குணங்களோடு கூடின இறைவனை நினைந்து, '**அந் நலனுடை ஒருவனை**' என்கிறார். நணுகினம் - 'மயர்வற மதி நலம் அருளினன்' என்கிற ஞானத்தின் அளவே அன்றிக் கிட்டவும் பெற்றோம். நாமே - இது, பொய்யோ? [1] 'இது ஏதேனும் மயக்கம் ஸ்வப்பனம் முதலியவைகளோ?' என்று பிராட்டி நினைந்தாற்போன்று, இவரும் '**நணுகினம் நாமே**' என்கிறார். 'இவர் இங்ஙனம் ஐயங்கொள்ளுதற்குக் காரணம் என்னை?' எனின், [2] 'இவர் '**ஈஶ்வரோஹம்**' என்றால் அவனுக்கும் குடிவாங்க வேண்டும்படியாய் அன்றோ இருப்பது? **அஹம்** என்றால் இறைவன் அளவிலே சென்று முடிய வேண்டும்படியாக இருக்க, தேகத்து அளவிலே ஆகும்படியன்றோ முன்பு போந்தது? கைகேயி, 'அரசனே!' என்று விளிக்கும்படியாகப் பிறந்து, [3] 'அவள் மகனைக் கீழ்வயிற்றுக்கழலை அறுக்க வருகிறானோ?' என்று எண்ணும்படியான நிலையில் நின்ற நான் [4] 'அப்பரத்துவாச பகவான் சொன்ன ஆச்சிரமத்தை அடைந்தேனோ என்று ஐயப்படுகிறேன்!' என்றான் ஸ்ரீ பரதாழ்வான். [5] 'காட்டிலே வசிக்கின்ற குரங்குகளுக்கும் நாகரிகரான சக்கரவர்த்தி பிள்ளைகளுக்கும் ஒரு சேர்த்தி உண்டானபடி எங்ஙனே?' என்று

---

1. *ஸ்ரீராமா. சுந்.* 34 : 23.

2. *'இவர் ஈஶ்வரோஹம்' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து, ஸ்வாதந்த்ர்யாபிமானமும் தேகாத்மாபிமானமும் என்பது. ஈஶ்வரோஹம் - இறைவன் ஆகின்றேன். அஹம் - நான். குடிவாங்கவேண்டும்படி இருத்தல் - இருக்குமிடத்தோடு பெயர்ந்து செல்லும்படியிருத்தல்.*

3. *ஸ்ரீராமா. அயோத்.* 85 : 7.

*கீழ்வயிற்றுக்கழலை அறுக்க வருகிறானோ - கீழ்வயிற்றில் எழுந்த கட்டியைப்போன்று துன்புறுத்த வருகின்றானோ என்றபடி.*

4. *ஸ்ரீராமா. அயோத்.* 99 : 8 - 9.

5. *ஸ்ரீராமா. சுந்த.* 35 : 2.

பிராட்டி கேட்க, [1] ‘பெருமாளும் மகாராஜரும் சேர்ந்த சேர்த்தி, பின்னே பிறந்த இளைய பெருமாள் நிற்க, அடியேன் அந்தப்புரக் காரியத்திற்கு வரும்படியாக அன்றோ? நானும் [2] இங்ஙனே கூடிக் கொண்டு நிற்கக் கண்டேனித்தனை,’ என்றான் சிறிய திருவடி. இறைவனுடைய அனுபவத்துக்குப் புறம்பான நாம், அன்றி, இறைவனுடைய பெயரின் வாசனையும் அறியாத நாம் என்பார் ‘நாமே’ என்கிறார் எனினுமாம். (3)

4

*நாம்அவன் இவன்உவன் அவள்இவள் உவள்எவள்*
*தாம்அவர் இவர்உவர் அதுஇது உதுஎது*
*வீம்அவை இவைஉவை அவைநலம் தீங்கவை*
*ஆம்அவை ஆயவை ஆய்நின்ற அவரே.*

பொ-ரை: ‘நாம்’ என்ற பெயர்ப்பொருளும், ‘அவன் இவன் உவன்’ என்னும் ஆண்பாற்பெயர்ப்பொருள்களும், ‘அவள் இவள் உவள் எவள்’ என்னும் பெண்பாற்பெயர்ப்பொருள்களும், ‘தாம் அவர் இவர் உவர்’ என்னும் பலர்பாற்பெயர்ப்பொருள்களும், ‘அது இது உது எது’ என்னும் ஒன்றன்பாற்பெயர்ப்பொருள்களும், அழிகின்ற அந்தப் பொருள்களும் இந்தப் பொருள்களும் உந்தப் பொருள்களும், நல்ல பொருள்களும் தீய பொருள்களும், உண்டாகும் பொருள்களும் உண்டான பொருள்களும் ஆகி நிற்கின்ற எல்லாப்பொருள்களும் அவ்விறைவரேயாவர் என்றவாறு.

வி-கு: இங்குக் கூறப்படாத ‘யாம் நான் யான்’ என்னும் பெயர்ப் பொருள்களையும், ‘எவன் எவர் எவை’ என்னும் பெயர்ப் பொருள்களையும் உபலக்ஷணத்தாற்கொள்க. ‘வீயும் அவை’ என்பது ‘வீம் அவை’ என வந்தது. ‘வீ’ என்னும் பகுதிக்குச் ‘சாதல்’ என்பது பொருள். ‘நின்ற’ என்பது வினையாலணையும் பெயர்.

ஈடு: நாலாம் பாட்டு. மேற்பாட்டிலே இறைவனுடைய உடைமைப்பொருள் என்னுந் தன்மையாலே அவன் குணங்களைப் போன்று உத்தேஸ்யமாகத் தோற்றுகையாலே லீலா விபூதி யோகத்தை அனுபவித்தார்; இனி, வருகின்ற செய்யுள்கள் எல்லாம் லீலா விபூதி விஷயமாகவே இருக்கின்றன. ‘ஆயின், அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினை ஒரு செய்யுளிலும், லீலா விபூதியினைப் பல செய்யுள்களிலும் அருளிச்செய்யக் காரணம் யாது?’ எனின், நித்திய

1. ஸ்ரீராமா. சுந்த. 35 : 31.

2. ‘இங்ஙனே கூடிக்கொண்டு நிற்கக் கண்டேனித்தனை,’ என்றதனால், ‘சேர்த்திக்குக் காரணம் அறிந்திலேன்,’ என்பது கருத்து.

விபூதியில் வந்தால், அவ்வுலகிலுள்ளார் அனைவரும் குறிப்பு அறியுமவர்களாய், இறைவனுடைய கொள்கையினைப் பின் செல்லுகிறவர்களாய் இருப்பார்கள்; [1] 'ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப' என்னும்படியாய் இருக்கும் அவ்வுலகம். மேலும், அவ்வுலகத்தில் இறைவனுடைய இருப்புக் கண்டு உகக்கும் அதற்கு [2] அவ்வருகு ஒன்றும் இல்லை இவ்வுலகில் உள்ளவர்கள், இருவினைகள் காரணமாக உண்டாகும் உடல்களின் சேர்க்கையோடு கூடினவர்களாய் இறைவனுடைய சங்கற்பத்தினைப் பின் செல்லுகின்றவர்களாய் இருப்பார்கள்; மேலும், பிற கடவுளர்க்கு அடிமைப்பட்டிருக்குந்தன்மை, தமக்குத் தாமே உயிராந்தன்மை ஆகிய இவைகள் இருப்பன இவ்வுலகத்திலே ஆகையாலே, இரண்டனையும் தவிர்த்து இறைவனுக்கு உரிமைப்பட்டது இவ்வுலகம் என்று சொல்ல வேண்டுவது இங்கேயாக இருந்தது; ஆதலால், இதனைப் பல பாசுரங்களால் அருளிச்செய்கிறார்.

இனி, இது முதல் வருகின்ற பாக்கள் எட்டனுள், மூன்று பாக்களால், [3] இவ்வுலகில் சொரூபம், காத்தல், தொழில் செய்தல், தொழில் செய்யாமை ஆகிய இவைகள் இறைவனுக்கு அதீநம் என்று கூறி, அவற்றிற்குமேல் ஒரு பாட்டால், (7) 'இறைவனுக்கும் உலகிற்கும் உள்ள தொடர்பு உடலுக்கும் உயிருககும் உள்ள தொடர்பினைப் போன்றது,' என்று கூறி, மேல் ஒரு பாட்டால் (8) '[4] குத்ருஷ்டிகளை மறுத்து, மேல் ஒரு பாட்டால் (9) [5] சூந்யவாதியை மறுத்து, மேல் ஒரு பாட்டால் (10) [6] வியாப்தி சௌகர்யத்தைக் கூறி, ஈற்றுப்பாட்டால் இதனைக் கற்றார் அடையும் பயனைக் கூறி இப்பதிகத்தை முடிக்கின்றார்

அவற்றுள், இச்செய்யுளால் உலகில் காணப்படுகின்ற பொருள்கள் அனைத்தும் இறைவனுக்கு உரிமைப்பட்டவை என்கிறார். 'எங்ஙனம்?' எனின், படைப்புக்காலம் வந்தவாறே இவற்றை உண்டாக்கி, உண்டாக்கிய உயிர்கள் வழியாகவே அவ்வுயிர்க்குள்

---

1. *திருவாய். 4. 9 : 10.*

2. *அவ்வருகு - அதற்குமேல்.*

3. *இவ்வுலகின் சொரூபம் - இவ்வுலகினுடைய தன்மை.*

4. *குத்ருஷ்டி - மாறுபட்ட நோக்குடையவன்; அதாவது, மறைமொழிகட்கு நேர்ப்பொருள் காணாது மாறுபட்ட பொருள்களைக் காண்பவன் என்பது,*

5. *சூந்யவாதி - இல்லையென்று வாதாடுமவன்.*

6. *வியாப்தி சௌகர்யம் - சௌகர்யமாகப் பரந்து நிறைந்திருத்தல்.*

புகுந்து, அவற்றிற்குப் பொருளாகை, பெயர் பெறுகை என்னும் இவை உண்டாகும்படி செய்தும், இவை முற்றும் அழிந்த அன்று, நீறு பூத்த நெருப்புப்போன்று கண்களுக்குத் தோன்றாத மிக நுண்ணிய உருவத்தோடு தன் பக்கலிலே கிடக்கும்படி இவற்றை ஏறிட்டுக்கொண்டு தரித்தும், காரணநிலையோடு காரிய நிலையோடு வாசி அறத் தன்னைப்பற்றி [1] ஸ்வரூப ஸ்திதி முதலியவை ஆகும்படி இருப்பதனால் அவன் அதீநம் என்கிறார். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் தனித்தனியே எடுத்து, 'இது அவன் உடைமை, இது அவன் உடைமை' என்று கூறப்புகின், உயிர்கள் மிகப்பலவாய் இருப்பதனால், மிக விரிந்து செல்லும்; இனிச்சுருங்கக்கூறின், அறிந்துகொள்ளுவதற்கு அருமையாம்; ஆகையாலே, தேவர்கள் முதலிய பொருள்களை நாலு மூன்று வகையாலே சேர்த்துத் தொகுத்து அவையவை இறைவனுக்கு உரிமைப்பட்டவை என்கிறார்.

நாம் - நான் என்றும், நாம் என்றும், யான் என்றும், யாம் என்றும் தந்தம்மைச் சொல்லக்கடவது. ஒரு பொருளின் அணிமை சேய்மை முதலிய தூரங்களைக் குறிக்க வேண்டுமாயின், பேசுமிடத்தினை எல்லையாகக்கொண்டே குறிக்க வேண்டுதலின், 'நாம்' என்பதனை முதலில் அருளிச்செய்கிறார். அவன் இவன் உவன் - சேய்மையிலுள்ளவன் அண்மையிலுள்ளவன் இரண்டு அல்லாத நடு இடத்துள்ளவன் என்று கூறப்படுகின்ற பொருள்களும். அவள் இவள் உவள் எவள்-பெண்பாலால் உணரப்படுகின்ற பொருள்களும். தாம் அவர் இவர் என்றது - உயர்விற்கு உரியவர்கள். அது இது உது எது - ஒன்றன் பாலால் உணரப்படுகின்ற பொருளைச் சொல்லுகிறார். வீமவை இவை உவை-அழிகின்ற பொருள்கள். நலம் அவை தீங்கவை - [2] நன்மை தீமை என்னுதல், நன்றானவை தீதானவை என்னுதல். ஆமவை ஆயவை-இறப்பிலும் எதிர்விலும் அடங்குமாதலின், நிகழ்காலத்தைக் கூறிற்றிலர். ஆய்நின்ற - ஆகிநின்ற பொருள்கள். [3] இவற்றைப் பொருள்கள் அளவிலே கொண்டபோது,

---

1 ஸ்வரூப ஸ்திதி முதலியவை - பொருள்களின் நிலைமுதலியவை; ஸ்வரூபம் : ஸ்வ - தன்னுடைய, ரூபம் - தன்மை.

2. நன்மை தீமை என்பன பண்பினையும், நன்றானவை தீதானவை என்பன பண்புடைப்பொருள்களையுங் காட்டும்.

3. 'இவற்றை' என்றது, பாட்டில் 'நாமவன்' என்பன முதலிய பெயர்ப்பொருள்களை. 'ஐக்யம் சொல்லப்போகாது' என்றது, 'ஆய்நின்ற அவர்' என்றதனால் சாமாநாதிகரண்யத்தால் வந்த ஐக்யம், மேற்சொல்லுகின்ற பரம்பொருளுக்கும் இவற்றுக்கும் சொல்லப்போகாது என்றபடி.

மேல் ஐக்கியம் சொல்லப்போகாது ; [1] ஆதலால், உடலும், உடலை விரும்பி நிற்கின்ற உயிரும், உயிருக்குள் தங்கி இருக்கின்ற இறைவனும் ஆன இக்கூட்டம் இத்தனைக்கும் வாசகமாக நிற்கிறது இச்சொல். ' அவர் ' என்றது ' இவையாகி நிற்கிறார் அவர் ' என்றபடி. [2] ' இவை எல்லாம் பிரஹ்மம் அல்லவா ? [3] அது நீயாய் இருக்கிறாய் ' என்பன உபநிடத வாக்கியங்கள்.

[4] முதற்பாட்டிலே, நற்குணங்களையுடையவனாக இருத்தல், அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினையுடையவனாக இருத்தல், வேறுபட்ட திருமேனியினையுடையவனாக இருத்தல் ஆகிய இவற்றை அருளிச்செய்து, இரண்டாம் பாட்டில், ' எல்லாப் பொருள்களைக்காட்டிலும் வேறுபட்டவன் இறைவன் ' என்பதனை அருளிச்செய்தார். இங்கு ' அவர் ' என்பதிலுள்ள அகரம் முற்கூறியவற்றைச் சுட்டுகின்ற சுட்டு ஆகையாலே ' அவர் ' என்று கல்யாணகுணத்தோடு கூடிய தன்மையினைச் சொல்லி, ' ஆய் நின்ற ' என்று உடல் உயிர் இவற்றோடு கூடியிருக்கின்ற இறைவனைச் சொல்லி, சாமாநாதிகரண்யத்தால் ஐக்கியம் அருளிச்செய்தார் இப்பாட்டால். ஆக, ஆண்பால் பெண்பால் ஒன்றன்பால் என்னும் பேதத்தாலும், மதிக்கத்தக்க பொருள் அழியும் பொருள் என்னும் பேதத்தாலும், நலம் தீங்கவை என்னும் பேதத்தாலும், மூன்று கால பேதத்தால் வந்த விசேடங்களாலும், அறிவுடைப்பொருள் அறிவில் பொருள் ஆகிய எல்லாப் பொருள்களையும் தொகுத்து, அவற்றினுடைய தன்மை இறைவனுக்கு அதீனம் என்றாராயிற்று. (4)

5

*அவர்அவர் தமதம தறிவறி வகைவகை*
*அவர்அவர் இறையவர் எனஅடி அடைவர்கள்*
*அவர்அவர் இறையவர் குறைவிலர் இறையவர்*
*அவர்அவர் விதிவழி அடையநின் றனரே.*

---

1. ' ' ஆயின், ஆய்நின்ற' என்னுஞ்சொல், பொருள்களைக் காட்டுவதோடு அமையாமல், இறைவன் அளவுஞ்சொல்லும்படி என் ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ' ஆதலால் ' என்று தொடங்கி.

2. சாந்தோக்யம். 3. 4.

3. சாந்தோக்யம். 6. 12.

4. ' ஆயின், இங்கு ' அவர் ' என்ற சொல்லால் சுட்டப்படும் பொருள் யாது ?' எனின், ' முதற்பாட்டிலே ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

**பொ - ரை :** ‘ முக்குணங்களின் வசப்பட்ட உலக மக்கள், தாம் தாம் அறிந்த அறிந்த வகையாலே, அந்த அந்தத் தேவர்களே இறைவர் ஆவர் என்று நினைத்து, அவர்களுடைய பாதங்களையே பற்றுக்கோடாக அடைவார்கள் ; அவர்களால் அடையப்படுகின்ற அவ்வத்தேவர்களும், இறைவர் என்று கூறப்படுவதற்கு யாதொரு குறையும் இல்லாதவர் களாகவே இருக்கின்றார்கள் ; ‘ காரணம் யாது ?’ எனின், அத்தேவர்கள் தங்களுடைய ஆகமங்களில் விதித்து வைத்த வழியால் அவர்களை வணங்குகின்ற மக்கள் தாம் தாம் விரும்பிய பலனைப் பெறும்படியாக, அத்தேவர்களுடைய உயிருக்குள் உயிராய் நின்று திருமகள் கேள்வனான நாராயணன் திருவருள் புரிகின்றான் ஆதலால்’ என்றவாறு.

**வி - கு :** இறைவன் என்ற சொல்லுக்கு ‘ எப்பொருளினும் தங்கு கின்றவன் ’ என்று பொருள் கூறுவர் சிலப்பதிகாரவுரையாசிரியரான அடியார்க்கு நல்லார். (சிலப். நாடு. 184). ‘ சருவக்கியன் ’ என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். (சிந். 2606). இப்பெயரைக் காத்தற் கடவுட்கே உரிய பெயராகக் கொண்டார் தெய்வப்புலமைத் திருவள்ளு வனார். ‘ முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு, இறையென்று வைக்கப்படும்.’ என்பது திருக்குறள். ‘ இறை, இறைவன் ’ என்ற இரண்டும் ஒரு பொருட்சொற்கள். ‘ இறையென்னு முயர்திணை இயற் பெயர் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நின்று, வருமொழி வந்த பின்பு ‘ இறைவன் வந்தான் ; இறைவர் வந்தார் ’ என நிற்கும்,’ என்பது இலக்கணக் கொத்து (சூ. 130). ‘ அருள் குடையாக, அறங்கோலாக, இருநிழல் படாமை மூவேழ் உலகமும், ஒருநிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ ’ என்னும் பரிபாடல் (3). காத்தற்றொழிலைத் திருமாலுக்கே உரிமை செய்து, ‘ மாயோன்—காத்தற்கடவுள் ’ என்றார் இளம்பூரண அடிகளும் (தொ. பொ. சூ. 63).

**ஈடு :** ஐந்தாம் பாட்டு. மேல் திருப்பாசுரத்தில் உலகத்துப் பொருள்கள் அவனுக்கு உரிமைப்பட்டவை என்று கூறியது போன்று, காத்தற்றொழிலும் அவனுக்கு உரிமைப்பட்டது என்கிறார் இத்திருப் பாசுரத்தில்.

ஒருவன் ஒரு வீட்டிற்குரியவனாய் இருப்பான் ; ஒருவன் ஒரு சிற்றூர்க்கு உரியவனாய் இருப்பான் ; ஒருவன் ஒரு நகரத்திற்கு உரியவனாய் இருப்பான் ; ஒருவன் மூன்று உலகங்கட்கும் உரியவனாய் இருப்பான் ; ஒருவன் பதினான்கு உலகங்கட்கும் உரியவனாய் இருப் பான். ஆக, பதினான்கு உலகங்கட்கும் உரியவனாய் இருப்பவனோடு ஒரு வீட்டிற்கு உரியவனாய் இருப்பவனோடு வாசி அற அவர்கள் காப் பாற்றுகின்றவர்கள் ஆவதும், இவை காப்பாற்றப்படும் பொருள்

களாய் உபகாரம் கொண்டவையாவதும் சர்வேஸ்வரன் உள் உயிராய் நின்று நடத்துகையாலே; அவன் இப்படி நடத்திக்கொண்டு போகாத அன்று அவர்கள் காப்பாற்றுகின்றவர்கள் ஆகமாட்டார்கள் என்கிறார். 'செல்வங்களைச் சேர்க்கின்ற தன்மையிலும் ஆபத்துகளைப் போக்குந்தன்மையிலும் புருடோத்தமனாகிய இறைவனைத் தவிர, ஆற்றலுடைய வேறு ஒருவன் காணப்படுகின்றான் இலன்,' என்றும், [1] 'காப்பாற்றுந்திறன் விஷ்ணுவைத் தவிர வேறு ஒருவர்க்கும் இன்று,' என்றும் பிரமாணங்கள் இருத்தலால், எல்லா நன்மைகளையும் செய்து தர வல்லவனாய், பகையையும் போக்க வல்லவன் ஆனவனை ஒழிய வேறு ஒருவர் பக்கல் இந்தக் காக்குந்தொழில் கிடவாது. [2] 'செப்பிலே கிடந்த ஆபரணத்தை வாங்கிப் பூண்டு, பின்னையும் அவ்வாபரணத்தை வாங்கிச் செப்புக்குள்ளே இட்டு வைக்குமாறு போன்று வேதங்களைத் தொடங்கும் போதும் முடிக்கும் போதும் கூறப்படுகின்ற பீஜாக்ஷரம் யாது ஒன்றோ, [3] அந்தப் பிரணவத்துக்குள் மறைந்துள்ளது அகரம். அது காக்கும் இறைவனைக் காட்டுவது ஒன்று; அதற்குப் பொருளாக உள்ளவன் யாவன் ஒருவன்? அவன் சர்வேஸ்வரன்,' என்று உபநிடதம் புகலும்.

அவர் அவர்-தம்முடைய விருப்பம் இன்மையும் அவர்களுடைய பல்வகைப்பட்ட தன்மையும் தோற்றுகிறது. தம தமது - குணபேதத்தால் வந்த பல பேதத்தைச் சொல்லுகிறது. அறிவு அறி-அவற்றிற்கு அடியான ஞானபேதத்தைச் சொல்லுகிறது. வகை வகை-மார்க்க பேதங்களாலே, உயிர்கள் பல்வேறு வகைப்பட்டு இருத்தல் போன்று, அவ்வுயிர்கள் மாட்டு உண்டாகின்ற சுவை வேறுபாடுகளும் பலவாகும் என்பது தோன்ற, '**தமதம தறிவறி வகைவகை**' என அடுக்குத் தொடராகக் கூறுகின்றார். 'சுவை வேறுபாடு உண்டாகக் காரணம் யாது?' எனின், மக்கள் இராசதகுணம் மிக்கவர்களாயும், தாமதகுணம் மிக்கவர்களாயும், இரண்டும் கலந்த சத்துவ குணத்தையுடையவர்களாயும் இருக்கின்றார்கள்; அப்படியே

---

1. ஸ்ரீவிஷ்ணு புரா. 1. 22 : 19.
2. தைத்திரிய நாராய. 6 : 10.
3. பீஜாக்ஷரம்—'ஓம்' என்னும் பிரணவம். 'ஓம்எனும் ஓரெழுத்து அதனின் உள்ளுயிர், ஆமவன் அறிவினுக்கு அறிவும் ஆயவன்,' என்ற கம்பராமாயணச் செய்யுள் (இரணியன் வதை, 76) ஈண்டுக் கருதத் தகும்.

குணத்திற்குத் தகுதியாய்ப் பிறந்த ஞானமும் இருத்தலால் என்க. [1] ஆக, தத்தமுடைய குணங்கட்குத் தகுதியாக அடைகின்றவர் களாகவும் அடையப்படுகின்றவர்களாகவும் இருக்கின்றார்கள் என்பதாம். ஈண்டு 'அறிவு' என்றது, சுவை மூலமாக விரும்பப் படுகின்ற பலத்தின் விஷயமான ஞானத்தினை. இனி, 'அறிவறி வகை வகை' என்பதற்கு, (மக்கள் தாம் தாம் விரும்புகின்ற பலத்தின் விஷயமாக) அறிந்த அறிந்த வழிகளின் வகைகளாலே என்று பொருள் கூறலும் ஒன்று. ஈண்டு 'அறிவு' என்றது, வழியின் சம்பந்த மான ஞானத்தினை. ஒரே பலத்தை அடைவதற்குப் பல வழிகள் உள்ளனவாதலின், '**அறிவறி வகைவகை**' என்கிறார்.

அவர் அவர் இறையவர் என - அவ்வத்தேவர்களை அடையத் தக்க தெய்வங்கள் என்று நினைந்து, அடி அடைவர்கள் - அவர்கள் பாதங்களைச் சேர்வார்கள். ஆயின், திருமகள்கேள்வனை இறைவனைத் தவிர மற்றைத்தேவர்களை வணங்குவதற்குரிய முறைகள் செய்தற்கு அரியவைகள்; அவர்களும் வழி அல்லா வழிகளால் ஆராதிக்கப் படுகின்றவர்கள்; [2] '**மகனை அறுத்துத்தா**', '**ஆட்டினை அறுத்துத் தா**' என்று கூறுகின்றவர்கள்; அவர்கள் செயல் அவ்வாறு இருக்க, அவர்களை ஆராதிக்கும் முறையினை '**அடியடைவர்கள்**' என்று மிக எளிய செயலாகக் கூறுகின்றார் இவர்; 'காரணம் என்னை?' எனின், அடைதலாவது, அத்தேவர்களின் காலிலே குனியுமதற்கு அவ்வருகு இல்லை என்கிறார் இவர், தம்முடைய கோஷ்டியின் பிரசித்தியாலே. [3] 'இரு கைகளையும் குவித்துச் செய்கிற ஓர் அஞ்சலி என்னும் மேலான முத்திரையானது, இறைவனுடைய திருவருளை விரைவிலே உண்டாக்கக் கூடியதாக இருக்கின்றது,' என்கிறபடியே, ஓர் அஞ்சலியினாலேயே நினைத்த பலனைத் தரக்கூடிய பரம்பொருளோ டேயே தமக்கு வாசனை; இப்படி, குணங்களால் மேம்பட்டவனாய் அடையக் கூடியவனாய் இருக்கின்ற இறைவனுடைய பயிற்சியின்

---

1. *மேற்கூறியவாற்றால், குணங்கட்குத் தகுதியாக ருசிகளும், ருசிகளுக்குத் தகுதியாகப் பலன்களும், பலன்களுக்கு ஈடாகச் சாதன பேதங்களும் உண்டாகின்றன என்பது பெறப்படும்.*

2. *'மகனையறுத்துத்தா,' என்றது, சிறுத்தொண்ட நாயனார் தம் மகனை அறுத்துச் சிவபெருமானுக்கு உணவருத்தினமையைக் குறித்தபடி. 'ஆட்டினையறுத்துத் தா,' என்றது, முருகனைப் பற்றியது. இதனை 'மறிக் குரல் அறுத்துத் தினைப்பிரப்பு இரீஇ' என்னும் குறுந்தொகைச் செய்யு ளாலும், 'சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து' (218) என்னும் திருமுருகாற்றுப்படையாலும் உணர்க.*

3. *பரத்துவாச சம்ஹிதை.*

மிகுதியினாலே '**அடி அடைவர்கள்**' என்கிறார். [1] 'மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு தொழுது எழுதும்' என்னும் இதனையும் மிகையாக நினைப்பவன் இவர் பற்றிய இறைவன். இளைய பெருமாளுடைய நாண் ஒலியினைக் கேட்ட மகாராஜர், கழுத்தில் அணிந்திருந்த மாலையினை அறுத்து எறிந்து, குரங்குகள் இயற்கையாகச் செய்கின்ற தொழில்கள் சிலவற்றைச் செய்துகொண்டு, அருகே நின்ற திருவடியைப் பார்த்து, 'இச்சமயத்தில் நாம் செய்யத்தக்கன யாவை?' என்று கேட்க, 'அபராத காலத்தில் அநுதாபம் பிறந்து மீண்டோம் என்று நினைப்பதற்கு எளியன அல்லோம்; சில செய்வோம்; தீரக் கழிய அபராதம் பண்ணினோம்; செய்த பின்னர் இனி, ஓர் அஞ்சலி நேராமற் போகாது,' என்ற கருத்து அமைய, [2] 'செய்யப்பட்ட பாவங்களை யுடைய உனக்கு இலக்குமணனைக் கண்டு இரு கைகளையும் கூப்பி வணங்கி, அவன் திருவருளைப் பெறுதல் தவிர, அவனைப் பொறுப்பிக்கைக்கு வேறு வழி ஒன்றையுங் காணேன்,' என்றான் திருவடி என்று கூறும் ஸ்ரீ ராமாயணமும் இங்கு அறிதல் தகும்.

அவர் அவர் இறையவர் குறைவு இலர் - அவ்வத்தேவர்கள் தம்மை வணங்கும் மக்களுக்கு வேண்டும் வரங்களைக் கொடுத்தலில் குறைவு இல்லாதவரேயாவர். இனி, 'அவர் அவர் இறையவர்' என்பதற்கும், 'அவ்வம்மக்களால் வணங்கப்படுகின்ற தேவர்கள்' என்று பொருள் கூறலும் ஒன்று. 'அதற்குக் காரணம் யாது?' எனின், இறையவர் - பொதுவிலே இறையவர் என்கிறார்; அவர்களோடு அவர்கள் வணங்கும் தேவர்களோடு தம்மோடு வாசி அற, [3] 'பரமாத்துமாவானவன் உலகிற்கு எல்லாம் இறைவன்,' என்கிறபடியே, எல்லார்க்கும் ஒக்க இறைவனாதலின். அவர் அவர் விதிவழி அடைய நின்றனர் - அவ்வத்தேவர்கள் தத்தம் ஆகமங்களிலே 'என்னை உபாசனை செய்,' என்று விதித்து வைத்த வழிகளால் மக்கள் அவர்களையடைந்து பலத்தைப் பெறும்படியாக அவ்வத் தேவர்களுடைய உயிர்களுக்குள் உயிராய் நின்றார். இனி, 'அவர் அவர் விதிவழி அடைய நின்றனர்,' என்பதற்கு [4] 'எவன் எவன் பத்தியுள்ளவனாகி எவ்வெத்தேவர்களை வணங்குவதற்கு விரும்புகின்றானோ, அவன் அவனுக்கு அவ்வத்தேவர்களை வணங்குதற்கு

---

1. திருவாய். 9. 3 : 9.
2. ஸ்ரீராமா. கிஷ்.
3. தைத்திரீய நாராய. 6. 1 : 11.
4. பகவத்கீதை. 7 : 21.

உரிய பத்தியினை நான் கொடுக்கிறேன்,' என்றும், [1] 'அவன் அவன் அந்தப் பத்தியோடு அத்தேவர்களை ஆராதனை செய்கின்றான்; என்றால் கொடுக்கப்பட்ட பலனையும் அடைகின்றான்,' என்றும் இறைவன் ஸ்ரீ கீதையில் அருளிச்செய்தபடியே, அவ்விரு திறத்தார்களுடைய உயிர்களுக்குள் உயிராய் நின்றனர் என்று கூறலும் ஒன்று. இதனால், இறைவன் [2] இராமடம் ஊட்டுவாரைப்போலே முகம் தோற்றாதே, அந்தராத்துமாவாய் நின்று நடத்துகையாலே, அவர்களும் அடைந்தவர்கள் ஆகின்றார்கள்; இவர்களும் பலத்தைக் கொடுக்கின்றவர்கள் ஆகின்றார்கள்; இறைவனை ஒழிந்த அன்று அவர்கள் பற்றவும் மாட்டார்கள்; இவர்கள் பலனைக் கொடுக்கவும் மாட்டார்கள் என்பது விளங்கும். அதாவது, 'அய்யன் பாழியில் ஆனை போர்க்கு உரித்தாம் அன்றாயிற்று அவ்வத் தேவர்கட்குப் பலனைக் கொடுக்கும் ஆற்றல் உள்ளதாவது,' என்றபடி. (5)

6

*நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்*
*நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்*
*என்றுமோர் இயல்வினர் எனநினைவு அரியவர்*
*என்றுமோர் இயல்வொடு நின்றஎம் திடரே.*

**பொ – ரை:** *'நிற்றல், நில்லாமை; இருத்தல், இராமை; கிடத்தல், கிடவாமை; திரிதல், திரியாமை' என ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட தொழில்களையுடையவர் ஆதலால், எப்பொழுதும் ஒரே தன்மையினையுடையவர் என நினைத்தற்கு அரியவர்; அப்படி நினைப்பதற்கு அரியவர் என்னும் தன்மை எப்பொழுதும் மாறுபடாமல் ஒரே நிலையோடு கூடியிருக்கின்றவர்; வேதங்களால் பரம்பொருள் இவனே என்று உறுதி செய்யப்பட்ட திடத்தையுடையவர்; அவர் என் தலைவர் ஆவர்.*

**ஈடு:** ஆறும்பாட்டு. உலகங்களினுடைய காத்தலும் இறைவனுடைய நினைவின் அதீனம் என்றார் மேல் திருப்பாசுரத்தில்; அவற்றினுடைய தொழில் செய்தல் செய்யாமையும் இறைவனுடைய நினைவின் அதீநம் என்கின்றார் இத்திருப்பாசுரத்தில்.

**நின்றனர்...திரிந்திலர்** - தொழில் செய்தல் தொழில் செய்யாமை என்னும் இவை, நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் என்றும்,

---

1. *ஸ்ரீ கீதை.* 7 : 22.

2. *இராமடம் ஊட்டல்—இரவில் சத்திரங்களில் தங்கியிருக்கும் தம் மக்களுக்கு உணவினை ஊட்டுதல்; இது தாயரின் செய்கை.*

நில்லாமை இராமை கிடவாமை திரியாமை என்றும் சொல்லப்படும். 'நின்றனர்' முதலிய சொற்களின் பன்மைகளால், இறைவனுக்கு வேறுபட்ட எல்லாப் பொருள்களினுடையவும் தொழில் செய்தல், செய்யாமைகளைச் சொல்லுகிறார். [1] ஆகிருதியினைச் சொல்லுகின்ற சொல்லானது வடிவிலே சென்று முடிந்து நிற்குமாறு போன்று, தொழில் செய்தல் செய்யாமைகளைக் காட்டுகின்ற இச்சொற்களும் அபர்யவசான விருத்தியால் இறைவனளவும் சென்று அல்லது நில்லா. இனி, 'பொன்னிறக் கண்களையுடைய செந்நிறப் பொருளால் சோமம் என்னும் கொடியினை வாங்கக் கடவன்,' என்ற இடத்தில், [2] குணத்தோடு கூடிய பொருள் தோன்றா நிற்கவும் செந்நிறம் என்னும் குணத்தையே முக்கியமாகக் கொள்வது போன்று, தொழில் செய்தல் செய்யாமைகட்கு நிலைக்களமான பொருள்கள் அவன் அதீநம் என்று [3] முன் சொல்லுகையாலே, இங்குத் தொழில் செய்தல் செய்யாமைகளில் நோக்கு என்று கூறுவாரும் உளர். அங்ஙனம் கூறின், [4] சாமாநாதிகரண்யம் சித்தியாது. ஆக, தொழில் செய்தல் செய்யாமைகளைக் காட்டுகின்ற இச்சொற்கள் அவற்றிற்கு நிலைக்களமான உயிர்களைக் காட்டி, அவ்வுயிர்கட்கு இறைவனை ஒழியப் பிரிந்து நிற்றலாதல் தோன்றுதலாதல் இல்லாமையாலே, இறைவன் அளவுங்காட்டுகின்றன. ஆதலின், இச்சொற்கள் இவற்றோடு கூடி இருக்கின்ற இறைவனையே காட்டுகின்றன. 'ஆயின், தொழில் செய்வதற்காயின் இறைவன் திருவருள் வேண்டும்; தொழில் செய்யாதிருப்பதற்கு அவன் அருள் வேண்டுமோ?' என்று எம்பாரைச் சிலர் கேட்க, 'சுவர்க்கத்தி

---

1. *ஆகிருதி—சாதி; 'சாதியினைக் காட்டும் ஒரு சொல், அச்சாதியினையுடைய பொருள்களைக் காட்டுவது போன்று' என்பது இவ்வாக்கியத்தின் பொருள். அதாவது, 'அரசச் சாதி' என்று கூறின், அச்சொல் தனியே நில்லாது அச்சாதியினையுடைய ஒரு மனிதனையே காட்டி நிற்குமாறு போன்று என்பது கருத்து. அபர்யவசான விருத்தியாவது - ஒரு சொல் தனக்குரிய பொருள்களைக் காட்டி அவ்வளவில் முடிவு பெறாது, தொடர்ந்து மேலும் செல்வது.*

2. *'குணத்தோடுகூடிய பொருள்' என்ற இடத்தில், செந்நிறத்தையுடைய பசு என்ற பொருள் தோன்றினாலும், பசு என்னும் குணியைக் கொள்ளாது 'செந்நிறம்' என்னும் குணத்தையே முக்கியமாகக் கொள்வது போன்று என அவ்வாக்கியத்தின் பொருளை விரித்துக்கொள்க.*

3. *'முன் சொல்லுகையாலே' என்றது, நாலாம் பாசுரத்தில் சொல்லி இருத்தலால் என்றபடி.*

4. *'சாமாநாதிகரண்யம் சித்தியாது' என்றது, 'எம் திடரே' என்ற பதத்தினோடு பொருள் பொருந்தாது என்றபடி.*

னின்றும் விழுகிற திரிசங்குவைச் சத்திமான் நிற்கச் சொல்ல நிற்க வேண்டிற்றுக் கண்டாயே! அப்படியே, [1] நிவர்த்திக்கும் அவன் வேண்டுங்காண்,' என்று அருளிச்செய்தார்.

என்றும் ஓர் இயல்வினர் என நினைவு அரியவர் - இப்படிப் பல வகையினராக இருக்கையாலே காலம் உள்ள வரையிலும் ஆராய்ந் தாலும் இன்னபடிப்பட்ட தன்மையினையுடையவர் என்று நினைக்கவும் கூட அரியவர். என்றும் ஓர் இயல்வொடு நின்ற - [2] 'விருஷல விவாகமந்திரம்போலே என்றும் ஓர் இயல்வொடு நின்றவராவது என்?' என்னில், என்றும் ஒருபடிப்பட்ட தன்மையினையுடையவர் என்று நினைக்க அரிதான நிலை என்றும் ஒருபடிப்பட்டிருக்கும் என்கை. எம் திடர் - மனிதர்களால் செய்யப்படாத வேதங்களால் சொல்லப்பட்டவன் ஆகையால், வந்த திடத்தின் தன்மையைச் சொல்லுகிறார். இப்படி, சிறந்த திடமான பிரமாணத்தாற்சொல்லப் பட்டவரான நிலை தம்முடைய இலாபமாகத் தோற்றுகையால் 'எம் திடர்' என்கிறார்.

'நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர், நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்' என்றும், 'ஓரியல்வினர் என நினைவு அரியவராய்' என்றும் ஓர் இயல்வொடு நின்ற எம் திடர்,' எனக் கூட்டுக. (6)

7

திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய்அவை அவைதொறும்
உடல்மிசை உயிர்எனக் கரந்துஎங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவைஉண்ட சுரனே.

பொ - ரை: உலகங்களை எல்லாம் முடிவு காலத்தில் அழியச் செய்த இறைவன், திடமான ஆகாயமும் நெருப்பும் காற்றும் நீரும் நிலமும் ஆகிய இவற்றைக் காரணமாகக் கொண்டு படர்ந்த எல்லாப் பொருள்களும் தானேயாகி, அவ்வப்பொருள்கள்தோறும் உடலுக்குள் இருக்கின்ற உயிரைப்போன்று மறைந்து, எங்கும் பரந்தவனாய் ஒளி மிக்க வேதத்துள் தோன்றுகின்றவன் ஆவான்.

---

1. சுவர்க்கத்தினின்றும் விழுதலாகிய தொழில் நிகழ்ச்சிக்கு, வீழாமல் இருத்தல் தொழில் நிகழாமை; வீழாமல் இருத்தல் திரிசங்குவிற்கு விருப்பமாயினும், அதனை அவனால் செய்துகொள்ள முடியவில்லை; முனிவர் திருவருள் வேண்டியிருந்தது என்பதாம்.

2. 'விருஷல விவாக மந்திரம்போலே நினைவு அரியவர்,' எனக் கூட்டுக. விருஷலவிவாகமந்திரம் - ஒரு சாதியினர் திருமணம் செய்யும் போது கூறும் மந்திரம். அவர்கள் கூறும் மந்திரம் முற்கூறியதற்குப் பிற் கூறுவது மாறுபாடுடையது என்பது தோன்றுகிறது.

வி - கு : 'தொறும்' என்பது இடப்பன்மையினைக் காட்டும் இடைச்சொல். 'உடல்மிசை உயிர் என' என்பது சரீர ஆத்தும பாவத்தை விளக்க வந்த உவமை. 'உண்ட' என்பது ஈண்டு அழித்த என்னும் பொருட்டு. 'கரந்து, எங்கும் பரந்து, சுருதியுள் உளன்' எனக் கூட்டுக. சுருதி - வேதம்; ஆசிரிய மாணுக்க முறையில் **கேட்கப்பட்டு வருவது** என்பது பொருள்.

ஈடு : ஏழாம்பாட்டு.[1] சரீர ஆத்துமபாவத்தைப் பிற்கூறுவோம் என்று தம் திருவுள்ளத்திற்கொண்டு, மேல், சாமாநாதிகரண்ய நியாயத்தால் அருளிச்செய்தார்; அந்த நியாயத்தால் அங்குக் கிடைத்த சரீர ஆத்துமபாவத்தை இச்செய்யுளில் அருளிச்செய்கிறுர். இனி, மேல் சாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலும் அருளிச்செய்தார்; அப்படி அருளிச்செய்த ஐக்கியத்திற்குக் காரணம், சரீர ஆத்தும பாவம் என்று அச்சரீர ஆத்தும பாவத்தை இங்கு அருளிச்செய்கிறுர் என்றலும் ஆம். அதாவது, [2]'இந்த உயிர்களை எல்லாம் உடலாகக் கொண்டு இருக்கிற நான், உயிர்களுக்குள் உயிராகப் புகுந்து இவற்றிற்குப் பெயர்களையும் உருவங்களையும் உண்டுபண்ணுகிறேன்,' என்கிறபடியே பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்ட இவ்வுடலிலே உயிர் வழியாக உள்ளே புகுந்து அவை பொருளாதல், பெயர் பெறுதல் உண்டாகும்படி செய்து, இவை

---

1. *இத்திருப்பாசுரத்திற்கு இரண்டு வகையில் அவதாரிகை அருளிச் செய்கிறுர். 'ஒன்று, மேல் சாமாநாதிகரண்யத்தால் அருளிச்செய்தார்; அதனுல் கிடைத்த சரீர ஆத்துமபாவத்தை இங்கு விளக்குகிறுர்' என்பது. இங்கு 'மேல்' என்றது, 'நாமவன்', 'நின்றனர்' என்ற பாசுரங்களை. இரண்டாவது, 'மேல், சாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலும் அருளிச்செய்தார், அவ்வாறு அருளிச்செய்ததற்குக் காரணம், சரீர ஆத்தும பாவம் என்று அதனை இங்கு அருளிச்செய்கிறுர்,' என்பது. இங்கு 'மேல்' என்றது, 'நாமவன்', 'நின்றனர்' என்ற பாசுரங்களையும், 'இலனது', 'அவரவர்' என்ற பாசுரங்களையும் ஆம். சமாநமான அதிகரணத்தை யுடையது, சாமாநாதிகரண்யம்; வேறுபட்ட அதிகரணத்தையுடையது வையதிகரண்யம்; சமானம் - ஒன்று. அதிகரணம் — இடம். வேதங்களில் அபேதசுருதி, பேத சுருதி இரண்டையும் சேர்த்துக்காட்டும் கடக சுருதி என்னும் மூவகை வாக்கியங்கள் இருத்தலை ஈண்டு அறிதல் தகும். அபேத சுருதியின் பொருள், 'நாமவன்', 'நின்றனர்' என்ற பாசுரங்கள். பேத சுருதியின் பொருள், 'இலனது', 'அவரவர்' என்ற பாசுரங்கள். கடக சுருதியின் பொருள் 'திடவிசும்பெரி' என்னும் இத்திருப்பாசுரம்.*

2. *சாந்தோக்யம். 6 : 3.*

எல்லாம் தான் என்னலாம்படி இருப்பினும், ‘மண்ணே குடம்’ என்பது போன்று இராமல், [1] ‘உயிர்களுக்குள் வியாபித்து அவ்வுயிர்களைக் கட்டளை இடுமவனாய், எல்லா வுயிர்கட்கும் ஆத்துமாவாய்’, இவற்றை நியமிக்குமிடத்தில் இந்தச் சரீரத்துக்கு- இவ்வாத்துமா தாரகனாய் நியாமகனாய், சேஷியாய் இருக்குமாறு போன்று [2] ‘எவனுக்கு இவ்வுலகம் சரீரமாக இருக்கின்றது?’ [3] ‘எவனுக்கு இவ்வாத்துமாக்கள் சரீரமாய் இருக்கின்றன?’ என்கிறபடியே, தான் இரண்டற்கும் தாரகனாய், நியாமகனாய், சேஷியாய் நின்று நடத்திக் கொண்டு போகின்றான் என்று மேல் சொன்ன சாமாநாதிகரண்யத்துக்குக் காரணம் சரீர ஆத்தும பாவம் என்கிறார். ஆயின், ‘மரத்திலே தேவதத்தன் நின்றான்,’ என்றால், அங்குச் சரீர ஆத்துமபாவம் இல்லை. ‘சாதி குணங்கள் ஒரு வடிவிலே கிடந்தன,’ என்றால், அங்குச் சரீர ஆத்துமபாவம் இல்லை. [4] தாரகமாகவும் நியாமகமாகவும் சேஷியாகவும் இருக்கின்ற ஒரு பொருளிலே ஆத்துமபாவத்தையும், [5] தார்யம் நியாம்யம் சேஷம் இவற்றோடு கூடியிருக்கின்ற ஒரு பொருளிலே சரீர பாவத்தையும் கோடல் வேண்டும்.

திடம் விசும்பு எரி வளி நீர் நிலம் - திடம் என்பதனைப் பிரித்து ‘எரி’ முதலிய ஏனைய நான்கு பூதங்கட்கும் கூட்டுக. இனி, [6] ‘பரம் பொருளிடத்திலிருந்து ஆகாயம் உண்டாயிற்று,’ என்கிறபடியே, ஏனைய நான்கு பூதங்கட்கும் முன்னே தோன்றி, அவை அழிந்தாலும் சில நாள் நின்று பின் அழியக்கூடியது ஆகையாலே விசும்பிற்குத்

1. *தைத்திரீயம்*

2. *பிரஹதாரண்யம்*

3. *பிரஹதாரண்யம்*

4. *தாரகன்—தரித்துக்கொண்டிருப்பவன். நியாமகன்—ஏவுகின்றவன். சேஷி—தன் விருப்பின்படி விநியோகங்கொள்ளுகின்றவன்.*

5. *தார்யமாவது, உயிர்ப்பொருள் உயிரல்பொருள் ஆகிய அனைத்தையும் இறைவன் தன் சொரூபத்தாலும் சங்கற்பத்தாலும் தரிக்கின்றான்; அவனுடைய திவ்வியாத்தும சொரூபத்தையும் நித்தியசங்கற்பத்தையும் நீங்கின போது, தம்முடைய சத்துக்குக் கேடு பிறக்கும்படி இருக்கும் பொருள். நியாம்யமாவது, சரீரத்தினுடைய எல்லா வியாபாரங்களும் ஆத்துமாவினுடைய அறிவிற்கு வசப்பட்டுத் தோன்றுமாறு போன்று, ஆத்துமாவினுடைய எல்லா வியாபாரங்களும் இறைவனுடைய அறிவிற்கு வசப்பட்டுத் தோன்றுதல். சேஷமாவது, சந்தனம் மலர் தாம்பூலம் முதலியவைகளைப் போன்று, இறைவனுக்கு விருப்பின்படி விநியோகங் கொள்ளுதற்குத் தகுதியாய் இருத்தல்.*

6. *தைத்திரீ. ஆனந். 1.*

'திடம்' என்ற அடை புணர்த்து ஓதினார் எனக்கோடலுமாம். இனி, [1] 'காரணமான பூதங்கள், காற்றுத் தீ நீர் மண் என்னும் நான்கேயாம்,' என்கிற அருகமதத்தாரை மறுக்கும்பொருட்டு, விசும்பிற்குத் 'திடம்' என்ற அடையினைத் தந்து அருளிச்செய்தார் என்றலும் ஒன்று. ஆக, ஐம்பூதங்களையும் அருளிச்செய்கிறார். இவைமிசை படர்பொருள் முழுவதுமாய் - இவற்றை அடியாகக்கொண்டு மேலே பரந்து விரிந்துள்ள பொருள்கள் எல்லாவற்றையும் உண்டாக்கி. 'ஆய்' என்றது 'ஆக்கி' என்கிறபடி. [2] 'பல பொருள்களாக விரிகின்றேன்' என்கிற தனது மலர்ச்சியே உலகமாதலின், [3] வைதிக நிர்த்தேசம் இருக்கிறபடி. அவை அவைதொறும்-அவ்வப்பொருள்கள் தோறும். அப்பொருள்களில் நிறைந்து நிற்குமிடத்துப் பல தூண்களில் ஓர் உத்திரம் கிடப்பது போல அன்றி ஒவ்வொரு பொருளிலும் அவ்வச் சாதித்தன்மை நிறைந்திருத்தல் போன்று எல்லாப்பொருள்களிலும் தனித்தனியே குறைவு அற நிறைந்து நிற்பான் என்பார், '**அவை அவைதொறும்**' என்கிறார்.

உடல் மிசை உயிர் என - இப்படி நிறைந்து நிற்குமிடத்தில், இச்சரீரத்துக்கு ஆன்மா தாரகனாய் நியாமகனாய்ச் சேஷியாய் இருப்பதுபோன்று, இச்சரீர ஆத்துமாக்களுக்குத் தான் தாரகனாய் நியாமகனாய்ச் சேஷியாய் இருப்பான். கரந்து - இப்படி இருக்கவும், [4] 'எவன் ஒருவன் உயிர்களால் அறிய முடியாதவனோ' என்கிற படியே, பிறர்களால் காண முடியாதவனாய் இருப்பான். எங்கும் பரந்து-உள்ளும் புறமும் நிறைந்து. 'இதற்குப் பிரமாணம் என்?' என்னில், உளன் சுடர்மிகு சுருதியுள் - புருஷனால் செய்யப்படாததாய், குற்றம் இல்லாததாய் இருக்கிற வேதங்களால் சொல்லப்பட்டவன். பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்கள் போன்று வேறு காரணங்களால் கழித்துத் தள்ள ஒண்ணாதபடி இருத்தலின், '**சுடர்மிகு**' என்றும், முன்னர் உள்ள பெரியோர்கள் கூறி வந்த முறையைப் பின்பற்றியே பின் வருகின்றவர்களும் கூறிக்கொண்டு வருகின்றமையின், '**சுருதி**' என்றும் அருளிச்செய்கிறார். இத்தால், முதல் பாசுரம் தொடங்கிச் சொன்ன அர்த்தங்களுக்கு எல்லாம் பிரமாணம் குற்றமற்ற வேதங்கள் என்கிறார். இவை உண்ட சுரன் – இவற்றை அழித்த தேவன்.

---

1. *பார்ஹஸ்யபத்திய சூத்.*
2. *தைத்திரீய. ஆன. 6. 3.*
3. *வைதிக நிர்த்தேசம்—மறைமொழி.*
4. *பிரஹதாரண்யம்.*

[1] முன்னரே படைத்தல் அளித்தல் அவன் அதீநம் என்று அருளிச் செய்தார்; அழித்தல் வேறு ஒருவர்க்கு உரியதாகில் அது தன்னது அல்லாமையால் வரும் ஐசுவரியம் குறையும் அன்றே? ஆதலால், 'அழித்தலும் அவன் இட்ட வழக்கு,' என்கிருர். [2] இத்தால் படைத்தல் அழித்தல்களைப் பிரமன் சிவன் என்னும் அவர்களே நடத்துகிருர்கள் என்கிற குத்ருஷ்டிகளை மறுக்கிருர். '**திடவிசும்பு**' என்கிற இத்தால் வேதநெறிக்குப் புறம்பாக நடக்கிற **உலோகாயதிகரை** மறுக்கிருர். '**உடல்மிசை உயிர்**' என்கிற இத்தால் சொரூபத்தோடு ஐக்கியம் சொல்லுகிறவர்களை மறுக்கிருர். '**சுடர்மிகு சுருதியுள்**' என்கையாலே நாராயண அநுவாகம் முதலியவற்றின் சொல்லுகிற முதன்மை, திருமகள் சம்பந்தம் இவை எல்லாவற்றையும் அங்கீகரித்தவன் ஆகிருன். (7)

8

சுரர்அறிவு அருநிலை விண்முதல் முழுவதும்
வரன்முத லாய்அவை முழுதுஉண்ட பரபரன்
புரம்ஒரு மூன்றுஎரித்து அமரர்க்கும் அறிவியந்து
அரன்அயன் எனஉலகு அழித்துஅமைத்து உளனே.

**பொ - ரை:** பிரமன் முதலிய தேவர்களாலும் அறிய அரிதான நிலையினையுடைய மூலப்பகுதி தொடக்கமாகவுள்ள எல்லாவற்றிற்கும் சிறந்த காரணமாகி, பின் அவற்றை எல்லாம் அழித்த பரபரன், சிவனாக இருந்து ஒப்பற்ற முப்புரங்களையும் எரித்து அழித்துப் பின் உலகங்களை எல்லாம் அழித்தும், பிரமனாக இருந்து தேவர்கட்கு ஞானத்தை உபதேசித்துப் பின் ஒரு காலத்தில் உலகத்தை எல்லாம் படைத்தும், அவ்விருவருடைய உயிர்களுக்குள் உயிராகத் தங்கியிருக்கின்ருன்.

**வி - கு:** 'அரன் எனப் புரம் ஒரு மூன்று எரித்து உலகு அழித்தும், அயன் என அமரர்க்கு அறிவியந்து உலகு அமைத்தும் உளன்,' எனக் கூட்டுக.

---

1. மேல் திருப்பாசுரத்தில், 'படர்பொருள் முழுவதுமாய்' என்ற தொடரால் படைத்தலையும், இத்திருப்பாசுரத்தில் 'கரந்து எங்கும் பரந்துளன்' என்ற தொடரால் அளித்தலையும் அருளிச்செய்திருத்தல் காண்க.

2. இவ்விடத்தில், 'ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல், மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ; நலமுழு தளைஇய புகரறு காட்சிப், புலமும் பூவனும் நாற்றமும் நீ' என்னும் பரிபாடற்பகுதியும், 'ஐந்து தலையைத் தோன்றுவித்த அணங்குடை அருந்திறலையுடைய ஈசன். மடங்கல் — அவனுைய உலகுயிர்களின் ஒடுக்கம். 'பூவில் நான்முகனும் அவனுைய உலகுயிர்களின் தோற்றமும் நீ. அழிப்பும் படைப்பும் கூறிய வாறு,' என்னும் அதன் உரையும் ஒப்பு நோக்கத் தக்கன.

ஈடு: எட்டாம்பாட்டு. 'வேதங்களால் பேசப்பட்ட துணிந்த பொருள் அவனே என்றும், எல்லாப் பொருள்கட்கும் ஆத்துமாவாக நிற்கின்றவன் அவனே என்றும் சொல்லுகின்றீர்; மற்றையோரும் ஒவ்வொரு காரியத்திலே அதிகரித்து அவற்றை நடத்தியன்றோ போருகிறார்கள்? பிரமன் படைத்தலுக்கு உரியவனாய், சிவன் அழித்தலுக்கு உரியவனாய் அன்றோ போருகிறார்கள்? இவற்றை ஒருவனே செய்கின்றான் என்று நீர் கூறின் பக்ஷபாதத்தால் கூறினீர் ஆகீரோ?' என்ன, 'ஒருவனே செய்கிறான் என்று பக்ஷபாதத்தால் சொல்லுகிறேன் அல்லேன்; பிரமாணங்களின் போக்குகளை ஆராய்ந்தால் [1] அவை அவர்கள் பக்கல் கிடவாமையாலே சொல்லுகிறேன்,' என்கிறார்.

சுரர் அறிவு அரு நிலை விண்முதல் முழுவதும் வரன் முதலாய்- பிரமன் முதலிய தேவர்களால் அறிய அரிய தன்மையினையுடைய மூலப்பகுதி தொடக்கமாக உண்டான எல்லாவற்றுக்கும் சிறந்த காரணமாகி. [2] 'ஆகாயம் என்று கூறப்படுகின்ற மூலப்பகுதியானது எவனிடத்தில் குறும்பாவாகவும் நெடும்பாவாகவும் கோத்துக் கொண்டு கிடக்கிறது?' என்று உபநிடதத்தில் **கார்க்கி வித்தையில்** ஆகாச சப்தத்தால் மூலப்பகுதியைச் சொல்லுகையாலே இவரும் '**விண்**' என்ற சொல்லால் மூலப்பகுதியினை அருளிச்செய்கிறார். 'ஆயின், அங்கு 'ஆகாயம்' என்ற சொல் மூலப்பகுதியைத்தான் காட்டுகிறது என்று கொள்ளுமாறு யாங்ஙனம்?' எனின், [3] ஆகாயத்திற்குக் காரணமான மூலப்பகுதியைத் தரித்திருப்பதனால் அக்ஷரம் என்று சொல்லப்படுமவன் பரம்பொருளே,' என்பது **பிரம சூத்திரம்** ஆதலின், மூலப்பகுதியின் காரியமான ஆகாயத்தைக் காட்டுகிற '**விண்**' என்ற சொல்லால் காரணமான மூலப்பகுதியை உபசாரத்தால் அருளிச்செய்கிறார் என்பதாம். காரண நிலையில் கண்களுக்குப் புலப்படாத உருவத்தோடு அவற்றில் நிறைந்து அவற்றைத் தன்மேலே ஏறிட்டுக்கொண்டு நோக்கியும், காரியமாம் அளவில் [4] அவ்யக்தம் மகான் அகங்காரம் என்கிற இவற்றிலும் சூக்குமரூபத்

---

1. *இவ்விடத்தில், பரிபாடலின் முதற்பாடல்: 43—46 அடிகள். ஷை மூன்றாம் பாடல்: 1—14 அடிகள், 71—72 அடிகள். ஷை நான்காம் பாடல்: 66—70 அடிகள், பதின்மூன்றாம் பாடல்: 37-ஆம் அடி ஆகிய இவற்றைப் படித்து அறிதல் தகும்.*

2. *பிரஹதாரண்யம், 5 : 8.*

3. *சாரீரக மீமாம்சை, சூ. 9.*

4. *அவ்யக்தம் - கடம், படம் முதலியவற்றை அறிகின்ற கண் இந்திரியத்தால் அறியப்படாமல் இருப்பது என்பது பொருள்.*

தோடு நிறைந்ததும், காரண பரம்பரையோடு காரிய பரம்பரையோடு வாசியறத் தானே நின்று நடத்திக்கொண்டு போருகையாலே '**வரன் முதல் ஆய்**' என்கிறார்.

அவை முழுது உண்ட - அழிக்குங்காலம் வந்தால் அவற்றை முழுவதும் அழிக்கின்றவனும் அவனே. [1] 'யாவன் ஒருவனுக்குப் பிராமண க்ஷத்திரிய சாதிகள் இரண்டும் உணவாக இருக்கின்றன ? யாவன் ஒருவனுக்கு யமதருமன் ஊறுகாய் நிலையிலே இருக்கின்றான் ? அப்படி இருக்கிறவன் பெருமை ஒருவருக்கு அறிய நிலமோ ?' என்று கடவல்லி உபநிடதம் கூறுகின்றது. இங்ஙனம் உணவாகக் கூறப் படுதலின், இவரும், உணவின் தொழிலாகிய '**உண்ட**' என்னும் சொல்லால் அழித்தலை அருளிச் செய்கிறார். பரபரன் - பிரமன் முதலிய தேவர்கள் அதிகாரி புருஷர்களாக இருக்கையாலே நம்மைக் குறிக்க அவர்கள் மேலானவர்களாய் இருப்பது ஒன்று உண்டு; [2] 'உயர்ந்தவர்கட்கு எல்லாம் உயர்ந்தவன் இறைவன்,' என்கிற படியே, அவர்கள்தங்களுக்கும் மேலானவனாய் இருக்குமவன். [3] 'மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவா,' என்பது தமிழ் மறை.

புரம் ஒரு மூன்று எரித்து - சிவன் முப்புரங்களை எரித்தான் என்றும், அமரர்க்கு அறிவியந்து - [4] அறிவை ஈந்து; அன்றி, வியத்தல் - கடத்தலும், கொடுத்தலும் ஆகையாலே, அறிவைக் கொடுத்து என்னவுமாம். 'பிரமன் தேவர்கட்கு ஞானத்தைக் கொடுத் தான் என்றும் ஒரு பிரசித்தி உண்டு அன்றே நாட்டிலே அவர்கட்கு? அவ்வாறு அன்றோ அவர்கள் ஏற்றங்களும் இருக்கின்றன ?' என்னில், 'நன்று ; சிவன் திரிபுரம் எரித்தவனை ஆராய்வோம் ; [5] 'மிக்க ஒளி யினையுடைய உருத்திர பகவானுக்குத் திருமால் உயிராக இருக் கின்றார் ; ஆதலால், அந்தச் சிவபெருமான் வில்லினுடைய நாணினைத் தொடும் ஆற்றலையடைந்தான்' என்றார் அடி அறியும் வியாச

---

1. கடவல்லி. 1 : 2.

2. ஸ்ரீ விஷ்ணு புரா. 1. 2 : 10.

3. திருவாய், 8. 1 : 5.

4. 'அறிவியந்து' என்பதனை 'அறிவு இயந்து' என்று பதம் பிரித்தல் வேண்டும்: இயந்து என்பது ஈந்து என்ற சொல்லின் விகாரம்; ஈந்து - கொடுத்து.

5. பாரதம் கர்ணபர்.

முனிவர். [1] 'தழல்நிறவண்ணன் நண்ணுர் நகரம், விழநனி மலேசிலே வளேவு செய்தங்கு, அழல்நிற அம்பது ஆனவனே' என்ருர் மயர்வற மதிநல மருளப்பெற்றவர். [2] ஆதலால், தான் பூட்டின நாணி தன் கழுத்தை அறுத்துக்கொண்டு போகாது ஒழியும்போதும் திருமால் அந்தராத்துமாவாய் நிற்றல் வேண்டும். நிற்க, இனி, பிரமன் தேவர்கட்கு ஞானத்தினேக் கொடுத்தான் என்பதை ஆராய்ந்தால், [3] 'நாராயணன் உலகங்களே எல்லாம் படைப்பதற்கு முன்னர்ப் பிரமனே முதலில் படைத்தான்; அப்பிரமனுக்கு வேதங்களேக் கற்பித்தான்,' என்கிறபடியே, அதற்கும் இறைவன் அடியாக இருப்பான்.

அரன் என உலகு அழித்து உளன் அயன் என உலகு அமைத்து உளன் – 'அரன் செய்தான்; அயன் செய்தான்' என்ன உலகையழித்தும் அமைத்தும் உளன். [4] 'பிரமன் சிவன் என்னும் இவர்கள் இருவரும் தேவர்களுக்குள் தலேமை பெற்றவர்கள்; இறைவன் தெளிந்திருந்த காலத்தும் கோபத்துடன் இருந்த காலத்தும் உண்டானவர்களாக எண்ணப்படுகிருர்கள்; இவர்கள், அவ்விறைவனுலே காட்டப்பட்ட வழிகளேயுடையவர்களாய், படைத்தல் அழித்தல்களாகிய காரியங்களேச் செய்கிருர்கள்,' என்று இவ்வாறு பிரமாணங்கள் உள்ளபடியால் படைப்பில் ஒரு பகுதியும் அழிப்பில் ஒரு பகுதியுமே அவர்களுக்கு உள்ளவை; அவைதாமும், அவர்களுக்கு அந்தராத்துமாவாக நின்று படைத்தல் அழித்தல்களேச் செய்கிருன் சர்வேஶ்வரன். ஆகையாலே, சொன்னேன் அத்தனே; ஒருவனிடத்திலே பக்ஷபாதத்தாலே சொன்னேன் அல்லேன்,' என்று குத்ருஷ்டிகளே மறுக்கிருர். (8)

9

உளன்எனில் உளன்அவன் உருவம்இவ் வுருவுகள்
உளன்அலன் எனில்அவன் அருவம்இவ் வருவுகள்
உளன்என இலன்என இவைகுணம் உடைமையில்
உளன்இரு தகைமையொடு ஒழிவுஇலன் பரந்தே.

---

1. *பெரிய திருமொழி*, 6, 1 : 3.

2. *'செல்விடைப் பாகன் திரிபுரஞ் செற்றுழிக், கல்லுயர் சென்னி இமயவில் நாணுகித், தொல்புகழ் தந்தாருந் தாம்'* என்னும் பரிபாடற்பகுதி இங்கு ஒப்பு நோக்குக.

3. *சுவேதாஶ்வதரம்.*

4. *பாரதம். சாந்தி பர்.* 169.

**பொ - ரை :** இறைவன் உளன் என்றால் உள்ளவன் ஆவான் ; அப்பொழுது உருவத்தோடு இருக்கும் இப்பொருள்கள் எல்லாம் அவனுடைய தூல சரீரமாகும். இறைவன் இலன் என்றாலும் உள்ளவனேயாவான் ; அப்பொழுது உருவம் இல்லாதனவாய் இருக்கும் இப்பொருள்கள் எல்லாம் அவனுடைய சூட்சும சரீரமாகும். ஆதலால், உளன் என்றும் இலன் என்றும் கூறப்படும் இவற்றைக் குணமாகவுடைமையின், உருவமும் அருவமும் ஆன தூல சூக்குமப் பொருள்களையுடையவனாய் எங்கும் ஒழிவு இல்லாதவனாகிப் பரந்து இருக்கின்றவனே ஆவான் என்பதாம்.

**வி – கு:** ஒழிவிலன் என்பது முற்றெச்சம். 'ஒழிவிலன், பரந்து உளன்,' என முடிக்க.

**ஈடு :** ஒன்பதாம் பாட்டு. சர்வ சூந்யவாதியை மறுக்கிறார். 'மறுக்கின்ற முறைதான் என் ?' என்னில், [1] ஸ்ரீ பாஷ்யத்திலே சூனியவாதியை மறுத்த முறையிலே மறுக்கிறார். 'ஆயின், காலத்தால் முற்பட்ட இவ்வாழ்வார்தாம் அடியாக இராமாநுசர் அவனை மறுக்கலாம் ; இவர்தாம் அவனை மறுப்பதற்கு அடி என் ?' என்னில், அதுவும் இவ்வாழ்வார் பக்கலிலே உண்டு. 'எங்ஙனம்? ' என்னில், [2] புறம்பே சிலர் பிரமன் முதலிய தேவர்களை இறையவர் என நினைந்து, அதற்குத் தக, பிரமாணங்கள் சிலவற்றையும் நியமித்துக்கொண்டு வந்து தோற்ற, தாம் அங்கீகரித்தவனே எல்லாரினும் மேம்பட்டவன் என்றும், உலகம் அவனுக்குச் சரீரமாக இருப்பதனால் அடிமை என்றும், தாம் சொல்லுவனவற்றிற்குப் பிரமாணம் வேதம் என்றும், தம்முடைய மதத்தை உபந்யசித்து நின்றார் இதுகாறும். [3] இவை இத்தனையும் இல்லை என்னும்போது பூர்வபட்சமாக இவற்றை உடன்பட்டு எடுத்துக்கூறி அன்றோ இல்லை என்று தள்ளுதல் வேண்டும் ? 'ஆயின், இவற்றை உடன்பட்டு எடுத்துக் கூறி அவனால் இல்லை

---

1. *பிரம சூத்திரம் இரண்டாவது அத்தியாயம் இரண்டாவது பாதத்தில், 'சர்வதாநுப பத்தேஶ்ச' என்ற சூத்திரத்தின் உரையை நோக்குக.*

2. *'புறம்பே சிலர்' என்று தொடங்கும் வாக்கியம், 'அதுவும் இவ்வாழ்வார் பக்கலிலே உண்டு' என்பதனை விளக்க எழுந்தது.*

3. *'இவை இத்தனையும்' என்பது முதல் 'சர்வசூந்யவாதம் சித்தியாது' என்றது முடிய ஆழ்வார் திருவுள்ளத்தில் எழும் விசாரம்.*

என்னப் போகாது ; முதலிலே இல்லை என்னில், [1] சர்வ சூந்யவாதம் சித்தியாது. இனி உன்னைக் கேட்கிறேன் ; நீதான் இறைவன் உளன் என்கிற சொல்லாலே அவன் இல்லாமையைச் சாதிக்கப் பார்க்கிருயோ, இல்லை என்கிற சொல்லாலே அவன் இல்லாமையைச் சாதிக்கப் பார்க்கிருயோ ?' என்ன, அவன். ' இங்ஙனம் விகற்பித்துக் கேட்பதற்குக் கருத்து என் ?' என்ன. ' உளன் என்கிற சொல்லாலே சொன்னல், உனக்கு விருப்பமான இல்லாமை சித்திக்காதது போன்று, இல்லை என்கிற சொல்லாலும் உனக்கு விருப்பம் இல்லாத அர்த்தமேகாண் சித்திப்பது ; ஆன பின்னர், நீ இல்லை என்கிற சொற்கொண்டே அவன் உண்மையைச்சாதிப்பான். உலகத்தில் உண்மை இன்மைச் சொற்களுக்கு யாதொருபடி பொருள் கொள்ளு கிரும்? அப்படிக் கொள்ளில், நீ நினைக்கிற பொருள் உன்னல் சாதிக்கப் போகாது ; அங்ஙனம் கொள்ளாயாகில் வாதந்தன்னில் உனக்கு அதிகாரம் இல்லை.'

உளன் எனில் உளன் - நான் உளன் என்று சொல்லுவது போன்று சொல்லில்தானே உளன். இறைவனது உண்மையை முதலிலே இல்லை என்றே அவன் இறைவன் உண்மைக்கு இசையாஞதலின், '**உளன் எனில்**' என்கிருர். அவன் உருவம் இவ்

1. 'எல்லாம் உள்ளவை' என்று கூறின், எப்பொருள் தோன்றுமோ, அப்பொருளே 'எல்லாம் இல்லவை' என்று கூறினும் தோன்றுவதாம், உலகத்தில் 'உள்ளது' என்றும், 'இல்லது' என்றும் இரண்டு வகையாக வழங்குகிற சொற்களை ஆராய்ந்தால், உள்ளதான பொருளுக்கே தோன்றுகிற நிலைமை வேறுபாடுகள் என்பது விளங்கும். 'இங்கே குடம் இருக்கிறது,' எனின், மண்ணினுடைய நிலைமை வேறுபாடு தோன்றும் ; அதாவது, முன்பு மண்ணய் இருந்த பொருள் இப்பொழுது குடமாகிய வேருெரு நிலையைப் பெற்றுள்ளது என்றபடியாம். 'குடம் உடைந்தது,' எனின், குடம் என்னும் காரிய நிலைமையை விட்டு மண்ணுகிய காரண நிலையாய் மாறிவிட்டது என்றபடியாம். ஆகவே, எவ்வகையிலும் எவ்வகைச் சொல்லாலும் அடியோடு இல்லாமை பெறப்படாது. 'ஆயின், 'முயற் கொம்பு இல்லை', 'ஆகாயத்தாமரை இல்லை' என்ற இடங்களில் முழுதும் இன்மை விளங்குகின்றனவே! இவ்விடங்களில் வேருெரு நிலைமையை யடையும் தன்மை கூற முடியாதே?' எனின், இச்சொற்களாலும் முழுதும் இன்மை ஒரு போதும் பெறப்படாது. 'யாங்ஙனம்?' எனின், 'முயற் கொம்பு இல்லை,' எனின், 'முயல் இல்லை, கொம்பு இல்லை' என்று பெறப் படுமோ ? முயலுக்கும் கொம்புக்கும் சம்பந்தமின்று என்பதே பெறப்படும் ; அப்பொருள்களுள் ஒன்றற்கொன்று சம்பந்தம் இன்று என்று சம்பந்தம் இன்மை மாத்திரம் பெறப்படுமேயன்றி அப்பொருள்களே அடியோடு இல்லை என்பது ஒரு போதும் பெறப்படாது அன்றே? ஆகவே, சர்வசூன்ய வாதம் ஒரு போதும் பெறப்பட வகையின்று என்பதாம்.

வுருவுகள் - இறைவன் உளன் ஆனுல், அவனுல் நியமிக்கப்படுகின்ற இவ்வுலகத்தோடு கூடியே இருத்தல் வேண்டும்; அவன் உளனு மிடத்தில், 'யாவன் ஒருவனுக்கு உயிர்கள் எல்லாம் சரீரம்? யாவன் ஒருவனுக்கு இவ்வுலகமானது சரீரம்?' என்கிறபடியே, இவ்வுலகம் அவனுக்குச் சரீரமாய் இருப்பதனுல் உரிமைப்பட்டதாய் உண்டாம். உளன் அலன் என்பாயோ? அப்போது இன்மை என்னும் தர்மத்தை யுடையவனுய்த் தோன்றுவான். இவ்வருவுகள் அவன் அருவம் - அப்பொழுது இல்லை என்ற சொற்குப் பொருளாய் வேறெரு தன்மையினை அடைந்ததாய்க் கொண்டு இவற்றின் அன்மை தோன்றும். 'எங்ஙனம்?' எனின், 'குடம் இருக்கிறது,' என்ருல், வாயும் வயிறுமான உருவம் தோன்றும்; 'குடம் இல்லை,' என்ருல், இல்லை என்னும் தர்மத்தோடு கூடியதாய் வேறெரு வகையால் அது தோன்றும்; அதாவது, இங்கு இல்லை என்றதாகில், வேறு ஓர் இடத்திலே உண்டாம்; இப்போது இல்லை என்றதாகில், வேறு ஒரு காலவிசேடத்திலே உண்டாம்; எங்கும் எப்போதும் ஒரு வகையாலும் குடம் இல்லை என்னுதல் கூடாமையால், [1] நிருபாதிக நிஷேதம் இல்லையன்றே?

உளன் என இலன் என இவை குணம் உடைமையின் - உளன் என்கிற இத்தனையும் இலன் என்கிற இதனையும் குணமாக உடையவன் ஆகையாலே, இவை இரண்டும் இரண்டு தர்மமாயின. உளன் இருதகைமையோடு - உளன் என்கிற சொல்லாலும் இலன் என்கிற சொல்லாலும் சொன்ன இரண்டு தன்மையாலும் உளன் ஆனுன். ஒழிவிலன் பரந்தே உளன்-நான் உளன் என்ற சொல்லாலே உண்மையைச் சாதித்தேன்; நீ இலன் என்கிற சொல்லாலே உண்மையைச் சாதித்தாய்; ஆக, இருவருமாக உண்மையைச் சாதித்தோம் என்க. இனி, 'அவன் உளன் ஆனுல் உளனுமாறு போன்று, விபூதியோடு கூடியவனுய் உள்ளவனுக அமையாதோ?' என்கிருர் எனலுமாம். (9)

10

*பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துஉளன்*
*பரந்தஅண்டம் இதுஎன நிலம்விசும்பு ஒழிவறக்*
*கரந்தசில் இடந்தொறும் இடந்திகழ் பொருடொறும்*
*கரந்துஎங்கும் பரந்துஉளன் இவைஉண்ட கரனே.*

---

1. *நிருபாதிக நிஷேதம் - காலதேசங்கட்கு உட்படாத விலக்கு.*

பொ - ரை : உலகங்களை எல்லாம் கற்பாந்தகாலத்து உண்டு காத்த தலைவன், பரந்திருக்கின்ற குளிர்ந்த சமுத்திரத்திலுள்ள நீர் அணுத்தோறும் பரந்திருக்கின்ற அண்டம் இது என்று கூறும்படி பரந்திருக்கின்றான்; அவ்வாறே, பூமி ஆகாயம் இவற்றிலும் எங்கும் பரந்து நிறைந்திருக்கின்றான்; மிகவும் சூக்குமமான உடல்தோறும் அவ் வவ்வுடல்களில் வசிக்கின்ற உயிர்தோறும் கண்களுக்குத் தெரியாத வாறு பரந்திருக்கின்றான் என்றவாறு.

வி - கு : 'கரந்த சில்' என்பதற்கு 'மிகச் சிறிய' என்பது பொருள். இடம் - உடல்; தங்குவதற்கு இடமாதலின், உடலை 'இடம்' என்றார். கரன் - திடமானவன்; பிரமாணங்களால் வந்த திடம்.

ஈடு : பத்தாம் பாட்டு. உலகம் சரீரமாய் இருத்தலால் அதனை உடைமைப் பொருளாக உடையனாய், எங்கும் வியாபித்துத் தாரகனாய் நியாமகனாய்ச் சேஷியாய் இருப்பான் இறைவன் என்று அருளிச் செய்தார் மேல். 'இப்படி நிறைந்து நின்றால், உடலின் சேர்க்கையால் [1] சேதநனுக்குக் குறைவு வருவது போன்று, இறைவனுக்கும் இவ்வுலக சம்பந்தத்தால் குறைவு உண்டாகுமோ?' என்னில், அது செய்யாது; குறைவுஅற நிறைந்து நிற்பன் என்று வியாப்தி சௌகர்யத்தை அருளிச்செய்கிறார்.

பரந்த தண்பரவையுள் நீர்தொறும் பரந்து உளன் - பரந்து குளிர்ந்து இருந்துள்ள கடலில் நீரினது பரமாணுத்தோறும் நிறைந்து நிற்பான். நீரின் பரமாணுக்களின் கூட்டமே கடலாதலின், '**நீர் தொறும்**' என்கிறார். 'ஆயின், ஒன்றாகக் காணப்படுகின்றதே?' எனின், நீர்ச்செறிவாலே திரண்டு தோன்றுகிறது, இத்தனையேயாம். ஈண்டு நீர் என்றது நீரின் பரமாணுக்களை. [2] 'ஆகாயத்திலும் பெரியன் என்று கூறப்படுகின்ற பரம்பொருள், தண்ணீரின் பரமாணுக்களில் நிறைந்து நிற்பின், சிறிய இடத்தில் இருப்பவனாய் நெருக்குப்பட்டு இருப்பானோ?' என்னில், பரந்த அண்டம் இது எனப் பரந்து உளன் - அந்த ஒவ்வொரு பரமாணுவும் பரந்த அண்டம் இது என்னும்படி அதற்குள் பரந்திருப்பன். ஓர் அண்டத்தைச் சமைத்து அவ்வண்டத்தில் ஒருவனைத் தனியாக வைத்தது போன்று இருப்பன்

---

1. *சேதநன்—அறிவினையுடைய உயிர்.*

2. *சாந்தோக்கிய உபநிடதம்.*

என்றபடி. 'ஆயின், தண்ணீரின் பரமாணுக்களில் நிறைந்து நிற்கும் இவ்வளவேயோ ?' என்னில், நிலம் விசும்பு ஒழிவறப் பரந்து உளன். பூமியிலும் ஆகாயத்திலும் அவ்வாறே நிறைந்து நிற்கிறான். ஐம்பெரும் பூதங்களில் மூன்றனைக் கூறியவதனால் ஏனை இரண்டனையும் உபலட்சணத்தாற்கொள்க. ஆக, ஐம்பெரும்பூதங்களாலும் அமைந்துள்ள அண்டத்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி, அப்பூதங்களின் காரியமான பொருள்களில் நிறைந்திருக்கும்படியை அருளிச்செய்கிறார் மேல்: கரந்த சில் இடந்தொறும் - இமையோடு இமை பொருந்தும் போதைக் காற்றிலே முடியும்படியாக நுட்பமான சரீரந்தோறும். இடம் திகழ் பொருள்தொறும் - அவ்வச் சரீரங்களில் ஞான ஆனந்தங்களோடு கூடி மிளிருகிற ஆத்துமா தோறும். கரந்து - தான் நிறைந்திருக்கும் பொருளுக்குத் தெரியாத வாறு மறைந்து. எங்கும் பரந்து உளன் - உயிரானது உடலில் நிறையும்போது அவ்வுயிர் அவ்வுடலில் ஓரிடத்திலிருந்து ஞானத் தாலே எங்கும் நிறையக்கூடியதாய் இருக்கும்; இறைவன், அவ்வாறு அன்றித் தன் சொரூபத்தாலே எங்கும் நிறைந்திருப்பன். 'ஆயின், எங்கும் நிறைந்திருத்தலை இறைவனுக்குக் கூறி, அணுவின் தன்மையினை உயிர்ப்பொருட்குக் கூறி, இவ்வுயிர்க்குள் அவன் குறைவு அற நிறைந்திருப்பன் என்றால், அது கூடுமோ ?' என்னில், இவை உண்ட கரனே- 'சிறிய வடிவினைக்கொண்டு பெரியவற்றை எல்லாம் தன் திருவயிற்றிலே வைத்தால், [1] 'தயிர் உண்ட பொன்வயிறு இவ்வேழ் உலகும் உண்டும் இடம் உடைத்தால்' என்கிறபடியே, பின்னையும் அவ்வயிறே இடமுடைத்தாம்படி இருக்க வல்ல வரம்பில் ஆற்றலையுடைய இறைவன், சிறியனவற்றில் குறைவு அற இருக்க மாட்டானோ ?' என்கிறார். கரன் - திடமிக்க பிரமாணங்களால் உறுதி செய்யப்பட்டவன்.

'இவை உண்ட கரன், பரந்த தண்பரவையுள் நீர்தொறும் பரந்த அண்டம் இது எனப் பரந்துளன்; நிலம், விசும்பு ஒழிவு அறப் பரந்து உளன்; கரந்த சில் இடந்தொறும் இடந்திகழ் பொருள் தொறும் எங்கும் கரந்து பரந்து உளன்,' எனப் பொருளுக்கு இயையச் சொற்களைக் கூட்டி முடிக்க. (10)

---

1. *பெரிய திருமொழி*, 11. 5 : 3.

11

[1] கரவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
வரன்நவில் திறல்வலி அளிபொறை யாய்நின்ற
பரன்அடி மேற்குரு கூர்ச்சட கோபன்சொல்
நிரல்நிறை ஆயிரத்து இவைபத்தும் வீடே.

பொ - ரை: திடமான ஆகாயமும், நெருப்பும், காற்றும், தண்ணீரும், மண்ணும் என்னும் இவற்றின் தன்மைகளான சிறந்த ஒலியும், தெறலும், வலியும், தண்ணளியும், பொறுத்தலும் ஆகிய இவையாகி நின்ற இறைவனுடைய திருவடிகளின்மேல், திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபர் அருளிச்செய்த, முறைமுறையாக நிறுத்தப்பட்ட ஆயிரம் திருப்பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களும் அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினை அளிக்கக் கூடியனவாம்.

வி - கு: தெறல் என்பது 'திறல்' என மருவிற்று.

ஈடு: முதற்பாட்டிலே, இறைவன் நற்குணங்களையுடையவனாக இருத்தல், அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினையுடையவனாக இருத்தல் ஆகிய இவற்றை அருளிச்செய்து, இரண்டாம் பாட்டிலே, மேற்கூறப்பட்டனவற்றிற்கு எல்லாம் பற்றுக்கோடாக உள்ள இறைவன், உயிர்ப்பொருள் உயிரல் பொருள் ஆகிய இவற்றின் தன்மைக்கு வேறுபட்டவன் என்று அருளிச்செய்து, மூன்றாம் பாட்டிலே, மோக்ஷ உலகத்தைப் போன்றே அவனுக்கு உரிமைப்பட்ட தன்மையால் அந்தரங்கமாய்த் தோன்றுகிற லீலாவிபூதி [2] யோகத்தை அனுபவித்தார்; நாலாம் பாட்டிலே, அந்த லீலா விபூதியிலுள்ள பொருள்கள் அனைத்தும் அவனுக்கு அதீனம் என்றார்; ஐந்தாம் பாட்டில், அவற்றை அளித்தலும் அவன் அதீனம் என்றார்; ஆறாம் பாட்டில், தொழில் செய்தலும் செய்யாமையும் அவன் அதீனம் என்றார்; ஏழாம்பாட்டில், உடலுக்கும் உயிருக்கும் உள்ள இலக்கணம் உலகிற்கும் இறைவனுக்கும் உண்டு ஆகையாலே, உலகிற்கும்

1. 'மண் திணிந்த நிலனும், நிலன் ஏந்திய விசும்பும், விசும்பு தைவரு வளியும், வளித்தலைஇய தீயும், தீமுரணிய நீரும் என்றாங்கு, ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப், போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும், வலியுந் தெறலும் அளியு முடையோய்' (புறம். 2.) 'நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள; நின் தண்மையும் சாயலும் திங்களுள் உள; நின் சுரத்தலும் வண்மையும் மாரிஉள; நின், புரத்தலும் நோன்மையும் ஞாலத்து உள; நின் நாற்றமும் வண்மையும் பூவை உள; நின் தோற்றமும் அகலமும் நீரின் உள; நின் உருவமும் ஒலியும் ஆகாயத்து உள' (பரிபா. 4 : 25—31) என்னும் பகுதிகள் இத்திருப்பாசுரத்தின் முதல் இரண்டு அடிகளோடு ஒப்பு நோக்கத் தக்கன.

2. யோகம் - சேர்க்கை.

அவனுக்கும் சொன்ன ஐக்கியத்துக்குக் காரணம் சரீர ஆத்தும பாவம் என்றார்; எட்டாம்பாட்டில், குத்ருஷ்டிகளை மறுத்தார்; ஒன்பதாம்பாட்டில், சூனியவாதியை மறுத்தார்; பத்தாம்பாட்டில், வியாப்திசௌகரியத்தை அருளிச்செய்தார். இந்த வகைகளாலே அவனுடைய பரத்துவத்தை உறுதிப்படுத்தினவராய் நின்றார் இது காறும்; இத்திருவாய்மொழியில் சம்பந்தமுடையவர்கட்குத் தாம் பெற்ற பேறே பேறு என்னுமிடத்தை அருளிச்செய்கிறார் முடிவில்.

கரம் விசும்பு - திடமான விசும்பு; அன்றி, அச்சமான விசும்பு எனினுமாம்; 'அச்சமானபடி யாங்ஙனம்?' எனின், 'இங்குக் கழுகு பறக்கிறது,' என்று நிரூபிக்கவேண்டும்படியாய் இருக்கும் அன்றோ? எரி - நெருப்பு, வளி - காற்று, நீர் - தண்ணீர், நிலம் - பூமி, இவை மிசை - இவற்றின்மேலே உண்டான, வரன் - சிறந்த, நவில் - ஒலி, திறல் - தீயினுடைய தெறுதல், வலி - காற்றினுடைய மிடுக்கு, அளி - தண்ணீரினுடைய தண்ணளி, பொறை - பூமியினுடைய பொறுத்தல். ஆக, இப்படி, இவற்றைத் தன்மைகளாகவுடைய ஐம்பெரும்பூதங்களையும் அருளிச்செய்த அதனால், லீலா விபூதியைச் சொல்லினார் ஆவர். இராசத தாமதங்களைக் கழித்து, [1] நிஷ்கிருஷ்ட சத்துவமேயாய் இருப்பது நித்தியவிபூதியாகையால், இங்கே அதனையும் [2] உபலக்ஷணத்தாற் கொள்க. ஆய் நின்ற பரன் அடி மேல் - ஆக, இவ்விரண்டு விபூதியோடு கூடியிருக்கின்ற இறைவனுடைய திருவடிகளின்மேல். குருகூர்ச் சடகோபன் சொல்- [3] 'வால்மீகிர்ப் பகவான் ருஷி:' என்பது போன்று ஆப்திக்கு உடலாக அருளிச்செய்கிறார். நிரல் நிறை-சொற்களும் நிறைந்து அர்த்தங்களும் நிறைந்திருத்தல். இனி, 'நிரன் நிறை' என்று கொண்டு நேரே நிறுத்தப்படுகை. அதாவது - [4] 'நான்கு அடிகளோடு கூடியதாயும், ஒவ்வோர் அடியும் எழுத்துகளால் ஒத்ததாயும், வீணையின் நரம்பு தாளங்கள் அவற்றிற்கு ஒத்ததாயும் இருக்கின்ற ஸ்ரீராமாயணம்,' என்பது போன்று, இங்கும் செய்யுள் இலக்கணத்திற்குறையாமல் எழுத்து அசை சீர் தளை அடிகளும் பொருளும் அந்தாதியும் முறையாக நிறுத்தப்படுதல் என்னுதல். ஆயிரம்- [5] 'இப்படிப்பட்ட சுலோகங்கள்

1. *நிஷ்கிருஷ்டம் - பரிசுத்தம்.*

2. *உபலக்ஷணம் - 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்தி.*

3. *ஸ்ரீராமா. பா.* 4 : 1.

4. *ஸ்ரீராமா. பா.* 2 : 18.

5. *ஸ்ரீராமா. பா.* 41.

நிறைந்த இராமாயணத்தை நான் செய்யக்கடவேன்,' என்று பிரமனது திருவருளைப் பெற்றுக் கூறிய வால்மீகி போன்று, மயர்வற மதிநலம் அருளப் பெற்றவராகையாலே, மேலுள்ள அனைத்தும் இவர்க்கும் தோன்றுநின்றது. இனி தம் அனுபவங்கள் அனைத்தையும் ஒருசேரக் கூற முடியாது ஆதலானும், சொல்வனவற்றை ஒன்றன் பின் ஒன்றாகவே கூறல்வேண்டும் ஆதலானும், அம்முறையில் '**ஆயிரம்**' என்கிறார் எனலுமாம். அன்றி, ஆயிரமும் சொல்லியல்லது நிற்க ஒண்ணாத பொருளின் தன்மையாலே அருளிச்செய்கிறார் என்றலும் ஒன்று. **இவை பத்தும் வீடே** - [1] இவை பத்தும் பரன் அடிமேல் சமர்ப்பிக்கப்பட்டன. இனி, 'இச்செய் அடைய நெல்' என்றால், நெல்லை விளைக்குமது என்று காட்டுமாறு போன்று, 'இவை பத்தும் வீடு' என்றது, வீட்டை விளைக்கும் என்றபடியாய், மோக்ஷத்தைக் கொடுக்கும் என்று பொருள் கூறலுமாம்.

ஆக, [2] இறைவனுடைய திருவருளால் தமக்குப் பரத்து ஞானம் பிறந்தபடியையும், அந்த ஞானத்துக்குப் பலம் மோக்ஷம் என்னுமிடத்தையும், இப்பதிகத்தில் ஏதேனும் ஒரு படி சம்பந்தமுடையார்க்குப் பலம் தம்முடைய பலம் என்னும் இடத்தையும் அருளிச்செய்தார்.

### திருவாய்மொழி நூற்றந்தாதி

உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம் தான்கண்டு
உயர்வேதம் நேர்கொண்டு உரைத்து—மயர்வுஏதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன்சொல்
வேராக வேவிளையும் வீடு. (1)

[3] ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. 'வீடு' என்பதற்கு இரு பொருள் கூறப்படுகின்றன; முதற் பொருள், 'விடப்பட்டன' என்பது. இரண்டாவது பொருள், 'மோக்ஷம்' என்பது; இரண்டாவது பொருள் காரணத்தைக் காரியமாகக் கூறிய உபசாரம்.

2. 'கரவிசும்பு' என்றன் முதல் 'ஆய் நின்ற பரன்' என்பது முடிய நோக்கிப் 'பரத்துவஞானம் பிறந்தபடியையும்' என்கிறார். 'வீடு' என்பதனை நோக்கி, 'அந்த ஞானத்துக்குப் பலம் மோக்ஷம் என்னுமிடத்தையும்' என்கிறார். 'இவை பத்தும்' என்பதனை நோக்கி, 'இப்பதிகத்தில் ஏதேனும் ஒரு படி சம்பந்தமுடையார்க்கு' என்கிறார்.

3. ஆழ்வார் – நம்மாழ்வார். எம்பெருமானார் - இராமானுசர். சீயர் - மணவாள மாமுனிகள்.

# இரண்டாந்திருவாய்மொழி—'வீடுமின்'

## முன்னுரை

[1] மோக்ஷசாஸ்திரம் இறைவன் தன்மையினைக் கூறுவதும் இறைவனை அடையும் வழியைப் பற்றிக் கூறுவதும் என இரு பகுதிப்பட்டு இருக்கும். அவற்றுள், பரம்பொருளைப் பற்றிக் கூற வேண்டுவன எல்லாம் மேல் திருவாய்மொழியிலே அருளிச்செய்தார். பரம்பொருளை அடையும் வழியினைப் பற்றிச் சுருக்கமாக இத்திருவாய் மொழியால் அருளிச்செய்கிறார். 'அவ்வழிதான் யாதோ?' என்னில், இத்திருவாய்மொழியை **ஸ்ரீ ஆளவந்தார்** அருளிச்செய்தாராகத் **திருமாலையாண்டான்** பிரபத்தி விஷயமாக்கி நிர்வகித்துக்கொண்டு போருவர். **எம்பெருமானாரும்** அப்படியே அருளிச்செய்துகொண்டு போந்து, ஸ்ரீ பாஷ்யம் எழுதி முடித்த பின்னர், [2] பத்தி விஷயமாக அருளிச்செய்துகொண்டு போந்தார். பின்னர், **எம்பாரும்** [3] அவ்வாறே அருளிச்செய்தார். 'ஆயின், ஒன்று பத்தி விஷயமாகக் கூறுதல், இன்றேல், பிரபத்தி விஷயமாகக் கூறுதல் செய்யாது நினைந்தவாறு பொருள் கூறுதல் பொருந்துமோ?' எனின், இவருடைய பத்தியும் பிரபத்தியும் [4] விகற்பிக்கலாய் அன்றே இருப்பது? 'ஆயின்,

---

1. 'மோக்ஷசாஸ்திரம் இருபகுதிப்பட்டிருக்கும்' என்றது, மோக்ஷ சாஸ்திரமான வேதாந்த சூத்திரம் நான்கு அத்தியாயங்களாய், முன் இரண்டும் பரம்பொருளைக் கூறுவனவாயும், பின் இரண்டும் அதனை அடையும் வழியினைப் பற்றிக்கூறுவனவாயும் இருத்தல் பற்றி. இத்திருவாய் மொழியும் மோக்ஷசாஸ்திரமாதலின், முதல் இரண்டு பதிகங்களால் அவ் விரண்டனையும் அருளிச்செய்கிறார் என்பதாம்

2. 'பத்தி விஷயமாக' என்றது, சாத்தியபத்தி விஷயமாக என்றபடி. பிரபக்தி வேத குஹ்யமான ரஹஸ்ய உபாயம் ஆகையாலே முதலில் அதனை வெளியிட ஒண்ணாது என்று திருவுள்ளம்பற்றிப் பிரபத்தியின் பர்யாயமான சாத்திய பக்தியாலே அருளிச்செய்தார் என்றபடி.

3. 'அவ்வாறே அருளிச்செய்தார்' என்றது, பத்தி விஷயமாக அருளிச்செய்தார் என்றபடி.

4. 'இவருடைய பத்தியும் பிரபத்தியும் விகற்பிக்கலாய் அன்றே இருப்பது?' என்றது, இறைவனுடைய திருவருளே உபாயம் என்று அறுதியிட்டு இருக்கும் இவருடைய சித்தாந்தத்தைப் பார்த்தால், 'பிரபத்தியே உள்ளது; பத்தி இவர்க்கு இல்லை,' என்றும், ஆர்த்தியின் மிகுதியாலே பிரபத்தியைப் பண்ணும் இவருடைய அநுஷ்டானத்தைப் பார்த்தால், 'பத்தியே இவர்க்கு உள்ளது; மற்றையது இல்லை,' என்றும் நினைக்கும்படியாக இருக்கின்றது என்றபடி.

[1] பத்தியின் வகை இரண்டனுள் எவ்வகையான பத்தியினை இங்கு அருளிச்செய்கின்றார் ?' எனின், 'மயர்வற மதிநலம் அருளினன்' என்று இவர் தாம் பெற்றது [2] பத்தியின் நிலையினை அடைந்த ஞானமாய் இருந்தது ; தாம் பெற்றது ஒன்றும் இங்குக் கூறுவது ஒன்றுமாக ஒண்ணுதே ! அவ்வாறு கூறுவராயின், [3] விப்ரலம்பக கோடியிலே ஆவரே. ஆதலால், [4] தாம் பெற்ற அதனையே பிறர்க்கு உபதேசிக்கின்றார் எனல் அமையும். 'ஆயின், பத்தி என்பது [5] 'கர்ம ஞானங்கள் இரண்டாலும் அலங்கரிக்கப்பட்ட மனத்தையுடையவனுக்கு' என்கிறபடியே, கர்ம ஞானங்கள் இரண்டாலும் தூய்மை செய்யப்பட்ட மனத்தினையுடையவனுக்கு உண்டாவது அன்றோ ? இவருக்கு அந்தப் பத்தி வந்த வழி யாது ?' எனின், இவருடைய பத்திதான், அந்த ஞான கர்மங்களினுடைய இடத்தில் இறைவனுடைய திருவருள் நிற்க, அது அடியாகப் பின்னர் விளைந்தது அன்றே ! 'இதுதான் வேதாந்தங்களில் கூறப்பட்டதான பத்திதானே ஆனாலோ ?' என்னில், [6] சர்வேஶ்வரன் அருள இவர் பெற்றாராகிற ஏற்றம் போம் ; [7] அபசூத்ராதிகரண நியாயமும் பிரசங்கிக்கும் ; ஆதலால், அங்ஙனம் கூற ஒண்ணாது.

---

1. *பத்தியின் வகை இரண்டு : சாதனபத்தி, சாத்தியபத்தி என்பனவாம். சாதன பத்தியாவது, மோக்ஷத்தை அடைவதற்குச் சாதனமாகக் கொள்ளப்படும் பத்தி. சாத்தியப் பத்தியாவது, பத்தியே பலமாக இருப்பது. சாத்தியம் - பலம். அதாவது, எம்பெருமானாகிய சாதனத்தால் பலமாகக் கிடைத்த பத்தி என்றபடி.*

2. *'பத்தியின் நிலையினையடைந்த அறிவாய் இருந்தது,' என்றது, சாத்திய பத்தியினைக் குறித்தபடி.*

3. *விப்ரலம்பககோடி - உள்ளதை உள்ளவாறு கூறாது மறைத்துப் புகலுவோர் கூட்டம்.*

4. *'தாம் பெற்றவதனையே' என்றது, தாம் பெற்ற சாத்திய பத்தியினையே பிறர்க்கும் உபதேசிக்கிறார் என்றபடி.*

5. *ஆத்தும சித்தி.*

6. *'ஏற்றம்போம்' என்றது, 'மயர்வற மதிநலம் அருளினன்' என்ற ஏற்றம் போம் என்றபடி.*

7. *'அபசூத்திராதிகரண நியாயமும் பிரசங்கிக்கும்' என்றது, நான்காம் வருணத்தார் சாதனபத்தியை மேற்கொள்ளத் தக்கவர் அல்லர் என்னும் அபசூத்திராதிகரண நியாயத்துக்கு விரோதமும் உண்டாகும் என்றபடி.*

[1] இனி, 'மேல் திருவாய்மொழியில் தாம் அனுபவித்தார்; இத் திருவாய்மொழியால் பரோபதேசம் செய்கிருர்,' என்று இயைபு கூறலும் ஒன்று. 'ஆயின், மேல் திருவாய்மொழியில் இறைவனுடைய பரத்துவத்தை நுகர அதனுல் ஒரு பெரிய திருநாள் போலே அன்ரே காலம் கழிந்தது! இவர் இப்போது நெஞ்சு ஒழிந்திருந்து பிறர்க்கு உபதேசிக்கிறபடி எங்ஙனே? தாம் அனுபவித்த பொருளை எல்லை கண்டோ, அன்றி, தாம் அப்பொருளில் [2] விரக்தராகியோ?' என்னில், தாம் நுகர்ந்த பொருளோ என்ருல், [3] 'தனக்கும் தன் தன்மை அறிவரியான்' என்கிறபடியே, அளவிற்கு அப்பாற்பட்ட பொருள்; [4] 'கொள்ள மாளா இன்பவெள்ளம்' அன்றே? ஆதலால், தாம் நுகர்ந்த பொருளை எல்லை கண்டு அன்று. தம்முடைய காதலோ என்ருல், [5] 'காதல் கடலின் மிகப் பெரிதால்' என்றும், [6] 'மண்திணி ஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரிதால்' என்றும், [7] 'சூழ்ந்ததனிற் பெரிய என் அவா' என்றும் சொல்லும்படி பெருகி இருந்தது; ஆதலால், பொருளில் விரக்தராயும் அன்று. ஆயினும், ஒருகால் ஒரு பொருளில் காதல் பிறந்தால் அப்பொருளிலேயே வேறு காலங்களில் விரக்தி பிறக்கக் காண்கின்ருேம்; அப்படியே, சில காலம் நுகரப் பின் விரக்தி பிறந்ததோ?' என்னில், அங்ஙனமும் சொல்ல ஒண்ணுது; [8] 'எப்பொழுதும், நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழிதோறும், அப்பொழுதைக்கு 'அப்பொழுது என் ஆரா அமுதம்' என்னும்படி, என்றும் புதியதாகவே இருக்கும். இனி,[9] ஆசாரிய பதம் மேற்கொள்ளுகைக்காக அன்று; புகழ் பொருள் பூஜைகளுக்காக

---

1. மேல் பதிகத்திற்கும் இப்பதிகத்திற்கும் இரண்டு வகையில் இயைபு அருளிச்செய்கிருர். முதல் வகை இயைபு, மேற்கூறியது. 'இனி' என்று தொடங்கி இரண்டாம் வகை இயைபு அருளிச்செய்கிருர்.

2. விரக்தர் - ஆசையற்றவர்.
3. திருவாய்மொழி. 8. 4 : 6.
4. திருவாய்மொழி. 4. 7 : 2.
5. திருவாய்மொழி. 7. 3 : 6.
6. திருவாய்மொழி. 7. 3 : 8.
7. திருவாய்மொழி. 10. 10 : 10.
8. திருவாய்மொழி. 2. 5 : 4.

9. 'ஏஏ பாவம் பரமே' (2. 2 : 2.) என்கையாலே 'ஆசாரிய பதம் மேற்கொள்ளுகைக்காக அன்று' என்கிருர். 'நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன்' (3. 3 : 4.) என்றும், 'கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பாகக், கொள்ளென்று தமமூடும் இவை என்ன உலகியற்கை' (4. 9 : 4.) என்றும், 'பொன்னுழிக்கை என்னம்மான், நீக்க மில்லா அடியார்தம் அடியார் அடியார் அடியார்எங், கோக்கள்' (8. 10:10.) 'இவை ஆயிரத்துள் இவைபத்தும், ஓதவல்ல பிராக்கள் நம்மை ஆளுடையார்கள் பண்டே' (9. 1 : 11.) என்றும் இவர் அருளிச்செய்வதனுல் 'புகழ் பொருள் பூஜைகளுக்காக அன்று' என்கிருர்.

அன்று ; [1] 'ஒரு வருடம் குருகுலவாசம் செய்யாத மாணவனுக்குச் சொல்லக்கடவன் அல்லன்,' என்னும் விதிக்குக்கட்டுப்பட்டவராயும் அன்று.

'ஆயின், இது பின்னர் எத்தாலே ஆவது?' என்னில், கூறுவேன் : தாம் நுகர்ந்த நுகர்ச்சியின் இன்பப் பெருக்கு இருக்கிறபடி. தாம் நுகர்ந்த பொருள் தனியே நுகருமது அன்றிக்கே இருந்தது ; ஆதலால், 'நாம் ஒருவருக்கு ஒருவர் உணர்த்திக்கொண்டு நுகர்தற்கு ஆளாவார் யாவர் ?' என்று நினைந்து சம்சாரிகள் பக்கல் கண்வைத்தார் ; தாம் இறைவன்பால் காதல் கரை புரண்டு நிற்பது போன்று அவர்கள் ஐம்புல ஆசையில் அறிவு மயங்கியிருந்தார்கள் ; கண்டதும் அவர்கள் கேட்டினை நீக்கியல்லது நிற்க ஒண்ணுத நிலையினை அடைந்தார். 'என்னை ?' எனின், 'வைஷ்ணவதர்மம்' அதுவாதலின். '**ஒருவனுக்கு வைணவத்துவமுண்டு, இல்லை என்னும் இடம் தனக்கே தெரியுங்காண்**' என்று [2] **சீயர்** பலகாலும் அருளிச்செய்வர் ; அதாவது, **பிறர் அநர்த்தம் கண்டால் 'ஐயோ !' என்று இரங்குவானுகில், அவன் 'நமக்குப் பகவத் சம்பந்தம் உண்டு' என்று இருக்க அடுக்கும் ; 'இத்தனையும் வேண்டும் பட்டிடுவானுக்கு' என்று இருந்தானுகில், அவன் 'நமக்குப் பகவத் சம்பந்தமில்லை' என்று இருக்க அடுக்கும்** என்றபடி. 'ஆயின், அவர்களை இவர் மீட்கப் பார்க்கிற வழிதான் என் ?' என்னில், இவர்கள் அறிவு உள்ளவர்களாய் இருக்கிறுர்கள் ; ஐம்புல இன்பங்களுள் வாசியறிந்து, தீயவை கழித்து, நல்லவை பற்றி அனுபவிக்கும் தன்மை இவர்களிடத்தில் இருக்கிறது ; ஆதலால், அவர்கள் பற்றியிருக்கும் பொருள்களின் தாழ்வினையும், பற்றத்தக்க இறைவனுடைய மேன்மையினையும் இவர்களுக்கு அறிவித்தால், அவற்றை விட்டு இறைவனைப் பற்றக்கூடும் என்று பார்த்து, [3] இறைவனுடைய நன்மையினையும், இவர்கள் பற்றியுள்ள பொருள்கள் அற்பம், நிலையின்மை முதலிய குற்றங்களால் கேடு அடைந்தவை

---

1. *'வீடுமின்' என்று பலரைக் குறித்துப் பரோபதேசம் செய்கையாலே 'ஒரு வருடம்' என்று தொடங்கி அருளிச்செய்கிறுர். இது, முண்டக உபநிடதம்,* 1. 2 : 13.

2. *சீயர் - நஞ்சீயர்.*

3. *இத்திருவாய்மொழியில் வந்துள்ள 'எல்லையில் அந்நலம்' என்றதனைப் பற்றி, 'இறைவனுடைய நன்மையினை' என்கிறுர். 'மின்னின் நிலையில' என்றதனைப்பற்றி, 'இவர்கள் பற்றியுள்ள பொருள்கள் ...கேடு அடைந்தவை' என்கிறுர். 'அது செற்று' என்றதனைப்பற்றி, 'பற்றுமிடத்தில் வரும் இடையூறுகளை நீக்குந்தன்மையினையும்' என்கிறுர்.*

என்பதனையும், பற்றுமிடத்தில் வரும் இடையூறுகளை நீக்குந் தன்மையினையும், பற்றுமிடத்தில் இன்று புதிதாகச் செய்ய வேண்டுவது ஒன்று இல்லை, [1] பழைய சம்பந்தத்தை உணர அமையும் என்பதனையும், பற்றுவார்க்கு நினைக்கத் தகும் மந்திரம் இன்னது என்பதனையும், அவனை வணங்கும் தன்மையினையும் அருளிச்செய்து கொண்டு மற்றைப் பொருள்களில் வைராக்கியத்தை முன்னிட்டு இறைவனிடத்தில் பத்தியைச்செய்து அடையுங்கோள் என்று பரோபதேசம் செய்ய மூளுகிறார்.

## 12

*வீடுமின் முற்றவும், வீடுசெய்து உம்முயிர்*
*வீடுடை யானிடை, வீடுசெய் மி(ன்)னே.*

**பொ - ரை :** பொருள்களிடத்துள்ள ஆசை முழுவதனையும்விடுங்கோள்; அவ்வாறு விட்டு, உம்முடைய உயிரை, மோக்ஷ உலகத்தையுடைய இறைவனிடத்தில் சேர்த்துங்கோள்.

**வி - கு :** 'வீடுமின்' என்பதனை நீட்டும்வழி நீட்டலுக்கு உதாரணமாகக் காட்டினர் சேனாவரையர். (தொல். சொல். சூ. 403.) வீடுமின், செய்மின் என்பனவற்றில் 'மின்' முன்னிலை ஏவற்பன்மை வினைமுற்று விகுதி. 'வீடுமின் முற்றவும்' என்ற இடத்து 'விடல் வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு,' என்ற குறட்பகுதியும், 'அஃது அப்பொருள்கண்மேற் செல்லின் அந்நுகர்ச்சி விறகு பெற்ற தழல்போல முறுகுவதல்லது அடப்படாமையின், வேண்டிய எல்லாம் ஒருங்குவிடல் வேண்டும் என்று கூறினர்,' என்ற அதனுரையும் ஒப்பு நோக்கத் தக்கன. 'பரிவுசெய்து ஆண்டு அம்பலத்துப் பயில்வோன்' (திருக்கோவை. 144.) என்புழி, 'பரிவுசெய்து' என்பது ஒரு சொல் நீரதாய்ப் பரிந்து எனப் பொருள்கொள்ளபட்டதுபோன்று, ஈண்டு 'வீடுசெய்து, வீடுசெய்மின்' என்பனவும் ஒரு சொல் நீரன.

இப்பதிகம் - குறளடி நான்காய் வருதலின் வஞ்சித்துறை.

**ஈடு :** 'முதற்பாட்டு. 'மற்றைப் பொருள்களை விட்டு, உங்களுக்கு வகுத்த பொருளைப் பற்றப் பாருங்கள்,' என்கிறார். 'வீடுமின்' என்றதனை ஒரு சொல்லாகக் கோடலுமாம்; அன்றி, நீட்டல் விகாரமாகக் கோடலுமாம். 'முதலிலே 'வீடுமின்' என்கிறது என்னை ?'

---

1. 'அடங்குக உள்ளே' என்றதனைப்பற்றிப் 'பழைய சம்பந்தத்தையுணர அமையும்' என்கிறார். 'வண்புகழ் நாரணன்' என்றதனைப்பற்றி, 'மந்திரம் இன்னதென்பதனையும்' என்கிறார். 'இறை சேர்மின்' என்றதனைப்பற்றி, 'வணங்குந்தன்மையினை' என்கிறார். 'வீடுமின் முற்றவும்' என்றதனைப்பற்றி, 'வைராக்கியத்தை முன்னிட்டு' என்கிறார். 'அந்நலம் புல்கு' என்றதனைப் பற்றிப் 'பத்தியைச் செய்து' என்கிறார்.

என்னின், சிறுகுழந்தை கையிலே பாம்பைப் பிடித்துக்கொண்டு கிடந்தால், போகடச்சொல்லி, பின்னர், '**பாம்பு**' என்பாரைப் போலேயும், ஒருவன் வீட்டிற்குள்ளே கிடந்து உறங்காநிற்க, நெருப்புப் பற்றிப் புறம்பே எரிந்தால், 'வெளியே வா,' என்று சொல்லி, பின்னர், '**நெருப்பு**' என்பாரைப் போலேயும் முந்துற '**விடுங்கோள்**' என்கிறார். 'ஆயின், அத்தகைய தீயசெயல் இவ்வுயிர்கட்கு யாது?' எனின், பிறப்பு இறப்புகட்கு நடுவேயன்றே இவைதாம் நோவுபடுகின்றன? [1] 'புத்திரர்களையும் மனைவியையும் விட்டுவிட்டு ஸ்ரீராகவனைச் சரணமாக அடைகிறேன்,' என்றும், [2] 'என்னால் விடப்பட்டது இலங்கை' என்றும் விடுகை முன்னாக அன்றோ [3] முன்பு பற்றினவர்களும் பற்றினார்கள்? 'ஆயின், '**வீடுமின்**' என்ற பன்மைக்குக் கருத்து யாது?' எனின், பொறிவாயில் ஐந்தையும் அவித்த ஒருவன் வந்து முன்னே நின்று கேட்க, அவனுக்கு உபதேசிக்கிறார் அல்லர்; சம்சார வெப்பம் எல்லார்க்கும் ஒத்து இருக்கையாலே யாவரேனும் ஒருவர்க்குச் சுவை பிறக்காதா என்று நினைந்து பொதுவிலே எல்லார்க்கும் உபதேசிக்கிறார்.

முற்றவும் - சண்டாளர் இருப்பிடத்தை அந்தணர்க்கு ஆக்கும் போது அங்குள்ளவற்றுள் சிலவற்றைக் கொள்வதும் சிலவற்றைக் கழிப்பதும் செய்யார்; அது போன்று, யான் எனது என்னுஞ் செருக்கால் கெடுக்கப்பட்டு இருப்பனவற்றில் சில கூட்டிக் கொள்ள ஒண்ணாதே! ஆகையால், 'முழுவதும் விடுங்கோள்,' என்கிறார். வீடு செய்து-'மேல் 'வீடுமின் முற்றவும்' என்றவர், மீண்டும் 'வீடு செய்து' என்னும் இதற்குக் கருத்து என்?' என்னில், அரசகுமாரன் [4] அழுகு சிறையிலே கிடந்தால், முடி சூடி அரசை நடத்துவதிலும் சிறைவிடுகைதானே பயனாக இருக்குமாறு போன்று, மேல் ஒரு பேறு பெறுவதிலும் இவற்றை விட்டு நிற்கும் நிலைதானே பேறாக இருக்கையாலே விடுகையாகிற பேற்றைப் பெற்று என்றபடி.

உம் உயிர் வீடு உடையானிடை - [5] 'எவனுக்கு உயிர்கள் எல்லாம் சரீரமோ, எவனுக்கு உலகம் சரீரமோ' என்கிறபடியே, உம் உயிரையும் அதற்கு வீடாகவுள்ள சரீரத்தையும் உடையவனிடத்தில். அன்றி, இதற்கு, 'உம்உயிரைச் சரீரமாக உடையவனிடத்தில்'

1. *ஸ்ரீராமா. யுத். 17 : 14.*
2. *ஸ்ரீராமா. யுத். 19 : 5.*
3. *முன்பு பற்றினவர்கள் - விபீஷணன் முதலியோர்.*
4. *அழுகுசிறை — அழுகுதற்குக் காரணமான சிறை. இங்கு 'ஒழுகு சிறை' என்ற பாடம் சிறக்கும்.*
5. *பிரஹதாரண்யம்.*

என்றும், 'உம்உயிரை விடுமிடத்தில் உடையவனிடத்திலே' என்றும், (ஈண்டு, விடுதல் - சமர்ப்பித்தல்.) 'உம் உயிரை வீட்டினை (அதாவது - மோக்ஷத்தினை) உடையவனிடத்தில்' என்றும் பொருள் கூறலும் ஆம். 'அழிந்து போகின்ற சரீரத்துக்கு நன்மை பார்க்கச் சொல்லுகின்றேனே? நித்தியமான ஆத்துமாவுக்கு அன்றோ நான் நன்மை பார்க்கச் சொல்லுகிறேன்?' என்பார், '**உயிர்**' என்றும், 'அதுதானும் என் உயிர்க்கோ? உங்களுடைய உயிர்க்கு அன்றோ?' என்பார், '**உம் உயிர்**' என்றும் அருளிச்செய்கிறார். பொதுவிலே '**உடையானிடை**' என்கிறார்; சுவை பிறந்து, 'அவன் யார்?' என்றால் [1] '**வண்புகழ் நாரணன்**' என்கைக்காக.

வீடு செய்மின் - அவன் உடையவனாய் உங்கள் ஆத்துமாவை நோக்கிக்கொண்டிருக்கின்றான்; ஆதலின், நீங்களும் 'நான்' 'எனது' என்று அகலப் பாராமல், உங்களை அவன் பக்கல் சமர்ப் பிக்கப் பாருங்கள்; அதாவது, அவன் உடையவனான பின்பு அவ் விறைவனோடு விவாதம் இல்லாமையே உங்களுக்கு வேண்டுவது என்பதாம். அவ்விவாதம் இல்லாமையையே ஈண்டு'**வீடு செய்மின்**' என்கிறார். 'இதனால் பேறு என்?' என்னில், [2] வேறு பிராயச்சித்தம் செய்ய வேண்டுவது இன்றாம். 'அதற்குக் காரணம் என்ன?' எனின், யான் எனது என்னுஞ் செருக்குக் கிடக்கப் பிராயச்சித்தம் செய்தல் என்பது, மிகத்தாழ்ந்த பொருளை உள்ளே வைத்து மெழுக்கு ஊட்டினதைப் போன்றது ஒன்றாம். மேலும், உடையவனுக்கும் உடைமைக்கும் தக்கபடி பிராயச்சித்தம் செய்தல் வேண்டும். உடைய வன் சர்வேஶ்வரன்; இவன் 'என்னது' என்று கொண்ட பொருள், பொருள்களுள் மிகச் சிறந்ததான உயிர்ப்பொருள். மற்றும், போகடுகிற பொருள் தான் ஆகையாலே பிராயச்சித்தம் செய்வதற்கு வேறு அதிகாரியும் இல்லையே? ஆகையால், நீங்களும் உடையவன் பக்கல் '**வீடுசெய்மின்**' என்றபடி. வீடு-சமர்ப்பிக்கை; அதாகிறது, இசைகை. [3] 'குறித்த ஒரு சிலரை மட்டும் நியமிக்கின்ற யமனையும் நியமிக்கின்றவனாயும், சூரியமண்டலத்திலிருப்பவனாயும், அவ யமனைப்போன்று 'சுடு, சுட்டு ஆக்கு' என்று கூறுதல் இன்றி, எல்லார்க்கும் இனியனவே செய்கின்றவனாயும், அந்தர்யாமிப் பிராஹ்மணத்தில் கூறப்படும் ஏற்றத்தையுடையவனாயும் இருக்கும்

1. *திருவாய்* 1. 2 : 10.
2. *பிராயச்சித்தம் – கழுவாய்*
3. *மனு ஸ்மிருதி*, 8 : 92.

விஷ்ணு உன் மனத்திலே இருக்கின்றான்; அவனோடு விவாதம் இன்றி இருந்தால் போதும்; அதுவே உனக்குப் பேற்றினை அளிக்க வல்லது; பேற்றினைக் குறித்துப் புண்ணிய தீர்த்தங்கள் புண்ணியத் தலங்கள் தேடிப் போதல் வேண்டா,' என்னுமது இங்கு ஒப்பு நோக்கல் தகும். (1)

13

*மின்னின் நிலைஇல, மன்உயிர் ஆக்கைகள்*
*என்னும் இடத்துஇறை, உன்னுமின் நீரே.*

**பொ-ரை:** *நிலை பெற்ற உயிர்கள் தங்கியிருக்கின்ற உடல்கள் தோன்றி மறையும் மின்னலைக்காட்டிலும் நிலை இல்லாதனவாம் என்று சொல்லுமிடத்து, நீங்களே அதனைச் சிறிது நினைத்துப் பாருங்கள் என்பதாம்.*

**வி-கு:** *'மின்னும் மொக்குளும் என நனி வீயினும் வீயும்' என்றார் தேவரும், (சிந். 2754.) 'மன்னுயிர் எல்லாந் தொழும்' என்றார் திருவள்ளுவர். (குறள். தவ. 8.) இறை - சிறிது. இனி, இறைவன் என்று பொருள் கூறலுமாம்.*

**ஈடு:** இரண்டாம் பாட்டு. 'இறைவனிலும் வேறுபட்ட பொருள்களை விட்டுச் சர்வேஸ்வரனை இறைவன் பக்கலிலே ஆத்துமாவைச் [1]சமர்ப்பிக்கப் பாருங்கோள்,' என்றார் முதற்பாட்டில்; 'இறைவனிலும் வேறுபட்ட பொருள்களை விடச்சொல்லுகின்றீர்; அநாதி காலம் வாசனை பண்ணிப் போந்தனவற்றை இப்போதாக விடப்போமோ?' என்ன, அவற்றினுடைய குற்றங்களைக் கண்ட அளவில் விடலாம் என்கிறார் இதில்.

மின்னின் நிலை இல - மின்னலைப் போன்றும் நிலையினையுடைய அல்ல. மின்னல் - அற்பமாய் நிலையற்றதாயிருக்கும்; இவ்வுடலும், அங்ஙனம் நிலையற்றதாய் இருந்தும், நிலையான அறிவினைப் பிறப்பித்துக் கேட்டோடே முடித்துவிடும். சந்தனம் என்ற மயக்கத்தாலே நாற்றம் குளிர்த்தி மென்மைகளைக்கொண்டு பாம்பின் மேலே கையினை வைத்துக்கொண்டு ஒருவன் கிடந்து உறங்கா நின்றால், ஓர் அறவோன் 'இது பாம்பு' என்று அறிவித்தால், பின்னை அதனினின்றும் கைவாங்கி அல்லது நிற்கவொண்ணாதே! அப்படியே, மற்றைப் பொருள்களிலே இன்பமுள்ளதாக நினைந்து செல்லுகின்ற இவனுக்கு 'அவை அற்பம், நிலையற்றவை' என்று குற்றங்களைக் காணும்படி செய்யவே விடத்தக்கனவாக இருக்குமாதலின், '**மின்னின் நிலையில**' என்கிறார்.

---

1. *சமர்ப்பித்தல் - நன்றாகக் கொடுத்தல்.*

மன் உயிர் ஆக்கைகள் - உயிர் பொருந்தியிருக்கின்ற சரீரங்கள் என்னுதல்; [1] நிலையுள்ள உயிர் மேற்கொள்ளுகின்ற சரீரங்கள் என்னுதல், திறந்து கிடந்த வாயில்கள்தோறும் நுழைந்து [2] திரியும் பொருள் போன்று, ஓர் உயிரே பல சரீரங்களை எடுத்தலின், '**உயிர் யாக்கைகள்**' என்கிறார். 'எங்ஙனம்?' எனின், [3] 'மகிழ் அலகு ஒன்றே போல் மாறும்பல் யாக்கை' என்கிறபடியே, [5] ஓரலகுதானே காணிநிலையிலே நிற்பது கோடி நிலையிலே நிற்பது ஆமாறு போன்று, ஓர் உயிர்தானே கர்மங்களின் வேறுபாட்டினால் தேவ சரீரம் முதலான சரீரங்கள் பலவற்றை மேற்கொள்ளுதல். இனி, உயிர் என்பதனைத் தொகுதி ஒருமையாகக் கொண்டு பல உயிர்கள் என்று கோடலுமாம்.

என்னும் இடத்து - இறைவனுடைய குணங்களை அளவிட்டு அறியினும், அளவிட்டு அறிய முடியாதபடி குற்றங்களின் மிகுதி இருத்தலின், '**என்னுமிடத்து**' என்கிறார். இறை உன்னுமின்-இதில் அற்பத்தை ஆராயுங்கோள். நீரே-இதற்கு ஒரு பிரமாண விருப்பமும் வேண்டுவது இல்லை. சதாசார்ய உபதேசமும் வேண்டா என்றபடி. (2)

14

நீர்நுமது என்றிவை, வேர்முதல் மாய்த்துஇறை
சேர்மின் உயிர்க்குஅதன், நேர்நிறை இல்லே.

**பொ - ரை:** யான் எனது என்னும் செருக்காகிய இவற்றைப் பக்கவேரோடே அடியோடு அழித்து, இறைவனைச் சேர்மின்; அவ்வாறு சேர்தற்கு ஒத்ததும் மிக்கதும் இல்லை என்றவாறு.

**வி - கு:** 'யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்,' என்றார் திருவள்ளுவரும். நேர் - ஒத்தது. நிறை - மிக்கது, 'இல்' என்பது, குறிப்பு வினை முற்று.

ஈடு: மூன்றாம் பாட்டு. 'குற்றங்களைப் பார்த்த அளவில் விடலாம் என்றீர்; காலம் அநாதி; அக்காலத்தில் ஈட்டிய வினைகளும் முடிவின்றி இருக்கின்றன; ஆதலால், பற்றின காலம் எல்லாம் வேண்டுமன்றோ விடுகைக்கும்?' என்ன, விடுந்தன்மையினைச் சுருங்க

---

1. 'மன்' என்பதற்குப் பொருந்துதல் என்றும், நிலைபெறுதல் என்றும் இரு பொருள் கூறுகிறார்.

2. திரியும் பொருள்—நாய்.

3. முதல் திருவந்தாதி. 49.

4. ஓர் அலகு—ஒரு விதை.

அருளிச்செய்கிறார் ; சம்சாரத்துக்கு வித்து இன்னது என்றும், அதற்கு மருந்து இன்னது என்றும் அருளிச்செய்கிறார். [1]

நீர் நுமது - கேட்டினைச் செய்கிற 'யான்', 'எனது' என்னும் செருக்குகள். ஈண்டு அதிகாரம் பிறர்க்கு உபதேசிக்கும் முன்னிலை இடமாதலின், 'யான், எனது' என்னும் தன்மைப் பெயர்களை 'நீர், நுமது' என முன்னிலையாக அருளிச்செய்கிறார். இனி, செருக்கினைப் புலப்படுத்தும் அச்சொற்களைத் தாம் தம் திருவாயால் கூறுதற்கு அஞ்சி 'நீர், நுமது' என்கிறார் எனலுமாம் ; 'கூறின், நாக்கு வேம்,' [2] என்பது கருத்து. 'நன்று ; 'என் உடைமை' என்னுமது வேணுமாகில் தவிருகிறேன் ; 'நான்' என்னுமது தவிரும்படி என் ?' என்னில், இவன் 'அஹம்' என்றால், இராவணன் முதலியோர் 'நான்' என்றாற்போன்று பிறருடைய நானைத் தவிர்த்துக்கொண்டு அன்றே இருப்பது ? சரீரத்தில் அஹம் புத்தி பண்ணிப்போருமது தவிர வேணுமே !

---

1. 'நீர்நுமது' என்பது சம்சாரத்துக்கு வித்து ; 'வேர் முதல் மாய்த்து' என்பது மருந்து.

2. 'உரகம் அன்ன சொல் யான் உனக்கு உரைசெயின் உரவோய், நரகம் எய்துவன் ; நாவும் வெந்துகும் என நவின்றான்,' என்ற அசுரகுரு கூறும் கூற்று ஈண்டு நினைவிற்கு வருகின்றது. (கம்ப. இரணியன் வதை. 37.)

3. 'நான் என்னுமது தவிரும்படி என் ?' என்னில், என்றது, 'நான் என்ற சொற்குப் பொருள் உயிர் என்பதாம்; அவ்வுயிரைத் தவிர்வது எப்படி ?' என்றவாறு. இதற்கு இருவகையில் விடை அருளிச்செய்கிறார். ஒன்று, உயிர்கள் எல்லாம் இறைவனுக்கு அடிமை ; தனக்குத்தானே உரியதாகிற சுதந்தரம் அவற்றிற்கு இல்லை ; அவ்வுயிரில் இல்லாத அச்சுதந்தரத்தை அதனிடத்தில் ஏற்றிக் கூறுதல் ஒழிதல் வேண்டும் என்கிறார். அதாவது, 'நான் செய்தேன்' என்பது போன்று கூறுமிடங்களில் அகங்காரம் தோன்றுதல் காண்க. அவ்வாறு கூறின், இறைவனுடைய சுதந்தரத்தை நீக்கி, இராவணன் முதலியோர் 'நான்' என்று கூறிக் கேட்டினை அடைந்தது போன்று, உயிர்க்குக் கேட்டினை விளைத்துக்கோடலின், அதனை ஒழித்தல் வேண்டும் என்றபடி. 'பண்டே உன் தொண்டாம் பழவுயிரை என்னது என்று, கொண்டேன்,' என்றார் திவ்விய கவியும். இதனையே, வியாக்கியானத்தில் 'இவன் அகம் என்றால் இராவணன் முதலியோர் 'நான்' என்றாற்போன்று பிறருடைய நானைத் தவிர்த்துக் கொண்டன்றே இருப்பது ?' என்கிறார். வியாக்கியானத்தில் 'பிறர்' என்றது, இறைவனை. இரண்டாவது விடை, உயிர்ப்பொருளைக் காட்டுகிற 'நான்' என்ற சொல்லால் சரீரத்தைக் கூறுவது தவிரவேண்டும் என்கிறார். இதனையே, 'சரீரத்தில் அகம்புத்தி பண்ணிப்போருமது தவிர வேணுமே!' என்ற வாக்கியத்தால் தெரிவிக்கிறார். ஆக, அகங்காரத்தோடு கூறுகிற 'நான்' என்பதும், சரீரத்தைக் கூறுகிற 'நான்' என்பதும் தவிர்தல் வேண்டும் என்றபடி.

இவை வேர் முதல் மாய்த்து - இவற்றை வேர்முதல் மாய்க்கை யாவது, உறுதிப்பொருள் அன்று என்னும் நினைவு உண்டாதல். இரண்டு மரங்கள் சேர நின்றால், ஒன்றிலே தொளைத்துப் பெருங்கா யத்தை வைக்கச் சில நாள் ஒன்று போலே நின்று, பின்னைப் பட்டுப் போகாநின்றது; அப்படியே, யான் எனது என்னும் செருக்கு விடத் தக்கது என்னும் நினைவு உண்டாகத் தன்னடையே சம்சாரம் அடி அற்று நிற்கும் என்றபடி. [1] 'உயிர் அல்லாத சரீரத்தில் உயிர் என்ற புத்தியும், தன்னைச் சார்ந்தன அல்லாதவைகளில் தன்னுடையவை என்னும் புத்தியும், அறிவின்மையாகிற மரம் தோன்றுவதற்கு இரண்டு விதைகளாய் இருக்கின்றன', எனப் பிறப்பு ஈனும் வித்து இன்னது என்றும், [2] 'அடியார்களை நழுவ விடாத அச்சுதனே! நான் உனக்கு அடியவனாய் இருக்கின்றேன் என்று நினைக்கும் அறிவானது, பிறப்பினை மாற்றுதற்கு மருந்தாக இருக்கின்றது', என அதனை நீக்குதற்கு வழி இன்னது என்றும் ஸ்ரீவிஷ்ணு புராணம் கூறுகின்றது. ஆதலால், அளிக்குமவன் 'எப்போது பாதுகாப்போம்' என்று சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்க, இவன் பக்கல் விலக்காமை உண்டானால் விரோதி போகத் தட்டு இல்லை என்கை.

இறை சேர்மின் - அடையத் தக்கன அல்லாதவற்றை நீக்கி வகுத்த [3] சேஷியானவனைப் பற்றப் பாருங்கோள். சம்சாரி இறைவனை அடைதல், கெடுமரக்கலம் கரை சேர்ந்தாற்போன்று இருக்கையாலே, '**சேர்மின்**' என்கிறார். உயிர்க்கு அதன் நேர் நிறை இல்-இத்தோடு ஒக்கச் சீரியது இல்லை என்னுதல்; நேர் என்று ஒப்பாய், நிறை என்று மிகுதியாய், உயிர்க்கு இத்தோடு ஒத்ததும் மிக்கதும் இல்லை என்னுதல். ஞான ஆனந்தங்களை இலக்கணமாகவுடைய ஆத்துமா விற்கு, முதலில் ஹிதமுமாய் அடுத்த கணத்தில் பிரியமுமாய் இருக்கும் இத்தோடு ஒக்கும் சீரியது இல்லை என்றபடி. [4] 'பிறப்பாகிய பெருங்கடலில் மூழ்கினவர்களாய் ஐம்புலன்களாகிற நீர் வாழ் பிராணிகளால் இழுக்கப்படுகின்றவர்களாய் உள்ள மக்களுக்கு, எங்கும் நிறைந்திருக்கிற விஷ்ணுவாகிற ஓடத்தினைத் தவிர, சிறந்த

---

1. 2. *ஸ்ரீ விஷ்ணுபுரா.* 6. 7 : 11.

3. சேஷி - *தலைவன்.*

4. *விஷ்ணு தர்மம்,* 122.

சாதனம் வேறு ஒன்று இல்லை,' என்பதூஉம் இப்பொருட்டு. [1] எங்கும் நிறைந்த ஓடம் ஆகையால், இக்கரையும் அக்கரையும் ஒன்றாய் நின்று அவ்வருகு கடத்தும் என்பது பெறுதும். (3)

15

இல்லதும் உள்ளதும், அல்லது அவன்உரு
எல்லையில் அந்நலம், புல்குபற்று அற்றே.

**பொ - ரை :** 'இறைவனுடைய வடிவம், அழிந்து போகின்ற உடலும் அழியாததான உயிருமாகிய இவற்றின் தன்மையினை யுடையது அன்று ; எல்லையில்லாத ஆனந்தமயமானது ; ஆதலால், வெளிப்பொருள்களிலுள்ள ஆசையினை நீக்கி அவனைப் பற்று,' [2] என்கிறார்.

**வி - கு :** இல்லது, உள்ளது என்பன வினையாலணையும் பெயர்கள். அல்லது - முற்று. 'தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையால் தன்னை ஒன்றுங் கலத்தலின்மையின் தூய்தாய், தான் எல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல் பற்றி, அதனைச் 'செம்பொருள்' என்றார் ; மேல், 'மெய்ப்பொருள்' என்றும், 'உள்ளது' என்றும் கூறியதூஉம் இதுபற்றியெனவுணர்க,' என்ற பரிமேலழகருரை, 'அல்லது அவனுரு எல்லையிலந்நலம்' என்பதனோடு ஒப்பு நோக்கல் தகும். (குறள். மெய்யு. 8. பரி.)

---

1. 'விஷ்ணுவாகிற ஓடம்' என்றார் மேல் ; 'விஷ்ணு' என்பதற்கு எங்கும் நிறைந்தவன் என்பது பொருளாதலின், ஈண்டு 'எங்கும் நிறைந்த ஓடம் ஆகையாலே' என்கிறார். இவ்விடத்தில் 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவ னடிசேரா தார்,' என்ற திருக்குறள் நினைத்தல் தகும்.

2. 'இதுகாறும், 'வீடுமின்', 'உன்னுமின்', 'சேர்மின்' என்று பலரைக் குறித்துப் பொதுவில் உபதேசம் செய்து வந்த ஆழ்வார், இங்குப் 'புல்கு' என்று ஒருமையில் அருளிச்செய்கிறார் ; காரணம் என்னை ?' எனின், உபதேசம் கேட்டு வந்த பலரும், தங்களுக்குத் தலைவனாக ஒருவனை நியமிக்க, நியமிக்கப்பட்ட அவன் ஆழ்வார் முன்னிலையில் அண்மையில் வந்து நிற்க, எல்லார்க்குமாக அவனை நோக்கி அருளிச்செய்கின்றார் எனக் கோடல் அமையும். மேல் வருகின்ற ஒருமைகட்கும் காரணம் இங்ஙனமே கொள்க. உரைகாரரும் 'புல்கு' என்பதனைத் தொகுதி ஒருமை என்பர். 'முன் போற்றுவம், செய்தும் என உளப்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றாகவும், பின்னர்க் கூறு என முன்னிலையேவலொருமையாகவும் கூறினமையின், வழிநூலும் சார்புநூலும் செய்வோர் பலர் குழீஇ ஒருவர்க்கொருவர் கூறுங்கூற்றாக, இச்சூத்திரம் செய்யப்பட்டதென்க.' (நன். சூத். 9.) என்னும் சங்கர நமச்சிவாயருரை ஈண்டு ஒப்பு நோக்குக.

**ஈடு :** நாலாம்பாட்டு. [1] விடப்படுகின்ற பொருள்கள் போன்று இன்பம் அற்றனவாயும், குற்றங்களையுடையனவாயும் இராது என்று பற்றப்படுகின்ற பொருளின் இனிமையினை அருளிச்செய்கிறார்.

இல்லதும் - [2] பிரமாணங்களால் அறியக்கூடாததாய், முயற் கொம்பு என்பது போன்று உலகத்திலே இல்லாததாய் உள்ள தன்மை யினைப் பற்றவாதல், [3] இப்பி வெள்ளியாகத் தோன்றுதல் போன்று கண்களுக்குத் தோன்றுகிற அளவேயாகிப் பின் பிரமாணங்களைக் கொண்டு நோக்கின் இல்லை என்று கூறத் தக்கதாயுள்ள தன்மை யினைப் பற்றவாதல் 'இல்லது' என்கிறார் அல்லர்; தோன்றி மறையும் மின்னலைப் போன்று, அழியுந்தன்மையது ஆதலின், உடலை '**இல்லது**' என்கிறார். உள்ளதும் - அழிந்து போகும் பொருளினும் வேறுபட்டுள்ள தன்மையினை நோக்கி உயிரை '**உள்ளது**' என்கிறார். [4] 'உள்ளது என்று கூறப்படும் உயிரும் இல்லது என்று கூறப்படும் உடலும்' என்று **விஷ்ணு புராணமும்**, [5] 'சத்தியம் என்ற சொல்லால் கூறப்படும் உயிர்களும், பொய்மை என்ற சொல்லால் கூறப்படும் உடலும்' என்று **தைத்திரீய உபநிடதமும்** கூறுதல் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கன. இனி, இல்லது உள்ளது என்பன வற்றிற்கு, 'உயிருக்கு வீடாக உள்ள உடலும், அவ்வீட்டிற்குள் தங்கியிருக்கின்ற உயிரும்' என்று பொருள் கூறலுமாம்,

அல்லது அவன் உரு - அழிந்து போகின்ற சரீரத்தின்படியும் அன்று; உடலின் சேர்க்கையால் 'நான் சுகத்தையுடையவன்,' என்கிற ஆத்துமாவின்படியும் அன்று அவன் சொரூபம். 'ஆயின், எங்ஙனம் இருக்கும்?' என்னில், எல்லை இல் அந்நலம் - [6] 'ஆனந்த

---

1. *விடப்படுகின்றவை, சித்தும் அசித்தும். இன்பமற்றதாயும் குற்றங்களையுடையதாயும் இருப்பது, அசித்து. குற்றங்களையுடையது, சித்து.*

2. *இவ்வாறு கூறுகின்றவன், சூனியவாதி.*

3. *இவ்வாறு கூறுகின்றவன், மாயாவாதி. 'மயங்கிய வழிப் பேய்த் தேரிற்புனல்போலத் தோன்றி மெய்யுணர்ந்தவழிக் கயிற்றில் அரவுபோலக் கெடுதலின் பொய்யென்பாரும், நிலை வேறுபட்டு வருதலால் கணந்தோறும் பிறந்து இறக்குமென்பாரும் எனப் பொருட்பெற்றி கூறுவார் பல திறத்தராவர்,' என்ற பரிமேலழகருரை இங்கு ஒப்பு நோக்குக.*

4. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 2. 21 : 93.

5. *தைத்திரீயம்.* 6.

6. *சுருதி.*

மய :' என்றும், [1] 'உணர்முழுநலம்' என்றும், [2] 'ஒடியா இன்பப் பெருமையோன்' என்றும், [3] 'சுடர்ஞான இன்பம்' என்றும், [4] 'எல்லா நற்குணங்களையும் இயற்கையாகவுடையவன் இறைவன்' என்றும் கூறலாம்படி இருக்கும். புல்கு - குணஞானமுடையவனுக்கு, குணங்களால் மேம்பட்ட இறைவனுடைய அனுபவம் [5] அங்கநா பரிஷ்வங்கம் போன்று போகரூபமாய் இருக்குமாதலின், '**புல்கு**' என்கிறார். பற்று அற்றே - அது செய்யுமிடத்தில் இருகரையன் ஆகையன்றிக்கே, புறம்புள்ள பற்றுகளை அற்றே புல்கு. இறைவன் [6] 'பற்றிலார் பற்ற நின்ற'வனாதலின், பற்று அற்றே புல்க வேண்டும். (4)

### 16

*அற்றது பற்றுஎனில், உற்றது வீடுஉயிர்*
*செற்றது மன்னுறில், அற்றுஇறை பற்றே.*

பொ - ரை : *புறம்பேயுள்ள ஆசை நீங்குமாயின், உயிரானது மோக்ஷத்தை யடைந்ததாம்; நிலைபெற்ற மோக்ஷத்தையடைய விரும் பினால், அந்தக் கைவல்ய இன்பத்தினையும் அழித்து, அவ்விறைவ னுக்கே தீர்ந்து அவனைப் பற்றுவாயாக என்றபடி.*

வி - கு : *'காரணமற்றபொழுதே காரியமும் அற்றதாம் முறைமை பற்றி, 'பற்றற்றகண்ணே' என்றார்; 'அற்றது பற்றெனில், உற்றது வீடு' என்பதூஉம் அது பற்றி வந்தது,' என்பது பரிமேலழகருரை. (குறள், 349). 'உற்றது' என இறந்த காலத்தாற்கூறியது, தெளிவு பற்றி. 'அது செற்று' என மாற்றுக. 'மன்னுறில் அற்று இறை பற்றே' என்றதனால், மேலே 'வீடு' என்றது, கைவல்யத்தைக் குறித்தது. 'மன்னவுறில்' என்பது மன்னுறில் என விகாரப்பட்டது.*

ஈடு : ஐந்தாம்பாட்டு. [7] இறைவனைப்பற்றுமிடத்து வருகின்ற இடையூற்றை நீக்குந் தன்மையினை அருளிச்செய்கிறார். இங்கு

---

1. *திருவாய்.* 1. 1 : 2.
2. *திருவாய்.* 8. 8 : 2.
3. *திருவாய்.* 10. 10 : 10.
4. *ஸ்ரீ ஆளவந்தார் தோத்திர ரத்நம்.*
5. *அங்கநா பரிஷ்வங்கம்—பெண்ணின் கலவி.*
6. *திருவாய்.* 7. 2 : 7.
7. *'இடையூறு' ஆவது, 'அற்றது பற்று எனில் உற்றது வீடு உயிர்' என்னும் ஆத்தும அனுபவம். 'நீக்குந்தன்மை' என்றது, 'அது செற்று' என்றதனை நோக்கி.*

'இடையூறு' என்றது, கைவல்ய அனுபவத்தினை. 'ஆயின், அதனை இடையூறு என்றல் பொருந்துமோ?' எனின், இந்திர பதத்தினைக் கோலுமவன், இவ்வருகு உண்டான ஐஸ்வர்யத்தைக் கோலான்; பிரஹ்மபதத்தை ஆசைப்படுமவன், இவ்வருகு உண்டான இந்திர பதத்தில் கண் வையான்; கைவல்யத்தை (ஆத்துமானுபவத்தை) ஆசைப்படுமவன் ஐஸ்வர்யம் முதலியவைகளில் கண் வையான்; எல்லா நற்குணங்களையுமுடையனாய் திவ்வியமங்கள விக்கிரகத்தை யுடையவனாய் இருக்குமவனைப் பற்றுமவன் இவை இத்தனையிலும் கண் வையான்; ஆக, இங்ஙனம், இவை ஒன்றற்கு ஒன்று இடையூறு ஆதல் காண்க.

அற்றது பற்று எனில் - உடலும் உடல் சம்பந்தமான பொருள் களும் ஆன இவற்றில் உண்டான ஆசை நீங்கியது என்னில். உயிர் வீடு உற்றது - ஆத்துமா மோக்ஷத்தை அடைந்தது; 'அடையல் உறும்' என்றபடி வேறுபட்ட ஞானத்தையும் சொரூபத்தினையுமுடைய உயிர்ப்பொருளுக்கு உடலின் சேர்க்கையால் மறதி உண்டாகிறது; அம்மறதி யோகத்தின் பயிற்சியால் நீங்கினவாறே சொரூபம் பிரகாசிக்கும்; அது நித்தியமாய் ஞான ஆனந்தங்களாய் இருக்கை யாலே 'இது தன்னையே அனுபவிக்க அமையாதோ!' என்று தன் பக்கலிலே கால் தாழப்பண்ணும்; அங்கு அனுபவிக்கும் அவ்வின்பத் தினையே இங்கு 'வீடு' என்கிறார். அது செற்று - அதனை முகஞ் சிதறப் புடைத்து. மன் உறில் - மன்ன உறில், அதாவது, தன்னைப் பற்றினால் 'இன்னமும் அதற்கு அவ்வருகே ஓர் அனுபவம் உண்டு' என்று இருக்க வேண்டாதபடியான நிலை நின்ற உறுதிப் பொருளைப் பற்றப் பார்க்கில் என்றபடி.

அற்று இறை பற்று - அடைகின்ற காலத்திலே அவனுக்கு என்று அறுதி செய்து, சேஷியான அவனைப் பற்றப் பார். இனி, இதற்கு [1] 'மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு' என்கிறபடியே, 'இறைவனைப் பற்றி இதனை அறுப்பதற்குப் பார்ப்பாய்' என்று உரைத்தலுமாம். [2] இப்பொருளுக்குப் 'பற்று' என்னும் முற்றை எச்சமாக்கி, 'அற்று' என்னும் எச்சத்தை முற்றாக்குக. (5)

17

*பற்றிலன் ஈசனும், முற்றவும் நின்றனன்*
*பற்றிலை யாய்அவன், முற்றில் அடங்கே.*

---

1. *மூன்றாந் திருவந்தாதி,* 14.

**பொ - ரை :** 'இறைவனும் பற்றையுடையவனாகி உலகத்துப் பொருள்கள் எல்லாமாகவும் நின்றான்; ஆதலால், நீயும் பற்றையுடையையாய் அவ்விறைவனுடைய தொண்டுகள் அனைத்திலும் சேர்க,' என்கிறார்.

**வி - கு :** பற்றிலன் - பற்றினையுடையவன்; இல்-வீடு: அதாவது, இருப்பிடம். பற்றிலையாய் - பற்றினையுடையையாய். முற்றில்-முழுவதிலும்.

**ஈடு :** ஆறும்பாட்டு. பற்றுமிடத்தில் வரும் இடையூற்றை நீக்குதலை அருளிச்செய்தார் மேல்; 'ஆயின், நீர் பரிகாரம் சொல்லுகைக்கு எல்லா விருப்பமும் முற்றுப் பெற்றவனாய், சேஷியாயிருக்கிற அவன்தான் நமக்குக் கைப்புகுந்தானோ?' என்ன, அவன் பக்கல் திருத்த வேண்டுவது ஒன்று இல்லை; அவன் பற்றுக்கு இருப்பிடமானவன் என்கிறார்.

பற்றிலன் - அன்பை உறைவிடம் ஆக உடையவன். பற்றிலன் என்பது - பற்றிலான் என்பதன் விகாரம்; 'அகத்திலான்' என்பது போன்று; அகத்திலான் - அகத்திலே இருப்பவன். 'அன்புள்ளவனாயினும் இறைவன் அன்றோ அவன்?' எனின், ஈசனும்-இறைமைத் தன்மை கழற்ற ஒண்ணாமையாலே கிடக்குமித்தனை. 'கழற்ற ஒண்ணாமையால் கிடந்தாலும் அச்சத்திற்குக் காரணமாமே?' எனின், ஆகாது; அவ்விறைமைத்தன்மை இவ்வன்பு குணமாகைக்காகக் கிடக்கிறது; அஞ்சுதற்கு உடல் அன்று; பெரியவன் எளிமையே குணம் என்று சொல்லப்படும். 'ஆயின், இதனை நாம் காணும் இடம் உண்டோ?' எனின், [1] 'பூவில் கண் வைத்துத் தொடுக்கில் அதில் ஆசை பிறக்கும் என்று கண்ணை மாற வைத்துத் தொடுத்து, பூவிற்றுப் பிழைக்குமத்தனை வறியவரான 'மாலாகாரர்' தண்ணளியே இவர்கட்கு விஞ்சியிருப்பது, மேன்மை கழற்ற ஒண்ணாமையாலே கிடந்தது இத்தனை; 'இரண்டும் அவ்விறைவனிடத்தில் தங்கியிருக்க, தண்ணளியே உள்ளது என்று அறிந்தபடி என்?' என்னில், சேஷிகளாய் இருப்பார்க்கு அடியார்களை அழைத்துக் காரியம் கொள்ளலாய் இருக்க, நெடுந்தெருவே போகிறவர்கள், 'நான் இருந்த முடுக்குத் தெருத் தேடி வந்த போதே தண்ணளியே விஞ்சியிருக்கும் என்னும்

---

1. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 5. 16 : 21.

இடம் தெரிந்தது இல்லையோ ?' [1] என்றும் 'ஒக்கச் சஞ்சரிக்கிற வழியிலே நிதி எடுப்பாரைப்போலே, என்னுடைய அடிமைக்குத் தக்கதான தொழிலிலே சேர்ந்து அவன் விருப்பின்படி என்னை உபயோகித்துக்கொள்ள எதிர்பாராநின்றேன்,' என்றும் கூறினார் என்று விஷ்ணு புராணம் கூறுமாற்றால் அறிதல் தகும்.

முற்றவும் நின்றனன் - [2] 'எல்லாப் பிராணிகளுக்கும் நான் ஒத்தவன் ; எனக்கு எவனும் பகைவன் இலன் ; அன்பனும் இலன் ; எவர்கள் என்னைப் பத்தியால் அடைகின்றார்களோ, அவர்கள்போலவே நானும் அவர்களிடத்தில் அன்புடன் வசிக்கின்றேன்,' என்கிறபடியே, அடையும் திறத்தில் ஒத்தவனாய் இருந்தான். [3] இத்தலை இருந்தபடி இருக்கத் தான் எல்லார்க்கும் ஒத்திருக்கை. பற்றிலையாய் - நீயும் பற்றினையுடையையாய். அவன் முற்றில் அடங்கு - [4] 'நான் எல்லா அடிமைகளும் செய்வேன்,' என்கிறபடியே, அவனுடைய எல்லாத் தொண்டுகளிலும் சேர்வாய்.

---

1. 'என்றும் ஒக்கச் சஞ்சரிக்கிற வழியிலே நிதி எடுப்பாரைப் போலே' என்ற வாக்கியத்துக்குக் கருத்து, 'என்னுடைய சொரூபம் அநாதியாய் இருக்க இழந்திருந்த நான், இப்போது ஒரு முயற்சியும் இன்றியே காணப்பெற்றேன்,' என்பதாம்.

2. ஸ்ரீ கீதை, 9 : 24. இங்கு: 'கடுநவையுண்டாக வருத்தும் வெகுளியும் அருளும் கோட்டமும் செப்பமும் ஆகிய இவை மறமும் அறமும் உடையாரிடத்து உடையையாய் இல்லாரிடத்து இல்லாயாய் இருத்தல் அல்லது மாற்றுருயிரின்கண்ணும் கேளிருயிரின்கண்ணும் அதனை மாற்று தற்றொழிலும் அதற்கு ஏமஞ்செய்தற்றொழிலும் உடையையல்லை ; நினக்கு மாற்றோரும் கேளிரும் இலராதலான். என்றது, குற்றமாகிய மற முடையாரிடத்து இல்லையாதலும், குணமாகிய அறமுடையாரிடத்து அருளும் செம்மையுமுடையையாய் அஃதில்லாரிடத்து இல்லையாதலு மல்லது நினக்குப் பகையாயினாருயிரின்கண் அதனை மாற்றுதற்றொழிலும் நினக்குக் கேளிராயினாருயிரின்கண் அதற்கு ஏமஞ்செய்தற்றொழிலும் உடையையல்லை; அவ்விரு திறத்தாரும் நினக்கு இன்மையான் என்ற வாறு,' என்ற பரிபாடல் உரைப்பகுதி ஒப்பு நோக்கல்தகும். (4 : 49-55).

3. 'இத்தலை இருந்தபடி இருக்க' என்றதற்குக் கருத்து, பிறப் பாலும் ஒழுக்கத்தாலும் ஞானத்தாலும் அவ்வுயிர்கள் இருந்த நிலையி லேயே இருந்துகொண்டு இருக்க என்பதாம்.

4. ஸ்ரீராமா. அயோத். 31, 25.

இனி, இப்பாசுரத்திற்குப் பட்டர் அருளிச்செய்யும்படி: பற்றிலன் ஈசனும் - [1] ' 'எங்கும் நிறைந்து எல்லா விருப்பமும் முற்றுப் பெற்றவனாக இருத்தலின் வாசுதேவன் ஆகிறான்,' என்கிறபடியே, எல்லா நற்குணங்களோடும் கூடினவனாய், ஞானம் ஆனந்தம் குற்றம் இன்மை இவற்றையே வடிவாக உடையவனாய், ஏவப்படுகின்றவர்களான நித்தியசூரிகளை உடையவனாய்த் திரை மாறின கடல் போலே பரமபதத்தில் எழுந்தருளி இருக்கின்றவனும் அவர்கள் பக்கல் பற்றுடையவன் அல்லன். 'ஆயின் அவர்கள் பக்கல் பற்றுடையவன் அன்றிக்கே இருந்தால் குறைபாடு இராதோ?' என்னில்,

முற்றவும் நின்றனன் - அவர்கள் எல்லாராலும் வரும் ஏற்றமும் இன்று வந்து அடைகிற இவனாலே ஆம்படி நின்றான்; 'ஆயின், அப்படி நின்ற இடம் உண்டோ?' எனின், [2] 'இன்று வந்து அடைந்த சுக்கிரீவனுக்கு ஒரு வாட்டம் வரில், பசுவானது அன்று ஈன்ற கன்றின் வாத்சல்யத்தாலே முன் ஈன்ற கன்றையும் கொம்பிலே கொள்ளுமாறு போன்று, [3] நித்தியாஸ்ரிதையான பிராட்டியாலும் காரியம் இல்லை,' என்றான் ஸ்ரீ ராமபிரான்.

பற்றிலையாய் - விட ஒண்ணாதாரை நீ ஒரு தலையாக விட்டான் அவன்; அவன் ஒரு தலையானால் விடலாமவற்றை விடத்தட்டு என் உனக்கு? அவன் முற்றில் அடங்கு - அவனையே எல்லாமாகப் பற்றப் பார்: ஆயின், அவன் எல்லாமாக இருப்பனோ? எனின், [4] 'எல்லாப் பொருளும் வாசுதேவனே' என்றும், [5] 'தாயும் தகப்பனும் உடன் பிறந்தோனும் வீடும் காப்பாற்றுமவனும் நட்டோனும் கதியும் நாராயணனே ஆவன்,' என்றும், 'சுற்றத்தார்களில் ஒவ்வொருவர் ஒவ்வொரு பயன்பொருட்டு,' என்றும் வருவனவற்றால் அவன் எல்லாமாக இருப்பான் என்பது ஓர்தல் தகும். (6)

---

1. ஸ்ரீ கீதை.

2. ஸ்ரீராமா. யுத். 41 : 4.

3. நித்யாஸ்ரிதை - எப்பொழுதும் 'அகலகில்லேன் இறையும்' என்று மார்பில் எழுந்தருளியிருக்கிற பெரிய பிராட்டியார்.

4. ஸ்ரீ கீதை. 7 : 10.

5. சுபால உபநிடதம்.

18

அடங்கெழில் சம்பத்து, அடங்கக்கண்டு ஈசன்
அடங்கெழில் அஃதென்று, அடங்குக உள்ளே.

**பொ - ரை:** 'கட்டடங்க அழகியதான செல்வம் முழுவதையும் பார்த்து, அது இறைவனுக்கு அடங்கிய செல்வமாகும் என்று நினைந்து, அச்செல்வத்திற்குள் நீயும் ஒரு செல்வமாக அடங்குக,' என்றவாறு.

**வி - கு:** 'அடங்கெழில்' என்பது விகாரம்; அடங்க எழில் என்று பிரிக்க. இரண்டாவது 'எழில்' என்பது செல்வம்; எழுச்சிக்குக் காரணமாக இருத்தலின், செல்வம் எழில் எனப்பட்டது. 'சம்பத்து' என்பது சொல்லால் ஒருமையாதலின், அதனை 'அஃது' என்னும் ஒருமைப்பெயராற்குறித்தார். 'அடங்குக' என்பது, வியங்கோள் வினைமுற்று.

**ஈடு:** ஏழாம்பாட்டு. அடியார் பக்கல் பற்றையே இயல்பாக உடையவன் என்றார் மேல்; அவன் பற்றையே இயல்பாக உடையவன் ஆயினும், அளவிட முடியாத இரண்டு விதமான மஹா விபூதியையுடையவனாய் இருந்தான்; இவன் மிகச் சிறியனாய், மிகச் சிறிய உபகரணத்தையுடையனாய் இருந்தான்; ஆன பின்னர், அவனை இவனால் கிட்டலாய் இருந்ததோ? மேலும், கடலிலே புக்க துரும்பானது இரண்டு தலையிலும் நினைவு இன்றிக்கே இருக்கவும், திரைமேல் திரையாகத் தள்ளுண்டு போந்து கரையிலே சேருகிறது இல்லையோ? 'அப்படியே அவனுடைய ஐஸ்வரிய அலையானது இவனைத் தள்ளாதோ?' என்னில், இந்த ஐஸ்வரியம் எல்லாம் நமக்கு வகுத்த சேஷியானவனுடைய ஐஸ்வரியம் என்று நினைத்தால் தானும் அதுவாகச் சேரலாமே! ஆன பின்னர், சம்பந்த ஞானமே வேண்டுவது என்கிறார். 'எங்ஙனம்?' எனின், ஒரு வணிகன் தன் மனைவி கருவுற்று இருக்குங்காலத்தில் பொருள் தேடும் விருப்பினால் வெளி நாடு சென்றான்; அவளும் கரு உயிர்த்தாள்; மகனும் தக்க வயது அடைந்து தனக்கும் தமப்பனாருடைய வாணிகமே தொழிலாக மகனும் பொருள் தேடப் போனான். இருவரும் தத்தமக்கு வேண்டிய சரக்குப் பிடித்துக்கொண்டு வந்து ஒரு பந்தலில் தங்கினார்கள்; அஃது, அவ்விருவருக்கும் இடம் போதாமையால் அம்பு அறுத்து எய்ய வேண்டும்படி விவாதம் உண்டான சமயத்தில், இருவரையும் அறிவான் ஒருவன் வந்து, 'இவன் உன் தமப்பன்; நீ இவன் மகன்', என்று அறிவித்ததால், கீழ் இழந்த நாள்களுக்குச் சோகித்து, இருவர் சரக்கும் ஒன்றாய், அவன் காப்பாற்றுகின்றவனாய் இவன் காப்பாற்றப் படும் பொருளாய்க் கலந்துவிடுவார்கள் அன்றோ? அது போன்று,

[1]'சீவான்மாவும் பரமான்மாவும் சரீரமாகிற ஒரு மரத்தினைப் பற்றி யிருந்தால் ஒருவன் இரு வினைப்பயன்களை நுகராநிற்பன்; ஒருவன் நுகர்வித்து விளங்காநிற்பன்; அவன் ஏவுகின்றவன்; நாம் ஏவப்படும் பொருள்,' என்னும் முறை அறியவே பொருந்தலாம் அன்றே!

ஓர் அரசகுமாரன் பூங்கா ஒன்றினைக் கண்டு புக அஞ்சினால், 'இது உன் தமப்பனதுகாண்,' என்னவே, நினைந்தபடி நடந்து கொள்ளலாம் அன்றோ! ஆன பின்னர், 'அவனுடைய உடைமை இவையெல்லாம்,' என்னும் நினைவே வேண்டுவது; தானும் அதற் குள்ளே ஒருவனாகச் சேரலாம் என்கிறார்.

அடங்க எழில் சம்பத்து அடங்கக் கண்டு ஈசன் அடங்கு எழில் அஃது என்று அடங்குக உள்ளே - கட்டடங்க நன்றான செல்வத்தை எல்லாம் கண்டு, 'நமக்கு வகுத்த ஸ்வாமியானவனுடைய செல்வம் இவை எல்லாம்,' என்று நினைந்து, அவ்விபூதிக்குள்ளே தானும் ஒருவனாகச் சேரக்கடவன்; 'சேரின் பயன் யாது?' எனின், அப்போது சேஷிக்கு அதிசயத்தை விளைத்தான் ஆகலாம்; 'சேஷிக்கு அதி சயத்தை விளைத்தால் இவ்வாத்துமாவுக்குப் பயன் யாது?' எனின், அவனுக்குச் சேஷமாக இருக்கும் இவ்வாத்துமாவினுடைய சொரூப சித்தி, சேஷிபக்கல் கிஞ்சித்காரத்தாலேயாய் இருக்குமே? அதாவது, அடிமை சித்திப்பதே பலன் என்றபடி. 'நன்று; லீலா விபூதியைக் கட்டடங்க நன்றான செல்வம் என்னலாமோ? இவ்விபூதி தாழ்ச்சியை யுடையது அன்றோ?' எனின், போகபூமியாய் இருக்கும் நித்திய விபூதி; கர்மங் காரணமாக அவனாலே ஏவப்படுவதாய் இருக்கும் இவ்வுலகம்; இதனை 'அவன் உடைமை' என்று நினைக்கப் புக்க வாறே இதில் கர்மங் காரணமான தன்மை தோன்றாது; அவன் உடைமை என்னும் தன்மையே தோன்றும்.

'ஆயின், இன்று அடங்குகையாவது என்? தொன்று தொட்டே அவன் விபூதியில் சேர்ந்தேயன்றோ இருக்கின்றேன்?' என்னில், உடைமை உடையவன் என்னும் சம்பந்த ஞானம் அடியாகத் தானும் அவன் விபூதியிலேயே ஒருவனாய்ச் சேர்தல் வேண்டும்; [2] கடல்

---

1. ருக்வேதம்.

2. *'கடல் அளவிடக் கூடாததாய் இருப்பினும்' என்று தொடங்கும் வாக்கியம், இப்பாசுரத்தின் முன்னுரையில் 'கடலிலே புக்க துரும்பானது இரண்டு தலையிலும் நினைவின்றிக்கே இருக்கவும், திரைமேல் திரையாகத் தள்ளுண்டு போந்து கரையிலே சேருகிறது இல்லையோ?' என்னும் வினாவிற்கு விடையாக எழுதப்படுகின்றது.*

அளவிடக் கூடாததாக இருப்பினும், அதன் உள்ளில் மீன் முதலிய பொருள்களுக்கு வேண்டினபடி புகலாம் அன்றே? அது போன்று, சம்பந்தஞானம் அடியாகக் கிட்டலாம்; சம்பந்தஞானம இல்லாத துரும்பையன்றே கடல் கரையிலே ஏறத் தள்ளுகிறது? 'ஆயின், சம்பந்த ஞானத்தைப் பிறப்பித்தல் யாருடைய தொழில்?' எனின், அது இருவரையுஞ் சேர்ப்பிக்கின்ற ஆசாரியனுடைய தொழில். (7)

## 19

**உள்ளம் உரைசெயல், உள்ளஇம் மூன்றையும்**
**உள்ளிக் கெடுத்துஇறை, உள்ளில் ஒடுங்கே.**

**பொ - ரை:** மனம் வாக்குக் காயம் ஆகிய இம்மூன்றையும் ஆராய்ந்து பார்த்து, மற்றைப் பொருள்களினின்றும் மீட்டு இறைவனிடத்திலே சேர்ப்பாய்.

**வி - கு:** உள்ளம் - உள்ளுதற்குக் கருவியாக இருப்பது. வாக்கினை 'உரை' என்றும், உடலைச் 'செயல்' என்றும் அருளிச்செய்தது காரண காரிய உபசாரம். 'ஒடுக்கு' என்பது - 'ஒடுங்கு' எனத் திரிந்தது மெலித்தல் விகாரம்.

**ஈடு:** எட்டாம் பாட்டு. 'இறைவனுக்கு உரிய செல்வங்களுள் ஒன்றாகச் சேரின், பின்னை, தானும், தனக்கு என்னச் சில கரணங்களும் வேறாகக் காணப்படுவன இலவே? வேறாக இருப்பின் அன்றோ வணங்குதல் முடியும்?' என்ன, அவன் தனக்காகத் தந்த கரணங்களை அவனுக்கு ஆக்குகையே வணங்குதலாம் என்று வணங்கும் முறையினை அருளிச்செய்கிறார்.

உள்ளம் உரை செயல் - வெளிப்பொருள்களில் விருப்பத்தைச் செலுத்தும் மனத்தை உட்பொருளை நோக்கும்படி செய்தால், அது இறைவனை நினைத்தற்குக் காரணமாகும்; அந்நினைவு முதிர்ந்து வழிந்து, [1] 'பொங்கேழ் புகழ்கள் வாயவாய்' என்கிறபடியே, சொல்லாகப் புறப்படுகைக்குக் காரணமாகும் வாக்கு; [2] 'குணங்களால் அடிமை பூண்டு இருக்கிறேன்,' என்கிறபடியே, திருவடிகளிலே விழுந்து எல்லாத் தொண்டுகளையும் செய்வதற்குக் காரணமாகும் உடல். உள்ள இம்மூன்றையும் - இவைதாம் இன்றாக சம்பாதிக்க வேண்டாதே சேஷியான தான் இவற்றை உண்டாக்கிவைத்தான்; இவையும் வேறு சிலவும் தேடவேண்டா; இங்கே [3] 'தாம் உளரே,'

---

1. திருவாய். 8. 10 : 4.
2. ஸ்ரீராமா. கிஷ். 4 : 12.
3. இரண்டாந்திருவந். 21.

[1] 'நா வாயில் உண்டே' என்பனவற்றை நினைவு கூர்க. உள்ளி-உள்ள இம்மூன்றையும் ஆராய்ந்து; 'இவற்றை எதற்காகப் படைத்தான்? இவைதாம் இப்போது இருக்கிறபடி என்?' என்று ஆராய்ந்து பார்த்தால், அவை அடையத்தகாத பொருள்களில் அன்புடன் கூடியிருத்தல் விளங்கும். கெடுத்து - அவற்றினின்றும் மீட்டு. இறை உள்ளில் ஒடுங்கு - **பாழிலே மேட்டிலே பாய்கிற நீரைப் பள்ளத்திலே பயிரிலே பாய்ச்சுவாரைப் போன்று,** அடையத்தக்க பொருளில் ஆக்கப் பார். அதாவது, கரணங்களை அவன் விஷயத்தில் அன்புடன் இருக்கச் செய் என்றபடி. (8)

20

**ஒடுங்க அவன்கண், ஒடுங்கலும் எல்லாம்**
**விடும்பின்னும் ஆக்கை, விடும்பொழுது எண்ணே.**

பொ-ரை: அவ்விறைவனிடத்தில் சென்று சேரவே, உங்களிடத்தில் வந்து சேர்ந்திருக்கின்றன எல்லாம் தாமாகவே விட்டு நீங்கும்;

---

1. *முதல் திருவந். 95.*

*மேற்கோள் பாசுரங்கட்குப் பொருள்:*

*தாமுளரே - தந்தம்மைத் தேட வேண்டாவே. தம் உள்ளம் உள் உளதே - எனக்குச் சற்றுப்போது பகவத் விஷயத்தை நினைக்கைக்கு நெஞ்சு தரல்வேண்டும் என்று தனிசு (கடன்) வாங்க வேண்டாவே. தாம் உளரானால் உண்டான நெஞ்சம் உண்டே என்றபடி. தாமரையின் பூ உளதே - நைக்கு எட்டும் பூ உண்டாக்கி வைத்தானே. 'தாமரையின் பூ உளதே' என்றது, எல்லா மலர்களுக்கும் உபலக்ஷணம். எத்தும் பொழுது உண்டே - காலத்தை உண்டாக்கி வைத்தானே. அதனைத் தனிசு வாங்க வேண்டாவே. வாமனன், தன் உடைமை பெறுகைக்குத் தான் இரப்பாளன் ஆவான் ஒருவனை இருந்தானே. திருமருவுதாள்-அவனுடைய ஐஸ்வரியப் பிரகாசமான திருவடிகள். மருவு சென்னியரே - இப்படிப்பட்ட திருவடிகளில் சேருகைக்குத் தலையாக்கி வைத்தானே. செவ்வே அரு நரகம் சேர்வது அரிது - இப்படி இருக்கச்செய்தே, இவர்கள் சம்சாரத துக்கு விலக்கடித் தேடிக்கொண்டு போகிறபடி எங்ஙனேயோ?*

*நா வாயில் உண்டே - இது முன்னம் புறம்பு தேடிப் போகவேண்டாவே. நமோ நாரணா என்று ஓவாது உரைக்கும் உரை உண்டே - ஆயிரம் எழுத்துகளைக் கொண்டது ஒரு மந்திரம்போல அன்றி எட்டு எழுத்தாய் நடுவே பிரிவு இல்லாதே சொல்லலாந்திருப்பெயர் உண்டாக்கி வைத்தானே. மூவாத மாக்கதிக்கட் செல்லும் வகை உண்டே - மீண்டும் வருதல் இல்லாத மோக்ஷத்தை உண்டாக்கி வைத்தானே. என் ஒருவன் தீக்கதிக்கண் செல்லுந் திறம் - இங்ஙனே இருந்த பின்பு இவர்கள் தண்ணியு வழி தேடிப் போகிறபடி எங்ஙனேயோ!*

அதற்குமேல், உயிரானது உடலை விட்டு நீங்குங்காலத்தை எண்ணி இரு என்பதாம்.

**வி - கு :** 'ஒடுங்க, விடும்' என முடிக்க. கண் என்பது, ஏழனுருபு. ஒடுங்கலும் - உம் அசைநிலை. இனி, இதனை 'எல்லாம்' என்ற சொல்லோடுங் கூட்டி ஒடுங்கலும் எல்லாமும் விடும் எனப் பொருள் கூறலுமாம். எண் என்பது, முன்னிலை ஏவல். ஏகாரம் : அசைநிலை.

**ஈடு:** ஒன்பதாம் பாட்டு. இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள சம்பந்த ஞானம் உண்டாகவே தன் சிறுமை பார்த்து அகல வேண்டா என்றும், வணங்குதலாவது - இவன், இறைவன் தனக்காகத் தந்த கரணங்களை அவனுக்கு உறுப்பு ஆக்குகை என்றும் அருளிச் செய்தார், மேல் இரண்டு திருப்பாசுரங்களால்; 'இது தன்னரசு நாடாய் அடையத் தக்க பொருள் அவன் அல்லாமையால் வழி படாது இருக்கின்றேமோ ! வழிபட ஒட்டாமல் தடுக்கும் விரோதிகள் மிகுதியாக இருத்தலால் அன்றோ நாங்கள் வழிபடாது இருக்கிறோம் ?' என்ன, 'நீங்கள் அவனைக் கிட்டவே அவை அடைய விட்டுப் போம்,' என்கிறார் இத்திருப்பாசுரத்தில்.

அவன்கண் ஒடுங்க - [1] பிரகாரமாக இருக்கும் நீங்கள் பிர காரியாக இருக்கின்ற அவன் பக்கலிலே சென்று சேர, ஒடுங்கலும் எல்லாம் விடும் - செய்யத்தக்கனவற்றைச் செய்ய, தகாதவை எல்லாம் தாமாகவே விட்டு நீங்கும் ; ஆத்துமாவின் சொரூபத்துக்குத் தக்கவற்றைச் செய்யவே, சொரூபத்துக்கு விரோதிகளாக உள்ளவை எல்லாம் விட்டுப்போகும் என்றபடி. 'ஒடுங்கல்' என்கையாலே இவை ஆத்துமாவிற்கிடப்பன அல்ல; ஆத்துமாவிற்கு விரோதியாய்க் கொண்டு வந்தேறி என்னுமிடம் தோன்றுகிறது. இனி, 'ஒடுங்கல்' என்பதனை [2] மெலித்தல் விகாரமாகக் கொண்டு 'இவனுக்குக் குறைவைப் பிறப்பிக்குமவை' எனலுமாம். எல்லாம் விடும் - அறி வின்மை, கருமம், [3] வாசனை, ருசி இவையெல்லாம் அடியோடே

---

1. பிரகாரம் - விசேடணம் ; பிரகாரி - விசேடியம் ; சரீர சரீரங்கள்.

2. 'மெலித்தல் விகாரமாகக்கொண்டு' என்றதற்கு, 'ஒடுக்கல்' என்ற சொல் 'ஒடுங்கல்' என வந்துளது என்பது கருத்து.

3. வாசனை - முன்பு செய்து போந்தவற்றில் மீளவும் மூளுகைக்கு உறுப்பான சம்ஸ்காரம் ; இது ஹேது பேதத்தால் பல வகைப்படும். ருசி- வேறு சுவைகளாலும் மீட்க ஒண்ணாதபடி ஒன்றிலே செல்லும் விருப்பம். இதுவும் விஷய பேதத்தாலே பல வகைப்படும்.

விட்டுக் கழியும் [1] 'வானே மறிகடலோ,' 'மாடே வரப் பெறுவராம் எனறே வல்வினையார்' என்னும் பாசுரங்களை நினைவு கூர்க.

'இவை நீங்கினுல், பின்னர் இவன் செய்யத்தக்க காரியம் யாது?' எனின், பின்னும் ஆக்கை விடும் பொழுது எண்-'பத்தியினுல் வந்த ராஜகுலங்கொண்டு பலன் தப்பாது, தன்னடையே வருகிறது,' என்று ஆறியிருத்தல் அன்றிக்கே, காரணமான அறிவின்மை முதலியவைகள் கழிந்தனவாகில், அவற்றின் காரியமான இச்சரீரமும் ஒருபடி போய், [2] தண்ணீர் துரும்பு அற்றுப் பலன் கைப்புகுந்தது ஆவது எப்போதோ என்று அதற்கு விரல் முடக்கி இருக்கும் இத்தனை. 'ஆயின், [3] கேவலனைப் போன்று உடலின் நீக்கத்தினை மட்டும் விரும்புவது என்?' என்னில், இன்பத்தில் இச்சையுடைய ஒரு பெண் தன் உடம்பில் அழுக்கினைப் போக்கித் தன் கணவனோடு இன்பம் நுகர்தற்கு உரிய காலத்தை எதிர் நோக்கிக்கொண்டு இருத்தல் போன்று, இவனும் பேற்றுக்கு உறுப்பாக உடலை விட்டு உயிர் நீக்குங் காலத்தினை எதிர்பார்த்திருக்கக் கடவன். [4] 'கொங்கை மேற் குங்குமத்தின் குழம்பு அழியப் புகுந்து ஒருநாள், தங்குமேல் என் ஆவி தங்கும்,' என்று அழுக்குக் கழற்றி ஒப்பித்துப் பார்த்து இருந்தாள் ஒரு பிராட்டி. அப்படியே, [5] 'அழுக்கு உடம்பு' என்கிற இவ்வழுக்கு நீங்கி மோக்ஷமாகிய பலத்தை அடைதல் எப்போதோ என்று பார்த்திருக்கும் இத்தனை.

---

1. *வானே மறிகடலோ மாருதமோ தீயகமோ*
   *கானே ஒருங்கிற்றும் கண்டிலமால்—ஆனீன்ற*
   *கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம்*
   *வன்துயரை யாவா மருங்கு.* (பெரிய திருவந். 54.)

   *மாடே வரப்பெறுவ ராமென்றே வல்வினையார்*
   *காடானு மாதானுங் கைக்கொள்ளார்—ஊடேபோய்ப்*
   *பேரோதம் சிந்துதிரைக் கண்வளரும் பேராளன்*
   *பேரோதச் சிந்திக்கப் பேர்ந்து.* (ஷை. 59.)

2. *தண்ணீர் துரும்பு அற்று - தடை நீங்கி.*

3. *கேவலன் - கைவல்ய நிஷ்டன்.*

4. *நாய்ச்சியார் திருமொழி,* 8 : 7.

5. *திருவிருத்தம்,* 1.

'ஆயின, கூற்றுவன் ஒருவன் இருக்க, பேற்றினை எதிர்பார்த்து இருத்தல் என்பது எவ்வாறு பொருந்தும்?' எனின், [1] 'மனிதன் பாவத்தினைச் செய்தவனாய் இருத்தலின், யமனைக் கண்டு அஞ்சுகிறான்; செய்யவேண்டுமவற்றைச் செய்து முடித்தவர்கள் யமனை அன்புள்ள விருந்தினைப் போன்று எதிர்பார்க்கிறார்கள்,' ஆதலின், பொருந்தும் என்க. 'ஆயின், செய்ய வேண்டியவற்றைச் செய்து முடித்தவர்க்கு அன்றோ அது சாத்தியம்?' எனின், செய்ய வேண்டியவற்றைச் செய்து முடித்தவர் ஆவார்,[2] 'அரசனே சாஸ்திரங்களோடு கூடின எல்லா வேதங்களும், அறியத் தக்க எல்லாப் பொருள்களும், எல்லா யாகங்களும், யாகங்களில் ஆராதிக்கப்படுகின்ற எல்லாத் தேவர்களும் கிருஷ்ணனேயாவன் என்று எந்த அந்தணர்கள் கிருஷ்ணனை உள்ளவாறு அறிகின்றார்களோ, அவர்கள் எல்லா யாகங்களையும் செய்து முடித்தவர்கள் ஆகின்றார்கள்,' என்கிற படியே, எம்பெருமானையே பற்றுக்கோடாகப் பற்றின அடியார்களே யாவர். [3] ஓர் அயனத்தின் அன்று குன்றத்துச்சீயர் எம்பெருமானார் ஸ்ரீ பாதத்திலே புக, அவருடைய சிறுபேரைச் சொல்லி, 'சிங்கப் பிரான்! இன்று அயனங்காண்,' என்ன, திருவுள்ளத்தில் ஓடுகிறது இன்னது என்று அறியாமையாலே அவர் பேசாது இருக்க, உயிர் உடலை விட்டு நீங்கும். அந்திம காலத்தில் பலம் கண்ணழிவற்ற பின்பு நடுவு விரோதியாய்ச் செல்லுகிற நாளில் ஓராண்டு கழியப் பெற்ற இது உனக்கு ஒன்றாய் இருந்தது இல்லையோ!' என்று அருளிச்செய்தார்.

எம்பார் ஒரு முறை, 'பின்னும் ஆக்கை விடும்பொழுது எண்ணே,' என்பதற்கு 'இங்ஙனே காரணமானது கழிந்த போதே காரியமும் தன்னடையே கழிந்ததே அன்றோ! பலமும் இனிக் கைப்புகுந்ததே அன்றோ! இனி, சிந்தாவிஷயம் உண்டோ?' என்று அருளிச்செய்தார். (9)

21

**எண்பெருக்கு அந்நலத்து, ஒண்பொருள் ஈறுஇல**
**வண்புகழ் நாரணன், திண்கழல் சேரே.**

**பொ-ரை:** எண்ணாலே மிக்கு இருப்பனவாய் [மிகப்பலவாய்] ஞானத்திற்கு நிலைக்களமாய் ஞானமயமாய் அழிவு அற்றனவாய் இருக்கிற உயிர்களையும், அழிவு அற்ற வளவிய புகழ்களையுமுடைய நாராயணனது உறுதியான திருவடிகளைச் சேர்வாய்.

---

1, 2. *பாரதம்.*

3. *இது, உயிர் உடலை விடுகிற காலத்தை எண்ணிக்கொண்டிருத்தற்கு ஐதிஹ்யம்.*

**வி - கு:** 'ஈறில' என்பதனை ஒண்பொருளுக்கும் கூட்டுக. உயிர்கள் பல என்பதும், அழிவற்றவை என்பதும் பழந்தமிழ்ப் பெருமக்களுடைய கொள்கை. 'மன்னுயிர்ப் பன்மையும் கூற்றத்து ஒருமையும்' என்ற புறநானூற்றுப் பகுதியையும், 'மன்னுயிர் எல்லாந் தொழும்' என்ற திருக்குறளையும் காண்க. 'ஈறில வண்புகழ் நாரணன்' என்ற இடத்து 'மன்பெருஞ் சிறப்பின், தாவா விழுப்புகழ் மாயோன்' என்ற தொல்காப்பியம் ஒப்பு நோக்குதல் தகும்.

**ஈடு:** பத்தாம் பாட்டு. 'அழகிது; அப்படியே செய்கிறோம்; வழிபாடு இயற்றுதற்குப் பற்றுக்கோடான மந்திரம் யாது?' என்ன, அது இன்னது என்றும், அதனுடைய பொருள் நினைத்தற்கு உரியது என்றும் அருளிச்செய்கிறார். 'ஆயின், மந்திரம் மாத்திரம் அமையாதோ? அர்த்தமும் அருளிச்செய்ய வேண்டுமோ?' எனின், இம்மந்திரத்தைப் புறம்புள்ளார் ஜபம் ஹோமம் முதலியவைகளாலே காரியங்கொள்ளாநிற்பர்; நம் ஆசாரியர்கள், 'ஆத்தும சொரூபம் இன்னபடி என்பதற்கு ஏற்றதாயுள்ள இதனுடைய பொருள் நினைவு மோக்ஷத்திற்குச் சாதனம்' என்று தாங்களும் நினைந்து, தங்களைக் கிட்டினார்க்கும் உபதேசித்துக்கொண்டு போந்தார்கள். மற்றும், வேதங்களுக்கும் இவ்வாழ்வார்க்கும் இம்மந்திரம் சொல்லச் சமயம் வாய்த்த போது முன்னர் மந்திரத்தைச் சொல்லி, பின்னர் அர்த்தத்தைச் சொல்லுதல்; அன்றி முன்னர் அர்த்தத்தைச் சொல்லி, பின்னர் மந்திரத்தைச் சொல்லுதல் செய்யக் கடவது ஒரு நிர்ப்பந்தம் உண்டாய் இருக்கும்; அதற்குக் காரணம், பொருளின் நினைவு இன்றியமையாதது ஆகையாலே. [1] 'யாவையும் யாவரும் தானும் அமைவுடை நாரணன்,' [2] 'நாரணன் மூவேழ் உலகுக்கும் நாதன்' என்பன தமிழ் மறை. [3] 'உள்ளும் புறமும் நிறைந்து நாராயணன் இருக்கின்றான்,' [4] 'பரஞ்சோதியும் நாராயணனே; பரமாத்துமாவும் நாராயணனே,' என்பன வடமொழி மறை.

இத்திருப்பாசுரத்தால் திருமந்திரத்தை அர்த்தத்தோடு அருளிச் செய்கிறார். [5] ஆழ்வான் இப்பாட்டளவும் வரப்பணித்து இப்பாட்டு

---

1. திருவாய். 1. 3 : 3. 3. தைத்திரீய நாராயண உபநிடதம், 11 : 8.
2. ஷை, 2. 7 : 2. 4. ஷை. ஷை.

5. இது, இத்திருப்பாசுரம் திருமந்திரத்தின் பொருள் என்பதற்கும் மந்திரத்தின் பொருள் ஆசாரியன்பால் கேட்டல் வேண்டும் என்பதற்கும் ஐதிஹ்யம் ஆம். ஆழ்வான், கூரத்தாழ்வார். பட்டர், சீராமப்பிள்ளை இவ்விருவரும் ஆழ்வாருடைய திருக்குமாரர்கள். ஆழ்வாருடைய முந்தின வார்த்தை, கௌரவத்திலே நோக்கு; பிந்தின வார்த்தை, இனிமையிலே நோக்கு.

வந்தவாறே 'இத்தையும் உங்கள் ஆசிரியர் பக்கலிலே கேட்டுக் கொள்ளுங்கோள்,' என்ன, பட்டரும் சீராமப் பிள்ளையும் எழுந்து போகப் புக்கவாறே, அவர்களை அழைத்து, 'இன்ன போது இன்னார் இருப்பார்; இன்னார் போவார் என்று தெரியாது; இருந்து கேளுங் கோள்,' என்று திருமந்திரத்தை உபதேசித்து, இப்பாட்டைக் கூறி, 'இப்பாட்டை இதற்கு அர்த்தமாக நினைத்திருங்கோள்,' என்று பணித்தார்.

'எண்பெருக்கு' என்கிற இதனால், உயிர்களின் பன்மையினைச் சொல்லுகிறார். 'நலத்து' என்கிற இதனால், இவ்வுயிர்கள்தாம் ஞானத்திற்குப் பற்றுக்கோடாகவும் இருக்கும் என்பதனைத் தெரிவிக்கிறார். 'ஒண்பொருள்' என்கிற இதனால், உயிர்கள் ஞானமயமாகவும் இருக்கும் என்பதனை அருளிச்செய்கிறார். [1] பிரணவத்தில் மூன்றாம் பதமான மகாரத்தாலே, 'ஞானத்திற்குப் பற்றுக்கோடாகவும் ஞானமயமாகவும் இருக்கும் உயிர்கள்' என்று கூறப்பட்டிருத்தல் இங்கு அறிதல் தகும். 'ஆயின், உயிரின் தன்மையினைத் தெரிவிப்பதற்கு 'நலம், ஒண்மை' என்னும் இவ்விரண்டுள் ஒன்றே அமையாதோ?' எனின், உடலானது அறிவின்மைக்கு நிலைக்களமாய் இருத்தலின் பிறபொருளை அறியும் ஆற்றல் இல்லாததாயும், அறிவின் மயமாக இல்லாததனால் தன்னை அறியும் ஆற்றல் இல்லாததாயும் இருக்கும்; உயிர் அவ்வாறு அன்றி, அறிவிற்குப் பற்றுக்கோடாய் இருத்தலின், தன்னையும் பிறபொருளையும் அறிகின்றதாயும்; அறிவின் மயமாக இருத்தலின், தன்னை அறிகின்றதாயும் இருக்கும் என்று இரண்டனுடைய வேற்றுமையினைத் தெரிவிப்பதற்கு இரண்டு அடைமொழிகளைக் கொடுத்து ஓதினார் என்க.

'ஈறு இல' என்பதனை 'ஈறு இலவான ஒண்பொருள்' என்றும், 'ஈறு இலவான வண்புகழ்' என்றும் தனித்தனியே கூட்டுக. ஈறு இலவான ஒண்பொருளையும், ஈறு இலவான வண்புகழையும் உடையயன் ஆதலே '**நாராயணன்**' என்ற சொற்குப் பொருளாம். 'ஒண்பொருள் ஈறு இல வண்புகழ்' என்பது எடுத்துக்காட்டு

---

1. *பிரணவம், 'ஓம்' என்பது. அது, அகரம் உகரம் மகரம் என மூன்று பதமாய் இருக்கும்; அவற்றுள் மூன்றாம் பதம், மகரம்; அது 'மநஜ்ஞாநே' என்கிற தாதுவிலாதல், அன்றி, 'மநஅவபோதநே' என்கிற தாதுவிலாதல், ஞானம் என்ற பொருளைக் காட்டும்; அந்த ஞானத்தை இன்னஞானம் என்று விசேடியாமையால், அது தர்ம தர்மி ரூப ஞானங்கள் இரண்டனையும் காட்டுவதாம். உரையில் 'ஞானத்திற்குப்பற்றுக்கோடாக' என்றது, தர்மரூப ஞானத்தை; 'ஞானமயமாகவும்' என்றது தர்மிரூப ஞானத்தை.*

உவமை; 'தேவரீருடைய குணங்கள் அன்றே எங்களுக்கு எடுத்துக் காட்டாய் இருக்கின்றன?' என்கிறபடியே, இறைவனுடைய நற்குணங்களைப் போன்று, இவ்வுயிர்களும் நித்தியமுமாய்ப் பிரகாரமுமாய் இருக்கும் என்பதனைத் தெரிவித்தபடி. ஆக, நித்தியரான **மூவகைப்பட்ட சேதனரையும், நித்தியமான கல்யாண குணங்களையும் உடையவன் நாராயணன்** என்பதாயிற்று. திண்கழல் சேர் - அடியார்களை ஒருகாலும் விட்டுக்கொடாத திண்மையைப் பற்றத் '**திண்கழல்**' என்கிருர்; 'இறைவனுக்கும் உயிர்கட்கும் உள்ள சம்பந்தம் ஒரு காலத்தில் வந்தது அன்று; என்றும் உள்ளது ஒன்று,' என்னும் ஞானமுடையாரை ஒரு நாளும் விடான் அன்றே! சேர் - அடைவாய். [3] உன்னுடையதாய், உனக்கு வகுத்ததாய் இருந்த பின்பு நீ கடுக உட்கொள்; 'நம:' என்றபடி. (10)

22

சேர்த்தடத் தென்குரு, கூர்ச்சட கோபன்சொல்
சீர்த்தொடை ஆயிரத்து, ஓர்த்தஇப் பத்தே.

பொ - ரை: *தடாகங்கள் சேர்ந்திருக்கிற அழகிய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபர், இறைவனுடைய மிக்க புகழைத் தொடுத்து அருளிச்செய்த ஆயிரம் திருப்பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களும் ஆராய்ந்து செய்யப்பட்டவை என்பதாம்.*

ஈடு: முதற்பாட்டில், 'வேறுபட்ட பொருள்களை விட்டு, சர்வேஶ்வரன் பக்கல் ஆத்துமாவைச் சமர்ப்பிக்க இசைமின்,' என்ருர்; இரண்டாம் பாட்டில், 'வேறுபட்ட பொருள்களின் குற்றங்களைக் கண்ட அளவில் விடலாம்,' என்ருர்; மூன்ரும் பாட்டில், விடுந்தன்மையினைச் சுருங்க அருளிச்செய்தார்; நான்காம் பாட்டில் பற்றப்படுகிற பொருளின் நன்மையினை அருளிச்செய்தார்; ஐந்தாம் பாட்டில், பற்றுமிடத்தில் வரும் தடைகளை நீக்கும் வழியினை அருளிச்செய்தார்; ஆரும் பாட்டில், 'இறைவன் அன்பே உருவமானவன்,' என்ருர்; ஏழாம் பாட்டில், 'சம்பந்த ஞானம் உண்டாகவே பொருந்தலாம்,' என்ருர்; எட்டாம் பாட்டில், 'வேறு உபகரணம் தேட

1. *ஸ்ரீ வைகுண்டராஜ ஸ்தவம்*, 35.

2. *மூவகைப்பட்ட சேதனர் - நித்தர், முத்தர், பத்தர் என்பவர்கள். பத்தர் என்றது - சம்சாரிகளை.*

3. *'நாராயணன்' என்ற பதத்திற்கு, அன்மொழித்தொகையாகவும் வேற்றுமைத்தொகையாகவும் சொல்லப்படும் இருவகைப்பொருள்களையும் நோக்கி, 'உன்னுடையதாய், உனக்கு வகுத்ததாய்' என்கிருர். 'சேர்' என்பது 'நம:' என்ற சொல்லின் பொருள் ஆதலின், 'நம: என்றபடி' என்கிருர்.*

வேண்டா ; அவன் தந்த உறுப்புகளை அவனுக்கு ஆக்க அமையும்,' என்றார் ; ஒன்பதாம் பாட்டில், 'அப்படிச் செய்யவே, வழிபாட்டிற்குத் தடையாக உள்ளவை எல்லாம் தாமாகவே நீங்கும்,' என்றார் ; பத்தாம் பாட்டில், வழிபாட்டிற்கு பற்றுக்கோடான மந்திரம் இன்னது என்றார் ; முடிவில், 'இவைதாம் வாய் வந்தபடி சொன்னவை அல்ல ; சேதனருடைய நன்மைக்குத் தக ஆராய்ந்து சொல்லப்பட்டவை,' என்கிறார். அன்றி, 'இவைதாம் [1] ஹித தமமாய் இருப்பன ஆகையாலே, எப்போதும் ஒக்க ஓரப்படுவன,' என்கிறார் எனலுமாம்.

சேர்த்தடம்-பொய்கைகளோடு பொய்கைகள் சேர்ந்திருக்கின்ற, அன்றி, பொய்கைகள் சேர்ந்திருக்கின்ற குருகூர் என்று 'சேர்' என்பதனை ஊருக்கு அடைமொழி ஆக்கினுமாம். அன்றி 'சேர்' என்பதனை வினைமுற்றாகக் கொண்டு, 'இப்பத்தையும் சேர்' என்று பயனிலையாகக் கோடலுமாம். தென்குருகூர்ச் சடகோபன் சொல் - நன்மை சொல்ல என்று இழிந்து தீமையைச் சொல்லுவான் ஒருவன் வார்த்தை அன்று ; [2] ஆப்த தமரானவர் வார்த்தை என்கை. சீர்த் தொடையாயிரம் - [3] 'எழுத்து அசை சீர் பந்தம் அடி தொடை' என்று கவிக்கு உறுப்பாக இருப்பன சில உள ; அவற்றைச் சொல்லுதல் ; அன்றி, இறைவனுடைய திருவருளால் அவனுடைய நற்குணங்களைத் தொடுத்த ஆயிரம் என்னுதல். ஓர்த்த இப்பத்தே - ஆயிரம் பாசுரங்களுள் இப்பத்து, சேதனர்க்கு நன்மையாவது ஏது என்று நிரூபித்துச் சொல்லப்பட்டவை ; அன்றி, சேதனர்க்கு மிக்க நன்மையை அளிக்க வல்லது ஒன்று ஆகையாலே எப்போதும் ஓரப்படுவது எனலுமாம். உபதேசம் பலரைக் குறித்துத் தொடங்குகையால், 'சேர்' என்பது போன்ற ஒருமை இடங்களை எல்லாம் கூட்டத்தைக் குறித்த ஒருமையாகக் கொள்க. (11)

### திருவாய்மொழி நூற்றந்தாதி

*வீடுசெய்து மற்றெவையும் மிக்கபுகழ் நாரணன்தாள்*
*நாடுநலத் தால்அடைய நன்குரைக்கும்—நீடுபுகழ்*
*வண்குருகூர் மாறன்இந்த மாநிலத்தோர் தாம்வாழப்*
*பண்புடனே பாடியருள் பத்து.* (2)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. ஹித தமம்—உயர்ந்த நன்மை
2. ஆப்த தமர்—நம்பத்தகுந்தவர்களுள் உயர்ந்தவர்
3. யாப்பருங்கலக்காரிகை, 1.

# மூன்றாந்திருவாய்மொழி
# 'பத்துடையடியவர்'

## முன்னுரை

'எல்லாரினும் உயர்வு அற உயர்ந்தவன்' என்றார் முதல் திருவாய்மொழியில்; 'உயர்ந்தவன் ஆகையாலே வழிபடத் தக்கவன்' என்றார் இரண்டாந்திருவாய்மொழியில்; இத்திருவாய்மொழியில் அவனது [1] சௌலப்யத்தை அருளிச்செய்கிறார். 'யாங்ஙனம்?' எனின், 'வழிபாடு செய்யுங்கள் என்று பலகாலும் அருளிச்செய்கின்றீர்; இருகை முடவனை 'யானை ஏறு' என்றால் அவனாலே ஏறப்போமோ? அப்படியே, சர்வேஸ்வரனாய், எல்லா விருப்பமும் முற்றுப் பெற்றவனாய் இருக்கிறவனை இந்த அற்பனான [2] சம்சாரி சேதனனால் பற்றப்போமோ?' என்ன, 'அவ்யானை தானே அவ்விருகை முடவனுக்கும் ஏறலாம்படி படிந்து கொடுக்குமன்று ஏறத் தட்டு இல்லையே? அப்படியே, இச்சம்சாரி சேதனனுக்கு வழிபடலாம்படி அவன் தன்னைக் கொண்டு வந்து தாழவிட்டு எளியனுமாகில், இவனுக்கு வழிபடத் தட்டு இல்லையே?' என்று கூறுமுகத்தால் அவன் எளிமையை அருளிச்செய்கிறார்.

'ஆயின், அனைவரும் அவனை வழிபட்டு உய்வு பெறுமைக்குக் காரணம் யாது?' எனின், நல்வினை அற்ற மக்கள் இராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்களைத் தமது பிறவியினைப் போன்ற பிறவியாம் என நினைந்து கேடுறுதற்கும், நல்வினை வாய்ந்த பெரியோர்கள், '**அரியன் எளியனாகப் பெற்றோமே!**' என்று நினைந்து அடைந்து உய்வு பெறுதற்கும் பொதுவாக அவதாரங்கள் இருத்தலால் என்க. [3] 'சர்வேஸ்வரன் அரியன் என்றால் சம்சாரத்தில் ஆள் பற்றாது என்று அவன் எளிமையை விளங்க விரித்துச் சொல்லிக் கொண்டு போந்தோம்; அதுதானே 'இவர்களுக்கு இத்தனை எளியனோ?' என்று விடுகைக்கு உடல் ஆயிற்று? அவ்வெளிமை தானே ஆதரிக்கைக்கு உடல் ஆயிற்று உமக்கு ஒருவருக்குமே!' என்று [4] **எம்பாரைப்** பார்த்து **உடையவர்** அருளிச்செய்தார்.

1. *சௌலப்யம் - எளிமை.*

2. *சம்சாரி சேதனன் - பிறவிப்பெருங்கடலில் நன்றாக உழன்று சஞ்சரிக்கின்ற ஆத்துமா.*

3. *எளிமையே உய்வு பெறுவதற்கும் கேடுறுதற்கும் காரணம் என்பதற்குக் காட்டும் ஐதிஹ்யம், 'சர்வேஸ்வரன்' என்று தொடங்கும் வாக்கியம்.*

4. *எம்பார் - இவர், இராமாநுசருடைய மாணாக்கர், உடையவர் - இராமாநுசர்.*

[1] அறவோர் சிலர், ஏரி கல்லினுல், சேற்றிலே தலையை நொழுந்திப் பட்டுப் போகாநிற்பர் சிலர்; விடாயர் அதிலே முழ்கி விடாய் தீர்ந்து போகாநிற்பார்கள்; விளக்கை ஏற்றினுல் அதிலே விட்டில் முதலிய சில பொருள்கள் விழுந்து முடிந்து போம்; சிலர், அதன் ஒளியிலே உய்வு பெறுவார்கள். 'ஆயின், இறைவன் தடாகமும் விளக்கும் ஆவனே ?' எனின், [2] 'வாசத்தடம்', [3] 'மரகதமணித்தடம்' என்றும், [4] 'வேங்கட மலைமேல் மேவிய வேத நல்விளக்கை', [5] 'ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை', [6] 'வெங்கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய்த் தோன்றி' என்றும் இறைவன் தடாகமாகவும் விளக்காகவும் கூறப்படுதல் காண்க. 'ஆயின், தீவினையாளர் கேடுற்றதும், நல்வினையாளர் உய்வு பெற்றதும் காணும் இடம் உண்டோ ?' எனின், அவன்தான், [7] 'அன்றிய வாணன் ஆயிரம் தோளும் துணிய அன்று ஆழி தொட்டதும்' இப்படி வந்து அவதரித்தது எளியனுன நிலை தன்னிலேயன்றே? அப்படியே, சிசுபாலன் முதலியோர், பூதனை, சகடாசுரன், இரட்டைமருத மரங்கள் இவர்கள் எதிரிட்டு முடிவுற்றமையும், அக்குரூரர் மாலாகாரர் முதலியோர் அடைந்து உய்வு பெற்றமையுங் காண்க.

''அவனை வழிபடுமின்' என்று [8] பலகாலும் அருளிச்செய்கின்றீர்; கண்ணுலே கண்டால் அல்லது வழிபட விரகு இல்லை; வழிபட்டால் அல்லது காண விரகு இல்லை; ஆன பின்னர், அவனை அடைதல் எங்ஙனம்?' எனின், [9] 'நம்மைக்காட்டிலும் உயர்ந்தவர்களான பிரமன் சிவன் இவர்களைத் தனக்கு அடிமையாகவுடைய இறைவனைப் பரபத்தியால் பார்த்த அளவில் மனத்தில் இருக்கின்ற

---

1. எளிமையே உய்வு பெறுவதற்கும் கேடு உறுவதற்கும் காரணம் என்பதற்கு எடுத்துக்காட்டும் மேற்கோள், 'அறவோர் சிலர்' என்று தொடங்கும் வாக்கியம். நொழுந்தி - நுழைத்து.

2. திருவாய். 8. 5 : 1.

3. திருவாய். 10. 1 : 8.

"மருக்கிளர் தாமரை வாச நாண்மலர்
நெருக்கிடு தடமென இருந்த நீதியான்" (கம். யுத். 475.)

என்ற கவிச்சக்கரவர்த்தியின் கூற்று இங்கு ஒப்பு நோக்கல் தகும்.

4. பெரிய திருமொழி, 4. 3 : 1.

5. திருப்பாவை, 5.

6. பெருமாள் திருமொழி, 10. 1.

7. பெரிய திருமொழி, 4. 3 : 8.

8. 'பலகாலும்' என்றது, மேல் திருப்பதிகத்தில் 'வீடு செய்மின்', 'இறை சேர்மின்', 'அஃநலம்புல்கு', 'இறைபற்று' என்றதனை நோக்கி.

9. முண்டக உபநிடதம்.

அவா முதலியன அழிகின்றன,' என்றும், [1]'பரபத்தியால் என்னை உண்மையாக அறிகின்றவன் பிறகு என்னையே அடைகின்றான்,' என்றும் சொல்லுகிறபடியே, சில வருத்தங்களோடே காணக்கூடிய சாதன பத்தியை அன்று இங்குச் சொல்லுகிறது; காணவேண்டும் என்னும் [2] ஆசை சிறிதுடையார்க்கும் அவன் எளியனும்படியைச் சொல்லுகிறது. 'ஆயின், அறப்பெரியவன் ஆசை சிறிது உடையார்க்கு எளியனாகை கூடுமோ?' எனின், அறப்பெரியவன் தாழ நிற்கும் அன்று தடை செய்குநர் எவருமிலர். 'ஆயின், அறப்பெரிய அவன் இம்மண்ணுலகில் வந்து அவதரித்தான் என்பது பொய்யே அன்றோ?' எனின், [3] 'பகைவர்களை அழியச் செய்கின்ற அருச்சுனா, எனக்கும் பல பிறவிகள் கழிந்தன; உனக்கும் பல பிறவிகள் கழிந்தன; ஆயின், அப்பிறவிகள் பலவற்றையும் யான் அறிகின்றேன்; அவற்றை நீ அறியாய்,' என்று அருச்சுனனை நோக்கி, 'நீ பிறந்தது போன்று, நானும் பிறக்கின்றேன்,' என்கிறான் கிருஷ்ணன்; அருச்சுனன் பிறந்தது பொய் அன்று; ஆதலால், இறைவன் அவதரித்ததும் பொய் அன்று.

'ஆயின், அருச்சுனன் பிறவிக்குக் காரணம் கர்மம்; இறைவன் பிறவிக்குக் காரணம் யாது?' எனின், இச்சையே; இதுதன்னை அவதார ரஹஸ்யத்தில் [4] தானும் அருளிச்செய்தான் அன்றே, [5] 'என்னுடைய பிறவிகளும் பிறவிகளிற் செய்யப்படுகின்ற தொழில்களும் தெய்வத்தன்மை வாய்ந்தவை,' என்று? அதாவது, 'என்னுடைய பிறவிகள் கர்மம் அடியாக அல்ல: இச்சை அடியாக இருக்கும். [6] நாம் பிறவாநிற்கச்செய்தே பிறவாமையும் கிடக்கும்; தாழ நின்ற நிலையிலே மேன்மையும் கிடக்கும்; [7] அப்ராக்கிருத சம்ஸ்தானத்தை இதர சஜாதீயமாக்கி வந்து பிறப்போம்; இவற்றுள்

1. ஸ்ரீ கீதை, 18 : 55.

2. 'பத்துடை அடியவர்க்கு எளியவன்' என்றதனை நோக்கி, 'ஆசை சிறிதுடையார்க்கும் அவன் எளியனும்படியைச் சொல்லுகிறது' என்கிறார்.

3. ஸ்ரீ கீதை, 4 : 5.

4. 'தானும்' என்ற உம்மை, பராசரர் முதலிய மஹரிஷிகளைத் தழுவுகின்றது.

5. ஸ்ரீ கீதை, 4 : 9.

6. "முதன்முறை இடைமுறை கடைமுறை தொழிலின்
பிறவாப் பிறப்பிலை; பிறப்பித்தோ ரிலையே"(பரிபா. 3: 71 72.)
என்னும் பகுதி இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

7. அப்ராக்ருத சம்ஸ்தானம் - பிரகிருதி சம்பந்தமில்லாத திருமேனி, இதர சஜாதீயம் - மற்றைச் சாதிகளோடு சேர்ந்ததாக.

ஒன்றை அறிந்தவர்கட்குப் பின்னர்ப் பிறவி இல்லை ; நானும் பிறந்து அவர்களும் பிறக்க வேண்டுமோ ? [1] ஈர் இறை உண்டோ ?' என்றான் என்றபடி. ஆக, இறைவன் இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்களைப் பண்ணிக்கொண்டு எளியனும்; ஆன பின்பு, அடைதல் கூடும் ; நீங்களும் அவன் ஸ்ரீகீதையில் அருளிச்செய்த வாறே நின்று, அவற்றை உய்வதற்கு உரிய சிறந்த நெறியாகக் கொண்டு அவனை அடைமின்,' என்கிறார்.

'நன்று ; பிறர்க்கு உபதேசிக்கப் புக்க இவர், தாம் கலங்குதற்குக் காரணம் என்னை ?' எனின், அவதாரங்களை [2] முன்னோட்டுக்கொண்டு, அவதாரங்களிலும் [3] நீர்மைக்கு எல்லை நிலமான கிருஷ்ணாவதாரத் திலே இழிந்து, அதுதன்னிலும் பரத்துவத்தோடு ஒக்கச் சொல்லக் கூடிய நிலைகளைக் கழித்து, [4] நவநீத சௌர்ய நகர க்ஷோபத்திலே அகப்பட்டு, [5] இளமணற்பாய்ந்து '**எத்திறம் !**' என்று மோஹித்துக் கிடக்கிறார். 'ஆயின், பரத்துவத்தைக்காட்டிலும் சௌலப்யம் ஈடுபடுத்துமோ ?' எனின், [6] பரத்துவத்தை நினைந்தார், தெளிந்திருந்து பிறர்க்கு உபதேசம் செய்தார் ; எளிமையினை நினைந்தார், '**எத்திறம் !**' என்று மோஹித்துக் கிடக்கிறார்.

23

**பத்துடை அடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய**
**வித்தகன் மலர்மகள் விரும்பும்நம் அரும்பெறல் அடிகள்**
**மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடை யாப்புண்**
**எத்திறம் உரலினொடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே ! [3**

பொ-ரை : 'பத்தியையுடைய அடியார்கட்கு எளியவனும் அஃது இல்லாத பிறர்கட்கு அரியவனும் உள்ள ஆச்சரியமான குணங்களை யுடையவன், தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பெரிய பிராட்டியார்

---

1. ஈரிறை - இரண்டு அரசர்கள். 'ஒரு நாட்டிற்கு அரசன் ஒருவனே இருப்பான் ; இருவர் இரார்' என்பார், 'ஈரிறை உண்டோ ?' என்கிறார்.

2. முன்னோட்டுக்கொண்டு - ஆராய்ந்து.

3. நீர்மைக்கு எல்லை நிலம் - எளிமைக்கு முடிவான இடம்.

4. நவநீத சௌர்ய நகர க்ஷோபம் - வெண்ணெய் களவு செய்த காரணத்தால் நகரத்தில் உண்டான பரபரப்பு.

5. இளமணற்பாய்தல் - இரங்கிய மனத்தையுடையராதல்.

6. இதனால், பரத்துவத்தைக்காட்டிலும் எளிமையே ஈடுபடச் செய்யும் என்றபடி.

விரும்புகிற பெறுதற்கு அரிய நம் சுவாமியானவர், மத்தினை உறுத்திக் கடையப்படுகின்ற வெண்ணெயினைக் களவு செய்யுங்காலத்தில் மார்பிலே கட்டுண்டு உரலோடு ஒத்து இருந்து ஏங்கிய எளிமைத் தன்மை எத்திறம்!' என்கிறார்.

**வி - கு:** பத்து - பத்தி. 'பத்துடையீர் ஈசன் பழஅடியீர்' (திருவாச. 157) என்பதூஉம் இப்பொருட்டு. 'எட்டினோடு இரண்டும் அறியேனையே' (திருவாச. 53) என்ற இடத்தில் இப்பத்து என்பதனையே வேறு ஓர் ஆற்றால் கூறியவாறு. இனி, பற்று என்பது பத்து என வந்தது என்பாரும் உளர். 'விரும்பும் அடிகள்' என்றும், 'யாப்புண்டு இணைந்து' என்றும் முடிக்க. 'இணைந்து' என்பது உவமவுருபு. பொருந்தி எனப் பொருள் கூறலுமாம்.

இப்பதிகம் ஐஞ்சீர் அடி நான்காய் வருதலின், கலித்துறை எனப்படும்.

**ஈடு:** முதற்பாட்டில், எம்பெருமானுடைய எளிமையினை உபதேசிக்கப் புக்கு, அவன் வெண்ணெய் களவுகண்ட சரித்திரத்தில் அழுந்துகிறார்.

பத்து - பத்தி. 'பத்து என்பது பத்தியைக் காட்டுமோ?' என்னில், [1] 'எட்டினோடு இரண்டு - எனுங் கயிற்றினால் மனந்தனைக் கட்டி' என்று கூறப்படுகின்றது அன்றே! ஆகையாலே, பத்து என்று பத்தியைச் சொல்லுகிறதாகும். அதுதன்னிலும் [2] பரபத்தியை அன்று இங்குச் சொல்லுகிறது; [3] பத்தியின் தொடக்கத்தைச் சொல்லுகிறது. 'பத்தியின் தொடக்கம் என்று இதனை நியமிப்பார் யார்? அதனுடைய முடிவான எல்லையினைக் காட்டினாலோ?' என்னில், அஃது ஒண்ணாது; 'என்னை?' எனின், இப்போது இங்குச் சொல்லிக்கொண்டு போருகிற இது, [4] குணப்பிரகரணம் ஆகையாலும், சர்வேஸ்வரனுக்கு ஓர் ஏற்றஞ்சொல்லுகை இப்போது இவர்க்கு விருப்பம் அல்லாமையாலும், தம்மையே நம்பி வந்து அடைந்தவர்களிடத்தில் தாமும் அன்புடன் இருத்தல் ஏனையோர்க்கும் உண்டு ஆகையாலும்,

---

1. திருச்சந்த விருத்தம், 83

2. பரபத்தி - இறைவனைச் சேரும்போது இன்பமும், பிரியும்போது துன்பமும் அடைதற்குக் காரணமான அன்பு.

3. 'பத்தியின் தொடக்கம்' என்றது, விலக்காமை பகையாமை முதலிய குணங்களை.

4. இறைவனுடைய எளிமைக்குணத்தைக் கூறும் இடம் ஆதலால், 'குணப்பிரகரணம்' என்கிறார்.

[1] 'நண்பன் என்ற பாவனையைக்கொண்டு வந்த இவ்விபீடணனை நான் ஏற்றுக்கொள்ளாது விடமாட்டேன்,' என்னுமவன் ஆதலானும், பத்தியின் தொடக்கத்தையே சொல்லுகிறது. மேலும், ஆசை சிறிது உடையார்க்கும் தன்னைக் கொடுப்பதாக [2] இறைவனுடைய திருவார்த்தை இருந்தது ஆதலானும், [3] 'எதிர் சூழல் புக்கு' என்றும், [4] 'என்னின் முன்னம் பாரித்து' என்றும் விலக்காமை தேடித் திரிவான் ஒருவன் ஆதலானும் மேலதே பொருள்.

உடை-இந்த விலக்காமை பகையாமை மாத்திரத்தையே கனத்த உடைமையாகச் சொல்லுகிறார். (உடைமை - செல்வம்) 'இவை கனத்த உடைமை ஆகுமோ?' எனின், இவ்வுலகில் இறைவனிடத்தில் பத்தியினைச் செலுத்துகின்றவர்களை [5] 'விண்ணுளாரிலும் சீரியர்' என்கிறபடியே, நித்தியசூரிகளைக்காட்டிலும் கனக்க நினைத்திருக்கும் பகவானுடைய அபிப்பிராயத்தாலே சொல்லுகிறார். 'இறைவன் நினைத்திருப்பனே?' எனின், இவர்கள் பக்கலிலே இவ்வளவு உண்டானால், பின்னை 'இவர்களுடைய பாரத்துக்கு எல்லாம் நானே கடவன்,' என்று இருப்பவன் இறைவன்; மேலும், இராவண பவனத்தை விட்டு ஆகாசத்தில் கிளம்பின போதே ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மி குடி கொண்டபடியினால் அன்றோ, [7] விபீடணனை, 'ஆகாயத்தை அடைந்த ஸ்ரீமான்' என்றார்? [8] 'இலக்குமணன் லக்ஷ்மியால் நிறையப் பெற்றவன்' என்றார் இளைய பெருமாளை. இது அன்றோ இவனுக்கு நிலை நின்ற ஐசுவரியம்; இத்தைப் பற்ற 'உடை' என்கிறார். (இது உடைமை என்ற சொல்லின் விகாரம்.) அடிய

---

1. *ஸ்ரீராமா. யுத்.* 18 : 3.

2. *'இறைவனுடைய திருவார்த்தை' என்றது, சரமசுலோகத்தை.*

3. *திருவாய்.* 2. 7 : 6.

4. *திருவாய்.* 9. 6 : 10.

5. *திருவிருத்தம்,* 79.

6. *'இவ்வளவு உண்டானால்' என்றது, 'விலக்காமை, பகையாமை என்னும் இக்குணங்கள் மாத்திரம் உண்டானால்' என்றபடி. 'இவர்களுடைய பாரத்துக்கு எல்லாம் நானே கடவன்,' என்றது, 'என்னைப் பற்று; உன்னைப் பாவங்களினின்றும் விடுவிக்கிறேன்; பயப்பட வேண்டா,' என்று சரமசுலோகத்திற்கூறியதை நோக்கி.*

7. *ஸ்ரீராமா. யுத்.* 16 : 17.

8. *ஸ்ரீராமா. பால.* 18 : 28.

வர்க்கு - 'வெறுப்பு இன்மை மாத்திரம் கொண்டு 'அடியவர்' என்னலாமோ?' எனில், இங்கும் பகவானுடைய அபிப்பிராயத்தாலே 'அடியவர்' என்கிருர். [1] 'உனக்கு நலிவு சிறிது வந்து இருப்பின், சீதையால்தான் எனக்கு என்ன பயன்?' என்று, இன்று கிட்டிற்று ஒரு [2] குரங்கை, என்றும் தன்னேயே அடைந்திருக்கிற பிராட்டிக்கும் அவ்வருகாக நினைத்தான் அன்றே! ஆதலால், இறைவனுக்கு அடியவர்களாய் அதிசயத்தைப் பண்ணுகிறவர்கள் ஒரு திருவடி, ஒரு திருவனந்தாழ்வான் அல்லர்; இங்கு, இவ்விலக்காமையினை யுடையவர்களேயாவர். 'காரணம் என்னே?' எனின், அவர்கள் உள்ள குணத்தை அனுபவித்திருப்பவர்கள், அத்தனேயே யாம்; குணம் நிறம் பெறுவது இவர்கள் பக்கலில் அன்றே!

எளியவன்-அவர்கள் பாவத்தைப் போக்குதல், புண்ணியத்தைக் கொடுத்தல், தன்னைக் கிட்டலாம்படி இருத்தல் செய்தல் அன்றிக்கே, அவர்கள் விரும்பியவாறு செய்துகொள்ளும்படி தன்னை ஆக்கி வைப்பவன். அதாவது, தன்னை ஒழிந்தது ஒன்றைக் கொடுத்தல், தான் இருக்குமிடத்தில் அவர்களை அழைத்துக் கொடுத்தல் செய்யான்; [3] 'விஸ்வாமித்திர முனிவரே, உம்மைச் சேர்ந்து சரணம் அடைந்தவர்களாய் இருக்கிறேம் நாங்கள்; ஆணை இட்ட காரியங் களைச் செய்தோம்; இனி எந்தக் காரியங்களைச் செய்யவேண்டும்? விரும்பும் காரியத்தைக் கட்டளை இடுங்கள்,' என்கிறபடியே, 'நான் உங்கள் அடியான்; என்னை வேண்டினபடி ஏவிக் காரியங்கொள் ளுங்கள்,' என்று நிற்பான் என்றபடி. மற்றும், [4] 'மேலான மோக்ஷத் தையுடையவன், பாவங்களை அழிக்கின்றவன், அழிவு அற்றவன், ஒளி உருவானவன், பிறப்பு இல்லாதவன், எங்கும் நிறைந்தவன்' என்று இவை முதலாக இறைவனைப் பற்றி வீடுமன் முதலியோர் கூறிக்கொண்டிருத்தலைக் கேட்டு அறிவு மிக்கிருந்தான் ஆதலின், 'நீ ஒருவன் பத்திக்கு எளியவன் ஆவது என்?' என்று கேட்க, [5] 'அருச்சுன! வேறு ஒன்ருல் அன்றிப் பத்தியினுல் மட்டும் அடையும்படி இவ்விதமாக இருக்கிறேன். அதாவது, 'ஒருவன்

1. ஸ்ரீராமா. யுத். 41 : 4.
2. 'குரங்கை' என்றது, சுக்கிரீவனை.
3. ஸ்ரீராமா. பாலகா. 34 : 4.
4. ஸ்ரீகீதை. 10 : 12.
5. ஸ்ரீகீதை. 11 : 54.

கறுத்திருக்க ஒருவன் சிவந்திருக்கிறபடி கண்டாயே? அப்படியே எனக்கும் இது நிலை நின்ற தன்மை,' என்றான் அன்றோ?' என்றபடி. 'நன்று; பத்திக்கு எளியன் ஆனாலும், சுவதந்தரன் ஆகையாலே சில சமயங்களில் அரியனாகவும் இருக்கலாமே?' எனின், உலகங்களை எல்லாம் ஆளும் அரசபுத்திரன் ஒருவன், ஒரு கால விசேடத்தில் சிறிய பொருளுக்காக அடிமைப்படுவானாயின், பின், தன் செல்வக் கிடப்புக் காட்டி மீள ஒண்ணாதது போன்று, சர்வேஸ்வரனும் பத்தியில் நிலை நின்றவனுக்குத் தன்னை அறவிலை செய்து கொடுத்தால், பின்னை, மேன்மை காட்டி அகலமாட்டான்; கழுத்திலே ஓலைகட்டித் 'தூதுபோ' என்னலாம்படி தன்னைக் கையாள் ஆக்கி வைப்பான். [1] 'மக்கள் செய்யும் பத்தியினால், அவர்கட்குத் தன்னை அறவிலை செய்து கொடுக்கின்றான் இறைவன்; அவ்விறைவனாகிய ஜனார்த் தனனே அவர்கட்கு எப்பொழுதும் கையாளாக இருக்கின்றான்,' என வருதலும் இங்கு ஓர்தல் தகும்.

'பத்துடை அடியவர்க்கு எளியவன்' எனவே, 'பத்தி இல்லா தார்க்கும் எளியனாக இருப்பனோ?' எனின், இரான் என விளக்கு கிறார் மேல். பிறர்களுக்கு அரிய வித்தகன்-பிறர்களாகிறார், 'இவனைக் கொண்டு காரியம் கொள்ளோம்' என்று இருக்குமவர்கள். வித்தகன் - ஆச்சரியப்படத் தக்கவன். 'இங்கு ஆச்சரியப்பட வேண் டியது என்?' என்னில், யசோதை முதலியவர்கட்கு எளியனாய் இருந்த அந்நிலையில்தானே, பூதனை சகடாசுரன் இரட்டை மருதமரங்கள் முதலியவர்கட்கு அவமதிக்க முடியாதவனாய் இருத்தல். மேலும், [2] பள்ளிகொண்டிருந்த காலத்தில் அருச்சுனனும் துரியோதனனும் கூட வர, அருச்சுனனுக்குத் தன்னைக்கொடுத்து, துரியோதனனுக்குப் [3] பங்களத்தைக் கொடுத்துவிட்டான் அன்றோ? நம் பெரியோர்கள் எம்பெருமானையே உய்வதற்கு உரிய நெறியாகப் பற்ற, அல்லாதார் தாம் செய்யும் கருமங்களே பயன்களைக் கொடுப்பனவாக நினைந்து, அக்கருமத் தொகுதிகளை மேற்கோடலைப் போன்றது ஒன்றாகும்

---

1. வைஷ்ணவ தர்மம்.

2. இங்குக் கூறப்படும் சரிதத்தின் விரிவை, பாரதத்தில் வாசு தேவனைப் படைத்துணையழைத்த சருக்கத்தால் உணர்க.

3. பங்களம் – பதர்.

துரியோதனன் நிலை. [1] ஸ்ரீராமாவதாரத்திலும் இராவணன் படைகளுடன் கூடினவனாய்க்கொண்டு எடுக்கப்புக்க இடத்தில் நெஞ்சிற் பகையாலே எடுக்க மாட்டிற்றிலன் ; [2] திருவடி தனியனாய் இருந்தும் நெஞ்சில் செவ்வையாலே கருமுகை மாலை போலே எடுத்து ஏறிட்டுக் கொண்டு போனான் ; இங்ஙன் அன்றாகில் 'இராவணனுக்குக் கனக்க வேண்டும்' என்றும், 'திருவடிக்கு நொய்தாக வேண்டும்' என்றும் அன்றே ? ஆதலால், பொருள் தன்மை இருக்கும்படி இது. [3] 'இமய மலை மந்தரமலை மேருமலைகளையும், வசிக்கின்ற பொருள்களோடு மூன்று உலகங்களையும் இரு கைகளால் பெயர்த்து எடுக்க முடியும்; போர்க்களத்தில் பரதனுக்கு இளையவன் பெயர்த்து எடுக்கக் கூடாதவன்,' [4] 'இராவணன் முதலிய பகைவர்களால் பெயர்த்து எடுக்கவும் கூடாதவனாக இருந்த இலக்குமணன், தூய்மையான மனமும் பத்தியும் பொருந்திய அனுமான் குரங்காய் இருந்தும் எளிதாக எடுக்கத் தக்கவன் ஆனான்,' என்பன ஸ்ரீராமாயணம். [5]

மலர்மகள் விரும்பும் - இவ்விரண்டுக்கும் அடி இவளுடைய சேர்த்தியே. மலரில் மணம் போலே மலரை இருப்பிடமாகவுடையளாய்,

---

1. *இச்சரித்திரத்தின் விரிவைக் கம்பராமாயணம் முதற்போர்ப் படலத்தில் 200 முதல் 214 முடியவுள்ள செய்யுள்களிற்காண்க.*

2. *திருவடி — அனுமான். அனுமானைச் 'சிறிய திருவடி' என்றும், கருடனைப் 'பெரிய திருவடி' என்றும் கூறுதல் வைணவப் பெரியார்களின் மரபு. திருவடியைத் தாங்குவதால், ஊர்தியைத் 'திருவடி' என்றனர்.*

3. *ஸ்ரீராமா. யுத்.* 59 : 111.

4. *ஸ்ரீராமா. யுத்.* 59 : 120.

5. *இங்கு,*

*'உள்ளி வெம்பிணக் குதிரநீர் வெள்ளத்தின் ஒடி*
*அள்ளி யங்கைக ளிருபதும் பற்றிப்பண் டான்மா*
*வெள்ளி யங்கிரி எடுத்தனன் வெள்கினு னென்ன*
*எள்ளிப் பொன்மலை எடுக்கலுற் றானென்ன எடுத்தான்.*

*'அடுத்த நல்லுணர் வொழிந்தில னம்பரஞ் செம்பொன்*
*உடுத்த நாயகன் தானென உணர்தலின் ஒருங்கே*
*தொடுத்த எண்வகை மூர்த்தியைத் துளக்கிவெண் பொருப்போடு*
*எடுத்த தோள்களுக்கு எழுந்திலன் இராமனுக் கிளையான்.'*

*'தொகவொ ருங்கிய ஞானமென் றெவரினுந் தூயான்*
*தகவு கொண்டதோ ரன்பெனுந் தனித்துணை யல்லால்*
*அகவு காதலால் ஆண்டகை என்னினு மனுமன்*
*மகவு கொண்டுபோய் மரம்புகு மந்தியை நிகர்த்தான்.'*

*என்னும் கம்பராமாயணச் செய்யுள்கள் நோக்கல் தகும்.*

அதிலே மணந்தான் ஒருவடிவு கொண்டாற்போலே இருப்பாளாய், நாட்டார் மணத்தை விரும்புவார்களாகில், [1] அந்த மணமும் 'தண்ணீர் தண்ணீர்' என்னப் பிறந்தவன், அரும்பெறல் அடிகள் - பெறுதற்கு அரிய ஸ்வாமிகள். பெரிய பிராட்டியார் விரும்பும்படி இருக்கை போலே காணும் அறப்பெரிய இறைவனுக்கு இலக்கணம். [2] 'ஜனகனுடைய குலத்தில் பிறந்த சீதை விரும்பும் கணவனுக எவன் இருக்கிருனே, அவனுடைய திறல் வலி அளி முதலிய குணங்கள் அளவிட்டு அறிய முடியாதன,' என்பது ஸ்ரீராமாயணம். நம் அரும்பெறல் அடிகள் - நாராயண அநுவாகாதிகளோடே சேர, அந்தப் பிரமாணப் பிரசித்தியைப் பற்ற, [3] 'உளர் சுடர் மிகு சுருதியுள்' என்ருர் முன்னர்; அந்தச் சுருதியுள் 'உனக்கு பூதேவியும் ஸ்ரீதேவியும் என மனைவியர் இருவர்' எனக் கூறப்பட்டுள்ளது அன்றே? அங்குக்கூறிய அந்த இலட்சுமி சம்பந்தத்தைத் தாம் அங்கீகரித்தமை தோன்ற, '**மலர் மகள் விரும்பும் நம் அடிகள்**' என்கிருர் இங்கு.

இனி, மேலே கூறிய எளிமையை விளக்குகிருர்: மத்துறு... எத்திறம்-மந்தரத்தைப் பிடுங்கி, கடலில் நடுநெஞ்சிலே நட்டு, நெருக்கிக் கடைந்து, வெளிகொடு வெளியே தேவர்களுக்கு அமுதைக் கொடுத்துவிட்ட பெருந்தோள்களையுடையவன் அன்றே இப்போது ஆயர் சேரியிலே வந்து பிறந்து, வெண்ணெய் களவு காணப் புக்கு, கட்டுண்டு அடியுண்டு நிற்கிருன் என்கிருர்.

மத்துறு கடை வெண்ணெய்-தயிர்ச்செறிவாலே மத்தாலே நெருக்கிக் கடையப்பட்ட வெண்ணெய். கடைவெண்ணெய் என்பது, முக்கால வினைத்தொகை. 'முக்காலத்திலும் வெண்ணெய் கடைதல் உண்டோ?' எனின், [4] 'முப்போதும் கடைந்து ஈண்டிய வெண்ணெய்' என வருதலால் உண்டு என்க. முக்கால வினைத்தொகையாயினும், நிகழ்காலத்தில் பொருள் சிறப்புடைத்து; கடையாநிற்கையில், பசியராய் இருக்குமவர்கள் சோறு சமையப் பற்ருமல் [5] 'வெந்தது கொத்தையாக வாயில் இடுமாறு போன்று, கடை

---

1. அந்த மணமும்-அந்தத் திருமகளும். 'தண்ணீர் தண்ணீர் என்னப் பிறந்தவன்' என்பது, 'விரும்பும்' என்ற சொல்லின் பொருள்.

2. ஸ்ரீராமா. ஆரண். 37 : 108.

3. திருவாய். 1. 1 : 7.

4. பெரியாழ்வார் திருமொழி, 3. 1 : 5.

5. வெந்தது கொத்தையாக-வெந்ததும் வேகாததுமாக; கொத்தை வேகாதது.

வதற்குள் பொறுக்காமல் நடுவே அள்ளி அமுது செய்தபடியைச் சொல்லுகிறார்,' என்று [1] **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பார். களவினில் - களவு செய்யும் சமயத்தில்; களவு செய்யத் தொடங்குஞ்சமயத்திலே அகப்பட்டானாதலின், '**களவினில்**' என்கிறார். 'கடைகிற காலத்தில் களவு காணும்படி யாங்ஙனம்?' எனின், கடைகிற பராக்கிலே [2] நிழலிலே ஒதுங்கிச் சாபலத்தாலே அள்ளி அமுது செய்தான். உரவிடை யாப்புண்டு - மார்விடையில் கட்டுண்டு, உரம்-மார்பு; இடை-ஏழனுருபு. [3] 'பொன் பெயரோன் தனது உரம் பிளந்து' என்ற இடத்து 'உரம்' இப்பொருட்டு ஆதல் காண்க. 'பெரிய பிராட்டியார் நெருக்கி அணைக்கும் மார்வையன்றே கயிற்றாலே நெருக்கிக் கட்டக் கட்டுண்டான்?' என்பார், '**உரவிடை யாப்புண்டு**' என்கிறார்: இனி, இதற்கு 'மிடுக்கையுடைய இடபம் போன்று இருக்கின்றவன் கட்டுண்டான்,' என்று பொருள் கூறலுமாம். உரம் - மிடுக்கு; விடை - இடபம். இனி, உரம் என்பதனை 'உதரம்' என்ற சொல்லின் விகாரமாகக் கொண்டு 'வயிற்றினிடத்தில் கட்டுண்டு' என்று பொருள் கூறலும் ஒன்று. உதரம்-வயிறு. பிள்ளை பெற்றுத் தாமோதரன் என்று பெயரிடும்படி அன்றே கட்டுண்டான்? [4] 'யசோதையானவள், தான் தாயான பரிவு தோற்ற இவனைக் களவிலே கண்டுபிடித்து, தாம்பாலே ஓர் உரலோடே அடுத்துக் கட்டி மறு கண்ணியும் பொத்தினாள்; பொத்தி, 'துரு துருக்கைத் தனம் அடித்துத் திரிந்த நீ வல்லையாகில் போய்க் காணாய்!' என்று உறுக்கிவிட்டால் போகமாட்டாதே இருந்தான் என்றபடி. 'ஆயின், வரம்பில் ஆற்றலையுடைய இறைவனை 'வல்லையாகில் போய்க் காணாய்' என்கைக்கு அடி எது?' எனின், [5] 'இப்படிப்பட்ட இறைவனுடைய சீரிய சத்தி பல படியாகக் கேட்கப்படுகின்றது' என்று ஓதப்படும் பொருள், இவளுக்கு எளியதான படியினால் சொல்லுகிறாள். எல்லாவற்றுக்கும் காரணமான தான்

---

1. *இவர், திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி வியாக்கியானம் அருளிச்செய்தவர்; திருமலை நம்பியின் புதல்வர்; இராமாநுசருக்கு அம்மான் சேயும் மாணாக்கரும் ஆவர்.*

2. *'நிழலிலே ஒதுங்கி' என்றது, வைகறையில் விளக்கு ஏற்றி வைத்துத் தயிர் கடைவார்கள் ஆகையாலே, அவ்விளக்கு நிழலிலே ஒதுங்கி என்றபடி.*

3. *பெரிய திருமொழி,* 4. 2 : 7.

4. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 5. 6 : 14-15.

5. *ஸ்வேதாஸ்வதரம்.*

அன்றே இப்படிக்கட்டுண்டு இருக்கிறுன்? பிரமன் முதலியோரைத் தன் சங்கற்பத்தாலே கட்டுவதும் விடுவதும் ஆகின்றவன் அன்றே இப்போது ஓர் அபலை கையால் கட்டுண்டிருக்கின்றுன்? 'ஆயின், இப்படிக் கட்டுண்கைக்குக் காரணம் யாது?' எனின், [1] 'எனது அவதாரத்தையும் அவதாரத்தில் நிகழ்த்தும் நிகழ்ச்சிகளையும் தெய்வத் தன்மை வாய்ந்தவை என்று எவன் அறிகிறுனே அவன் இச்சரீரத்தை விட்டால் வேறு சரீரத்தை அடைகிறுன் இல்லை; என்னையே அடைகிறுன்,' என்கிறபடியே, நம்முடைய கட்டை அவிழ்க்கையே காரணமாம்.

உரலினெடு இணைந்து இருந்து-உரலுக்கு ஒரு தொழில் செய்யுந் தன்மை உள்ளதாயின், தனக்கு ஒரு தொழில் செய்யுந்தன்மை உள்ளது என்று தோற்ற இருந்தபடி. ஏங்கிய - உரலைக்காட்டிலும் வேற்றுமை இத்தனையே காணும். அதாவது, அழப் புக்கவாறே 'வாய் வாய்' என்னுமே; பின்னை அழமாட்டாதே ஏங்கி இருக்கும் இத்தனை. எளிவு-எளிமை. எத்திறம்-பிரானே, இது என்ன பிரகாரம்? இன்னம் மேன்மை தரை காணலாம்; நீர்மை தரை காண ஒண்ணுதாய் இருந்ததே! 'உயர்வற உயர்நலம் உடையவன்' என்கிற மேன்மையிலே போவேன் என்கிறுர். ஏவப்படுகின்றவனுய் இருக்கிற இருப்பில் ஏவுகின்றவனுய் இருக்கிற இருப்புப் பேசக்கூடியதாய் இருந்தது என்றபடி. பேசப் புக்க வேதங்களும் 'அந்த ஆனந்த குணத்தினின்றும் மனத்தோடு வாக்குகள் திரும்புகின்றனவோ?' என்றதும் மேன்மையிலேயே; 'நிலம் அன்று என்கைக்கும் நிலம் அன்று அன்றே நீர்மை? இவ்வெளிமை ஏனையோர் பக்கலிலும் காணலாமே?' எனின், இத்தனை தாழநில்லாமையாலே சம்சாரிகள் பக்கல் காண ஒண்ணுது; பரத்துவத்தில் இந்நீர்மை இல்லை. 'ஆயின், உலகத்தில் களவு காண்பாரும் கட்டுண்பாரும் இலரோ? இவன் செயலுக்கு இத்தனை ஈடுபட வேண்டுமோ?' எனின், பெரியவன் தாழ்ச்சி ஆகையாலே பொறுக்க மாட்டுகின்றிலர். (1)

24

எளிவரும் இயல்வினன் நிலைவரம்பு இலபல பிறப்பாய்
ஒளிவரும் முழுநலம் முதல்இல கேடுஇல வீடாம்
தெளிதரு நிலைமையது ஒழிவிலன் முழுவதும் இறையோன்
அளிவரு மருளினேடு அகத்தனன் புறத்தனன் அமைந்தே.

**பொ-ரை:** இறைவன், குளிர்ந்த பக்குவமான திருவருளோடே அடியார்கட்கு அகத்தனனுயும் அல்லாதார்க்குப் புறத்தனனுயும்

---

1. ஸ்ரீகீதை. 4. 9.

சமைந்து, முதல் இல்லாதனவும் கேடு இல்லாதனவும் ஒளிவ்ளரப்பெறு வனவும் ஆன நற்குணங்களையுடையவனுய், வீடாகிய தெளிந்த உலகத்தினைக் கொடுக்குந் தன்மை எக்காலத்தும் நீங்காதவனுய், ஒரு நிலையும் ஒரு நியதியும் இல்லாத பல பிறவிகளையுடையவனுய், எளிமை வருதலை இயல்பாகவுடையவன் என்பதாம்.

**வி - கு :** 'முதல் இல, கேடு இல' என்பன, நலத்திற்கு அடை மொழி. இறையோன் என்பதற்கு ஐந்தாம் பாட்டின் விசேடக்குறிப்பில் எழுதியதை நினைவு கூர்க. 'நிலைமையது' என்பதில் 'அது' பகுதிப் பொருள் விகுதி. 'அமைந்து' என்னும் எச்சத்தை 'எளிவரும்' என் பதில் உள்ள வரும் என்னும் வினையுடன் முடிக்க.

ஈடு: இரண்டாம் பாட்டு. '**எத்திறம்**' என்ற ஆழ்வார் ஆறு மாதம் மோஹித்துக் கிடந்தார் என்பது பிரசித்தம் அன்ரே ? இவர் மோஹித்துக் கிடக்க, [1] பெருமாளும் பிராட்டியும் பள்ளி கொண் டருளின இடத்தை ஸ்ரீ குகப்பெருமாள் நோக்கிக்கொண்டு கிடந் தாற்போன்று, ஸ்ரீ மதுரகவி முதலான பெரியோர் அனைவரும் பழங்கள் நிறைந்த மரத்தைப் பறவைக்கூட்டங்கள் மொய்த்துக் கொண்டு கிடக்குமாறு போன்று, இவரைச் சூழ்ந்து கிடந்தார்கள். பெருமாளும் பிராட்டியும் துயின்ற இடத்தை நோக்கி இருந்த ஸ்ரீகுகப்பெருமாள் பசியார்க்குத் தாந்தாம் உண்ணும் உணவினைப் பகுந்து இடுவாரைப் போன்று, அங்கு வந்த ஸ்ரீ பரதாழ்வானுக்குத் தாம் நோக்கிக்கொண்டிருந்த இடத்தைக்காட்ட, அவ்விடத்தைக் கண்டவாறே [2] 'தொட்டால் முடிந்துவிடுவானே !' என்று சத்துருக்

---

1. 'பெருமாளும் பிராட்டியும் துயின்ற இடத்தை ஸ்ரீ குகப்பெரு மாள் காவல் புரிந்திருந்தார் என்பது ஸ்ரீ ராமாயணத்திற்கூறப்பட வில்லையே?' எனின், 'பொருந்திக் கிடக்கிற பொன்னின் துகள் அங்கே அங்கே காணப்படுகின்றனவே! ஆதலால், பிராட்டி ஆபரணங்களைக் கழற்றுமல் இச்சிறந்த படுக்கையில் துயின்றிருத்தல் வேண்டும் என நினைக்கிறேன்,' (அயோத். 88. 14.) என்று ஸ்ரீ பரதாழ்வான் கூறு கின்றான். பெருமாள், ஸ்ரீ குகப்பெருமாள் ஆச்சிரமத்தினின்று நீங்கிச் சென்றதற்கும், ஸ்ரீ பரதாழ்வான் வந்ததற்கும் இடையே இருபத்திரண்டு நாள்கள் கழிந்தன ; பொன்னின் துகள் மறைவுபடாமல் இத்தனை நாள் களும் அங்கே இருக்க வேண்டுமாயின், சிறந்த காவல் செய்திருத்தல் வேண்டுமன்ரே ? ஆதலால், காவல் புரிந்தமை பெறுதும்.

2. ஸ்ரீராமா. அயோத். 87 : 4.

கனன் எண்ணும்படி [1] மோஹித்துக் கீழே வீழ்ந்த ஸ்ரீ பரதாழ்வானைப் போன்று, மோஹித்துக் கிடந்த இவர், [2] 'விசாலமான கண்களை யுடைய பிராட்டி பல நாழிகைகள் கழித்து மூர்ச்சை தெளிந்து, பின்னர்ச் சிந்தித்தாள்,' என்பது போன்று பெரியோர்களுடைய நல்வினைப்பயனால் காலம் உணர்த்த உணர்ந்து, 'நான் இங்குச் சொல்லியது என் ?' என்று கேட்டார். 'ஆயின், அங்கு அனுபவிக்கும் பெரியோர் உளரோ ?' எனின், அது [3] 'நல்லார் நவில் குருகூர்' அன்றே ? ஆதலால், அங்குள்ள பெரியோர் அனைவரும் இவரைப் பற்றிப் [4] படுகாடு கிடந்தனர். கேட்டதற்குப் 'பத்துடை அடிய வர்க்கு எளியவன்' என்று கூறி, அதனை விளக்குவதற்கு அதன் தொடர்ச்சியாக 'மத்துறு கடைவெண்ணெய்' என்பது முதலாகச் சிலவற்றைக் கூறி, 'எத்திறம்' என்று மோஹித்துக் கிடந்தீர், என்றார்கள், [5] 'தப்பச்செய்தோம் ; அழித்துச் சூளுறவு செய்ய வேண்டும்,' என்கிறார் இரண்டாம்பாட்டில். அதாவது, பிறர்க்கு உபதேசம் பண்ணப்புக்குத் தாம் அனுபவித்தார் முதற்பாட்டில் ; இப்பாட்டுத் தொடங்கிப் பிறர்க்கு உபதேசம் செய்கிறார் என்றபடி. மேல் பாட்டில் கூறிய எளிமையினை வகைப்படுத்தி அருளிச்செய்கிறார் இப்பாட்டில்.

எளிவரும் இயல்வினன் - எளிமையை இயல்பாகவுடையவன். 'பத்துடை அடியவர்க்கு எளியவன்' என்றார் மேல் ; தன்னிடத்து அன்புடையார் மாட்டுத் தானும் அன்புள்ளவனாய் இருத்தல் ஒரு குணம் அன்று ஆதலின், அதனை மறுத்து, ஈண்டு '**எளிவரும் இயல்வினன்**' என்கிறார். எல்லார்க்கும் ஒவ்வொரு காலத்தில் எளிமை கூடும் ; இவனுக்கு எளிமை சொரூபம் என்பதனைத் தெரிவிப்பதற்கு 'எளிவரும் **இயல்வினன்**' என்கிறார் என்றபடி. நிலை

---

1. இங்கு,

*'காரெனக் கடிது சென்றான் ; கல்லிடைப் படுத்த புல்லில்*
*வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான் ;*
*பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் ; பருவரற் பரவை புக்கான் ;*
*வார்மணிப் புனலால் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணன்.'*

*என்ற கம்பராமாயணச் செய்யுள் நினைத்தல் தகும்.*

2. *ஸ்ரீராமா. சுந்.* 38 : 8.

3. *திருவிருத்தம்,* 100.

4. *படுகாடு கிடத்தல் - வெட்டி வீழ்த்தப்பட்ட மரங்களையுடைய காடு கிடந்தாற்போன்று கிடத்தல்.*

5. *'தப்பச்செய்தோம்,' என்றது, பிறர்க்கு உபதேசம் செய்யப் புகுந்தவர், அது செய்யாது தாமே அனுபவித்தது.*

வரம்பு இல-இன்ன அவதாரம் இன்ன செயல் என்பது இல்லை; 'நிலை இல, வரம்பு இல' என 'இல' என்பதனை 'நிலை' என்பதுடனும் கூட்டுக. இனி, **பட்டர்** இவ்விரு பொருளையும் 'நிலை இல' என்பதன் பொருளாகவே கொண்டு, 'வரம்பு இல' என்பதற்கு, வேறு பொருள் அருளிச்செய்வர். அதாவது, 'அவதரித்து எளியனாய் நின்ற நிலை தனனிலே பரத்துவம் தோற்ற நிற்கிலும் நிற்கும்,' என்று. தேர்ப்பாகனாய்த் தாழ நிற்கச்செய்தே [1] ஸ்ரீ விஸ்வரூபத்தைக் காட்டியும், தான் புத்திரப் பேற்றின்பொருட்டுப் போகாநிற்கச்செய்தே கண்டாகர்ணனுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தும், ஏழு வயதிலே கோவர்த்தன மலையைத் தரித்துக்கொண்டு நின்றும் செய்தவை. இத்தாற்பெறப்படுவது, 'ஒன்றிலும் ஒரு நியதி இன்று; காப்பதற்கு உறுப்பாம் அத்தனையே வேண்டுவது; ஏதேனுமாக அமையும் இவனுக்கு,' என்கை.

பல பிறப்பாய்-தெளிவுடைய தான் சொல்லும் போதும் [2] 'பல பிறவி' என்பன்; உண்மையினைக் கூறும் வேதங்கள் கூறும்போதும் [3] 'பல வேறுபட்ட சாதிகளில் பிறக்கிறான்' என்று கூறும்; அவன் கொடுத்த அறிவு கொண்டு சொல்லுவார், [4] 'பல பிறப்பு' என்பர். பிறருக்காகத் தாழ நின்றோம் என்ற நினைவு சிறிதும் இன்றி, அவ்வப் பிறவியின் தன்மைக்குத் தக்கவாறு இருந்தான் ஆதலின், 'பிறந்து' என்னாது '**பிறவியாய்**' என்கிறார். 'ஆயின், பரத்துவ நினைவு சிறிதும் இன்றி இருந்தான் என்பதனை நாம் அறியுமாறு யாங்ஙனம்?' எனின், [5] 'என்னை நான் மனிதனாகவே நினைக்கின்றேன்,' என்ற ஸ்ரீ ராமன் வார்த்தையாலும், [6] 'நான் உங்கட்குச் சுற்றத்தவனாய்ப் பிறந்திருக்கிறேன்,' என்ற ஸ்ரீ கிருஷ்ணன் வார்த்தையாலும் அறிதல் தகும். ஒளிவரும் முழுநலம்-நீங்கின தீவினைகளையுடைத்தாய் இருத்தல்

---

1. *விஸ்வரூபம்—உலகமே உருவமாயிருக்கும் வடிவம்.*

2. *ஸ்ரீ கீதை,* 18 : 55.

3. *யஜுர் வேதம்.*

4. *திருவாய்மொழி.* 1. 3 : 2.

5. *ஸ்ரீராமா. யுத்.* 120 : 11.

6. *"நான் தேவன் அலன், கந்தருவன் அலன், இயக்கன் அலன்; அசுரனும் அலன். நான் உங்களுக்குச் சுற்றத்தானாய்த் தோன்றியிருக்கிறேன்; இப்படித் தோன்றியிருப்பதனால் வேறு விதமாக நினைக்கத் தக்கவன் அல்லன்," என்பது ஸ்ரீ விஷ்ணு புராணம்.* (5. 13 : 12.)

முதலிய தன்மைகள் உயிர்கட்கு இருப்பினும், பிறவிகள் காரணமாக அவற்றிற்கு மறத்தல் முதலிய தன்மைகளும் இன்பத்துன்பங்களும் உளவாம்; இறைவன் தன்னைத் தாழ விட்டுப் பிறக்கப் பிறக்க, நற்குணங்கள் ஒளி பெற்று வாராநிற்கும். 'ஆயின், இருவர்க்கும் பிறவி ஒத்து இருக்க, இறைவனுக்கு நற்குணங்கள் ஒளி பெறுகைக்குக் காரணம் யாது?' எனின், [1] 'அவன் பிறந்தவனாய் நன்மையுடையவனாகவே இருக்கின்றான்,' என்கிறபடியே, கர்மம் காரணமாகப் பிறக்கும் பிறவியாய் இருப்பின், பிறக்கப் பிறக்கப் புகர் அழியும்; திருவருள் காரணமாக வருகிற பிறவி ஆகையாலே புகர் பெற்று வாராநிற்கும். அவ்விறைவனே புகழையுடையான் என்றபடி.

'அக்குணங்கள்தாம் இருக்கும்படி என்?' என்னில், முதல் இல கேடு இல-ஒரு நாள் வரையிலே தோன்றி ஒரு நாள் வரையிலே முடியுமவை அல்ல; சொரூபத்தோடு சேர்ந்தவைகளாய் இருக்கின்றன. வீடாம் தெளிதரும் நிலைமையது, மோக்ஷமாகிற தெளிவு; பரமபதம். அதனைத் தரும் தன்மை என்றும் ஒத்திருக்குமவன். அவன் இங்கே வந்து அவதரிக்கிலும் சோக மோஹங்களைப் பண்ணும் இவ்விடம்; இவன் அங்கே செல்லினும் தெளிவைப் பண்ணும் அவ்விடம்; ஆதலால், '**வீடாம் தெளி**' என்கிறார். [2] 'தெளி விசும்பு' என்பர் மேலும். 'ஆயின், இக்குணம் 'ஒளிவரும் முழுநலம்' என்றதிற் புகாதோ?' எனின், மோக்ஷத்தை அளிக்கும் இறைமைக்குணம் தனியே சொல்ல வேண்டுவது ஒரு குணம் ஆகையாலே சொல்லுகிறார்; மேலும், அவதாரத்துக்குப் பயன் இதுவே அன்றோ? முழுவதும் ஒழிவிலன்-மேலே கூறிய [3] இரண்டனையுங் கூட்டிச் சொல்லுகிறார். இறையோன்-மேல் 'வீடாம் தெளிதரு நிலைமையது ஒழிவிலன்' என்றார்; அவ்வீட்டினை அளித்தல் ஈஸ்வரனுக்கே உள்ளது ஒன்று ஆதலின், அதனைத் தெரிவிக்கும்பொருட்டு அதனை அடுத்து, '**இறையோன்**' என்கிறார். இனி, மேல் 'பல பிறப்பாய்' என்றாராதலின், அவ்வாறு பிறப்பினும், ஈஸ்வரத் தன்மையில் குறையாதே நிற்பான்

1. *யஜுர் வேதம்.* 3. 6 : 9.

2. *திருவாய்.* 9. 7 : 5.

3. *'மேற்கூறிய இரண்டனையும்' என்றது, 'ஒளிவரும் முழுநலம், வீடாந்தெளிதரும் நிலைமை' என்பனவற்றை. அதாவது, எல்லா நற்குணங்களையுமுடையனாந்தன்மை, மோக்ஷத்தையளிக்கும் இறைமைத்தன்மை என்பனவாம்.*

என்பதனைத் தெரிவிக்கும்பொருட்டு ‘**இறையோன்**’ என்கிறார் என்னலும் ஆம். அளிவரும் அருளினோடு-குளிர்ந்து பக்குவமான அருளோடே. இனி, இதற்கு, ‘அருளால் வரும் அருளோடே’ என்று பொருள் கூறி, ‘அருளால் வரும் அருளாவது, காரணம் இன்றியே செய்யும் திருவருள்,’ என்று கூறலுமாம். அகத்தனன்- அடியார்கட்குக் கழுத்திலே ஓலை கட்டித் ‘தூது போ’ என்னலாம்படி இருப்பான். புறத்தனன்-அடியார் அல்லாதவருக்கு அந்நிலை தன்னிலே கிட்ட ஒண்ணாதபடி இருப்பான். அமைந்து-இப்படிச் சமைந்து.

‘இறையோன், அளிவரும் அருளினோடு அகத்தனன் புறத்தனனாய் அமைந்து, முதல் இல கேடு இலவாம் ஒளிவரும் முழுநலம், வீடாம் தெளிதரு நிலைமையது முழுவதும் ஒழிவிலனாய், நிலை வரம்பில் பல பிறப்பாய், எளிவரும் இயல்வினன்’ எனச்சொற்களைக் கூட்டிப் பொருள் முடிவு காண்க. (2)

25

***அமைவுடை அறநெறி முழுவதும் உயர்வற உயர்ந்து***
***அமைவுடை முதல்கெடல் ஒடிவிடை அறநிலம் அதுவாம்***
***அமைவுடை அமரரும் யாவையும் யாவருந் தானும்***
***அமைவுடை நாரணன் மாயையை அறிபவர் யாரே?***

**பொ - ரை:** பயனோடு கூடியிருக்கின்ற அறத்தின் வழிகள் எல்லாவற்றிலும் உயர்வில் மிக உயர்ந்து, அமைதலையுடைய படைத்தல் அழித்தல் இடையிலே அழித்தல் ஆகிய இவற்றின் முடிவின் எல்லையில் நிற்கின்ற அறிவு ஆற்றல்கள் அமைந்திருக்கின்ற பிரமன் முதலிய தேவர்களும், அஃறிணைப் பொருள்களும், உயர்திணைப் பொருள்களும் ஆகிய எல்லா உயிர்களும், தானே ஆகும்படி பொருந்தி இருக்கின்ற நாராயணனுடைய பிறவியின் தன்மையினை அறிபவர் எவர்தாம்? ஒருவரும் இலர் என்றவாறு.

**வி - கு:** முதல் இரண்டு அடிகளும் அமரர்கட்கு அடைமொழி. ‘உயர்ந்து அமைவுடைய அமரரும்’ என்றும், ‘அமைவுடை முதல் கெடல் இடை ஒடிவு அற நிலம் அதுவாம் அமைவுடை அமரரும்’ என்றும் கூட்டுக. பிரளயம் முடிந்தவுடன் செய்யப்படும் படைத்தலையும், நாடோறும் செய்யப்படும் படைத்தலையும் ‘முதல்’ என்ற சொல்லாலும்,

பிரளயத்தில் செய்யப்படும் அழித்தலையும், நாடோறும் செய்யப்படும் அழித்தலையும் 'கெடல்' என்ற சொல்லாலும் குறித்தனர். இடை ஒடிவு - அவாந்தர சம்ஹாரம்; அதாவது, பிரமனது ஒரு நாளின் இரவில் நடக்கும் அழிவு. இடை ஒடிவினைக் கூறியவதனால், பிரமனது ஒரு நாளின் பகற்பொழுதில் செய்யப்படும் இடை முதலையும் கொள்க. அற நிலம் - அறுதற்குக் காரணமான இடம்; அதாவது, முடிந்த இடம். 'நிலமது' என்பதில் 'அது' பகுதிப்பொருள் விகுதி. யாரே என்றதன் ஏகாரம் எதிர்மறை. 'மாறுகொள் எச்சமும்' (தொல். எழுத். 275.) என்ற சூத்திரத்தால் ஏகாரத்திற்கு எதிர்மறைப்பொருளும் கூறினர் ஆசிரியர் தொல்காப்பியனார்.

ஈடு: மூன்றாம் பாட்டு. [1] 'எளியவன்' என்றார்; எளிமையை வகைப்படுத்தி அருளிச்செய்தார்; இவனுடைய அவதாரத்தின் மறை பொருள் அறிதல் ஒருவர்க்கும் நிலம் அன்று என்கிறார் இப்பாசுரத்தில்.

அமைவுடை அற நெறி முழுவதும் உயர்வு அற உயர்ந்து-ஒரு தருமத்தைச் செய்தால் தொடங்கும்போதே பயன் இன்றிக் கழியினும் கழியும்; இடையில் சிற்சில தடைகள் நேரினும் நேரும்; அங்ஙனம் அன்றி, [2] சக்கரவர்த்தி நான்கு ஆஹுதி பண்ணி நான்கு இரத்தினங்களை எடுத்துக்கொண்டாற்போன்று, பலத்தோடே சேர்ப்பிக்கின்ற அறத்தின் வழிகள் எல்லாவற்றாலும் [3] 'உயர்வற உயர்நல முடையவன்' என்று சர்வேஶ்வரன் குணங்களால் உயர்ந்திருக்குமாறு போன்று, 'இவ்வறத்தில் இவனுக்கு அவ்வருகு ஒருவரும் இலர்,' என்னும்படி சமைந்திருக்கை.

அமைவுடை முதல் கெடல் ஒடிவு இடை அற நிலம் அதுவாம் அமைவுடை அமரரும்-பிரமன் உலகத்தைப் படைத்தால், 'சர்வேஶ்வரனே!' என்று ஐயப்படும்படி இருக்கை. இப்படிச் சமைவையுடைத்தான படைத்தல் என்ன, அப்படி இருந்துள்ள அழித்தல் என்ன, அவாந்தர சம்ஹாரம் என்ன, என்னும் இவற்றைத் தங்களுக்கு நிலையிட்டுக் கொடுத்த சர்வேஶ்வரனையும் மறுத்துக் கேள்வி கொள்ள

1. 'எளியவன்' என்றார், முதற்பாசுரத்தில்; எளிமையை வகைப்படுத்தி அருளிச்செய்தார், இரண்டாம் பாசுரத்தில்.

2. சக்கரவர்த்தி - தசரத சக்கரவர்த்தி. நான்கு இரத்தினங்கள் - நான்கு புதல்வர்கள்.

3. திருவாய். 1. 1 : 1.

வேண்டாதவாறு மிகவும் [1] விதேயமாம்படி சமைந்த பிரமன் முதலிய தேவர்களும்.

யாவையும்-அறிவில் பொருள்களும். யாவரும்-அறிவுடைப் பொருள்களும். தானும் அமைவுடை நாரணன்-அறிவில் பொருள் அறிவுடைப்பொருள் எல்லாம் தான் என்ற சொல்லுக்குள்ளே விசேஷணங்களாய்ச் சேரும்படியான சமைவையுடையன் ஆகை யாலே **நாராயணன்** என்னுந் திருநாமத்தையுடையவன். மாயையை அறிபவர் யாரே - இவனுடைய அவதாரத்தின் மறை பொருள் ஒருவர்க்கும் அறிய நிலம் அன்று என்கிறார். 'என்னே?' எனின், பிரகாரியான தான் பிரகாரமான பொருள்களிலே ஒன்று '**என் மகன்**' என்று அபிமானிக்கும்படி வந்து பிறந்த இவ்வாச்சரியம் ஒருவர்க்கும் அறிய நிலம் அன்று ஆதலின். 'ஏன், ஒருவரும் அறியாரோ?' எனின், நித்தியசூரிகள் பரத்துவத்தை நுகர்கின்ற வர்கள் ஆகையாலே அறியார்கள்; சம்சாரிகள் [2] நாஸ்திகர் ஆகை யாலே அறியார்கள்; பிரமன் முதலிய தேவர்கள் தத்தமது அறிவாலே அறிய இருக்கின்றவர்கள் ஆகையாலே அறியார்கள்; மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் 'எத்திறம்!' என்று மோஹித் துக் கிடப்பார்கள்; தனக்குத் தானே முற்றறிவினையுடைய இறை வனும் [3] 'என்னுடைய பிறவியும் செயல்களும் தெய்வத் தன்மையன,' என்கின்றான்; ஆதலின், ஒருவர்க்கும் நிலம் அன்று என்பதாம்.

இனி, 'தானும் அமைவுடை நாரணன்' என்பதற்கு, [4] ஒருவன் ஒருவனை 'உனக்கு ஒரு மாதஜீவனத்துக்கு என்ன வேண்டும்?' என்றால், தன் மனைவி மக்களையுங் கூட்டிக்கொண்டு 'எனக்குக் கலநெல் வேண்டும்' என்கிறான் அன்றே? அப்படியே, இவை அடங்கலும் தன் 'அஹம்' சொல்லுக்குள்ளே அடங்க, தான்

---

1. *விதேயம் - உரிமை; தத்தமக்கே உரிமையாகும்படி என்றவாறு.*

2. *நாஸ்திகர் - கடவுள் நம்பிக்கையில்லாதவர்.*

3. *ஸ்ரீ கீதை, 4 : 9.*

4. *நாராயணன் என்ற தொகையை வேற்றுமைத் தொகையாகக் கொண்டு பொருள் அருளிச்செய்கிறார். 'ஒருவன் ஒருவனை' என்று தொடங்கும் வாக்கியத்தால். மேல், 'பிரகாரியான தான்' என்று தொடங்கும் வாக்கியத்தால் அன்மொழித்தொகையாகக் கொண்டு பொருள் அருளிச்செய்தார்.*

இவற்றுக்கு அபிமாணியாய் இருக்கும்படியை அருளிச்செய்கிறார் என்று பொருள் கோடலுமாம். (3)

26

**யாரும்ஓர் நிலைமையன் எனஅறி வரியஎம் பெருமான்**
**யாரும்ஓர் நிலைமையன் எனஅறி வெளியஎம் பெருமான்**
**பேரும்ஓர் ஆயிரம் பிறபல உடையஎம் பெருமான்**
**பேருமோர் உருவமும் உளதுஇல்லை இலதுஇல்லை பிணக்கே.**

**பொ - ரை :** ஆயிரம் திருப்பெயர்களையும் அப்பெயர்கட்கு அமைந்த ஆயிரம் திருமேனிகளையும் உடைய எம்பெருமான், (தன் முயற்சியால் காணவேண்டுமென்று இருப்பவர்கள்) எத்தகைய உயர்ச்சி பெற்றவர் களாயினும், அவர்கட்கு ஒருபடியையுடையன் என்று அறிதற்கு அரிய எம்பெருமான் ஆவன்; (அவன் திருவருளால் காணவேண்டுமென்று இருப்பவர்கள்) மிகத் தாழ்ச்சி பெற்றலர்களாயினும், அவர்கட்கு அறிதற்கு எளிய எம்பெருமான் ஆவன்; ஆதலால், ஒரு பெயரும் ஓர் உருவமுங்கூட உள்ளது இல்லை அடியர் அல்லாதார்கட்கு; ஒரு பெயரும் ஓர் உருவமும் இல்லது இல்லை அடியார்கட்கு; இவ்வகையில் என்றும் மாறுபாடே என்றவாறு.

**வி - கு :** 'யாரும்' – உம்மை உயர்வு சிறப்பு. இரண்டாவது 'யாரும்' என்பதில், உம்மை இழிவு சிறப்பு. ஆயிரம் என்பது, மிகப்பல என்பதனைக் குறித்தபடி. 'தனக்கோர் வடிவும் பெயரும் இன்றி அன்ப ராயினோர் கருதிய வடிவே வடிவாகவும், அவரிட்ட பெயரே பெயராகவும் உடையனாதலின், 'முக்கை முனிவ' என்பது முதலாக 'நூறுயிரங்கை யாறறி கடவுள்' என்பது ஈறுக வடிவு வேற்றுமையும் பெயர் வேற்று மையும் சொல்லப்பட்டன' என்ற பரிமேலழகருரை ஈண்டு நினைத்தல் தகும் (பரிபா. 3.). இலது இல்லை என்பது, உண்டு என்ற பொருளைக் காட்டும்; இரண்டு எதிர்மறை ஓர் உடன்பாட்டைக் காட்டும் என்பது வழக்கு.

**ஈடு :** நாலாம்பாட்டு. 'தானும் அமைவுடை நாரணன்' உடைய அவதாரத்தின் எளிமை ஒருவர்க்கும் அறிய நிலம் அன்றோ? என்னில், 'அடியார்க்கு மிக எளியனாய், அடியர் அல்லாதார்க்கு மிக அரியனாய் இருக்கும்,' என்கிறார்.

யாரும் ஓர் நிலைமையன் என அறிவு அரிய எம்பெருமான் - எத்துணை வியக்கத்தக்க ஞானத்தினையுடையவர்களேயாகிலும் தன்

முயற்சியால் காணும் அன்று 'இன்ன படிப்பட்டு இருப்பது ஒரு தன்மையையுடையவன்' என்று அறிய ஒண்ணாத என் சுவாமி யானவன். யாரும் ஓர் நிலைமையன் என அறிவு எளிய எம்பெருமான்-பிறப்பு ஒழுக்கம் ஞானம் இவைகளில் ஓர் அளவும் இல்லையேயாகிலும் தானே காட்டக் காணுமவர்களுக்குத் தன் படிகள் எல்லாம் அறிய லாம்படி இருப்பன். 'எங்கே கண்டோம்?' என்னில், [1] ஒரு குரங்கு, வேடச்சி, ஆய்ச்சி இவர்களுக்கு எளியனாய் இருக்கக் கண்டாமே! இங்கு '**யாரும்**' என்ற உம்மை தாழ்ச்சிக்கு எல்லையிலே நிற்கிறது. 'எம்பெருமான்' என்ற சொல்லால், 'அடியார்க்கு எளியனாய் அடியர் அல்லாதார்க்கு அரியனான என் [2] **நாயன்** நிலை இருந்தபடி என்னே!' என்று ஈடுபட்டு எழுதிக்கொடுக்கிறார். [3] 'மனம் வாக்கு இவற்றிற்குப் புலனாகாத உனக்கு வணக்கம் வணக்கம்; மனம் வாக்கு இவற்றிற்குப் புலனாகின்ற உனக்கு வணக்கம் வணக்கம்' என்றார் ஸ்ரீ ஆளவந்தாரும்.

பேரும் ஓர் ஆயிரம்-அனுபவிக்கின்ற அடியார்கட்கு இழிந்த இடம் எல்லாம் துறையாகும்படி பல திருநாமங்களையுடையனாய் இருக்கை. குணம் பற்றி வருவனவும், சொரூபம் பற்றி வருவனவும் ஆன பெயர்களுக்கு ஓர் எல்லை இல்லை ஆதலின், '**பேரும் ஓர் ஆயிரம்**' என்கிறார். [4] 'தேவனுடைய பெயர்கள் ஆயிரமாக இருக் கின்றன,' எனப் புகலும் பாரதம். பிற பல உடைய எம்பெருமான்-அப்பெயர்களின் மூலமாகக் காண்கின்ற பல திருமேனிகளை யுடையனாய் இருக்கை. 'பிற' என்பது ஈண்டுத் திருமேனியைக் காட்டுகிறது. 'ஆயின், 'பிற' என்ற சொல் திருமேனியைக் காட்டு மோ?' எனின், [5] 'உயிர்கட்குப் பெயர்களையும் உருவங்களையும் உண்டுபண்ணினான்' என்றும், [6] 'பெயர்களையும் உருவங்களையும் உண்டுபண்ணுகிறேன்,' என்றும் பெயரோடு உருவமும் சேரக் கூறப்பட்டிருத்தலின், ஈண்டுப் 'பிற' என்பது [7] திருமேனியைக்

---

1. *குரங்கு-சுக்கிரீவன்; திருவடியும் ஆம். வேடச்சி-சபரி; ஆய்ச்சி-யசோதைப் பிராட்டி.*
2. *நாயன்-ஏவுகின்றவன்; தலைவன்.*
3. *ஸ்தோத்திர ரத்தினம்,* 21.
4. *பாரதம்.*
5. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 1. 5 : 6.
6. *சாந். உப.* 6 : 3.
7. *சார்பினால் கோடல் தகும்; 'வினை சார்பு இனம் இடம் மேவி விளங்காப் பலபொருளொருசொல் பணிப்பர் சிறப்பு எடுத்தே' என்பது நன்னூல்* (390).

காட்டுகிறது. மற்றும், இவர்தாமும் இதனைப் பின்னர்க் கூறுமிடத்து, 'பேரும் ஓர் உருவமும்' என்று அருளிச்செய்தல் காண்க.

பேரும் ஓர் உருவமும் - இவற்றுள் ஒரு திருப்பெயரும் ஒரு திரு உருவமும். உளது இல்லை-அடியர் அல்லாதார்க்குத் தூலமாக நினைப்பதற்கும் அரியனவாய் இருக்கும். இலது இல்லை – அடியார்க்கு எல்லாம் காணலாம் ஆகையாலே இல்லது இல்லை. [1] பிணக்கே-இதில் மாறுபாடு உண்டோ? இல்லை என்றபடி. அடியார்கள் எல்லாம் காண்கையாலே வாழ்த்துக் கூறுவார்கள்; அடியர் அல்லாதார் இவை இல்லை என்று இருக்கையாலே முதலிலேயே கிட்டார்கள்; 'இவ்விருவர்க்கும் நடுவே பொருள் நித்தியமாகப் பெற்றோமே!' என்று தாம் இனியர் ஆகிறார். இனி, 'பேரும் ஓர் உருவமும் உளது, இலது இல்லை, இல்லை பிணக்கே' என்பதற்கு, பேரும் ஓர் உருவமும் உளது-திருப்பெயரும் திருபெயர்க்குப் பொருளான திருமேனியும் நித்தியம்; இல்லது இல்லை; இல்லை பிணக்கே; ஆதலால், இவ்விஷயத்தில் விவாதம் வேண்டா என்கிறார் என்று கோடலும் ஆம். [2] (4)

27

பிணக்கற அறுவகைச் சமயமும்
நெறிஉள்ளி உரைத்த
கணக்கறு நலத்தனன் அந்தமில்
ஆதியம் பகவன்
வணக்குடைத் தவநெறி வழிநின்று
புறநெறி களைகட்டு
உணக்குமின் பசைஅற அவனுடை
உணர்வுகொண்டு உணர்ந்தே.

பொ – ரை: (அறுவகைப்புறச்சமயங்களுக்கு வைதிக சமயத்தோடு) பிணக்கு அறும்படி (மறைகளிற்கூறியுள்ள பொருள்களின்) வழிகளை நினைந்து கூறிய கணக்கு இல்லாத நற்குணங்களையுடையவனும், முடிவில்லாத அழகிய ஆதிபகவனும் ஆன இறைவன் கூறிய வணக்கத்தையுடைய பத்தி நெறியிலே நின்று, அவன் விஷயமானது அறிவினால் (அறியவேண்டுவனவற்றை) அறிந்து, அவற்றுக்குப் புறம்பாக உள்ள வழிகளாகிற களைகளைப் பறித்து, பின்னும் அவற்றை ஈரமும் அற்றுப்போமாறு உலர்த்துங்கோள் என்றவாறு.

---

1. 'பிணக்கே' என்பதில், ஈண்டு ஏகாரம் எதிர்மறை.

2. இங்குப் 'பிணக்கே' என்பதிலுள்ள ஏகாரம் ஈற்றசை.

வி - கு: 'அற உள்ளி உரைத்த பகவன்' என்றும், 'நின்று உணர்ந்து கட்டு அற உணக்குமின்' என்றும் முடிக்க. 'ஆதி அம் பகவன்' என்ற தொடர், 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு,' என்ற திருகுறளை நினைப்பூட்டுகிறது. [1]''ஆதி தானுகில் ஆதிக்கு அந்தம் உண்டாகும்; அந்தக் கோதிலான் இறைவன் என்றே கூறிடும் வேதம்,' என்பாரும் உளராதலின், 'அந்தமில் ஆதியம் பகவன்' என்று அருளிச்செய்கிருர் போலும்!

ஈடு: ஐந்தாம் பாட்டு. 'வழிபாடு செய்மின் என்று பன் முறையுங் கூறுகின்றீர்; வழிபாடு செய்யும் வழியினை அருளிச் செய்யீர்,' என்ன, 'இன்று நான் உபதேசிக்க வேண்டுமோ? அவன் தான் ஸ்ரீ கீதையில் அருளிச்செய்த பத்தி மார்க்கத்தாலே அவனை அடைமின்,' என்கிருர்.

பிணக்கு அற அறுவகைச் சமயமும்-வைதிக சமயத்துக்கும் ஆறு புறச்சமயங்களுக்கும் தம்மில்தாம் உண்டான பிணக்கு அறும் படியாக. நெறி உள்ளி உரைத்த-தான் சொல்லிய அனைத்தும் வேதப் பொருளாக இருக்கவும், பொருளின் உண்மைத் தன்மை தெளியப் பெருத ஒருவன் ஆராய்ந்து சொல்லுமாறு போன்று விசாரித்து அருளிச்செய்தான்; 'அதற்கு நினைவு என்?' என்னில், மனத்தொடு படாமற்கூறினும் நன்மை தரத்தக்கனவாக இருப்பினும் மக்களுடைய ஹிதத்தில் உண்டான அன்பின் பெருககாலே, சடக்கெனச் சொன்ஞல் 'நிரூபியாமல் வாய் வந்தபடி சொன்ஞன்' என்பர்கள் என்று ஆராய்ந்து சொன்ஞைகச் சொன்னபடி. கணக்கு அறு நலத்தனன்-எல்லை இல்லாத குணத்தையுடையவன்; இனி, எல்லை இல்லாத [2] வாத்சல்யத்தையுடையவன் எனலுமாம். 'யார் இரக்கச் செய்தான்?' என்னில், தன் வாத்சல்யத்தால் அருளிச்செய்தான் இத்தனையே. 'ஆயின், வாத்சல்யத்தால் கூறிய அனைத்தும் உண்மைப் பொருள் ஆகுமோ?' என்னில், அந்தம் இல் ஆதி- [3] ஆப்ததமன். எல்லார்க்கும் பிறப்பு இறப்புகளாலேயன்றே ஞானத்திற்குக் குறைவு உண்டாவது? இவனுக்கு அவை இல்லாமையாலே கர்மங்களுக்குக் கட்டுப்பட்டவன் அல்லன் ஆதலின், இவன் யாங்ஙனம் கூறினும்

---

1. சிவஞான சித்தியார், பரபக்கம்.

2. வாத்சல்யம் - தன் அடியார்கள்மாட்டுக் காண்கிற குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் தன்மை. வத்சம் - பசுவின் கன்று.

3. ஆப்ததமன் - நம்பத்தகுந்தவர்களில் உயர்ந்தவன்.

**உண்மைப்** பொருளேயாம் என்க. அம் பகவன் - [1] ஞானம், சத்தி, செல்வம் முதலியவைகளால் சிறிது மேன்மையுடையவர்களையும் பகவான் என்ற பெயரால் கூறும் வழக்கு உண்டாதலின், 'பகவான் என்னும் பெயர் முக்கியமாக வசிப்பது இவன் பக்கலிலே: அல்லா தார் பக்கல் ஔபசாரிகம்' என்பார், '**அம் பகவன்**' என்கிறார்.

வணக்குடைத் தவநெறி வழி நின்று-வணக்கத்தையுடைய பத்தி மார்க்கமாகிற வழியிலே நின்று; பகவத்கீதையில் பத்தியைப் பற்றிக் கூறுமிடத்தில் [2] 'பத்தியினால் என்னை வணங்கி வழிபடுகின்றார்கள்,' என்று கூறி, பின்னர், [3] 'என்னை வணங்குதலைச் செய்வாய்,' என்றும் கூறுவதால், இவரும் பத்தியை '**வணக்குடைத் தவநெறி**' என்கிறார். பத்தியானது [4] காதலியோடு கலக்கும் கலவி போன்று இன்பமயமாக இருக்குமாதலின் '**அம் பகவன் தவநெறி**' என்கிறார். பத்தி, ஞானத்தின் விசேடமாகையாலே, '**தவம்**' என்ற சொல்லால் அதனைச் சொல்லுகிறார்; [5] 'அவனுக்குத் தவமானது ஞானத்தின் மயமாய் இருக்கிறது,' என்கிற நியாயத்தாலேயாதல், இவனுடைய அன்பினையே தவமாக நினைக்கின்ற பகவானுடைய அபிப்பிராயத் தாலேயாதல். புறம் நெறி களை கட்டு - புறநெறியாகிற களையைக் கடிந்து. அதாவது, பறித்து. [6] 'பத்தி விஷயமான போது வேறு பலன்களிற்செல்லும் விலக்கடிகளைத் தள்ளி' என்றும், 'பிரபத்தி விஷயமான போது மற்றைச் சாதனங்களைத் தள்ளி' என்றும் பொருள் கொள்க. உணக்குமின் பசை அற-[7] 'ருசி வாசனைகளும் நீங்குகின்றன,'

---

1. *பகவன் - பகம் என்ற சொல்லாற்குறிக்கப்படும் ஞானம், சத்தி, செல்வம், வீரியம், புகழ், தேஜசு என்னும் ஆறு குணங்களையுமுடையவன். உருத்திரபகவான், வசிஷ்டபகவான், வியாசபகவான் முதலிய பெயர் வழக்குகளைக் காண்க. ஔபசாரிகம் - உபசாரம்.*

2. *ஸ்ரீகீதை*, 9 : 14.

3. *ஸ்ரீகீதை*, 9 : 34.

4. *பகவான் என்பதற்கு ஆறு குணங்களையுடையவன் என்பது பொருளாதலின், குணங்களையுடையான் பக்கல் செலுத்தும் பத்தி இன்பமயமாக இருக்குமாதலின், 'காதலியோடு கலக்கும் கலவி போன்று இன்பமயமாக இருக்கும்' என்று அருளிச்செய்கிறார்.*

5. *முண்டகோபநிடதம்*. 1. 1 : 10.

6. *இங்கு இவ்வாறு அருளிச்செய்வதால், மேல் 'தவநெறி' என்பதற்குப் பத்தி மார்க்கம், பிரபத்தி மார்க்கம் என்னும் இரண்டனையும் பொருளாகக் கொள்க.*

7. *ஸ்ரீகீதை*, 2 : 59.

என்கிறபடியே, புறம்பான விஷயங்களில் உள்ள ஆசையை ருசி வாசனையோடே விடுங்கோள். 'இவை எல்லாம் விடுவது எப்படி?' என்னில், அவனுடை உணர்வு கொண்டு உணர்ந்து-அவன் விஷயமான ஞானத்தைக்கொண்டு உணர்ந்து; அதாவது, 'பத்தி மார்க்கத்தைக் கொண்டு உணர்ந்து' என்றபடி. இனி, அவன் அருளிச்செய்த ஞானத்தைக்கொண்டு உணர்ந்து; அதாவது, 'அவன் அருளிச்செய்த [1] சரமஶ்லோகத்தின் படியைப் பற்றி நின்று' என்று கோடலுமாம். (5)

## 28

*உணர்ந்துஉணர்ந்து இழிந்துஅகன்று உயர்ந்துஉரு*
*வியந்தஇந் நிலைமை*
*உணர்ந்துஉணர்ந்து உணரிலும் இறைநிலை*
*உணர்வுஅரிது உயிர்காள்!*
*உணர்ந்துஉணர்ந்து உரைத்துஉரைத்து அரிஅயன்*
*அரன்என்னும் இவரை*
*உணர்ந்துஉணர்ந்து உரைத்துஉரைத்து இறைஞ்சுமின்*
*மனப்பட்டது ஒன்றே.*

பொ - ரை: *உயிர்காள், உணர்வையே இயற்கையாகவுடையதாய். அணு அளவினதாய்ப் பத்துத்திசைகளிலும் ஞானத்தால் நிறைந்ததாய், உடலைக்காட்டிலும் வேறுபட்டிருக்கின்ற இவ்வுயிரின் தன்மையினைக் கேள்விகளால் உணர்ந்து, பின் மனனத்தால் உணர்ந்து, பின் யோகத்தால் உணர்ந்தாலும், இறைவனுடைய தன்மையினை உணர்தல் அரிதாம். 'ஆயின், நாங்கள் அறியும்வகை யாங்ஙனம்?' எனின், அரி அயன் அரன் என்னும் இவரைப் பற்றிக் கூறுகின்ற நூல்களைப் பன்முறையும் ஆராய, அவற்றைப் பன்முறையும் உரைக்க, உங்கள் மனத்தில் ஒன்று தோன்றும்; தோன்றிய அப்பொருளையே மனத்தால் பன்முறை நினைந்தும், நாவால் பன்முறை கூறியும் வணங்குங்கோள்.*

வி - கு: *'உறற்பால, தீண்டா விடுதல் அரிது,'* என்புழிப் போன்று, *'அரிது'* என்பது ஈண்டு இன்மை குறித்து நின்றது. மூன்றும் அடியிலுள்ள *'செய்து'* என்னும் வாய்பாட்டு எச்சங்களைச் *'செய'* என் வாய்பாட்டு எச்சங்களாகத் திரிக்க. அவற்றைப் *'பட்டது'*

---

1. 'எல்லாத் தர்மங்களையும் விட்டு என்னையே உபாயமாகப் பற்று; நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கிறேன்; துக்கப் படாதே,' என்பது சரமச்சுலோகத்தின் பொருள்.

என்னும் வினையுடன் முடிக்க. படும் என்பதனைத் தெளிவு பற்றி பட்டது' என இறந்த காலத்தாற்கூறினர்.

'வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்
இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை'

என்பது விதி. (தொல். சொல். 245)

ஈடு: ஆறும் பாட்டு. 'அவதாரங்களை வணங்குங்கோள் என்று கூறுகின்றீர்; [1] '''பிரமனுக்கும் சிவனுக்கும் மத்தியில் முதல் அவதாரம்' என்கிறபடியே, பிரமனுக்கும் சிவனுக்கும் நடுவே தோன்றி நிற்கும் நிலையாய் இருந்தது முதல் அவதாரம்; அவர்கள் மூவரும் ஒத்த காரியத்தில் அதிகரித்து நின்றார்கள்; இப்படி நிற்கையாலே, மூவரும் முதல்வரோ? மூவரில் ஒருவன் முதல்வனோ? மூவர்க்கும் அப்பால் ஒருவன் முதல்வனோ?' என்று எங்களால் பகுத்து அறியப் போகாமையால் பற்றுவதற்கு அருமையாக இருக்கின்றது; ஆதலால், நாங்கள் பற்றுவதற்குப் பற்றக் கூடிய பொருளை நிரூபித்துத் தரலாகாதோ?' என்ன, [2] 'காண்கிற சரீரமே ஆத்துமா என்னும் நிலை தவிர்ந்து, சரீரத்திற்கு வேறுபட்ட ஆன்மா ஒன்று உண்டு என்று அறிதல்தானே அரிது? வருந்தி அதனை அறிந்தானேயாகிலும், பிரமன் சிவன் முதலியோரைச் சரீரமாகக்கொண்டு தான் ஆத்துமாவாய் நிற்கிற சர்வேஸ்வரன் நிலையினை அறிதல் முடியாது; ஆன பின்னர், இவ்வழியே இழிந்து பற்றப்பாருங்கள்,' என்று, பற்றப்படும் பொருள் இன்னது என்றும், பற்றுமுறை இன்னது என்றும் அருளிச் செய்கிறார்.

உணர்ந்து உணர்ந்து-உணர்வு என்னாமல் 'உணர்ந்து' என்கையாலே, 'அறிவு மாத்திரமே உள்ளது; அறிகின்றவன் இலன்' என்கிற யோகாசாரனை மறுக்கிறார். 'உணர்ந்து உணர்ந்து' என்ற

---

1. ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவம், 2 : 8.

2. பாசுரத்தில் 'உணர்ந்துணர்ந்துணரிலும்' என்பது முடிய உள்ளனவற்றை நோக்கிக் 'காண்கிற சரீரமே' என்று தொடங்கும் வாக்கியத்தை அருளிச்செய்கிறார். 'இறைநிலை உணர்வரிது' என்றதனை நோக்கி, 'பிரமன் சிவன்' என்று தொடங்கும் வாக்கியம் எழுகின்றது. 'அரி அயன் அரன் என்னுமிவரை உணர்ந்துணர்ந்து உரைத்துரைத்து' என்பதனை நோக்கி, 'இவ்வழியே இழிந்து பற்றப் பாருங்கள்' என்கிறார். 'மனப்பட்டதொன்றே' என்றதனை நோக்கி, 'பற்றப்படும் பொருள் இன்னது என்றும்' என்கிறார். 'உணர்ந்துணர்ந்து உரைத்துரைத்து' என்றதனை நோக்கிப் 'பற்றும் முறை இன்னது என்றும்' என்கிறார்.

அடுக்குத்தொடரால், 'அறிவு இடையிலே வந்தது; மோக்ஷ நிலையிலும் கல்லைப் போன்று இருக்கும்' என்று கூறும் நையாயிக வைசேடியர்களை மறுத்து, ஞானம் நித்தியம் என்பதனைத் தெரிவிக்கிறார். மேலும், அறியுந்தன்மை நித்தியமாகையாலே, [1] 'ஞான கிரியா கர்த்ருத்வம்-ஞாத்ருத்வம்; அதுதான் அநித்தியம்,' என்கிற கிரியா வாதியையும் மறுக்கிறார். இழிந்து அகன்று உயர்ந்து-இவ்வுயிரானது அணு அளவினதாய் இருந்தும், இறைவன் சொரூபத்தாலே எங்கும் நிறைந்திருப்பது போன்று, ஞானத்தாலே எங்கும் நிறைந்திருக்கும் என்கிறார். இனி, 'எனக்குக் காலில் நோவு; எனக்குத் தலையில் நோவு,' [2] என்று கூறும்படி இருக்கிற நிலையினைக் கூறுகிறார் எனலுமாம். உருவு இயந்த இந்நிலைமை—உருவிற்காட்டில் வேறு பட்டிருக்கிற இந்நிலைமை. உண்டு - இந்த ஆத்துமாவினுடைய சொரூபம். இனி, [3] உரு வியந்த என்று பிரிக்கப்படும்போது, வியத்தல் - கடத்தலாய், உருவிற்காட்டில் கடந்திருக்கும் - வேறுபட்டிருக்கும் என்னுதல். ஆக, இரண்டாலும் அறிவு இல்லாத சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டிருக்கிற ஆத்துமாவினுடைய சொரூபம் என்பது பொருளாம். உணர்ந்து உணர்ந்து உணரிலும்-அவ்வாத்துமாவின் சொரூபத்தைக் கேவலம் கேள்வி மனனம் முதலியவைகளால் அறிந்தாலும். இனி, இதற்கு 'ஆத்துமாவினுடைய சொரூபத்தை யோக சாத்திரத்திற்கூறிய முறையிலே இழிந்து வருந்தி ஒருபடி

---

1. *'ஞான கிரியா கர்த்ருத்வம்-ஞாத்ருத்வம்; அதுதான் அநித்யம்' என்றது, அறியுந்தன்மை என்பது, ஞான ரூபமான கிரியைக்குக் கருத்தாவாக இருத்தல்; கிரியைக்கு உற்பத்தி விநாசங்கள் உண்டு; ஆகையாலே, கிரியைக்குப் பற்றுக்கோடான அறியுந்தன்மையும் நிலை அற்றது என்றபடி. இவ்வாறு கூறுகின்றவன் கிரியா வாதி. 'அறியுந்தன்மை நித்தியம்' என்பது நம்முடைய கொள்கை ஆகையாலே, அநித்தியம் என்று கூறுகிற அவனை மறுக்கிறார் என்றபடி.*

2. *'என்று கூறும்படி இருக்கிற நிலையினைக் கூறுகிறார் எனலுமாம்' என்றது, உயிர் அணு அளவினதாய் இருந்து ஞானத்தால் சரீர முழுவதும் நிறைந்திருக்கிறபடியைத் தெரிவிக்கிறார் என்பதாம். உயிர் அவ்வாறு நிறைந்திராவிடின், 'கால் நோவுகிறது, தலை நோவுகிறது,' என்று கூற முடியாது என்றபடியாம், இது, 'இழிந்து அகன்று' என்ற தொடருக்குக் கூறப்படும் இரண்டாவது பொருள்.*

3. *இங்குச் 'சரர் அறிவருநிலை', 'அளவியன்ற' (8, 44.) என்ற பாசுரங்களில், 'அறிவியந்து, அளவியன்ற' என்ற தொடர்களுக்கு எழுதப் பட்டுள்ள விசேடவுரையை நினைவு கூர்க.*

அறிந்தான் ஆனாலும்' என்று பொருள் கோடலுமாம். இறை நிலை உணர்வு அரிது – சர்வேஶ்வரன் பிரமனுக்கும் சிவனுக்கும் அந்தராத்துமாவாய் அவர்களைச் சரீரமாகக் கொண்டு தான் சரீரியாய் நிற்கிற நிலை அறியப் போகாது.

உயிர்காள் - 'அறிவற்ற பிறவிகளில் பிறந்ததனால் இழந்து விட்டீர்களோ? அறிவுடைய பிறவியில் பிறந்தும் அதன் காரியம் பிறக்கவில்லையே? அறிவு கேடராய் நீங்கள் இருக்கும் நிலைதான் என்னே!' என்பார், '**உயிர்காள்**' என விளிக்கிறார். 'எங்கள் அறிவும் அறியாமையும் நிற்க; நாங்கள் பற்றுவதற்கு, அறிந்த நீர் அருளிச் செய்யீர்,' என்ன, அருளிச்செய்கிறார் மேல்: அரி அயன் அரன் என்னும் இவரை உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து - தீயாரை அழித்து நல்லாரைக் காக்கின்றவனாதலின், அரி என்னும் பெயரையுடையனாய் இருக்கிறான் ஒருவன்; ஒருவன் திருநாபிக்கமலத்தில் நேராகத் தோன்றியவனாதலின், அயன் என்னும் பெயரையுடையனாய் இருக்கிறான்; ஒருவன் அழித்தல் ஒன்றுக்கே உரியவனாய் அரன் என்னும் பெயரையுடையவனாய் இருக்கிறான்; ஒரு உணர்த்தி, சொரூபத்தைப் பற்றியது; ஒரு உணர்த்தி, சுபாவத்தைப் பற்றியது; இவர்களைப் பற்றிக் கூறுகிற பிரமாணங்களை ஆராய்ந்து பார்த்து, அவைதம்மைப் பலகாலும் சொல்லிப் பார்த்து, மனப்பட்டது ஒன்று- [1] 'இலிங்கத்துக்கே உயர்வு தோற்றும்படியாய் இருப்பது ஒரு பிரபந்தம் செய்து தரவேண்டும்' என்பாரைப் போன்று, ஓர் உருவத்திலே ஒரு சார்பாகச் சாயாது, இவர்கள் சொரூபங்களையும் சுபாவங்களையும் பல காலும் ஆராய்ந்து பார்த்தால், [2] கோல்விழுக்காட்டால் **ஒருவனே உயர்ந்தவன்** என்பது உங்கள் மனத்திலே தோன்றும். உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து இறைஞ்சுமின்-தோன்றுகிற அவனைக் கேள்வி மனனம் முதலியவைகளால் உணர்ந்து, அவன் திருப்பெயர்களைப் பலகாலும் உச்சரித்து வணங்குங்கோள் என்பதாம். (6)

---

1. *மற்றைப் புராணங்கள், ஒரு தெய்வத்தின் சிறப்புப் பெயரினைக் கூறி, 'இத்தெய்வத்தின் பெருமைகளை எங்கட்குக் கூறவேண்டும்' என்று முனிவர்கள் கேட்க, அதற்கு ஏற்பக் கூறுகிறார் என்று தொடங்கப் பெறுவனவாம். 'பரம்பொருள் யாவன்? அவனுடைய பெருமைகளை எங்கட்குக் கூறவேண்டும்,' என்று முனிவர்கள் கேட்க, அதற்கு விடை கூறுவதாகத் தொடங்கப் பெறுகின்றன, ஸ்ரீ விஷ்ணு புராணம், ஸ்ரீ ராமாயணம் முதலிய நூல்கள். இவற்றைத் திருவுள்ளத்தே கொண்டு தான் 'இலிங்கத்துக்கே உயர்வு' என்ற வாக்கியத்தை அருளிச்செய்கிறார்.*

2. *கோல் விழுக்காடு - தானாகவே விழுதல்.*

29

ஒன்றுஎனப் பலஎன அறிவரு
வடிவினுள் நின்ற
நன்றுஎழில் நாரணன் நான்முகன்
அரன்என்னும் இவரை
ஒன்றநும் மனத்துவைத்து உள்ளிநும்
இருபசை அறுத்து
நன்றுஎன நலஞ்செய்வது அவனிடை
நம்முடை நாளே.

**பொ - ரை:** ஒன்று என்றும் பல என்றும் அறிதற்கு அரிய வடிவிற்குள் நிற்கின்ற நன்றான எழிலையுடைய நாராயணனும், நான்முகனும், அரனும் என்னும் இவர்களை உங்கள் மனத்தில் சமனாக வைத்து ஆராய்ந்து, பிரமன் சிவன் இவர்களிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற பற்றினை நீக்கி, உங்கள் ஆயுள் உள்ள காலத்திலேயே அவ்விறைவனிடத்தில் நன்றான பத்தியைச் செய்யுங்கள்.

**வி - கு:** 'வைத்து உள்ளி அறுத்துச் செய்வது' என எச்சங்களை முடிக்க. 'கொள்ளப்படாது மறப்பது அறிவிலென் கூற்றுகளே.' (திருக்கோ. 87.) என்புழிப் போன்று, 'செய்வது' வியங்கோள் வினைமுற்று. பிறர்க்கு உபதேசம் செய்யும் இடமாதலின், 'நம்முடை நாளே' என்பதில் 'நம்' என்பது முன்னிலைக்கண் வந்தது. 'தாவா விருப்பொடு கன்று யாத்துழிச் செல்லும், ஆபோற் படர்தக நாம்' (கலித். மரு. 16.) 'நாமரை யாமத்து என்னோ வந்து வைகி நயந்ததுவே' (திருக்கோ. 164,) 'செங்கயல்போல் கருநெடுங்கண் தேமருதா மரை உறையும், நங்கையிவர் எனநெருநல் நடந்தவரோ நாம்என்ன' (கம். சூர்ப். 119.) என்ற இடங்களில் நாம் என்பது முன்னிலைக்கண் வந்துள்ளமை காண்க.

**ஈடு:** ஏழாம் பாட்டு. 'அப்படியே செய்கிறோம்,' என்று ஆறியிருந்தார்கள்; 'ஐயோ! நீங்கள் உங்களுடைய ஆயுளின் நிலையும், இழக்கிற பொருளின் நன்மையும் அறியாமையால் அன்றோ ஆறியிருக்கின்றீர்கள்? நீங்கள் முடிந்து போவதற்கு முன்னே உறுதி செய்யும்வழிகளால் பொருள் இன்னது என்று உறுதி செய்து, உறுதி செய்யப்பட்டவன் பக்கலிலே விரைவில் பத்தியைப் பண்ணப் பாருங்கோள்,' என்று, மேல் பாசுரத்திற்குச் சேஷமாய் இருக்கிறது இப் பாசுரம். 'நீங்கள் குறைந்த ஆயுளையுடையவர்கள் ஆகையாலே, விரைவில் செய்துகொடு நின்று, 'செய்கிறோம்' என்ன வேண்டும்;

'செய்கிறோம்' என்று செய்ய ஒண்ணாது என்கிற இதுவே இப் பாசுரத்தில் விசேடம்.

ஒன்று என பல என அறிவு அருவடிவினுள் நின்ற – 'மூவர் முதல்வராய் மூவர்க்கும் மூன்று சரீரம் உண்டாய்த் தோற்றுகை யாலே, மூன்று சரீரத்திலும் ஒருவனே நிலைபெற்றுநிற்கிறானோ, அன்றி, மூன்றிலும் மூன்று சேதனர் நிலைபெற்று நிற்கின்றார்களோ ?' என்று அறிய அரிய வடிவுகளையுடையராய் நிற்கிற. இனி, 'ஓர் ஆத்துமாவின் நிலைபேறோ, பல ஆத்துமாக்களின் நிலைபேறோ ?' என்று அறிய அரிதான தன்மையினையுடையராய் நின்ற என்னுதல். நன்று எழில் நாரணன் – 'நன்று' என்பதனால், அவனுக்கே உரிய [1]நாராயண அநுவாகாதிகளை நினைக்கிறார். 'எழில்' என்பதனால், [2]'நீங்கின குற்றங்களையுடையவனும் மோக்ஷத்தையுடையவனும் ஒளி உருவனும் ஒருவனேயானவனும் ஆன நாராயணன்' என்கிற புகரை நினைக்கிறார். இனி, 'நன்று எழில்' என்பதற்கு, வடிவின் அழகினைப் பார்த்தவாறே, [3]'கண்ட ஆற்றால் தனதே உலகு என நின்றான்' என்கிறபடியே, 'அனைத்து உலகும் அனைத்து உயிரும் அளிக்கும் பரமன் இவனே,' என்னலாம்படி இருக்கும் நன்றான அழகு என்று கூறலுமாம். திருப்பெயரைப் பார்த்தவாறே தன்னை ஒழிந்தன அனைத்தையும் பிரகாரமாய்க்கொண்டு தான் பிரகாரியாய் இருப்பான் ஒருவன் என்று தோன்ற இருப்பவனாதலின், 'நாரணன்' என்கிறார். நான்முகன் – ஒருவன், படைக்குங் காலம் வந்தால் நான்கு வேதங் களையும் சொல்லுதற்கு நாலுமுகத்தையுடையனாய்ப் படைக்குந் தொழில் ஒன்றில் மட்டும் சேர்ந்தவன் என்று தோன்ற நிற்பவன். அரன் – ஒருவன் அழிக்குந்தொழில் ஒன்றில் மட்டும் சேர்ந்தவன் என்று தோன்ற நிற்பவன்.

என்னும் இவரை - இப்படி வேறுபட்ட தன்மையராய் இருக்கும் இவர்களை. [4]'படைத்தல் காத்தல் அழித்தல்களைச் செய்கிற பிரமன் விஷ்ணு சிவன் என்னும் பெயர்களை, பகவான் என்ற பெயரையுடைய ஜனார்த்தனன் ஒருவனே அடைகிறான்,' என்கிறபடியே, பெயர்களில் ஒக்க எடுக்கலாய் விஷ்ணு சப்தத்தோடு பரியாயமான ஜனார்த்தன

1. *நாராயண அநுவாகம் - உபநிடதத்தின் கூறு. 'நன்று' என்பது, உபநிடதத்திற்கு ஆகுபெயர்.*

2. *சுபால உபநிடதம்.*

3. *திருவாய்.* 4. 5 : 10.

4. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 1. 2 : 23.

சப்தத்தை இட்டுத் தலைக்கட்டுகையாலே, தானே முதல்வன் என்று தோன்றும்படி இருப்பவன். இப்படி வேறுபட்ட தன்மையராய் இருக்கிற இவர்களை ; ஒன்றநும் மனத்து வைத்து – அவனை ஒழிந்த இருவரிலே ஒருவனுக்கு உயர்வு வேண்டும் என்றுதல், உறுதிப் படுத்துவதற்கு முன் இவனுக்கு உயர்வு வேண்டும் என்றுதல் பாராதே ஒரு படிப்பட உங்கள் மனத்திலே வைத்து. உள்ளி – சுருதி நியாயங்களால் ஆராய்ந்து. அவர்கள் சொரூப சுபாவங்களை இப்படி ஆராய்ந்தவாறே ஒருபொருள் பிரதானமாய் ஏனைய இரண்டும் உயர்வு இல்லாதனவாய்த் தோன்றும். தோன்றினவாறே, நும் இருபசை அறுத்து - அவ்விரு பொருள்களிலும் நீங்கள் செய்யும் நசையைத் தவிர்ந்து. அவ்விரு பொருள்களுக்கும் இயற்கையாக வருவது ஓர் உயர்வு இல்லை; நீங்கள் ஏறிடுகின்ற இவையே என்பார், '**நும் இரு பசை**' என்கிறூர். நன்று என நலம் செய்வது அவனிடை - இப்படி உறுதி செய்யப்பட்டவன் பக்கலிலே 'இவன் நமக்குக் கைப்புகுந் தான்,' என்று உங்களுக்கு ஏறத்தேற்றம் பிறக்கும்படி வேறு பலனைக் கருதாத பத்தியைப் பண்ணப் பாருங்கள். 'காலக் கிரமத்திலே செய்கிறோம்' என்று ஆறி இருந்தார்கள் ; நம்முடை நாளே – கெடுகின்றவர்களே! நம்முடைய வாழ்நாளின் நிலையை அறிவீர்கள் அன்றோ ! விரைவில் அடைவதற்குப் பாருங்கள். 'நம்முடை நாளே' என்றதனுல் 'வாழ்நாளின் நிலையினை அறிந்தபடி என்?' என்னில், முன்னர், [1]'மின்னின் நிலைஇல, மன்உயிர் ஆக்கைகள்' என்றுர் அன்றே? [2]'சூரியன் தோன்றுங் காலம் வந்தவாறே பொருள் தேடுங் காலம் வந்தது என்று உகப்பர்; அவன் மறைந்தவுடனே தத்தம் மனைவி மக்களோடு இன்பம் நுகருங்காலம் வந்தது என்று உகப்பர்; சாலில் எடுத்த நீர் போன்று தங்கள் ஆயுள் குறைகிறது என்று அறியாதிருக்கின்றுர்கள்,' என்று ஸ்ரீ ராமாயணமும் கூறும். இனி, [3]'ஒருவன் இரண்டு கதவுகளையும் அடைத்துக்கொண்டு கிடந்து உறங்கும் போது, நெருப்புப் பற்றி எரியாநின்ருல், 'அவிக்கிறோம்' என்று ஆறி இருக்கலாமோ?' என்பார், '**நம்முடை நாளே**' என்கிறுர் எனலுமாம். (7)

---

1. *திருவாய்.* 1. 2 : 2.

2. *ஸ்ரீராமா. அயோத்.* 105 : 24.

3. *'நம்முடை நாளே' என்பதற்கு இரண்டு வகையில் விசேடம் அருளிச்செய்கிறுர். முதல் வகை, வாழ்நாளின் நிலை இன்மையைக் குறித்தது ; இரண்டாம் வகை, கேட்டின் மிகுதியைக் குறித்தது.*

30

நாளும்நின்று அடும்நம பழமைஅம்
　　கொடுவினை யுடனே
மாளும்ஓர் குறைவில்லை மனனகம்
　　மலம்அறக் கழுவி
நாளும்நம் திருவுடை அடிகள்தம்
　　நலங்கழல் வணங்கி
மாளும்ஓர் இடத்திலும் வணக்கொடு
　　மாள்வது வலமே.

**பொ - ரை :** ('பற்றப்படும் இறைவன் இவனே, மற்றையவரோ !' என்று) மனத்திலிருக்கும் ஐயமாகிய குற்றம் அறும்படி நீக்கித்தூய்மை செய்து, நம்முடைய திருமகள் கேள்வனுடைய நற்றாளை நாள்தோறும் வணங்க, எக்காலத்தும் நிலைபெற்று வருத்தும் நம்முடைய பழமையான மிகக்கொடிய வினைகள் உடனே அழியும்; அதற்குமேல் ஒரு குறைவும் இன்று; உயிர் உடலை விட்டு நீங்கும் இறுதிக்காலத்தும் வணக்கத்தோடு உயிரை விடுதல் சிறப்பினையுடையதாம்.

**வி - கு :** 'அடும் வினை' என்வும், 'அறக்கழுவி வணங்க மாளும்' எனவும் முடிக்க. 'நம' என்பதற்கு, மேல் பாசுரத்தில் 'நம்முடை நாளே' என்பதில் 'நம்' என்பதற்கு உரைத்தாங்கு உரைக்க. 'நம் திருவுடை அடிகள்' என்பதில் 'நம்' தனித்தன்மைப்பன்மை. 'நலங்கழல்' என்ற இடத்து 'வாலறிவன், நற்றாள் தொழாஅ ரெனின்,' என்ற குறள் அடியை ஒப்பிடுக. 'வணங்கி' என்பது 'செய' என் எச்சத்திரிபு. மாள்வது - தொழிற்பெயர்.

**ஈடு:** எட்டாம் பாட்டு. 'உடலை விட்டு உயிர் நீங்குவதற்கு ஒரு நாள் முன்னராயினும் இறைவனைப் பற்றும்படி கூறுகின்றீர் ; நீண்ட காலமாக நாங்கள் பண்ணி வைத்த பாவங்கள் விலக்காவோ ? இனி, அவனைப் பற்றுவதற்குக் காலந்தான் உண்டோ ?' என்ன, 'நீங்கள் பற்றுவதற்கு ஒருப்படவே பாவங்கள் அடங்கலும் அழிந்து விடும் ; திருமகள் கேள்வனைப் பற்றுவது ஆகையாலே காலங் கழிந்தது என்று இருக்கவும் வேண்டா ; நீங்கள், [1]'தண்டு காலா ஊன்றி ஊன்றித் தள்ளி நட'க்கும்போது அக்காலோடே சாயவும் அமையும்,' என்கிறார்.

---

1. 'தண்டு காலா ஊன்றி ஊன்றித் தள்ளி நடவாமுன்' என்பது, பெரிய திருமொழி. 1. 3 : 5.

நாளும் நின்று அடும்-நாள்தோறும் இடைவிடாமல் நின்று வருத்துகின்ற ; பரமாணுவைச் சேர்ந்த [1] பாரிமாண்டல்யம் முதலிய வைகள் நித்தியமாக இருக்கவும் நித்திய பரதந்திரமாய் இருக்குமாறு போன்றும், இறைவனுடைய சொரூபத்தைப் போன்று அவன் குணங்களும் நித்தியமாக இருக்கவும் அக்குணங்கள் நித்திய பரதந்திரமாக இருக்குமாறு போன்றும், நித்தியமாயும் நித்திய பரதந்திரமாகவும் இருக்கிற உயிர்கட்கு, [2] உடல்களின் சேர்க்கையும் நித்தியமாகவே வருகின்ற காரணத்தால், அவ்வுடலின் சேர்க்கையால் வருகின்ற வினைகளை '**நாளும் நின்று அடும்**' என்கிறார். நம.[3] 'ஒருவர் செய்த வினைகளுள், அன்பர்கள் புண்ணியங்களையும், பகைவர்கள் பாபங்களையும் அடைகிறார்கள்' என்கிறபடியே. [4] அசல் பிளந்தேறிட வந்தன அல்ல ; நெஞ்சு உணர நாமே பண்ணி வைத்தவை. அதாவது, [5] 'எனக்கு முன்பு அனுபவிக்காததாய், மேல் அனுபவிக்கக் கூடியதாய் இருப்பது ஒன்று உண்டோ? எல்லாம் பொறுக்க வல்லேன் ; தன் காய் பொறுத கொம்பு உண்டோ ?' என்று கூறலாம்படி நாமே பண்ணி வைத்தவை என்பதாம். பழமை-அவை தாம் இன்று நேற்று அன்றிப் பழையவாய் இருக்கை. அம்-கொடுமையை நினைந்து சொல்லுகிறார். கொடுவினை-அனுபவித்தே தீர்க்க வேண்டியவைகள். உடனே மாளும்-பற்றின காலத்திலே அழியும். '[6] தீயிற்போடப்பட்ட நாணற்பஞ்சானது எப்படி அழிகின்றதோ,

---

1. *பாரிமாண்டல்யம்-பரமாணுக்களின் அளவு. நித்திய பரதந்திரம்-என்றும் உள்ளதாயும் பிறர்க்கு உரிமைப்பட்டதாயும் இருத்தல்.*

2. *காலம் அறியப்படாமல் வருகின்றமையை நோக்கி 'உடல்களின் சேர்க்கையும் நித்தியம்' என்கிறார்.*

3. *சாட்யாயன சாகை.*

4. *'அசல் பிளந்தேறிட வந்தன அல்ல' என்றது, ஒருவர் செய்த நல்வினை தீவினைகள் அவரை விட்டு நீங்கி வேறு ஒருவரைச் சார்வன அல்ல என்பதாம்.*

5. *ஸ்தோத்திர ரத்தினம், 25.*

6. *சாந்தோக்ய உபநிடதம், 5. 25. இங்கு, 'தாயைக் குடல் விளக்கஞ் செய்த தாமோதரனைத், தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது, வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப், போய பிழையும் புகுதருவான் நின்றனவும், தீயினில் தூசாகும்,' என்ற திருப்பாவை ஒப்பு நோக்கல் தகும்.*

அப்படியே அவனுடைய எல்லாப் பாபங்களும் நாசத்தை அடைகின்றன; ஆச்சரியம்,' என்றும், [1] பாபத்தின் உருவமான கர்மங்களின் கூட்டம், மேருமலை மந்தரமலை இவற்றின் அளவாக இருந்தாலும், கேசவனாகிய மருத்துவனைக் கிட்டின அளவில், கெட்ட நோய்கள் போன்று நாசத்தை அடைகின்றன,' என்றும் வருகின்ற பிரமாணங்களை அறிக.

ஓர் குறைவு இல்லை - 'மேல் ஒரு குறையும் வாராது. இனி, விரும்பியவை அனைத்தும் எய்தும்,' எனலும் ஆம். [2] 'அருச்சுனா, இவ்வர்த்தத்தில் நம்மை நம்பிச் சூளுறவு செய்வாய்; நம்மைப் பற்றினவர்களுக்குக் கேடு வாராதுகாண்; பகவானை அடைவதற்கும் வினை கிடக்கைக்கும் 'தீயால் நனைப்பது' போன்று, என்ன சேர்த்தி உண்டு? அது பொருத்தம் அற்றது,' என்பது பகவான் திருவாக்கு. [3] 'தீய ஒழுக்கமுடைமை, உண்ணத் தகாதனவற்றை உண்டல், நன்றி செய்தவனுக்குத் தீமை செய்தல், வேதநெறியினை இல்லை என்றல் ஆகிய இவற்றைப் பல காலம் செய்து போந்தவனான ஒருவன் 'இவன் அனுகூலன் ஆவது எப்போதோ!' என்று காலம் பார்த்திருக்கும் இறைவனைச் சென்று பற்றுவானாயின், பற்றிய அவனை, பின்னர்க் குற்றம் அற்றவனாக நினைத்தல் வேண்டும்; 'எதற்காக?' என்னில், இவனைக் குறைய நினைக்கையாவது, பகவானுடைய பெருமையைக் குறைய நினைக்கையேயாம்,' என்றும், [4] 'வாசுதேவனுடைய அடியார்களுக்கு ஒரு பொழுதும் கேடுகள் இல்லை,' என்றும் கூறும் பாரதத்தையும் இங்கு உணர்க.

ஆதலால், இனி, நீங்கள் செய்யவேண்டுவது ஒன்று உண்டு; மனன் அகம் மலம் அறக் கழுவி-சர்வேஶ்வரன், பிரமன் சிவன் இவர்களுக்கு நடுவில் கலந்து நின்றால், 'இவனோ கடவான், மற்றையவர்களோ!' என்று ஐயப்படுமது தவிர்ந்து, '**சர்வேஶ்வரனே கடவான்**' என்கிற மனத்தின் தூய்மை உண்டாக வேண்டும். 'ஆயின், ஏனைய தேவர்களை இறையவர்களாக எண்ணுதல் கூடாதோ?' எனின், [5] 'திருவடிதன் நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்' என்கையாலே, அவ்வாறு எண்ணல் பழுதாம். நாளும்-பருவம்

1. *விஷ்ணு தர்மம்.* 78.
2. *ஸ்ரீ கீதை,* 9 : 81.
3. *பாரதம் சாந்தி பர்வம்.*
4. *பாரதம் அநுசாசன பர்வம்.*
5. *'திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம், மறந்தும் புறந்தொழா மாந்தர் - இறைஞ்சியும், சாதுவராய்ப் போதுமின்கள் என்றான் நமனுந்தன், தூதுவரைக் கூவிச் செவிக்கு,' என்பது, நான்முகன் திருவந்தாதி.* 68.

அல்லாத காலங்களில் கடல் நீண்டலாகாது என்னுமாறு போன்று ஒரு நியதியில்லை. நம் திருவுடை அடிகள்தம்-திருமகள் கேள்வனுன சுவாமியினுடைய இதனுல், நித்தியயோகத்தை அருளிச்செய்கிருர். 'சர்வேஸ்வரனை அடைந்தாளுகில், அவன் பலனைக் கொடுக்கிருன்; பிராட்டியைத் துணையாகப் பற்ற வேண்டுகிறது என்?' என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க, 'அவனை அடையும் இடத்தில், இவன் குற்றம் பாராதே தன் நிழலிலே இவனை வைத்து, அவன் பக்கல் முகம் பெற்றவாறே குற்றத்தைப் பொறுப்பிக்கும் அவள் முன்னுகப் பற்றல் வேண்டும்' என்று கூறி, 'நாளும் நம் திருவுடை அடிகள் தம் நலம் கழல் வணங்கி' என்னுநின்றது கண்டீரே' என்று அருளிச்செய்தார் பட்டர்.

நலம் கழல்-அவள் முன்னுகப் பற்றினுருடைய குற்றங்களைப் பாராதே கைக்கொள்ளுந் திருவடிகள். வணங்கி-வணங்க. 'வணங்க, நாளும் நின்று அடும் நம் பழமை அம் கொடு வினை உடனே மாளும்; ஓர் குறைவு இல்லை,' என முடிக்க. 'ஆயினும், இறைவனைப் பற்றுதற்குக் காலம் தப்பி நின்றதே?' என்ன, மாளும் ஓரிடத்திலும்-முடிகின்ற ஒரு கணத்திலும். வணக்கொடு மாள்வது வலம்-[1] 'இரண்டு துண்டுகளாக வெட்டப்படக் கடவேன்; அப்பொழுதும் வணங்கேன்,' என்னுது கிடக்கிற [2] சீரைப்பாயைக் கவ்விக் கவிழ்ந்து கிடந்து சாவவும் அமையும். இறைவனையும் பற்றி வேறு சிலர் பக்கலிலும் தலை சாய்க்க இராமல், முடிகிற சமயத்திலே அடையவே பின்னைப் பெற்றுரோடே தலைக்கட்டும் ஆதலின், '**மாளும் ஓரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலம்**' என்கிருர். இதனுல், பிறந்தது முதலாக அடைந்தாலும் பலன் இல்லை, இறைவனுக்கு வேறுபட்ட தேவர்கள் பக்கல்; இறைவன் விஷயத்தில் அடைவதிலே தொடங்கி உடனே முடிந்தாலும் பலன் தப்பாது என்கிருர். வலம்-சிறப்பு; வரம் என்ற சொல்லின் திரிபு. இனி, வலம்-வலிமையும் ஆம். (8)

31

*வலத்தனன் திரிபுரம் எரித்தவன்*
*இடம்பெறத் துந்தித்*
*தலத்துஎழு திசைமுகன் படைத்தநல்*
*உலகமுந் தானும்*

---

1. *ஸ்ரீ ராமா. யுத். 36 : 11.*

2. *சீரைப்பாய் - சீரையாகிய பாயையும்.*

புலப்படப் பின்னும்தன் உலகத்தில்
அகத்தனன் தானே
சொலப்புகில் இவைபின்னும் வயிற்றுள
இவைஅவன் துயக்கே.

**பொ - ரை:** எழுச்சியினையுடைய பிரமன், படைத்த நல்லுலகங் களோடு தானும் உந்தித்தாமரையில் இடம்பெற்றிருக்க, முப்புரங்களை யும் எரித்த சிவபெருமான் வலப்பாகத்தில் இருக்கின்றான்: (தன்னைக் காண வேண்டும் என்று விரும்பும் அடியார்கள்) காணுமாறு தன் னுடைய உலகத்தில் தானாகவே வந்து அவதரிக்கின்றான்; இவனுடைய குணங்களைக் கூறப்புகுந்தால், மேலும் உள்ளே உள்ளேயாம்; (சொல்லி முடியா என்றபடி.) இவை எல்லாம் அவ்விறைவன் உங்களை மயங்கச் செய்யும்படி.

**வி - கு:** 'நீனிற உருவின் நெடியோன் கொப்பூழ், நான்முக ஒருவற் பயந்த பல்இதழ்த், தாமரை' (பெரும்பாண்.) 'பெரியவனை மாயவனைப் பேருலகம் எல்லாம், விரிகமல உந்தியுடை விண்ணவனை' (சிலப். ஆய்ச்.) என்பனவற்றை முதல் இரண்டு அடிகளோடும், 'பிற வாப் பிறப்பிலை, பிறப்பித்தோ ரிலையே' (பரிபா. 3 : 72.) என்பதனைத் 'தானே' என்பதனோடும் ஒப்பு நோக்கல் தகும்.

**ஈடு:** ஒன்பதாம் பாட்டு. மேல், ஆறு ஏழாம் பாசுரங்களால் பிரமன் சிவன் இவர்களுடைய தலைமை இன்மையினையும், இறைவ னுடைய தலைமையினையும் அருளிச்செய்தார்; இப்பாசுரத்தில் அவர்கள் இருவரும் இறைவனைப் பற்றிச் சொரூபத்தை அடைந்தவர் களாய் இருக்கிறபடியை அருளிச் செய்கிறார். 'ஆயின், பிரமன் முதலியோர்கட்கும் காரணனாய் அவர்களுக்கு இரட்சகனான சர்வேஸ்வரன், அவர்களும் காலிட மாட்டாத பூமியிலே வந்து அவதரிக் கைக்குக் காரணம் யாது?' எனின், [1] 'பற்றுகின்றவர்கட்கு விரைவு உண்டாவதற்காகவும், ருசியைத் தோற்றுவிப்பவன் ஆகைக்காகவும்

1. ஸ்ரீ கீதை. 4 : 8. 'பற்றுகின்றவர்கட்கு விரைவு உண்டாவதற் காக' என்றது, 'நல்லார்கள் தம்மை நலம் புரிந்து காத்தல்' என்றதன் பொருள். 'ருசியைத் தோற்றுவிப்பவன் ஆகைக்காக' என்றது, 'எல்லாம் முந்தை அறம் நாட்டம் உய்த்தற்கு' என்றதன் பொருள். 'ஆயின், 'பொல் லாரைப் போக்கல்' என்றது என்னை?' எனின், 'பொல்லாரைப் பொன்று நெறி போக்கல் அதனுடைய பலமாய் வருமதுவே' என்ற வாக்கியத்தால் அது அமுக்கியம் என்கிறார். அது, சங்கற்பமாத்திரத்தாலே செய்யலாம் ஆகையாலே, பிரதானம் அன்று என்றபடி. விரைவும் ருசியும் நேரிற் கண்டால் அல்லது உண்டாகா; ஆதலால், அவற்றிற்கே பிராதாந்யம்.

வந்து பிறப்பன்,' என்று அவன்தான் அருளிச்செய்து வைத்ததுவே காரணம். 'ஆயின், பொல்லாரைப் பொன்றுநெறி போக்கல் யாது பற்றி?' எனின், 'பொல்லாரைப் பொன்று நெறி போக்கல் அதனுடைய பலமாய் வருமதுவே,' என்று அவன் தானே அருளிச் செய்தான்; அதனை ஓர்க.

வலத்தனன் திரிபுரம் எரித்தவன் - ஆறு ஏழாம் பாசுரங்களில் கூறிய பொருளைத் தொடர்ந்து பேசுகிறார். முப்புரங்களையும் எரித்த தால் அபிமானங்கொண்டுள்ள சிவன், திருமேனியில் வலப்பாகத்தைப் பெற்றுச் சொரூபத்தை அடைந்தவனாய் இருப்பன். [1]'எனது வலப்பாகத்தில் தங்கியிருக்கின்ற உருத்திரர் பதினொருவரையும் பார்ப்பாய்,' என்பது மோட்ச தர்மம். எழு திசைமுகன் படைத்த நல் உலகமும் தானும் இடம்பெறத் துந்தித்தலத்து - எழுச்சியையுடைய திசைமுகன் படைத்த உலகமும் தானும் இடத்தாற் குறைவு இன்றித் திருநாபிக் கமலத்தில் இருப்பான். 'உந்தி' என்பதும், 'துந்தி' என்பதும் திருநாபிக்குப் பெயர். [2]'கமலமாகிய ஆசனத்தில் தங்கியிருக்கின்ற தலைவனாகிய பிரமனையும் பார்க்கிறேன்,' என்பது ஸ்ரீ கீதையில் அருச்சுனன் கூற்று. இங்குக் கூறிய இவை, இவர் களுடைய எல்லா வகையான காத்தலுக்கும் உபலக்ஷணம். எழுச்சி யாவது, பதினான்கு உலகங்கட்கும் தலைவனாய் இருக்கிற செல்வம். இறைவன் விரும்பி வந்து அவதரிக்கையாலே '**நல்லுலகம்**' என் கிறார். [3]'ஏறாளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும், கூறாளுந் தனிஉடம்பன்' என்கிறபடியே, பிராட்டிக்கும் பிரமன் முதலியோர்க்கும் சமமாகத் திருமேனியில் இடங்கொடுத்து வைத் தால், அந்தப்புரத்தில் உள்ளவர்கள் என்று அவர்கள் இருப்பிடத்தில் இவர்களுக்கு நலிய ஒண்ணாதபடி கூறாகக் கொடுத்து வைத்தானா தலின், '**இடம் பெற**' என்கிறார். 'ஆயின், இவர்கட்குத் திரு மேனியைக் கூறாகக் கொடுப்பான் என்?' என்னில், இறைவனுடைய திருமேனி எல்லார்க்கும் பற்றுக்கோடாய் இருத்தலால் என்க. பால் குடிக்குங்குழந்தைகள். தாயின் மார்பினை அகலில் நாக்கு வரளுமாறு போன்று, பிரமனும் திருநாபிக்கமலத்தை விடின் தன் சத்தை இல்லை யாம்படி இருப்பான் ஆதலின், '**உந்தித் தலத்தனன்**' என்கிறார்.

1. *மோக்ஷ தர்மம்*, 36, 11.
2. *ஸ்ரீகீதை*, 11 : 15.
3. *திருவாய்மொழி*, 4. 8 : 1.

'ஆயின், இவர்கள் எஞ்ஞான்றும் திருமேனியில் இருப்பார்களோ?' என்னில், ஆபத்துகளிலே திருமேனியில் இடங்கொடுப்பான் இறைவன்; அது மகாகுணம் ஆகையாலே, ஆழ்வார்கள் எப்பொழுதும் அருளிச்செய்துகொண்டு செல்வார்கள். மற்றும், [1] சாமந்தர்கட்குப் புறம்பே நாடுகள் மிகுதியாய் இருந்தாலும், மாளிகைக்குள்ளே செம்பாலே நாழி அரிசியைத் தங்களுக்கு மேன்மையாக நினைத்திருப்பார்கள் அன்றோ? அங்ஙனமே, இவர்களும் திருமேனியில் பண்ணி வைக்கும் [2]பிராப்தி விடார்கள். 'எங்ஙனம்?' எனின், வேற்று அரசர்களால கலகங்கள் உண்டான காலங்களில் [3] அடைய வளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து, கலகம் நீங்கியவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று' என்று, பின்னும் தம் இடத்தைச் சொல்லி வைக்குமாறு போன்று என்க.

பின்னும் - பிரமன் முதலியோர்க்குத் திருமேனியிலே இடங்கொடுத்ததற்கு மேலே. தன் உலகத்தில் அகத்தனன் - தான் உண்டாக்கின பிரமனாலே உண்டாக்கப்பட்ட உலகங்களிலே வந்து அவதரிப்பான். 'ஆயின், பிரமனும் சிவனும் தன் திருமேனியில் ஒவ்வோர் இடத்தைப் பற்றிப் பெற்ற சொரூபத்தினையுடையவர்கள் ஆகும்படி இருக்கிறவன், அவர்களுங்கூடக் காலிட அருவருக்கிற சம்சாரத்திலே வந்து அவதரிக்கைக்குக் காரணம் என்?' என்னில், புலப்பட - [4]''காணவாராய் என்று என்று கண்ணும் வாயுந் துவர்ந்து' இருப்பவர்களுக்குத் தன் நினைவினாலே அவர்கள் விரும்பியவற்றைக் கொடுத்தல் கூடாது ஆதலின், அவர்கள் கண் முதலிய கரணங்களுக்குப் புலப்பட வேண்டும் என்று. 'ஏன்? தன் நினைவினாலே அவர்கள் விரும்பியவற்றைக் கொடுப்பின் என் செய்யும்?' என்னில், [5]'மழுங்காத ஞானமே படையாக மலர்உலகில், தொழும்பாயார்க்கு அளித்தால்உன் சுடர்ச்சோதி மறையும்,' என்பார்கள். 'இப்படிப்

---

1. *சாமந்தர்கள் - சிற்றரசர்கள். அமைச்சரும் ஆவர். 'மாளிகைக்குள்ளே' என்றது, அரசனுடைய மாளிகையினைக் குறித்தது. செம்பாலே நாழி அரிசியை - செம்பு நாழியரிசியை. நாழி - கால்படி.*

2. *பிராப்தி - அடைதல்.*

3. *அடையவளைந்தான் - திருவரங்கத்திலுள்ளது ஒரு வீதியின் பெயர். பற்று - இடம்.*

4. *திருவாய்.* 8. 5 : 2.

5. *திருவாய்.* 3. 1 ; 9.

பிறப்பது கர்மத்தாலயோ?' எனின், தானே -[1] 'என்னுடைய இச்சையே' என்கிறபடியே, ஒரு கர்மத்தால் அன்று; இச்சையேயாம்.

சொலப்புகில் இவை பின்னும் வயிற்று உள-அவன் இப்படி அவதரித்துச் செய்யும் காத்தல்களில் ஒரு சிறிது சொல்லில் சொல்லும் அத்தனை; எல்லாம் சொல்லித் தலைக்கட்டப் போகாது: சொலப்புகில் உள்ளே உள்ளேயாம் இத்தனை. இனி, இதற்குத் தன்னாலே படைக்கப் பட்டவர்களாக உள்ளவர்கட்கு 'என் மகன்' என்று விரும்பும் படியாக வந்து பிறந்து 'உனக்கு அரசைத் தந்தேன்; அதுதன்னை வாங்கினேன்; போ,' என்றும், கையிலே கோலைக்கொடுத்துப் 'பசுக்களின் பின்னே போ,' என்றும் சொல்லலாம்படி எளியனாய் இருக்கிற தான், இவர்களுக்கு ஓர் ஆபத்து வந்தால் இவர்களை வயிற்றிலே வைத்து நோக்கும்படியை அருளிச்செய்கிறார் என்று கூறலும் ஆம். 'நன்று; இப்படி இதுவே பொருள் என்பது நீர் அருளிச்செய்யும் போது தெரிகின்றது; அல்லாத போது தெரியாதபடி இராநின்றதே!' என்ன, இவை அவன் துயக்கே-[2] 'என்னுடைய மாயையினை ஒருவராலும் தாண்ட முடியாது,' என்கிறபடியே, அவன் தானே மாயையாகிற விலங்கை இட்ட புண்ணியம் இல்லாதவர்கள் தன்பக்கல் அணுகாதபடி செய்து, அவர்கள் அகலப்புக்கால் அவன்தான் அனுமதி கொடுத்து, உதாசீனனாய் இருக்கையாலே தெரியாது ஒழிகிறது என்கிறார். துயக்கு-ஐயம். (9)

32

*துயக்கறு மதியில்நன் ஞானத்துள் அமரரைத் துயக்கும்*
*மயக்குடை மாயைகள் வானிலும் பெரியன வல்லன்*
*புயற்கரு நிறத்தனன் பெருநிலங் கடந்தநல் அடிப்போது*
*அயர்ப்பிலன் அலற்றுவன் தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே.*

பொ-ரை: ஐயம் திரிபுகளாகிய மயக்கம் அற்ற மனத்திலே தோன்றுகிற சிறந்த ஞானத்தையுடைய மேலான தேவர்களையும் மயங்கச் செய்கின்ற குணங்களையும் செயல்களையுமுடைய அவதாரங்கள், ஆகாயத்தைக்காட்டிலும் பெரியனவாக எடுக்க வல்லவனாய், மேகம் போன்ற கரிய நிறத்தையுடையவனாய் இருக்கின்ற இறைவ

---

1. ஸ்ரீ கீதை.

2. ஸ்ரீ கீதை. 7 : 14.

னுடைய பெரிய இந்நிலவுலகத்தை எல்லாம் அளந்த சிறந்த திருவடித் தாமரைகளை மனத்தால் மறப்பு இல்லாதவனாகி, நாவால் அலற்றுகின்ற வனாகி, உடலால் தழுவுகின்றவனாகிப் பொருந்தி வணங்குவேன்.

**வி - கு :** மயக்கு - குணங்களும் செயல்களும்; அவை, மயங்கச் செய்வன ஆதலின், 'மயக்கு' எனப்பட்டன. மாயை - அவதாரம். 'அயர்ப்பிலன்' முதலிய மூன்றும் முற்றெச்சங்கள். 'அமர்ந்து வணங்குவன்,' என மாற்றுக. 'திருமால்நின், செங்கமல இரண்டு அடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே' (சிலப். ஆய்ச்சி. தாழி.) எனப்படும் அடிகளாதலின், 'நல்லடிப்போது' என்கிறார்.

**ஈடு :** பத்தாம் பாட்டு. 'இறைவன் [1]விமுகர் பக்கல் பண்ணுமவை நிற்க; அவன் காட்டின வழியே காணப்புக்க நாம், மனம் வாக்குக் காயங்களால் நம் விடாய் கெடத் திருவுலகு அளந்த திருவடிகளை அனுபவிப்போம்,' என்று பாரிக்கிறார்.

துயக்கு அறு மதியில்-ஐயம் திரிபுகள் இல்லாத மதியையுடையவர் ஆகையாலே, நன்ஞானத்து உள் அமரர்-மேலான அமரர். 'உள்' என்பது 'மனம், இடம், மேல்' என்னும் பல பொருளைக் காட்டும் ஒரு சொல்; அது இங்கு, மேல் என்னும் பொருளில் வந்தது. நன்றான ஞானத்தையுடையரான அமரரையுங்கூட என்றபடி, துயக்கும் மயக்குடை மாயைகள்-அறிவு கெடும்படி தெரியாமையைப் பண்ணுகின்ற குணங்களோடும் செயல்களோடும் கூடின அவதாரங்கள். வானிலும் பெரியன வல்லன்-ஆகாயத்தை அளவிட்டு அறியிலும் அளவிட்டு அறியப் போகாது. துயக்கு-மனந்திரிவு. அமரர்-இந்திரன் முதலிய தேவர்கள். 'இராஜச தாமத குணங்கள் மிக்கிருக்கும் தேவர்களை **'நன்ஞானத்துள் அமரர்'** என்னலாமோ?' எனின், இரஜோகுண தமோகுணங்கள் மிக்கிருந்தாலும், சத்துவகுணம் தலை எடுத்தாலும் அப்படியே அதற்குரிய குணங்கள் மிக்கிருக்குமே அவர்கள்தங்களுக்கு; அதை நோக்கி அருளிச்செய்கிறார். சத்துவ குணம் தலை எடுத்தபோது, 'நம் காரியம் நம்மாற் செய்யப்போகாது; அவனே நம் காரியத்திற்குக் கடவன்,' என்று இருப்பர்; அடுத்த கணத்திலேயே எதிரிடா நிற்பர். 'அப்படி எதிர்த்த இடம் உண்டோ?' எனின், தங்கள் இருப்பிடமும் இழந்து, பெண்களும் பிடி உண்டு, எளிமைப்பட்ட அளவிலே அதனைப் போக்கித் தரவேண்டும் என்று இரக்க, பின்னை இவனும் சென்று, நரகனைக்கொன்று, சிறை கிடந்த பெண்களையும் மீட்டுக் கொடுத்துக் காத்த காலத்தில்

1. விமுகர் - முகம் மாறி நிற்பவர்கள்.

புழைக்கடைக்கே நின்றது ஒரு பூண்டைப் பிடுங்கிக்கொண்டுவர, இந்திரன் வச்சிரப்படையைக்கொண்டு தொடர்ந்தான் அன்றோ! அச்சரிதம் இங்கு நினைவு கூர்க. இனி, ஒருகால விசேடத்தில், ஞானத்தால் மேற்பட்ட பெரிய திருவடியும், [1] 'தேவரீரையும் நாய்ச்சிமாரையும் தாங்கினேன் நான் அன்றோ?' என்பது போன்று, [2] சிவிகையார் சொல்லும் வார்த்தையைச் சொன்னான் ஆதலின், 'நன்ஞானத்துள் அமரர்' என்றதற்கு **நித்தியசூரிகளை** என்று பொருள்கோடலும் அமையும். ஆதலால், அவனுடைய ஆச்சரியங்கள் நம்மால் அளவிட்டு அறியப்போமோ? அது நிற்க. அவன் திருவருளால் காட்டின வடிவழகை அனுபவிப்போம் நாம் என்கிறார்: புயல் கருநிறத்தனன்-மழை பெய்யும் நீனிற முகிலைப் போன்ற திருமேனியையுடையவன். பெருநிலம் கடந்த நல் அடிப்போது அயர்ப்பிலன் அலற்றுவன் தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே - இதற்கு 'மனம் வாக்குக் காயங்களால் அனுபவிக்கப் பெற்றேன்,' என்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பார். 'இவற்றால் அனுபவிக்கப் பார்க்கிறார்' என்று [3] **நஞ்சீயர்** அருளிச்செய்வர். பரப்பையுடைத்தான பூமியை அளக்கிற இடத்தில் வசிஷ்டர் என்றும், சண்டாளர் என்றும் சொல்லுகிற வேற்றுமை அற எல்லார் தலைகளிலும் ஒக்கத் திருவடிகளை வைத்தான். இவர்கள் நன்மை தீமை

---

1. *"ஆயிர வணர்தலை யரவுவாய்க் கொண்ட*
*சேவல் ஊர்தியுஞ் செங்கண் மாஅல்*
*ஓஎனக் கிளக்குங் கால முதல்வனை"* (*பரி.* 3 : 59-61.)

*என்ற பரிபாடற்பகுதியும், 'ஆயிரமாகிய கிளர்ந்த தலையையுடைய அரவை வாய்க்கட் கொண்ட நின் ஊர்தியாகிய சேவலும் நொந்து, 'செங்கண்மாலே! ஓ!' என அலறும் காலமுதல்வன் நீ. என்றது, 'நீ இந்திரற்கு இளையோனாய் அசுரரை வெல்கின்ற காலத்து, 'இவ்வெற்றி எல்லாம் இவனின்றைய அல்ல; இவனைத் தாங்கிச் செல்கின்ற என்னின்றைய,' என்று கருடன் தன்னை வியந்திருப்ப, அக்கருத்தை ஒழித்தற்பொருட்டு, 'நீ என் மெய்ம்முழுதும் தாங்க வேண்டா; ஒரு கையில் சிறு விரற்றுணை தாங்கினை எனின் நீ கூறியவாறே யாகும்,' என்று அத்துணை அவன்மேல் வைப்ப, அவ்விரற்கு ஆற்றாது பாதலத்து வீழ்ந்து நெடுங்காலம் கிடந்து துதித்தான்; அத்தன்மைத்தாய வலி தாழக் கொண்ட மெய்களினுமுடையை என்றவாறு,' என்ற பரிமேலழகருரையும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.*

2 *சிவிகையார் - சுமந்து செல்கின்றவர்; சிவிகை - பல்லக்கு.*

3. *நஞ்சீயர் - பட்டருடைய மாணாக்கர்; திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி வியாக்கியானம் அருளிச்செய்தவர்.*

பாராமல் தன்னுடைய தூய்மையே இவர்களுக்கும் ஆகும்படி செய்தான் என்றபடி. [1] ‘படிக்கு அளவாக நிமிர்த்த நின்பாத பங்கயமே தலைக்கு அணியாய்’ என்று ஆசைப்பட வேண்டும்படி இருத்தலின், ‘**நல்லடிப்போது**’ என்கிறார். [2] ‘திரிவிக்கிரமனே, உத்தம ரேகைகள் பொருந்திய தாமரை போன்ற உனது இரண்டு திருவடிகள் என் தலையினை அலங்காரம் செய்வது எப்போதோ?’ என்றார் **ஸ்ரீ ஆளவந்தாரும்**. செவ்விப்பூச்சூட ஆசைப்படுகின்றவர்களைப் போன்று ஆசைப்படுகிறார்கள் என்க. அயர்ப்பிலன் - மறவேன். அலற்றுவன் - முறை இன்றிப் பேசுவேன். தழுவுவன் - [3] ‘மிகவும் கெட்டியாக ஆலிங்கனம் செய்துகொண்டார்’ என்பது போன்று, தழுவுவேன். வணங்குவன் - செருக்கு அற்றுத் திருவடிகளிலே விழுவேன். அமர்ந்து - வேறு ஒரு பயனையும் கருதாது இப்படிச் செய்வேன். (10)

33

*அமரர்கள் தொழுதுஎழ அலைகடல்*
*கடைந்தவன் தன்னை*
*அமர்பொழில் வளங்குரு கூர்ச்சட*
*கோபன்குற் றேவல்கள்*
*அமர்சுவை ஆயிரத்து அவற்றினுள்*
*இவைபத்தும் வல்லார்*
*அமரரோடு உயர்விற்சென்று அறுவர்தம்*
*பிறவிஅஞ் சிறையே.*

**பொ-ரை:** இந்திரன் முதலான தேவர்கள் வணங்கி எழ, அலைகளையுடைய கடலைக் கடைந்தவனை, பொருந்திய சோலைகள் சூழ்ந்த ஞான வளப்பத்தையுடைய திருக்குருகூரில் அவதரித்த நம்மாழ்வார், அண்மையிலிருந்து செய்த சொல் தொண்டாகிய, பொருந்திய சுவையை யுடைய ஆயிரம் திருப்பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களைப் பொருள் நுணுக்கங்களோடு கற்று வல்லவர்கள், நித்தியசூரிகளைப் போன்று உயர்விலே சென்று தமது பிறவியாகிற கொடிய சிறை நீங்கப் பெறுவர்.

---

1. *திருவாய்.* 9, 2: 2.
2. *ஸ்தோத்திர ரத்தினம்,* 31.
3. *ஸ்ரீ விஷ்ணுபுரா.* 5. 18: 2.

வி - கு: 'தொழுது எழக் கடைந்தவன்' என முடிக்க. 'அம்சிறை' என்பதில் 'அம்' பிறவியின் கொடுமையினை விளக்க வந்தது; 'நல்ல பாம்பு' என்பது போன்று. 'அம் கெடுவினை' என்றார் முன்னும்.

ஈடு: முடிவில், இத்திருவாய்மொழியைக் கற்க வல்லவர்கள், முற்பட நித்தியசூரிகள் வரிசையைப் பெற்று, பின்னை சம்சாரமாகிற [1] அறவைச் சிறை வெட்டிவிடப் பெறுவர்கள் என்கிறார்.

அமரர்கள் தொழுது எழ அலைகடல் கடைந்தவன் தன்னை- கவிழ்ந்து 'உப்புச்சாறு கிளருவது எப்போதோ?' என்று கிடக்கிற தேவஜாதியானது எழுத்து வாங்கும்படியாக ஆயிற்று, தோளுந் தோள் மாலையுமாய் ஒரு கடல் ஒரு கடலை நின்று கடையுமாறு போன்று கடைந்தபடி. குணங்களுக்குத் தோற்றுத் [2]'தொழுது எழு' என்கிற தம் பாசுரமேயாய்விட்டது அழகுக்குத் தோற்ற அவர்களுக்கும் ஆதலின், '**அமரர்கள் தொழுது எழ**' என்கிறார். அமர் பொழில் - சேர்ந்த பொழில். வளங்குருகூர் - வளப்பத்தை யுடைத்தான திருநகரி. சடகோபன் குற்றேவல்கள் - இத்திரு நகரிக்குத் தலைவரான ஆழ்வார் சொற்களைக்கொண்டு அடிமை செய்தபடியாயிற்று இவைதாம். 'ஆயின், சொல் அடிமை மாத்திரம் போதியதாமோ?' எனின், எல்லாம் நிறைந்த இறைவன் விஷயத்தில் சொற்களைக் கொண்டு செய்யும் அடிமைக்கு மேற்படச் செய்யலாவன இல்லையே! [3]'அப்பரமபதத்தில் இருக்கிற நித்தியசூரிகளும் துதி செய்துகொண்டே யிருக்கின்றார்கள்' என்கிறபடியே, நித்தியசூரி களுக்கும் தொழில் இதுவே அன்றோ?

அமர் சுவை ஆயிரம் - சுவை நிறைந்தனவாய் இருக்கிற ஆயிரம். '[4]இதனால், சொற்களைக் கொண்டு செய்யும் அடிமை 'முறை' என்று காரிய புத்தியாகச் செய்யவேண்டா என்றபடி. அவற்றினுள் இவை பத்தும் - [5]'விண்ணவர் அமுது உண அமுதில் வரும் பெண்ணமுது உண்ட' என்னுமாறு போன்று, அவ்வா யிரத்துள் இத்திருவாய்மொழி சுவை நிறைந்ததாயிருக்கும். வல்லார் அமரரோடு உயர்விற்சென்று தம் பிறவி அம் சிறை அறுவர் -

---

1. *அறவைச் சிறை - தயநீயமான சிறை; துக்கமே உருவமான சிறை என்றுமாம் என்பர் அரும்பத உரைகாரர்.*

2. *திருவாய்.* 1. 1: 1.

3. *இருக்கு வேதம்.*

4. *இதனால் - சுவை நிறைந்தனவாய் இருப்பதால்.*

5. *பெரிய திருமொழி,* 6. 1: 2.

இவற்றைக் கற்க வல்லவர்கள் நித்தியசூரிகளோடு ஒத்த உயர்வினை யுடையராய்த் தங்களுடைய பிறவியாகிற விலங்கு அறப்பெறுவர்கள். ‘ஆயின், ‘பிறவி அற்று அமரரோடு உயர்விற்சென்று’ என்ன வேண்டாவோ?’ எனின், ‘இப்பத்தைக் கற்ற போதே இவனை நித்தியசூரிகளில் ஒருவனாக நினைப்பன்; பின்னைச் சரீரத்தின் பிரிவு பிறந்தால் போய்ப் புகுவான் இத்தனை. அதாவது, சிறையிலே இராஜகுமாரன் தலையிலே முடியை வைத்துப் பின்னைச் சிறையை வெட்டிவிடுவாரைப் போன்று, நித்தியசூரிகள் வரிசையைக் கொடுத்துப் பின்னைச் சம்சாரமாகிற அஞ்சிறையைக் கழிப்பான் இறைவன் என்றபடி. ‘ஏன்? சரீரத்தின் பிரிவை உடனே உண்டாக்க ஒண்ணாதோ?’ எனின், ஒண்ணாது; அரசன் ஒருவனுக்கு நாடு கொடுத்தால், முறைப்படி சென்று அந்நாட்டை அவன் அடைவது போன்று, இவனும் விதிப்படியே செல்ல வேண்டும். இனி, ‘அமரரோடு உயர்விற்சென்று அறுவர் தம் பிறவி அம் சிறையே,’ என்பதற்கு, [2] ஆதிவாஹிகரோடே விரஜையிலே சென்று [3] சூக்கும சரீரமும் நீங்கப்பெறுவர்,’ என்று கூறலுமாம். [4] ‘அருச்சுனா, என்னுடைய அவதாரத்தையும் செயல்களையும் தெய்வத்தன்மை பொருந்தியவை என்று எவன் ஒருவன் உண்மையாக அறிகிறானோ,

---

1. இவ்விடத்தில்,

“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையுந், தெய்வத்துள் வைக்கப்படும்,” என்ற திருக்குறளையும், ‘இல்லறத்தோடு கூடி வாழும் இயல்பினால் வையத்தின்கண் வாழ்பவன் வையத்தானே எனினும் வானின் கண் உறையுந் தேவருள் ஒருவனாக வைத்து நன்கு மதிக்கப்படும். பின் தேவனாய் அவ்வறப்பயன் நுகர்தல் ஒருதலையாதலின், ‘தெய்வத்துள் வைக்கப்படும்’ என்றார்,’ என்ற அதனுரையையும் ஒப்பு நோக்குக.

2. ஆதிவாஹி—சுமந்து செல்பவர். விரஜை—பரமபதத்துக்கு இப்பாலுள்ள ஓர் ஆறு.

3. சூக்கும சரீரம் - பத்து வகை இந்திரிய உணர்வோடும் ஐவகை வாயுக்களோடும் காமவினை விளைவுகளோடும் கூடிய மனம். பத்து வகை இந்திரியவுணர்வு-மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஞானேந்திரியம் ஐந்து, வாக்கு பாணி பாதம் பாயுர் உபத்தம் என்னும் கர்மேந்திரியம் ஐந்து ஆகிய இப்பத்தின் அறிவுகள். ஐவகை வாயுக்கள் - பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்பன. காமவினை விளைவுகள்-ஆசையும் கரும பலன்களும்.

4. ஸ்ரீ கீதை. 4, 9.

அவன் இச்சரீரத்தை விட்டால் பின் வேறு சரீரத்தை அடையான்; என்னையே அடைகிறான்,' என்று இறைவன் ஸ்ரீகீதையிற்கூறியது போன்று, இவரும் அவதாரத்தின் எளிமையினைக் கூறுகின்ற இப்பத்துப் பாசுரங்களையும் கற்றவர்கள் '**அறுவர் தம் பிறவி அஞ்சிறையே**' என்கிறார்.

முதற்பாட்டில், 'எளியவன்' என்றார்; இரண்டாம் பாட்டில், சொன்ன அவ்வெளிமையை வகைப்படுத்தி அருளிச்செய்தார்; மூன்றும் பாட்டில், 'அவனுடைய அவதார ரஹஸ்யம் ஒருவர்க்கும் அறிய நிலம் அன்று,' என்றார்; நான்காம் பாட்டில், 'அத்தன்மைகள் தாம் அடியார்க்கு அறியலாம்; அல்லாதார்க்கு அறியப்போகா,' என்றார்; ஐந்தாம் பாட்டில், 'இப்படிப்பட்டவனை அவன் அருளிச் செய்த பத்தி மார்க்கத்தாலே அடைமின்,' என்றார்; ஆறும் பாட்டில், அடையத்தக்க பொருள் இன்னது' என்றும், அடையும் விதம் இன்னது என்றும் அருளிச்செய்தார்; ஏழாம் பாட்டில், 'நீங்கள் சில் வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினீர் ஆகையாலே, விளம்பிக்க [1] ஒண்ணாது; கடுக அடைமின்,' என்றார்; எட்டாம் பாட்டில், 'பற்றிய அளவில் விரோதிகள் அடங்கலும் நசிக்கும்,' என்றார்; ஒன்பதாம் பாட்டில், பிரமன் சிவன் முதலியோர்கட்கும் காரண மானவன் வந்து அவதரிக்கைக்குக் காரணம் அருளிச்செய்தார்; பத்தாம் பாட்டில், இப்படி எளியவனானவனை முக்கரணங்களாலும் அனுபவிக்கப் பாரித்தார்; முடிவில், இதனைக் கற்றார்க்குப் பலன் அருளிச்செய்தார். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*'பத்துடையோர்க்கு என்றும் பரன்எளிய னும்பிறப்பால்;*
*முத்திதரும் மாநிலத்தீர்! மூண்டுஅவன்பால்–பத்திசெயும்'*
*என்றுரைத்த மாறன்றன் இன்சொல்லாற் போம்நெடுகச்*
*சென்றபிறப் பாம்அஞ் சிறை.*

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. *விளம்பிக்க - தாமதிக்க*

# நான்காந்திருவாய்மொழி - 'அஞ்சிறைய'

## முன்னுரை

ஈடு : மேல் மூன்று திருவாய்மொழிகளால், இறைவனுடைய முதன்மையினையும் அவனை வழிபடுந்தன்மையினையும் அவனுடைய எளிமையினையும் அனுபவித்து மகிழ்ந்தவராய்த்தாமான தன்மையில் நின்று பேசினர்; இததிருவாய்மொழி, தாமான தன்மை அழிந்து, ஒரு பிராட்டி நிலையை அடைந்தவராய், மகிழ்ச்சியால் கூறும் பாசுரம் போய், [1] ஆற்ருமையாலே கூறும் பாசுரமாய்ச் செல்லுகிறது. [2] 'இது மற்ருெரு காரகம்' என்னுமாறு போன்று, மேல் போந்த நெறி வேறு; இங்குச் செல்லும் நெறி வேறு. முற்காலத்தில் சிற்றறிஞன் ஒருவன், 'பற்று அற்ற பரமஞானிகளும் போற்றத் தக்கனவாக இருக்கின்றன; உண்மைப் பொருளை உள்ளவாறு கூறுகின்றன,' என்று இத்திருவாய்மொழி அளவும் பாடங்கேட்டு, இந்தத்திருவாய்மொழி வந்த அளவில், 'இது காமுகர் வார்த்தையாய் இருந்ததே!' என்று கைவிட்டுப் போனனும்; [3] 'இறைவன் கேட்கத் தக்கவன், நினைக்கத் தக்கவன், தியானம் செய்யத் தக்கவன், பார்க்கத் தக்கவன்' என்று விதிக்கிற பகவத் காமம் என்று அறிந்திலன், நல்வினை அற்றவன் ஆதலாலே.

மேல், [4] 'அயர்ப்பிலன் அலற்றுவன் தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே,' என்பதற்கு 'மனம் வாக்குக் காயங்களால் அனுபவிக்கப்

---

1. *ஆற்ருமை - பிரிவுத்துன்பத்தைப் பொறுத்துக்கொள்ள இயலாமை. 'ஆற்ருமையாவது, பிறிது எவ்வுணர்வும் இன்றி அவ்வாற்ருமை-தானேயாவது,' என்பர் களவியல் உரைகாரர்.*

2. *இது 'மகாபாஷ்ய வாக்கியம்' என்பர் அரும்பதவுரைகாரர். வேற்றுமைகள் வினை கொண்டு முடியின் அதனைக் 'காரகம்' என்பர். இங்கு,*

*'விளிகுறை இரண்டையும் விட்டவேற் றுமைகள்*
*வினையான் முடியின் காரகம் எனப்பெறும்.*
*குறையும் வினைகொளின் ஒரோவழிக் கூடும்.'* (சூ. 14.)

*என்ற இலக்கணக்கொத்து நினைவிற்கு வருகின்றது. இந்தவாக்கியம் மேற்கூறிய மூன்று திருப்பதிகங்கட்கு இத்திருப்பதிகம் நெறியால் வேறுபட்டது என்பதற்கு மேற்கோள். இதற்கு எடுத்துக்காட்டும் ஐதிஹ்யம் 'முற்காலத்தில் சிற்றறிஞன் ஒருவன்' என்று தொடங்கும் வாக்கியம்.*

3. *பிரஹதாரண்யம். 6. 5: 6.*

4. *திருவாய். 1. 3: 10.*

பாரிக்கிறார்,' என்று **நஞ்சீயர்** அருளிச்செய்த பொருள் அதற்கு அடுத்த இத்திருவாய்மொழிக்கு மிகப் பொருந்தும். 'அனுபவிக்கிறார்' என்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** அருளிச்செய்த பொருள், இவ்வாழ்வாருக்கு [1]'முனியே நான்முகனே' என்னும் திருவாய்மொழி முடிய உள்ளது மானச அனுபவமாகையாலே அதற்குப் பொருந்துவதாம். 'ஆயின், ஆற்றாமையாலே கூறும் பாசுரமாகச் சொல்லுவதற்குக் காரணம் யாது?' எனின், மேல், திரு உலகு அளந்தவனுடைய திருவடிகளை அனுபவிப்பதாக ஒருப்பட்டுக் கட்டிக்கொண்டார்; அது ஒரு கால விசேடத்திலேயாய், தாம் பிற்பாடராய்த் தோற்றுகையாலே, துணுக்கு என்று தாமான தன்மை அழிந்து ஒரு பிராட்டி நிலையை அடைந்தவராய், மகிழ்ச்சியினால் சொல்லும் பாசுரம் போய், ஆற்றாமையால் சொல்லும் பாசுரமாய் விட்டது.

'ஆயின், [2]'சரணம் அடைந்த பகைவன் ஆர்த்தனாயினும் சரி, திருப்தனாயினும் சரி, அவன் இரட்சிக்கத் தக்கவன்,' என்று கூறிய இறைவனை அனுபவித்த இவர்க்குப் பிரிவாலாய துன்பம் வருகைக்குக் காரணம் என்?' என்னில், 'பசி இல்லாத காலத்தில் உணவு நோயினைத் தருவதாம்,' எனப்படுதலால், நோயின் மூலத்தை அறியும் மருத்துவர்கள் 'உணவு உண்ணலாகாது,' என்று விலக்குவது போன்று, மேல் வரும் அனுபவங்களை இவர் பொறுப்பதற்காக, இப்பொழுது நுகரும் இன்பம் நீங்கும்படி நாலடி பெயர நின்றான்; பெயர நிற்கவே, இவர் கலங்கினார். 'ஆயின், இறைவன் மருத்துவனோ?' எனின், [3]'மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணன்' எனப்படுதலால் மருத்துவனேயாம். 'நன்று; ஞான தேசிகரான இவர் கலங்கலாமோ?' எனின், ஞானத்தை மட்டும் உடையவராய் இருப்பின் கலங்கார்; 'மயர்வற மதிநலம் அருளப்' பெற்றவர் ஆகையாலே கலங்குகிறார். மற்றும், அவன் தானே கொடுத்த அறிவும் பிரிவில் [4]அகிஞ்சித்கரமாம்படி அன்றோ அவனுடைய வைலக்ஷண்யம் இருப்பது? [5]'அவர் வந்து என்னை மீட்டுச்

1. *திருவாய்.* 10. 10: 1.

2. *ஸ்ரீ ராமா. யுத்.* 18 : 28. *ஆர்த்தன் - பேறு பெறுவதற்கு விரைகின்றவன். திருப்தன் - 'பெறுகின்ற காலத்தில் பெறுவோம்,' என்று இருப்பவன். ஆர்த்தன் - அமிதவாதி. திருப்தன் - மிதவாதி.*

3. *பெரியாழ்வார் திருமொழி,* 5. 3: 6.

4. *அகிஞ்சித்கரம் - பயனற்றுப்போதல்.*

5. *ஸ்ரீராமா. சுந்.* 9: 30.

செல்வராகில், செல்லும் அச்செயல் அவ்விராமனுக்குத் தக்கதாம்,' என்று கூறிய பிராட்டியே பிரிவுத்துன்பத்தைப் பொறுக்கிலளாகித் தன் சடையினைக்கொண்டு தூக்கிட்டு இறப்பதற்கு நினைந்தமையும் ஈண்டு நினைத்தல் தகும். 'ஆயின், பறவை முதலானவைகளைத் தூது விடல் பண்டைய மரபு ஆமோ?' எனின், [1] 'அன்னங்களும் நீர்க் காகங்களும் நிறைந்திருக்கின்ற கோதாவிரி நதியே, உன்னை வணங்குகிறேன்; 'சீதையை இராவணன் தேரில் ஏற்றிக்கொண்டு செல்கிருன்,' என்று நீ இராமனிடம் சென்று விரைவிற்கூறு,' என்று பிராட்டியும், [2] 'சோகத்தினை நீக்குதலையே இயல்பாகவுடைய அசோக மரமே, கலங்கி இருக்கும் எனக்குப் பிராட்டி இருக்கும் இடத்தினைத் தெரிவித்து, என்னையும் விரைவில் உன் பெயரைப் போலவே செய்,' என்று பெருமாளும் கூறுதலால், தூது விடல் பண்டைய மரபேயாம்.

'ஆயின், பிராட்டியின் நிலை உண்டாகிறபடி எங்ஙனே?' என்னில், [3] அநந்யார்ஹ சேஷத்துவம், அநந்ய சரணத்துவம், கூடி இருக்கும் போது தரிக்கை, பிரிந்திருக்கும் போது தரியாதொழிகை, அவனுக்கே இன்பத்தை அளிக்கை, அவன் காப்பாற்றுகின்றவனுகத் தாம் காப்பாற்றப்படும் பொருளாக இருக்கை ஆகிய இவ்வாறு குணங்களும் ஆழ்வார்க்கும் உள ஆதலின், பிராட்டியின் நிலை உண்டாகத் தட்டு இல்லை. 'ஆயின், பிராட்டி தானுகப் பேசுவான் என்?' என்னில், தாமரை திருவடிகளுக்குப் போலியாக இருக்க, [4] 'வையங்கொண்ட தடந்தாமரை' என்று தாமரையாகவே திருவடிகளைப் பேசுவது போன்று, இங்குப் பிராட்டியாகவே பேசப்படுகிறது; [5] முற்றுவமை இருக்கிறபடி. 'ஆயினும், இவர் ஆடவர் ஆகையாலே ஆண் தன்மை பின் நாடாதோ?' எனின், இராஜ இருடி பிரம இருடியான பின்னர் அரசருடைய தன்மை பின் நாட்டிற்றில்லை

---

1. ஸ்ரீராமா. ஆரண். 49 : 32.

2. ஸ்ரீராமா. ஆரண். 6 : 17.

3. அநந்யார்ஹ சேஷத்துவம் - வேறு ஒருவர்க்குமின்றி இறைவனுக்கே அடிமைப்பட்டிருக்குந் தன்மை. அநந்ய சரணத்துவம் - இறைவனையே பற்றுக்கோடாகப் பற்றியிருக்குந் தன்மை.

4. திருவாய். 6. 9: 9.

5. இதனைப் பிற்காலத்தார் 'உருவகம்' என்பர்.

அன்றே? எதிர்த்தலையில் [1] ஆண் தன்மையை அழித்துப் பெண்ணுடை உடுத்தும்படியன்றோ அவனுடைய புருஷோத்தமனுந்தன்மை இருப்பது? ஆதலால், நாடாது.

'நன்று; அந்தப்புரத்தில் வசிக்கும் இப்பெண்ணிற்குத் தூது விடுகைக்குப் பறவைகள் உளவோ?' எனின், கூடும் இடம் குறிஞ்சி; அதற்குப் பூதம் ஆகாயம். பிரியும் இடம் பாலை; அதற்குப் பூதம் நெருப்பு. ஊடும் இடம் மருதம்; அதற்குப் பூதம் வாயு. இரங்கும் இடம் நெய்தல்; அதற்குப் பூதம் தண்ணீர். [2] இவ்வகையில், பிரிந்தார் இரங்குவது நெய்தல் ஆகையாலே, பிராட்டி, தானும் தன் தோழிகளுமாக விளையாடும் பூஞ்சோலைக்குப் புறப்பட்டுச் செல்ல, சென்றதும் தோழிமார் பூக்கொய்கையில் கருத்தூன்றினவர்களாய்த் தனித் தனியே பிரிய, தலைவனும் தன் நேராயிரம் பிள்ளைகளும் தானுமாக வேட்டைக்குப் புறப்பட்டு வர, [3] ஏவுண்ட விலங்கு இவனை இப்பூஞ்சோலையில் தனியே கொண்டு வந்து மூட்டி மறைய, முற்பிறவியிற் செய்த நல்வினைப் பயனால் இருவருக்கும் புணர்ச்சி உண்டாக, பின்னர், கூட்டின தெய்வம் பிரிக்கப் பிரிந்து, 'இனி, இரண்டு தலையையும் அழித்தாகிலும் கிட்ட வேண்டும்,' என்னும் ஆற்றாமை பிறந்து, தன் அருகிலுள்ள தோழிகள் [4] 'எம்மின் முன் அவனுக்கு மாய்வர்' என்கிறபடியே தளர்ந்தவர்கள் ஆதலின், கால்நடை தருவார் இல்லாமையாலே, அப்பக்கத்தில் வசிக்கின்ற விலங்குகள் சிலவற்றைப் பார்த்து, 'இவை வார்த்தை சொல்ல மாட்டா,' என்னுமது அறியாதே, 'இவற்றுக்குப் [5] பக்ஷபாதம் உண்டாய் இருந்தது ஆகையாலே,

---

1. 'ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய், தாடகை என்பது அச்சழக்கி நாமமே,' என்னும் கம்பராமாயணச் செய்யுள் ஈண்டு நினைத்தல் தகும்.

2. 'போக்கெல்லாம் பாலை; புணர்தல் நறுங்குறிஞ்சி:
ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம்;—நோக்குங்கால்
இல்இருக்கை முல்லை; இரங்கல் நறுநெய்தல்
சொல்லிருக்கும் ஐம்பால் தொகை.'

என்னும் செய்யுளை ஈண்டு ஒப்பு நோக்குக.

3. ஏவுண்ட - அம்பு தைத்த. 'எய்யப்பட்ட' எனலுமாம்.

4. திருவாய். 9. 9 : 5.

5. பக்ஷபாதம்-சிலேடை : சிறகு அடித்துச்செல்லுதல்; அன்பு விழுதல். இங்கு, தன் ஆற்றாமை அறிவிக்கலாம்படி தன் பக்கத்தில் சஞ்சரிக்கிற காரணத்தாலே அன்புடையன என்று நினைக்கிறாள்.

இவை கடுகப்போய் நங்காரியம் செய்யவல்லன்,' என்று பறப்பதற்குச் சாதனமான பக்ஷபாதமே பற்றுசாக, இராவண மாயையால் வரும் ஐயமும் இல்லாமையாலே கண்ணாலே கண்டவற்றை எல்லாம் தூது விடுகிறுள். இவ்விடத்தில் 'சக்கரவர்த்தி திருமகன் திருவவதரித்த பின்பு வானர சாதி வீறு பெற்றுற்போலே காணும், ஆழ்வார்கள் திருவவதரித்துத் திரியக்குச் சாதி வீறு பெற்றபடி' என்று **பட்டர்** ரஸோக்தியாக அருளிச்செய்வர்.

'பிரிந்தவன் மீண்டு வருவான் என்று நினைந்து தூது விடுதற்குக் காரணம் யாது?' எனின், தன் மேன்மையாலே இத்தலையில் தன்மை பாராதே வந்து கலந்தான்; கலந்த பின்னர் இவளிடத்துள்ள குற்றங்களைக் கண்டான்; கண்டு பிரிந்தான்; பிரிந்த அளவிலே 'இது அன்றே இருந்தபடி' என்று அநாதரித்தான். கண்ட தலைவி, 'குற்றங்களைப் பார்த்தல் மட்டுமே அன்றிச் செய்தார் செய்த குற்றங்களைப் பொறுத்துக்கோடல் என்ற குணவிசேடம் தம் ஒருவருக்கே அடையாளமாக இருப்பது ஒன்று உண்டு; அதனை அறிவிக்க வருவான்,' என்று அந்த அபராதஸஹத்வத்தையே பற்றுசாகக் கொண்டு தூது விடுகிறுள்.

[1] அநாதிகாலம் இவ்வாழ்வாரைத் தன்னோடே சேர விடுகைக்குக் காலம் பார்த்து இருந்த இறைவன், இவர்பக்கல் வெறுப்பின்மை உண்டான சமயம் பார்த்து, இவருக்கு மயர்வற மதிநலம் அருளல் ஈண்டுப் **புணர்ச்சி** எனப்படும். அவன் கொடுத்த அந்த ஞானம் பேற்றோடே தலைக்கட்டப்பெருமை **பிரிவு** எனப்படும்.

34

*அஞ்சிறைய மடநாராய்! அளியத்தாய்! நீயும்நின்*
*அஞ்சிறைய சேவலுமாய் ஆஆஎன்று எனக்குஅருளி*
*வெஞ்சிறைப்புள் உயர்த்தாற்குஎன் விடுதூதாய்ச் சென்றக்கால்*
*வன்சிறையில் அவன்வைக்கில் வைப்புண்டால் என்செயுமோ.*

**பொ-ரை:** 'அழகிய சிறகுகளையும் மடப்பத்தையுமுடைய நாரையே, அருளோடு கூடின நீயும், அழகிய சிறகுகளையுடைய நினது

1. இங்குக் கூறியுள்ள பொருள், இத்திருவாய்மொழிக்கு உள்ளுறை.

சேவலுமாகி, 'அந்தோ!' என்று இரங்கி எனக்கு அருள் செய்து கொடிய சிறகுகளையுடைய புள்ளாகிய கருடனைக் கொடியிலே உயர்த்திய இறைவனிடத்தில் யான் விடுகின்ற தூதாகிச் சென்றால், உங்கள் முகம் பார்த்துக் கேளாமையாகிற கொடிய சிறையிலே அவன் வைத்தால், அவ்விருப்புக்கு நீங்கள் இசைந்திருப்பின் உங்களுக்கு அது என்ன குற்றத்தைச் செய்யும்?' என்கிறாள்.

**வி-கு :** 'நின் சேவலும்' என்று, பின் ஆண்பாலினைக் கூறுகின்றா ளாதலின 'நாராய்' என்னும் விளி பெண்பாலையுணர்த்தும். நாரை என்னும் ஐ ஈறு விளியில் ஆய் ஈறாய்த் திரிந்தது. 'அளியத்தாய்' என்னும் இச்சொல் 'அந்தமிலா அன்பு என்மேல் வைத்தாய் அளியத் தாய்,' எனக் கம்பராலும் ஆளப்பட்டது. 'ஆய், அருளி, சென்றக்கால்' என எச்சங்களை முடிக்க. 'சென்றக்கால் வைப்பின்' என இயையும் 'செயுமோ' என்றதில் ஓகாரம் எதிர்மறை.

இத்திருவாய்மொழி, துள்ளல் ஓசையில் வழுவின்றி நாற்சீர் நாலடி யாய் வருதலின், **தரவு கொச்சகக் கலிப்பா** எனப்படும்.

**ஈடு:** முதற்பாட்டு. தன் பக்கத்திலே தங்கி இருப்பது ஒரு நாரையைப் பார்த்து, [1] 'என்றும் சேவலைக் காரியங்கொள்ளுவார் பேடையை முன்னாகக் காரியங்கொள்ள வேண்டும்' என்று இருக்குந் தம் வாசனையாலே பேடையை முன்னிட்டுச் சேவலைப் பற்றி 'நீ என் நிலையை அறிவித்து என்னையும் அவனையும் சேர்க்க வேண்டும்,' என்கிறாள்.

அம் சிறைய-குழந்தை தாயின் உறுப்புகள் எல்லாங்கிடக்க, மார்பிலே வாய் வைக்குமாறு போன்று, பறப்பதற்குச் சாதனமான சிறகிலே முற்படக் கண் வைக்கிறாள், நீர் பாய்ந்த பயிர் போன்று, ஒன்றற்கு ஒன்று கலவியால் பிறந்த மகிழ்ச்சி வடிவிலே [2] தொடை கொள்ளலாம்படி இருக்கின்றதாதலின், '**அம் சிறை**' என்கிறாள். [3] ஆசாரியனுடைய ஞானத்தை உத்தேசித்துச் சிஷ்யன் வணங்குவது போன்று, இவளும் சிறகிலே கண் வைக்கிறாள். மடம்-ஏவிக் காரியங் கொள்ளலாம்படி பணிவு தோன்ற இருந்தது. இனி, 'புணர்ச்சியாலே

---

1. 'மடநாராய்' என்று பேடையை முன்னர் அழைப்பதற்குக் காரணம், 'என்றும் சேவலைக் காரியங்கொள்ளுவார்' என்று தொடங்கும் வாக்கியம். ஈண்டு, 'நாளும்' நம் திருவுடை அடிகள்தம் நலங்கழல் வணங்கி' (1. 3 : 8.) என்ற இடத்தில் எழுதிய வியாக்கியானத்தை நினைவு கூர்க.

2. தொடை கொள்ளலாம்படி-அறியலாம்படி.

3. இது, '**அம்சிறைய மடநாராய்**' என்பதற்கு **உள்ளுறைப்** பொருள்.

துவண்டு தூது போகைக்கு யோக்கியமாம்படி இருக்கை,' எனலுமாம். இனி, 'நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் மகளிர்க்குள்ள நான்கு குணங்களுள் ஒன்றுன மடப்பத்தையே கூறுகிருள் என்று கொண்டு, பிரிவில் துன்பத்தை அறியும் தன் இனமான பேடையைப் பார்த்துச் சொல்லுகிருள்,' என்றலும் ஒன்று. நாராய்-' அம்மே!' என்னுமாறு போன்று இவளும் 'நாராய்' என்கிருள். அளியத்தாய்-அவன் போகட்டுப் போன சமயத்திலே ஆற்ருமை அறிவிக்கலாம்படி வந்து முகங்காட்டின உன் அருளின் தன்மை இருந்தபடி என்! அளி-அருள்; [1] 'அருள் பண்ணத்தக்காய்' என்றபடி. 'இச்சமயத்தில் இவள் நாரையைப் பார்த்தது யாங்ஙனம் இருந்தது?' எனின், பிராட்டியைப் பிரிந்த ஸ்ரீராமன், [2] 'பம்பை நதிக்கரையில் அனுமானைச் சந்தித்தது போன்று இருந்தது' என்பதாம். அச்சந்திப்பு வழி பறிப்பார் கையிலே அகப்பட்டு நிற்கத் தாய் முகத்திலே விழித்தாற்போன்று இருந்தது என்றபடி.

நீயும்-[3] 'இளையபெருமாள், தன் தமையனுடைய இரண்டு திருவடிகளையும் இறுகப் பிடித்தவராய், பிராட்டியை முன்னுகக் கொண்டு பேசினுர்,' என்கிறபடியே, என்றும் சேவலைக் காரியங் கொள்ளுவார் பேடையை முன்னிட்டுப் போலே காணும் காரியங் கொள்வது. நின் அம் சிறைய சேவலுமாய்-அது இட்ட வழக்கான நீயும் நீ இட்ட வழக்கான சேவலுமாகி. **'திருமகள் கேள்வன்'** என்பது போன்று, சேவலிடத்துத் தான் அன்பு செலுத்துவதற்குக் காரணம் பேடையே என்பாள், **'நின் சேவல்'** என்கிருள். பெண்ணை அணைந்து பெற்ற அழகு வடிவிலே தோன்றுகின்றதாதலின், அதனை **'அஞ்சிறை'** என்கிருள். ஆஆ என்று-'ஐயோ ஐயோ!' என்று இரண்டும் சேர்ந்திருப்பது தன் துன்பம் நீக்குகைக்கு, என்று இருக்கிருள் ஆதலின், **'நீயும் நின் சேவலும்'** என்கிருள். எனக்கு-[4] 'முனிவர்கள் இராக்கதர்களால் துன்புறுத்தப்பட்ட தங்களுடைய

---

1. *'எனக்கு அருள் செய்தற்குத் தகுதியான தன்மையினையுடையை' என்பதாம்.*

2. *ஸ்ரீராமா. பால.* 1 : 57

*வழி பறிப்பார் கையில் அகப்படுகையாவது-பிராட்டியினுடைய கண்ணிற்கும் முகத்திற்கும் போலியான நீலம் தாமரை முதலானவற்ருல் நெஞ்சு பறியுண்கை.*

3. *ஸ்ரீராமா. அயோத்.* 31 : 12.

4. *ஸ்ரீராமா. ஆரண்.* 6 : 16.

சரீரங்களை ஸ்ரீராமபிரானுக்குக் காட்டியது '' போன்று, இவளும் '**எனக்கு**' என்று, விரகம் தின்ற தன் வடிவைக் காட்டுகிருள். இனி, 'அவனேடே கலந்து பிரிந்து, 'கண்ணலே காணப்பெறுவது என்றுகாண்' என்னும் விருப்பத்தோடே இருக்கிற எனக்கு,' என்று பொருள் கூறலுமாம். அருளி - இரப்புக்குச் செய்தது ஆகை அன்றிக்கே உங்கள் பேருக அருளி. அருள் பண்ணுகைக்கு [1] அத்தலை குறைவு அற்ருற்போலே அன்றே அருளுக்கு விஷயமான இத்தலை குறைவு அற்றபடி? இறைவன் விஷயத்தில் உதவி செய்கின்றவர்கள் கைம்மாறு கருதியன்று உதவி செய்வது; தங்கள் பேரருளாலேயாம். 'என்னை?' எனின், [2] உபய விபூதியாளனை அவர்கள் உபகரித்தால் அவனுக்கு ஒப்பாகக் கொடுக்கத் தக்க பொருள் இல்லையே இவனுக்கு? ஆதலால், '**அருளி**' என்கிருள்.

இவள் நாரையைப் புகழ்ந்து கொண்டாடியது, [3] "வானர உத்தமனே, நீ மிக்க பலமுடையவன்; நீ மிக்க ஆற்றல் வாய்ந்தவன்; நீ மிக்க அறிவு நிறைந்தவன்,'' என்று பிராட்டி புகழ்ந்தது போன்று இருந்தது. கேட்ட நாரை, 'எங்களை இங்ஙனம் கொண்டாடுகிறது என்? உன் நிலையைக் க்ண்டு போகட்டுப் போனவன் எங்கள் வார்த்தையைக் கேட்கப் போகின்ருனே? மேலும், [4] "பிரகிருதி சம்பந்தம் இல்லாதவனுய்ப் பரம சாம்யத்தையடைகிருன்'' என்கிறபடியே, பரமபதத்தில் இருப்பவர்கள் எல்லாவற்ருலும் இறைவனை ஒத்தவர்களாய் அன்றே இருப்பார்கள்? நாங்கள் அவனுக்கும் அவர்களுக்கும் வேற்றுமை அறிவது யாங்ஙனம்?' என்று அன்றே நாங்கள் இருக்கிறேம் என்பது அவற்றுக்குக் கருத்தாகக் கொண்டு மேல்வார்த்தை சொல்லுகிருள்: வெஞ்சிறைப் புள் உயர்த்தாற்கு - அவர்கள் எல்லாவற்ருலும் தன்னை ஒத்தவர்களாக இருக்கையாலே வேறுபாட்டினைக் காட்டும் அறிகுறியாகப் பெரிய திருவடியைக் கொடியிலே உடையவனுக இருப்பான். விரோதியைப் போக்கிக்கொண்டு வருகைக்கு நமக்கு அங்கே ஆள் உண்டு என்பாள், '**வெஞ்சிறைப்புள்**' என்கிருள். அன்றி, தன்னை

---

1. *அத்தலை குறைவு அறுதல்-ஆணும் பெண்ணும் சேர்ந்திருத்தல். இத்தலை குறைவறுதல் - கைம்முதல் இல்லாமை, வேறு பற்றுக்கோடு இல்லாமைகளை உடைத்தாயிருத்தல்.*

2. *உபய விபூதியாளன்—இரண்டு உலகங்கட்குமுரியவன்.*

3. *ஸ்ரீராமா. சுந்.* 36 : 7.

4. *முண்டக உபநிடதம்.* 3. 1 : 3.

விட்டு அருள் இன்றிப் பிரித்துக்கொண்டு போகையாலே, [1] 'தேரை மிக விரைவாக ஓட்டிக்கொண்டு செல்வதனால், அக்குரூரர் அருள் அற்ற மனமுடையவர்,' என்று ஆய்ப் பெண்கள் கூறியது போன்று கூறுகிறாள் என்றலும் ஒன்று. புள் உயர்த்தான்-புள்ளாலே தாங்கப் பட்டவன் என்னுதல்; அன்றி, புள்ளைக் கொடியிலே உயர்த்தியவன் என்னுதல்.

என் விடு தூதாய் - அவன் ஆள் வரவிட இருக்கக்கடவ எனக் குத் தூதாகி. இனி, 'பெருமிடுக்கரான பாண்டவர்களுக்குக் கிருஷ்ணன் தூது சென்றது போன்றது அன்று, அபலையாய் மிக்க துன்பத்தையுடையளாய் இருக்கிற எனக்குத் தூதாகச் செல்லுதல்' என்பாள் '**என் தூதாய்**' என்கிறாள் எனினும் அமையும். [2] 'இதனைச் செய் என்று நியமிக்கவேண்டும்' என்று இளைய பெருமாள் கூறியது போன்று, 'நான் ஏவ அன்றே, நீங்கள் போகின்றீர்கள்?' என்பாள் '**விடு தூதாய்**' என்றாள். சென்றக்கால் 'பிறருக்காகத் தூது போகை கிடைப்பது ஒன்றோ? சென்றால், எனக்கு முன்னே உங்களுக்கு அன்றோ [3] பலன் சித்திக்கப் புகுகிறது? என்பாள், '**சென்றக்கால்**' என்கிறாள். இனி, 'பிறர்க்காகத் தூது போதலால் உங்கள் போக்கு [4] அடிக்கழஞ்சு பெறாதோ?' என்பாள், அங்ஙனம் கூறுகிறாள் எனலுமாம். வன்சிறையில் - காதலி பக்கல் நின்றும் வந்தவர்களைச் சிறையிடுவான் ஒரு மூர்க்கன் உளனோ? இரான் ஆதலால், ஈண்டுச் சிறையாவது - இவர்களுக்கு முகங் கொடாதே வேறு ஒன்றிலே நோக்குடையவனாய் இருத்தல். 'ஆயின், இவ்வாறு இருத்தலைச் சிறை என்னலாமோ?' எனின், அரசகுமாரர் கட்கு உரிய அவ்வக்காலங்களில் [5] வெள்ளிலை இடாதபோது அவர் கள் வருந்துவார்கள்: அது போன்று, இவைகட்கும் முகங்கொடுத்து அவன் கேளாமையே துன்பத்தினை விளைப்பதாம்; அதனையே ஈண்டுச் **சிறை** என்றாள். அவன் வைக்கில், [6] 'மனிதர்களுக்குத் துன்பம் வந்த போது அவர்கள் அடையும் துன்பத்தைக்காட்டிலும்

1. ஸ்ரீ விஷ்ணு புரா. 3. 18 : 19.
2. ஸ்ரீராமா. ஆரண். 15 : 7.
3. 'பலன் சித்திக்கப் புகுகிறது' என்றது, இறைவனை நேரிற் கண்டு மகிழ்தல்.
4. அடிக்கழஞ்சு: அடி - ஈண்டுப் பாதத்தைப் பெயர்த்து வைத்தல்; கழஞ்சு - பொன்; அதாவது - மேன்மை பெறுதல் என்றபடி.
5. வெள்ளிலையிடாதபோது - வெற்றிலை கொடாத போது.
6. ஸ்ரீராமா. அயோத். 2 : 42.

இரண்டு மடங்கு அதிகத் துன்பத்தைத் தான் அடைகின்றவன், சிறையில் வைப்பானோ? வையான்' என்பாள் 'வைக்கில்' என்கிறாள். தலைமேற்கொள்ளுவான் என்பது குறிப்பு. வைப்பு உண்டால் என் செயுமோ-' கிடைக்குமாகில் அது பொல்லாதோ? சிறை இருத்தல் துன்பத்தைத் தருவது ஒன்று அன்றோ?' எனின், [1] பிறருக்காகச் சிறை இருக்கை கிடைப்பது ஒன்றோ? 'ஆயின், அவ்வாறு இருத்தல் தனக்கு உத்தேஶ்யமாமோ?' எனின், இராவணன் தெய்வப் பெண்களைச் சிறையிட்டு வைக்க, தான் அவர்கள் காலில் விலங்கைத் தன் காலிலே கோத்துச் சிறை மீட்டவள் அன்றோ?

இனி, 'என் விடுதூதாய்ச் சென்றக்கால் வன்சிறையில் அவன் வைக்கில்' என்பதற்கு, 'நீங்கள் ஏதேனும் அவனுக்குத் தூது போகின்றீர்களோ? [2] சிறை கட்டுதல், சிங்கவிளக்கெரித்தல் செய்யில் செய்வது என்?' என்று கூசுகைக்கு; எனக்காகத் தூது போனாரை [3] 'அனுமானுக்கு என்னாற்செய்யப்படும் இவ்வாலிங்கனமானது' என்னுமாறு போன்று, மார்பிலே அணைக்கும் காணுங்கோள். நான் அணைய ஆசைப்படுகிற மார்பு அன்றோ உங்களுக்குப் பரிசிலாகக் கிடைக்கப் போகின்றது?' என்ற தொனிப்பொருளும் தோன்றும். (1)

35

*என்செய்ய தாமரைக்கண் பெருமானார்க்கு என்தூதாய்*
*என்செய்யும் உரைத்தக்கால் இனக்குயில்காள்! நீரலிரே*
*முன்செய்த முழுவினையால் திருவடிக்கீழ்க் குற்றேவல்*
*முன்செய்ய முயலாதேன் அகல்வதுவோ விதியினமே?*

---

1. *விடுதலைப் போராட்டத்தில் மகாத்துமா காந்தியடிகள், பண்டித ஜவஹர்லால் நேரு முதலானோர் சிறையிருந்தமை இங்கு நினைவு கூர்க.*

2. *சிறை கட்டுதல் முதலியன, அனுமானுக்கு அரக்கர்களால் செய்யப் பட்டவை; சிறை கட்டுதல்—பிரமாஸ்திரத்தால் கட்டுதல், சிங்கவிளக்கு எரித்தல்—இங்கே காலிலே சீலையைக்கட்டி எரித்தல். உலகத்தில் சிம்ஹ ஆகாரப் பிரதிமை செய்து அதனைத் தலையிலே வைத்து எரித்தல் என்பது தொனிப்பொருள்; அவமதி பண்ணுகை என்பது கருத்து.*

3. *ஸ்ரீ ராமா. யுத்த.* 1 : 13.

**பொ-ரை:** கூட்டமாக இருக்கின்ற குயில்காள்! நீங்கள் அல்லீரோ? என்னுடைய செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடைய பெருமானிடத்தில் எனக்குத் தூதாகிச் சென்று, நான் கூறுவதனைக் கூறின் குற்றம் யாது உண்டாம்? முற்பிறவிகளிற்செய்த நிறைந்த பாவங்களால் திருவடிகளில் அண்மையிலிருந்து செய்யுந் தொண்டுகளைச் செய்வதற்கு முற்பிறவியிலேயே முயலாத யான் இன்னமும் அகன்று போமதுவோ முறை?'

**வி-கு:** மேல் திருப்பாட்டில் 'என்' என்பதற்கும் இங்கு 'என்' என்பதற்கும் உள்ள பொருள் நயம் உணர்தல் தகும். பெருமானுக்கு - வேற்றுமை மயக்கம். 'ஒலித்தக்கால் என்னும் உவரி' (திருக்குற. 763) என்புழிப் போன்று, ஈண்டு 'உரைத்தக்கால்' என்பது வினையெச்சம். திருவடிக்கீழ்-என்பதில் 'கீழ்' என்பது ஏழனுருபு. முயலாதேன், பெயர். 'தாமரைக்கண் பெருமான்' என்றவிடத்துத் 'தாமரைக் கண்ணான் உலகு' என்னுங்குறள் நினைவு கூர்தல் தகும்.

**ஈடு:** இரண்டாம் பாட்டு. சில நாரைகளைத் தூது போகல் வேண்டும் என்று இரந்தாள் மேல்; அங்குப் போனால் சொல்லும் பாசுரத்தைக் குயில்களுக்குச் சொல்லுகின்றாள் இங்கு; [1] 'தொடங்கியது ஒன்று, முடிந்தது வேறு ஒன்று,' என்கிறபடியே வந்து விழுந்தது. 'இப்படிக் கலங்கலாமோ?' எனின், இத்தனையும் கலங்கிற்றிலளாகில் இவள் பிரிந்த பொருளுக்கும் நாட்டார் பிரிந்த பொருளுக்கும் வேற்றுமையின்றி ஒழியுமே, இப்படிக் கலங்கப் பண்ணாத அன்று குணங்களால் மேம்பட்ட இறைவனுக்கு [2] நமஸ்காரமாமித்தனை அன்றோ?

என் பெருமான் - பிரிந்த சமயத்திலும் 'என்னுடையவன்' என்று கூறலாம்படிகாணும் கலக்கிற சமயத்தில் அவன் இவள் இட்ட வழக்காய் இருந்தபடி. அன்றி, பிரிகிற காலத்தில் தான்

---

1. 'உலகத்தில் உன் முகத்தைப் போன்றதொரு முகத்தை ஓரிடத்திலும் நான் பார்த்ததில்லை என்று ஆசையால் யான் கூற, கேட்ட அவள் 'அரி அரி' என்று கூறிக்கொண்டு, கோபித்தவள் ஆனாள்; ஆதலால், தொடங்கியது ஒன்று, முடிந்தது வேறு ஒன்று என்று தன் நண்பனுக்குச் சொன்னான்' என்பது, சுலோகத்தின் பொருள். இவ்விடத்தில்,

'யாரினுங் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று.' (1314)

என்ற குறளை ஒப்பு நோக்குக.

2. நமஸ்காரம், பெருமைக்குக் குறைவு.

வருமளவும் இவள் தரிக்கைக்காக ‘இது எங்கே இருக்கில் என், எங்கே போகில் என்? உன் பொருள் அன்றோ?’ என்று கூறிப் பிரிவானுதலின், அதனை நோக்கி, ‘**என்பெருமான்**’ என்கிறாள் ஆகவுமாம். தாமரைக்கண் பெருமான் - ‘பிரிவில் திருக்கண்கள் சிவந்திருக்குமோ?’ என்னில், இயற்கையான ஐஸ்வர்யத்தாலும் சிவந்திருக்கும்; தனக்குரிய பொருள்கள் பக்கலுள்ள அன்பினுலும் சிவந்திருக்கும்; கட்குடியர்களைப் போன்று இவளோடு கலந்த கலவியாலும் சிவந்திருக்கும்; அன்றி, பிரிவாலே [1]அரையாறுபட்டுச் சிவந்திருக்கும். ‘ஆயின், இவற்றை எல்லாம் பிரிந்திருக்கும் இவள் கண்டாளோ?’ எனின், இவற்றை எல்லாம் இவள் அனுபவித்தவள் அன்றோ? ‘எங்கே அனுபவித்தாள்?’ எனின், முதல் திருவாய் மொழியிலே ஐஸ்வரியம், மூன்றாந் திருவாய்மொழியிலே வாத் ஸல்யம், [2]இத்திருவாய்மொழியில் கலவியும் பிரிவும். பெருமானுக்கு- பிரிகிற போது கண்ணாலே நோக்கி இவளைத் தனக்கே உரிமை யாக்கிப்போனபடி. (இங்கே இச்சொல்லுக்குத் தலைவன் என்பது பொருள்.) அன்றி, தலைவன் தனக்கு இயற்கையில் அமைந்த ஐஸ்வரியத்தோடு இவள் இடத்துள்ள குணங்களாகிய செல்வத் தையும் உடன்கொண்டு சென்றவனுதலின், இரட்டித்த செல் வத்தினையுடையவன் என்பாள், ‘**பெருமான்**’ என்கிறாள் எனலும் அமையும். (இங்கே ‘பெருமான்’ என்பதற்குச் ‘செல்வத்தாலே பெரியவன்’ என்பது பொருள்; அதாவது, இரட்டித்த செல்வத்தை யுடையவன் என்பதாம்)

என் தூதாய் - அவனோடே கலந்து பிரிந்து வெறுந்தரையாய் இருக்கின்ற எனக்குத் தூதாய். அதாவது, ‘கடலேறி வடிந்தாற் போலேகாணும் கிடக்கிறேன்,’ என்றபடி. உரைத்தக்கால் என் செய்யும் - உரைத்தால் என்ன தீமை உண்டாம்? ‘அவனைக்

---

1. *அரையாறு பட்டுச் சிவந்திருத்தல்-பாதி சிவந்திருத்தல்.*

2. *‘இத்திருவாய்மொழியில் கலவியும் பிரிவும்’ என்றது, புணர்ச்சி யின்றேல் பிரிவு இன்முதலின், இத்திருவாய்மொழியில் பிரிவினைக் கூறிய போதே புணர்ச்சியும் போதரும். ‘ஆயின், பிரிவில் அரையாறுபட்டுச் சிவந்திருத்தலை இவள் அனுபவித்தாளோ?’ எனின், பெரிய திருவடி எடுத்துக்கொண்டு செல்லும்போது பிரிவாற்றாமையாலே புரிந்து புரிந்து நோக்குமே அவன்; அப்போது கண்ணிற் சிவப்பு அரையாறுபட்டிருக்கும்; அதனைக் கண்டு அனுபவித்தாள்.*

கொடுவந்து சேர்க்கச் சொல்லுகிறேனே? ஒரு வார்த்தையைக் கூறின் என் செய்யும்?' என்பாள், '**உரைத்நக்கால் என் செய்யும் ?'** என்கிருள். இத்தொடரில், சென்று கூறின், அதற்குக் கைம்மாருக அவன் உபய விபூதிகளையுந் தரினும் தருவான் என்ற குறிப்புப் பொருளும் தோன்றும். இனம் குயில்காள் - என்னைப் போன்று தனித்திருக்கின்றீர்கள் அன்றே? நீர் அலிரே - நீர்மைக்கு நீங்கள் அன்றோ? (இங்கு நீர் என்பது, நீர்மை என்ற சொல்லின் விகாரம் ; நீர்மை-தன்மை.) அன்றி, இதற்கு, 'யானும் தலைவனும் சேர்ந்திருக்கும் போது கேட்டவற்றிற்கு எல்லாம் விடை பகர்ந்து வந்த நீங்கள், அவன் பிரிந்தவாறே வேறு சிலர் ஆனீர்களோ ?' என்று கூறலுமாம். இங்கு 'நீர்' என்பது, முன்னிலைப் பெயர்.) முன்-நான் பாபம் பண்ணிப் போந்த காலம் ஓர் எல்லையுடன் கூடியதோ ? 'அன்று' என்றபடி. இதனால், சென்ற காலம் அளைத்தையும் குறிக்கிருள். செய்த - சங்கற்பித்துவிட்ட அளவேயோ ? அன்று ; சரீரத்தால் செய்தது என்றபடி. முழுவினையால்-அவற்றுள் ஏதேனும் [1] அகஞ்சுரிப்பட்டது உண்டோ? 'இன்று' என்றபடி. அதாவது, 'காலம் ஒரு வரையறைக்குட்பட்டிருந்து, அக்காலங்களில் நான் செய்து போந்த பாவங்களும் ஒரு வரையறைக்குட்பட்டிருப்பின் அன்றோ என்னால் போக்கிக்கொள்ள முடியும் ?' என்பதாம். 'ஆயின், அத்தகைய தீவினைகளையுடைய நீர் இறைவனைச் சார்தல் எவ்வாறு முடியும் ?' எனின், இறைவனால் அத்தீவினைகளைப் போக்க ஒண்ணுது ஒழியின் அன்றோ நான் இழக்க வேண்டுவது? இங்கே [2] 'ஒரு முழுக்காலும் இரண்டு முழுக்காலும் போகாதுகாண்- [3] தெற்காழ்வார் கையில் திருவாழியாலே வினையை அறுத்துக் கொண்டு போகில் அத்தனை ஒழிய, ஒன்று இரண்டு முழுக்கால் போகாதுகாண் நான் பண்ணின பாபம்,' என்று திருக்கோட்டியூரிலே

---

1. *அகஞ்சுரிப்பட்டது உண்டோ-குறைந்தது உண்டோ?*

2. *'ஒரு முழுக்காலும்' என்று தொடங்கும் வாக்கியம் தீவினைகளைத் தம்மால் போக்கிக்கொள்ல முடியாமைக்கும், இறைவனால் போக்க முடியும் என்பதற்கும் காட்டப்படும் ஐதிஹ்யம். இவ்வைதிஹ்யம்-புண்ணிய தினத்தில் பாவங்கள் போகும்பொருட்டுப் புண்ணிய தீர்த்தத்தில் நீராடல் வேண்டாவோ என்று கேட்ட கோளரியாழ்வான் என்ற ஒருவர்க்குத் தெற்காழ்வான் என்ற ஒருவர் கூறும் விடை.*

3. *தெற்காழ்வான்-திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருப்பெயர். திருவாழி-அவர் கையிலுள்ள சக்கரம்.*

**தெற்காழ்வான் கோளரியாழ்வானுக்குத் தீர்த்தத்துறையிற் சொன்ன வார்த்தையை நினைவு கூர்வது.**

திருவடிக்கீழ்க் குற்றேவல் - திருவடிகளிலே கிட்டி அந்த ரங்கத் தொண்டுகளைச் செய்வதற்கு, 'தலைவி பிரிந்து வருந்துகிறவள் ஆதலின், 'அவனைச் சேர்வதற்கு' என்னாது '**திருவடிக்கீழ்க் குற்றேவல்**' என்கிறது என்னை?' எனின், அந்தணர் பிச்சு ஏறினாலும் ஒத்துச் சொல்லுமாறு போன்று, இவர் பிராட்டியானாலும் மார்பால் அணைக்க நினையார்; திருவடிகளில் அணையத் தேடும் அத்தனை. முன் செய்ய முயலாதேன்-முற்பிறவிகளிலே நோலாத நான். இனி இதற்கு, [1]'இந்தக் காரியத்தைச் செய் என்று என்னை நியமிக்க வேண்டும்,' என்று இளைய பெருமாள் கூறியது போன்று, 'இன்னதைச் செய்' என்று ஏவத் திருமுன்பே அடிமை செய்ய முயலாத நான் என்று பொருள் கூறலுமாம். முன் செய்ய முயலாதேன் இனம் அகல்வதுவோ விதி-திருவடிகளிலே அடிமை செய்கைக்குத் தக்கது ஒரு சாதனத்தை என் தலையால் பண்ணாத நான் அகன்றே போம் இத்தனையோ? இனம் - 'இன்னம்' என்பதன் விகாரம். விதி-நியாயம். [2]'எங்கள் அபிமதம் பெறுகைக்கு எங்கள் பக்கல் ஒரு நன்மை இல்லாத பின்பும் தாழ்க்கும் இத்தனையோ?' எனகிருள் என்று **பிள்ளை திருநறையூர் அரையர்** பணிப்பர். இனி, 'அகல்வதுவோ விதியினமே?' என்பதனை, 'விதியினம் அகல்வதுவோ?' என்று மாறிக் கூட்டி, [3]முதல் இல்லாதார் அன்றோ பலிசை இழப்பார்! அவன் தானே முதலாக இருக்கும் கூட்டமன்றோ இவர்கள் கூட்டம்?' என்று பொருள் கூறலுமாம்; விதியினம்-புண்ணியத்தையுடையோம். [4]'களைகண்மற்றுஇலேன்' என்றும், [5]'உன் சரண் அல்லால் சரண் இல்லை' என்றும், [6]'மைத்து எழுந்த மாமுகிலே பார்த்திருக்கு மற்றவை' என்றும், [1]'நெறிவாசல்

---

1. *ஸ்ரீராமா. ஆரண்.* 15 : 7.

2. *எங்கள் அபிமதம்-எங்கள் விருப்பம்; விரும்பப்படும் பொருள்.*

3. *முதலில்லாதார் பலிசையிழத்தல் - பணம் இல்லாதவர்கள் தொழிலை இழத்தல். பலிசை-இலாபமுமாம்.*

4. *திருவாய்.* 5. 8 : 8.

5. *பெருமாள் திருமொழி.* 5 : 1.

6. *பெருமாள் திருமொழி.* 5 : 7.

தானேயாய் நின்ருனே' என்றும், [2]'விழிக்குங் கண்ணிலேன் நின்கண் மற்றல்லால்' என்றும், [3]'வாழுஞ் சோம்பர்' என்றும் இப்படிகளிலே அன்றே இவர்கள் கோஷ்டியில் வார்த்தைகளும் இருக்கும்படி? இனி 'விதியினம்' என்பதனை 'விதியினன்' என்றதன் திரிபாகக் கொண்டு, அதற்கு, 'பாபத்தையுடையேனுன நான்' என்று பொருள் கூறி, நான் அகல்வதுவோ - 'பாவத்தையுடைய நான் அகன்றே போமதுவோ?' என்று கூறலும் ஒன்று. விதி - பாபம். 'ஆயின், மூன்ருமடியில் 'முழுவினையேன்' என்றவள் ஈண்டும் 'பாவியேன்' என்று கூறல், கூறியது கூறலாகாதோ?' எனின், ஆகாது; 'தீய வினைகளைச் செய்த தீவினையேன்' என்கிருள். [4]'பாவமே செய்து பாவியானேன்' என்ருர் மங்கை மன்னனும். (2)

36

**விதியினுல் பெடைமணக்கும் மென்னடைய அன்னங்காள்!**
**மதியினுல் குறள்மாணுய் உலகுஇரந்த கள்வர்க்கு**
**மதியிலேன் வல்வினையே மாளாதோ என்றுஒருத்தி**
**மதிஎல்லாம் உள்கலங்கி மயங்குமால் என்னீரே.**

**பொ-ரை:** நல்வினையினுல் பெண் அன்னங்களைச் சேர்ந்திருக்கிற மெல்லிய நடையினையுடைய அன்னங்காள், அறிவினுல் குறுகிய வடிவையுடைய பிரமசாரியாகி உலகத்தினை யாசித்த வஞ்சனையுடைய வருக்கு, 'ஒரு பெண்ணுனவள் அறிவில்லாத தன்னுடைய கொடிய வினைகள்தாம் அழியாதனவோ என்று கூறி, அறிவு எல்லாம் அடியோடு கலங்கி மயங்காநின்ருள்' என்று கூறுங்கள்.

---

1. *முதல் திருவந்தாதி*, 4.
2. *பெரியாழ்வார் திருமொழி*, 5. 1 : 2.
3. *திருமாலை*, 38.
4. *பெரிய திருமொழி*, 1, 9 : 9

*இப்பாசுரத்தில் 'முன்செய்ய முயலாதேன் **அகல்வதுவோ** விதியினமே' என்பதற்குக் கூறிய பொருள்கள் மூன்றனுள், முதற் பொருளால், இழந்த கால விஷய சோகமும், பேற்றில் விரைவும் போதரும். இரண்டாவது பொருளால், '**அவன் ஒருவனே ரக்ஷகன்; அவனே** பற்றுக்கோடு' என்னும் மனத்தின் **உறுதி** போதரும். மூன்ருவது பொருளால், கைம்முதல் இல்லாமை, பற்றுக்கோடு வேறு இன்மை இவைகள் போதரும்.*

**வி-கு :** மாணி-பிரமசாரி; திருமணம் முடிக்கப் பெருதவன். 'மாணி யாம் படிவம் அன்று மற்றிவன் படிவம் மைந்த' என்ருர் கம்பநாடரும். 'என்று கலங்கி மயங்கும்' என முடிக்க. மயங்கும் - செய்யுமென் முற்று. என்னீர் - ஒரு சொல் : முன்னிலை ஏவல்.

ஈடு : மூன்ரும் பாட்டு. 'அகல்வதுவோ' என்பது போன்று சொல்லுகிற பத்தி வாதங்கள் நமக்குத் தெரியா ; 'செய்த வினைகள் அவசியம் அனுபவித்தற்கு உரியவை' என்கிறபடியே, அனுபவித்தே அறவேண்டும் என்று இறைவனுடைய திருவுள்ளக் கருத்தாகக் கொண்டு, 'நான் செய்த பாபமேயோ அனுபவித்தாலும் மாளாதது என்று சொல்லுங்கள்' என்று சில அன்னங்களை இரக்கிருள்.

விதியினுல் பெடை மணக்கும் - 'நீங்கள் நூல்கள் சொல்லுகிற படியே கலக்கையாலே பிரிவின்றி இருந்தீர்கள்; இவன் அடைவு கெடக் கலக்கையாலே எனக்குப் பிரிவு வந்தது,' என்கிருள். இனி, விதி-புண்ணியம்; அதாவது, 'உங்களுடைய புண்ணியத்தால்' என்று கூறலுமாம் ; காதலர்களோடு கலந்திருத்தல் புண்ணியத்தின் பலன்; அவர்களைப் பிரிந்திருத்தல் பாவத்தின் பலன்; ஆதலின், '**விதியினுல் மணக்கும்**' என்கிருள். இனி, 'என்னுடைய புண்ணியத்தால்' என்றலும் ஒன்று. 'ஆயின், இவளுடைய புண்ணியத்தால் அவை மணத்தலாமாறு யாங்ஙனம்?' எனின், பெருமாள், பிராட்டியைப் பிரிந்து கடலும் மலையும் தேடிக்கொண்டு வருகையில், இராச்சியம் மனைவி முதலியவைகளை இழந்த மகாராசரைக் கண்டு, அவர் குறை தீர்த்த பின்பேயன்ரோ தம் இழவில் நெஞ்சு சென்றது பெருமாளுக்கு? ஆதலின், இவை குறைவற்று இருக்கிற இதுதான் இவள் காரியமாக இருக்கும் அன்றே? 'ஆயின், மகாராசர் குறையை முற்படத் தீர்ப்பான் என்?' என்னில், [1] நீர்மையுடையார்க்குத் தத்தமது இழவிலும் பிறருடைய இழவே நெஞ்சில் முற்படப்படுவதாம். 'பேடையினுடைய கருத்து அறிந்து அதனை உகப்பிக்கின்றது' என்பாள், '**பெடை மணக்கும்**' என்கிருள். மென்னடைய அன்னங்காள்-

---

1. *தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்*
*வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர் ;—திங்கள்*
*கறையிருளை நீக்கக் கருதாது உலகில்*
*நிறையிருளை நீக்குமேல் நின்று.* (நன்னெறி)

*என்ற செய்யுளை இங்கு நினைவு கூர்க.*

'இவ்வன்ன நடை கொண்டோ என் காரியம் செய்யப்போகிறது!' என்பதாம். இனி, இளையபெருமாளுடைய வில்லின் நாண் ஒலி செவிப்பட்ட பின்னர், மது அருந்தியதால் உண்டான கலக்கமும் தெளிந்து, கழுத்தில் மாலையையும் அறுத்துப் போகட்டு, 'இச்சீற்றத் துக்கு நாம் முன்னிற்க ஒண்ணாது' என்று தாரையைப் புறப்பட விட, அவள், [1] கலவியால் உண்டான பரவசத் தன்மையடங்கலும் நடையிலே தோற்றப் புறப்பட்டாற்போன்று இராநின்றது இவற்றின் நடையழகும் என்பாள், '**பெடை மணக்கும் மென்னடைய அன்னங் காள்**' என்கிறாள் எனினும், அமையும். 'ஆயின், பட்டத்துத்தேவியை முன்னிடலாமோ?' எனின், [2] இளையபெருமாளுடைய திருவுள்ளத்தில் சிவிட்குத் தாரையையிட்டு ஆற்றவேண்டிற்றுக்காணும் இருந்தது.

மதியினால் குறள் மாணாய் உலகு இரந்த கள்வர்க்கு-'இராவ ணனைப்போலே தலை அறுத்துவிட ஒண்ணாதபடி கொடை என்ற ஒரு குணத்தை ஏறிட்டுக்கொண்டிருந்தான் மாவலி. இந்திரன் அரசை யிழந்து நின்றான்; இரண்டிற்கும் மாறு இல்லாமல் செய்யலாவது என்?' என்று, [3] 'ஆயிரம் பசுக்களைக் கொடுத்த கைகள்' என்கிற படியே, கொடுத்து வளர்ந்த கையைக்கொண்டு நீர் ஏற்று அவனுக்குக் கொடுத்த விரகர்க்கு. இதனால், தலைவர் [4] **சால தூர தர்சி** என் பதனைத் தெரிவிக்கிறாள். கோடியைக் காணியாக்கினாற்போன்று, பெரிய வடிவழகைக் கண்ணாலே முகந்து அனுபவிக்கலாம்படி சிறுக் கினாதலின் '**குறள்**' என்கிறாள். 'உண்டு' என்று இட்டபோதொடு

---

1. ஸா-ஒரு கலவியும் பிரிவும் வேண்டாதபடியான நடையழகை யுடையவள். ப்ரஸ்க்கலந்தீ-புணர்ச்சியாலுண்டான துவட்சியால் தடுமாறி, அடிமேல் அடியாக இட்டுவந்தாள். மதவிஹ்வலாக்ஷீ-மதுபானம் முதலிய வைகளாலே தழுதழுத்த நோக்கையுடையவளாய் இருந்தாள். ப்ரலம்ப காஞ்சீ குண ஹேம ஸூத்ரா-அரை நூல் வடம் இழுப்புண்டு வரும்படி படுக்கையிற்கிடந்தபடியே பேணாதே வந்தாள். ஸலக்ஷணா-புணர்ச்சிக் குறிகள் காணலாம்படி வந்தாள். லக்ஷ்மண ஸந்நிதாநம் ஜகாம-தாய்க்கு ஒளிப்பது உண்டோ என்று புறப்பட்டு வந்தாள். தாரா - தாரையானவள். நமிதாங்கயஷ்டி: உருகு பதத்தில் வளைந்தவை நிமிர்க்க ஒண்ணாதாப் போல இத்துவட்சி நிரூபகம் இவளுக்கு என்று தோற்றும்படி இருந்தாள். ஸ்ரீராமா. கிஷ். 33 : 37. அப்படிப்பட்ட நடையழகாலே அவரைத் துவக்கிக் காரியங்கொள்ளவற்று இவையும் என்று இருக்கிறாள்.

2. இவ்வாக்கியம் ரசோக்தி. தாரை-சிலேடை.

3. ஸ்ரீராமா. யுத். 21 : 77.

4. சாலதூரதர்சி-மிக்க தூரத்திலுள்ளவற்றை எல்லாம் அறிகிறவர்.

'இல்லை' என்று தள்ளிக்கதவு அடைத்தபோதோடு வேற்றுமை அற முகமலர்ந்து போம்படி இரப்பிலே தழும்பு ஏறின வடிவையுடையனுஞன் ஆதலின், 'மாணுய்' என்கிருள். உலகு இரந்த கள்வர் என்பதற்குத் தன் சங்கற்பத்தாலே உண்டாக்கின உலகத்தைக் [1]'கொள்வன் மாவலி மூவடி' என்று இரந்த வஞ்சகர் என்று பொருள் அருளிச்செய்வர் திருமாலையாண்டான். எம்பெருமானுர், 'ஒன்றை நினைந்து ஒன்றைச் செய்தவர்க்கு' என்று அருளிச்செய்வர். அதாவது, 'மகாபலியை வஞ்சித்ததும் என்னை வசீகரிக்கைக்காக,' என்றபடி. 'ஆயின், இவள் அச்செயலுக்கு வசப்பட்டவளோ?' எனின், மேல், [2]'பெருநிலம் கடந்த நல் அடிப்போது' என்று அன்றே இவள் ஆசைப்பட்டாள்? மேலும், [3]'உலகங் கொண்ட, அடியன் அறிவரு மேனி மாயத்தனுகிலும், கொடிய என் நெஞ்சம் அவன் என்றே கிடக்கும்' என்றும், [4]'அன்று ஒருகால் வையம் அளந்த பிரான் வாரான் என்று, ஒன்று ஒருகால் சொல்லாது உலகு' என்றும் அன்றே இவள் கிடப்பது? திருமங்கையாழ்வாரும், [5]'முன்னங் குறளுருவாய் மூவடிமண் கொண்டு அளந்த, மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன் பயந்தேன்!' என்ருர். ஆக, இவர்கள் எல்லாரும் ஈடுபடுவது இச்செயலுக்கேயாம்.

மதியிலேன்-'பிரிகிற சமயத்திலே, 'போகாதேகொள்' என்றேனுகில் இப்பாடு படாது ஒழியலாம் அன்றே? அது செய்திலேன்; ஆதலால், அறிவுகேடியானேன்,' என்கிருள். வல்வினையே மாளாதோ-இவள் [6]ஒரு தீர்க்கசிந்தயந்தியாவள். 'மதியிலேன் வல்வினையே மாளாதோ' என்றதனுல், மதியினையுடைய ஒருத்தியின் வல்வினை மாண்டது என்பது உட்கோள். அதாவது, சிந்தயந்தி என்பாள் சதுரப்பாட்டினையுடையளாய் மாமியார் முதலானுருடைய முன்னிலையிலேயே இருவினைகளையும் நீக்கி மோக்ஷத்தினை அடைந்தாள் என்னும் சரிதம் ஈண்டு நினைத்தல் தகும் 'ஆயின், அவள் இருவினைகளையும்

---

1. திருவாய். 3. 8 : 9.
2. திருவாய். 1. 3 : 10.
3. திருவாய். 5. 3 : 5.
4 திருவாய். 5. 4 : 10.
5. பெரிய திருமொழி. 9. 4 : 2.
6. சிந்தயந்தி என்பவள், ஓர் ஆயர் மடமகள். அவளினின்று இவளை வேறுபடுத்திக் காட்டுகிருர் 'இவள் ஒரு தீர்க்க சிந்தயந்தி' என்று.

நீக்கியவாறு யாங்ஙனம்?' எனின், [1] 'கிருஷ்ணன் பக்கலில் நெஞ்சை வைக்கையாலே புண்ணியத்தின் பலம் அனுபவித்தாள்; அந்நினைவின் படி அனுபவிக்கப் பெறுமையால் பாப பலம் அனுபவித்தாள்; ஆகை யாலே, நல்வினை தீவினைகள் இரண்டனையும் அரைக்கணத்தில் அனுபவித்தாள்,' என்று விஷ்ணு புராணம் கூறுகின்றது. ஒருத்தி- 'ஒருத்தி எனப் பொதுவிற்கூறின், அறியுமாறு யாங்ஙனம்'' எனின், எய்தவன் கை உணராதோ? அதாவது,' இன்ன காட்டிலே மான் பேடை [2] ஏவுடனே கிடந்து உழையாநின்றது' என்று ஊரில் வார்த் தையானால் எய்தவன் கை உணராதோ? 'நீயன்றோ எய்தாய்?' என்று சொல்ல வேண்டா அன்றே? அவ்வாறே ஒருத்தி என்ற அளவில் பிரிந்த தலைவன் உணர்வான் என்பது. மேலும் மேலும் சம்சார விபூதி யிலுள்ளாள் இவள் ஒருத்தியுமேயாவள். 'ஏன்? அவனுடைய பிரிவால் வருந்துமவர் வேறு ஒருவர் இலரோ?' எனின், சம்சாரிகள் புறப் பொருள்களில் நோக்குள்ளவர்கள்; நித்தியசூரிகளுக்குப் பிரிவு இல்லை; [3] மற்றைய ஆழ்வார்கள் இவளுக்கு உறுப்புகளாய் இருப்பவர்கள்.

மதி எல்லாம் உள் கலங்கி மயங்குமால் என்னீரே-மதி கலங்கி, அறிவு அழிந்தாள் என்மின். தன் அறிவு அழிந்தாளாகிலும் நாம் கொடுத்த அறிவு உண்டு என்று இருப்பர்; அதாவது, நாம் கொடுத்த அறிவு கொண்டு [4] 'என்னை அழைத்துக்கொண்டு செல்லும் அச் செயல் அவருக்குத் தக்கதாம்' என்று பிராட்டி இருந்தது போன்று இருப்பாள் என்றபடி. மதி எல்லாங் கலங்கி-'தாம் மயர்வு அறுத்துத் தந்த ஞானப்பரப்பெல்லாம் கலங்குகைக்கு உடலாயிற்று என்மின்; [5] அறிவு தந்தார் தாம் அன்றோ என்று அறிவிப்பீர்,' என்றபடி. 'மேல் எழச் சிறிது கலங்கிற்றாகிலும் பின்பும் நாம் கொடுத்த அறிவு அன்றோ?

---

1. ஸ்ரீவிஷ்ணு புரா. 5. 13 : 21, 22.

2. ஏவுடனே-பாணத்தோடு.

3. பூதத்தாழ்வாரைத் தலையாகவும், பொய்கையாழ்வார் பேயாழ்வார் களைத் திருக்கண்களாகவும், பெரியாழ்வாரைத் திருமுகமாகவும், திருமழி சைப்பிரானைக் கண்டமாகவும், குலசேகராழ்வார் திருப்பாணாழ்வார்களைத் திருக்கரங்களாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரைத் திருமார்பாகவும், திருமங்கை மன்னனைத் திருநாபியாகவும், மதுரகவிகளையும் எம்பெரு மானாரையும் திருவடிகளாகவும் பெரியோர் அருளிச்செய்வர்.

4. ஸ்ரீராமா. சுந். 9 : 30.

5. 'அறிவு தந்தார் தாமன்றோ?' என்றது, 'பத்தியின் நிலையினை யடைந்த ஞானத்தையன்றோ தந்தார்?' என்றபடி.

அப்படிக் கலங்குமோ!' என்பர்; மதி எல்லாம் உள் கலங்கி-தாம் தந்த மயர்வறு மதி நலம் எல்லாம் அடி மண்டியோடே கலங்கின என்மின்; 'அத்தனையோ! நாம் இருந்தோமே! பின்பு நாம் போனவாறே அறிவு கொடுத்துக்கொள்ளுகிறோம்' என்று இராமல், மயங்குமால் - முடியுந் தசையாயிற்று என்மின். 'மயங்கினாள்' என்னில், 'இனிப் போனால் செய்வது என்?' என்று இருப்பர்; ஆதலால், 'மயங்குமால் என்மின்' என்கிறாள். 'உங்கள் தலையில் பழியைத் துடைக்கப் பார்மின்; அறிவித்த பின்பு வாராது ஒழியின். அவனது அன்றோ பழிச்சொல்!' என்பாள், '**என்னீரே**' என்கிறாள், இனி, 'துன்பக்குரல் கேட்பின் பொறுக்கமாட்டான், அறிவிப்பீர்,' என்பாள், '**என்னீர்**' என்கிறாள் எனலுமாம். அருளாழி அம்மான் ஆகையாலே வருவர் என்றபடி. இனி, உங்களுக்குச் சொரூபம், அவனுக்குக் குணம், எனக்குச் சத்தை, உங்களுக்கு ஒரு வார்த்தை என்பாள், '**என்னீரே**' என்கிறாள் எனலும் ஒன்று. (3)

## 37

என்நீர்மை கண்டுஇரங்கி இதுதகாது என்னாத
என்நீல முகில்வண்ணர்க்கு என்சொல்லியான் சொல்லுகேனோ
நன்னீர்மை இனியவர்கண் தங்காதுஎன் றொருவாய்சொல்
நன்னீல மகன்றில்காள்! நல்குதிரோ நல்கீரோ?

**பொ - ரை:** 'நல்ல நீல நிறத்தினையுடைய மகன்றில் என்னும் பறவைகளே, எனது தன்மையைக் கண்டிருந்தும், இரங்கி, பிரிந்து தங்கி இருத்தல் தகாதது என்று நினையாத, என்னுடைய நீல முகில் போன்ற நிறத்தினையுடைய தலைவர்க்கு, என்ன வார்த்தையினைச் சொல்லி நான் சொல்லப் போகிறேன்? நல்ல உயிரானது இனி அத் தலைவரின்பொருட்டு அவளிடத்தில் தங்கியிராது என்று ஒருவார்த்தை சொல்லுதலைச் செய்வீர்களா மாட்டீர்களா?' என்கிறாள்.

**வி - கு:** மூன்றும் அடியிலுள்ள நீர்மை என்பது, ஆகுபெயராய் உயிரைக் காட்டிற்று. அவர்கண்-அவர்பொருட்டு; நான்காவதன் கண் ஏழாவது மயங்கிய உருபு மயக்கம். இனி, அவரிடத்தில் எனக் கோடலுமாம். வாய்-சொல். சொல் - முதனிலைத் தொழிற்பெயர். 'சொல்லுதலை நல்குதிரோ, நல்கீரோ?' எனக் கூட்டுக. மகன்றில் என்பது, நீர்வாழ் பறவை: இது ஆணும் பெண்ணும் பிரிவின்றி வாழுமியல்பினது 'பூவிடைப் படினும் யாண்டுகழிந் தென்ன, நீருறை மகன்றில் புணர்ச்சி போல' (குறுந். 57) என்றார் பிறரும்.

ஈடு: நாலாம் பாட்டு. 'அனுபவித்தாலும் மாளாதது நான் பண்ணின பாபமேயோ!' என்ருள் மேல்; 'இவள் அனுபவித்தாளோ பின்னை?' எனில், ஆம்; அனுபவித்தாள்; அவன் அரைக்கணம் தாழ்ந்து முகம் மாற வைத்த போதே எல்லாம் அனுபவித்தாள் அன்றே? இவ்வளவிலே சில மகன்றில்கள், 'நாம் உதவி சிறிதாயினும் செய்வதற்கு நல்ல சமயம்' என்று நினைந்து, 'நாங்கள் இவ்விடத் திற்குச் செய்யவேண்டுவது என்ன?' என்று வந்து முகங்காட்டின வாகக் கொண்டு, அவற்றைப் பார்த்து, 'என் நிலையைக் கண்டும் இரங்காதே போனவருக்கு நான் எத்தைச் சொல்லுவது?' என்று ஆசையற்றவளாய், பின்னரும் ஆசைப்பெருக்காலே, பலகால் சொல் மறுத்தார்க்குச் சொல்லுவாரைப் போன்று, 'இத்தனையுஞ் சொல்ல வல்லீர்களோ, மாட்டீர்களோ?' என்கிருள்.

என் நீர்மை கண்டு இரங்தி இது தகாது என்னுத - என் நீர்மை கண்டு - என் மென்மைதனைக்கண்டு அருள் செய்து, 'நாம் பிரியுமது தகாது' என்னுதே போகட்டுப் போனவர்க்கு. பட்டரை ஒரு தமிழ்ப் புலவர் 'கேட்டு இரங்கி' என்னுது, 'கண்டிரங்கி' என்னப் பெறுமோ?' என்ன, 'அணைத்த கை நெகிழ்த்த அளவிலே வெளுத்தபடி கண்டால் பிரியத் தகாது என்று இருக்க வேண்டாவோ?' என்று அருளிச் செய்தார். கேட்ட புலவர், 'இவ்வாறு நிகழ்வதும் உளதோ?' என்ன, [1] 'புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில், அள்ளிக் கொள் வற்றே பசப்பு,' [2] 'காதலர் தொடுவுழி தொடுவுழி நீங்கி, விடுவுழி விடுவுழிப் பரத்தலானே' என்பன போன்ற தமிழ்ப்பாக்களை நீ அறியாயோ?' என்று அருளிச்செய்தார். என் நீல முகில் வண்ணர்க்கு என் சொல்லி யான் சொல்லுகேனே - இந்நிலையிலும் 'என்னுடையவன்' என்னும்படி கலந்த போது முகங்கொடுத்தவன் ஆதலின், '**என் நீல முகில் வண்ணர்க்கு**' என்கிருள். திருமுகம் மறுத்துப் போனவர்க்கு எத்தைச் சொல்லுவது என்னும் நினைவாலே, 'அவர்க்கு நான் சொல்லி விடுவது எத்தை?' என்கிருள். 'இங்ஙனம் சொல்லுவான் என்?' என்னில், 'கண்டு இரங்காதவரோ கேட்டு இரங்கப் போகின்ருர்?' என்னுமதனுலே. 'ஆயின், கண்டானே?' என்னில், ஏன்? கண்டிலனே? கலக்கிற சம்யத்தில் கை நெகிழ்த்த இடமெல்லாம் வெளுத்தபடி கண்டிருப்பானே.

---

1. *திருக்குறள்*, 1187.

2. *குறுந்தொகை*, 399.

இனி, 'என் நீர்மை கண்டு இரங்கி இது தகாது என்னாத என் நீல முகில் வண்ணர்' என்பதற்கு, 'இவ்வளவிலே என்னை வந்து அணைந்தவராய் என் நிலையைக் கண்டு இதற்கு ஒரு போக்கடி பாராமல், உங்கள் பக்கல் கேட்டு அறிய இருக்கிறவர்க்கு' என்று உரைத்தலுமாம். அவனை அனுபவிக்குமதிலும், அவனைப் பிரிந்து நோவுபடுகின்ற தன் தன்மையைக் கட்டிக்கொண்டு கிடத்தல் அமைந்ததாக இருத்தலின், '**என் நீர்மை**' என்கிறாள். தன் நிலை தானும் தனக்கும் பேச்சுக்கு நிலம் அல்லாமல் இருத்தலின், '**இது**' என்கிறாள். 'முதன்முதலில் வடிவைக் காட்டியே என்னைத் தமக்கே உரிமையாக்கினார்; அவ்வடிவிற் புகர் இப்பொழுது அகவாயிலும் சிறிது உண்டாகப் பெற்றது இல்லையே' என்பாள், '**என் நீல வண்ணர்க்கு**' என்கிறாள். 'ஆயின், மனத்தில் தண்ணளி இல்லையோ?' எனின், [1] 'யாமுடை ஆயன்தன் மனங்கல்லாலோ' என்று இவள் தானே மேல் கூறுவள். 'என்ன பாசுரத்தை இட்டு எத்தை நான் உங்களுக்குச் சொல்லி விடுவேன்' என்பாள், '**என் சொல்லி யான் சொல்லுகேனோ?**' என்கிறாள். 'ஆயினும், நாங்கள் சென்று கூறின் வாராது இரான்;' என்ன, 'நான் சொல்லி விட இருக்கிறவர், நீங்கள் சொல்லும் அளவையோ பார்த்திருக்கிறார்? [2] 'திருமுகம் மறுத்தவன் கடையீட்டுக்குக் கேட்கப் போகின்றானோ?' கண்டு இரங்காதவர்க்கு நான் எத்தைச் சொல்லுவது என்று ஆசை அற்றவளாய், பின்னையும் ஆசையின் மிகுதியினாலே, [3] 'இக்கிருஷ்ணன் பிதற்று ஒழிய வேறு ஒன்று இல்லையோ!' என்று கூறிய ஆய்ப்பெண்கள், 'கலந்த நம்மை அன்றோ வேண்டான் அவன்? பெற்ற தாயைக் காணவாகிலும் இங்ஙனே ஒருக்கால் போதானோ?' என்று கூறியது போன்று கூறுகின்றாள் மேல் :

நல் நீர்மை-நல் உயிர். இனி-ஆன அளவும் [4] கால் கட்டிப் பார்த்தாளாதலின், '**இனி**' என்கிறாள். அவர்கண் தங்காது-சேஷியான உம்முடைய பக்கலில் தங்கில் தங்கும் அத்தனை. அதாவது, பிராட்டி,

1. *திருவாய். 9. 9 : 5.*

2. *'திருமுகம் மறுத்தவன் கடையீட்டுக்குக் கேட்கப் போகின்றானோ' என்றது, பிரதானனான அரசன் ஓலையை மறுத்தவன், கணக்கன் ஓலை கேட்கப் போகின்றானோ?' என்றபடி,*

2. *ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 24 : 15.*

4. *கால் கட்டிப் பார்த்தல்-சிலேடை; போகின்றவர்களைத் தடுத்தல்; காற்றினைக் கட்டுதல்.*

பெருமாள் பக்கல் குறையேயாய், தன் பக்கல் குறை தோற்றுதபடி வார்த்தை அருளிச்செய்தவாறே, 'நாமோதாம் இங்கு நன்றாகச் செய்தோம், பெருமாளைப் பிரிந்த பின்னர் முடிந்தது என்னும் வார்த்தை கேட்கப் பெற்றது இல்லையே!' என்ன' [1]'மாதா என்றும் பிதா என்றும் பலர் பக்கலிலும் [2]பாலி பாயக் கூடியதான அன்பை, பெருமாள், என் ஒருத்தி பக்கலிலும் ஒரு மடைசெய்து போந்தார்; அவர் இவ்வாற்றாமையாலே [3]உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடு அறுத்துக்கொண்டு வர, விடாயள் தண்ணீர்ப் பந்தலில் வந்ததும் சால் உருண்டு கிடந்தது போன்று ஆக ஒண்ணாது என்று நோக்கி யிட்டு வைத்தேன், அத்தனை; அவரைக் கண்ட பிற்றைநாள் இருந் தேனாகில்காண் நீ இவ்வார்த்தை சொல்லுவது,' என்று கூறியது போன்று, 'தலைவராகிய உம்பொருட்டுத் தங்கின் தங்கலாம்,' என்ற படி. ஒரு வாய்ச்சொல் - ஒரு சொல் சொல்ல அமையும்.

நன்னீலம் மகன்றில்காள் - 'அவர் நீலமுகில் வண்ணராய் இருந்தார்; நீங்களும் நீலமகன்றில்களாய் இருந்தீர்கள்; செயலும் அவரைப் போன்று இருப்பீர்களோ?' என்றபடி. நலகுதிரோ நல்கீரோ- செய்வீர்களோ, மாட்டீர்களோ? முதல் வார்த்தையிலேயே பதின்கால் சொல் மறுத்தாரைச் சொல்லுமாறு போன்று, ஆற்றாமையின் கனத் தாலே '**நல்குதிரோ நல்கீரோ!**' என்கிறாள். (4)

38

**நல்கித்தான் காத்தளிக்கும் பொழில்ஏழும் வினையேற்கே**
**நல்கத்தான் ஆகாதோ நாரணனைக் கண்டக்கால்**
**மல்குநீர்ப் புனல்படப்பை இரைதேர்வண் சிறுகுருகே!**
**மல்குநீர்க் கண்ணேற்குஓர் வாசகங்கொண் டருளாயே.**

---

1. ஸ்ரீராமா. சுந். 36 : 30. இங்கு,
'ஊணிலா யாக்கை பேணி உயர்புகழ் சூடாது உன்முன்
நாணிலாது இருந்தேன் அல்லேன்; நவையறு குணங்கள் என்னும்
பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலாம் இன்னும் என்னும் காதலால் இருந்தேன் கண்டாய்.'
என்ற அருமைச்செய்யுள் நினைவிற்கு வருகின்றது. (கம்ப. யுத். 1603.)

2. பாலி பாய்தல்-பிரிந்து போதல். ஒரு மடை செய்து-ஒரு முகமாக்கி.

3. 'உண்ணாது உறங்காது ஒலிகடலை யூடுஅறுத்துப்
பெண்ணாக்கை யாப்புண்டு தாமுற்ற போதெல்லாம்'
(நாய்ச். திரு. 11 : 7.)

**பொ - ரை :** மிக்குப் பெருந்தன்மை வாய்ந்த தண்ணீரையுடைய தோட்டங்களில் இரையாகிய மீன்களைத் தேடுகின்ற கொடையினை யுடைய சிறிய குருகே ! உலகங்கள் ஏழனையும் தானே விரும்பி அவற்றிற்கு விருப்பமில்லாதனவற்றை நீக்கிக் காப்பாற்றுகின்ற நாரா யணனைக் கண்டால், எனக்குத் திருவருள் புரிதல்தான் தகாததோ என்று கூறி, அவர் கூறுகின்றது ஒரு வார்த்தையைக் கேட்டு வந்து, நிறைந்த நீர் பொருந்திய கண்களையுடைய எனக்குச் சொல்லியருளல் வேண்டும்.

**வி - கு :** நல்கி - விரும்பி ; 'நறுமலர்க் கோதாய் நல்கினைகேளாய்' (மணிமேக. 12 : 56.) என்ற இடத்தும் இப்பொருள்படுதல் காண்க. பொழில் - உலகம் ; 'முன்னும் ஒருவர் இரும்பொழில் மூன்றற்கும்' (திருக்கோ. 130.) என்றார் மணிவாசகரும். 'வாரிவளங்குன்றிக்கால்' (திருக்குறள்) என்புழிப்போற்று, கண்டக்கால் என்பது வினையெச்சம். படப்பை-தோட்டக்கூறு ; 'பூவிரி படப்பைப் புகார்மருங்கு எய்தி' என்பது சிலப்பதிகாரம். குருகு என்பது, ஒரு பறவை விசேடம் ; இது நாரையின் இனத்தைச் சார்ந்தது.

**ஈடு :** ஐந்தாம் பாட்டு. 'முடிவார்க்கு வேண்டா அன்றே ? ஆதலால், எங்களை விடீர் ; ஜீவிக்க நினையும் தமக்குதாம் வேண்டாவோ ?' என்கிறாள். அதாவது, 'தம்முடைய நாராயணன் என்னும் பெயர் [1] ஒறுவாய்ப் போகாமல் நோக்கிக்கொள்ளச் சொல்,' என்கிறாள்.

நல்கித் தான் காத்து அளிக்கும் பொழில் ஏழும்-உலகங்களைக் காப்பாற்றும்போது, செய்து தீரவேண்டுமே என்ற எண்ணத்தோடு அன்றிப் பேறு தன்னதாகக் காக்கின்றானாதலின், '**நல்கி**' என்கிறாள். அதாவது, 'எனக்குத் தன் பக்கல் உண்டான காதல், தனக்கு உலகத்திலே உண்டாய்க் காக்கின்றான்,' என்றபடி. விரும்புவார் இல்லாதிருக்கவும், தானே காக்கின்றானாதலின், '**தான்**' என்கிறாள். காத்தளித்தல் என்பது-விருப்பமில்லாதனவற்றை நீக்கி விரும்புகின்ற வற்றைக் கொடுத்தல். உலகம் [2] ஏழு தீவுகளாகப் பிரிக்கப்பட்

---

1. ஒறுவாய்ப் போதல்-குறைந்து போதல்.

2. ஏழு தீவுகள் - நாவல், இறவி, கிரவுஞ்சம், குசை, இலவம், தெங்கு, புட்கரம் என்பன. உலகத்தின் சிறு பிரிவுகளாகிய தீவுகளையும் உலகம் என்ற சொல்லால் அருளிச்செய்கிறார் ; 'மாயோன் மேய காடுறை உலகமும்' (பொ. அகம். 5.) என்ற சூத்திரத்தில் ஆசிரியர் தொல் காப்பியனார் உலகத்திற்கு உட்பட்ட சிறு சிறு பகுதிகளையும் உலகம் என்ற சொல்லாற்குறித்தனர்.

டிருத்தலின், '**பொழிலேழும்**' என்கிருள். அன்றி, இவ்வுலகம், கீழ் உலகம் என்னும் இவ்விரண்டனையும் ஒன்ருகக் கொண்டு அதனேடு [1]மேலே உள்ள ஆறு உலகங்களையும் சேர்த்து ஏழாகக் கோடலும் அமையும். ஆக, தன் சரீரத்தைப் பாதுகாத்துக்கோடல் அன்பினுலே ஆதலின், '**தான் நல்கிக்காத்து அளிக்கும் பொழி லேழும் நாரணன்**' என்கிருள். வினையேற்கே நல்க்த்தான் ஆகாதோ- 'தம் மக்களைப் பாதுகாத்தல் ஆகாதோ? நாட்டுக்கு இட்ட நினைப்பு அந்தப்புரத்துக்கு அரிதாக வேண்டுமோ?' என்றபடி. [2] 'கடலிலே ஏற்றமிட்டுத் தண்ணீர் அரிதாம்படியான பாவத்தைப் பண்ணு வேனே?' என்பாள், '**வினையேன்**' என்கிருள். இனி, 'நல்கித் தான் காத்து அளிக்கும் பொழிலேழும்' என்பதற்கு, 'பெயர் வேருகவும் உருவம் வேருகவும் பிரிப்பதற்குத் தகுதி இன்றிக் கிடந்த அன்று, [3] யார் இருந்து விரும்ப, இதனை உண்டாக்கினுன்? நீறு பூத்த நெருப்புப் போன்று, தான் என்ற சொல்லுக்குள்ளேயாய், தன்னை இட்டுப் பேச வேண்டி இருந்த அன்று, தன்மேலே, ஏறிட்டுக் கொண்டு நோக்கி அளிப்பவன்' என்றும், 'வினையேற்கே நல்கத்தான் ஆகாதோ?' என்பதற்கு, 'இல்லாத அன்று உண்டாக்கினுன்; உண்டாக்கியதற்குப் பலன் கருமத்தை ஏறிட்டுக் கைவிடுகையோ!' என்று பொருள் கூறலுமாம்.

நாரணனைக் கண்டக்கால்-உயிர்க்கூட்டங்களினுடைய சொரு பம் நிலைபேறு முதலியவைகள் தனக்கு அதீநமாய், இவை பிரகார மாகத் தான் பிரகாரியாய், இவற்றிலே ஒன்று குறையிலும் தன் இழவாம்படி இருக்கையாலே நாராயணன் என்று விருது ஊதிக்

---

1. *மேலே உள்ள ஆறு உலகங்கள் - புவர்லோகம், சுவர்லோகம், மகர் லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்பன.*

2. *'கடலிலே ஏற்றமிட்டுத் தண்ணீர் அரிதாம்படியான பாவத்தை' என்றது, 'கடலிலே ஏற்றமிட்டு இறைத்தும் தண்ணீர் பெருத ஒருவனைப் போன்று, சர்வ ரக்ஷகனைப் பற்றிவைத்தும் நான் விரும்பிய பொருள் கிடையாதபடியான பாவம்' என்பது பொருளாம். இங்குத் தண்ணீரைப் போன்றது, ஜீவனம்.*

3. *'யார் இருந்து விரும்ப' என்றது, 'தான்' என்ற சொல்லின் பொருள். 'இதனை உண்டாக்கினுன்' என்றது, 'நல்கி' என்ற சொல்லின் பொருள். 'நீறுபூத்த நெருப்புப்போன்று — தன் மேலேயேறிட்டுக் கொண்டு' என்றது, 'காத்து' என்ற சொல்லின் பொருள். 'நோக்கி அளிப்பவன்' என்றது, 'அளிக்கும்' என்ற சொல்லின் பொருள்.*

கொண்டு திரிகிறவரைக் கண்டால். இங்கு, 'இப்பெயர் [1]காரண இடுகுறியோ!' என்றிருந்தோம்; 'கள்ளிச்செடிக்கு மஹா விருக்ஷம் என்று பெயர் இருப்பதைப் போன்றது ஒன்றோ!' என்று கேளுங்கள் என்ற தொனிப்பொருளும் தோன்றும். மல்கு நீர்ப் புனல் படப்பை இரை தேர் வண் சிறு குருகே - பெருகாநின்றுள்ள நீரையுடைத்தான கொடித்தோட்டங்களிலே பேடையின் வாய்க்கு அடங்குவது தேடுகின்ற குருகே! கயல் உகளாநிற்கவும் பேடையின் வாய்க்கு அடங்குவது தேடுகின்றது ஆதலின், '**இரை தேர்**' என்கிறாள். [2]'புள்ளுப் பிள்ளைக்கு இரை தேடும் புள்ளம்பூதங்குடிதானே' என்றார் திருமங்கை மன்னனும். இதனால், அதன் செயல் தனக்கு என வாழாமையாய் இருந்தது என்கிறாள். கைப்பட்ட இரையினைத் தன் மிடற்றுக்குக் கீழே இழித்தாது; ஆதலின், '**வண்குருகே**' என்கிறாள். வண்மை-கொடுத்தல்; அழகுமாம். 'நான் உண்ணா விரதத்தோடு இங்கே தங்கியிருக்க, நினையாமல் இருக்கின்ற அவனைப் போல அல்லை நீ' என்பது குறிப்பு. 'காரிய காலத்தில் பூனையின் தன்மையினை அடைதல் வேண்டா; தூது போகையில் பயின்று இருப்பாரைப் போன்று இருக்கின்றாய்' என்பாள், '**சிறுகுருகே**' என்கிறாள்.

மல்கு நீர்க் கண்ணேற்கு ஓர் வாசகங் கொண்டு அருளாய்- 'இதுவும் ஒரு நீர் நிலம் இருக்கிறபடி பாராய்' என்பாள், '**மல்கு நீர்க் கண்ணேன்**' என்கிறாள். 'ஆயின், குருகு இரை தேடுவதனை விட்டு இதனைப் பார்க்குமோ!' எனின், இங்கும் [3]சேலும் கயலும் உண்டாகையாலே பார்க்கும். இனி, தன்னைக் கண்ணநீரைக் கொண்டே நிரூபிக்க வேண்டியிருத்தலின் 'மல்கு நீர்க் கண்ணேன்' என்கிறாள் எனினும் அமையும். 'ஆயின், நிரூபிப்பதற்குக் கண்ணநீர் எப்பொழுதும் இருக்குமோ?' எனின் கலவியில் ஆனந்தக்கண்ணீரும், பிரிவில் சோகக்கண்ணீரும் மாறி மாறி இருக்கும். 'மறுப்பரோ!' என்னும் அச்சத்தால், நேரே உடம்பைத் தரவேண்டும் என்று சொல்லாளாகி, '**வாசகங்கொண்டு**' என்கிறாள். மறுக்கும் வார்த்தையும் அமையும்; அவர் பக்கல் உள்ளது ஒன்றே வேண்டுவது

---

1. *காரண இடுகுறிப் பெயராவது— அவயவப்பொருள் நிறைந்ததாய் அச்சொல்லே அதற்கு அசாதாரணமான பெயராய் இருத்தல். கள்ளிக்கு மஹாவிருக்ஷம் என்ற பெயர் இடுகுறி.*

2. *பெரிய திருமொழி*, 5. 1: 2.

3. *சேலும் கயலும் என்பன, மீன் விசேடங்கள். இங்குக் கண்களைக் குறிக்கிறாள்; 'சேலேய் கண்ணியரும்', 'கயலோ நுமகண்கள்' என வருதல் காண்க.*

என்னும் நினைவினள் ஆதலின், '**ஓர் வாசகம்**' என்கிருள். 'ஆயின், மறுக்கும் வார்த்தை இவளுக்கு உத்தேஶ்யம் ஆமோ?' எனின், [1]'தாரான் தரும் என்ற இடத்தில் ஒன்றதனை, ஆரானும் ஒன்ஞதார் கேளாமே சொன்னக்கால்' என்ருர் பரகால நாயகியார். [2]'செம்மை யுடைய திருமார்வில் சேர்த்தானேலும் ஒரு ஞான்று, மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி விடைதான் தருமேல் மிக நன்றே!' என்ருர் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார். [3]'கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோர நின்ருல், பாவி நீ என்று ஒன்று சொல்லாய் பாவி யேன் காண வந்தே' என்ருர் இவ்வாழ்வார் நாயகியும். தான் [4]ஜனக குல சுந்தரியாயிருந்தும், பறவைகளைப் பார்த்து, '**அருளாய்**' என்கிருள்; அப்பறவைகளால் தனக்குக் கிடைப்பது பகவத் விஷயம் ஆகையாலே. '**நம்பியேறுதிருவுடையான்தாசர்** திருநாட்டுக்கு நடந்தார்,' என்று பட்டர்க்கு விண்ணப்பஞ்செய்ய, பட்டர் துணுக்கு என்று எழுந்து நின்று, 'அவர் ஸ்ரீவைஷ்ணவர்களுடன் பரிமாறும் படிக்குத் திருநாட்டுக்கு எழுந்தருளிஞர் என்ன வேண்டுங்காண்,' என்று அருளிச்செய்தார் என்ற ஐதிஹ்யம் இங்கு ஓர்தல் தகும். (5)

39

*அருளாத நீர்அருளி அவர்ஆவி துவராமுன்*
*அருள்ஆழிப் புட்கடவீர் அவர்வீதி ஒருநாள்என்று*
*அருள்ஆழி அம்மானைக் கண்டக்கால் இதுசொல்லி*
*யருள்ஆழி வரிவண்டே! யாமும் என் பிழைத்தோமே?*

**பொ - ரை:** வட்டமான வரிகளையுடைய வண்டே! அருட்கட லான எம்பெருமானைக் கண்டால், 'அருள் செய்யாத நீர் திருவருள் புரிந்து, தலைவியினுடைய உயிர் உலர்வதற்கு முன்னர், அருட்கடலான கருடப்பறவையினை அவர் வீதியில் ஒரு நாள் மட்டும் செலுத்துவீர்' என்று இவ்வார்த்தைகளைச் சொல்லியருள்; வாராத தாமேயன்றி, யாமும் எக்குற்றத்தைச் செய்தோம்?

---

1. *சிறிய திருமடல்.*

4. *நாய்ச்சியார் திருமொழி*, 13 : 9.

3. *திருவாய்.* 4. 7 : 3.

4. *ஜனககுலசுந்தரி-சீதாபிராட்டி.* இப்பதிகத்தின் முன்னுரையைக் காண்க.

**வி - கு :** 'அருளி' என்பதனைக் 'கடவீர்' என்பதுடன் முடிக்க. கண்டக்கால் - வினையெச்சம். யாம் என்பது, தனித்தன்மைப் பன்மை. உம்மை - எச்ச உம்மை. 'வண்டு' தும்பியின் இனத்தைச் சார்ந்தது; நன்மணத்தேமட்டும் செல்லும் இயல்பினது என்பர் நச்சினார்க்கினியர். (சிந்தாமணி 893. செய். உரை.)

**ஈடு :** ஆறும் பாட்டு. 'எங்கள் ஆற்றாமை நீக்கிலராயினும், தம்முடைய நாராயணன் என்ற பெயர் குறைந்து போகாதபடி, நோக்கிக்கொள்ளச் சொல்லுங்கள்,' என்றாள் முன். 'தாம் அல்லாதாருடன் கலந்து வரும் தாழ்வினைக்காட்டிலும் நம்முடைய நாராயணன் என்ற பெயர் அழியினும் அமையும்' என்பதனை இறைவன் திருவுள்ளமாகக் கொண்டு, மேல் செய்யத் தக்க செயலைக் கூறுகிறாள் இப்பாசுரத்தில். அதாவது, தமக்கும் தாழ்வு வாராமல், எங்கள் சத்தையும் கிடக்கைக்கு ஒருவழி உண்டு. தாம் [1] அழகு செண்டு ஏறப் புறப்படுதல், யானைக்கு அருள் செய்யப் புறப்படுதல் செய்வன போல்வன சில உளவே அன்றே? அப்போது எங்கள் தெருவே போனால் தமக்கும் ஒரு தாழ்வு வாராது; நாங்களும் சாளரத்தின் வழியால் கண்டு பிழைத்துக் கிடப்போம்; இப்படி மாறுபாடு இல்லாதனவாகச் செய்யலான பின்பு, அதனைச் செய்யச் சொல்,' என்று ஒரு வண்டை இரக்கிறாள்.

அருளாத நீர் - [2] 'என்னை வணங்குகின்றவனை நான் பாது காக்கிறேன்; இது எனக்கு நோன்பு,' என்று திருவருள் புரிவதற்குச் சங்கற்பித்திருக்குமாறு போன்று, அருளாமைக்குச் சங்கற்பித் திருக்கிற நீர். [3] 'மயர்வற மதிநலம் அருளினன்' என்று நெஞ்சுருகிக் கிடக்குமவர், '**அருளாத நீர்**' என்கிறது என்ன நிலை விசேடம் என்று அறிகிலோம்; 'அருளாத நீர்' என்று ஒரு திருப் பெயர் சாற்றுகிறாள். இனி, 'அருளாத நீர் அருளி' என்பதற்கு, 'திருவருள் செய்வதற்குப் பரிபக்குவமுள்ள உயிர்கள் கிடைக்காமை

---

1. *அழகு செண்டேறப் புறப்படுகை - அழகு காட்டப் புறப்படுதல். அதாவது, தான் அலங்கரித்துக்கொண்டு புறப்பட்டால், அந்த அழகு அடியார்கள் நெஞ்சிலே படும்படி புறப்படுகை. அன்றி, விளையாட்டுச் சாரிகை புறப்படுகையுமாம்.*

2. *ஸ்ரீராமா. யுத்த.* 18 : 33.

3. *வியாக்கியாதாவின் ஈடுபாடு-'மயர்வற' என்று தொடங்கும் வாக்கியம். திருவாய்.* 1. 1 : 1.

யாலே அருள் [1]குமரியிருந்து அருள் செய்யாதிருக்கிற நீர், அருள் செய்தற்குச் சமயம் வருமிடத்தில் அருள் செய்து' என்று உரைத்தலுமாம். 'அருளைக்கொண்டே நிருபிக்க வேண்டும் தன்மை உம்மது; அருள் இல்லாதவர்க்கும் 'அய்யோ' என்ன வேண்டும் நிலை இவளது; அங்ஙனம் இருக்க, அருளாது ஒழிவது எங்ஙனே!' என்பாள், '**நீர் அருளி**' என்கிறாள்.

அவர் ஆவி துவரா முன்-அவளுடைய உயிர் பசை அற உலர்வதற்கு முன் அருளப் பாரும். இனி, [2]'பின்னையும் அருள் செய்தற்குத் தவிரீர் அன்றே! ஆதலால், அவள், உயிர் அற்ற பொருளுக்குச் சமம் ஆவதற்கு முன்னர் அருளப் பாரும்,' என்று பொருள் கூறலுமாம். [3]'கீர்த்தியையுடைய இராமன் என்னைப் பிழைத்து இருப்பவளாக எப்படிக் கௌரவிப்பாரோ, அப்படி உம்மால் வார்த்தை சொல்லத்தக்கது,' என்றாள் பிராட்டியும். 'நாங்கள் சொல்லும் அத்தனையேயோ வேண்டுவது? அவன் அருள் செய்யப் போகின்றானோ?' என்ன, 'நீங்கள் அறிவிக்கும் அத்தனையே வேண்டுவது; கொடுவருவாரும் அங்கே உண்டு,' என்கிறாள். அருள் ஆழிப்புள்-அருட்கடலான பறவை. [4]'**வெஞ்சிறைப்புள்**' என்றாள் முன்னர்க் கொண்டு போனபடியாலே; இப்போது வரவுக்குக் காரணமாகையாலே '**அருளாழிப்புள்**' என்கிறாள். கடவீர் - 'அன்புள்ளவர்கள் கண்டு வாழுகைக்கும் தான் ஊற்றின்பம் உறுகைக்குமாகப் போகாதே [5]பிசுகிச் சுழியாநிற்கும் ஆதலின், அஃறிணைப் பொருளான தேரினைப் போன்று, வடிம்பாலே தாக்கி நடத்த வேண்டும்' என்பாள், '**கடவீர்**' என்கிறாள். 'எங்கே?' என்னில், அவர்வீதி - அவள் தெருவிலே. 'அங்ஙனம் ஒண்ணுமோ? ஒரு தெருவில் பலகால் போகப் புக்கவாறே 'இவ்வரவு ஒரு காரணமுடைத்து என்று கூறார்களோ?' என்னில், ஒரு நாள்-நாங்கள் பிழைத்துக் கிடப்பதற்கு ஒரு நாள் போக அமையும்.

---

1. *குமரியிருத்தல் - அனுபவயோக்கியமின்றி இருத்தல்.*

2. *'அவராவி துவராமுன் அருளி' என்று கூட்டி, 'அருளாத நீர்' என்றதனுடைய முன்னைய பொருளுக்குச் சேர அருளிச்செய்கிறார் 'பின்னையும்' என்று தொடங்கும் வாக்கியத்தால்.*

3. *ஸ்ரீராமா. சுந். 39 : 10. இது, முன்னே அருள வேண்டும் என்பதற்கு மேற்கோள்.*

4. *திருவாய். 1. 4 : 1.*

5. *பிசுகிச்சுழித்தல்-மந்தமாக வளைய வருதல். வடிம்பாலே தாக்கி-தேர் முதலியவற்றைக் கிளப்பும் தணி மரத்தாலே குத்தி.*

அருள் ஆழி அம்மானே - [1] 'தாமரையாள் ஆகிலும் சிதகு உரைக்குமேல் என் அடியார் அது செய்யார்,' என்னும்படி அருட் கடலானவன். இதனால், பெரிய திருவடியும் மிகை என்கிறாள். இனி அருளை இறைவனுக்கு அடைமொழியாக்காது, ஆழிக்கு அடைமொழியாக்கி, ஆழி என்பதற்குச் சக்கரம் என்று கொண்டு, 'அருளை நிரூபகமாகவுடைய திருவாழியைக் கையிலேயுடையவன்' என்று பொருள் கூறலுமாம். 'ஆயின், ஆழி அருளை நிரூபகமாக வுடையதாய் இருக்குமோ?' எனின், [2] 'அருளார் திருச்சக்கரம்' என்ப ஆதலின், சர்வேஸ்வரனுக்கும் [3] 'கைக்குறியாப்பை வாங்குவது இங்கேயன்றோ! சர்வேஸ்வரன்பக்கல் அருள் மறுத்தாலும் அருள் [4] கூடு கட்டி நிற்கும் இடமன்றோ இது? இப்பொருளால், 'பெரிய திருவடி ஒருவனுமேயோ! அங்குக் கையாளாக உள்ளார் அடைய நம் பரிகரம் அன்றோ?' என்று தெரிவிக்கிறாள்.

இது சொல்லியருள்-இத்தனையும் சொல்லியருளல் வேண்டும். 'எது?' என்னில், 'அருள் ஆழிப் புட்கடவீர் அவர்வீதி ஒருநாள்' என்கிற வார்த்தையைச் சொல்லியருளல் வேண்டும். ஆழி வரி வண்டே-வருத்தத்தை நீக்கக் கூடியதாய் அழகியதாய் இருக்கிற வண்டே. இனி, இதற்கு 'வடிவு சிறுத்திருக்கவும் காம்பீர்யம் பெருத்திருக்கிற வண்டே' என்றும், 'சுழலப் பறக்கிற வண்டே' என்றும் பொருள் கூறலுமாம். [5] இதனால், இறைவனோடு சேர்க்கின்ற

---

1. *பெரியாழ்வார் திருமொழி*, 4. 9 : 2.

2. *திருவிருத்தம்*, 33.

3. *கைக்குறியாப்பை வாங்குவது-அகப்பையாலே கடன் வாங்குதல். 'கைக்குறி, அகப்பைக்குறி' என்பன உலகவழக்கு. அதாவது, ஒரு பொருளைக் கடன் வாங்குகிறவர்கள் 'கைக்குறியாகத் தாருங்கள்; அகப்பைக் குறியாகத் தாருங்கள்' என்று சொல்லுவார்கள். குறி - அளவை. 'வறியார்க் கொன்று ஈவதே ஈகை மற்று எல்லாம், குறியெதிர்ப்பை நீர துடைத்து' (221) என்னுந் திருக்குறளையும், 'குறியெதிர்ப்பையாவது, அளவு குறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர் கொடுப்பது' என்னும் அதன் உரையையும் நோக்குக.*

4. *கூடு கட்டியிருத்தல் - தங்கியிருத்தல்.*

5. *இதனால் - 'ஆழிவரிவண்டே' என்ற இதனால். 'வண்டே' என்பது, ஆசாரியனைக் குறித்தது. 'ஆழி' என்பது, ஆத்தும குணத்தையும் 'வரி' என்பது, உருவத்தின் அழகையும் காட்டுகின்றன. இவ்வாக்கியம் உள்ளுறைப்பொருள்.*

ஆசாரியனுடைய ஆத்துமகுணத்தைப் போன்றே, உருவத்தின் குணமும் உட்கோள் என்கை. யாமும் என் பிழைத்தோம் - 'நாங்கள் என்ன தப்புச் செய்தோம்? தாம் பிரிந்து துவளவிட்டு வைத்தது போன்று, [1] நாங்களும் கிரமத்திலே பெறுகிறோம் என்று ஆறியிருந் தோமோ? [2] விலங்கின் காலில் விழுவாரும், தூது விடுவாரும் தாமாக இருக்க, [3] அத்தலை இத்தலையாகியும் வாராது இருக்கிற தம்மதோ, எங்களதோ குற்றம்?' என்பாள், **'யாமும் என் பிழைத்தோம்?'** என்கிறாள். (6)

40

**என்புஇழைகோப் பதுபோலப் பனிவாடை ஈர்கின்ற**
**என்பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு**
**என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கென்று ஒருவாய்சொல்**
**என்பிழைக்கும் இளங்கிளியே! யான்வளர்த்த நீயலையே?**

**பொ - ரை:** எலும்பினைச் செதுக்குகின்ற இளமை பொருந்திய கிளியே, எலும்பினைத் தொளைத்து அத்தொளையில் நூலினிழையைக் கோத்தலைப் போன்று, குளிர்ந்த வாடைக்காற்று அறுக்கிறது; என் குற்றங்களையே நினைந்து அருள் செய்யாத திருமகள் கேள்வனிடத்தில் சென்று, 'சுவாமியான உம்முடைய பொறுமைக்கு என்ன குற்றத்தைச் செய்தாள்?' என்று ஒரு வார்த்தை சொல்லல் வேண்டும்; நான் வளர்த்த நீ அல்லையோ?

**வி - கு:** வாடை ஈர்கின்ற - ஒருமை பன்மை மயக்கம். நினைந் தருளி - ஒரு சொல். திருவடி - கடவுள்; கடவுளையும் பெரியோர்களை யும் 'அடிகள்' என்று கூறுவது இருவழக்கிலும் உண்டு. 'திருவடியை நாரணனைப் பரஞ்சுடரை' என்பர் மேலும். வாய் - வார்த்தை. சொல்-முன்னிலை ஏவல். 'வாடை ஈர்கின்ற' என்னுமிடத்தில், 'தண் என்று, இன்னாது எறிதரும் வாடையொடு, என்னாயினள்கொல் என்னுதோரே' என்ற குறுந்தொகைச்செய்யுளை (செய். 110.) நினைவு கூர்க.

**ஈடு:** ஏழாம் பாட்டு. 'தத்தமுடைய குற்றங்களைப் பாராமல், 'அருள் ஆழிப் புட்கடவீர் அவர் வீதி' என்று சொல்லும் இத் தனையோ வேண்டுவது என்று அவர்க்குக் கருத்தாக, 'எங்கள்

---

1. காதலன் பிரிந்த காலத்தில் ஆறியிருத்தல் காதலிக்குக் குற்றம்.

2. விலங்கு - சுக்கிரீவன்.

3. அத்தலை - தலைவன். இத்தலை - தலைவி. அதாவது, தலைவனுக் குரிய தன்மைகளைத் தலைவி அடைந்தும் என்பது பொருள்.

குற்றம் ஒன்றுமேயோ பார்ப்பது? தம்முடைய அபராதஸஹத்வம் பார்த்தல் வேண்டாவோ என்று சொல்,' என்று தன் கிளியை இரக்கிருள்.

என்பு இழை கோப்பது போலப் பனி வாடை ஈர்கின்ற - எலும்பினைத்தொளைத்து அதிலே கடினமானது ஒரு கயிற்றினைக் கோத்தது போன்று நஞ்சு ஊட்டின வாடையானது அறுக்கின்றது. எலும்பும் நரம்புமேயாம்படி உடல்தான் மிகவும் இளைத்தது ஆதலின், உடல் என்னது '**என்பு**' என்கிருள். [1]'பம்பா நதிக் கரையின் சோலையிலிருந்து வருங்காற்று' நாயகனுக்கு இருந்தது போன்று, இருக்கிறதுகாணும் இவ்வாடை இவளுக்கு. நாயக நாயகிகள் ஒருவரை ஒருவர் பிறந்தவாறே, [2] அந்தர ஜாதி காலிலே துகை உண்பதே இப்படி. [3]'மனைவியானவள் இப்படி வாடைக்கு இடைந்து நோவு படாநிற்க, இதனை நீக்குதற்கு, அவர் கடல் அடைத்தல், படை திரட்டல் ஆகிறபடி என்?' என்னில், என் பிழையே நினைந்தருளி. நான் படுகிற துன்பம் போராது என்று [4] கீழாண்டைச்சிகை வாசியா நின்ருர். அதாவது, அடியார்களுடைய குற்றங்களை அறியாதவராய் இருந்தமை தவிர்ந்து, [5]'கணக்கு அற்ற ஞானங்களையுடையவர்' என்கிறபடியே, இப்போது குற்றங்களை அறிவதில் முற்றறிவினராய் இருக்கிருர் என்றபடி. அருளாத திருமாலார்க்கு-இதற்குக் [6]'குற்றம் செய்யாதவர் ஒருவரும் இலர்' என்பாரும் அருகே இருக்க, எங்கள் குற்றம் பார்த்து அவள் பக்கல் முகம் பெற இருக்கிருரோ!' என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். 'நான் இப்படி நோவுபடுதற்குக் காரணம், அவனுக்கு அவள் முகங்கொடுத்து அங்கே துவக்குகை

---

1. *ஸ்ரீராமா. கிஷ்கிந்.* 1 : 105,

2. *அந்தர ஜாதி காலிலே - ஆகாயத்தில் உண்டாகிற காற்றுலே. 'தாழ்ந்த சாதியின் கால்களிலே' என்பது தொனிப்பொருள்.*

3. *'மனைவியானவள் இப்படி' என்று தொடங்கும் வாக்கியம், மேலே கூறப்புகும் பொருளுக்கு அவதாரிகை. இவ்வாக்கியம் எதிர்மறை இலக்கணை.*

4. *கீழாண்டைச்சிகை - பழங்கணக்குகளிலே நிற்கிற நிலுவை.*

5. *ஸஹஸ்ரநாமம்.*

6. *ஸ்ரீராமா. யுத்த.* 116 : 45.

யால் அன்றே என்று இன்னுதாகிருள்,' என்று [1] **திருக்குருகைப் பிரான் பிள்ளான்** பணிப்பர். 'ஆயின், பிராட்டியின்மேல் வெறுப்பாக, பிள்ளான் இங்ஙனம் பணித்தல் தகுமோ?' எனின், உறவு உள்ள இடத்திலேயன்றே வெறுப்பும் உண்டாகும்? ஆதலால் தகும்.

என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு - 'தத்தம் குற்றம் பாராமல் அருளச் சொல்லும் இத்தனேயோ வேண்டுவது?' என்று சொல்ல நினைந்தாராகில், 'சுவாமியினுடைய திருவருளுக்கு என்ன குற்றத்தைச் செய்தாள்?' என்று நீங்கள் சொல்லுங்கள். இனி, இதற்கு, என் குற்றத்தைப் பார்த்துத் [2] தமிக்க நினைந்தாராகில், தம் பொறையாகிற நேர்தரவைக் காட்டுங்கள் என்னுதல். அதாவது, 'சுவாமியான தம் பொறை வயிறு நிறைய எங்களால் குற்றஞ்செய்யப் போமோ?' என்று சொல்லுங்கள் என்றபடி. 'ஏன் செய்யப் போகாதோ?' என்னில், [3] ஆஶ்ரயத்துக்குத் தக்கபடி அன்றே எல்லாம்? நாங்கள் குற்றம் செய்வதும் எங்கள் அளவிலே; தாம் பொறுப்பதும் தம் அளவிலேயன்றே? ஆதலால், செய்யப் போகாது. இனி, இதற்கு, 'தேவரீர் திருவருளுக்குத் [4] தண்ணீர் துரும்பாக வலம் வருதல், வணங்குதல் முதலியன எவையேனும் செய்தன உளவோ?' என்று கூறலுமாம். [5] 'பிறருடைய குற்றத்தைப் பொறுத்திருத்தலாகிய பெரிய தர்மமானது தேவரீரிடமிருந்தே என்னால் கேட்கப்பட்டது,' என்று சொல்லும்படி இருக்கும் நிலைக்கு என் பிழைத்தாள் என்பாள், '**திருவடியின் தகவினுக்கு என் பிழைத்தாள்**' என்கிருள். [6] 'கோபத்திற்குக் காரணம் யாது?' என்கிருள் தாரை; அதாவது,

---

1. 'திருமாலார்' என்ற சொல்லுக்கு நஞ்சீயர் நிர்வாகத்தில், 'திருவினிடத்தில் மாலார்' என்பது பொருள், பிள்ளான் நிர்வாகத்தில், 'திருவின் மாலுக்கு விஷயமாக இருப்பவர்' என்பது பொருள்.

2. தமிக்க - தண்டிக்க. நேர்தரவு - 'குற்றம்பொறுத்தோம்' என்று நேரில் கூறும் ஆணை.

3. 'ஆஶ்ரயத்துக்குத் தக்கபடியன்றே எல்லாம்?' என்றது, 'விபுத்துவ அணுத்துவ ரூப ஆஶ்ரயத்துக்குத் தக்கவாறு' என்பது பொருள்.

4. தண்ணீர் துரும்பு - தடை.

5. ஸ்ரீராமா. சுந். 40 : 41.

6. ஸ்ரீராமா. கிஷ்கிந். 33 : 40.

'மநுஜேந்த்ரபுத்ர - அறுபதினாயிரம் ஆண்டு செய்தார் செய்த குற்றங்களைப் பொறுத்துச் சேரவிட்டு ஆண்டுகொண்டு போந்தார் உங்கள் தமப்பனர்; அவர் வயிற்றிலே பிறந்து, குற்றம் செய்தோம் என்று தலையறுக்க

'இராஜபுத்திரர்களை நான்கு மாதம் மின்னுக்கும் இடிக்கும் இரையாக்கி, தாங்கள் இன்பத்திலே கருத்து ஊன்றினவர்களாய் இருந்தும், இருந்தனவற்றுள் ஒன்றையும் நினையாது, அவர்கள் பொறையை நினைந்திருந்த கனத்தாலே உம்முடைய கோபத்திற்கு அடி என்?' என்கிறுள். இதனை இங்கு நினைவு கூர்க.

ஒரு வாய் சொல் - ஒரு வார்த்தை சொல்லு. என்பு இழைக்கும் இளங்கிளியே - இளமையாலும், அன்புடன் கூடிய சொற்களாலும், வடிவில் பசுமையாலும், வாயில் பழுப்பாலும் தலைவனுடைய நினைவை உண்டுபண்ணுவதனுல், எலும்பைச் சிதைக்கின்ற கிளியே! இனி, 'என்பு இழைக்கும்' என்று பிரிக்காமல், என் பிழைக்கும் என்று கொண்டு, 'என் நிலையை அறிவித்தால் என்ன தவறு உண்டாம்?' என்று கோடலுமாம். யான் வளர்த்த நீ அலேயே - திருமகள் கேள்வனுய்த் தான்தோன்றியாய் இருப்பார் செய்வனவற்றை வயிற்றில் பிறந்தாரும் செய்வரோ? இனி, இதற்குக் 'கலந்து பிரிந்தார் செய்வனவற்றை வளர்த்தவர்களும் செய்வர்களோ?' எனலுமாம். இனி, 'அவன் தான் இப்படிச் செய்யவேண்டும் என்று செய்தானே? என்னுடைய சம்பந்தம் அன்றே அவன் இப்படிச் செய்தான்? அப்படி, என்னுடைய சம்பந்தம் உனக்கும் உண்டான பின்பு, நீ நலியச் சொல்லவேண்டுமோ?' என்பாள், '**யான் வளர்த்த நீயலேயே**' என்கிறுள் என்று கூறலுமாம். இனி, 'எனக்குத் தகுந்தாற்போலே அன்றே நீயும் இருப்பாய்? உன்மேல் குறையுண்டோ?' என்பாள், அங்ஙனங் கூறுகின்றுள் என்றலும் ஒன்று. (7)

41

**நீயலேயே சிறுபூவாய்! நெடுமாலார்க்கு என்தூதாய்**
**நோய்எனது நுவல்என்ன நுவலாதே இருந்தொழிந்தாய்**
**சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்நான் இனிஉன்து**
**வாய்அலகில் இன்அடிசில் வைப்பாரை நாடாயே.**

---

*வந்து நின்றீர் நீர்; அழகிதாயிருந்தது உம்முடைப் போக்கு! கஸ்தேந ஸந்திஷ்ட திவாநிதேரே — சாஸ்திரவஸ்யமன்றிக்கே கண்டதிலே கடுகச் சாபலத்தைப் பண்ணி மீளமாட்டாத விலங்குகளை நீரே. 'இழந்த போகங்களை புஜிப்பது' என்று சேர்த்துவிட்டு, நீர் சொன்னவற்றைச் செய்தன என்று தலையறுக்க வந்து நின்றீர்; இப்படிச் சொல்லாம்படியன்றே இவர் பொறையிருப்பது?' என்பது அச்சுலோகத்திற்கு வியாக்கியாதா அருளிச்செய்த பொருள்.*

**பொ - ரை :** 'சிறிய நாகணவாய்ப் பறவையே, அடியாரானார்க்கு இரங்கும் பெரும்பித்தரான தலைவர்க்கு என் தூதாகிச் சென்று, என் நோயினைச் சொல்வாய் என்று யான் கூறவும், கூறாமல் இருந்து விட்டாய்; அதனால், காரியத்தைக் கெடுத்தது நீ அன்றோ? இப்பொழுது, யான் சாயலும் அழகிய மாமை நிறமும் நீங்கப் பெற்றேன்; இனிமேல், உனது வாயலகில் இனிய உணவினை ஊட்ட வல்லவர்களைத் தேடிக் கொள்வாய்,' என்றவாறு.

**வி - கு :** பூவை வேறு, கிளி வேறு; 'பூவையும் கிளியும் கேட்டுப் புழைமுகம் வைத்து நோக்கி' என்றார் தேவரும். (சிந். 2510.) பூவை என்னும் ஐயீற்றுப் பெயர், விளி ஏற்றலின் 'ஆய்' ஈறாகத் திரிந்தது. சாயல் - மென்மை. 'சாயல் மென்மை' என்பது தொல்காப்பியம். மாமை - அழகு; இதன் நிறம் - மாந்தளிர் (குறுந். 331). அசோகந் தளிர் (கலித். 15). ஆம்பலின் நார் உரித்த மெல்லிய தண்டு (நற். 6). இவற்றின் நிறத்தைப் போன்றது என்று கூறுவர். 'உள் ஊரும் பசலைநோய் எனக்கே தந்துஎன், ஒளிவளையும் மாநிறமும் கொண்டார் இங்கே' என்றார் திருமங்கை மன்னனும். அடிசில் என்பது, உண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கு எல்லாம் பொதுப்பெயர்.

**ஈடு :** எட்டாம் பாட்டு. முன்பு இவள் வார்த்தை சொல்லிக் கொண்டாடுகையாலே தரித்திருந்த பூவையானது, இவள் உருவப் புக்கவாறே தானும் உருவப்புக்கது; அத்தைப் பார்த்து, [1] 'முன்னரே என் நிலையை அறிவி என்னச் செருக்கு அடித்திருந்தாய்; நானோ, முடியாநின்றேன்; இனி, உன்னைக் காப்பாரைத் தேடப் பாராய்,' என்கிறாள்.

நீ அலையே - 'என் நிலையை அறிவிக்க வேண்டும் என்ன, அறிவியாதே இருந்த உன்னாலே வந்தது அன்றோ இது! என்னாலே என்கிறது என்? வாராது இருந்த குற்றம் அவனது அன்றோ?' என்ன, அறிவித்தால் வாராதிருந்தானாகில் அன்றோ அவனுக்குக் குறையாம்? நேரே சம்பந்தம் எம்பெருமானோடேயாய் இருக்கவும், 'ஞானத்தை எந்த ஆசாரியனிடமிருந்து பெறுகிறானோ அவனை முதலில் வணங்கக் கடவன்,' என்கிறபடியே, செய்த உபகாரத்தை நினைந்து ஆசாரியனை விரும்புவது போன்று, இவளும் பூவையைப்

---

1. 'நுவலென்ன நுவலாதே இருந்தொழிந்தாய்' என்று இப்பொழுது சொல்லுகையாலே, 'என் நிலையை அறிவி' என்று முன்னர்க் கூறியது பெறுதும்.

பார்த்து, '**நீ அலையே**' என்கிருள். இதனுல், 'பகவல்லாபம் சேர்ப்பா ராலே' என்று இருக்கிருள் என்பது போதரும். சிறு பூவாய் - உன் பருவம் நிரம்பாமை அன்றே நம் காரியத்தைக் கெடுத்தது? நெடு மாலார்க்கு - அவர்க்குக் காதலை உண்டாக்கிக் கொடு வரவேண்டும் என்று இருந்தாய் அல்லையே? என் தூதாய் - எனக்கு அவர் பக்கல் காதல் இல்லாமை இருந்தாயும் அன்றே! நோய் எனது நுவல் என்ன நுவலாதே இருந்தொழிந்தாய் - 'எனது நிலையை அங்கே சென்று சொல்,' என்ன, சொல்லாதே இருந்தொழிந்தாய்; 'ஸ்ரீ பரதாழ்வான் நோய், என்றால் [1] சாதுர்த்திகமாய் இராதது போன்று, இவளும் உலகத்தார் நோயினின்றும் தனது நோயை வேறுபடுத்திக் காட்டு வாள், '**எனது நோய்**' என்கிருள். 'வந்தொழிந்தான், போயொழிந் தான்' என்பன போன்று, 'இருந்தொழிந்தாய்' என்பதும் ஒரு சொல். தானும் நாயகனும் சேர இருத்தலை ஒரு வார்த்தையினுலே நோக்க லாய் இருக்கவும், அது செய்யாது ஆறியிருந்தது ஆதலின், '**இருந் தொழிந்தாய்**' என்கிருள்.

---

1. *சாதுர்த்திகம் - இது ஒரு முறை ஜ்வரம்; நான்கு நாள்களுக்கு ஒரு முறை வருவது; உடலிலுள்ள நீர் இரத்தம் சதை எலும்பு இவற்றைப் பற்றி வருவது. 'சாதுர்த்திகமாயிராதது போன்று' என்றது, ஸ்ரீராம பிரானைப் பிரிந்ததால் உளதாய விரஹதாபமாகிய நோய் விட்டு நீங்குதல் இன்றி, என்றும் நிலைபெற்று நின்று ஸ்ரீபரதாழ்வானை வருத்தியதாதலின், உலகமக்கட்கு விட்டுவிட்டு வருகின்ற முறை ஜ்வரம் முதலிய நோய்களைப் போன்றது அன்று ஸ்ரீபரதாழ்வானுடைய நோய் என்றபடி.*

*'வெயர்த்த மேனியன் விழிபொழி மழையன்மூ வினையைச்*
*செயிர்த்த சிந்தையன் தெருமரல் உழந்துழந்து அழிவான்*
*அயிர்த்து நோக்கினும் தென்றிசை அன்றிவேறு அறியான்*
*பயத்த துன்பமே உருவுகொண்டு என்னலாம் படியான்.'*

*என்ற கம்பராமாயணச் செய்யுளை ஈண்டு நினைவு கூர்க.*

*'ஜடிலம்-நல்ல மாலை வத்தால் 'பிள்ளை பரதன் மயிருக்காயிருந்தது' என்றாயிற்றுச் சக்கரவர்த்தி கூறுவது; அவனுயிற்றுச் சடை புனைந்திருக் கிருன். சீரவஸநம் - நல்ல வஸ்திரம் கண்டால் 'இது பிள்ளைக்கு ஆம்' என்று கூறுவர்; அவனன்றோ மரவுரி உடுத்திருக்கிருன்' ப்ராஞ்ஜலிம் - அவர்கள் இரந்துகொடுக்கப் பெறுமவன், தன் விருப்பத்துக்குத் தான் இரப்பாளனுயிருந்தான். பதிதம் புவி - 'படுக்கையுறுத்தும்' என்று மடியிலே கண்வளருமவனுயிற்றுத் தரைக்கிடை கிடக்கிருன். ததர்ச ராமோ துர்த்தர்சம்—வைத்த கண் வாங்காதே கண்டுகொண்டிருக்கும் பெரு மாளுக்கும் கண்வைக்க ஒண்ணுதபடி இருக்கிறவனை. யுகாந்தேபாஸ்கரம் யதா—பெருமாள் ஒருவர்க்கும் கண்வைக்க ஒண்ணுமையேயன்றி 'உலகமே அழியப்புகுகின்றதோ!' என்னும்படியிருந்தான்.' (ஸ்ரீராமா. அயோத். 100 : 1.) என்பது பரதனுடைய துன்பத்தைக் கூறும் சுலோகத்திற்கு வியாக்கியாதா அருளிச்செய்த பொருள்.*

'அதற்கு இப்பொழுது வந்தது என்?' என்ன, சாயலொடு மணி மாமை தளர்ந்தேன் நான் - சமுதாய சோபையோடு நிறத்தில் நிறை வையும் இழந்தேன். 'இனிச் சென்று அறிவிக்கிறேன்,' என்று விரைந்தது; 'தண்ணீர் சென்ற பின் அணை கட்டுவாரைப் போன்று, இனி அறிவித்தால் என்ன இலாபம் உண்டு?' இனி உனது வாய் அலகில் இன் அடிசில் வைப்பாரை நாடாயே - 'இனி, உன்னைக் காப்பாற்றுகின்றவர்களைத் தேடப் பாராய்,' என்கிருள். இதனால், 'அவன் வந்தாலும் போன நிறத்தை மீட்கப் போகாது,' என்று இருக்கிருள். பெரிய திருமலை நம்பி, தம்முடைய இறுதிக்காலத் திலே, தமக்கு ஒரு வெண்ணெய்க்காடும் பிள்ளையாயிற்றுத் திருவாரா தனம்; அவர் திருமுன்பில் திருத்திரையை வாங்கச் சொல்லி, 'சாயலொடு மணி மாமை தளர்ந்தேன் நான் இனி உனது, வாய் அலகில் இன்அடிசில் வைப்பாரை நாடாயே,' என்ருராம். (8)

*நாடாத மலர்நாடி நாடோறும் நாரணன்றன்*
*வாடாத மலரடிக்கீழ் வைக்கவே வகுக்கின்று*
*வீடாடி வீற்றிருத்தல் வினையற்றது என்செய்வதோ*
*ஊடாடு பனிவாடாய்! உரைத்துஈராய் எனதுஉடலே.*

**பொ - ரை:** 'நடுவே திரிகிற குளிர்ந்த வாடைக்காற்றே, தேடு தற்கு அரிய பூக்களைத் தேடிக் கொணர்ந்து, நாடோறும் நாராயண னுடைய வாடுதல் இல்லாத மலர் போன்ற திருவடிகளில் வைத்து வணங்குவதற்காகவே அவன் இவ்வுயிர்களைப் படைத்தான்; அவ்வாறு இருக்க, 'பிரிவிலே நிலைத்துத் தனியே தங்கியிருத்தலாகிற நல்வினை யற்ற காரியம் என்ன பயனைச் செய்வதோ?' என்று அவனுக்குக் கூறி, தக்க மறுமொழி இல்லையாகில் மீண்டு வந்து எனது உடலை அறுக்கக் கடவாய்,' என்கிருள்.

**வி - கு:** 'நாடி வைக்க வகுக்கின்று,' என முடிக்க. 'மலரடிக்கீழ்' கீழ் - ஏழனுருபு. 'பொற்றெடி அரிவை பொழுதுகண்டு இரங்கின்று,' (புற. வெ. 314.) என்புழிப்போன்று, 'வகுக்கின்று' என்பதும் ஒரு சொல்; 'வகுத்தது' என்பது பொருள். வீடு - முதனிலை திரிந்த தொழிற் பெயர். வாடை, விளி ஏற்றலின் 'வாடாய்' என நீண்டது.

**ஈடு:** ஒன்பதாம் பாட்டு. 'சாயலொடு மணிமாமை தளர்ந் தேன்' என்று இருக்கிற சமயத்தில் வாடைக்காற்று வந்து உடம்பிலே பட்டது; அதனுடைய தோற்றரவைக் கண்ட தலைவி

மகாராசருடைய மிடற்று ஓசையில் தெளிவைக் கேட்டுத் தாரை, 'சிறிது நேரத்திற்கு முன் வாலி கையில் நெருக்குண்டு போனவர் இப்போது இப்படித் தெளிந்துவந்து [1]அறைகூவுகிற இது வெறுமன் அன்று; இதற்கு ஓர் அடி உண்டு,' என்றது போல இவ்வாடைக்கு ஓர் அடி உண்டாக வேண்டும் என்று நினைத்தாள்; நினைந்து, 'இராசாக்கள் இராசத் துரோகம் செய்தவர்களை நலிகைக்கு வேற்றாரரை வரவிடுமாறு போன்று, நம்மை நலிகைக்காகச் சர்வேஸ்வரன் இவ்வாடையை வரவிட்டானாகவேண்டும்' என்று பார்த்து, வேற்காரர் கொடுபோம் நலியப்புக்கவாறே [2]'நிதி உண்டு' என்பாரைப் போன்று, 'நான் சொல்லுகிற வார்த்தையை நீ அங்கே சென்று அறிவித்தால், 'அத்தலையால் வரும் நன்மையும் வேண்டா' என்று இருந்தானாகில், அவசியம் வந்து என்னை முடிக்கவேண்டும்,' என்று அவ்வாடையை இரக்கிறாள்.

நாடாத மலர் நாடி - 'ஆத்தும புஷ்பத்தைச் சொல்லுகிறது' என்பாரும் உளர். **நஞ்சீயர்,** [3]'எண்திசையும் உள்ள பூக்கொண்டு' என்கிறபடியே, 'தேட அரிய மலர்கள் எல்லாம் தேடி' என்று அருளிச்செய்வர். நாடோறும்-இதுதான் ஒரு நாள் தேடி விடுதல் அன்றி இடைவிடாமல் என்றபடி. கிஞ்சித்கரித்துச் சொரூபத்தைப் பெறுகின்ற இவ்வாத்துமாவிற்கு, இடை விடுதல் சொரூபத்திற்கு இழுக்கு ஆதலின், '**நாடோறும்**' என்கிறாள். நாரணன்தன்-இடைவிடாமல் தொண்டுகளைச் செய்யத் தக்கவாறு எல்லாப்பொருள்கட்கும் சுவாமியானவன். வாடாத மலர் அடிக் கீழ்-செவ்வி மாறாத பூப்போன்று இருக்கிற திருவடிகளின் கீழே. [4]சொரூபத்திற்கு இழுக்கு ஆனாலும் விட ஒண்ணாதபடி எல்லையற்ற இனிய பொருளாகவுமிருக்கிற திருவடிகள் ஆதலின், '**வாடாத மலரடி**' என்கிறாள். வைக்கவே-சேர்ப்பதற்காகவே. வகுக்கின்று-உண்டாக்

---

1. *அறை கூவுதல்-போருக்கு அழைத்தல். ஓர் அடியுண்டாக வேண்டும்—ஈஸ்வரன் அடியாக இருத்தல் வேண்டும்.*

2. *'நிதியுண்டு என்பாரைப்போன்று' என்றது, பாசுரத்தில் 'வைக்கவே வகுக்கின்று' என்றதனை நோக்கி.*

3. *திருவாய். 4. 7 : 8.*

4. *'சொரூபத்திற்கு இழுக்கு ஆனாலும்' என்றதன் கருத்து, இவ்வுயிர்கள் நாராயணனுக்கு உரிமைப்பட்டவை அல்லவாயினும் என்பது.*

கிற்று. [1] ‘நீ காட்டில் வசிப்பதற்காகவே படைக்கப்பட்டாய்,’ என்று இளையபெருமாளைப் பார்த்துச் சுமித்திராதேவி கூறியது போன்று, இவளும் ‘வைக்கவே வகுக்கின்று’ என்கிருள். ஆக, இப்படி வகுத்ததுமாய், சுலபமுமாய், எல்லை இல்லாத இனிய பொருளுமாய் உள்ள திருவடிகளிலே எல்லாவகைத் தொண்டுகளையும் செய்யவாயிற்று இதனை உண்டாக்கினுன் என்றபடி. ‘ஆயின், தொண்டு செய்வதால் உயிர்களுக்குச் சொரூபலாபம் ஒழிய இறைவனுக்கு இத்தொண்டுகளால் பயன் இல்லையாதலின், அவதாரிகையில் ‘நிதி உண்டு’ என்ற எடுத்துக்காட்டுச் சேராதே?’ எனின், அடியார்கட்குக் கிஞ்சித்கரித்துச் சொரூப சித்தியாயினுற்போன்று, இறைவனுக்கும் கிஞ்சித்கரிப்பித்துக்கொண்டு அன்றோ சொரூபசித்தி?

இப்படியிருக்க, வீடு ஆடி வீற்றிருத்தல் வினை அற்றது என் செய்வதோ-நல்வினை இல்லாத காரணத்தால் பிரிவிலே மூழ்கித் தம்மைப் பிரிந்திருக்கிற இப்பொல்லாத இருப்பு உண்டு ; இது [2] என் செய்யக் கடவதோ! வீடு-விடுகை; அதாவது, பிரிதல், ஆடுகை-மூழ்கியிருத்தல். வீற்றிருக்கையாவது, பிரிவிலே முடி சூடியிருத்தல். வினையறுகை-நல்வினை அறுகை. இனி, இத்தொடர்மொழிக்கு, [3] ‘தம்மையும் பிரிந்து, தம்மோடு ஒரு சம்பந்தத்தை இட்டுச் சுற்றத்தார்களும் கைவிட, அவர்களையும் விட்டு, வேறுபட்டிருக்கிற இவ்வுயிர் என் செய்யக் கடவதோ!’ என்று பொருள் கூறலுமாம். [4] ‘எமராலும் பழிப்புண்டு இங்கு என்? தம்மால் இழிப்புண்டு, தமரோடு அங்கு உறைவார்க்குத் தக்கிலமே கேளீரே,’ என்பர் மேல்.

---

1. ஸ்ரீராமா. அயோத். 40 : 5.

2. என் செய்யக்கடவதோ-‘பிரிவை முடிவாகக் கொண்டதோ, அல்லது, இறத்தலை முடிவாகக் கொண்டதோ ?’ என்றபடி.

3. ‘வீடு ஆடி வீற்றிருத்தல் வினை அற்றது’ என்பதற்கு, இது பொருள் அருளிச்செய்கிருர். முதற்பொருளுக்கு, ‘வினையற்ற காரணத்தால் வீடாடி வீற்றிருத்தல்’ என்று கூட்டுக. இரண்டாம் பொருளுக்கு, ‘வீராடி இருப்பதாய், வீற்றிருத்தலையுடையதாய் இருக்கிற வினையற்றது, என்று கூட்டுக. இங்கு வீற்றிருத்தல் - வேறுபட்டிருத்தல். ‘வீடாடி’ என்றதற்கு - உறவினர் பிரிவையும் உபலக்ஷணத்தாற்கோடல் வேண்டும். வினையற்றது - நல்வினையற்ற உயிர்ப்பொருள்.

4. திருவாய். 9. 7 : 2. இது, அவனைப் பிரிந்திருக்கும் நிலையில் அவனுடைய சம்பந்தமே காரணமாக உறவினர்களும் கைவிடுகைக்கு மேற்கோள்.

ஊடு ஆடு பனி வாடாய் - வேற்காரர் [1] அங்குத்தை வார்த்தையை இங்கே சொல்லி இங்குத்தை வார்த்தையை அங்கே சொல்லித் திரியுமாறு போன்று, அங்கோடு இங்கோடாய்த் திரிகின்றதாயிற்று. இனி, 'ஊடு' என்பதற்கு 'உள்' என்றும், 'ஆடுகை' என்பதற்குச் 'சஞ்சரிக்கை' என்றும் பொருள் கொண்டு, 'அங்கே அந்தரங்கமாகச் சஞ்சரிக்கின்ற நீ' என்றும், 'புணர்ச்சிக்காலத்தில் என்பால் கிட்டிச் சஞ்சரித்துப் போந்த நீ' என்றும் பொருள் கோடலுமாம். உரைத்து ஈராய் எனது உடலே-'நித்தியமான தொண்டினைச் செய்வதற்கு இட்டுப் பிறந்த இவ்வாத்துமா இப்படியிருக்கக்கடவதோ?' என்று அறிவித்தால், 'அத்தலையால் வருங்கைங்கரியமும் நமக்கு வேண்டா,' என்று இருந்தானாகில், 'அவசியம் வந்து அவனுடைய பிரிவிற்குச் [2] சிளையாத என் உடலை முடித்துவிட வேண்டும்,' என்று காலைப் பிடித்து வேண்டிக்கொள்ளுகிறாள். (9)

43

உடல்ஆழிப் பிறப்புவீடு உயிர்முதலா முற்றுமாய்க்
கடல்ஆழி நீர்தோற்றி அதனுள்ளே கண்வளரும்
அடல்ஆழி அம்மானைக் கண்டக்கால் இதுசொல்லி
விடல்ஆழி மடநெஞ்சே! வினையோம்ஒன் றுமளவே.

**பொ - ரை:** 'ஆழ்ந்ததாய், சுவாதீனமாக உள்ள மனமே, உடலினுடைய வட்டமான பிறப்பு, அவ்வவ்வுடல்களில் தங்கியிருக்கின்ற உயிர்கள் முதலாகவுள்ள எல்லாவற்றையும் உண்டாக்குவதற்காக ஆழ்ந்துள்ளதான நீரையுடைய கடலை உண்டாக்கி, அக்கடல் நடுவண் யோகநித்திரை செய்கிற, பகைவரைக் கொல்லுகிற சக்கரத்தையுடைய இறைவனைக் கண்டால், இதனைச் சொல்லி, வினையினையுடைய நாம் அவனோடு சேருமளவும் அவனை விடாதேகொள்,' என்கிறாள்.

**வி - கு:** உயிர் தங்குதற்கு இடமாக இருத்தலின் உடலை 'வீடு' என்கிறாள்; விடுதல்-தங்குதல். 'ஆய்' என்னும் எச்சத்தைக் 'கண்வளரும்' என்பதுடன் முடிக்க. கண்டக்கால்-வினையெச்சம், 'பயனில் சொல் பாராட்டு வானை மகனெனல்' (குறள். 196.) என்புழிப் போன்று, ஈண்டு 'விடல்' என்பது எதிர்மறை வியங்கோள். 'வினையோம்' என்றது, மனத்தை உளப்படுத்திய பன்மை.

---

1. அங்குத்தை - அவ்விடம்.

2. சிளையாத - சலியாத, 'காலைப்பிடித்து' என்றது, சிலேடை; கால் - பாதமும், காற்றும்.

ஈடு: பத்தாம் பாட்டு. 'அல்லாதவற்றை எல்லாம் விட்டு முடிவில் நெஞ்சினைத் தூது விடுகிருள்,' என்பாரும் உளர். அப்போது 'விடல்' என்பதற்கு, 'அவனை விடாதேகொள்' என்பது பொருளாம். அன்றி, மேல் பாசுரத்தில் 'வைக்கவே வகுக்கின்று' என்று தொண்டினைப் பற்றிய வார்த்தை வந்தவாறே, 'தாய்முலையை நினைந்த கன்று போன்று திருவுள்ளம் பதறிச் சரீரத்தை விட்டுப் போகப் புக்கது; நம் காரியம் ஓர் அறுதி பிறக்குமளவும் நீ என்னை விடாதேகொள்' என்கிருள் என்னுதல்;

உயிர் உடல் ஆழிப் பிறப்பு வீடு முதலா முற்றும் ஆய்-உயிரானது, சரீரத்தினுடைய வட்டமான பிறப்பினது வீடு உண்டு மோக்ஷம்; அது முதலான உறுதிப்பொருள்களைப் பெறுகைக்காக, அன்றி, 'ஆழிப்பிறப்பு' என்பதற்கு, ஆழி என்று கடலாய், அத்தால் காம்பீர்யமாய், 'எல்லை அற்ற பிறப்பு' என்று பொருள் கூறலும் ஒன்று. 'ஆயின், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கனுள், வீட்டினை முன்னர்க் கூறுவான் என்?' எனின், படைத்தலுக்குப் பயன் மோக்ஷம் ஆகையாலே அதனை முன்னர்க் கூறுகின்ருள். இனி, 'உடல் ஆழிப்பிறப்பு வீடு உயிர் முதலா முற்றுமாய்' என்பதற்கு, 'உடலினுடைய எல்லை இல்லாத பிறப்புகள்தோறும் உண்டாகின்ற தேவர்கள் முதலான சரீரங்களில் தங்கியிருக்கின்ற உயிர்கள் முதலான காரியக்கூட்டத்தை உண்டாக்குகைக்காக' என்று பொருள் கூறலும் ஆம். [1]'எல்லாப் பொருளுமாக விரிகின்றேன்' என்கிறபடியே, தன் திருமேனியின் மலர்த்தியே உலகம் ஆதலின் 'ஆக்கி' என்னுது 'ஆய்' என்கிருள்.

ஆழி நீர் கடல் தோன்றி - [2]'அப்பரம்பொருள் முதன்முதலில் தண்ணீரையே படைத்தார்' என்கிறபடியே, மிக்க தண்ணீரையுடைய ஏகார்ணவத்தை உண்டாக்கி. அதனுள்ளே கண்வளரும் - இவ்வருகு உண்டான படைத்தல் முதலியவற்றிற்காக அங்கே வந்து கண்வளர்ந்தருளும். அடல் ஆழி அம்மானை-படைத்த உயிர்களுக்கு விரோதிகளாய் இருப்பாரை அழியச் செய்கைக்காக [3]ஆசிலே வைத்த கையுந்தானுமாக ஆயிற்றுக் கண்வளர்ந்தருளுவது. கண்டக்கால்-என்னிலும் உனக்கு அன்ருே பேறு முற்பட்டு இருக்கிறது?

1. தைத். ஆனர். 6 : 91
2. மனு ஸ்ருதி. 1 : 8.
3. ஆசு - ஆயுதத்தின் பிடி.

[1] சீதா பிராட்டியால் பார்க்கப்பட்ட சந்திரனை நான் பார்க்கிறேன்; ஆதலால், கண்ணின் கலவி உண்டாயிற்று' என்பது போன்று, கண்டாரைக் காணும் இத்தனை அன்றோ தனக்கு? இது சொல்லி - 'வைக்கவே வகுக்கின்று' என்கிற வார்த்தையைச் சொல்லி. இனி, [2] 'இறைவனை நிவேதிக்கும்பொருட்டே கைகால் முதலிய உறுப்புகளையுடைய விசித்திரமான இச்சரீரமானது முற்காலத்தில் உண்டாக்கப்பட்டது,' என்கிறபடியே, 'தேவர் திருவடிகளிலே எல்லாத் தொண்டுகளையும் செய்வதற்காக அன்றோ இதனை உண்டாக்கினாய்?' என்னும் இதனைச் சொல்லி என்று கூறலும் ஆம். ஆழி மடம் நெஞ்சே - ஞானத்தினையுடையையாய் எனக்கு உரிமைப்பட்டிருக்கிற மனமே! அன்றி, இதற்கு, 'சுழன்று வருகிற பேதை நெஞ்சே' என்று பொருள் கூறலும் ஒன்று. வினையோம் ஒன்றும் அளவும் விடல் - படைப்பிற்குப் பயன் அங்கே அவரைக் கிட்டி அடிமை செய்கையாய் இருக்க, பிரிகைக்கு ஈடான பாபத்தைப் பண்ணின நாம் அவரோடே சேருமளவும் நீ அவரை விடாதே ஒழிய வேண்டும். (10)

44

*அளவியன்ற ஏழ்உலகத் தவர்பெருமான் கண்ணனை*
*வளவயல்சூழ் வண்குருகூர்ச் சடகோபன் வாய்ந்துரைத்த*
*அளவியன்ற அந்தாதி ஆயிரத்துள் இப்பத்தின்*
*வளவுரையால் பெறலாகும் வானோங்கு பெருவளமே.*

**பொ - ரை:** அளவினைக் கடந்த ஏழுவகையான உலகத்தில் உள்ளவர்கட்குப் பெருமானாகிய கண்ணபிரானை, வளப்பம் பொருந்திய வயல்களாற் சூழப்பட்ட அழகிய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபர் மனம் பொருந்தி அருளிச்செய்த, பெருமையின் எல்லையைக் கடந்த அந்தாதியான ஆயிரந்திருப்பாசுரங்களுள் இப்பத்துப் பாசுரங்களின் வளப்பம் பொருந்திய சொற்களால் அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டில் சென்று செய்யப்படும் மிக உயர்ந்த தொண்டினைப் பெறலாகும்.

**வி - கு:** 'அளவியன்ற பெருமான், ஏழுலகத்தவர் பெருமான்' எனக் கூட்டுக. அந்தாதி - ஒரு செய்யுளில் அந்தமாய் நிற்கும் எழுத்து அசை சீர் அடி என்பன அடுத்த செய்யுளின் ஆதியிலே நிற்பது; அந்தம்-முடிவு. ஆதி - முதல்.

---

1. ஸ்ரீராமா. யுத். 5 : 9.
2. ஸ்ரீ விஷ்ணு தத்துவம்.

ஈடு: முடிவில், இத்திருவாய்மொழியில் [1]'சொற்களை மாத்திரம் கற்றலே அமையும், திருநாட்டினைப் பெறுகைக்கு,' என்கிறார்.

அளவியன்ற - அளவைக் கடந்திருக்கின்ற; அளவு அற்ற பெருமையினையுடையவன் என்றபடி. இத்தால், இந்நிலையிலே முகங் காட்டுகைக்கு ஈடான ஞானம் முதலிய குணங்கள் நிறைந்தவன் என்கை. 'வியந்த' என்பது 'வியன்ற' என விகாரப்பட்டது. வியத்தல் - கடத்தல். ஏழ் உலகத்தவர் பெருமான் - நாராயணன் என்ற திருப்பெயர்க்குக் குறைவு வாராதபடி ஸர்வேஶ்வரன் ஆனான். 'ஆயின், 'ஏழ் உலகத்தவர்' என்றால், தம்மைச் சொல்லியது ஆகுமோ?' எனின், ஏழ் உலகத்தவர் எனவே, தாமும் அதில் அடங்கிய வரேயாவர். [2]கண்ணனை - இவ்வளவிலே வந்து முகங்காட்டிற்றிலன் என்கிற குற்றந் தீர வந்து முகங்காட்டுகையாலே அடியார்க்கு எளியவன் ஆனான். இனி, 'பத்துடை அடியவர்க்கு' என்கிற திருவாய்மொழியில் கிருஷ்ணாவதாரத்தை அனுபவிக்கப் பாரித்து, அது கிடைக்காமையாலே தூது விட்டவர் ஆகையாலே, இங்கு முகங் காட்டினான் கிருஷ்ணன் என்னவும் ஆம். [3]இத்தால், அவனுடைய மேன்மையோடு சௌலப்பியமும் நிலை நின்றது இவர்க்கு முகங் காட்டின பின்பு ஆயிற்று என்றபடி.

வளம் வயல் - [4]'மரங்கள் காலம் அல்லாத காலங்களிலும் பலத்தையுடையனவாய் இருந்தன,' என்கிறபடியே திருநகரியும் தளிரும் மொட்டுமாகவே எப்பொழுதும் இருக்குமாயிற்று. வாய்ந்து

---

1. 'சொற்களை மாத்திரம் கற்றலே அமையும்' என்றது, 'இப்பத்தின் வளவுரையால் பெறலாகும் வானோங்கு பெருவளமே,' என்றதனை நோக்கியது.

2. 'கண்ணன்' என்பதற்கு இரண்டு பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருள், கண்ணுக்கு விஷயமானான் என்பது; இப்பொருளில், குறிப்பு வினையாலணையும் பெயர்; இரண்டாவது பொருளில் பெயர்ச் சொல்.

'வீதிவாய்ச் செல்கின் றான்போல் விழித்துஇமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே வாவுமான் தேரிற் செல்வான்
யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்குங் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத்தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்.'

என்ற கம்பராமாயணச் செய்யுள் கண்ணன் என்பதற்குக் கூறிய முதற் பொருளோடு ஒரு சார் ஒப்புடையது.

3. இத்தால் - 'அளவியன்ற ஏழுலகத்தவர் பெருமான் கண்ணனை' என்ற இதனால். 'அளவியன்ற ஏழுலகத்தவர் பெருமான்' என்றதனால் மேன்மையும், 'கண்ணனை' என்றதனால் எளிமையும் பெறப்படும்.

4. ஸ்ரீராமா. யுத். 127, 17.

உரைத்த - நெஞ்சு பிணிப்புண்டு சொன்னவையாய் இருக்கை வாய்கை - கிட்டுகை. அதாவது, பாவபந்தத்தையுடையவராகை. அளவியன்ற அந்தாதி ஆயிரத்துள் இப்பத்தின் வள உரையால் - எல்லையற்ற பெருமையையுடைய பரம்பொருளுக்கு வாசகமாகையாலே தாமும் எல்லையற்ற பெருமையையுடையனவாய், ஒருவராலும் சலிப்பிக்க ஒண்ணுதனவாய் இருக்கிற ஆயிரத்துள் இப்பத்தினுடைய நன்ருன உரையாலே. வான் ஓங்கு பெருவளம் பெறலாகும் - பால் குடிக்க நோய் தீருமாறு போன்று, இத்திருவாய்மொழியில் இனிய சொல்லாலே பெறலாம். அதாவது, 'தானே பிரயோஜனமாயிருக்கிற இத்தால், சம்சாரத்தில் குறைவான நிலை போய், பரமபதத்தில் சென்று, தன் சொரூபத்தைப் பெற்று விரிவையடைந்தவன் ஆகையாகிற எல்லை இல்லாத செல்வத்தைப்பெறலாம்,' என்றபடி.

முதற்பாட்டில், ஒரு நாரையைத் தூதுவிட்டாள்; இரண்டாம் பாட்டில், அங்குப் போனல் சொல்லும் வார்த்தைகளைச் சில குயில்களுக்குச் சொன்னுள்; மூன்றும் பாட்டில், 'நான் செய்த பாபமேயோ மாளாதது என்று சொல்லுங்கள்,' என்று சில அன்னங்களை இரந்தாள்; நாலாம் பாட்டில், சில மகன்றில்களைப் பார்த்து, 'என் நிலையை அங்கே சென்று சொல்லுவீர்களோ, மாட்டீர்களோ?' என்ருள்; ஐந்தாம் பாட்டில், சில குயில்களைப் பார்த்து, 'தன்னுடைய நாராயணன் என்ற பெயர் ஒறுவாய்ப் போகாமே நோக்கிக் கொள்ளச் சொல்லுங்கோள்,' என்ருள்; ஆறும் பாட்டில், ஒரு வண்டைக் குறித்து, 'தம்முடைய நாராயணன் என்ற பெயருக்கு ஒரு குறைவு வாராமே எங்கள் சத்தையும் கிடக்கும்படி இத்தெருவே எழுந்தருளச் சொல்,' என்ருள்; ஏழாம் பாட்டில், ஒரு கிளியைக் குறித்து, 'இத்தலையில் குற்றங்களைப் பார்க்கும் அத்தனையோ? தம்முடைய குற்றங்களைப் பொறுக்குந் தன்மையையும் ஒருகால் பார்க்கச்சொல்,' என்ருள்; எட்டாம் பாட்டில், தான் உருவினவாறே முன் கையிலிருந்த பூவையும் உருவ, 'நானே முடியாநின்றேன்; நீ உன்னைக் காக்கின்றவரைத் தேடிக்கொள்' என்ருள்; ஒன்பதாம் பாட்டில், ஒரு வாடையைக் குறித்து, 'என் நிலையை அங்கே சென்று அறிவித்தால், அவன் 'அவள் நமக்கு வேண்டா' என்ருனகில், வந்து என்னை முடிக்க வேண்டும்,' என்று இரந்தாள்; பத்தாம் பாட்டில், தன் நெஞ்சைக் குறித்து, 'நம் காரியம் ஓர் அறுதி பிறக்குமளவும் நீ

அவனை விடாதேகொள்,' என்று போகவிட்டாள்; முடிவில், இத் திருவாய்மொழியைக் கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டினார்.

'முதற்பாட்டில், ஆசாரியனுடைய ஞானத்தின் பெருமையை அருளிச்செய்தார்; இரண்டாம் பாட்டில், இனிமையாகப் பேசுகின்றவனாக இருப்பான் என்றார்; மூன்றாம் பாட்டில், ஸாராஸாரங்களைப் பகுத்து அறிகின்றவன் என்றார்; நான்காம் பாட்டில், திருமேனியின் பேரழகினை அருளிச்செய்தார்; ஐந்தாம் பாட்டில், 'நினைத்தது கிட்டும் அளவும் சலியாத தூய தன்மையுடையான்' என்றார். ஆறாம் பாட்டில், 'பகவானையே அனுபவிக்கின்றவனாய் இருக்கும் அழகனுமாய்ப் பெருமிதமுடையவனுமாய் இருப்பான்' என்றார்; ஏழாம் பாட்டில், 'தான் முற்றறிவினன் ஆகிலும் ஆசாரியர்கள் பக்கல் கேட்ட வார்த்தை அல்லது அருளிச்செய்யான்,' என்று அவனுடைய ஆப்தியை அருளிச்செய்தார்; எட்டாம் பாட்டில், 'ஆசாரியனுடைய தேக யாத்திரையே இவனுக்கு ஆத்தும யாத்திரை' என்றார்; ஒன்பதாம் பாட்டில், 'ஆசாரியனுடைய சம்பந்தமாத்திரமே இருப்புக்குத் தாரகம்; மற்றையோருடைய உறவு இருப்புக்குப்

---

1. பத்துப் பாசுரங்கட்கும் உள்ளுறைப்பொருள் அருளிச்செய்கிறார்: 'ஞானத்தின் பெருமையை அருளிச்செய்தார்' என்றது, 'அஞ்சிறைய மடநாராய்' என்றதில் நோக்கு; இரண்டு சிறகுகளும் ஞான அநுஷ்டானங்களாகக் கூறப்படும். 'இனிமையாகப் பேசுகின்றவன்' என்றது, குயிலின் ஒலி இனியதாயிருத்தல் நோக்கி. 'சாராசாரங்களைப் பகுத்தறிகின்றவன்' என்றது, 'மென்னடைய அன்னங்காள்' என்றதனை நோக்கி. 'திருமேனியின் பேரழகினை' என்றது—'நன்னீல மகன்றில்காள்' என்றதனை நோக்கி. 'நினைத்தது கிட்டுமளவும் சலியாத நிலையினன்' என்றது, 'இரைதேர்' என்றதனை நோக்கி. பகவானையே அனுபவிக்கின்றவனாய் இருக்கும் அழகனுமாய்ப் பேரருள் வாய்ந்தவனுமாய்ப் பெருமிதமுடையவனுமாய்' என்றது - முறையே 'வண்டு என்றதனையும்,' 'வரி' என்றதனையும்; 'ஆழி' என்றதனையும் நோக்கி. 'வண்டு ஏகபோகமோ?' எனின், வண்டு தேனையன்றி உண்ணாது; மதுகரம் என்ற பெயரின் பொருளையும் நோக்குக. 'தான் முற்றறிவினனாகிலும் ஆசாரியர்கள் பக்கல் கேட்ட வார்த்தையல்லது அருளிச்செய்யான்' என்றது, 'இளங்கிளியே' என்றதனை நோக்கி. 'ஆசாரியனுடைய தேக யாத்திரையே இவனுக்கு ஆத்தும யாத்திரை,' என்றது, 'இன்னடிசில் வைப்பாரை நாடாயே' என்றதனை நோக்கி. ஆசாரியனுடைய சம்பந்த மாத்திரமே சத்தாதாரகம், மற்றையோருடைய உறவு சத்தா பாதகம்' என்றது, காற்றின் பரிசம் பாதகம் என்றதனால், எதிர்மறைப்பொருளில் ஆசாரிய சம்பந்தமே தாரகம் என்பது போதரும்.

இத்திருப்பதிகத்தில் ஏழாம் பாசுரம் முடிய, ஆசாரியனுடைய இலக்கணம்; மேல் மூன்று பாசுரங்கள் மாணாக்கனுடைய இலக்கணம்.

பாதகம்,' என்றார்; பத்தாம் பாட்டில், ஆக, இப்படி ஞானத்தை யுடையவனுமாய், இனிமையாகப் பேசுகின்றவனுமாய், ஸாரா ஸாரங்களைப் பகுத்து அறிகின்றவனுமாய், காட்சிக்கு இனியனுமாய், சுத்த சுபாவனுமாய், பேரருள் பெருமிதங்களையுடையனுமாய், பல காலம் வழிபாடு புரிந்து வரும் பெரியோர்களால் சேவிக்கப்படுகின்ற வர்களால் சேவிக்கப்படுகின்றவனுமாய், உத்தம மாணுக்கன் ஆகை யாலே, இத்தகைய ஆசாரியனுடைய தேக யாத்திரையே தனக்கு ஆத்தும யாத்திரையாய், மற்றையாருடைய உறவு தனக்குப் பாதக மாய், இப்படி உண்மை அறிந்த ஆசாரியனுக்குத் தொண்டு செய்கை யாலே இறைவனுக்குச் செய்யுந்தொண்டில் அன்புள்ளதாய், [1]நின் இடையேன் அல்லேன் என்று நீங்கி ஓர் கோலம் நீலம் நன்னெடுங் குன்றம் வருவது ஒப்பான் நாண்மலர்ப்பாதம் அடைந்தது தம் திரு வுள்ளம் என்று தலைக்கட்டினார்:

### திருவாய்மொழி நூற்றந்தாதி

*அஞ்சிறைய புட்கள்தமை 'ஆழியா னுக்குநீர்*
*எஞ்செயலைச் சொல்லும்' எனஇரந்து—விஞ்ச*
*நலங்கியதும் மாறன்இங்கே நாயகனைத் தேடி*
*மலங்கியதும் பத்தி வளம்.* (4)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. 'என்னுடை நன்னுதல் நங்கை மீர்காள்!
யான் இனிச் செய்வதென்? என்நெஞ் சென்னை
நின்னிடை யேன்அல்லே னென்று நீங்கி
நேமியும் சங்கமு மிருகைக் கொண்டு
பன்னெடுஞ் சூழ்சுடர் ஞாயிற் றோடு
பால்மதி யேந்திஓர் கோல நீல
நன்னெடுங் குன்றம் வருவ தொப்பான்
நாண்மலர்ப் பாதம் அடைந்ததுவே. (8. 2 : 10)

# ஐந்தாந்திருவாய்மொழி—'வளவேழுலகு'

## முன்னுரை

முதல் திருவாய்மொழியால், 'சர்வேஸ்வரன் எல்லாரைக் காட்டிலும் உயர்ந்தவன் ஆகையாலே அவனைப் பற்றுவார்க்கு [1] ஒரு குறை இல்லை,' என்றார்; இரண்டாந்திருவாய்மொழியால், 'அப் பற்றுதல்தான் புருடோத்தமனைப் பற்றுகிறது ஆகையாலே பலத் தோடே கூடி அல்லது இராது,' என்றார்; மூன்றாந்திருவாய்மொழி யால், 'வழிபடுவார்க்காகத் தான் அவதரித்து எளியவனாய் இருக்கை யாலே வழிபடத் தட்டு இல்லை,' என்றார்; நான்காந்திருவாய்மொழி யால், 'எளியவன் ஆனவன் தான் குற்றங்களைப் பொறுப்பவன் ஆதலின், பலத்தோடே கூடியே இருப்பான்,' என்றார்; 'தம் தாழ்வினை நினைந்து அகலுவாரையும் தன் செல்லாமையைக் காட்டிப் பொருந்த விட்டுக்கொள்ளும் சீலவான்,' என்கிறார், இத்திருவாய்மொழியால். 'ஆயின், காதல் விஞ்சிக் கலங்கி மேல் திருவாய்மொழியில் தூது விட்டவர், இங்கு அகலுவான் என்?' என்னில், கலங்கித் தூதுவிட்ட இடம் அன்பின் காரியம்; இங்கு அகலப் பார்க்கிற இடம் ஞான காரியம். 'ஆயின், இவ்விரண்டும் இவர்க்கு உண்டோ?' எனின், இவர்க்கு இறைவன் திருவருள் புரிந்தது பத்தியின் நிலையினை அடைந்த ஞானத்தை ஆதலின், இரண்டும் உண்டு; 'மயர்வற மதிநலம் அருளினன்' என்பது இவருடைய திருவாக்கு.

'இத்திருவாய்மொழியில் இறைவனுடைய சீலத்தை அருளிச் செய்தவாறு யாங்ஙனம்?' எனின், மேல் திருவாய்மொழியில் தூது விடுகின்ற வியாஜத்தால் தம்முடைய ஆற்றாமையை அறிவித்த பின்னர், 'இவரை இங்ஙனம் நோவுபட விட்டோமே!' என்று பிற்பாட்டுக்கு நொந்து யானைக்கு உதவ வந்து தோன்றியது போன்று, அரைகுலையத் தலைகுலைய வந்து தோன்றினான்; அவ னுடைய வேறுபட்ட சிறப்பினையும் தம்முடைய தன்மையினையும்

---

1. 'ஒரு குறையில்லை' என்றது, 'தொழுது எழு' என்றதன் கருத்து. 'புருடோத்தமன்' என்றது, 'பற்றிலன் ஈசனும் முற்றவும் நின்றனன்' என்றதன் கருத்து. 'பலத்தோடே கூடியல்லது' என்றது, 'ஆக்கை விடும் பொழுது எண்ணே' என்றதன் கருத்து. நான்காந் திருவாய்மொழியில் 'பலத்தோடே கூடியே இருப்பான்' என்றது, 'ஏழுலகத்தவர் பெருமான்' என்றதன் கருத்து. 'சீலவான்' என்றது, 'திருவடியால் தாயோன்' என்றதனை நோக்கி. சீலத்தையுடையவன் சீலவான். சீலமாவது, மந்தர்களோடே புரையறக் கலக்கை.

கண்டார்; 'தார்மிகன் வைத்த தண்ணீர்ப் பந்தலை அழிப்பாரைப் போன்று, நித்தியசூரிகளுக்கு நுகரப்படும் பொருளாக உள்ள இறைவனை நாம் கிட்டிக் கெடுக்கப் பார்ப்போம் அல்லோம், அகலும் இத்தனை,' என்று நினைத்தார். 'அகன்றால், பிழைக்க வல்லரோ?' என்னில், பிழையார்; முடியும் இத்தனையே. 'ஆயின், அகலுவான் என்?' என்னில், தலைவனுக்கு அதிசயத்தைத் தேடுமவர்கள் தத்தம் அழிவினைப்பாரார்கள் அன்றே? [1]பெருமாளும் தேவ தூதனும் ஆலோசனை தொடங்கும் சமயத்தில், துர்வாசர் 'என்னை உள்ளே புக விட வேண்டும்' என்ன, இவனைத் தகைந்து பெருமாளுக்கு ஒரு தாழ்வினை விளைப்பதில் நாம் அகன்று முடிய அமையும்' என்று நினைந்து, அவனைப் புகவிட்டு, [2]'அரசர்க்கு அரசரே, உமக்கு என்னிடத்தில் அன்பு இருக்குமாகில், என்னிடத்து அருள் புரியவேணும் என்னும் கருத்து இருக்குமாகில், யாதொரு ஐயமும் இன்றி என்னை விட்டு விடும்; உம்முடைய சூளுறவைக் காப்பாற்றும்,' என்று விடை கொண்டார் அன்றே இளைய பெருமாள்? மேலும், [3]இலக்குமணரே, என் நாயகரான இராகவருடைய வமிசத்தில் சந்தானம் இல்லாமல் இருக்க ஒண்ணாது என்று என் உயிரை இப்பொழுதே இக்கங்கையில் விடாமல் இருக்கிறேன்,' என்று விடை கொண்டாள் அன்றே [4]பிராட்டி? அப்படியே, இவரும், [5]'ஊருணியிலே கள்ளியை வெட்டி எறிவாரைப் போலவும், அமிருதத்திலே விஷத்தைக் கலப்பாரைப் போலவும், நித்திய சூரிகள் அனுபவிக்கும் பொருளை நாம் புக்கு அழிக்கையாவது என்?' என்று அகலப்புக்கார்.

அதனைக் கண்ட இறைவன், 'இவரை இழந்தோமே' என்று நினைந்து, 'ஆழ்வீர், அகலப் பார்த்திரோ?' என்ன, 'அடியேன் அகலப்பார்த்தேன்,' என்ன, 'நீர், எனக்குத் தாழ்வு வரும் என்று

---

1. பெருமாள்-ஸ்ரீராமபிரான். தேவதூதன்-பிரமன் ஏவலால் வந்த இயமன்.

2. ஸ்ரீராமா. உத்தர. 106 : 4.

3. ஸ்ரீராமா. உத்தர. 48 : 4.

4. 'நான் உயிரை விட்டால் பெருமாளை உலகம் பழிக்கும்; பெருமாளுக்குப் பழியினை உண்டுபண்ணலாகாது என்று நான் பிழைத்திருக்கிறேன்,' என்பது கருத்து. இங்குப் பிழைத்திருத்தலே பிராட்டிக்கு அழிவு.

5. ஊருணி-குளம். 'ஊரிலுள்ள மக்களால் தண்ணீர் உண்ணப் படுவது' என்பது பொருள்.

அன்றே அகலப்பார்த்தீர்? நீர் அகலவே, ஞானம் அனுட்டானம் இவை நன்றாகவேயுடைய பெரியவர்களாலேயே அடையத் தக்கவன் நான் என்று நினைத்து என்னை ஒருவரும் சாரார்; இப்படித் தண்ணியராக நினைந்திருக்கிற நீர் ஒருவரும் என்னைக் கிட்டவே, நான், 'இன்னார் இனியார் என்னும் வேறுபாடு இன்றி எல்லாரும் வந்து சேரத்தக்கவன்; என்று தோற்றும்; ஆன பின்னர், நீர் அகலுமதுவே எனக்குத் தாழ்வு. மற்றும், 'எனக்கு ஆகாதார் இலர் என்னுமிடம் பண்டே [1] அடிபட்டுக்காணும் கிடப்பது, நான், நல்லார் தீயார் என்று நிரூபணம் பண்ணாதே எல்லார் தலையிலும் என் காலை வைத்ததைக் கண்டீரே,' எனத் தான் திருவுலகு அளந்தருளின எளிமையைக்காட்ட, 'ஆகில் கிட்டுவோம்' என்று நினைந்தார்; உடனே, 'நம்மால் வரும் மேன்மையும் இவனுக்கு வேண்டா,' என்று [2] பின்னையும் அகலப்புக, 'உம்மால் வரும் மேன்மையேயன்றோ நீர் வேண்டாதது? உம்மால் வரும் நான்தான் வேண்டுமோ, வேண்டாவோ? நீர் தாழ்ந்தவர் என்று அகலுமதிலும் சேர்கிறது, திருவாய்ப்பாடியில் வெண்ணெயினைப் போன்று எனக்குத் தாரகங் காணும்; இனி, நீர் அகலில், திருவாய்ப்பாடியில் வெண்ணெய் விலக்கினார் புக்க உலகம் புகுதல் திண்ணம்; நீர் அகலுமது என்னுடைய இருப்புக்குக் கேடு,' என்று கூறி, பின்னர் [3] 'நட்பு உணர்ச்சியோடு வந்து சேர்ந்த இந்த விபீடணன் வஞ்சனையுள்ளவன் ஆகவுமாம்; நான் இவனை விடில் உளேன் ஆகேன்,' என்று சேர்த்துக் கொண்டாற்போலவும், 'உற்றாரை எல்லாம் உடன் கொன்று அரசாளப் பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்,' என்ற அருச்சுனனை, [4] 'கிருஷ்ண, உனது அருளால் உண்மை ஞானத்தை அடைந்தேன்; திரிபு உணர்ச்சியானது என்னை விட்டு நீங்கிற்று; ஐயவுணர்வும் நீங்கினவன் ஆனேன்; ஆதலால், 'இப்பொழுதே போரினைச் செய்' என்று நீ கூறுகின்ற இச்செயலை நான் செய்கிறேன் என்று சொல்லப் பண்ணினாற்போலவும், வருந்தித் தம்மை இசை

---

1. அடிபட்டுக் கிடத்தல்-சிலேடை: எல்லாராலும் அறியப்பட்டுக் கிடத்தல்; திருவடிகளில் பட்டுக் கிடத்தல்.

2. 'பின்னையும் அகலப்புக' என்றது, இத்திருவாய்மொழியில் 'அடியேன் சிறிய ஞானத்தன் அறிதல் ஆர்க்கும் அரியானை' என்றதனை நோக்கி.

3. ஸ்ரீராமா.யுத். 18 : 3.

4. ஸ்ரீகீதை. 18 : 73.

வித்து, சேர்தற்கு அவன் தான் விரும்பியவாறே [1]சேர்ந்து தலைக் கட்டினன்,' என்கிறார், ஆதலின், சீல குணத்தை அருளிசசெய்த வாறு காணல் தகும்.

45

வளவேழ் உலகின் முதலாய
வானோர் இறையை அருவினையேன்
'களவேழ் வெண்ணெய் தொடுஉண்ட
கள்வா!' என்பன் பின்னையும்
'தளவேழ் முறுவல் பின்னைக்காய்
வல்லான் ஆயர் தலைவனாய்
இளவேறு ஏழும் தழுவிய
எந்தாய்!' என்பன் நினைந்துநைந்தே.

**பொ-ரை:** வளப்பம் பொருந்திய ஏழ் உலகங்கட்கும் காரணனாய நித்தியசூரிகள் தலைவனை, போக்கற்கு அரிய தீவினையினையுடைய யான் மனத்தால் நினைந்து, நினைப்பின் மேலீட்டால் உடல் கரைந்து, 'களவு பிரசித்தமாம்படி வெண்ணெயைக் களவு செய்து உண்ட கள்வனே!' என்று அழைப்பேன்; அதற்கு மேல், 'முல்லை அரும்புகள் போன்று தோன்றிய பற்களையுடைய நப்பின்னைப்பிராட்டியாருக்காகப் பசுக்களை யுடைய வலிய ஆயர்கட்குத் தலைவனாகி, இளமை பொருந்திய எருதுகள் ஏழனையும் தழுவிக் கொன்ற எந்தையே!' என்று அழைப்பன்.

**வி - கு:** தொடு - வஞ்சனை; ஈண்டுக் களவிற்கு ஆயிற்று. 'தள வேழ் முறுவல்' என்ற இடத்து 'மாதரார் முறுவல்போல் மணவெளவல் முகையூழ்ப்ப' (கலித். 27.) என்பதை நினைவு கூர்க. 'பின்னைக்காய்' என்பதில் 'ஆய்' என்பது, செயவென் எச்சத்திரிபு. அவ்வெச்சத்தைத் 'தழுவிய' என்னும் எச்சத்துடன் முடிக்க.

இத்திருவாய்மொழி அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

**ஈடு:** முதற்பாட்டு. 'நித்தியசூரிகட்கு அனுபவிக்கப்படும் பொருளானவனை, [2]மனம் வாக்குக் காயங்களால் நிந்தனை செய் தேன்,' என்கிறார்.

வளம் ஏழ் உலகின் முதலாய வானோர் இறையை அருவினையேன் களவேழ் வெண்ணெய் தொடு உண்ட கள்வா என்பன்-'வளவிதான

1. 'சேர்ந்து தலைக்கட்டினன்' என்றது, 'சார்ந்த இருவல்வினை களும் சரித்து மாயப்பற்று அறுத்து' என்ற பாசுரத்தை நோக்கி.

2. 'என்பன் நினைந்து நைந்தே' என்று பிரித்து, 'மனம் வாக்குக் காயங்களால்' என்று அருளிச்செய்கிறார். என்பன்-வாக்கு; நினைதல்-மனத்தின் தொழில்; நைதல்-உடலின் தொழில்.

ஏழுலகு' என்று லீலாவிபூதியைச் சொல்லிற்று, 'வானோர் இறை' என்கையாலே நித்தியவிபூதியைச் சொல்லிற்று, 'இப்படி இரண்டு உலகங்கட்கும் நாதனாய் இருக்கின்றவனையன்றோ நான் அழிக்கப் பார்த்தேன் !' என்கிறார். வளம் ஏழ் உலகின் முதலாய வானோர் இறையை-வளவியனாய், ஏழ் உலகுக்கும் முதலாய், வானோர் இறையாய் இருக்குமவனை. இனி, 'வளம் ஏழ் உலகின் முதலாய்' என்பதனை, 'வளவியராய், ஏழுலகுக்கும் முதலாய் இருக்கிற வானோர்' என்று, வானோருக்கு அடைமொழி ஆக்குதலும் ஒன்று. வானோர் வளவியரரகையாவது, பகவானுடைய அனுபவத்தில் ஆற்றலுடையராய் இருத்தல். 'ஏழ் உலகுக்கும் முதலாய வானோர், எனின், நித்தியசூரிகள் உலகிற்குக் காரணர் ஆகவேண்டுமே? அங்ஙனம் ஆவரோ?' எனின், இறைவன், [1]ஸ்ரீகௌஸ்துபத்தால் உயிர்களின் கூட்டத்தைத் தரிக்கின்றான் என்றும், ஸ்ரீவத்ஸத்தால் மூலப் பிரகிருதியினையும் அதனின்றும் உண்டான ஏனைய பொருள்களையும் தரிக்கின்றான் என்றும் ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் அஸ்திரபூஷண அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளதனால், அவர்களும் உலகிற்குக் காரணர் ஆவார்கள் என்க. [2]நித்தியசூரிகள் தேசிகர் ஆகையாலே துறை அறிந்தே இழிவர்கள் ஆதலின், '**வானோர் இறையை**' என்கிறார். '**ஸ்வாமி**' என்றே ஆயிற்று அவர்களுக்கு நினைவு. 'வானோர் இறையைக் கள்வா என்பன்' என்று கூற நினைத்தவர், தொடங்கின வாக்கியம் முடிப்பதற்கு முன்னே தம்மை நினைத்து, '**அருவினையேன்**' என்கிறார். தார்மிகனாய் இருப்பான் ஒருவன், இராசத தாமத குணங்கள் மேலிடப்பட்டவனாய் வீட்டில் தீயினை வைத்து, சத்துவம் தலையெடுத்தவாறே வருந்துமாறு போன்று வருந்துகிறார். இப்போது '**அருவினை**' என்கிறது-'கள்வா' என்

---

1. *புருடன்மணி வரமாகப் பொன்றா மூலப்*
*பிரகிருதி மறுவாக மான்தண் டாகத்*
*தெருள்மருள்வாள் உறையாக ஆங்கா ரங்கள்*
*சார்ங்கஞ்சங் காகமனந் திகிரி யாக*
*இருடிகங்க ளீரைந்துஞ் சரங்க ளாக*
*இருபூத மாலைவன மாலை யாக*
*கருடனுரு வாமறையின் பொருளாங் கண்ணன்*
*கரிகிரிமே னின்றனைத்துங் காக்கின் றானே.*

*என்ற திருப்பாசுரத்தின் பொருளை ஈண்டுச் சிந்தித்தல் தகும். ஸ்ரீதேசிகப் பிரபந்தம் - அதிகார சங். 41.*

2. *'இவ்வுலகத்திற்குக் காரணனாய் இருக்கிறான்' என்று கூறி, நித்தியசூரிகளுக்குத் தலைவனாகச் சொன்னதற்கு, பாவம் அருளிச் செய்கிறார், 'நித்தியசூரிகள் தேசிகர் ஆகையாலே' என்று தொடங்கும் வாக்கியத்தால்.*

கைக்கு அடியான அன்பினை. 'ஆயின், அன்பினை 'அருவினை' என்னலாமோ ?' எனின், 'பாபம் என்பது, தமக்கு விருப்பம் இல்லாததைக் கொடுப்பது' என்று இருக்குமவர் ஆகையாலே, இறைவனை விட்டு அகன்று நீங்கியிருத்தல் தமக்கு விருப்பமாயினும் அதனைச் செய்ய ஒட்டாது தடுக்கின்றமையின் அன்பினை 'அருவினை' என்கிறார்.

களவு ஏழ் வெண்ணெய் தொடு உண்ட கள்வா என்பன்-'களவு எல்லாரும் அறியும்படி வெண்ணெயைக் களவு கண்டு அமுது செய்த வஞ்சகனே !' என்பன். எழுதல் - எல்லாரும் அறியும்படி வெளிப்படல். இனி, 'களவேழ்' என்பதற்குக் 'களவிலே வேட்கையுடையனாய் - ஊற்றமுடையனாய்' என்று கூறலும் ஆம். இத்தால், 'பரிவுடைய யசோதைப்பிராட்டி சொல்லும் பாசுரத்தை அன்றோ சொன்னேன் ?' என்கிறார். பின்னையும் - அதற்குமேல். தளவு ஏழ் முறுவல் பின்னைக்காய் வல்லான் ஆயர் தலைவனாய் இள ஏறு ஏழும் தழுவிய எந்தாய் என்பன் - 'பரிவுடைய யசோதைப்பிராட்டிக்கு மறைத்தவற்றையும் வெளியிடும்படி அன்பிற்கு உரியவளான நப்பின்னைப்பிராட்டி பாசுரத்தையுஞ்சொன்னேன்,' என்கிறார். தளவு ஏழ் முறுவல் - காட்டுப் பசுவினைக் கண்டவாறே வீட்டிலுள்ள பசு நினைவிற்கு வருதல் போன்று, நப்பின்னைப் பிராட்டியினுடைய பற்களின் வரிசையைக் கண்டவாறே முல்லை அரும்பு நினைவிற்கு வருதலின், '**தளவேழ் முறுவல்**' என்கிறார். இனி, 'தளவு எழும்படியான முறுவல்' என்னவும் ஆம். அதாவது, எழுகை - போகையாய், தோற்றுப் போகும்படியான முறுவல். [1] 'பல்லுக்குத் தோற்ற பனி முல்லை' என்றார் பிறரும். பின்னைக்காய் - நப்பின்னைப் பிராட்டியினுடைய புன்சிரிப்பிலே தோற்று அவள் விருப்பின்படி செய்து கோடற்குத் தன்னை அவளுக்கு உரிமையாக்கினான். வல் ஆன் ஆயர் தலைவனாய் - [2] 'பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடிகளையே பற்றுக்கோடாக அடைந்தவர்கள் ; அவனையே வலிமையாக உடையவர்கள்; அவனையே தலைவனாக உடையவர்கள்,' என்பது போன்று, கிருஷ்ணனைத் துணையாகக்கொண்டு நாட்டினை அழித்துத் திரியும் மிடுக்கைப்பற்ற '**வல் ஆன் ஆயர்**' என்கிறார். இனி, 'ஆன் ஆயர் வலிய தலைவனாய்' என்று, வன்மையைத் தலைவனுக்கு

1. *யாப்பருங்கல விருத்தி மேற்கோள்.*

2. *பாரதம், துரோணபர்வம்,* 183 : 24.

அடைமொழியாக்கலும் ஆம். அவ்வன்மையாவது, தலையிருக்க உடம்பு குளித்தும், [1] உடம்பு இருக்கத் தலை குளித்தும் அன்றே அவர்கள் திரிவார்கள்? எல்லாரும் கார்த்திகை புதியதற்குக் குளித்தார்களாகில் இவன் அதுவும் செய்யாதே இடைத்தனத்தில் ஊன்றி இருத்தல். 'இவன் இவ்வாறு இருத்தற்குப் பயன் யாது?' எனின், இப்படி இருக்கில் அல்லது அவ்வாயர்கள் பெண் கொடார்கள் அன்றே? ஆதலால், பெண் கோடலே பயன். [2] 'வாரீர் அழகரே, உம்முடைய கிருஷ்ணவதாரத்தில் இரண்டு தாய்மாரையும் இரண்டு தமப்பன்மாரையும் இரண்டு குலத்தையும் ஒரு கணத்தில் ஏற்றுக் கொண்ட உமக்குப் பலன், குலத்தோடு ஒத்திருக்கிற நப்பின்னைப் பிராட்டியும் உருக்குமிணிப் பிராட்டியும்' என்றார் கூரத்தாழ்வானும். இத்தால் - 'ஆயர்குலத்தினன் ஆகையாலே நப்பின்னைப்பிராட்டியை ஏற்றாய்; அரசகுலத்தினன் ஆகையாலே உருக்குமிணிப்பிராட்டியை ஏற்றாய்' என்றபடி. இனி, [3] 'தக்க வயதினையும் ஒழுக்கத்தினையும் குலத்தினையும் உடைய பிராட்டிக்குத் தக்கவர் அந்த ஸ்ரீராமபிரான்; கறுத்த கண்களையுடைய பிராட்டியும் அந்த ஸ்ரீராமனுக்குத் தக்கவள்,' என்கிறபடியே, ஈண்டும், கிருஷ்ணனும் நப்பின்னைப்பிராட்டியும் ஒத்தவர்களாய் இருந்தும், எருதுகளை முன்னிட்டு அவற்றைத் தழுவச் செய்தனர் ஆதலின், **'வல் ஆன் ஆயர்'** என்கிறார்' எனலும் ஒன்று.

இளஏறு ஏழும் தழுவிய - யமனுக்கு ஒத்தனவாக இருந்துள்ள இடபங்கள் ஏழனையும் [4] ஊட்டியாக ஒருக்காலே தழுவினான். பின்னர்

---

1. *நீராடும் போழ்தில் நெறிப்பட்டார் எஞ்ஞான்றும்*
*நீந்தார் உமியார் திளையார் விளையாடார்*
*காய்ந்தது எனினுந் தலையொழிந்து ஆடாரே*
*ஆய்ந்த அறிவி னவர்.* (ஆசாரக் கோவை)

*என்பதனால், தலை இருக்க உடம்பு குளித்தல் முதலிய வழக்கங்கள் பெறப்படும். 'கார்த்திகை புதியதற்குக் குளித்தார்கள் ஆகில்' என்றது, எல்லாரும் கார்த்திகைக்குக் குளிப்பார்கள்; புதுநெல் வரும்போது மங்கள ஸ்நானம் செய்து இஷ்ட தெய்வங்கட்குப் பொங்கலிட்டு உறவினரும் தாங்களும் உண்ணுவார்கள்; அவற்றைத் தெரிவித்தபடி. இதனைப் 'புதிர் சமைத்தல்' என்று வழங்குவர். 'புனத்தினை கிள்ளிப் புது அவி காட்டி உன் பொன் அடி வாழ்க என்று, இனக்குறவர் புதியது உண்ணும் எழில் மாலிருஞ் சோலை எந்தாய்' என்ற பெரியாழ்வார் திருமொழி இங்கு நோக்கல் தகும்.*

2. *சுந்தரபாஹு ஸ்தவம், 7.*

3. *ஸ்ரீராமா. சுந். 16 : 5.*

4. *ஊட்டி-குரல்வளை; அதாவது, கழுத்து. ஏழ் எருதுகள் கழுத்துகளையும் ஒன்றாகக் கூட்டித் தழுவினான் என்றபடி.*

அவளை அடைதலால், அவளை அணைந்தது போன்று இருக்கையாலே 'தழுவிய' என்கிறார். எந்தாய் என்பன - ஏழ் எருதுகளையும் அடர்த்த செயலுக்குத் தோற்று, நப்பின்னைப் பிராட்டி சொல்லும் பாசுரத்தையும் சொன்னேன். நினைந்து - சொன்ன அளவேயோ! நெஞ்சாலும் நிந்தித்தேன். நைந்தே - அவ்வளவேயோ! பிறர் அறியும்படி சிதிலனாய் உடலாலும் நிந்தித்தேன்.

இனி, இத்திருப்பாசுரத்திற்கு [1]'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்றேன்; 'எத்திறம்' என்றேன்; பிராட்டிமார் நிலையை அடைந்து தூது விட்டேன்' என்று, அவற்றுக்கு வருந்துகிறார் என்று பொருள் கூறலும் ஒன்று. (1)

46

நினைந்து நைந்துஉள் கரைந்துஉருகி
இமையோர் பலரும் முனிவரும்
புனைந்த கண்ணி நீர்சாந்தம்
புகையோடு ஏந்தி வணங்கினால்
நினைந்த எல்லாப் பொருள்கட்கும்
வித்தாய் முதலிற் சிதையாமே
மனஞ்செய் ஞானத்து உன்பெருமை
மாசூணாதோ மாயோனே!

பொ - ரை: ஆச்சரியமான குணங்களையும் செயல்களையுமுடையவனே! தேவர் பலரும் முனிவர் பலரும் மனத்தால் நினைந்து, அந்நினைவினால் நிலை குலைந்த உடல்களையுடையவர்களாய், பின்னர் மனமும் கட்டுக் குலைந்து தண்ணீரைப் போன்று உருகி, அவ்வுருக்கத்தோடு தொடுத்த மாலைகளையும் தண்ணீரையும் சந்தனத்தையும் நறுமணமிக்க புகையோடு ஏந்தி வந்து வணங்கினால், நினைக்கப்பட்ட எல்லாப் பொருள்கட்கும் காரணமாய், காரியமாக மாறும்போது தானான தன்மையில் நின்று சிறிதும் வேறுபடாததாய் இருக்கின்ற, மனத்தால் நினைக்கிற

---

1. 'அயர்வறும் அமரர்கள் அதிபதி என்றேன்' என்றது, 'வளவேழ் உலகின் முதலாய வானோ ரிறையை' என்றதனை நோக்கி. 'எத்திறம் என்றேன்' என்றது, 'களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா' என்றதனை நோக்கி. 'பிராட்டிமார் நிலையையடைந்து தூதுவிட்டேன்' என்றது, 'இளவேறேழுந் தழுவிய எந்தாய்' என்றதனை நோக்கி. 'வருந்துகிறார்' என்றது, 'நைவன்' என்றதனை நோக்கி.

*நினைவின் வடிவமான ஞானத்தையுடைய உனது பெருமை மாசினை அடையாதோ?*

**வி - கு:** *'உருகி ஏந்தி வணங்கினால் மாசூணாதோ?' என்றும் 'ஆய் சிதையாமே மனம்செய் ஞானம்' என்றும் முடிக்க.*

ஈடு: இரண்டாம் பாட்டு. 'நெஞ்சால் நினைந்தும், வாயால் பேசியும், உடலால் நைந்தும், தவறு செய்தேன்,' என்றார் மேல் பாசுரத்தில்; 'தவறு செய்தேன் என்ற இடம் தவறு,' என்கிறார் இப்பாசுரத்தில். 'யாங்ஙனம்?' எனின், சண்டாளன் '**வேதம் போகாது**' என்றுதான் சொல்லப் பெறுவனே? அவ்வாறே அன்றோ நான் அயோக்கியன் என்று அகலுகையும்? அன்பினால் நனைந்த மனத்தையுடைய பிரமன் முதலியவர்கள் அன்றோ அதுதான் சொல்லப் பெறுவர்! 'நான் தவறு செய்தேன்' என்று அகலுமதில், கிட்டி நின்று பரிமாறுதல் நன்று அன்றோ?' என்று, மேல் நின்ற நிலையையும் நிந்தித்துக்கொண்டு அகலுகிறார்.

நினைந்து நைந்து வணங்கினால் - பிரமன் முதலிய தேவர்கள், திருவாராதனத்திற்கு ஒருப்படும் போது திருமாலை தொடக்கமான உபகரணங்களைச் சமைத்துக்கொண்டாயிற்று இழிவது. நாம் இவற்றைக்கொண்டு சென்றால் நம்மைக் குளிர நோக்குவனே; [1] 'ஸ்ரீ கிருஷ்ணர் என்னைப் பார்த்துக் 'குற்றம் அற்ற அக்குரூரனே' என்று அழைத்துப் பேசுவார்,' என்று, கம்ஸன் ஏவலால் கிருஷ்ணனை அழைக்கச் சென்ற அக்குரூரன் நினைத்துச் சென்றது போன்று, 'நம்மை வினவக்கடவனே' என்று இங்ஙனே முந்துற நினைப்பார்கள்; பின்னர், தரித்திருக்க மாட்டாதே கட்டுக்குலைந்த மனமுடையவர்கள் ஆவார்கள். உள் கரைந்து உருகி - நையுமது தூலம் என்னும்படி உள்கரைவர்கள்; பின்னர், ஓர் அவயவியாக்கி எடுக்க ஒண்ணாதபடி மங்குவர்கள். 'இப்படிப் படுகின்றவர்கள்தாம் யார்?' என்றால், இமையோர் பலரும் முனிவரும் - பிரமன் முதலான தேவர்களும் சனகன் முதலான முனிவர்களும். 'ஆயின், இச்செயல் முனிவர்களுக்குப் பொருந்தும்; செருக்கினைக்கொண்ட தேவர்களுக்குப் பொருந்துமோ?' எனின், இராசத தாமத குணங்களால் மேலிடப்பட்ட போது செருக்குக் கனத்து இருக்குமாறு போன்றே, சத்துவம் தலை எடுத்த போது பகவானுடைய குணங்களை அனுபவித்துக் கட்டுக் குலைந்து உருகுகிறபடியும் கனத்திருக்கும். புனைந்த கண்ணி நீர் சாந்தம் புகையோடு ஏந்தி வணங்கினால் - இப்படி அவர்கள் அன்பே மிக்கு

---

1. ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 17; 12.

இருப்பவர்கள் ஆகையாலே தொடுக்கும்போது தொடங்கி, 'அவன் இதனைக் கண்டருளக் கடவனே, சாத்தியருளக் கடவனே,' என்று அன்போடு தொடுத்த மாலை, ஆராதனஞ்செய்யும் போது தம்மை நோக்குகையால் உண்டாகும் சிரமம் ஆறுகைக்கு [1] அர்க்கியம் கொடுக்கைக்காக உண்டாக்கின தண்ணீர், பிறகு சாத்தியருளுவதாகச் சமைத்த சந்தனம் முதலியவைகள், தூபங்காட்டுவதற்கு உண்டாக்கின அகிற்புகை இவை தொடக்கமானவற்றைத் தரித்துக் கொண்டு வந்து, செருக்கு அற்றுத் திருவடிகளிலே விழுவர்கள். அவன் இவைகொண்டு காரியங் கொள்ளுமதிலும் [2] 'சூட்டுநன் மாலைகள் தூயன ஏந்தி' என்னுமாறு போன்று 'அவனுக்கு என்று தரிக்குமதுவே' இவர்களுக்குப் பேறாக இருக்குமாதலானும், பாவபந்தம் இரண்டு தலைக்கும் உண்டு ஆதலின், அவன் தானும் இவை கொண்டு காரியங் கொள்ளுமதிலும் இவர்கள் தரித்துக்கொண்டு நிற்கக் காணுமதனையே பேறாக நினைத்திருப்பனுதலானும் '**ஏந்தி வணங்கினால்**' என்கிறார்.

நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் - தன் திருவுள்ளத்தால் விஷயீகரிக்கப்பட்ட எல்லாப் பொருள்கட்கும் காரணமாய். 'மேல் '**மனஞ்செய் ஞானம்**' என்று [3] சங்கல்ப ரூப ஞானத்தை அருளிச்செய்வதனால், ஈண்டு, '**நினைந்த**' என்பதற்குக் கருத்து என்?' என்னில், காரியமாக வேறுபட்டு விரிந்த தேவர்கள் முதலான எல்லாப் பொருள்களும் அழிந்து [4] 'ஸதேவ' என்று கூறும்படி இருந்த அன்று, புத்திரர் பௌத்திரர் முதலானவர்களோடு வாழ்ந்தவன் அவர்களை இழந்து தனியன் ஆயின் தன் தனிமையை நினைந்து வெறுக்குமாறு போலவும், வேறு தேசத்தை அடைந்திருக்கிற புத்திரனைத் தாய் தந்தையர்கள் நினைக்குமாறு போலவும், இவற்றினுடைய இழவை நினைப்பதொரு நினைவு உண்டு; அதனை அருளிச்செய்கிறார். இனி, நினைத்தல் - கலத்தலும் கூடலும் ஆதலால், நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் என்பதற்கு, ''**சத்**' என்ற நிலையுள்ளதாய்த் தன்னுடனே கூடிக்கிடக்கிற எல்லாப் பொருள்கட்கும் காரணமாய்'

---

1. அர்க்கியம் - தண்ணீரைக்கொண்டு தேவர்கட்கும் அதிதிகட்கும் செய்யப்படும் ஒருவகை உபசாரம்.

2. திருவிருத்தம், 21.

3. சங்கல்ப ரூப ஞானம் - நினைவின் வடிவமான ஞானம்.

4. சதேவ - ஒருவனே.

என்று பொருள் அருளிச்செய்வர் **பிள்ளையமுதனார்**. முதலில் சிதையாமே - அவற்றை உண்டாக்குமிடத்துத் தானான தன்மையில் குறை வாராதபடி இருப்பன். அதாவது - விசேடணங்களான[1] சேதன அசேதனங்களினுடைய சொரூப சுபாவ விகாரங்கள் விசேடியமான பரம்பொருள் உருவத்தில் இல்லை [2] என்றபடி. 'ஆயின், அப்படி உளதாமோ?' எனின், மட்பிண்டமானது பானை, அகல் முதலிய பொருள்களாக மாறியவுடனே அம்மண் உருண்டையான உருவம் அழிந்துவிடும்; இங்கு அது இல்லை. 'நாட்டில் காரியங்களை உண்டாக்குகிற காரணத்தின் படி அன்று இவன் படி,' என்கிறார். மனம் செய் ஞானத்து உன் பெருமை - இப்படி இருக்கிற சங்கல்ப ரூப ஞானத்தையுடைய உன் பெருமை உண்டு. உன் வேறுபட்ட தன்மை [3] அது. 'ஆயின், உலகிற்குக்காரணம், சங்கல்ப ரூப ஞானமோ?' எனின், அன்று; 'சூக்கும சித்து அசித்துகளுடன் கூடின இறைவனே உலகிற்குக் காரணம்; ஆயினும், இவ்விறைவன் காரணமாகும்போது சங்கல்பம் முன்னாக ஆதல் வேண்டும். 'ஆயின், சங்கல்பத்தையுடைய அவ்விறைவன் காரணமாதல் வேண்டும், சங்கல்பம் காரணமாகாதே?' எனின், [4] 'நான் பல வகைப் பொருள்களாக விரிகிறேன்,' என்கிற சங்கல்பத்தின் முக்கியத்துவத்தாலே '**மனஞ்செய் ஞானத்தைக்**' காரணமாக அருளிச்செய்கிறார்.

மாசு உணாதோ-இவர்கள் வணங்கினால் மாசு உணாதோ? 'தன் சங்கல்பத்தாலே எல்லாப் பொருள்களையும் உண்டாக்குகிறவனுக்கு, அவனாலே படைக்கப்பட்ட நாம் தீண்டிய பொருள் அங்குத்தைக்குத் தக்கதாமோ?' என்று தந் தாமுடைய தாழ்மையை நினைந்து, அகலு

---

1. *விசேடணம் - அடுத்திருப்பது. விசேடியம் - அடைகொளி.*

2. *'சின்னூல் பலபல வாயால் இழைத்துச் சிலம்பி பின்னும், அந்நூல் அருந்தி விடுவது போல அரங்க ரண்டம், பன்னூறு கோடி படைத்தவை யாவும் பழம்படியே, மன்னூழி தன்னில் விழுங்குவர் போத மனமகிழ்ந்தே' என்றார் பிள்ளைப்பெருமாளையங்கார். சொரூப விகாரமில்லாமலிருந்துகொண்டே சிலவற்றை உண்டாக்குதலும், அங்ஙனம் உண்டாக்கினவற்றை உட்கொள்ளுதலும் அற்பச்சத்தியையுடைய சிலந்திப் பூச்சிக்கு இயல்பாகும் போது, சொரூபத்திற்கு விகாரமில்லாமலிருந்து கொண்டே அண்டங்களைப் படைத்தலும் விழுங்குதலுமாகிய இயல்பு சர்வசத்திகனான இறைவனுக்குக் கூடுதல் அரிதன்று என்பதாம். 'ஒரு சிலந்திக்கு உண்டான ஸ்வபாவம் சர்வசத்திக்குக் கூடாதொழியாதிறே,' என்ற தத்துவத்திரயமும் ஈண்டுக் கருதுதல் தகும்.*

3. *'அது' என்னும் இதனை, பின் வருகின்ற '**இவர்கள் வணங்கினால் மாசூணாதோ**' என்பதுடன் முடிக்க.*

4. *தைத்திரீய. ஆனந். 6 : 91.*

கைக்கு அதிகாரமுள்ளது அவர்களுக்கே அன்றோ? அதற்கு நான் யார்? மாயோனே - பிரமன் முதலிய தேவர்களையும் அற்பநிலையுள்ள மனிதர்கள் நிலையிலே ஆக்க வல்ல உன்னுடைய ஆச்சரியமான வேறுபட்ட தன்மை இருந்தபடி என்!

'மாயோனே, நினைந்த எல்லாப் பொருள்களுக்கும் வித்தாய் முதலிற்சிதையாமே மனஞ்செய் ஞானத்து உன் பெருமை, இமையோர் பலரும் முனிவரும் நினைந்து நைந்து உள்கரைந்து உருகிப் புனைந்த கண்ணி நீர் சாந்தம் புகையோடு ஏந்தி வணங்கினால் மாசூணுதோ?' என்று கூட்டி முடிக்க. (2)

47

மாயோ னிகளாய் நடைகற்ற
வானோர் பலரும் முனிவரும்
நீயோ னிகளைப் படைஎன்று
நிறைநான் முகனைப் படைத்தவன்
சேயோன் எல்லா அறிவுக்கும்
திசைகள் எல்லாம் திருவடியால்
தாயோன் எல்லா எவ்வுயிர்க்கும்
தாயோன் தானோர் உருவனே.

**பொ - ரை:** 'உயர்ந்த பிறவிகளையுடையவர்களாய்த் தத்தம் தொழில்களை நன்கு அறிந்த தேவர் பலரும், முனிவர்களும் ஆகிய பொருள்களை நீ படைப்பாய் என்று ஞானம் நிறைந்த பிரமனைப் படைத்தவன்; அப்பிரமன் முதலான தேவர்களுடைய அறிவிற்கும் அப்பாற்பட்டவன்; திசைகளையுடைய பூமி முழுதையும் தன் திருவடிகளால் அளந்தவன்; எல்லா உயிர்கட்கும் தாயைப் போன்றவன்; இப்படிப்பட்ட இவனும் ஒரு தன்மையினையுடையவனாய் இருக்கிறானே! மேன்மைக்கு எல்லை இல்லாததனைப்போன்று, நீர்மைக்கும் எல்லையின்றி இருக்குந்தன்மை என்னே!' என்று ஆச்சரியப்படுகிறார்.

**வி - கு:** 'அடியளந்தான், தாஅயது எல்லாம் ஒருங்கு' (குறள். 610.), 'மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத், தாவிய சேவடி' (சிலப். ஆய்ச்.) என்பன ஈண்டு நினைத்தல் தகும். நான்காமடியில் முதலிலுள்ள 'தாயோன்' என்பது, தாய் என்னும் வினையடியாகப் பிறந்த தொழிற்பெயர்; தாய் - தாவி என்பது பொருள். இரண்டாவது 'தாயோன்' என்பது தாய் என்னும் பெயரடியாகப் பிறந்த முறைப் பெயர். தாய் - பெற்ற தாய்.

ஈடு: மூன்றும் பாட்டு. 'நினைந்தும் பேசியும் நைந்தும் தவறு செய்தேன்,' என்றார் முதற்பாட்டில்; 'தவறு செய்தேன் என்ற இடம் தவறு,' என்றார் இரண்டாம் பாட்டில்; 'நீர் நம்முடைய மேன்மையைப் பார்த்து அங்ஙனம் நெகிழப்போகாதே, நாம் தாழ நின்று எல்லாரோடும் பொருந்தும் சீலகுணத்தையும் ஒருகால் பாரீர்,' என்று திரு உலகு அளந்தருளின சீலகுணத்தைக் காட்டிக்கொடுக்க, அதனை நினைந்து அகலமாட்டாதே, அணுகவுமாட்டாதே, நடுவே நின்று, [1] அணு வாய்த்துக்காலம் கழிக்கிறார். 'அவனை ஒழிய அப்படிக் காலம் கழிக்க வல்லரோ?' என்னில், [2] சீர்கலந்த சொல் நினைந்து போக்கும்போது போக்க வல்லரே; சீலகுண அநுசந்தானத்தால் போக்கலாமன்றே?

மா யோனிகளாய் - வேறுபட்ட பிறவிகளையுடையராய். நடை கற்ற வானோர் பலரும் முனிவரும் யோனிகளைத் தத்தமது அதிகாரத் துக்குத் தக்கனவான மரியாதைகள் உண்டு, படைத்தல் முதலிய வைகள்; அவற்றில் வந்தால் அறிவித்த சர்வேஶ்வரன் பக்கல் இரு கால் மட்டுச் சென்று கேள்வி கொள்ள வேண்டாதபடி கற்று இருப்ப வரான வானோர் பலரும் முனிவரும் ஆன பிறவிகளையுடைய வர்களை. அவர்கள், [3] முனிவர் எழுவர், பிரமர் பதின்மர், உருத்திரர் பதினொருவர், சூரியர் பன்னிருவர், வசுக்கள் எண்மர் என்று இப்படிக்

---

1. *அணுவாய்த்து - விநோதம் செய்துகொண்டு. 'ஐயங்கொண்டு' என்றுமாம்.*

2. *'கார்கலந்த மேனியான் கைகலந்த ஆழியான்*
*பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்—சீர்கலந்த*
*சொன்னினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை*
*என்னினைந்து போக்குவர்இப் போது?* (பெரிய திருவந். 86)

3. *'இருநால்வர் ஈரைந்தின் மேலொருவர் எட்டோடு*
*ஒருநால்வர் ஓரிருவர் அல்லால்—திருமாற்கு*
*யாமார் வணக்கமார் ஏபாவம் நன்னெஞ்சே!*
*நாமா மிகவுடையோம் நாழ்.'* (பெரிய திருவந். 10)

*'திதியின் சிறுரும் விதியின் மக்களும்*
*மாசில் எண்மரும் பதினொரு கபிலரும்*
*தாமா இருவரும் தருமனும் மடங்கலும்*
*மூவேழ் உலகமும் உலகினுள் மன்பதும்*
*மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம்'* (பரிபா. 3: 6-10)

என்பன ஈண்டு நினைத்தல் தகும்.

கூறப்படுகின்றவர்கள். நீ படை என்று நிறை நான்முகனைப் படைத்தவன் - 'நீ படை' என்று முந்துற நான்கு முகங்களையுடைய பிரமனைப் படைத்தவன். 'முன்னர்ப் பிரமனை எவன் உண்டாக்கினனோ' என்கிறபடியே, பிரமனைப் படைத்து, 'இவ்வருகு உண்டான காரிய வர்க்கத்தை உண்டாக்கு' என்று விட்டால், சர்வேஸ்வரனைக் கேள்வி கொள்ள வேண்டாதபடி [1] துப்புரவு உடையவன் ஆகையால் '**நிறைநான்முகனை**' என்கிறார்.

சேயோன் எல்லா அறிவுக்கும் - நேரே தன் பக்கல் பிறந்து, தான் ஓதுவிக்க ஓதி, அவற்றாலே ஞானத்தில் குறைவு அற்று இருக்கிற பிரமன் முதலானவர்களுடைய ஞானத்துக்கும் அப்பாற்பட்டவனாய் இருப்பான். திசைகள் எல்லாம் திருவடியால் தாயோன் - திக்குகளோடேகூடப் பூமிப்பரப்பு முழுவதையும் தாவி அளந்து கொண்டவன். இதனால், எத்துணை வியக்கத்தக்க ஞானத்தை யுடையவர்களுடைய ஞானத்துக்கும் அப்பாற்பட்டவனாய் இருந்தும், தானே தன்னைக் கொடுவந்து காட்டுமன்று வருத்தம் அறக் கொடு வந்து காட்டுவான் என்பதனைத் தெரிவித்தபடி. 'நாய்ச்சிமார் தொடும் போதும் பூத்தொடுமாறு போன்று கூசித் தொடும் திருவடிகளைக் கொண்டு அன்றே காடும் ஓடையும் அளந்துகொண்டான்!' என்று ஆச்சரியப்படுகிறார். 'நன்மை தீமை பாராதே எல்லார் தலைகளிலும் திருவடிகளைக் கொடு வந்து வைக்கைக்குக் கராணம் என்?' என்னில், எல்லா எவ்வுயிர்க்கும் தாயோன் - எல்லா உயிர்கட்கும் [2] தாயினைப் போன்று அன்புடையனாகை. ஈண்டு, 'எல்லா எவ்வுயிர்' என்றது, உயர்வு தாழ்வுகள் பொருந்திய பிறவிகளையுடைய எல்லா உயிர்களையும். தான் ஓர் உருவனே - ஒருவர்க்கும் நிலம் அல்லாத மேன்மையினையும் நினைந்தார்; அப்படிப்பட்டவனுடைய நீர்மையினையும் நினைந்தார்; 'இவனும் ஒரு படியையுடையவனாய் இருக்கிறானே!' என்று ஈடுபாடு உடையவர் ஆகிறார். [3] கடுநடையிட்டு ஓடுகிறவர் இவன் சீல குணத்தை நினைந்து கால் தாழ்க்கிறார். (3)

---

1. *துப்புரவு-படைக்கும் ஆற்றல்.*

2. *'தாய்ஒக்கும் அன்பின்; தவம்ஒக்கும் நலம்பயப்பின்'* (கம்ப அரசி. 4.) *என்பது ஈண்டு ஒப்பு நோக்குக.*

3. *'கடுநடையிட்டு ஓடுகிறவர்' என்று தொடங்கும் வாக்கியம், இப்பாசுரத்தின் முன்னுரைக்குத் தக்க பாவம்.*

48

தானோர் உருவே தனிவித்தாய்த்
 தன்னின் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
 மற்றும் மற்றும் முற்றுமாய்த்
தானோர் பெருநீர் தன்னுள்ளே
 தோற்றி அதனுள் கண்வளரும்
வானோர் பெருமான் மாமாயன்
 வைகுந் தன்எம் பெருமானே.

**பொ - ரை :** தானே காரணன், ஒரு காரணன், தனித்த காரணனாகி, தன் சங்கற்பத்தால் தோன்றின பிரமன் சிவன் இந்திரன் மூவரும், அம்மூவர் முதலாக எண்ணப்படுகின்ற தேவர் பலரும், முனிவர்களும், மனிதர்களும், விலங்குகளும், ஏனைய நிலையியற்பொருள்கள் முதலான எல்லாப் பொருள்களும் உண்டாவதற்காகத் தானே தன்பக்கல்நின்றும் ஒப்பு அற்ற பெரிய வெள்ளத்தினை உண்டாக்கி, அதன்கண் அறிதுயில் செய்கின்ற நித்தியசூரிகள் தலைவன்; மிகப்பெரிய ஆச்சரியமான செயல்களையும் குணங்களையுமுடையவன்; அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டில் இருப்பவன்; அவன் எனக்கு உபகாரத்தைச் செய்த தலைவனாவான்.

**வி - கு :** 'வித்து ஆகி, முற்றும் ஆவதற்காகத்தோற்றி, அதனுள் கண்வளரும் பெருமான்' எனக் கூட்டுக. 'முற்றும் ஆய்' என்பதில் 'ஆய்' என்பது செயவென் எச்சத்திரிபு. இனி, 'பெருமான் கண்வளரும்' எனக் கூட்டி, 'கண்வளரும்' என்பதனை முற்று ஆக்கினும் அமையும். 'தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள் கண்வளரும்' என்றது, அண்டத்தை உண்டாக்கி, அதற்குள்ளே பெருவெள்ளத்தை உண்டாக்கிக் கண்வளருகிறபடியைச் சொல்லியவாறும். இது [1] சமஷ்டி சிருஷ்டி; முன்னிரண்டு அடிகளிற்கூறியது வியஷ்டி சிருஷ்டி.

**ஈடு :** நான்காம் பாட்டு. 'அவன் படி இதுவாய் இருந்தது; இனி நீர் செய்யப் பார்த்தது என்?' என்ன, 'நாம் அகலப் பார்த்தால் உடையவர்கள் விடுவார்களோ?' என்கிறார். 'வேண்டுதல் என்பது மிகச் சிறிதும் இல்லாதவனாய் இருந்தும், படைத்தல் முதலிய அநேக முயற்சிகளைச் செய்து என்னைத் தனக்கு ஆக்கிக்கொண்ட குணங்களாலே என்னை அடிமை கொண்டவன், இனி, 'நான் அல்லேன்'

---

1. சமஷ்டி - தொகுதி, வியஷ்டி - வேறு வேறு.

என்னிலும். தன்னுடைய [1]சௌசீல்ய குணத்தால் என்னை விடான்,' என்று சமாதானத்தை அடைந்தவர் ஆகிறார்.

தான் ஓர் உருவே தனி வித்தாய்-[2]'சோமபானம் செய்தற்குரிய சுவேத கேதுவே, காணப்படுகிற இவ்வுலகமானது படைப்பதற்கு முன்னே 'சத்து' என்று சொல்லக்கூடியதாய், நாம ரூபங்கள் இன்மையின் ஒன்றாய், அடையத்தக்க இரண்டாவது பொருள் வேறு இல்லாததாய் இருந்தது,' என்கிறபடியே, [3]இங்கும், இரண்டு இன்மையைக் காட்டுகிற 'தான் ஓர் தனி' என்னும் பதங்கள் மூன்று உண்டாய் இருந்தன; 'இச்சொற்களுக்குப் பயன் யாது?' எனின், படைத்தலை அருளிச் செய்வதனால் காரண விஷயமாகக் கிடக்கின்றன. மூன்று காரணங்களும் தானே என்கை. 'தான்' என்கிற இதனால், முதற்காரணம் வேறு இல்லை என்கை. 'ஓர்' என்கிற இதனால் துணைக்காரணம் வேறு இல்லை என்கை. 'தனி' என்கிற இதனால், நிமித்த காரணம் வேறு இல்லை என்கை. உரு - அழகு, ஆக, 'அழகிய [4]மூன்று காரணமும் தானேயாகி' என்றபடி.

தன்னின் மூவர் முதலாய - விஷ்ணுவாகிற தன்னோடு கூடின மூவர் தொடக்கமான. 'ஆயின், இறைவனாகிய தான், பிரமன்

---

1. சௌசீல்யம் - சீலத்தின் தன்மை; சீலமாவது-மந்தர்களோடே புரை அறக் கலத்தல்; அதனைத் தன் பேறாக நினைத்திருக்கை-சௌசீல்யம்.

2. சாந்தோக்கிய உபநிட, 6. 2: 1.

3. 'இங்கும்' என்பதற்கு 'உபநிடதத்தைப்போன்று இத்திருப் பாசுரத்திலும்' என்பது பொருள். உபநிடத வாக்கியம், 'சதேவ', 'ஏகமேவ', 'அத்விதீயம்' என்பன. இவை முறையே, துணைக்காரணம், முதற்காரணம், நிமித்த காரணம் வேறு இன்மையைக் காட்டுகின்றன. 'படைத்தலை அருளிச் செய்வதனால்' என்றது, பாசுரத்தில் 'மற்றும் மற்றும் முற்றுமாய்' என்றதனை நோக்கி. 'உற்று ஒரு தனியே தானே தன்கணே உலகம் எல்லாம், பெற்றவன்' (கம்ப. வருண. 63.) என்ற செய்யுள் இங்கு நினைவிற்கு வந்து பேருவகை தருகின்றது. இதனால், 'முன்னோர் மொழிபொருளே அன்றி அவர் மொழியும், பொன்னே போல் போற்றி' மொழியும் கம்பருடைய மேன்மை புலனாம்.

4. சூக்கும சித்து அசித்தோடு கூடியிருக்கின்ற தன்மையால் முதற்காரணமும், சங்கற்பத்தோடு கூடியிருக்கின்ற தன்மையால் நிமித்த காரணமும், ஞானம் சத்தி முதலிய குணங்களோடு கூடியிருக்கின்ற தன்மையால் துணைக்காரணமும், ஆக மூன்று காரணங்களும் இறைவனேயாவான் என்பதாம்.

சிவன் இவர்களோடு கூடியிருப்பின் தனக்கும் அவர்கட்கும் வேற்றுமை இன்றித் தனது உயர்விற்குக் குறைவு வாராதோ?' என்னில், இட்சுவாகு குலத்தினர் நடுவே வந்து அவதரித்து அவர்களோடே எண்ணலாம்படி இருக்குமாறு போன்றும், யாதவர்கள் நடுவே வந்து அவதரித்து அவர்களோடு ஒக்க எண்ணலாம்படி இருக்குமாறு போன்றும், பிரமன் சிவன் இவர்கள் நடுவே அவர்களோடு ஒக்கச் சொல்லலாம்படி அவதரித்து, [1] தனது உருவமாய் நின்று அளித்தலைச் செய்து, அவர்களுக்கு அந்தராத்துமாவாய் நின்று படைத்தல் அழித்தல்களைச் செய்து போதரலால் உயர்விற்குக் குறை வாராது என்க. இனி, தன்னின் மூவர் முதலாய-பிரமன் சிவன் இந்திரன் ஆகிய மூவர் முதலாய-என்று கூறலும் ஆம். [2]'இந்திரனோடு கூட' என்று புகலும் **உபநிடதமும்.**

வானோர் பலரும்-தேவர் பலரையும், முனிவரும்-சனகன் முதலானவர்களையும், மற்றும்-நிலையியற்பொருள்களையும், மற்றும்-இயங்கியற்பொருள்களையும், முற்றும் ஆய்-ஆகச் சொல்லப்படாத எல்லாப் பொருள்களையும் உண்டாக்குகைக்காக, தானோர் பெருநீர் தன்னுள்ளே தோன்றி அதனுள் கண்வளரும்-இப்படிப் படைத்தலில் நோக்கமுடைய தான், தனக்குக் கண்வளர்ந்தருளுகைக்குத் தகுதியாகப் பரப்பையுடைத்தான ஒரு சமுத்திரத்தைத் தன் பக்கல் நின்றும் உண்டாக்கி அதனுட்கண்வளரும். 'இப்படிச் சமுத்திரத்தில் தனியே சாய்ந்தருளுகிறவன்தான் யார்?' என்னில், வானோர் பெருமான்-நித்தியசூரிகட்கு நாதன் ஆனவன்; மாமாயன்-ஆச்சரியங்களான குணங்களையும் செயல்களையுமுடையவன்; வைகுந்தன் - ஸ்ரீவைகுண்டத்தைக் கொலு வீற்றிருக்கும் இடமாகவுடையவன்

---

1. *'முன்னுரு வாயினை நின்திரு நாபியின் முளரியின் வாழ்முனிவன்*
*தன்னுரு வாகி இருந்து படைத்தனை பலசக தண்டமுநீ*
*நின்னுரு வாகி யளித்திடு கின்றனை நித்த விபூதியினால்*
*என்னுரு வாகி யழிக்கவும் நின்றனை ஏதமில் மாதவனே!'*

*என்று சிவபிரான், கண்ணபிரானை நோக்கிக் கூறிய கூற்று ஈண்டு நினைக்கத்தகும்.* வில்லி பா. 13-ஆம் போர். 220.

2. *நாராயண அநுவாகம்.*

எம்பெருமானே - அவன் என் நாயனே. [1] உடைமை தப்பிப் போகப் புக்கால் உடையவர்கள் ஆறியிருப்பர்களோ? பெறுகைக்கு ஈடாக முன்னரே நோன்பு நோற்று வருந்திப் புத்திரனைப் பெற்ற தாயானவள், அவன் நடக்க வல்லனான சமயத்திலே, 'வேறு தேசம் போவேன்' என்றால் விட்டு ஆறியிராள் அன்றே? அப்படியே, நெடுநாள் தன் வாசி அறியாதே போந்த எனக்கு அறிவைத் தந்து தன்னை உள்ளபடி அறிவித்தவன், தான் தந்த அறிவைக்கொண்டு நான் அகன்று போகப் புக்கால், அவன் விட்டு ஆறியிருப்பனோ என்பார், '**எம்பெருமானே**' என்கிறார். (4)

49

மானேய் நோக்கி மடவாளை
மார்பிற் கொண்டாய் மாதவா!
கூனே சிதைய உண்டைவில்
நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா!
வானோர் சோதி மணிவண்ணா!
மதுசூதா! நீ அருளாய்உன்
தேனே மலரும் திருப்பாதம்
சேரு மாறு வினையேனே.

**பொ - ரை:** மானின் பார்வை போன்ற பார்வையினையுடைய ளாகிய திருமகளை மார்பில் தரித்தாய் ஆதலின், 'மாதவன்' என்னும் திருப்பெயரையுடையவனே, மந்தரையினுடைய முதுகின் வளைவுமட்டும் போகும்படி உண்டைவில்லால் மார்பில் அடித்தவனான கோவிந்தனே, மோக்ஷ உலகம் முழுவதும் நிறைந்த ஒளியினையுடைய நீலமணி போன்ற நிறத்தையுடையவனே, மது என்னும் அரக்கனைக் கொன்றவனே, உன்னுடைய தேன் மலர்கின்ற திருவடித்தாமரைகளை வினையேன் சேரும்படி திருவருள் புரிவாய்.

**வி - கு:** 'நோக்கி' என்பது இகரவீற்றுப் பெண்பாற்பெயர். 'கூனே' என்பதில் ஏகாரம் பிரிநிலை. கோவிந்தன்-ஸ்ரீராமன்; பூமியைக் காப்பவன் என்பது பொருள்; கோ - பூமி. 'தொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவு கூனி கூன், உண்டை கொண்டு அரங்க ஒட்டி உள்மகிழ்ந்த நாதன்' (திருச்சந். 49.) என்பர் திருமழிசை மன்னனும். 'திருப்பாதம் வினையேன் சேருமாறு நீ அருளாய்,' எனக் கூட்டுக.

---

1. இப்பாசுரத்தின் முன்னுரைக்குச் சேரக் கருத்தை அருளிச்செய்கிறார், 'உடைமை தப்பிப்போகப் புக்கால்' என்று தொடங்கும் வாக்கியத்தால்.

ஈடு: ஐந்தாம் பாட்டு. [1]விரும்பி அநுகூலரான பின்னர், [2]'இவ்விடத்தில் பர்ணசாலையைக் கட்டு என்று எனக்குக் கட்டளையிடல் வேண்டும்,' என்று இளைய பெருமாள் பிரார்த்தித்தது போன்று, ஏவி அடிமை கொள்ள வேண்டும் என்று பிரார்த்திக்கிறார். அன்றி, இவர் அநுகூலரானபின்பும் அவன் முகங்காட்டாமல் சிறிது நேரந் தாழ்க்க, அது பற்றாமல், 'அருளாய்' என்கிறார் எனலுமாம்.

மான்ஏய் நோக்கி - மானோடு ஒத்த கண்களையுடையளாய். இனி, [3]காரியப்பாடு அறக் கண்ணாலே அவனை ஒருக்கால் நோக்கினால், ஒரு பாட்டம் மழை விழுந்தாற்போலே குளிரச் செய்கின்ற கண்கள் என்று கூறலுமாம். மடவாளை ஆத்தும குணங்களையுடைய பெரிய பிராட்டியாரை. இனி, மடப்பமாவது துவட்சியாய், அவன் தான் கண்ணாலே இவளை நோக்கினால், [4]'தெய்வ வண்டு துதைந்த எம் பெண்மை அம் பூ' என்கிறபடியே, எடுக்கப்பட்ட சாரத்தையுடைய பூப்போன்று இருக்கின்ற மென்மையினையுடையவள் என்று கூறலுமாம். மார்பிற் கொண்டாய் மாதவா- [5]'விஷ்ணுவினுடைய திருமார்பில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பிராட்டியார்' என்கிறபடியே, அவள், திருமார்பில் நித்தியவாசம் செய்கையாலே 'மாதவன்' என்னுந் திருநாமத்தையுடையவனே. மாம்பழத்தோடு ஒருவித சம்பந்தம் இல்லாதிருக்கவும் ஒரு வகை வண்டு '**மாம்பழ உண்ணி**' என்ற பெயரை அடைவது

---

1. *'மேல் இரண்டு பாசுரங்களில் சமாதானத்தை அடைந்தவர் இப்பாசுரத்தில் 'சேருமாறு அருளாய்' என்பதற்குக் காரணம் யாது?' எனின், அதற்கு இரண்டு வகையாக விடையருளிச்செய்கிறார் 'விரும்பி அநுகூலரான பின்னர்' என்று தொடங்கி. முதல் விடையில், 'அருளாய்' என்றது கைங்கரியப் பிரார்த்தனை. இரண்டாவது விடையில், புருஷார்த்தமாகைக்காக இறைவன் சிறிது போழ்து தாழ்க்க, பிரார்த்திக்கின்றார் என்றபடி.*

2. *ஸ்ரீராமா. ஆரண்.* 15 : 7.

3. *'நோக்கி' என்பதற்கு இருபொருள்: ஒன்று, கண்களையுடையவள். மற்றொன்று கண். காரியப்பாடற - வேறு பயனின்றி, அதாவது, அன்புடன் எனலுமாம்.*

4. *திருவாய்.* 9, 9 : 4.

5. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 1. 9 ; 104.

போன்று, 'ஸ்ரீ' யோடு சம்பந்தம் இல்லாதிருக்கவும் 'ஸ்ரீமான்' என்ற பெயரைத் தரித்திருக்கின்ற பிறரைப் போல அல்லன் இறைவன் என்பார், 'மார்பிற்கொண்டாய் மாதவா' என்கிறார். மடவாளை மார்பிற்கொண்டவனாயிருப்பதனால், அருளுவிப்பாரும் அருகே இருக்க 'எனக்கு அருளாய் என்று வேண்டுவது என் ?' என்றபடி.

கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா-வனவாசத்திற்குக் காரணமான குப்ஜையைச் சொல்லிற்றுய், இளமையில் சுண்டுவில் கொண்டு திரிகிற காலத்தில் பெருமாள் லீலாரசம் அனுபவித்தார் என்பது ஒன்று உண்டு; அதனை நோக்கிச் சொல்லுகிறார். அப்போது 'கோவிந்தா' என்றதற்குப் 'பூமியைக் காப்பவன்' என்பது பொருள். அவளுடைய மற்றை உறுப்புகட்கு ஒரு வாட்டம் வாராதபடி நிமிர்த்தானாதலின், 'கூனே சிதைய' என்கிறார். அன்றி, [1] தீம்பு சேர்வது கிருஷ்ணனுக்கே ஆகையாலே, [2] 'போம்பழி எல்லாம் அமணன் தலையோடே' என்னுமாறு போன்று,

---

1. கூன் சிதைய உண்டை வில்லால் நிறத்தில் தெறித்தவன் ஸ்ரீராமனாயினும், அச்செயலை அவன்மேல் ஏற்றுதற்கு மனமின்றிக் 'கோவிந்தா' என்று கிருஷ்ணன்மேல் ஏற்றுகிறார் என்பது கருத்து.

2. 'போம்பழி எல்லாம் அமணன் தலையோடே' என்றது, ஒரு கள்ளன் ஒரு பிராமணன் வீட்டில் கன்னம் இட, அது ஈரச்சுவராகையாலே இறுத்திக்கொண்டு இறக்க, அவ்வளவில் அவன் உறவினர் வந்து பிராமணனைப் பழிதரவேண்டும் என்ன, இரண்டு திறத்தாரும் அரசன் பக்கல் போக, அவ்வரசனும் அறிவற்றவனும் மூர்க்கனுமாகையாலே, 'பிராமணா, நீ ஈரச்சுவர் வைக்கையால் அன்றோ அவன் இறந்தான்? ஆகையால், நீ பழிகொடுக்க வேண்டும்' என்ன, 'எனக்குத் தெரியாது; சுவர் வைத்த கூலியாளைக் கேட்கவேண்டும்' என்ன, அவனை அழைத்து, 'நீயன்றோ ஈரச்சுவர் வைத்தாய்? நீ பழி கொடுக்க வேண்டும்,' என்ன, அவனும் 'தண்ணீர் விடுகிறவன் போரவிட்டான்; என்னால் செய்யலாவது என்?' என்ன, அவனையழைத்துக் கேட்க, அவனும் 'குசவன் பெரும் பானையைத் தந்தான்; அதனாலே நீர் ஏறிற்று,' என்ன, அவனையழைத்துக் கேட்க, அவனும் 'என்னால் வந்ததன்று; ஒரு வேசி போகவரத் திரிந்தாள்; அவளைப் பார்க்கிற பராக்கிலே பானை பெருத்தது' என்ன, அவளை யழைத்துக் கேட்க, அவளும் 'என்னால் அன்று; வண்ணான் புடைவை தாரா மையாலே போகவரத் திரிந்தேன்,' என்ன, அவனையழைத்துக்கேட்க, அவனும், 'என்னால் அன்று; துறையில் கல்லில் ஓர் அமணன் வந்திருந்தான்; அவன் போகவிட்டுத் தப்ப வேண்டியதாயிற்று,' என்ன, அந்த அமணனைத் தேடிப்பிடித்துக் கொண்டு வந்து 'நீயன்றோ இத்தனையும் செய்தாய்? நீ பழி கொடுக்க வேண்டும்,' என்ன, அவன் மௌனி ஆகையாலே பேசாதிருக்க, 'உண்மைக்கு உத்தரம் இல்லை என்று இருக்கிறான்; இவனே எல்லாம் செய்தான்,' என்று, அரசன் அவன் தலையை அரிந்தான் என்பது கதை.

கிருஷ்ணன் தலையிலே ஏறிட்டுச் சொல்லுகிறார் என்றலுமாம். இனி, [1] சாந்து கொடுத்த கூனிதன்னையே சொல்லிற்றாய், வருத்தம் அறச் சுண்டுவில் நிமிர்க்குமாறு போன்று கூனை நிமிர்த்தவன் என்றலும் ஒன்று. 'தெறித்தாய், நிமிர்த்தாய்' என்றபடி. 'ஆயின், கிருஷ்ணனுக்கு வில் உண்டோ?' என்னில், [2] வேலிக்கோல் வெட்டி விளையாட்டு வில் ஏற்றித் திரியுமவன் அன்றோ கிருஷ்ணன்? [3] 'தருமம் அறியாக் குறும்பனைத் தன்கைச் சார்ங்க மதுவேபோல்' என்று வில் உண்டாகவே அருளிச்செய்து வைத்தாள் அன்றே ஸ்ரீ ஆண்டாள்? அவள் அருகில் இல்லாது ஒழியினும் உன்னைக் கிட்டினார்க்குத் தாழ்வு வருமோ என்கிறார் இதனால். கோவிந்தா-விலங்குகளோடும் பொருந்துமவன் அல்லையோ நீ?

வான்ஆர் சோதி மணி வண்ணா-குப்பியில் மாணிக்கம் போன்று [4] திரிபாத்விபூதியிலும் அடங்காதே விம்மும்படியான புகர் படைத்த வடிவையுடையவனே! இதனால், [5] 'அடியார்களுக்காகவே வடிவு படைத்தவன் அல்லையோ நீ?' என்கிறார். மதுசூதா-மதுவாகிற அசுரனைப் போக்கியது போன்று என் விரோதியைப் போக்கினவனே! இதனால், 'அவ்வடிவை அனுபவிப்பார்க்கு வரும் விரோதியைப் போக்குவாயும் நீயன்றோ?' என்கிறார். உன் தேனே மலரும் திருப்பாதம்-'இவை ஒன்றும் இல்லையாயினும் அடியில் உன் இனிமையைப் பார்த்தால்தான் விடப் போமோ?' என்கிறார். தேன் போலே இனிமையான திருவடிகள் என்றபடி. இனி, இவர் [6] பெருநிலம் கடந்த நல்லடிப்போதையன்றோ ஆசைப்பட்டார்? இவர்

---

1. *கூனி சந்தனம் கொடுத்தது, கிருஷ்ணாவதாரத்தில். சாந்து கொடுத்த கூனியின் வளைவை நிமிர்த்த சரிதத்தைப் பாகவதத்தால் உணர்க*

2. *பெரியாழ்வார் திருமொழி*, 2. 6 : 1.

3. *நாய்ச்சியார் திருமொழி*, 14 : 6.

4. *திரிபாத் விபூதி-பரமபதம். இவ்வுலகங்கள் எல்லாம் காற்பங்காகவும் அவ்வுலகம் முக்காற்பங்காகவும் இருப்பதனால் பரமபதத்தைத் 'திரிபாத் விபூதி' என்கிறார்.*

5. *ஜிதந்தா ஸ்தோத்திரம்*, 5.

6. *திருவாய்.* 1. 3 : 10.

ஆசைப்பட்டபடியே, [1]‘திசைகள் எல்லாந் திருவடியால் தாயோன்’ என்று அத்திருவடிகளையே காட்டிச் சேரவிட்டான்; ‘உன் தேனே மலரும் திருப்பாதம்’ என்று அதனையே விரும்புகிறார் என்று கோடலுமாம். அங்ஙனம் கொள்ளுங்கால், தேனே மலரும் திருப் பாதம் என்பதற்கு, [2]‘திரிவிக்கிரமாவதாரத்தை எடுத்த இறை வனுடைய திருவடிகளினின்று அமிர்தவெள்ளம் உண்டாகிறது’ என்கிறபடியே, தேன் போன்று இனிய கங்கையானது தோன்று கின்ற திருவடிகள் என்று பொருள் கொள்க. அருளாய் சேருமாறு வினையேன் - கலத்தில் இட்டசோற்றை விலக்குவாரைப் போன்று, நீ வந்து கிட்டக்கொள்ள அகலுகைக்கு அடியான பாவத்தைப் பண்ணின நான் சேருமாறு அருளவேண்டும். தாம் இசைந்த பின்பும் கிடையாமையாலே ‘**வினையேன்**’ என்கிறார். (5)

50

*புனையேன் வினைதீர் மருந்தானாய்!*
*விண்ணோர் தலைவா! கேசவா!*
*மனைசேர் ஆயர் குலமுதலே!*
*மாமா யவனே! மாதவா!*
*சினையேய் தழைய மராமரங்கள்*
*ஏழும் எய்தாய்! சிரீதரா!*
*இனையாய்! இனைய பெயரினாய்!*
*என்று நைவன் அடியேனே.*

**பொ - ரை:** தீவினைகள் வாய்ந்த என்னுடைய தீய வினைகளைப் போக்கும் மருந்தானவனே, நித்தியசூரிகள் தலைவனே, பிரமனையும் சிவனையும் உனது திருமேனியில் வைத்திருப்பவனே, மனைகளோடு மனைகள் சேர்ந்திருக்கின்ற ஆயர்பாடிக்குத் தலைவனே, மிக்க ஆச்சரிய மான குணங்களையும் செயல்களையுமுடையவனே, திருமகள் நாதனே, கிளைகளையுடைய தழைகள் பொருந்திய ஆச்சாமரங்கள் ஏழனையும் ஓர் அம்பினால் தொளைத்தவனே, வீரலட்சுமியைத் தரித்திருப்பவனே, இத் தன்மைகளையுடையவனே, இவற்றிற்குத் தக்க பெயர்களையுடைய வனே என்று கூறிக்கொண்டே உருகுவன் அடியேன்.

**வி - கு:** தீர் மருந்து - இறந்த கால வினைத்தொகை. ஆயர் குலம்- ஆயர் பாடி.

---

1. திருவாய், 1. 5 : 3.
2. விஷ்ணு சூக்தம்.

ஈடு: ஆறும் பாட்டு. இவர் எதிர்முகம் செய்தவாறே, இறைவன் சிறிது தாழ்த்தான்; இவர் 'என்னை' [1] இழந்தாயே ஆனாய்!' என்கிறார்.

[2] 'உன்னைப் பார்த்தல், என்னைப் பார்த்தல் செய்ய வேண்டாவோ?' என்கிறார். வினையேன் வினைதீர் மருந்து ஆனாய் மற்றை மக்கள் எல்லார்க்கும் உள்ள வினைகள் போல அல்லவாயிற்று இவருடைய வினை; அவர்கள் அனைவரும் 'பகவானைச் சேர வேண்டும்' என்று அன்றே இருப்பது? அகல நினைக்கிற இது உள்ளது இவர் ஒருவர்க்குமேயாதலின் 'வினையேன்' என்கிறார். 'நான் கிட்டுகை அத்தலைக்குத் தாழ்வு என்று அகலுகைக்கு அடியான வினையைப் போக்கினான்?' என்னில், விண்ணோர் தலைவா-நித்தியானுபவம் பண்ணும்போது 'நான் அயோக்கியன்' என்று அகல வேண்டாதார்க்கு ஏவுகின்றவனாய் இருக்கும் இருப்பில்நின்று வந்து போக்கினான். கேசவா-[3] 'க என்னும் இது பிரமனுக்குப் பெயராம்; எல்லாரையும் ஏவுகின்றவன் நான் ஆதலின், எனக்கு ஈசன் என்று பெயராம்; நாங்கள் இருவரும் தேவரீருடைய திருமேனியில் உண்டானோம்; ஆதலால், 'கேசவன்' என்ற பெயரை அடைந்தீர்' என்கிறபடியே, [4] அதற்கு இவ்வருகே ஒரு பயணம் எடுத்துவிட்டபடி. மனை சேர் ஆயர் குல முதலே-ஐந்து லக்ஷம் குடி ஆகையாலே மனையோடு மனை சேர்ந்த ஆயர் பாடிக்குத் தலைவனே; இனி, இதற்கு, [5] 'ஆயர்கள் மனைகளிலே வந்து சேர்ந்து, அவர்கள் குலத்துக்கு முதலானவனே' என்று உரைத்தலுமாம். இனி, 'மனை சேர் ஆயர்' என்பதற்கு, நான்கு மூங்கில்களைக் கொண்டு போய், தங்கும் இடத்தில் வளைத்துத் தங்குகிற ஆயர்,' என்று பொருள் கூறலும் ஒன்று. 'மனை சேர் ஆயர் குல முதலே' என்றதனால்,

---

1. 'இழந்தாயேயானாய் என்கிறார்' என்றது, 'நைவன்' என்றதனை நோக்கி.

2. 'உன்னைப் பார்த்தல் செய்ய வேண்டாவோ?' என்றது, 'மருந்தானாய்' என்பது முதல் 'இனைய பெயரினாய்' என்பது முடிய, பாவம். 'என்னைப் பார்த்தல் செய்ய வேண்டாவோ?' என்றது, 'அடியேன்' என்றதனை நோக்கி; வேறு புகலிடம் இல்லாதவன் என்றபடி.

3. 'கேசவா' என்று பிரம ருத்திரர்களுக்கு உத்பாதகனான பிரத்யும்நனைச் சொல்லுகிறார்.

4. 'ஒரு பயணம் எடுத்து விட்டபடி' என்றது, படைத்தலில் நோக்கமுள்ளவனாய்த் திருபாற்கடலில் தங்கியிருக்கும் நிலையை.

5. இங்குக் கூறும் பொருளுக்கு 'ஆயர் மனைசேர் குலமுதலே' என்று சொற்களைக் கூட்டுக.

திருப்பாற்கடலினின்றும் இவ்வருகே போந்து கிட்டினபடியை அருளிச்செய்தாராவர்.

மா மாயவனே - ஆய்க்குலத்திலே வந்து பிறந்து, அவர்கள் தொட்ட பொருளே தாரகமாய், அதுதான் களவு கண்டு உண்ணும் படியாய், அதுதான் தலைக்கட்டமாட்டாதே வாயது கையதுவாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு நிற்கும் நிலை. இவ்வெளிமைக்கு அடி சொல்லுகிறார் மேல்: மாதவா - அவளுடைய சேர்த்தி. சினை ஏய் தழைய மராமரங்கள் ஏழும் எய்தாய் - கிளைகளோடு கிளைகள் நெருங்கித் தழைத்து நினைத்தபடி இலக்குக் குறிக்க ஒண்ணாதவாறு நின்ற மராமரங்கள் ஏழையும் எய்தவனே ! இது, மகாராஜரை நம்பச் செய்து காரியஞ்செய்தபடி. இதனால், அடியார்கள் தன்னுடைய காத்தலில் ஐயங்கொள்வார்களாயின், அவ்வையத்தை நீக்கிக் காக்கின்றவன் என்பதனைத் தெரிவித்தவாறு. சிரீதரா - மராமரங்கள் எய்கைக்கு இலக்குக் குறித்து நின்ற போதைய வீரலட்சுமியைக் குறிக்கிறார். இனையாய் - இவ்விதமான குணங்களையும் செயல்களையு முடையவனே. இனைய பெயரினாய் - அவற்றிற்கு வாசகங்களான திருப்பெயர்களை உடையவனே. என்று நைவன் - ‘காணவேண்டும், கேட்கவேண்டும்’ என்னாதே உருகுகின்றேன். அடியேனே - யார் உடைமை அழிகிறது? இவ்வுயிர் ஏதேனும் தனக்குத்தானே உரியதாகி அழிகிறதோ, பிறர்க்கு உரிமைப்பட்டு அழிகிறதோ ? உடையவர்கள் வேண்டுமாகில் தங்கள் பொருளை நோக்கிக்கொள்ளுகிறார்கள் என்பார், ‘**அடியேனே**’ என்கிறார், உன்னால் இரட்சிக்க ஒண்ணாமல் அழிகிறதோ ? என்னால் இரட்சிக்கலாய் அழிகிறதோ ? (6)

51

*அடியேன் சிறிய ஞானத்தன்*
*அறிதல் ஆர்க்கும் அரியானைக்*
*கடிசேர் தண்ணம் துழாய்க்கண்ணி*
*புனைந்தான் தன்னைக் கண்ணனைச்*
*செடியார் ஆக்கை அடியாரைச்*
*சேர்தல் தீர்க்கும் திருமாலை*
*அடியேன் காண்பான் அலற்றுவன்*
*இதனின் மிக்கோர் அயர்வுண்டே ?*

---

1. *‘உன்னால் இரட்சிக்க ஒண்ணாமல் அழிகிறதோ?’ என்பது, மேல் ‘உன்னைப் பார்த்தல், என்னைப் பார்த்தல் செய்ய வேண்டாவோ?’ என்றதன் கருத்து.*

**பொ - ரை :** 'எத்துணை மேம்பட்ட ஞானமுடையவர்களும் தமது முயற்சியால் காணும் அன்று அறிதற்கு அரியவனும், வாசனை பொருந்திய குளிர்ந்த அழகிய திருத்துழாய்மாலையை அணிந்தவனும் கண்ணபிரானும், தன்னையடைந்த அடியார்கட்கு நோய் பொருந்திய சரீர சம்பந்தத்தை நீக்குகின்ற திருமகள் கேள்வனும் ஆன எம்பெருமானை நினைந்து, மிகச் சிறிய அறிவினையுடைய யான், அடியேன் என்று அலற்றுவன்; காண்பதற்கு அலற்றுவன்; இதைக்காட்டிலும் மேம்பட்ட அறிவின்மை ஒன்று உளதோ ?' என்கிறார்.

**வி - கு :** செடி - தீவினைகள் ; ஈண்டு, அவற்றான் ஆய நோய்கட்கு ஆயிற்று. ஆக்கை - எழுவகைத் தாதுக்களால் கட்டப்பட்டது ; உடல். 'அடியாரை' என்பது உருபு மயக்கம். மிக்க ஓர் என்பது - மிக்கோர் என வந்தது, விகாரம்.

**ஈடு :** ஏழாம் பாட்டு. [1] 'நைவன்' என்றார் ; இவரை நைவிக்க மனம் இல்லாமையாலே வந்து முகங்காட்டினான் ; அவனைப் பார்த்து, 'நம்மால் வருகுணத்தின் மேன்மையும் இவனுக்கு வேண்டா,' என்று அகலுகிறார்.

அடியேன் சிறிய ஞானத்தன் - சம்சாரிகளில் அறிவு கேடர் 'முற்றறிவினர்' என்னும்படியன்றோ என் அறிவு கேடு! 'அல்லேன்' என்று அகலும் இவர், '**அடியேன்**' என்கிறது, **வாசனையாலே.** அன்றி, 'அடியேன்' என்கிறது, அடிமைக்கு இசைந்து அன்று; ஆத்துமாவிற்கு ஞான ஆனந்தங்களைப் போன்று அடிமையையும் நிரூபமாக நினைந்திருக்கையாலே, 'நான்' என்பது போன்று '**அடியேன்**' என்கிறார் எனலுமாம். சிறிய ஞானத்தன் - மிகச் சிறிய அறிவினையுடையவன். அறிதல் ஆர்க்கும் அரியானை-எத்துணை வியக்கத்தக்க அறிவினையுடையராய் இருப்பார்க்கும் அறியப் போகாதவன் இயற்கையிலேயே முற்றறிவினையுடைய தனக்கும் அறியப் போகாதவன்; [2] 'தனக்கும் தன் தன்மை அறிவு அரியான்' அன்றோ ?

---

1. 'இதனின் மிக்கோர் அயர்வுண்டோ ?' என்றதனை நோக்கி அவதாரிகை. 'அடியேன் சிறிய ஞானத்தன்' என்று தாழ்வினை நினைந்து அகலுகையாலே முகங்காட்டினமை சித்தம். 'நம்மால் வரும் குணத்தின் மேன்மையும் இவனுக்கு வேண்டா' என்றது, தாழ்ந்தவனான என்னை அங்கீகரிக்கையால் வரும் சர்வாதிகாரத்துவ ரூபமான குணத்தின் மேன்மையும் இறைவனுக்கு வேண்டா என்றபடி.

2. திருவாய். 8. 4 : 6.

'என்னைநீ இகழ்ந்தது என்றது எங்ஙனே ! ஈச ஞய
உன்னைநீ உணராய் ; நாயேன் எங்ஙனம் உணர்வேன் உன்னை ?'

என்ற செய்யுள் ஒப்பு நோக்கல் தகும். (கம்ப. யுத். 606)

தாம் இறைவனைச் சேர்தல், இருளுக்கும் ஒளிக்கும் உள்ள சேர்த்தியைப் போன்றது என்பார், தம்மைச் '**சிறிய ஞானத்தன்**' என்றும், இறைவனை '**அறிதல் ஆர்க்கும் அரியானை**' என்றும் அருளிச்செய்கிறார். கடி சேர் தண் அம்துழாய்க்கண்ணி புனைந்தான் தன்னை-நாள் செல்ல வாசனை ஏறி வருகின்ற திருத்துழாய் மாலை புனைந்தவனை. அறிய அரிய பொருளுக்கு அடையாளம் திருத்துழாய் மாலை. கண்ணனை-அறிய அரியனாயிருந்தும் ஆயர்கட்கும் ஆய்ச்சிகட்கும் தன்னை எளியன் ஆக்கி வைத்தவனை.

செடி ஆர் ஆக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை-[1]'முதுமை மரணம் இவற்றினின்று விடுபடும்பொருட்டு என்னை அடைந்து வழிபடுகின்றார்கள்' என்கிறபடியே, அவனையே உபாயமாகப் பற்றித் தூறு மண்டின சரீரத்தை அறுத்துக் கொள்ளும் அடியார் உண்டு கேவலர்; அவர்களுக்கு அதனைத் தவிர்த்துக் கொடுக்கும் திருமகள் கேள்வனை. 'ஆயின், அவர்கள் அடியாரோ?' என்னில், தலைவனுக்கு அதிசயத்தை விளைக்குமவர்களே அடியார் ஆவர்; தம்மைப்போன்று கிட்டித் தலைவனுக்குத் தாழ்வினை விளைக்கப் பாராமல், பிறவியாகிற தளையை அறுத்துக்கொண்டு கடக்க நிற்கின்றவர்கள்; அவர்கள் ஆதலின், அவர்களையே அடியவர்கள் என்று இருக்கிறார். இனி, செடி ஆர் ஆக்கை என்பதற்கு, [2]'நோய் எலாம் பெய்தது ஓர் ஆக்கை' என்கிறபடியே, பாபம் மிக்கு இருக்கிற சரீரம் என்று கூறலுமாம். 'நன்று; உமக்கு இப்போது வந்தது என்?' என்ன, அடியேன் காண்பான் அலற்றுவன் - 'அடியேன்' என்று அலற்றுவன், 'காணவேண்டும்' என்று அலற்றுவன். இதனின் மிக்க ஓர் அயர்வு உண்டே-உண்டியே உடையே என உகந்து ஓடும் இம்மண்டலத்தாரோடு சேர்ந்து திரிந்த நாளில் அறிவே நன்றாக இருந்தது அன்றே! 'அது நன்றாயினவாறு என்?' என்னில், அப்போது கடக்க நின்று பகவத் தத்துவத்தைக் குறி அழியாமை வைத்தேன்; இப்போது அன்றோ நான் கிட்டி அழிக்கப் பார்த்தது! இதனைக்காட்டிலும் அறிவு கேடு உண்டோ? (7)

1. *ஸ்ரீ கீதை.* 7 : 29.
2. *பெரிய திருமொழி,* 9. 7 : 7.

52

உண்டாய் உலகுஏழ் முன்னமே
உமிழ்ந்து மாயை யால்புக்கு
உண்டாய் வெண்ணெய் சிறுமனிசர்
உவலை யாக்கை நிலையெய்தி
மண்டான் சோர்ந்தது உண்டேலும்
மனிசர்க்கு ஆகும் பீர்சிறிதும்
அண்டா வண்ணம் மண்கரைய
நெய்ஊண் மருந்தோ மாயோனே?

பொ - ரை: 'ஆச்சரியமான குணங்களையும் செயல்களையுமுடையவனே, முற்காலத்தில் உலகங்கள் ஏழனையும் உண்டாய்; வெள்ளம் நீங்கிய அக்காலத்திலேயே அதனை உமிழ்ந்து, (பிற்காலத்தில்) சிறிய மனிதர்களுடைய தாழ்ந்த உடலை மேற்கொண்டு (ஆயர்பாடியில் ஒவ்வொரு வீட்டிலும்) நுழைந்து ஆசையால் வெண்ணெயினை உண்டாய்; (முன்னர் நீ உண்டு மீண்டு உமிழ்கின்ற காலத்தில்) அம்மண் திரு வயிற்றில் சிறிது தங்கியிருக்குமேயாயினும் (மண்ணை உண்ணுகின்ற குழந்தைகட்கு வருகின்ற) சோகை என்னும் நோயானது சிறிதும் வாராதபடி, அம்மண் கரைவதற்குப் (பிற்காலத்தில் மனித சரீரத்தோடு உண்ட) நெய் மருந்தாகுமோ?' ஆகாது என்றபடி.

வி - கு: 'உண்ணுமை உள்ளது உயிர்நிலை ஊன் உண்ண, அண்ணுத்தல் செய்யாது அளறு,' என்புழி 'ஊன்' என்னுஞ் சொல்லை முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் கொள்வது போன்று, ஈண்டு 'முன்னம்' என்பதனை முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் கொள்க. 'பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி உந்தியின் மேலசைத்த கச்சன்' (அப்பர் தேவா.) என்புழிப்போன்று 'மனிசர்' என்புழித் தகரத்திற்குச் சகரம் போலி. 'ஊண்' என்பது முதனிலை திரிந்த தொழிற்பெயர். 'எய்தி' என்பதனைப் 'புக்கு' என்பதுடன் முடிக்க.

ஈடு: எட்டாம் பாட்டு. [1] இவர் இப்படி அகலப்புக்கவாறே, 'இவர் துணிவு பொல்லாததாய் இருந்தது; இவரைப் பொருந்த விடவேண்டும்,' என்று பார்த்து, 'வாரீர் ஆழ்வீர், திருவாய்ப் பாடியில் நிகழ்ச்சிகளைக் கேட்டு அறியீரோ!' என்ன, கேட்கையில் ஊன்றிய கருத்தாலும் அவன்தான் அருளிச்செய்யக் கேட்க வேண்டும் என்னும் மனவெழுச்சியாலும் 'அடியேன் அறியேன்' என்றார். 'முன்பு ஒரு காலத்தில் பூமியை எடுத்து வயிற்றிலே

---

1. 'நெய்யூண் மருந்தோ' என்கையாலே, இறைவன் 'நெய்யூண் மருந்து' என்றான் என்பது பெறப்படுதலால், அதற்குத் தக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

வைத்தோம் ; பின்பு அதனை வெளிநாடு காண உமிழ்ந்தோம் ; அதில் ஏதேனும் சிறிது வயிற்றில் தங்கி இருக்கக்கூடும் என்று கருதித் திருவாய்ப்பாடியில் வெண்ணெயை விழுங்கினேம் காணும்,' என்ன, 'அதற்கு இதனைப் பரிகாரமாகச் செய்தாயோ! அது ஒரு காலவிசேடத்திலே; இது ஒரு கால விசேடத்திலே' என்ன, 'அடியார்கள் தொட்ட பொருள் உனக்குத் தாரகமாகையாலே செய்தாய் அத்தனை,' என்ன, 'ஆயின், அவ்வெண்ணெயினைப் போன்று உம்முடைய சேர்க்கையும் நமக்குத் தாரகங்காணும்; ஆன பின்னர், நீர் உம்மைக்கொண்டு அகலுவீராகில், திருவாய்ப்பாடியில் வெண்ணெய் விலக்கினர் புக்க உலகம் புகுவீர்,' என்றான். அவன் கருத்தைத் தாம் அறிந்தமை தோற்ற [1] அநுபாஷிக்கிறார் இப்பாசுரத்தில்.

முன்னமே உலகு ஏழ் உண்டாய்-முன்பு ஒரு காலத்திலே உலகங்கள் ஏழனையும் எடுத்து வயிற்றிலே வைத்தாய். உமிழ்ந்து-பின்னர் அது தன்னை வெளி நாடு காண உமிழ்ந்து. மாயையால் புக்கு வெண்ணெய் உண்டாய்-இச்சையால் புக்கு வெண்ணெய் உண்டாய். ஈண்டு 'மாயை' என்றது, [2]'மாயா வயுநம் ஞானம்' என்கிறபடியே, இச்சா பரியாயமான ஞானத்தை. அது செய்யுமிடத்தில் சக்கரவர்த்தி திருமகனாய்ப் புக்கு 'வெண்ணெய் அமுது செய்ய' என்றால் கொடார்கள் அன்றே? ஆதலால், சிறு மனிசர், உவலை யாக்கை நிலை எய்தி-சிறிய மனிதர்களுடைய தாழ்ந்த சரீரத்தினுடைய நிலையைப் பிரகிருதி சம்பந்தமில்லாத திவ்விய திருமேனிக்கு உண்டாக்கிக்கொண்டு வந்து இப்படிச் செய்தாய். [3]'கறையினர் துவர் உடுக்கை கடை ஆவின் கழிகோல்கை, சறையினர்' என்னும் நிலையுள்ள ஆயர்கள் அளவிலே தன்னை அமைத்து வந்து கிட்டி வெண்ணெய் அமுதுசெய்தான் என்றபடி. [4]'தேவகியே நீ முற்பிறவியிற்செய்த நல்வினையானது இப்பொழுது பலத்தைத் தந்திருக்கின்றது ; நான் எக்காரணத்தால் உன்னுடைய உதரத்தின் வழியால் உண்டானேனோ' என்பதனால் கர்ப்பவாசம் சொல்லியிருந்தும், [5]'இந்தக் கிருஷ்ணன் கர்ப்பவாசம் செய்யும் தன்மையை அடையவில்லை ; யோநியிலும் வசிக்க இல்லை,' என்று

1. *அநுபாஷித்தல் - தொடர்ந்து பின் மொழிதல்.*

2. *'மாயா வயுநம் ஞாநம்' என்பது நிகண்டு; மாயை, வயுநம், ஞானம் என்பன ஒரு பொருட்சொற்கள் என்பது இதற்குப் பொருள்.*

3. *திருவாய்.* 4. 8 : 4.

4. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 5. 8 : 14.

5. *பாரதம்.*

கூறப்படுகிறான் ஆதலின், 'யாக்கை நிலை எய்தி' என்கிறார். 'இது கூடுமோ?' எனின், இட்சுவாகு குலத்தவருள் ஒருவன் யாகம் செய்துகொண்டிருக்கும்போது தாகம் உண்டானவாறே மந்திரத்தால் பரிசுத்தம் செய்யப்பட்ட தண்ணீரைக் குடிக்க, கருத்தரித்தது; இது ஆண் பெண் சேர்க்கையால் ஆயது அன்றே! சத்தி அதிசயத்தாலே இப்படிக் கூடக்கண்ட பின்பு, 'வரம்பில் ஆற்றலையுடைய இறைவனுக்குக் கூடாதது இல்லை,' என்று கொள்ளத் தட்டு இல்லை. மண்ணை அமுது செய்தது, அதன் சத்தைக்காக; வெண்ணெய் அமுது செய்தது, உன் சத்தைக்காக.

மண்தான் சோர்ந்தது உண்டேலும் மண் கரைய மனிசர்க்கு ஆகும் நெய் பீர் சிறிதும் அண்டா வண்ணம் ஊண் மருந்தோ-பூமியைத் திருவயிற்றிலே வைத்து உமிழ்ந்த போது தங்கியிருந்தது ஏதேனும் மண் உண்டாகிலும், பிற்பட்ட மனிதர்கட்கு மிகச் சிறிதும் மீதி இல்லாதபடி நெய் அமுது செய்தது அதற்கு மருந்தோ? அதாவது, 'உண்ட மிச்சில் சிறிதும் இல்லாதபடி முழுதும் அமுது செய்யிலோ மருந்தாவது?' என்றபடி. இனி, இதனை, 'மனிசர்க்கு ஆகும் பீர் சிறிதும் அண்டா வண்ணம் நெய் உண் மண் கரைய மருந்தோ' என்று கொண்டு கூட்டி, 'உண்ட மண்ணிலே சிறிது வயிற்றிலே தங்கி இருந்தால் மனிதர்கட்கு வரக்கூடிய சோகை சிறிதும் வாராதபடி நெய்யை உண்ணுதல் மருந்தோ? அன்றே?' என்று பொருள் கூறலுமாம். 'ஆயின், பின்னை எதற்காகச் செய்தோம்?' என்னில், மாயோனே-'அடியார்கள் தீண்டிய பொருளால் அல்லது தாரகம் இல்லாதபடியான அடியார்களிடத்துள்ள பெரு மோஹத்தாலே செய்தாய் இத்தனையன்றோ?' என்பதாம். (8)

53

*மாயோம் தீய அலவலைப்*
*பெருமா வஞ்சப் பேய்வீயத்*
*தூய குழவி யாய்விடப்பால்*
*அமுதா அமுது செய்திட்ட*
*மாயன் வானோர் தனித்தலைவன்*
*மலராள் மைந்தன் எவ்வுயிர்க்கும்*
*தாயோன் தம்மான் என்அம்மான்*
*அம்மா மூர்த்தி யைச்சார்ந்தே.*

**பொ - ரை:** பலவாறு பிதற்றிக்கொண்டு வந்தவளான மிகப் பெரிய வஞ்சனையுடைய கொடிய பூதனை இறக்கும்படி தூய்மையான குழந்தையாகி விஷம் கலந்த பாலினை அமிர்தம்போல ஆகும்படி புசித்த மாயவன்; நித்தியசூரிகட்கு எல்லாம் ஒப்பற்ற தலைவன்; திருமகள் கேள்வன்; எல்லா உயிர்களுக்கும் தாயைப் போன்றவன்; எல்லார்க்கும் தலைவன்; தனக்குத்தானே தலைவன்; எனக்குத் தலைவன்; அழகிய பெருமை பொருந்திய திருமேனியையுடையவன் ஆன இறைவனைச் சார்ந்தேன்; ஆதலால், இனிப் பிரியேன்.

**வி - கு:** இச்செய்யுள் பூட்டுவிற்பொருள்கோளுக்கு உதாரணமாம். மாயோம், உளப்பாட்டுப்பன்மை. மாய்தல் - மறைதல்; அது ஈண்டுப் பிரிவினை உணர்த்திற்று. 'அலவலை' என்னும் உயர்திணை யிரு பாற்கும் பொதுச்சொல், ஈண்டுப் பெண்பாலுக்கு ஆயிற்று; 'பலவாறு மிகுதியாகப் பேசுகின்றவள்' என்பது பொருள். 'கெடச்செய்திடுவான்' (திருக்கோ. 141.) என்புழிப்போன்று, 'அமுதுசெய்திட்ட' என்பதும் ஒருசொல். 'நஞ்சின் தன்மை ஒழிந்து அமிர்தம் செய்யும் காரியத்தினைச் செய்தலின், 'அமிர்தாக்கிய' என்றார்' (திருக்கோ. 27.) என்ற பேரா சிரியருரை 'விடப்பால் அமுதா வமுதுசெய்திட்ட' என்ற இடத்து நினைக்கத்தக்கது. 'தம்மான்' என்பது 'பிரிப்பப் பிரியா ஒரு சொல்' என்பர் சேனாவரையர். சார்ந்து - சார்ந்தேன்; முற்று. இதனை. எச்சமாகக் கொண்டு 'மாயோம்' என்பதனோடு முடிப்பினும் அமையும்.

**ஈடு:** ஒன்பதாம் பாட்டு. 'நீர் தண்ணிதாக நினைத்திருக்கிற உம் முடைய உடம்பு, திருவாய்ப்பாடியில் யசோதை முதலாயினாருடைய வெண்ணெயைப் போன்று தாரகங்காணும்' என்றான்; 'பாவ பந்தமுள்ளவர்களுடைய வெண்ணெய் உனக்குத்தாரகம்; அஃது இல்லாத என்னுடைய ஸ்பரிசம் உனக்கு நஞ்சு' என்றார்; 'நஞ்சோ தான், நஞ்சானமை குறை இல்லையே?' என்றான் இறைவன்; இவரும் 'இது நஞ்சே; இதற்கு ஒரு குறை இன்று,' என்றார்; 'ஆயின், பூதனையினுடைய நஞ்சு தாரகமான நமக்கு அகாதது இல்லைகாணும்,' என்றான்; என்ன, பொருந்துகிறார். இனி, 'பூதனையை முடித்தது போன்று 'நான் அல்லேன்' என்று அகலப்புக்க என் நிர்ப்பந்தத்தைப் போக்கினான்,' என்று இயைபு கூறுவாரும் உளர்.

மாயோம் - இனி அகன்று மாயக்கடவோம் அல்லோம்; 'பிரிகை யாவது - விநாசம்' என்று இருக்கையாலே 'மாயோம்' என்கிறார்,

---

1. இத்திருப்பாசுரத்தின் அவதாரிகை இரண்டனுள், முதலது, 'விடப்பாலமுதா வமுது செய்திட்ட' என்றதில் நோக்கு. இரண்டாவது, 'வஞ்சப் பேய் வீய' என்றதிலே நோக்கு.

இது, 'நானும் என்னோடு சம்பந்தமுடையாரும் முடியக்கடவோ மல்லோம்,' எனப் படர்க்கையை உளப்படுத்திய உளப்பாட்டுப் பன்மை. இனி, இறைவனை உளப்படுத்தியதாகக் கொண்டு, 'இரண்டு தலையையும் அழித்துக்கொள்ளக்கடவோம் அல்லோம்,' என்று பொருள் கூறலுமாம். தீய அலவலைப் பெருமா வஞ்சப் பேய் வீய - [1] 'பூதனையை முடித்து உலகத்துக்கு ஒரு தலைவனைத் தந்த உலக குருவான கிருஷ்ணனுக்கு விஷத்தோடு கூடிய அம் முலைப்பால் சுவையுடையதாயிற்று,' என்கிறபடியே, உலகத்துக்கு வேர்ப்பற்றானவனை 'முடிக்கப் பார்த்த நெஞ்சில் தீமையை யுடையளாய், யசோதைப்பிராட்டியைப் போன்று அன்பு தோற்றப் பலவாறு பேசிக்கொண்டு வருகின்றவளாய், தனக்குத்தானே முற்றறிவனானவனும் 'தாய்' என்று பிரமிக்கும்படி தோற்றின பெரிய வஞ்சனையுடையவளான பூதனை முடியும்படியாக. தூய குழவியாய் - [2] ஐஸ்வரியமான மேன்மையும் நடையாடாநிற்கவும், அது தோற்றாதபடி கலப்பு அற்ற பிள்ளைத்தனத்தையுடையனாய். 'இவனுக்குப் பிள்ளைத்தனத்தில் குறை இல்லையாகில், அதன் காரியம் காணாது ஒழிவான் என் ?' என்னில், விடப்பால் அமுதா அமுது செய்திட்ட - விஷம் அமிருதாம் முகூர்த்தத்திலேயாயிற்றுப் பிறந்தது. 'ஆயின், அவள் இறக்கும்படி எங்ஙனம் ?' எனின், [3] தர்மியை வேறு ஒன்று ஆக்க ஒண்ணாமையாலே விரோதித்த அசுரக் கூட்டங்கள் இறந்தார்கள் இத்தனை. மாயன் - விஷம் அமிருதாம்படி புசித்துத் தன்னைத் தந்து நன்மை உண்டாக்கின ஆச்சரியத்தையுடையவன்.

'பூதனையுடைய விஷம் அமிருதமாம்படி அமுது செய்தவன் தான் யார் ?' என்னில், வானோர் தனித்தலைவன் - அயர்வு அறும் அமரர்களுக்குத் தனித்தலைவன் ஆனவன். மலராள் மைந்தன் - [4] 'தேவிமார் ஆவார் திருமகள் பூமி ஏவ மற்று அமரர் ஆட்செய்வார்,' என்கிறபடியே, அவர்கள் விரும்பித் தொண்டுகளைச் செய்யப் பெரிய பிராட்டியாரும் தானுமாக இருக்குமவன். மைந்தன் - அவளுக்கு மிடுக்கானவன். இனி, இதற்கு, 'அவளுடைய சேர்த்தியினாலே நித்தியமான புதிய யௌவனத்தையுடையவன்' என்று பொருள்

1. ஹரி வம்ஸம். 53.

2. ஐஸ்வரியமான - இறைமைத்தன்மைக்குரிய.

3. தர்மி - தர்மத்தையுடையது; வஸ்து சொரூபத்தாலே இறந்தான் என்றபடி. 'அமரர்கள் அமுதே அசுரர்கள் நஞ்சே' என்பது தமிழ்மறை.

4. திருவாய். 8, 1 : 1.

கூறலுமாம். எவ்வுயிர்க்குந்தாயோன் - எல்லா உயிர்கட்கும் தாய் போன்று பரிவையுடையவன் ஆனவன், தம்மான் - சர்வேஶ்வரன். என் அம்மான் - நான் தன்னை அகன்று முடிந்து போகாதபடி நோக்கினவன். இனி, 'நித்தியசூரிகளும் மற்றும் உள்ள எல்லா ஆத்துமாக்களும் ஒரு தட்டும், நான் ஒரு தட்டுமாம்படி என் பக்கலிலே விசேடமான திருவருளைச் செய்தவன்' என்பார், '**என் அம்மான்**' என்கிறார் எனலுமாம் அம்மாமூர்த்தியைச் சார்ந்து-விலக்ஷணமான திருமேனியையுடைய அம்மகா புருஷனைக் கிட்டி. 'கிட்டி மாயோம்' எனக்கூட்டுக. (9)

54

*சார்ந்த இருவல் வினைகளும்*
*சரித்து மாயப் பற்றுஅறுத்துத்*
*தீர்ந்து தன்பால் மனம்வைக்கத்*
*திருத்தி வீடு திருத்துவான்*
*ஆர்ந்த ஞானச் சுடராகி*
*அகலம் கீழ்மேல் அளவுஇறந்து*
*நேர்ந்த உருவாய் அருவாகும்*
*இவற்றின் உயிராம் நெடுமாலே.*

**பொ - ரை :** நிறைந்த அறிவின் ஒளியாகி, பத்துத்திசைகளின் அளவையுங்கடந்து, நுட்பமான மூலப்பகுதியும் உயிர்களுமாகிய இவற்றிற்கு அந்தராத்துமாவாய் இருக்கிற நெடுமால், பொருந்தி இருக்கின்ற இரண்டு கொடிய வினைகளையும் என்னை விட்டு நீக்கி, பொருள்களிடத்துள்ள ருசி வாசனைகளையும் நீக்கி, யான் தனக்கே உரியவனாகும் படி தன்னிடத்திலேயே மனத்தை வைக்குமாறு நன்னெறியிற்செலுத்தி, பின் அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினையும் அலங்காரம் செய்யத் தொடங்கினான்.

**வி - கு :** 'இருள்சேர் இருவினையும் சேரா' என்றார் திருவள்ளுவர். 'நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலின், இருவினையும் சேரா என்றார்,' என்பர் பரிமேலழகர். மாயம் - ருசி ரூபமான அறிவு. பற்று - வாசனை. தீர்தல்-விடுதல். 'தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். 'நேர்ந்த' என்பது நேர்மை என்னும் பண்படியாகப் பிறந்த பெயரெச்சம், நேர்மை - நுண்மை. திருத்துவான் - முற்று.

ஈடு: பத்தாம் பாட்டு. [1] இவரை இப்படி இசைவித்து வைத்து, ஒரு புதுமை செய்ய வேண்டாதபடியான பரமபதத்தை அலங்கரிக்கத் தொடங்கினுன்.

சார்ந்த இரு வல்வினைகளும் சரித்து - [2] 'எள்ளில் எண்ணெய் போன்றும், மரங்களில் நெருப்புப் போன்றும்' என்கிறபடியே பிரிக்க ஒண்ணுதபடி பொருந்திக் கிடக்கின்ற புண்ணிய பாப ரூப கர்மங்களையும் சரித்து. சர்வ சத்தியான தான் போக்கும் அன்றும் போக்க ஒண்ணுதபடி நூறு கிளைகளாகப் பணைத்த வினைகளை, விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாறு போன்று போக்கினுன் என்பார், 'சரித்து' என்கிருர், மாயப் பற்று அறுத்து - ருசி வாசனைகளையும் கழித்து. [3] தீர்ந்து - தான் செய்ய வேண்டுவனவற்றை எல்லாம் செய்து முடித்தவனுய். இனி, தீர்ந்து என்பதனைத் 'தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி' என்று கூட்டி, 'அல்லேன்' என்று அகலாதே தனக்கே தீர்ந்து, தன் பக்கலிலே நெஞ்சை வைக்கும்படி திருத்தி என்று பொருள் கூறலும் ஆம். வீடு திருத்துவான் - கலங்காப் பெருநகரத்துக்கும் ஒரு புதுமை பிறப்பியாநின்றுன்.

ஆர்ந்த ஞானச் சுடர் ஆகி - பரிபூர்ண ஞான ஒளியனுய். அகலம் கீழ் மேல் அளவு இறந்து - பத்துத்திக்குகளிலும் நிறைந்து. நேர்ந்த உருவாய் அருவாகும் இவற்றின் உயிராம்-மிக்க சூக்ஷ்மமான உயிர்ப்பொருள் உயிரல்பொருள்கட்கும் ஆத்துமாவாய் இருக்கிற. இனி, இதற்குப் பல பக்கங்களிலும் வெளிப்படையாகக் காணப்படுகிற அசித்து சித்து இவற்றிற்கு உயிராய் இருப்பவன் என்று பொருள் கூறலும் ஒன்று. நெடுமால் - இப்படி இருக்கிற நெடுமால் வீடு திருத்துவான் ஆனுன். இறைவனுடைய வியாப்தியும் இவரைப் பெற்ற பின்பு அழகு பெற்றது ஆதலின், 'நெடுமால்' என்கிருர். இனி, ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப் போன்று இவரைத் திருத்துகைக்காகப் பரந்திருப்பவனுய் இருந்தான் ஆதலின், 'நெடுமால்' என்கிருர் எனலுமாம்.

---

1. *'தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி வீடு திருத்துவான்' என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.*

2. *ஸ்ரீ ரங்க கத்யம்.*

3. *இறைவனும் ஆழ்வாரும் என்னும் இருவருடைய தொழிலாகவுங் கொண்டு 'தீர்த்து' என்பதற்கு இரு வகையில் பொருள் அருளிச்செய்கிருர். முதற்பொருளுக்கு, 'தன்பால் மனம் வைக்கத் திருத்தித் தீர்ந்து வீடு திருத்துவானுனன்' எனக் கூட்டுக. இரண்டாவது பொருளுக்கு 'தீர்ந்து வைக்கத் திருத்தி வீடு திருத்துவானுனன்' எனக் கூட்டுக. முதற்பொருளில், இறைவன் தொழில்; இரண்டாவது பொருளில் ஆழ்வார் தொழில்.*

[1] ‘முனியே நான்முகனே’ என்னும் அளவும் அவன் செய்த உபகாரத்தை அருளிச்செய்கிறார். [2] அவன் தெளிந்து வந்து கொடு போகப் பற்றுமல் கூப்பிடுகிறுர் அன்றே நடுவெல்லாம். (10)

55

மாலே! மாயப் பெருமானே!
மாமா யவனே! என்றுஎன்று
மாலே ஏறி மால்அருளால்
மன்னு குருகூர்ச் சடகோபன்
பாலேய் தமிழர் இசைகாரர்
பத்தர் பரவும் ஆயிரத்தின்
பாலே பட்ட இவைபத்தும்
வல்லார்க்கு இல்லை பரிவதே.

**பொ - ரை:** ‘மாலே, மாயப்பெருமானே, மா மாயவனே’ என்று பலகால் கூறி, தாம் தாழ்ந்தவர் என்று அகலும்படி பிச்சு ஏறி, பின் இறைவனுடைய திருவருளால் பொருந்தி நிலைபெற்ற திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபர் அருளிச்செய்த, பால் போன்று இனிய இயற்றமிழ் வாணரும் இசைத்தமிழ்வாணரும் பத்தர்களும் துதிக்கின்ற ஆயிரம் திருப்பாசுரங்களுள் சிறந்து பொலிகிற இப்பத்துத்திருப்பா சுரங்களையும் கற்று அறிய வல்லவர்கட்கு, ‘நான் தாழ்ந்தவன்’ என்று நினைந்து அகலும் துன்பம் இல்லை என்கிறுர்.

**வி - கு:** ‘ஏறி, மால் அருளால் மன்னு சடகோபன்’ என முடிக்க. ‘பாலேய்’ ஏய் - உவம உருபு. இசைகாரர் எனப் பின் வருதலால் ‘தமிழர்’ என்றது இயற்றமிழ் அறிஞரை உணர்த்திற்று.

---

1. ‘ஆயின், ஐந்தாந் திருவாய்மொழியின் முடிவிலேயே இவரை அங்கீகரிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, இறைவன் வீடு திருத்துவானுயின், இப்பிரபந்தத்தையும் முற்றுப்பெறச்செய்து உலகத்தைத்திருத்திய வழியாலே உலகத்திற்குப் பெரியதோர் உபகாரத்தைச் செய்தனன் ஆயினமை யாங்ஙனம்?’ எனின், ‘மனந்திருத்தி வீடு திருத்தப்போய் நாடு திருந்திய வாறே வந்து’ என்கிறபடியே, இறைவன் இவர்பக்கல் கொண்ட அவாவின் மிகுதியால் வீடு திருத்துகையில் விளம்பிக்க, அக்கால நீட்டிப்பிற்குப் பொறுராய் ‘முனியே நான்முகனே முக்கண்ணப்பா’ என்ற திருவாய் மொழி முடிய இறைவன் தமக்குச் செய்த உபகாரத்தைச் சொல்லிக் கூப் பிட்ட கூப்பீடு உலகத்தார்க்கு எல்லாம் பெரியதோர் உபகாரமாய் முடிந்தது.

2. ‘ஆயின், இவர் முற்றறிவினர் ஆதலின், இறைவன், இவர்பக்கல் கொண்ட அவாவின் மிகுதியால் வீடு திருத்தப்போயினமையை அறிவார் அன்றே? அங்ஙனம் இருக்க, இவர் கூப்பிட்டது எற்றிற்கு?’ எனின், இறைவன் கொண்ட வேணவா நீங்கித் தெளிந்து வந்து கொண்டு போகப் பற்றுமல் கூப்பிடுகின்றுர்.

ஈடு: முடிவில், 'இத்திருவாய்மொழியைக் கற்று உணர வல்லார்கட்கு, இறைவன் வரக்கொள்ளத் தம் தாழ்மையை நினைத்து அகன்று இவர் பட்ட கிலேசம் படவேண்டா,' என்கிறார்.

மாலே - [1] சொரூபத்தால் வந்த உயர்வு. மாயப் பெருமானே - குணத்தால் வந்த உயர்வு. மா மாயவனே - செயல்களால் வந்த மேன்மை. என்று என்று மாலே ஏறி - இவ்விதமான வைலக்ஷண்யத்தை நினைத்து, 'நான் அயோக்கியன்' என்று அகலும்படி பிச்சு ஏறி, மால் அருளால் மன்னு குருகூர்ச் சடகோபன் - தன்னை முடித்துக் கொள்வதாகக் கழுத்திலே கயிற்றை இட்டுக்கொண்டவனை அறுத்து விழ விடுவாரைப் போன்று, அகன்று முடியப்புக்க இவரைப் பொருந்த விட்டுக்கொள்ள, அவன் அருளாலே பொருந்தின ஆழ்வார். [2] பிடி தோறும் நெய் ஒழியச் செல்லாத சுகுமாரரைப் போன்று, நின்ற நின்ற நிலைகள்தோறும் இறைவன் திருவருள் ஒழிய நடக்கமாட்டாதவர் ஆதலின், **'மால் அருளால் மன்னு சடகோபன்'** என்கிறார். பால் ஏய் தமிழர் - பால் போலே இனிய தமிழையுடையவர்கள். இசைகாரர் - இயலுக்கு இசைய இசையிட வல்லவர்கள். அவர்களாவார், **ஸ்ரீமதுரகவிகளையும் நாதமுனிகளையும்** போல்வார். பத்தர் - [3] 'கால் ஆழும் நெஞ்சு **அழியும் கண்சுழலும்**' என்று இருக்குமவர்கள். [4] **ஆழ்வான்** ஒரு முறை, '**ஸ்ரீ பராங்குச நம்பியைப்** பாலேய் தமிழர் என்கிறது; இசைகாரர் என்றது, **ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையரை**; பத்தர் என்றது, **பிள்ளை யுறங்கா வில்லி தாசரை**' என்று பணித்தார். **ஸ்ரீ ஆளவந்தார்** 'பாலேய் தமிழர் என்கிறது, **முதலாழ்வார்களை**; இசைகாரர் என்கிறது, **திருப்பாணாழ்வாரை**; பத்தர் என்கிறது, **பெரியாழ்வாரை**' என்று அருளிச்செய்வர். ஆக, இயல் அறிவார் இசை

---

1. *இத்திருப்பதிகத்தின் முதல் பாசுரத்தில் 'வானேரிறையை' என்றும், 'வெண்ணெய் தொடு உண்ட' என்றும் அருளிச்செய்ததை ஈண்டு 'மாலே' என்ற பெயராலும், 'மாயப் பெருமானே' என்ற பெயராலும் அநுவதிக்கிறார் என்றபடி. ஈண்டு 'மாமாயவனே' என்றது, அப்பாசுரத்தில் 'இள ஏறு ஏழுந் தழுவிய' என்றதன் அநுவாதம். குணங்களும் செயல்களும் ஆச்சரிய ரூபங்கள் ஆகையாலே 'மாய' சப்தத்தால் அவற்றை அருளிச்செய்கிறார்.*

2. *பிடி - ஒரு பிடி சோறு.*

3. *பெரிய திருவந்தாதி.* 34.

4. *ஆழ்வான் - கூரத்தாழ்வார்.*

யறிவார், பகவானுடைய குணங்களில் ஈடுபட்டு இருப்பார் ஆகிற இவர்கள், பரவும் - இவர் அகலுகை தவிர்ந்து பாடின பின்பு உண்டான உலகத்தாரின் [1] பரிக்கிரகத்தைச் சொல்லுகிறார். ஆயிரத்தின்பாலே பட்ட இவை பத்தும் வல்லார்க்கு - 'கடலிலே முத்துப்பட்டது' என்னுமாறுபோன்று, சிறப்பையுடைய ஆயிரத்தின் நடுவே பொருந்தி இருக்கிற இத்திருவாய்மொழியை வல்லார்க்கு. பரிவது இல்லை - 'அஞ்சிறைய மடநாராய்' என்னும் திருவாய்மொழியில் தூது விட்டு, இறைவன் வந்து காட்சி அளித்தவாறே 'தாழ்ந்தவன்' என்று அகன்று படும் துக்கம் இல்லை.

முதற்பாட்டில், 'அயோக்கியன்' என்று அகன்றார்; இரண்டாம் பாட்டில், 'அகலுவதற்கும் நான் அதிகாரி அல்லேன்' என்றார்; மூன்றாம் பாட்டில், சீலகுணத்தைக் காட்டித் துவக்கத் துவக்கு உண்டார்; நான்காம் பாட்டில், 'அகல ஒட்டுவார்களோ உடையவர்கள்?' என்றார்; ஐந்தாம் பாட்டில், 'உடைய உன் திருவடிகளைக் கிட்டும்படி பார்த்தருளல் வேண்டும்,' என்றார்; ஆறாம் பாட்டில், அவன் அரைக்கணம் தாழ்க்க, 'முடியப்புகுகின்றேன்' என்றார்; ஏழாம் பாட்டில், அவ்வளவில் இறைவன் வரக்கொள்ள, 'அயோக்கியன்' என்று அகன்றார்; எட்டாம் பாட்டில், 'திருவாய்ப்பாடியில் வெண்ணெயைப்போன்று உம்முடைய சம்பந்தம் தாரகம்,' என்றான் இறைவன்; ஒன்பதாம் பாட்டில், 'அப்படி அன்று; இது நஞ்சு,' என்ன, 'நஞ்சுதானே நமக்குத் தாரகம்?' என்றான்; பத்தாம் பாட்டில், தம்மை இசைவித்துப் பரமபதத்தை அலங்கரிக்கத் தொடங்கினான் என்றார்; முடிவில், கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டினார்.

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*வளமிக்க மால்பெருமை மன்உயிரின் தண்மை*
*உளமுற்றுஅங்கு ஊடுருவ ஓர்ந்து—தளர்வுற்று*
*நீங்கநினை மாறனைமால் நீடுஇலகு சீலத்தால்*
*பாங்குடனே சேர்த்தான் பரிந்து.* (5)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. பரிக்கிரகம் - அங்கீகரித்தல்; வைப்பாகக் கொள்ளுதல்.

# ஆறாந்திருவாய்மொழி - ‘பரிவதில் ஈசனை’

## முன்னுரை

ஈடு: முதல் திருவாய்மொழியிலே, இறைவன் எல்லாரினும் அறப்பெரியவனாய் இருக்கிறபடியை அனுபவித்தார்; இரண்டாந் திருவாய்மொழியிலே, ‘இப்படிப் பரனானவனை வழிபடுமின்,’ என்றார்; மூன்றாந்திருவாய்மொழியிலே, அவ்வழிபாட்டிற்கு உறுப்புகளாக அவனுடைய எளிமையையும், நான்காந் திருவாய்மொழியிலே, அவனுடைய பொறையுடைமைக்குணத்தையும், ஐந்தாந்திருவாய் மொழியிலே, அவனுடைய சீலகுணத்தையும் அருளிச்செய்தார்; ‘இவை எல்லாம் உண்டாயினும், [1] பரிமாற்றத்தில் அருமை இருக்கு மாகில் பசை இல்லை அன்றே?’ என்ன, ‘அது வேண்டா; எளிதில் ஆராதிக்கத்தக்கவன்’ என்கிறார் இத்திருவாய்மொழியில்.

‘யாங்ஙனம்?’ எனின், [2] மிகச்சிறியோர்களான இம்மக்களாலே மிகச்சிறிய பெருள்களைக்கொண்டு சர்வேஶ்வரனை நம்மை அடைந்து தலைக்கட்டப் போகாமையாலே, மேல் திருவாய்மொழியிலே, ‘தாழ்ந் தவன்’ என்று அகன்ற இவரைப் பொருந்தவிட்டுக்கொண்டோம்; ‘பெருந்தவிட்டுக்கொண்டதுதான் ஒரு பரிமாற்றத்துக்கு அன்றோ? அதற்கு ஒரு பிரயோஜனம் கண்டோம் இல்லையே!’ என்று இருப்பான் ஒருவன் இறைவன். இனி, ‘சம்சாரியான இவனாலே நேர்கொடு நேர் அடைந்து தலைக்கட்ட ஒண்ணாதபடி, இறைவன் ஒன்றிலும் விருப்பம் இல்லாதவனாய் இருக்கையாலும், இவன் இட்டது கொண்டு திருப்தனாக வேண்டாதபடி பரிபூர்ணனாய் இருக்கையாலும்

---

1. *பரிமாற்றம் என்பது, இங்குத் திரு ஆராதனத்தைக் குறித்தது.*

2. *‘பரிமாற்றத்தில் அருமை இல்லை’ என்பதனை இரண்டு வகை யால் விளக்கி அருளிச்செய்கிறார். ஒன்று, ‘மிகச்சிறியோர்களான இம் மக்களாலே’ என்றது முதல் ‘இருப்பான் ஒருவன் இறைவன்’ என்பது முடிய, ஆன்மாக்களின் நிலையை நினைக்குமிடத்துப் பரிமாற்றத்திலுள்ள அருமையைக் கூறி, அதனைக் கண்டு அஞ்ச வேண்டா என்பதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார். ‘அகன்ற இவரை’ என்றது, ஆழ்வாரை. ஆழ்வாரைக் கூறியது, மற்றை ஆன்மாக்களுக்கு எல்லாம் உபலக்ஷணம். ‘ஒரு பரிமாற்றத்துக்கு அன்றோ?’ என்றது, ‘அயோக்கியன் என்று அகன்ற இவரைப் பொருந்த விட்டுக்கொண்ட சௌசீல்ய குணத்தை நினைத்து எல்லாரும் அடைந்து தொண்டு செய்வதற்கன்றோ?’ என்றபடி. மற்றொன்று, ‘சம்சாரியான இவனாலே’ என்றது முதல் ‘இறைவன் தன் பேறாக நினைத்திருப்பான்’ என்பது முடிய, இறைவனுடைய நிலைகளை நினைக்குமிடத்துப் பரிமாற்றத்தில் இருக்கும் அருமையைக் கூறி, ‘அந் நிலைகளைக் கண்டு அஞ்ச வேண்டா; அந்நிலைகளே பற்றுதற்கு உறுப்புகளாக இருக்கும்’ என்று அருளிச்செய்கிறார்.*

இவ்விரண்டற்கும் காரணமாகத் [1] திருமகள் கேள்வனுய் இருக்கையாலும் இவன் அவ்விறைவனை அடைந்து ஆராதனை புரிதல் முடியாதே?' எனின், அங்ஙனம் அன்று; இவன் இடுவதற்கு மேற்படத் தனக்கு வேறு ஒன்று தேட வேண்டாதபடி எல்லாம் கைப்புகுந்திருப்பான் ஒருவன் ஆகையாலும், இவன் இட்டது கொண்டு திருப்தனுக வேண்டாதபடி பரிபூர்ணனுயிருக்கையாலே இவன் பக்கல் பெற்றது கொண்டு முகங்காட்டுகைக்கு அதுவே காரணமாய் இருக்கையாலும், திருமகள் கேள்வனுகையாலே சுசீலனுய் இருக்கையாலும், இப்படிகள் அனைத்தும் அடைவதற்கு உறுப்புகளேயாகும் என்கிருர். ஆக, இவன், தன் சொரூப லாபத்திற்கு உறுப்பாகத் தொண்டினைச் செய்வான்; இதனை இறைவன் தன் பேருக நினைத்திருப்பான் என்றபடி. ஆதலால், மற்றைத் தெய்வங்களை அடைதல் போன்று, பகவானை அடைதல் [2] அருமைப்பட்டு இராது என்கிருர் என்றபடி. மேலும், பகவானை அடைந்த அளவில் [3] விரோதிகள் அடங்கலும் நசிக்கும்; பகவானை அடைதல் துக்க ரூபமாய் இராது, இன்பமயமாய் இருக்கும்; வருந்தி ஒன்றும் தேட வேண்டாதபடி பெற்றது போதியதாக இருக்கும்; பகவானைப் பற்றுதல் ஆகையாலே வணங்கும் முறைகளில் சிறிது பிறழினும் கேடு வருவதற்கு இடன் இல்லை; திரவிய நியதி இல்லை, கால நியதி இல்லை, அதிகாரி நியதி இல்லை; இப்படி இருக்கையாலே இறைவனை அடைதல் எளிது; ஆதலால், ' அடைமின் ' என்கிருர்.

[4] ' உன்னுடைய திருவடிகளைக் குறித்து ஒரு காலத்தில் ஒருவன் எவ்விதத்திலாயினும் ஒரு முறை அஞ்சலி செய்யமுயற்சிசெய்வானே

---

1. ' திருமகள் கேள்வனுகையாலே சுசீலனுகையாலும் ' என்றது, ' அவளுடைய சம்பந்தம் அவளுடைய மக்களிடத்தில் சௌசீல்யத்துக்கு ஏது,' என்றபடி.

2. ' அருமைப்பட்டிராது ' என்றது, ' புரிவதுவும் புகை பூவே ' என்றதனை நோக்கி.

3. இத்திருவாய்மொழியில் வருகின்ற ' வல்வினை மாள்வித்து ' என்றதனை நோக்கி, ' விரோதிகளடங்கலும் நசிக்கும் ' என்கிருர்; ' அமுதிலும் ஆற்ற இனியன் ' என்றதனை நோக்கி, ' இன்பமயமாக விருக்கும் ' என்கிருர்; ' புரிவதுவும் புகை பூவே ' என்றதனை நோக்கிப் ' பெற்றது போதியதாய் இருக்கும் ' என்கிருர்; முதலிரண்டு பாசுரங்களை நோக்கித் ' திரவிய நியதி இல்லை, அதிகாரி நியதி இல்லை ,' என்கிருர்.

4. 'உன்னுடைய' என்றும், 'பச்சிலை மலர்' என்றும், ' ஸ்ரீகிருஷ்ண ஞனவன் ' என்றும், ' இறைவனுகிய தன்னை ' என்றும் தொடங்கும் பொருள்களையுடைய சுலோகங்கள் ' இறைவனை அடைதல் எளிது ' என்பதற்குக் காட்டப்படும் வேறு பிரமாணங்கள்.

யாயின், செய்யப்படும் அவ்வஞ்சலியினுல், அப்பொழுதே பாவங்கள் அனைத்தும் அடியோடே ஓடிவிடுகின்றன ; மேலும், அவ்வஞ்சலி யானது, புண்ணியங்களைக் கொடுத்துப் போஷித்துத் தானும் அழியாமல் இருக்கின்றது,' என்பது **தோத்திர ரத்தினம்.** இங்கு, **'உன்னுடைய திருவடிகள்'** என்றதனுல், மற்றைத் தேவர்களைக் காட்டிலும் இறைவனுக்கு உண்டான வேற்றுமையும், இறை வனிடத்தில் அடியார்கள் இழியுந்துறை திருவடிகள் என்னுமிடமும் அருளிச்செய்தாராவார். மேலும், **'ஒரு காலத்தில்'** என்றதனுல், இன்ன காலத்தில் இன்ன காரியங்களைச் செய்யவேண்டும் என்று விதிக்கிற விதியினின்று வேறுபடுத்தியும், **'ஒருவன்'** என்றதனுல், இந்தத் தகுதிகளையுடையவனே இக்காரியத்தை மேற்கோடல் வேண்டும் என்று விதிக்கிற விதியினின்று வேறுபடுத்தியும், **'எவ் விதத்தாலாயினும்'** என்றதனுல், இன்ன முறையில் இக்காரி யத்தைச் செய்தல் வேண்டும் என்று விதிக்கிற விதியினின்று வேறு படுத்தியும், **'ஒரு முறை'** என்றதனுல், பல வருடங்கள் செய்ய வேண்டும் என்று விதிக்கிற தீர்க்க சத்திரம் முதலான யாகங் களினின்று வேறுபடுத்தியும், **'அஞ்சலி'** என்றதனுல், மிக்க பொருட் செலவினுலும் சரீரத்தின் பிரயாசை முதலியவற்ருலும் செய்யப் படுகின்ற அச்வமேதயாகம் முதலியவற்றினின்று வேறுபடுத்தியும், **'பாவங்கள்'** என்ற பன்மையால், ஒரு தர்மம் ஒரு பாவத்தையே போக்கும் என்று கூறப்படுகிற தர்மங்களினின்று வேறுபடுத்தியும், **'அடியோடே'** என்றதனுல், வாசனை கிடக்கப்போக்கும் கர்மங்களி னின்று வேறுபடுத்தியும், **'புண்ணியங்களை'** என்ற பன்மையால் ஒரு தர்மம் ஒரு பலனையே கொடுக்கும் என்று கூறப்படுகிற தர்மங் களினின்று வேறுபடுத்தியும், **'அழியாமலிருக்கின்றது'** என்ற தனுல், பலன்களைக் கொடுத்துத் தாம் அழிந்து போகிற தர்மங்களி னின்று வேறுபடுத்தியும் அருளிச்செய்திருத்தல் நோக்கல் தகும். மற்றும், **'ஓடிவிடுகின்றன'** என்றதனுல், [1] **சும்** எனுதே கைவிட்டு ஓடித் தூறுகள் பாய்ந்தனவே' என்கிறபடியே, பாவங்கள், இவன் தான் தொடர்ந்து பிடிப்பான் என்று நினைத்து இவனை அறியாமலே போய் விடும் என்பதனையும், **'கொடுத்துப் போஷிக்கிறது'** என்ற தனுல், தீவினைகளைப் போக்குதலேயன்றி, அது போன இடம் எங்கும் நன்மையினையே நிறையச்செய்யும் என்பதனையும் தெரிவித்தவராவர்.

---

1. *பெரியாழ்வார் திருமொழி.* 5. 4 : 3.

[1] 'பச்சிலை மலர் பழம் நீர் ஆகிய இவற்றை எவன் ஒருவன் அன்போடு கொடுக்கின்றானோ, தூய மனத்தினனான அவனால் பத்தியோடு கொடுக்கப்பட்ட அவற்றை நான் உண்கிறேன்,' என்பது ஸ்ரீ கீதை. இதனால், பொருள்களின் உயர்வு தாழ்வு பார்க்கின்றான் இல்லை; இடுகிறவன் நெஞ்சில் ஈரமே பார்க்கிறான்; இப்படித் தரப்பட்டவற்றை மனோரத பதத்துக்கும் அவ்வருகானவை கைப்புகுந் தாற்போன்று நினைக்கிறான்; அல்லது, அவன் அன்பினால் கலங்கித் தருமாறு போன்று, இறைவனும் கலங்கி அடைவு கெட விநியோகம் கொள்ளுகிறான் என்பன விளங்குதல் காண்க.

[2] 'ஸ்ரீகிருஷ்ணனானவன், பூர்ணகும்பத்தைக்காட்டிலும் வேறு ஒன்றையும் விரும்பான்; அவனுடைய திருவடிகளைக் கழுவுதலே சாலும்; அதனைத் தவிர வேறு ஒன்றனையும் விரும்பான்,' என்பது மகாபாரதத்தில் சஞ்சயன் கூற்று. இதனால், ஒருவன் இறைவனை ஆராதனை புரிதல் வேண்டும் என்று முயன்ற அளவிலேயே அவனுக்கு வயிறு நிறையும் என்பது பெறுதும். [3] 'இறைவனாகிய தன்னை அன்றி வேறு ஒரு பலனையும் விரும்பாத பெரியோர்களால் தூய்மையான மனத்துடன் செய்யப்படும் காரியங்கள் எல்லாவற்றையும், தேவனாகிய பகவான் தானே தலையால் ஏற்றுக்கொள்ளுகிறான்,' என்பது மோக்ஷ தர்மம். இதனால், தூய்மையான மனம் ஒன்றுமே வேண்டுவது என்பதும், அவன் செய்யும் காரியங்கள் அனைத்தும் [4] அபிமத விஷயத்தின் பரிமாற்றம் போலே உத்தேஶ்யமாய்த் தோற்றும் என்பதும், அவற்றில் ஒன்றையும் விடான் என்பதும், எல்லாருடைய தொழில்களையும் காலாலே கொள்ளப் பிறந்தவன், இவன் காலாலே போகட்டவற்றையும் அவன் தலையாலே சுமப்பான் என்பதும், செல்வக் கிடப்பு உண்டாயினும் [5] மஹிஷீ ஸ்வேதத்துக்கு ஆள் இட ஒண்ணாதது போன்று, அவ்வேலைகளைத் தானே செய்வான் என்பதும் போதருதல் காண்க.

இவற்றால், இறைவனை அடைதல் எளிது என்பது போதரும். ஆக, இப்படிகளாலே, இறைவன் எளிதில் ஆராதிக்கத் தக்கவன் என்பதனை அருளிச்செய்கிறார் இத்திருவாய்மொழியில்.

---

1. *ஸ்ரீ கீதை.*
2. *பாரதம்.*
3. *பாரதம், மோக்ஷ தர்மம்.*
4. *அபிமத விஷயம் - அன்பிற்குரிய பொருள்; மனைவி.*
5. *மஹிஷீ ஸ்வேதம் - மனைவியின் வெயர்வை.*

56

பரிவதுஇல் ஈசனைப் பாடி
விரிவது மேவல் உறுவீர்!
பிரிவகை இன்றிநன் னீர்தூய்ப்
புரிவது வும்புகை பூவே.

**பொ-ரை:** துக்கம் என்பது சிறிதும் இல்லாத இறைவனை வாயினாற் பாடி, ஆத்தும சொரூபத்தின் மலர்த்தியைப் பெறுதலில் உறுதியை உடையவர்களே, பிரிதற்கு வகை இல்லாமல், நீங்கள் செய்ய வேண்டுவதும் நல்ல நீரைத் தூவிப் புகையைப் புகைத்துப் பூவை அவன் திருவடிகளிலே இடுதலேயாம்.

**வி-கு:** விரிவது-தொழிற்பெயர். நன்னீர் என்பதிலுள்ள 'நல்' என்ற அடை, வாசனைப்பொருள்கள் கலப்பு அற்ற நீர் என்பதனைக் குறிக்க வந்தது.

இப்பதிகம் முச்சீரடி நான்காய் வருதலின், **வஞ்சி விருத்தம்** எனப்படும்.

**ஈடு:** முதற்பாட்டு. [1] 'எம்பெருமான் பரிபூர்ணன் ஆகையாலே எளிதில் ஆராதிக்கத் தக்கவன்,' என்கிறார்.

பரிவது இல் - துக்கம் இல்லாத. 'நாம் இடுகிறவை அவன் ஏற்றுக்கொள்ளுவானோ, கொள்ளானோ!' என்று இடுகிற இவன் நெஞ்சிலே துக்கம் உண்டாம் அன்று; அது இடப்படுகின்றவனுக்குத் துக்கமாம் ஆதலின், '**பரிவது இல்**' என்கிறார். இனி, இதற்குப் 'பக்ஷபாதம் இல்லாத' என்று பொருள் கூறலுமாம்; அதாவது, ஒருவன் அதிகமான பொருள்களைக் கொடுத்தால், அவன் பக்கல் அன்புடையனாய் இருப்பானாகில், அரிதில் அடையத்தக்கவன் என்று அடையப்படுகின்றவனுக்குக் குற்றமாம் அன்றோ? அது இல்லை என்பார், '**பரிவது இல்**' என்கிறார் என்றபடி. இக்குற்றங்கள் இல்லாதபடி இருக்கையாலே [2] ஹேயப்பிரத்தியநீகன் என்பதனைத்தெரிவித்தபடி. [3] ஹேயப்பிரத்தியநீகதை புக்க இடத்தே உபலக்ஷணத்தால்

---

1. 'ஈசனை' என்றதனால் 'பரிபூர்ணன்' என்பதும், 'புரிவதுவும் புகை பூவே' என்றதனால் 'எளிதில் ஆராதிக்கத் தக்கவன் என்பதும் போதரும்.

2. ஹேயப்பிரத்தியநீகன் - குற்றங்கட்கு எதிர்த்தட்டானவன்.

3. குற்றங்கட்கு எதிர்த்தட்டானவன் எனின், குணங்களையுடையவன் என்பதும் தானே போதருமாதலின், 'ஹேயப்பிரத்தியநீகதை புக்க இடத்தே உபலக்ஷணத்தால் நற்குணங்களும் புகுமன்றோ?' என்று அருளிச் செய்கிறார்.

நற்குணங்களும் புகுமன்றோ? ஆகவே, ஹேயப்பிரத்தியநீகதையும் கல்யாணகுண யோகமும் அருளிச்செய்தாராயிற்று. 'இங்ஙனம், உயர்வு தாழ்வு பாராமைக்கு அடி என்?' என்னில், ஈசனை - 'வகுத்த சுவாமி ஆகையாலே' என்கிறார். புறம்பே ஒருவனுக்கு ஒருவன் விருந்திடும் போது நெடுநாள் [1] பச்சை தேடி விருந்திட்டால், 'இவன் உண்டு என்ன குறை சொல்லப் புகுகிறானோ!' என்று [2] நெஞ்சாறலோடே தலைக்கட்டவேண்டி வரும்; மகன் தமப்பனுக்கு விருந்திட்டால், உண்டாகில் உள்ள குறை தமப்பனதாய் நெஞ்சாறல் படவேண்டாதே இருக்கலாம் அன்றே? அப்படிப்பட்ட சம்பந்தத்தைப் பற்ற '**ஈசன்**' என்கிறார் என்றபடி.

பாடி - சர்வேஸ்வரனைக் கிட்டினால் வாக்கு நியதியோடே நிற்கையின்றி, மகிழ்ச்சிக்குப் போக்கு விட்டுப் பாடி. விரிவது மேவல் உறுவீர் - [3] 'மேற்சொல்லப்படுகின்ற சாமவேதத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்' என்கிறபடியே, பாடி [4] விஸ்திருதர் ஆசையாகிற பேறு பெறவேண்டியிருப்பீர்! 'பேறு கனத்து இருந்தது; நாங்கள் செய்ய வேண்டுவது என்?' என்னில், பிரிவகை இன்றி - பிரிகையாகிற வகை இன்றி; அதாவது, [5] 'இமையோர் பலரும் முனிவரும், புனைந்த கண்ணி நீர் சாந்தம் புகையோடு ஏந்தி வணங்கினால், உன் பெருமை மாசு உணாதோ?' என்று அகல வகை இட்டுக்கொண்டு அகலாமல் என்றபடி. நல் நீர் - ஏலம் முதலிய வாசனைப் பொருள்கள் கலப்பு இன்றி இருத்தல், 'கேவலம் தண்ணீரும் அமையும்,' என்றவாறு. தூய் - விரும்பியவாறு தூவி. புரிவதுவும் - இவன் இறைவனுக்கு அருட்கொடையாகக் கொடுக்குமதுவும். புகை பூவே - அகிற்புகை, கருமுகைப்பூ என்று விசேடித்துச் சொல்லாமையாலே ஏதேனும் புகையும், ஏதேனும் பூவும் அமையும். இவ்விடத்தில், **பட்டர்** [6] 'செதுகையிட்டுப் புகைக்க அமையும்; கண்டகாலி இடவும் அமையும்,' என்று அருளிச்செய்வர்.

---

1. பச்சை - சமைத்தற்குரிய உணவுப் பொருள்.
2. நெஞ்சாறல் - மனத்துன்பம்.
3. தைத்திரீ. பிரு. 10.
4. விஸ்திருதர் - விரிவையடைந்தவர்.
5. திருவாய். 1. 5 : 2.
6. செதுகை - சுளம்; பதர்.

**பட்டர்** இங்ஙனம் அருளிச்செய்தவாறே, 'இறைவனுக்குக் கண்டங்கத்தரிப் பூவை அருச்சித்தல் கூடாது என்று சாத்திரங்கள் விதிக்கின்றனவே!' என்று **நஞ்சீயர்** கேட்க, 'அவனுக்கு ஆகாது என்கிறது அன்று; பறிக்கிற அடியார் கையில் முள்பாயும் என்பதற்காகத் தவிர்த்தன காணும்! [1] 'கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார் முளரியும் ஆம்பலும் முன் கண்டக்கால்' என்று இறைவனுக்கே உரிய திருத்துழாயோடு அதற்கு வேறுபட்ட பூக்களையும் ஒரு சேர எடுத்துத் திருமங்கை மன்னன் அருளிச்செய்கிறது கண்டீரே! இதனால், இறைவன் பொருளில் ஏற்றத்தாழ்வு பார்ப்பது இன்று என்பது விளங்குமே! மற்றும், பிரகிருதி சம்பந்தம் இல்லாத பொருள்தான் வேண்டும் என்று இருந்தானாகில், [2] 'புள்ளாய் ஓர் ஏனமாய்' அவதரிப்பானோ! ஸ்ரீ வைகுண்டத்தில் இரானோ?' என்று அருளிச்செய்தார். பின்னர், '**நஞ்சீயர்**' வராக புராணம் பார்த்துக்கொண்டு வரும்போது '**ஸ்ரீ வராக நாயனார்க்கு** [3] முத்தக்காசை அமுது செய்விப்பது' என்று அதில் கூறப்பட்டிருத்தலைக்கண்டதும் '**இது என்ன மெய்ப்பாடுதான்!**' என்று மிகவும் ஈடுபட்டவரானார். (1)

57

மதுவார் தண்அம் துழாயான்
முதுவேத முதல்வ னுக்கு
எதுஏது என்பணி என்னா
ததுவே ஆட்செய்யும் ஈடே.

பொ - ரை: 'தேன் ஒழுகுகின்ற குளிர்ந்த அழகிய திருத்துழாய் மாலையைத் தரித்த பழமையான வேதங்களால் கூறப்படுகின்ற இறைவனுக்குச் செய்யப்படும் தொண்டுகள் எத்துணைப் பெருமை வாய்ந்தவை! ஆதலால், நான் செய்யும் தொண்டு யாது உளது?' என்னாததுவே இறைவனுக்குத் தொண்டுகளைச் செய்தற்கு உரிய தகுதியாம்.

வி - கு: வேதமுதல்வன் - 'வேத முதல்வன் என்ப, தீது அற விளங்கிய திகிரி யோனே' என்பது நற்றிணை. 'பணி எது? என் பணி ஏது?' எனப் பிரித்துக் கூட்டுக.

---

1. பெரிய திருமொழி. 11. 7 : 6.
2. ஷை ஷை
3. முத்தக்காசு - கோரைக் கிழங்கு.

ஈடு: இரண்டாம் பாட்டு. 'அடைகின்ற அடியார்கட்குப் பொருளில் குறை பார்த்து அகல வேண்டா,' என்றார் முதற் பாசுரத்தில்; 'நான் அதிகாரி அல்லேன் என்று அகல வேண்டா,' என்கிறார் இப்பாசுரத்தில்.

''புரிவதுவும் புகை பூவே' என்கிறார் மேல்; 'மதுவார் தண் அம் துழாயான்' என்கிறார் இங்கு; இது சேரும்படி என்?' எனின், [1] 'பூவாகில் மதுவோடே கூடியல்லது இராமையாலே சேரும்' என்று சொல்லுவர்கள்; 'வதுவார் தண் அம் துழாயான்' என்று பாடமான போது சாலப் பொருந்தும்; வதுவை - மணம்; அது கடைக்குறைந்து 'வது' என நிற்கின்றது.

மது வார் தண் அம் துழாயான் - ஒரு வாடல் மாலையைக் கொணர்ந்து திருக்குழலிலே வளையமாக வைத்தால், திருக்குழலின் பரிசத்தால் செவ்வி பெற்று, மது நிரம்பிச் [2] சினையாறு பட்டு, ஒழுகி வெள்ளமிடாநிற்கும். முது வேத முதல்வனுக்கு - 'இவ்வொப்பனை அழகினைப் பேசும்போது இன்னமும் பாசி பூத்த வேதம் பேச வேண்டாவோ?' என்பார், 'மதுவார் தண்ணந்துழாயான்' என்றதனை யடுத்து, **'முது வேத முதல்வன்'** என்கிறார். நித்தியமாய்ப் புருஷனால் செய்யப்படாததாய் உள்ள வேதங்களால் சொல்லப் பட்டவனுக்கு. வேத முதல்வன் என்பது, [3] 'வேதவாக்கியங்களையே பிரமாணமாகக் கொண்டவன்' என்கிறபடியே, வேதங்களால் சொல்லப்பட்டவன் என்கை. **'மதுவார் தண் அம் துழாயான்'** என்கையாலே, எல்லாரினும் அறப்பெரியவன் என்பதனைத் தெரிவித்தபடி. **'முதுவேத முதல்வன்'** என்கையாலே, பரிபூர்ணன் என்பதனைத் தெரிவித்தபடி. இவ் விரண்டும் எளிதில் ஆராதிக்கத் தக்கவன் என்பதற்கு உறுப்புகள்.

எது ஏது என் பணி என்னுததுவே ஆட்செய்யும் ஈடு - 'முது வேத முதல்வனுக்கு எது பணி? என் பணி ஏது?' என்னுததுவே ஆட்செய்கைக்கு அதிகாரமாவது அதாவது, நித்தியசூரிகள் அலரோ அவனுக்குத் தகுதியாக அடிமை செய்ய வல்லார்? நான் செய்யுமது ஏது?' என்று தன்னைக்கொண்டு கைவாங்காது ஒழியுமதுவே ஆட்செய்கைக்கு அதிகாரம் என்றபடி. இனி, இதற்கு 'இது அவ்

---

1. *இதனை, 'ஆகுபெயர் அந்தாதித்தொடை' என்பர் மாறன் அலங்கார உரைகாரர்.*

2. *சினையாறுபடுதல் - ஆறு நீர் வரவு அணித்தானால் பொசிந்து உள்ளே தண்ணீர் உண்டாகி இருத்தல்.*

3. *உத்தர மீமாம்சை,* 1. 1: 3.

விறைவனுக்குத் தகுதி அன்று,' என்று சிலவற்றை விடாதே, எல்லாக் கைங்கரியங்களிலும் சேர்ந்து அடிமை செய்வதுமே ஆட்செய்கைக்கு அதிகாரமாவது என்று பொருள் கூறலுமாம்.[1] (2)

58

ஈடும் எடுப்பும்இல் ஈசன்
மாடு விடாதுஎன் மனனே
பாடும்என் நாஅவன் பாடல்
ஆடும்என் அங்கம் அணங்கே.

**பொ-ரை:** *தாழ்ந்தவன் என்று ஒருவனை ஏற்றுக்கொள்ளாது விடுதலும், உயர்ந்தவன் என்று ஒருவனை ஏற்றுக்கோடலும் இல்லாத இறைவனுடைய பக்கத்தை என் மனம் விடாது; என் நாக்கும் அவன் பாடல்களையே பாடும்; என் சரீரமும் தெய்வம் ஏறியவர்களைப்போன்று ஆடாநிற்கும்.*

**வி-கு:** *ஈடு-முதனிலை திரிந்த தொழிற்பெயர். மாடு-பக்கம். அணங்கு-தெய்வமகள் என்பர் பரிமேலழகர். (திருக்குற. 1081.) 'ஈடும் எடுப்பும் இல் ஈசன்' என்ற தொடர், 'தனக்கு உவமை இல்லாதான்' என்ற திருக்குறளின் பொருளை விரித்துக்கூறுதல் போன்று அமைந்துள்ளது.*

**ஈடு:** மூன்றும் பாட்டு. இறைவனுடைய [2]சுபாவத்தை நினைந்து, [3]தாம் அதிகரித்த காரியத்தை மறக்கும்படி தம்முடைய மனம் வாக்குக் காயங்களுக்கு அவன் பக்கல் உண்டான காதற் பெருக்கினை அருளிச்செய்கிறார்.

ஈடும் எடுப்பும் இல் ஈசன்-சிலரை வெறுத்தல், சிலரை ஏற்றுக் கோடல் செய்யாத சர்வேஶ்வரன். இறைவனுக்கு ஆத்துமாக்கள் பக்கல் உண்டான சம்பந்தம் சர்வ சாதாரணமாய் இருக்கையாலே சிலரை விடப்போகாது அன்றே? [4]'தேவர்கட்கும் தானவர்கட்கும் நீயே தெய்வம்' என்கிறபடியே, ஏற்றுக்கொள்ளுமவன் பக்கலுள்ள சம்பந்தம் விடுமவன் பக்கலிலும் உண்டு ஆதலின், 'ஈடும் எடுப்பும்

---

1. *இங்கு அருளிச்செய்த இரு வகைப் பொருள்களுள் முதற் பொருள், அதிகாரியினுடைய தாழ்விலே நோக்கு. இரண்டாவது பொருள், கைங்கரியத்தினுடைய தாழ்விலே நோக்கு. அதாவது, 'உள்ளோடு புறம்போடு வாசியற எல்லாக் கைங்கரியத்திலும் சேர்தல் வேண்டும்,' என்றபடி.*
2. *சுபாவம் - எளிதில் ஆராதிக்கத்தக்க தன்மை*
3. *அதிகரித்த காரியம் - பரோபதேசம்.*
4. *ஜிதந்தா. 1 : 2.*

இல் ஈசன்' என்கிறார். ஈசன் மாடு விடாது என் மனனே - ஒரு சாதனத்தைக் கருதிக் கிட்டினேனாகில் அன்றோ பலம் கைப்புகுந்த வாறே விடுவேன்? நான் மேற்கொண்ட காரியத்துக்கு எனக்கு நெஞ்சு ஒழிகிறது இன்று. 'மனத்தின் துணை வேண்டுமோ உமக்கு? [1] 'நாஇயலால் இசைமாலைகள் ஏத்தி நண்ணப் பெற்றேன்' என்பது அன்றோ உம்முடைய தன்மை? ஆதலால் உம்முடைய மனத்தோடு படாத சொற்களே அமையாதோ எங்களுடைய நலனுக்கு?' என்ன, பாடும் என் நா அவன் பாடல் - என்னுடைய நாவும் மனம் மேற் கொண்ட காரியத்தையே மேற்கொண்டது. 'ஆயின், உம்முடைய [2] ஹஸ்த முத்திரை அமையாதோ எங்களுக்குப் பொருள் நிச்சயம் பண்ணுகைக்கு?' என்ன, ஆடும் என் அங்கம் அணங்கே - அதுவும் அவன் விஷயத்திலேயே அன்பு கொண்டதாயிற்று. (3)

59

*அணங்குஎன ஆடும்என் அங்கம்*
*வணங்கி வழிபடும் ஈசன்*
*பிணங்கி அமரர் பிதற்றும்*
*குணங்கெழு கொள்கையி னானே.*

பொ - ரை: *நித்தியசூரிகள் (இறைவனுடைய குணங்களைக் கூறத் தொடங்கி, 'யான் முன்னர், யான் முன்னர்' என்று ஒருவர்க் கொருவர்) மாறுபட்டுக் (குளிர்காய்ச்சல் வந்தவர்களைப் போன்று) பிதற்றுவதற்குக் காரணமான நற்குணங்கள் எல்லாம் பொருந்தி யிருக்கும் தன்மையுடையவனான ஈசனை அனுபவித்துத் தெய்வம் ஏறிய வர்களைப் போன்று ஆடுகின்ற எனது உடலானது எப்பொழுதும் அவனையே வணங்கி வழிபடாநின்றது.*

வி - கு: *ஆடும் - பெயரெச்சம். வழிபடும் - முற்று. சொற்களைக் கொண்டு கூட்டாது, ஆற்றொழுக்காகப் பொருள் கூறலுமாம். அங்ஙனங் கூறுங்கால், 'வழிபடும்' என்பது, எச்சம்.*

ஈடு: நான்காம் பாட்டு. தம்முடைய மனம் வாக்குக் காயங் கட்கு அவன் பக்கல் உண்டான காதற்பெருக்கு ஒரு காலத்தில் தோன்றி மறைதல் இன்றி, நித்தியசூரிகளைப்போலே யாத்திரையான படியைச் சொல்லுகிறார்.

அணங்கு என ஆடும் என் அங்கம் வணங்கி வழிபடும் ஈசன் - தெய்வம் ஏறியது என்னலாம்படி ஆடுகிற என் அங்கம் வணங்கி

1. *திருவாய்.* 5. 4 : 4.

2. *ஹஸ்த முத்திரை - திருக்கை ஞான முத்திரை.*

அதுதானே யாத்திரையாய்ச் செல்லும்படி இருக்கிற ஈசன். பிணங்கி அமரர் பிதற்றும் குணம் கெழு கொள்கையினன் - தாம் தாம் அகப்பட்ட குணங்களைச் சொல்லி, 'நான் முந்துறச்சொல்ல, நான் முந்துறச்சொல்ல' என்று பிணங்கி நித்தியசூரிகள் ஜன்னி சுரம் வந்தவர்களைப்போன்று அடைவு கெடக் கூப்பிடுகிற குணங்கள் வந்து சேருகைக்கு இருப்பிடமானவன். அதாவது, [1]'இரத்தினகரம் போலே குணங்கள் சேருகைக்குக் கொள்கலமானவன்' என்றபடி. இனி, 'குணம் கெழு கொள்கையினன்' என்பதற்கு, குணங்கள் வந்து கெழுமுகையைச் சுபாவமாக உடையவன்' என்று பொருள் கூறலுமாம். கெழுமுகை-சேர்கை.

இனி, [2] இத்திருப்பாசுரத்தால், 'முற்றறிவினர்கள் படுகிற பாடு என்னுடைய கரணங்களுக்கும் உண்டாகாநின்றது என்கிறார்' எனலுமாம். (4)

60

கொள்கை கொளாமை இலாதான்
எள்கல் இராகம் இலாதான்
விள்கல் விளாமை விரும்பி
உள்கலந் தார்க்குஓர் அமுதே.

பொ – ரை: குணம் பார்த்துக் கொள்ளுகையும் குணம் இன்மையைப் பார்த்துக் கை விடுகையும் இல்லாதவன்; கைவிடுகைக்குக் காரணமான வெறுப்பும் கைக்கொள்ளுகைக்குக் காரணமான விருப்பும் இல்லாதவன்; வேறு பலன்களைக் கொண்டு தன்னை விட்டு நீங்குகையையும் வேறு பலனை விரும்பாதவர்களாய்த் தன்னை நீங்காது ஒழிகையையும் விரும்பிப் பார்த்து, உள் கலந்தார்க்கு ஒப்பற்ற அமிர்தம் ஆவான்.

வி. கு: 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்றார் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார். இலாதான் - தொழிற்பெயர். எள்கல் - இகழ்தல். இராகம்-ஆசை. விள்கை-பிரிதல். விள்ளாமை - பிரியாமை. 'விரும்பி அமுது ஆவான்' என இயையும்.

---

1. இரத்தினகரம் - கடல்.

2. 'இனி, இத்திருப்பாசுரத்தால்' என்று தொடங்கும் பொருளுக்குத் தக, 'பிணங்கியமரர் பிதற்றும் குணங்கெழு கொள்கையினனை ஈசனைக் கண்டு அணங்கென ஆடும் என் அங்கம் வணங்கி வழிபடும்,' எனச் சொற்களைக் கூட்டி முடிக்க.

ஈடு: ஐந்தாம் பாட்டு. [1] மீண்டும் தாம் மேற்கொண்ட காரியத்திலே போந்து, சர்வேச்வரன், தன் பக்கல் சிலர் வந்து கிட்டினால் 'இவர்கள் வேறு பலன்களைக் கொண்டு அகலுவர்களோ, நம்மையே பலமாகப் பற்றுவர்களோ?' என்று ஆராய்ந்து, தன்னையே பலமாகப் பற்றினவர்களுக்குத் தானும் எல்லையற்ற இனியனாக இருப்பான் என்கிறார்.

கொள்கை கொளாமை இலாதான் - 'இவன் பிறவியாலும் தொழிலாலும் ஞானத்தாலும் உயர்ந்தவன் ஒருவன்; இவனிடத்தில் அந்தரங்கத் தொண்டினைக் கொள்வோம்; இவன் அவற்றால் தாழ்ந்தான் ஒருவன்; இவனிடத்தில் புறத்தொழில் கொள்வோம்' என்னுமவை இல்லாதான். எள்கல் இராகம் இலாதான்-திருவுள்ளத்தாலே சிலரை இகழ்ந்திருத்தல், சிலரை ஆதரித்தல் செய்யான். '**ஈடும் எடுப்பும் இல் ஈசன்**' என்ற இடத்தில் 'ஏற்றுக்கொள்ளும் சமயத்தில் குறை பாரான்' என்றார்; இங்குக் 'கைங்கரியம் கொள்ளுமிடத்தில் தரம் இட்டுக் கொள்ளான்' என்கிறார். அவன் பார்ப்பது இஃது ஒன்றுமேயாம்; 'அஃது, யாது?' எனின், விள்கை - பிரயோஜனங்களைக் கொண்டு விடுகை. விள்ளாமை - வேறு பலன்களை விரும்பாமை. விரும்பி - ஆதரித்து. உள் கலந்தார்க்கு-அவனையே பலமாகப் பற்றி அவனுடனே ஒரு நீராகக் கலந்தார்க்கு. ஓர் அமுதே- ஒப்பு அற்ற அமிர்தமாய் இருப்பான்; [2] 'ஆரா அமுதே' அன்றோ? (5)

61

*அமுதம் அமரர்கட்கு ஈந்த*
*நிமிர்சுடர் ஆழி நெடுமால்*
*அமுதிலும் ஆற்ற இனியன்*
*நிமிர்திரை நீள்கட லானே.*

பொ - ரை: நிக்கு உயர்கின்ற அலைகளையுடைய நீண்ட திருப்பாற்கடலில் அறிதுயில் செய்கின்றவன் அமுதத்தைத் தேவர்கட்குக் கொடுத்த, நிமிர்ந்து விளங்குகின்ற பிரகாசத்தையுடைய சக்கரத்தைத் தரித்த நெடுமால், அவன், அமுதத்தைக்காட்டிலும் மிக்க இனிமையையுடையவன் ஆவன்.

---

1. இத்திருப்பதிகத்தில், முதல் இரண்டு திருப்பாசுரங்களால் பரோபதேசம் செய்தவர், நடுவில் இரண்டு திருப்பாசுரங்களில் (3, 4.) தம்முடைய கரணங்களுக்கு உற்ற வேறுபாட்டினை அருளிச்செய்தாராதலின், இங்கு 'மீண்டும் தாம் மேற்கொண்ட காரியத்திலே போந்து' என்று அருளிச் செய்கிறார். அதாவது, பரோபதேசம் செய்யப் புகுகிறார் என்றபடி.

2. திருவாய். 5. 8 : 1.

வி - கு: 'ஈந்த', என்னும் எச்சத்தை 'மால்' என்னும் பெயருடன் முடிக்க. 'நிமிர் சுடர், நிமிர்திரை' என்பன வினைத்தொகைகள்.

ஈடு: ஆறும் பாட்டு. 'அவன் படி இதுவாக இருக்க, அவனை விட்டு வேறு பலன்களைக் கொண்டு அகலுவதே!' என்று வேறு பலன்களை விரும்பிய தேவர்களை நிந்திக்கிறார்.

அமுதம் அமரர்கட்கு ஈந்த-'என்ன பரம உதாரனோ!' என்கிறார். 'நீ வேண்டா; எங்களுக்குச் சாவாமைக்கு உரிய பொருளை உண்டாக்கித் தரவேண்டும்,' என்றவர்களுக்கு அவர்கள் உகந்த பொருளைக் கொடுத்துவிடுவதே! அவர்கள் பிரயோஜனத்தை அருவருத்து, தாம் உகந்த பிரயோஜனத்துக்கு உண்டான வேறு பாட்டினை அருளிச்செய்கிறார்; நிமிர் சுடர் ஆழி நெடுமால் - இவருடைய அமிர்தம் இருக்கிறபடி. [1]'நால் தோள் அமுதே' அன்றோ இவர்க்கு அமுது? [2]'அமுது என்றும் தேன் என்றும் ஆழியான் என்றும்' என்கிறபடியே, கையுந்திருவாழியுமாய் அன்றோ அவருடைய அமிருதம் இருப்பது? தேவர்கள் விரும்பிய பலனைத் தலைக்கட்டிக் கொடுக்கையாலே உண்டான புகர் திரு ஆழியிலே தோற்றும்படி இருத்தலின், '**நிமிர்சுடர் ஆழி**' என்கிறார். 'வேறு ஒரு பலனேயாகிலும் நம் பக்கல் கொள்ளப் பெற்றோமே!' என்று கொண்ட பெருமோகத்தின் மிகுதி தோன்ற நிற்றலின், '**நெடுமால்**' என்கிறார்.

அமுதிலும் ஆற்ற இனியன்-தேவர்கள் வாசி அறிவார்களாகில் இவனை அன்றோ பற்றுதல் வேண்டும்? ஆற்ற இனியன் - மிகவும் இனியன். [3]**நம்பி திருவழுதி நாடு தாசர்**, 'இத்தேவ சாதி வெறும் [4]மரையோ? [5]'உப்புச்சாறு கிளருவது எப்போதோ?' என்று கவிழ்ந்து பார்த்துக் கிடப்பதே இவன் அழகையும் இனிமையையும் விட்டு!' என்பராம். நிமிர் திரை நீள் கடலானே - 'அண்மையில் இலன்' என்றுதான் விடுகிறார்களோ! அவ்வமிருதம் உண்டாகிற கடலிலே அன்றோ அவன் சாய்ந்தருளினான் என்பார், '**கடலான்**' என்கிறார். 'தன் வாசி அறியாது இருப்பார்க்கும் எழுப்பிக் காரியங் கொள்ள

1. திருவாய். 6. 10 : 9.
2. இரண்டாந் திருவந். 85.
3. நம்பி திருவழுதி நாடு தாசர் - இவர் அடியார் பெருமக்களுள் ஒருவர்.
4. மரை - மான் விசேடம்.
5. உப்புச் சாறு - அமிருதம்.

லாம்படி கண்வளர்ந்தருளுகிறுன் என்றபடி. [1] ‘தாளும் தோளும் முடிகளும் சமன் இலாத பலபரப்பி’ என்கிறபடியே, கண்வளர்ந் தருளுகைக்குத் தகுதியான பரப்பையுடைத்தாய், தனது ‘சம்பந்தத் தாலே அலைகள் கொந்தளிக்கிற கடல் என்பார், ‘**நிமிர்திரை நீள்கடலான்**’ என்கிருர். [2] ‘மாலும் கருங்கடலே என் நோற்ருய்?’ என்பது பொய்கையார் திருவாக்கு. (6)

62

*நீள்கடல் சூழ்இலங் கைக்கோன்*
*தோள்கள் தலைதுணி செய்தான்*
*தாள்கள் தலையில் வணங்கி*
*நாள்க டலைக்கழி மின்னே.*

**பொ - ரை :** *நீண்ட கடலாற்சூழப்பட்ட இலங்கைக்குத் தலைவனுன இராவணனுடைய தோள்களையும் தலைகளையும் அறுத்துத் தள்ளிய இறைவனுடைய திருவடிகளைத் தலையினுல் வணங்கி வாழ்நாள்களா கிற கடலைக் கழிமின்.*

**வி - கு:** *செய்தான் - வினையாலணையும் பெயர். தலையில்-தலையால் (வேற்றுமை மயக்கம்). ‘வணங்கிக் கழிமின்’ என முடிக்க.*

**ஈடு:** ஏழாம் பாட்டு. ‘இறைவன் எல்லை அற்ற இனியன் என்றீர்; அவனை அடைகின்ற வரையில் இடையிலே உள்ள காலத்தைப் போக்கும் விதம் எப்படி?’ என்ன, அதற்கு அன்றே, [3] ‘மனத்துக்கு இனியானுடைய குணங்களிருக்கின்றன’ என்கிருர்?

நீள்கடல் சூழ் இலங்கைக் கோன் - ‘பரந்த கடலை அகழி யாகவுடைத்தாய், அதுதானும் மிகையாம்படியான அரண்களை யுடைத்தாய் இருந்துள்ள இலங்கைக்குத் தலைவன் அல்லனே?’ என்னும் கெட்ட அகங்காரத்தாலே ‘**சக்கரவர்த்தி திருமகன்**’ என்று மதியாமல் எதிரிட்ட பையலுடைய. தோள்கள் தலைதுணி செய்தான் -‘ அகப்படாதவன் அகப்பட்டான்; தப்பாமல் கொன்று விடுவோம்’ என்று பாராமல், தோள்களைக் கழித்துக் தலைகளைச் சரித்துப் போது போக்காக நின்று கொன்றபடி. தாள்கள் தலையில் வணங்கி - அவனுடைய வீர சரிதங்களைக் கொண்டு திருவடியைப் போலே போது போக்கி. நாள் கடலைக் கழிமின் - இறைவனுடைய

1. *திருவாய்.* 8. 10 : 8.

2. *முதல் திருவந்.* 19.

3. *‘சினத்தினுல் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற, மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்’ என்பது திருப்பாவை.*

இனிமை நெஞ்சிலே பட்டால், அவனை அடைவதற்கு முன்பு இடையிலேயுள்ள நாள்கள் [1] ஒருகடல் போன்று தோன்றும் ஆதலின், 'நாள்கடல்' என்கிறார். இனி, இதற்குச் 'சக்கரவர்த்தி திருமகனை அடைந்து [2]பிறவிப் பெருங்கடலைக் கழித்துக்கொள்ளுங்கள்' என்று கூறலுமாம். (7)

63

கழிமின் தொண்டர்கள் கழித்துத்
தொழுமின் அவனைத் தொழுதால்
வழிநின்ற வல்வினை மாள்வித்து
அழிவின்றி ஆக்கம் தருமே.

**பொ - ரை :** அடியவர்களே, உலகப்பற்றினை நீக்குங்கள்; நீக்கி, இறைவனை வணங்குங்கள்! அவனை வணங்கினால், தொடர்ந்து வருகின்ற கொடிய வினைகளை எல்லாம் நீங்கச்செய்து, பின் மோக்ஷ உலகத்தில் செய்யப்படும் தொண்டாகிய செல்வத்தினை அழிவு இல்லாதபடி கொடுப்பான்.

**வி - கு :** 'தொழுதால், மாள்வித்து, ஆக்கத்தை அழிவின்றித் தரும்,' என முடிக்க. 'தரும்' என்பது, செய்யுமென் முற்று.

**ஈடு:** எட்டாம் பாட்டு. 'சக்கரவர்த்தி திருமகனுடைய வீர சரித்திரத்தை நினைத்து, மற்றைப் பொருள்களின் ஆசையை நீக்கவே, அவன் தானே தடைகளை எல்லாம் போக்கி நித்தியமான கைங்கரியத்தைத் தந்தருளுவான்,' என்கிறார்.

கழிமின் - புறப்பொருள்களிலுள்ள ருசியைக் கழியுங்கள். கழிக்கையாவது, 'பொல்லாது' என்று இருக்கை. தொண்டர்-பகவத்விஷயத்தில் ஆசையுடையவர்களே, கழிக்கப் பாருங்கள். இந்த ருசியைப் பூண் கட்டிக்கொள்ளத் தேடுகிறவர்கள் கழிக்கச் சொன்னால் கழியார்கள் ஆதலின், '**தொண்டர் கழிமின்**' என்கிறார், கழித்துத் தொழுமின் - 'அவனைத் தொழாநிற்கச் செய்தே இதுவும் முறையே கழிகிறது,' என்று இராமல் அவசியம் கழித்தே தொழுங்கள். மற்றைப் பொருள்களின் விரக்திதானே பிரயோஜனமாக இருக்கும் ஆதலின், '**கழிமின்**' என்றவர், மீண்டும், '**கழித்து**'

---

1. 'காதலர் இருவர், ஒருவரை ஒருவர் பிரிந்திருக்குங் காலத்து 'ஊழி பல ஓர் இரவு ஆயிற்றே என்னும்' (நளவெண்பா) என்பது போன்று கூறுங்கூற்றுகள் ஈண்டு நினைவுகூர்தல் தகும்.

2. ஈண்டு 'நாள்' என்றது - உபலக்ஷணத்தால் பிறவியைக் குறித்தது.

என்கிறார். [1] கரும்பு தின்னக்கூலி போன்று ஒரு பலன் இன்றே யாயினும் தொழுகைதானே பலன் ஆதலின், 'தொழுமின்' என்றவர், மீண்டும் 'தொழுதால்' என்கிறார். இப்படிச் செய்தால், வழி நின்ற வல்வினை மாள்வித்து - இவ்வாத்துமாவுக்குச் சொரூபத்தோடு கட்டுப்பட்டதோ என்னும்படி பொருந்தியிருக்கிற கொடிய கர்மங்களை வாசனையோடே போக்கி. இனி, 'வழிநின்ற வல்வினை' என்பதற்கு 'நடுவே நின்று, பகவானை அடைதலைத் தடை செய்கிற கர்மங்கள்' என்று பொருள் கூறலுமாம். அழிவு இன்றி ஆக்கம் தரும் - [2] 'மறுபடியும் மீண்டு வருகின்றான் இலன்' என்கிறபடியே, மீண்டு வரும் தன்மை இல்லாத மோக்ஷத்தைத் தருவான். (8)

64

தரும அரும்பய னாய
திருமக ளார்தனிக் கேள்வன்
பெருமை யுடைய பிரானார்
இருமை வினைகடி வாரே.

**பொ - ரை:** தருமங்களினுடைய கிடைத்தற்கு அரிய பயன்கள் எல்லாம் ஒரு வடிவு கொண்டது போன்று இருக்கின்ற பெரிய பிராட்டியாருக்கு ஒப்பற்ற கணவர்; திருமகள் கேள்வர் ஆகையாலே, வந்த ஒப்பற்ற பெருருமையினையுடைய உபகாரகர்; ஆதலால், இருவினைகளையும் நீக்குவார்.

**வி - கு:** 'இருமை' என்பது, இரண்டின் தன்மையை உணர்த்தாமல் இரண்டு என்னும் எண்ணையே உணர்த்திற்று. 'இருமை' என்பதில் 'மை' பகுதிப்பொருள் விகுதி. 'இருமை வகைதெரிந்து ஈண்டு அறம் பூண்டார்' என்ற திருக்குறளும், 'தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம்பொருப்பன்' என்புழிப்போல, 'இருமை' என்பது ஈண்டு எண்ணின்கண் நின்றது,' என்ற பரிமேலழகர் உரையும் ஈண்டு நோக்கல் தகும்.

**ஈடு:** ஒன்பதாம் பாட்டு. 'தன்னைப் பற்றின அளவில் இப்படி விரோதிகளைப் போக்கி இப்பேற்றினைத் தரக்கூடுமோ?' என்னில்,

---

1. 'கரும்பு அயிறற்குக் கூலிபோலத் தாம் இன்புறுதற்கு உலகு இன்புறுதல் பிறவாற்றான் இன்மையின் 'அதனையே காமுறுவர்' என்று கூறினார்.' (திருக்குறள். 399. பரிமேலழகருரை.)

'கரும்பயிலக், கூலி கொடுக்குங் குலத்தோன்றல்'(சிவப்பிர. பிரபந். திருவெங்கையுலா.) என்பன ஈண்டு நினைத்தல் தகும்.

2. சாந்தோக். உபநி. 8 : 15.

'வெறும் அவன் படியையோ பார்ப்பது ! அருகே இருக்கிறார் படியையும் பார்க்க வேண்டாவோ? [1] 'குற்றம் செய்யாதவர் ஒருவரும் இலர்,' என்பவர் அன்றோ அருகில் இருக்கிறார்?' என்கிறார்.

தருமம் - இப்பொருளில் ஐயம் இன்று. அவ்வரும்பயனுய - பெறுதற்கு அரிதாகச் சாத்திரங்களிலே பிரசித்தமான பிரயோஜன ரூபமானவற்றை. இனி, 'பயனுய' என்பதனை வினையாலணையும் பெயராகக் கொள்ளாது, பெயரெச்சமாகக் கொண்டு, திருமகளுக்கு அடைமொழியாக்கி, தருமத்தினுடைய மேலான பிரயோஜனந்தான் ஒருவடிவு கொண்டாற்போன்று இருக்கின்ற பெரிய பிராட்டியார் என்று பொருள் கூறலும் ஒன்று. திருமகளார் தனிக்கேள்வன் - பெரிய பிராட்டியாருக்குக் கணவன் ஆகையாலே [2] இரண்டாம் விரலுக்கு ஆள் இல்லாதபடி இருக்கிறவன். [3] சனக குலத்தில் அவதரித்த பிராட்டியானவள் எவனுக்கு மனைவியாக இருக்கின்றாள்? அவனுடைய திறல் வலி முதலாயின அளவிட முடியாதனவாக இருக்கின்றன,' என்கிறபடியே. திருமகள் கேள்வன் ஆகையாலே வரும் ஏற்றம் உள்ளது இவன் ஒருவனுக்குமே ஆதலின், '**தனிக் கேள்வன்**' என்கிறார். பெருமையுடைய பிரானார் - இலட்சுமிபதி ஆகையாலே வந்த மேன்மையுடைய உபகாரகர் ஆனவர். அடியார்கட்கு அருள் புரிதலே சொரூபமாகவுடையவர் ஆதலின், '**பிரானார்**' என்கிறார். இருமை வினை கடிவார் - [4] பேர்வாசியேயாம்படி நாம் செய்து வைத்த இருவகைப்பட்ட கர்மங்களையும் போக்குவார். நல்வினை தீவினைகட்குத் தம்மில் தாம் வேற்றுமை உண்டேயாயினும், [5] மோட்சத்திற்குத் தடை என்னும் தன்மையில் இரண்டு வினைகளும் ஒக்கும் ஆதலின், '**இருமை வினை கடிவார்**' என்கிறார். (9)

---

1. *ஸ்ரீராமா. யுத்.* 116 : 45.

2. *'அதிரதர் தம்மை எண்ணில் அணிவிரல் முடக்கல் ஒட்டா முதிர்சிலை முனியும்' (வில்லிபா. நிரைமீ.* 92.) *'வில்லாளரை எண்ணில் விரற்கு முன் நிற்கும் வீரன்' (கம். யுத்.* 1956.) *என்பன இப்பொருள் பற்றி வந்தன.*

3. *ஸ்ரீராமா. ஆரண்.* 37 : 108

4. *'பேர் வாசியேயாம்படி' என்றது - புண்ணியம், பாவம் என்கிற பேர்வாசி மாத்திரமேயாம்படி என்றவாறு.*

5. *'நல்வினையும் பிறவிக்குக் காரணமாதலின், 'இரு வினையும் சேரா' என்றார்,' என்ற பரிமேலழகருரை இங்கு ஒப்பு நோக்குக.*

65

**கடிவார் தீய வினைகள்**
**நொடியா ருமள வைக்கண்**
**கொடியா அடுபுள் உயர்த்த**
**வடிவார் மாதவ ஞரே.**

**பொ - ரை:** பகைவரைக் கொல்லும் கருடப்பறவையைக் கொடியாக உயர்த்திய, அழகு பொருந்திய பெரிய பிராட்டியாருக்குக் கணவர்; ஆதலால். நொடிக்கும் அளவைக்குள் தீய வினைகளை எல்லாம் போக்குவார்.

**வி - கு:** நொடி – நொடித்தல்; அதாவது, கையின் இரண்டு விரல்களின் நுனிகளையும் சேர்த்துத் தெறித்தல்: அது, இங்குந் தெறித்தலால் உண்டாகும் ஒலிககு ஆய், அவ்வொலி அது நிகழ்கின்ற காலத்திற்கு ஆயிற்று. 'கண்ணிமை நொடிஎன அவ்வே மாத்திரை,' என்ருர் ஆசிரியர் தொல்காப்பியனுர். அடுபுள் - வினைத்தொகை.

ஈடு: பத்தாம் பாட்டு. 'இப்படி அவனும் அவளும் குற்றங்களைப் போக்குவது எத்தனை காலம் கூடி?' என்னில், 'தன் திருவடிகளிலே தலை சாய்த்த அளவிலே' என்கிருர்.

கடிவார் தீய வினைகள் - காலம் என்னும் ஒரு பொருள் உள்ள வரையும் தன்னுல் போக்கிக்கொள்ள ஒண்ணுத கொடிய பாவங்களை எல்லாம் போக்குவார். '**வழி நின்ற வல்வினை மாள்வித்து**' என்ற இடத்தில், 'பற்றின அளவில் பாவங்களைப் போக்குவான்,' என்ருர்; '**இருமை வினை கடிவார்**' என்ற இடத்தில், 'அவன் தானுனதற்கு மேல் பிராட்டியும் உடன் இருக்கையாலே போக்குவான்,' என்ருர். 'எவ்வளவில் போக்குவான்?' என்னில், 'கணநேரத்திலே' என்கிருர் இதில். நொடி ஆரும் அளவைக்கண் - நொடி நிறையும் அளவிலே. கொடியா அடு புள் உயர்த்த வடிவார் - தூரத்தில் கண்ட அளவில் [1] பகைவர்கள் மண் உண்ணும்படியான பெரிய திருவடியைக் கொடியாக எடுக்கையைச் சுபாவமாக உடையவர். இனி, 'வடிவார்' என்பதற்கு 'அழகிய வடிவையுடையவர்' என்று கூறலுமாம். இனி, இதனைப் பிராட்டிக்கு அடைமொழியாக்கி, 'வடிவிலே எழுந்தருளியிருக்கின்ற' என்று பொருள் கூறலும் ஒன்று. மாதவனுர்-பிராட்டி அருகே இருந்து போக்குவிக்க ஆயிற்றுப்போக்குவது. அதாவது,

---

4. *'எல்எடுத்த படை இந்திராதியர் உனக்கு இடைந்து உயிர் கொடு ஏகுவார், புல் எடுத்தவர்கள் அல்லம்'* (கம்ப. யுத். 2026.)

*'விற்கவ்வு வாளி அடல்ஐவர் மீது விடஅஞ்சி வீரர் எதிரே, புற்கவ்வு மாகில்'* வில்லிபா. ஒன்பதாம் போர்ச். 5.)

*என்பன இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.*

'ஒருதலை பிறவி, ஒருதலை மரணம், நடுவே [1] ஆதி வியாதிகள்; இவ்வுயிர்கள் செய்த குற்றங்களைப் பார்க்கக் கடவதோ! குற்றம் கண்டுவிடில் உலகம் முழுதையும் விடவேண்டாவோ! பொறுத் தருளீர்,' என்றால், 'அவளுக்காகப் பொறுத்தோம்' என்னு மித்தனை. (10)

66

*மாதவன் பாற்சட கோபன்*
*தீதவம் இன்றி உரைத்த*
*ஏதமில் ஆயிரத்து இப்பத்து*
*ஓதவல் லார்பிற வாரே.*

**பொ - ரை:** *'ஸ்ரீசடகோபராலே, திருமகள் கணவனிடத்தில் தீதும் அவமும் இல்லாத தன்மையை எடுத்து உரைக்கப்பட்ட குற்றம் இல்லாத ஆயிரம் திருப்பாசுரங்களுள், இப்பத்துத் திருப்பாசுரங்களையும் கற்று வல்லவர்கள, மீண்டும் வந்து இவ்வுலகிற்பிறக்க மாட்டார்கள்,' என்பதாம்.*

**வி - கு:** *'உரைத்த' என்னும் எச்சத்தை 'இப்பத்து' என்னும் பெயருடன் முடிக்க.*

**ஈடு:** முடிவில், 'இத்திருவாய்மொழியைக் கற்க வல்லவர் சம்சாரத்தில் வந்து பிறவார்,' என்கிறார்.

மாதவன்பால் சடகோபன் தீது அவம் இன்றி உரைத்த ஏதம் இல் ஆயிரத்து இப்பத்து - இதனை, 'தீது இல் மாதவன்பால், அவம் இன்றி இருக்கின்ற சடகோபன் உரைத்த, ஏதம் இல் ஆயிரம்' என்று சொற்களைக் கொண்டு கூட்டி, பிரபந்தத் தலைவன் குற்றம் இல்லாதவன் என்றும், பிரபந்தத்தை அருளிச் செய்தவர் குற்றம் இல்லாதவர் என்றும், பிரபந்தம் குற்றம் இல்லாதது என்று பொருள் அருளிச்செய்தனர் முன்னைய பெரியோர். பட்டர், அவ்வாறு அன்றி, 'ஏதம் இல் ஆயிரம்' என்று பிரபந்த லக்ஷணம் கூறிய போதே, முக்குற்றங்கள் இல்லாமையும் சொல்லியதாம்; இனி, தீதும் அவமும் என்பன செய்வன என்?' என்னில், 'சடகோபன் மாதவன் பால் தீது அவம் இன்றி உரைத்த' என்று கூட்டிப் பொருள் கொள்க,' என்று அருளிச்செய்தார். அதாவது, தீதாவது, 'நான் திருமகள் கேள்வன் அல்லனோ!' என்று தன் மேன்மையைப் பார்த்துக் கடக்க இருக்குமது. அவமாவது, 'அடைகின்றவன் நித்திய சம்சாரி அல்லனோ!' என்று இவன் சிறுமையைப் பார்த்துக் கைவிடுமது. இவை இல்லாமையைச் சொன்ன இப்பத்து என்றபடி. ஓத வல்லார்

1. ஆதி வியாதி - மனத்தின் நோய் உடலின் நோய்கள்.

பிறவாரே - ஆயிரத்திலும் இந்தப் பத்தையும் கற்க வல்லார் பிறவார். பிறக்கை சுட்டி அன்றே 'மாதாவைப் பேணுதல் அழகிது' என்னுமாறு போன்று, 'பகவானை அடைதல் எளிது' என்று உபதேசிக்கிறார்? இத்திருவாய்மொழியைக் கற்க வல்லார்கள் உபதேசம் இல்லாமலே சம்சார சம்பந்தம் அற்றுப் பகவானுடைய அனுபவமே யாத்திரை யாம்படி இருக்கிறவர்களோடே கூடி அனுபவிக்கப்பெறுவர்கள் ஆதலின், 'ஓதவல்லார்' பிறவார்' என்கிறார்.

முதற்பாட்டில், 'இறைவனைப் பற்றுகின்றவர்கட்குப் பொருள் நியதி இன்று,' என்றார்; இரண்டாம் பாட்டில், 'அதிகாரி நியதி இல்லை,' என்றார்; மூன்றாம் பாட்டில் தம்முடைய முக்கரணங்களும் பகவானிடத்தில் அன்பு கொண்டபடியை அருளிச்செய்தார்; நான்காம் பாட்டில், 'நித்தியசூரிகளைப் போன்று அதுவே யாத்திரை ஆயிற்று,' என்றார்; ஐந்தாம் பாட்டில், 'தன்னையே பலமாகப் பற்றினார்க்கு அவன் எல்லை இல்லாத இனியன்,' என்றார்; ஆறாம் பாட்டில், 'இப்படி இனியன் ஆனவனை விட்டு வேறு பலத்தைக் கொண்டு அகலுவதே!' என்று தேவர்களை நிந்தித்தார்; ஏழாம் பாட்டில், 'இறைவனையே பலமாகப் பற்றினார்க்குக் காலத்தைப் போக்குதல் இன்ன வகை' என்றார்; எட்டாம் பாட்டில், 'இறைவனைப் பற்றுதற்குத் தடையாக உள்ளனவற்றையும் அவன் தானே போக்குவான்,' என்றார்; ஒன்பதாம் பாட்டில், 'இது கூடுமோ!' என்று ஐயம் உண்டாக, 'வெறும் அவன் படியையோ பார்ப்பது? அருகு இருப்பார் படியையும் பார்க்க வேண்டாவோ?' என்றார்; பத்தாம் பாட்டில், 'இவர்கள் விரோதிகளைப் போக்குவது எத்துணைக் காலத்தில்?' என்ன, 'கணநேரத்திலே' என்றார்; முடிவில், 'இத் திருவாய்மொழியைக் கற்கவே பிறக்க வேண்டா,' என்றார். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*பரிவதில்ஈ சன்படியைப் பண்புடனே பேசி,*
*'அரியன்அலன் ஆரா தனைக்'கென்—றுரிமையுடன்*
*ஓதியருள் மாறன் ஒழிவித்தான் இவ்வுலகில்*
*பேதையர்கள் தங்கள் பிறப்பு.* (6)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

# ஏழாந்திருவாய்மொழி
# 'பிறவித்துயரற'

## முன்னுரை

மேல் திருவாய்மொழியில் 'எளிய முறையில் ஆராதிக்கத் தக்கவன் இறைவன்,' என்றார்; 'அவ்வாராதனையானது இன்ப மயமாய் இருக்கும்,' என்கிறார் இத்திருவாய்மொழியில். [1] திருமகள் கேள்வனாய், எல்லா நற்குணங்கட்கும் கொள்கலனாய், எல்லா ஆத்துமாக்களுக்கும் சேஷியாய், எல்லை இல்லாத ஆனந்தத்தை யுடையவனாய [2] 'மேற்கூறிய இறைவன் தன்னைக் கிட்டினாரையுந் தான் சந்தோஷிப்பிக்கிறான்,' என்கிறபடியே, தன்னைக் கிட்டினாரையும் ஆனந்திப்பிக்கக் கடவனாய் இருப்பவன் இறைவன் ஆதலின், அவனுடைய ஆராதனையானது இன்ப மயமாக இருக்கும் என்கிறார். 'நன்று; இறைவனிடத்தில் அனுபவிக்கும் அனுபவம் அன்றோ இன்ப மயமாய் இருக்கும்? அவனை ஆராதிக்கும் ஆராதனையும் இன்ப மயமாய் இருக்குமோ?' எனின், மோட்சதசையில் அனுபவம் இனிது ஆகிறதும் அவனைப் பற்றி வருகையாலேயன்றோ? அப்படியே, ஆராதனையும் அவனைப்பற்றி வருகையாலே போக ரூபமாய் இருக்கும். இதனால், [3] இறைவனுடைய ஆராதனையானது இதற்கு இட்டுப் பிறவாத சர்வேஸ்வரனும் ஆசைப்படும்படி போக ரூபமாய் இருப்பது ஒன்று என்று தெரிவித்தபடி.

[4] 'பகைவர்களை அழிக்கின்ற அருச்சுனா, வழிபட்டு வணங்குதலாகிய இந்தத் தர்மத்தில் அன்புடன் கூடின முயற்சி இல்லாதவர்கள் செய்த குற்றங்கள் அத்தனையும் பொறுத்து அவர்களை நல்வழியிற்

---

1. இத்திருவாய்மொழியில் வருகின்ற 'பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை முழு முதலான்' என்றதனை நோக்கித் 'திருமகள் கேள்வனாய்' என்கிறார். 'நிகரில் அவன் புகழ்' என்றதனை நோக்கி, 'எல்லா நற்குணங்கட்கும் கொள்கலனாய்' என்கிறார். 'உய்யக்கொள்கின்ற நாதன்' என்றதனை நோக்கி, 'எல்லா ஆத்துமாக்களுக்கும் சேஷியாய்' என்கிறார். 'எவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து' என்றதனை நோக்கி, 'எல்லை இல்லாத ஆனந்தத்தை உடையனாய்' என்கிறார்.

2. ஆனந்தவல்லி, 7.

3. 'இறைவனுடைய ஆராதனையானது' என்று தொடங்கும் வாக்கியத்தால், ஆராதனை செய்வதால் உண்டாகும் இன்பத்தினது முடிவின் எல்லையைக் காட்டுகின்றார்.

4. ஸ்ரீ கீதை. 9 : 3. 'பகைவர்களை' என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகமும், 'இந்த ஞானமானது' என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகமும், இறைவனுடைய ஆராதனையானது அவனாலும் விரும்பப் படும் தகையது என்பதற்குக் காட்டப்படும் மேற்கோள்கள்.

செலுத்துகின்ற என்னையடையாது, அழிவினை உண்டு பண்ணுகிற சம்சாரத்தை விரும்பி அவ்வழியே போகின்றார்கள்,' என்றும், [1] ' இந்த ஞானமானது எல்லா வித்தைகளுக்குள்ளும் உயர்ந்தது ; இரகஸ்யங்களுக்கு எல்லாம் தலையாயது ; உத்தமமானது ; பரிசுத்தமானது ; நேராக என்னைக் காட்ட வல்லது ; மோட்சத்திற்குச் சாதனமானது ; செய்வதற்கு இனிமையாய் இருப்பது ; என்றும் அழிவற்றது,' என்றும் பகவான் தானும் அருளிச்செய்தான். ஆக, இப்படி வழிபடுதலே தொடங்கி,மோட்சத்தை அடைதல் ஈறாக, அவன் சம்பந்தமான காரியங்கள் அனைத்தும் இன்பமயமாகவே இருக்கவும், அவனை விட்டு மிகச்சிறிய பயனைக்கொண்டு அகலுவதே!' என்று [2] கேவலரை நிந்தித்துக்கொண்டு, இதனை ஒழியில் [3] தாம் உளர் ஆகாதபடி தமக்கு இனிதாய் இருக்கையாலே இவ்வழிபாட்டின் இனிமையைச் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

## 67

பிறவித் துயர்அற ஞானத்துள் நின்று
துறவிச் சுடர்விளக் கம்தலைப் பெய்வார்
அறவனை ஆழிப் படைஅந் தணனை
மறவியை இன்றி மனத்துவைப் பாரே.

**பொ - ரை :** ' பிறப்பால் வருந்துன்பம் நீங்கும்படி, சாத்திரங்களால் உண்டாகும் ஞான நெறியில் நின்று, இவ்வுடலை விட்டு நீங்கி, ஞானத்தையுடையதாய்த் தனக்குத்தானே விளங்குவதாயுள்ள ஆத்துமாவின் நிலையை அடைய வேண்டும் என்று இருப்பவர்கள், தருமத்தின் உருவானவனும் சக்கரப்படையினைக் தரித்த அழகிய தண்ணளியையுடையவனுமான இறைவனைத் தாங்கள் நினைத்த பயனை மறத்தல் இன்றியே அப்பயனை அடைவதற்கு மனத்தில் வைத்துத் தியானிக்கின்றார்களே ! இஃது என்னே !' என்கிறார்.

**வி - கு :** ' அற நின்று தலைப்பெய்வார் வைப்பாரே,' என முடிக்க. தலைப்பெய்வார் - பெயர். சுடர்விளக்கம் - உயிர். ' ஒண்பொருள் '

---

1. ஸ்ரீ கீதை, 92.

2. 'கேவலரை நிந்தித்துக்கொண்டு' என்றது, இத்திருவாய்மொழியில் முதல் திருப்பாசுரத்தை நோக்கி.

3. 'என்னுள், இரான் எனில் பின்னை யான் ஒட்டுவேனோ?' என்றதனை நோக்கித் 'தாமுளராகாதபடி' என்கிறார்.

என்றார் மேலும். 'அற ஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால், பிற ஆழி நீந்தல் அரிது' என்ற திருக்குறளின் 'அற ஆழி அந்தணன்' என்ற சொற்றொடர்க்குப் பொருள் கூறுவார் போன்று '**அறவனை ஆழிப் படை அந்தணனை**' என்று அருளிச்செய்கிறார்.

இத்திருப்பதிகம், நாற்சீர் நாலடியான் வருதலின், **கலிவிருத்தம்** எனப்படும்.

ஈடு: முதற்பாட்டு. [1] 'இப்படி எல்லை இல்லாத இனியனை இறைவனை விட்டு, வேறு பயன்களைக்கொண்டு அகலுவதே!' என்று கேவலரை நிந்திக்கிறார்.

பிறவித்துயர் அற ஞானத்துள் நின்று - [2] இது, 'பிறப்பு இறப்பு இவற்றினின்று விடுபடும்பொருட்டு என்னை அடைந்து,' என்கிற படியே, இருக்கிற கேவலரைச் சொல்லுகிறது. 'ஆயின், கேவலன் தான் நினைத்த சிறிய பயனைப் பெறுதற்கு இறைவனை அடைதல் வேண்டுமோ?' எனின், [3] ஐஸ்வர்யார்த்திக்கும், ஆத்ம பிராப்தி காமனுக்கும், பகவத்பிராப்தி காமனுக்கும் இறைவனை வழிபடுதலும், உடலை விட்டு உயிர் நீங்குகிற காலத்தில் இறைவனை நினையும் நினைவும் வேண்டும். 'அங்ஙனம் ஆயின், பேற்றில் ஏற்றத் தாழ்வுகள் உண்டாகிறபடி என்னை?' எனின், வழிபடுகிற காலத்தில் சிறுக்கக் கோலுகையாலே; அதாவது, இறைவன் அளவும் செல்லாது நடுவே வரம்பு இட்டுக் கொள்கையாலே. இவ்வரம்பினையே, [4] 'வரம்பு ஒழி

---

1. 'ஆழிப்படையந்தணனை மனத்துவைப்பாரே' என்றதனை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'ஜரா மரண மோக்ஷாய' என்கிற கீதா சுலோகத்தின் பொருளை, இப்பாசுரத்தில் அருளிச்செய்கிறார் என்று திருவுள்ளம்பற்றி இப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார். 'எங்ஙனம்?' எனின், 'பிறவித்துயர அற' என்றது, 'ஜரா மரண மோக்ஷாய க்ருத்ஸ்ந மத்யாத்மம் கர்மசாகிலம்' என்றதன் பொருள். 'ஞானத்துள் நின்று துறவிச் சுடர் விளக்கம் தலைப்பெய்வார்' என்றது, 'தே ப்ரஹ்ம தத் விது:' என்றதன் பொருள். 'ஆழிப்படை அந்தணனை மனத்து வைப்பாரே' என்றது, 'மாமாஸ்ரித்ய' என்றதன் பொருள். (ஸ்ரீ கீதை. 7 : 29.) இப்படி, அந்தச் சுலோகத்தின் பொருளும், இப்பாசுரமும் ஒத்து இருக்கையாலே, அச்சுலோகத்தை எடுத்து மேற்கோள் காட்டி அவர்களைச் சொல்லுகிறது என்கிறார்.

3. ஐஸ்வர்யார்த்தி - செல்வத்தை விரும்புகின்றவன். ஆத்ம பிராப்தி காமன் - கேவலன். பகவத் பிராப்தி காமன் - இறைவன் திருவடிகளில் தொண்டு செய்ய விரும்பும் அடியவன்.

4. திருப்பல்லாண்டு, 4.

வந்து ஒல்லைக் கூடுமினோ' என்று **பட்டர் பிரானும்** அருளிச் செய்தார். 'அவ்வரம்பு இட்டுக்கொள்ளுகைக்குக் காரணம் என்னை?' எனின், அவர் அவர் முற்பிறவிகளிற்செய்து வைத்த நல்வினைகளின் ஏற்றத் தாழ்வுகளே காரணமாம். [1]' அருச்சுனா, நீங்கின செல்வத்தை மீண்டும் அடைய விரும்புகின்றவன், புதிய செல்வத்தை விரும்பு கின்றவன், கேவலன், இறைவனையே அடைய வேண்டும் என்று விரும்புகின்றவன் என்னும் இந்நால்வகைப்பட்ட நல்வினைகளையுடைய மக்கள் என்னை வணங்குகிறார்கள்' என்பது **இறைவன்** திருவாக்கு. ஆக, அவரவர்களுடைய நல்வினைகளுக்குத் தகுதியாகப் புருஷார்த் தங்களில் ருசி உண்டாகும்; ருசிக்குத் தகுதியாக வழிபாடு உண்டாகும்; வழிபாட்டிற்குத் தகுதியாகப் பலம் இருக்கும் என்று அறிதல் தகும்.

பிறவித் துயர் அற - 'இவனைப் பற்றி இப்பேற்றினைப் பெற்றுப் போவதே!' என்று இரங்குகிறார். 'பிறவி' என்னும் இதனால், பிறப்பு முதலாக உண்டாகும் மற்றை [2]ஐந்து விகாரங்களையும் நினைக்கிறார். ஆக - பிறப்பு முதுமை மரணம் முதலான எல்லாத் துன்பங்களும் போகும்படியாக. 'ஆயின், [3]'இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை' என்று இவர் தாமும் அவற்றை நீக்கிக்கொள்ளுதற்கு விரும்பி இருக்கவும், அவர்கள் செயலுக்கு இரங்குதல் பொருந்துமோ?' எனின், இவர்க்கு இப்பிறவியை நீக்கிக்கோடல் முக்கியம் அன்று; எம்பெருமானை அடைந்து அவனுக்குத் தொண்டு செய்தலே உத்தேசியம்; அச்செயலுக்கு இவ்வுடல் தடையாய் இருத்தலின், இதனை நீக்கிக்கொள்ள விரும்புகிறார்; அவர்கட்குப் பிறவி அறுதலே உத்தேசியம் ஆதலின், இரங்குகிறார். ஞானத்துள் நின்று - ஆன்ம ஞானத்தின் அளவிலே நின்று, இவ்வநுசந்தானம் இறைவன் அளவும் செல்லாநிற்கவும், அத்துணையும் செல்லாது, ஆன்ம ஞானத்திலேயே கால் ஊன்ற அடியிட்டு நிற்கின்றார்கள் ஆதலின், '**நின்று**' என்கிறார். துறவி-துறக்கை. சரீரத்தைத் துறத்தலாகிய காரியத்தைக் கூறியபடி. சுடர் விளக்கம் தலைப்பெய்வார் - இது, '**ஞானத்துள் நின்று**' என்றதன் பலமாய் இருக்கிறது. ஆத்துமா வானது ஞானத்தைக் குணமாகவும், தான் அறிபவனாகவும் இருத்தலின், '**சுடர் விளக்கம்**' என்கிறார். 'ஆயின், மோட்ச

---

1. *ஸ்ரீ கீதை,* 7 : 16. *இச்சுலோகத்தில் 'நல்வினைகளையுடைய மக்கள்' என்றதனால், நல்வினையின் தாரதம்மியம் சித்தம் என்று கொள்க.*

2. *உண்டாதல், பிறத்தல், வளர்தல், குறைதல், நசித்தல் என்பன.*

3. *திருவிருத்தம்,* 1.

தசையில் 'சுடர்விளக்கந் தலைப்பெய்வார்' என்கிறது என்? சம்சார தசையில் அதற்கு அச்சுடர் விளக்கம் இல்லையோ?' எனின், சம்சார தசையில் கர்மம் அடியாக வரக்கூடிய குறைவு உண்டு; மோட்ச தசையில் அது இன்று ஆதலின், மலர்ந்து தோன்றும்; அதனை நோக்கி அங்ஙனம் அருளிச்செய்கிறார் ஆக, 'பிறவியினது எல்லாத் துன்பங்களும் போகவேண்டும்' என்று ஆன்ம ஞானத்திலே ஊன்ற நின்று, பிரகிருதித் தொடர்பினின்று விடுபட்டதான ஆத்தும சொரூபத்தை அடைய வேண்டும் என்று இருப்பவர்கள் என்பது பொருளாம். பிறவித்துயர் அற ஞானத்துள் நிற்றல், காரணம்; துறவிச் சுடர் விளக்கம் தலைப்பெய்தல், காரியம்.

அறவனை - அவர்கள் படியையும், காரியம், பலன் கொடுக்கின்றவன் படியையும் பார்த்து, '**என்ன பரம உதாரனே!**' என்கிறார்; ஒருவன் விரும்புப் பயன் யாதாயினும், அதனைப் பெறுதற்குத் தன்னை விரும்பும் அத்தனையே அவன் வேண்டுகின்றான் என்றபடி. 'எங்களுக்கு நீ வேண்டா; சிறிய பயனே அமையும்,' என்று இருக்கிறவர்களுக்கும் அதனைக் கொடுத்துவிடுவதே! என்ன **தார்மிகனே!**' என்கிறார். ஆழிப்படை அத்தணனை - ஆத்தும அனுபவ விரோதியைப் போக்கைக்குக் கருவியான திருச்சக்கரத்தைக் கையிலேயுடையவன். அந்தணன் - பிராமணன். சாணிச்சாற்றைப் போன்று 'சுத்தன்' என்று கொண்டார்கள் இத்தனை; இனிமையில் நெஞ்சு சென்றது இல்லை. '**சுத்தி குணத்தோடு கூடினவன்**' என்று ஆயிற்று அவர்கள் நினைப்பது. 'கையுந்திருவாழியுமான அழகைக் கண்டால் அதிலே கால் தாழாதே, தங்கள் பிரயோஜனத்துக்கு உறுப்பான சுத்தி மாத்திரத்தையே பற்றுவதே!' என்கிறார். மறவியை இன்றி மனத்து வைப்பாரே - அவனுடைய இனிமையையுங் கண்டு வைத்து, தங்கள் புருஷார்த்தத்தை மறவாதே அதனைப் பெறுதற்கு அவனை அடைகின்றார்கள். 'மறவியை இன்றி' என்று, அவர்தம் செயலுக்கு இரங்கும் இவர் மறப்பரோ?' எனின், இவர்க்குக் கையுந்திருவாழியுமான அழகைக் கண்டால் முன் அடி தேரற்றது; [1]'**சக்கரத்து அண்ணலே**' என்றால் பின்னைத் தரைப்படும் இத்தனை அன்றோ இவர்?' திருமங்கை மன்னனும், [2]' ஆழியொடும், பொன்னார் சார்ங்கமுடைய அடிகளை

1. *திருவாய்.* 4. 7 : 10.
   *'தரைப்படுமித்தனையன்றோ' என்றது, மோஹித்துக் கீழே விழுவார் என்றபடி.*
2. *பெரிய திருமொழி.* 10. 10 : 9.

இன்னர் என்று அறியேன் !' என்று உத்தேசயமான பொருளையும் மறக்கும்படி கலங்குவர். 'பிள்ளாய், நல்லதை மறக்கப்பண்ணு நிற்க இவ்விஷயம், தீயதை மறவாது ஒழிவதே! அவனுடைய இனிமையை அநுசந்தித்து வைத்தும், பின்னையும் இந்நிலை குறையாதே நிற்பதே ! இவ்வரிய செயலைச் செய்கைக்குத் திண்ணியர் ஆவதே இவர்கள் !' என்று இரங்குகிருர்.

'பிறவித் துயர் அற ஞானத்துள் நின்று துறவிச் சுடர் விளக்கந் தலைப்பெய்வார், மறவியை இன்றி, அறவனை ஆழிப்படை அந்தணனை மனத்து வைப்பாரே,' என்று சொற்களைக் கூட்டி முடிக்க.

இனி, இத்திருப்பாசுரத்திற்கு [1] உபாசக பரமாகவும் பொருள் அருளிச்செய்வர். அப்பொழுது 'சுடர் விளக்கம்' என்பதற்கு, நற்குணங்கள் விளங்குவதற்குக் காரணமாய் இருக்கின்ற இறைவனுடைய திருமேனி என்று பொருள் கொள்க. சுடர் - குணங்கள். விளக்கம் - திருமேனி. (1)

68

வைப்பாம் மருந்தாம் அடியரை வல்வினைத்
துப்பாம் புலன்ஐந்தும் துஞ்சக் கொடான்அவன்
எப்பால் எவர்க்கும் நலத்தால் உயர்ந்துஉயர்ந்து
அப்பா லவன்எங்கள் ஆயர் கொழுந்தே.

**பொ - ரை :** எந்தப் பகுதிகளிலுள்ள எத்தன்மையான உயர்ச்சியினையுடையவர்கட்கும் ஆனந்தத்தால் மேன்மேல் உயர்ந்து அப்பாற்பட்டவனும், எங்கள் ஆயர் குலத்திற்குக் கொழுந்து போன்றவனும், கொடிய வினைகளைச் செய்யத் துண்டுகிற வலிமை பொருந்திய ஐந்து இந்திரியங்களாலும் அடியார்கள் வருந்தும்படி அவர்களை விடாதவனும் ஆன அவ்விறைவன், அடியார்கட்குச் சேமநிதியாவன் ; தன்னை அடைவதற்குத் தடையாக உள்ள வினைகளை நீக்கும் மருந்தும் ஆவன்.

**வி - கு :** 'அடியரை' என்பதனை முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் கொள்க. '**யாவர்க்கும்**' என்பதும் பாடம். 'எங்கள்' என்பதனைக் கொழுந்திற்கு அடைமொழியாக்கினும் அமையும்.

---

1. உபாசகர் - பத்திமான்கள். உபாசக பரமாக அருளிச்செய்யும் பொருள் : இவ்வுலகத்தில் உண்டாகிற எல்லாத் துன்பங்களும் போகும்படியாகப் பகவத் ஞானத்திலே நின்று பிரகிருதி சம்பந்தமற்று, குணப்பிரகாசகமான பகவத் விக்கிரகத்தை அனுபவிக்க வேண்டியிருப்பவர்கள், உபாசன தர்மத்திற்கு உரியவனுய், அஞ்ஞான இருளை நீக்குகின்ற திருவாழியினையுடையனுய், மிகத் தூயனுன சர்வேஸ்வரனைப் பிரிவு இன்றி நிரந்தர பாவநா முகத்தாலே நெஞ்சிலே வைப்பார் என்பதாம்.

ஈடு: இரண்டாம் பாட்டு. 'சர்வேஶ்வரனை அடைந்து சிறிய பயனைக் கொண்டு போவதே!' என்று கேவலனை நிந்தித்தார்; அவன்தன்னையே பற்றி இருக்குமவர்களுக்கு அவன் தான் இருக்கும் படியை அருளிச்செய்கிறார் இப்பாசுரத்தில்.

வைப்பாம் - ஆடு அறுத்துப் பலியிட்டுப் பணப்பையாக்கி, தான் விரும்பிய காலத்தில் நுகர்தற்குச் சேமித்து வைக்கும் சேமநிதி போன்று, ஒருவன் நினைத்த வகைகள் எல்லாம் அநுபவிக்கலாம்படி இறைவன் தானே தன்னை இஷ்ட விநியோகத்திற்குத் தகுதி ஆக்கி வைப்பவன் ஆதலின், '**வைப்பாம்**' என்கிறார். இதனால், [1] **பிராப்யத்வம்** கூறியபடி. மருந்தாம் - 'ஆயினும், சிறிய விஷயங்களையும் [2] உண்டு அறுக்க மாட்டாத இவ்வுயிர்கட்கு அன்றோ சர்வாதிகனை தன்னை விஷயம் ஆக்குகிறான்? இவன் அவ்விறைவனை அநுபவிக்கும்படி என்?' என்னில், அக்குறைகள் வாராதபடி அநுபவ விரோதிகளைப் போக்கித் தன்னை அநுபவிக்கைக்குத் தகுதியான சத்தியோகத்தையுங் கொடுத்துத் தன்னையும் கொடுக்குமவன் ஆதலின், '**மருந்தாம்**' என்கிறார். இதனால், [3] **பிராபகத்வம்** கூறியபடி. ஆக, '**வைப்பாம் மருந்தாம்**' என்னும் இவ்விரண்டாலும் பிராப்யத்துவமும் பிராபகத்துவமும் அருளிச்செய்தார் ஆவர். [4] 'இறைவன் தன்னைக் கொடுக்கிறான்; தன்னை அநுபவிப்பதற்குத் தக்க வலிமையையுங் கொடுக்கிறான்,' என்பது வேத மொழி. 'இப்படிச் செய்வது யார்க்கு?' என்னில், அடியரை - [5] 'வணங்கமாட்டேன்' என்னும் நிர்ப்பந்தம் தவிர்ந்தார்க்கு. இனி, [6] இதற்கு, 'அவனைப்பற்றி வேறு ஒரு பயனைக் கொண்டு அகலாமல், அவன்தன்னையே பற்றி அவன் [7] படிவிடப் பிழைக்கின்ற அடியார்கள்' என்று பொருள் கூறலுமாம். வல்வினை துப்பு ஆம் புலன் ஐந்தும் துஞ்சக் கொடான் - வலிய வினைகளிலே கொண்டுபோய் மூட்டுகைக்கு ஈடான வலிய இந்திரியங்கள் ஐந்தாலும் துஞ்சக்கொடான். இனி, புலன் ஐந்தும்

---

1. *பிராப்யத்துவம் - அடையத்தக்க பொருளின் தன்மை.*
2. *உண்டறுத்தல் - ஜீர்ணமாக்கிக்கோடல்.*
3. *பிராபகத்துவம்-(பகவானை அடைவதற்குரிய) வழியின் தன்மை.*
4. *வடமொழி மறை.*
5. *ஸ்ரீராமா. யுத்.*
6. *'அடியர்' என்பதற்குத் த்வேஷம் இன்மையையுடையவரென்றும், அநந்யப் பிரயோஜநர் என்றும் இருபொருள் அருளிச்செய்கிறார்.*
7. *'படி விட' என்பது சிலேடை; படி - திருமேனியும், ஜீவனமும்.*

துஞ்சக்கொடான் என்பதற்கு, ‘ஐந்து இந்திரியங்களிலும் புக்குத் துஞ்சக்கொடான்’ என்று பொருள் கூறலுமாம்.

‘அவன் என்கிறது யாரை? அவன்தான் இப்படிச் செய்ய எங்கே கண்டோம்?’ என்னில், அதனை விரித்து விளக்குகிறார் மேல்: எப்பால் எவர்க்கும் - எல்லா இடத்திலும் உண்டான எல்லார்க்கும். இட வேற்றுமையாலும் உடல் வேற்றுமையாலும் வரக்கூடிய சில உயர்வுகள் உள அன்றே? பூமியைப் போன்றது அன்றே சுவர்க்கம்; மனிதர்களைப் போல் அல்லரே தேவர்கள்; இவ்விரண்டும் அடங்க **‘எப்பால் எவர்க்கும்’** என்கிறார். ‘அப்பால், இப்பால்’ என்பன போன்று ‘பால்’ என்பது இடத்தைக் காட்டும். நலத்தால் உயர்ந்து உயர்ந்து அப்பாலவன் - ஆனந்தத்தாலே மேலே மேலே சென்று, பின்னையும் அது தன்னைச் சொல்லப் புக்கால் [1]‘எந்த ஆனந்த குணத்தினின்றும் மனத்தோடு வாக்குகள் திரும்புகின்றனவோ’ என்கிறபடியே மீள வேண்டும்படியான ஆனந்தத்தின் மிகுதியை யுடையவன், அதாவது, மனிதர்களுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகம் தேவர்களுடைய ஆனந்தம்; அவர்களுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகம் இந்திரனுடைய ஆனந்தம்; அவனுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகம் சிவனுடைய ஆனந்தம்; அவனுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகம் பிரமனுடைய ஆனந்தம் என்று இப்படி ஏற்றிக்கொண்டே சென்று கூறப்படுகின்றதாய், இதைக் காட்டிலும் மேம்பாடு இல்லாததாய் உள்ள ஆனந்தத்தையுடையவன் என்றபடி. **‘ஆனந்தமய’** என்பது வேதமொழி.

எங்கள் ஆயர் கொழுந்தே - ‘இப்படி அறப் பெரிய இறைவன் மற்றையாரோடு ஒத்த சாதியையுடையவனாய் வந்து அவதரித்தது, தன்னை அடைந்தவர்கள் ஐம்புல ஆசையினராய் முடியும்படி விட்டுக் கொடுக்கவோ? தான் சோக மோகங்களை அனுபவிக்கிறது, தன்னைப் பற்றினார் சோக மோகங்களை அனுபவிக்கைக்காகவோ? மேன்மைக்கு

1. *தைத்திரீய. ஆனந்த.* 1 : 9.

2. *‘எப்பால் எவர்க்கும் நலத்தால் உயர்ந்து உயர்ந்து அப்பாலவன் எங்கள் ஆயர் கொழுந்து,’ என்று கூட்டிக் கருத்து அருளிச்செய்கிறார், ‘இப்படி அறப்பெரிய இறைவன்’ என்று தொடங்கும் வாக்கியங்களால் இவ்வாக்கியங்கள் ‘அவன்தான் இப்படிச் செய்ய எங்கே கண்டோம்? என்னில்’ என்று மேலே அருளிச்செய்ததற்கு விடை. ‘நலத்தால் உயர்ந்து உயர்ந்து’ என்றதனையும், ‘எங்கள் கொழுந்து’ என்றதனையும் நோக்கி அருளிச்செயயும் பாவம் - ‘தான் சோக மோகங்களை அனுபவிக்கிறது’ என்று தொடங்கும் வாக்கியங்கள் இரண்டும்.*

எல்லையானவன் தாழ்வுக்கு எல்லையாயினது, இவர்களைக் கேட்டினை அனுபவிக்க விடவோ?' என்கிறார். கிருஷ்ணன் திருவவதரித்த ஊரில் உள்ளாரோடு தமக்கு ஒரு சரீர சம்பந்தத்தினை விரும்பி, '**எங்கள் ஆயர்**' என்கிறார். அன்றி, அவதாரந்தான் அடியார்களைக் காப்பதற்காகவே எடுக்கப்பட்டது ஆதலானும், வெண்ணெய் களவு கண்டு புசித்ததனால் நகரம் கலங்கிய செய்தி பழையதாக எழுதிக் கிடக்கவும், அதனைக் கூறிய அளவில் '**எத்திறம்**' என்று மோகித்தவர் இவரே ஆதலானும், எங்கள் கொழுந்து' என்கிறார் என்று கொண்டு, '**எங்கள்**' என்பதனைக் கொழுந்திற்கு அடைமொழி ஆக்கலுமாம். இனி, தான், பிரமன் முதலிய தேவர்கட்குத் தலைவனாக இருத்தலால் உளதாய பெருமையைப் போன்றே, ஆயர்தங்களுக்குத் தலைவனாய் இருத்தலால் உளதாய பெருமையையும் பெருமையாக நினைக்கிறான் என்பார், '**ஆயர் கொழுந்தே**' என்கிறார் எனலும் ஒன்று. ஆயர் கொழுந்து - ஆயர்கட்கு முதல்வன். (2)

## 69

***ஆயர் கொழுந்தாய் அவரால் புடைஉண்ணும்***
***மாயப் பிரானைஎன் மாணிக்கச் சோதியைத்***
***தூய அமுதைப் பருகிப் பருகிஎன்***
***மாயப் பிறவி மயர்வுஅறுத் தேனே.***

**பொ - ரை :** 'ஆயர்களுக்குக் கொழுந்து போன்றவனாய் அவர்களால் அடியுண்ட ஆச்சரியமான செயல்களையுடையவன்; எனக்கு மாணிக்கம் போன்ற ஒளி உருவானவன்; தூய்மையான அமுது போன்றவன் ஆன எம்பெருமானை நுகர்ந்து நுகர்ந்து, எனது ஆச்சரியமான பிறவி காரணமாக வருகின்ற அறிவு இன்மையைப் போக்கினேன்,' என்கிறார்.

**வி - கு :** ஆவினையுடையவர் - ஆயர்; ஆ - பசு. 'பருகி அறுத்தேன்,' என முடிக்க.

**ஈடு :** மூன்றாம் பாட்டு. வேறு பயனை விரும்புகிற கேவலரை நிந்தித்தார் முதற்பாசுரத்தில்; இரண்டாம் பாசுரத்தில், வேறு பயனைக் கருதாத அடியார்கள் திறத்தில் அவன் இருக்கும்படியை அருளிச் செய்தார். 'இவ்விருதிறத்தாரில் நீவிர் யாவிர்?' என்ன, 'நான் வேறு பயனைக் கருதுகின்றவன் அல்லேன்; வேறு பயனைக் கருதாதவனாய் அவனைப் பற்றினேன்,' என்று நேர்கொடு நேரே [1] சொல்லவும் மாட்டாரே; ஆதலால், 'அவனை அனுபவியாநிற்க,

1. 'சொல்லவும் மாட்டாரே' என்றது, சொன்னால் தற்புகழ்ச்சியாம் என்பது.

விரோதி தன்னடையே போய்க்கொண்டு நின்றவன் நான்,' என்கிறார் இப்பாசுரத்தில்.

ஆயர் கொழுந்தாய் - ஆயர்கட்குப் பிரதானனாய் இருக்கும் இருப்பை அருளிச்செய்தார் மேல்; இங்கு, அவர்களில் ஒருவனாய் இருக்கும்படியைச் சொல்லுகிறார். அதாவது, அவர்கள் வேராக, தான் கொழுந்தாய் இருக்குமவன் என்கிறார். இதனால், வேரிலே வெப்பம் தட்டினால் கொழுந்து முற்பட வாடுவது போன்று, காட்டிலே பசுக்களின் பின்னே திரிகின்ற ஆயர்கட்கு அடி கொதித்தால் ஸ்ரீ கிருஷ்ணன் முகம் முதற்கண் வாடும் என்பதனைத் தெரிவித்தபடி. அவரால் புடை உண்ணும் - 'திருவாய்ப்பாடியில் உள்ள ஐந்து லட்சம் குடிகளிலும் ஸ்ரீ கிருஷ்ணனை நியமிக்க உரியர் அல்லாதார் இலர்' என்பார், அவனால் அல்லது அவளால் என்று கூறாது, '**அவரால்**' எனப் பன்மை வாசகத்தால் அருளிச்செய்கிறார். 'மரத்தாலே ஓர் அடி அடிப்பார் போலேகாணும்' என்று **பட்டர்** அருளிச்செய்யும்படி. மாயப் பிரானை - எல்லா விருப்பமும் முற்றுப்பெற்ற சர்வேஸ்வரன், தனக்கு ஒரு குறை உண்டாய் வந்து அவதரித்து, அடியார்கள் தீண்டிய பொருளால் அல்லது தரியாதானாய், அதுதான் நேர்கொடு நேர் கிடையாமையாலே களவு காணப் புக்குத் தலைக்கட்டமாட்டாதே வாயது கையது ஆக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு நிற்கும் நிலையை நினைத்து '**மாயப்பிரானை**' என்கிறார்.

என் மாணிக்கச் சோதியை-அடியார்கள் கட்டி அடிக்க அடிக்க, களங்கம் அறக் கடையுண்ட மாணிக்கம் போன்று, திருமேனி புகர் பெற்று வருகிறபடி. 'ஆயின், அடி யுண்டால் புகர் பெறக் கூடுமோ?' எனின், [1]'கண்ணியார் குறுங்கயிற்றால் கட்ட வெட்டு என்று இருந்தான்' என்கிறபடியே, 'கட்டின அளவிற்கு [2]வெட்டு என்று இருக்குமவன், கட்டி அடிக்கப் புக்கால் புகர் பெறச் சொல்ல வேண்டுமோ?' என்க. அப்புகரைத் தனக்கு [3]முற்றூட்டு ஆக்கினான் ஆதலின், '**என் சோதியை**' என்கிறார். தூய அமுதைப் பருகிப் பருகி - தேவர்கள் அதிகாரிகளாய், பிரமசரியம் முதலிய நியமங்கள் வேண்டி, ஒவ்வொரு காலவிசேடங்களில் உண்ணக்கூடியதாய் இருக்கும் அவ்வமிர்தத்தைக்காட்டிலும், சர்வாதிகாரமுமாய், ஒரு நியதியும் வேண்டாமல் எப்பொழுதும் நுகரக்கூடியதாய் இருக்கும்

---

1. *பெரிய திருமொழி*, 5. 9 : 7.
2. *வெட்டென்றிருக்கை - உகந்திருக்கை.*
3. *முற்றூட்டு — பூர்ண அனுபவமுள்ளது.*

இவ்வமிர்தத்தின் வேறுபாட்டினைக் காட்டுவார், '**தூய அமுது**' என்கிறார். என் மாயப்பிறவி மயர்வு அறுத்தேன் - ஆச்சரியமான பிறவி காரணமாக வரும் அறிவின்மையை வாசனையோடே போக்கினேன். பிறவிக்கு ஆச்சரியமாவது, [1]ஒருபடிப்பட்டு இராமை. 'மயர்வை அறுத்தவன் இறைவனாக இருக்க, 'அறுத்தேன்' என்று தம் தொழிலாகக் கூறல் பொருந்துமோ?' எனின், [2]'இங்நின்ற நீர்மை இனி யாம் உறாமை' என்று விரும்பியவர் தாமேயாதலின், விரும்பியவாறே பல அனுபவம் தம்மது ஆகையாலே '**அறுத்தேன்**' எனத் தம் தொழிலாக அருளிச்செய்கிறார். (3)

70

***மயர்வுஅற என்மனத்தே மன்னினான் தன்னை***
***உயர்வினை யேதரும் ஒண்சுடர்க் கற்றையை***
***அயர்வுஇல் அமரர்கள் ஆதிக் கொழுந்தைஎன்***
***இசைவினை என்சொல்லி யான்விடு வேனோ?***

**பொ - ரை:** *அறிவின்மையானது அடியோடு நீங்க என் மனத்தின்கண் நிலைபெற்று இருக்கின்றவனை, உயர்ந்ததான ஞானம் பத்தி முதலாயவற்றையே தருகின்ற அழகிய ஒளியின் தொகுதியாய் இருப்பவனை, மறதி என்பது என்றும் இல்லாத நித்தியசூரிகளின் இருப்பு முதலானவைகட்குக் காரணனாய் முதன்மையானவனாய் இருப்பவனை, எனது இசைவே தானாக இருக்கின்றவனை என்ன காரணத்தைச் சொல்லி யான் விட்டு விலகுவேன்?*

**வி-கு:** *உயர்வினை - வினைத்தொகை. ஒரு சொல்லாகக் கோடலுமாம். ஒகாரம் - அசைநிலை.*

**ஈடு:** நான்காம் பாட்டு. [3]'இங்நின்ற நீர்மை இனி யாம் உறாமை' என்று அடியிலே நீர் விரும்பியவாறே இறைவன் திருவருள் செய்ய, 'மாயப் பிறவி மயர்வு அறுத்தேன்' என்று பிறவி அற்ற தன்மையினை நீரே கூறினீரே! இனி, இறைவனை விட்டுப் பிடித்தல் பொருத்தம் உடைத்து அன்றோ?' என்ன, 'நான் என்ன காரணத்தால் விடுவேன்?' என்கிறார்.

மயர்வு அற - அறிவின்மையானது வாசனையோடே போக. என் மனத்தே மன்னினான்தன்னை - இன்னமும் மயர்வு குடி கொள்ள

1. *'ஒருபடிப்பட்டிராமை' என்றது தேவர் முதலிய பற்பல சரீரங்களை மாறி மாறியடையும் தன்மையை.*

2. *திருவிருத்தம், 1.*

3. *'என் சொல்லி யான் விடுவேன்?' என்றதனை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

ஒண்ணுது என்று என்னுடைய மனத்திலே புகுந்து நிலையியற் பொருளைப் போன்று இருந்தவனை, செடி சீய்த்துக் குடி ஏற்றின படை வீடுகளை விடாதே இருக்கும் அரசர்களைப் போன்று, 'புறம் பேயும் சேரத் தக்க இடம் உண்டு' என்று தோற்ற இராமல் இருக்கின்றுன் ஆதலின், '**மனத்தே**' எனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்து ஓதுகின்றுர். 'இப்படி இருந்து செய்கிறது என்?' என்னில், உயர் வினையே தரும் - [1] ஞான விஸ்ரம்ப பத்திகளைத் தாராநின்றுன். இனி, இதற்கு, [2] 'இயமன் முதலானேர் தலைகளிலே அடியிடும்படியான சிறப்பைத் தாராநின்றுன்' எனலுமாம். தந்து சமைந்தானுய் இராது மேன்மேலும் தந்துகொண்டேயிருக்கின்றுன் ஆதலின், '**தந்து**' என்னுது '**தரும்**' என்கிறுர். 'ஆயின், பத்தியை மேன்மேலும் தருவானே?' என்னில், [3] 'காதல் கடல்புரைய', [4] 'காதல் கடலின் மிகப்பெரிதால்', [5] 'நீள்விசும்பும் கழியப் பெரிதால்', [6] 'சூழ்ந்ததனிற் பெரிய என் அவா' என்பன இவருடைய திருவாக்குகள். ஒண் சுடர்க்கற்றையை - இதனுல், எனக்கு உபகரித்தானுய் இருத்தல் அன்றியே, 'தான் உபகாரங்கொண்டான்' என்னுமிடம் வடிவில் புகரிலே தோற்ற 'இராநின்றுன்' என்கிறுர். இனி, இதனுல், தம்மை வசீகரித்த அழகை அருளிச்செய்கின்றுர் என்று கூறலுமாம். [7] 'வலிமை பெற்ற ஒளியின் தொகுதி போன்றவன்' என்பது ஸ்ரீ விஷ்ணு புராணம்.

'இப்படித் தன் பேருக உபகரித்தவன், தன் உபகாரங் கொள்வார் இல்லாதான் ஒருவனே?' என்னில், அயர்வு இல் அமரர்கள் ஆதிக்கொழுந்தை-இறைவனை நுகரும் நுகர்ச்சிக்கு மறதி என்பதனை எப்பொழுதும் இல்லாதவர்களாய், அந்நுகர்ச்சிக்குப்

---

1. '*ஞானமாவது, பிரவணத்திற்சொல்லுகிற சேஷத்துவ ஞானம். விஸ்ரம்பமாவது, நமஸ்ஸிலே சொல்லுகிற உபாய அத்யவசாயம். பத்தியாவது, நாராயண பதத்திற்சொல்லுகிற பிராப்பியத்தில் விரைவு,*' என்பர் *அரும்பதவுரைகாரர்.*

2. '*காவலில் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து*
   *நாவலிட்டு உழிதர் கின்றேம் நமன் தமர் தலைகள் மீதே*'

என்னும் *திருவாக்கு ஒப்பு நோக்குக.* (*திருமாலை.* 1.)

3. *திருவாய்.* 5. 3 : 4.
4. *திருவாய்.* 7. 3 : 6.
5. *திருவாய்.* 7. 3 : 8.
6. *திருவாய்.* 10. 10 : 10.
7. *ஸ்ரீ விஷ்ணு புரா.* 1. 9 : 68.

பிரிவு வருமோ என்ற ஐயமும் இல்லாதவர்களாய், தாங்கள் பலராய் இருக்கின்ற நித்தியசூரிகட்குத் தாரகம் முதலானவைகள் எல்லாம் தானேயாய் இருக்கின்றவன். இதனால், தான் அருளாத அன்று, தங்கள் ஆன்மாவைக்கொண்டு ஆற்றமாட்டாதாரை ஒரு நாடாக வுடையவன் என்கிறார். என் இசைவினை - 'நான் அல்லேன்' என்று அகலாதபடி [1] என் இசைவு தானாய்ப் புகுந்தவனை. என் சொல்லி யான் விடுவேன் - [2] 'சிறிது மயர்வு கிடந்தது' என்று விடவோ? 'மயர்வைப் போக்கித் தான் கடக்க இருந்தான்' என்று விடவோ? 'எனக்கு மேன்மேலென நன்மைகளைப் பண்ணித் தந்திலன்' என்று விடவோ? 'தான் செய்த உபகாரத்துக்குக் கைம்மாறு கொள்ள இருந்தான்' என்று விடவோ? 'வடிவழகு இல்லை' என்று விடவோ? 'மேன்மை போராது' என்று விடவோ? 'இப்பேற்றுக்கு முயற்சி செய்தேன் நான்' என்று விடவோ? எதனைச் சொல்லி நான் விடுவேன்?' என்கிறார். (4)

71

விடுவே னோஎன் விளக்கைஎன் ஆவியை
நடுவே வந்துஉய்யக் கொள்கின்ற நாதனைத்
தொடுவே செய்துஇள ஆய்ச்சியர் கண்ணினுள்
விடவே செய்து விழிக்கும் பிரானையே.

**பொ - ரை:** 'எனக்கு விளக்காய் இருக்கின்றவனை, எனது உயிரை, இடையிலே வந்து உய்யக்கொண்ட தலைவனை, ஆராய்ச்சி உண்டாக்கத் தக்க செயல்களைச் செய்து அதனைக் காண அங்கு வந்து சேர்ந்த இளம்பருவம் வாய்ந்த ஆயர் மகளிருடைய கண்களில் தூது விடுதலைச் செய்து, அதனால் கண்களோடு கண்கள் கலக்கும்படி பார்க்கின்ற உபகாரகனை நான் விடுவனோ?' என்கிறார்.

**வி - கு:** இப்பாசுரம், பூட்டுவிற்பொருள்கோள். தொடுவு-களவு. தொடுவே - ஏகாரம் பிரிநிலை. சிலர் தாமாகவே வந்து வெண்ணெயைக் கொடுக்கினும் கொள்ளாமையைப் பிரிக்கின்றது.

---

1. என் இசைவு தானாய்ப் புகுந்தவனை - என் இசைவுக்கு அந்தராத்துமாவாய் நின்று நியமித்துக்கொண்டிருக்கின்றவனை.

2. திருப்பதிகத்திலுள்ள 'மயர்வற', 'மன்னினான்', 'உயர்வினையே தரும்', 'ஒண்சுடர்க் கற்றையை', 'அமரர்கள் ஆதிக்கொழுந்தை', 'என் இசைவினை' என்ற தொடர் மொழிகளில் நோக்காக, இங்குச் 'சிறிது மயர்வு கிடந்தது என்று விடவோ?' என்பது முதலானவற்றை அருளிச்செய்கிறார். இவற்றை நிரலே கொள்க. அங்ஙனம் கொள்ளுமிடத்து, 'ஒண்சுடர்க் கற்றையை' என்பதற்கு அருளிச்செய்த இரண்டாவது பொருளை, 'வடிவழகு இல்லை என்று விடவோ?' என்பதற்குக் கொள்க.

ஈடு: ஐந்தாம் பாட்டு. 'திருவாய்ப்பாடியில் பெண்கள் கிருஷ்ணனை விட்டுப் பரமபதத்தை விரும்பும் அன்று அன்றோ நான் இறைவனை விட்டுப் புறம்பே போவேன்?' என்கிறார்.

என் விளக்கை - அறிவின்மையாகிற இருள் போகும்படி என்னிடத்து ஒரு விதக் காரணமும் இன்றி, தன்னுடைய சொரூபம் உருவம் குணம் உலகம் முதலான விபூதிகளை எனக்கு விளங்கச் செய்தவனை. விளக்காவது, தன்னையுங் காட்டிப் பொருள்களையுங் காட்டுவது ஒன்று அன்றோ? அது போன்று, இறைவனும் இவர்க்குத் தன்னையும் காட்டி, ஆத்தும சொரூபத்தையும் விரோதி சொரூபத்தையும் காட்டித் தந்தானாதலின், '**விளக்கு**' என்கிறார். 'என் விளக்கை என்பான் என்? அல்லாதார்க்கும் ஒவ்வாதோ?' என்னில், [1] இவரைப் போன்று மற்றையோர்க்குப் பத்தி இல்லையே? பத்தி உண்டாகில் அன்றோ இவ்விளக்குப் பிரகாசிப்பது? ஆதலால், '**என் விளக்கை**' என்கிறார். என் ஆவியை-தான் ஒருவன் உளன் என்னும் அறிவாதல், தன் பக்கல் பத்தியாதல் இன்றிக்கே, சரீரத்தின் வசப்பட்டவனாய் உரு மாய்ந்து போந்த என் ஆத்துமாவை. நடுவே வந்து-உலகத்துப் பொருள்களிலே ஆசையுள்ளவனாய்ப் போகாநிற்க நடுவே வந்து மீட்டான் இத்தனை; நிர்ஹேதுகமாக வந்தான் என்றபடி. உய்யக் கொள்கின்ற - [2] 'கடவுளை உள்ளபடி அறிதல் என்பது இல்லையானால் அவன் இல்லாதவன் ஆகிறான்,' என்கிறபடியே, இல்லாதவனுக்குச் சமானனான என்னை, [3] 'கடவுளை உள்ளபடி அறிதல் என்பது உண்டானால் அவன் உள்ளவன் ஆகிறான்' என்ற நிலையிலே ஆகும்படி செய்தான். உய்யக்கொண்டு விட்டிலன்; மேல் மேல் எனக் கொள்ளாநிற்கின்றான் ஆதலின், '**உய்யக் கொள்கின்ற**' என்கிறார்.

'என் ஆவி' என்று உம்மதாகச் சொன்னீர்; உம்முடைய ஆத்துமாவை அவன் வந்து உய்யக் கொள்ளக் காரணம் என்?' என்ன, நாதனை - 'யாருடைய பொருள் அழியப் புக்கது? 'நான்' என்று ஒருவன் உளனோ? உடையவன் ஆகையாலே செய்தான்' என்கிறார். 'நன்று; ஒருவர் பெறும் பேற்றுக்கு மற்று ஒருவர்

---

1. *அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
*இன்புஉருகு சிந்தை இடுதிரியா - நன்புஉருகி*
*ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு*
*ஞானத் தமிழ்புரிந்த நான்.*

*என்ற திருப்பாசுரம் இங்கு நினைத்தல் தகும்*

2, 3. *தைத்திரீய. ஆனந்.* 6.

முயல்வரோ ?' எனின், 'திருவாய்ப்பாடியில் பெண்களுடைய பேற்றுக்கு முயற்சி செய்தவர் யார் ?' என்கிருர். தொடுவே செய்து- ஆராய்ச்சிப்படும் செயல்களைச் செய்து. ஆராய்ச்சிப்படும் செயல்கள், கேள்வி பிறக்கும் செயல்கள் ; அவையாவன : ஓரிடத்திலே சென்று களவு கண்டு அகப்படுதல், 'கள்ளனைக் காண வேண்டும்' என்று இருப்பவர்கள் வருதல், இவனாலே புண்பட்டவர் அனைவரும் வருதல் முதலியன. இள ஆய்ச்சியர் கண்ணினுள் - பருவம் நிரம்பின ஆயர் பெண்கள் கண்களுக்குள்ளே. '**ஆய்ச்சியர்**' என்றதனால், ஆடவர் களையும், '**இள**' என்றதனால், பருவம் முதிர்ந்த பெண்களையும் விலக்கியவாறு. [1] இவர்களுக்கு ஒரு பயம் இல்லை, அருகே நின்றார்க்குத் தெரியாதபடி செய்தான் ஆதலின், '**கண்ணினுள்**' என்கிருர். விடவே செய்து விழிக்கும்-அவர்கள் தூது விடும்படியைச் செய்து விழிக்கின்ற. இனி, இதற்குத் [2] 'தூது செய் கண்கள்' என்கிறபடியே, 'தான் தூது விடுகையாகிற செயலைச் செய்து விழிக்கின்ற' என்று கூறலுமாம். இனி, [3] 'விடருடைய செயல்களைச் செய்து' என்று பொருள் கூறலும் ஒன்று. பிரானை - அந்நோக் கால் ஆயர் பெண்களைத் தனக்கே உரிமையாக்கிக்கொண்டது போன்று, என்னையும் தனக்கே உரிமை ஆக்கிக்கொண்டவனை விடுவேனோ ? (5)

72

*பிராஅன் பெருநிலம் கீண்டவன் பின்னும்*
*விராஅய் மலர்த்துழாய் வேய்ந்த முடியன்*
*மராமரம் எய்த மாயவன் என்னுள்*
*இரான்எனில் பின்னை யான்ஒட்டு வேனோ ?*

பொ - ரை : 'பிரளயவெள்ளத்திற்புக்கு உலகத்தைக் கோட்டாற் குத்தி எடுத்து வந்தவனும், உபகாரகனும், அதற்குமேல், மலர்கள் கலந்த திருத்துழாய் மாலையினை அணிந்த முடியையுடையவனும், மராமரங்கள் ஏழனையும் எய்த ஆச்சரியமான செயலையுடையவனும் ஆன எம்பெருமான் என் மனத்தில் 'இரேன்' என்பானாயின், அவன் என்னை விட்டுப் பிரிந்து செல்வதற்கு யான் உடன்படுவேனோ ?' என்கிருர்.

வி - கு : 'புருவத்துக் கருவல் கந்தத்தால், தாங்கி இவ்வுலகம் தந்து அடிப்படுத்ததை நடுவண், ஓங்கிய பலர்புகழ் குன்றினோடுஒக்கும்',

1. 'இவர்களுக்குப் பயமில்லை' என்றது, கிருஷ்ணனைப் பிரிந்ததால் உண்டாகும் பயமில்லை ; அதாவது, ஈடுபாடு இல்லை என்றபடி.

2. திருவாய். 9. 9 : 9.

3. விடர் - தீயொழுக்கமுடைய காமுகர்.

'முன் வெள்ளத்து அழுந்தின காலத்து வராகமாய்க் கருமையும் வன்மையுமுடைய கழுத்தால் தாங்கி இவ்வுலகத்தை அவ்வெள்ளத்தினின்றும் எடுத்துத் திருத்திய தொழில் மேருவின் தொழிலோடு ஒக்கும்' என்ற பரிபாடற்பகுதியும் அதனுரையும் ஈண்டு நினைத்தல் தகும். ஒட்டுதல்—சம்மதித்தல்; 'ஒட்டேன் அரசோடு ஒழிப்பேன் மதுரையும்' (சிலப். 21 : 37.) என்ற இடத்தும், ஒட்டுதல் என்பது இப்பொருள்படுதல் காண்க.

ஈடு: ஆறும் பாட்டு. 'இப்போது 'விடோம்' என்கிறீர் இத்தனை போக்கிப் [1]பின்னையும் நீர் அல்லீரோ? உம்முடைய வார்த்தையை நம்புதற்கு உளதோ?' என்ன, 'அவனாலே அங்கீகரிக்கப்பட்ட நான் அவனை விடுவேனோ?' என்றார் மேல் பாசுரத்தில்; 'உம்மை அவன் தான் விடில் செய்வது என்?' என்ன, 'தன் குணங்களாலும் செயல்களாலும் என்னைத் தோற்பித்து என்னோடே கலந்தவனை விட நான் உடன்படுவேனோ?' என்கிறார் இப்பாசுரத்தில்.

பிராஅன் - நிலா, தென்றல், சந்தனம் என்னுமிவை பிறர்க்கேயாக இருக்குமாறு போன்று, தன் படிகளை அடையப் பிறர்க்கு ஆக்கி வைக்குமவன். எல்லாப் பொருள்கள் விஷயமாகவும் அடியார்கள் விஷயமாகவும் செய்யும் உபகாரத்தை நினைத்துப் '**பிராஅன்**' என்கிறார். அதனை விரிக்கிறார் மேல்: பெருநிலம் கீண்டவன் - பிரளயம் கொண்ட பூமியை நீருக்கும் சேற்றுக்கும் இரையாத வடிவைக் கொண்டு எடுத்தது போன்று, சம்சாரப் பிரளயங் கொண்ட என்னை எடுத்தவன். இது எல்லாப் பொருள்கள் விஷயமாகவும் செய்த உபகாரம். பின்னும் விராய் மலர்த் துழாய் வேய்ந்த முடியன் - நெருங்கத் தொடையுண்டு வாசனை மிக்குள்ளதாய், செவ்வி பெற்று இருந்துள்ள திருத்துழாய் மாலையாலே சூழப்பட்ட திருமுடியையுடையவன். விரை - வாசனை. விராய் என்றது, நீட்டும் வழி நீட்டல் விகாரம். இனி, 'மலர் விராய்' என்பதற்கு, 'மலர்கள் கலந்த' என்று பொருள் கூறலுமாம். இதனால், ஒப்பனை அழகோடே பிரளயத்தில் மூழ்கினான் என்பதனைத் தெரிவித்தபடி.

மராமரம் எய்த மாயவன் - மஹாராஜர், வாலி மிடுக்கையும் பெருமாள் மென்மையையும் நினைத்து, 'நீர் வாலியைக் கொல்ல மாட்டீர்' என்ன, 'நான் வல்லேன்' என்று மழுவேந்திக் கொடுத்துக் காரியஞ்செய்யும் அன்புடையவன். இது அடியார் விஷயமாகச் செய்த

1. 'பின்னையும் நீரல்லீரோ' என்றது - 'வளவேழுலகு' என்னும் திருப்பதிகத்தை அருளிச்செய்த ஆழ்வீர் அல்லீரோ?' என்றபடி.

உபகாரம். என்னுள் இரான் எனில் - இப்படி அடியாரை ஏற்றுக் கொண்டு அவர்கள் பேற்றுக்குத் தான் தொழில் செய்யுமவன் என்னுள் இரான் எனில். 'எனில்' என்கையாலே, விடுதற்குக்காரணம் இல்லை என்றபடி. பின்னையான் ஒட்டுவேனோ - 'எவ்வகையிலும் இரேன்' என்னுமாகில், பின்னை, நான் அவன் போக்கை இசைவேனோ? 'நன்று; இறைவன் தனக்குத்தானே உரியவன் ஆதலின், போகானோ?' எனின், [1]'என்னுடைய கர்ம பாரதந்திரியம் போலே, அவனுடைய ஆஸ்ரிதபாரதந்திரியத்துக்கும் ஏதேனும் [2]கண்ணழிவு உண்டோ? ஆதலால், என்னுடைய இசைவு இன்றிக்கே இருக்க, அவனாலே போகப்போமோ?' என்பதாம். இனி, 'ஒட்டுவேனோ' என்பதற்கு, 'நான் தொங்குவேனோ' என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர். தொங்குகை - திரிதல். (6)

73

*யான்ஒட்டி என்னுள் இருத்துவன் என்றிலன்*
*தான்ஒட்டி வந்துஎன் தனிநெஞ்சை வஞ்சித்து*
*ஊன்ஒட்டி நின்றுஎன் உயிரிற் கலந்துஇயல்*
*வான்ஒட்டு மோஇனி என்னை நெகிழ்க்கவே?*

பொ - ரை: 'யான் உடன்பட்டு, இறைவனை என் மனத்தில் இருக்கச் செய்வேன் என்று செய்தேன் அல்லேன்; அவ்வாறு இருக்க, தானே சூளுறவு செய்து வந்து எனது ஒப்பற்ற மனத்தையும் தனது குணங்களாலும் செயல்களாலும் வசீகரித்து, பின் என் சரீரத்தில் பொருந்தி நின்று, நான் விலக்காது இருந்தமையைப் பார்த்த அளவில் என் உயிரிலே கலந்து இருத்தலையுடையவன் ஆனான்; அவ்விறைவன் இப்பொழுது நான் விலகிப்போவேன் என்றால் உடன்படுவானோ?'

வி - கு: 'வந்து வஞ்சித்து நின்று கலந்து இயல்வான்,' என முடிக்க. இயல்வான் - பெயர். 'நெகிழ்க்க ஒட்டுமோ' எனக் கூட்டுக.

ஈடு: ஏழாம் பாட்டு. [3]'முக்குணத்தின் வசப்பட்டவராய்ப் போந்தீர்; ஒரு சமயத்தில் 'அவனை விடேன்,' என்கிறீர்; உம்முடைய

---

1. 'நான் கர்மங்கட்குக் கட்டுப்பட்டு இருத்தலைப் போன்று, இறைவன் அடியார்கட்குக் கட்டுபட்டவன் ஆதலின், அடியவனாகிய என்னுடைய அனுமதி இன்றி என்னை நீங்கான்,' என்றபடி.

2. கண்ணழிவு-குறைவு.

3. 'ஒட்டுமோ இனி என்னை நெகிழ்க்கவே' என்ற பதங்களை நோக்கி வினா விடையாக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

வார்த்தையை நம்பப்போமோ?' என்ன, 'நான் அவனை விட்டாலும், அவன் தான் என்னை விடான்' என்கிறார்.

யான் ஒட்டி என்னுள் இருத்துவன் என்றிலன் - நான் இசைந்து 'என்னுடைய மனத்தில் இருத்துவேன்' என்றிலேன். 'இசைவு என்னால் வந்ததாகில் அன்றோ விடுகையும் என்னால் வந்ததாவது?' என்றபடி. தான் ஒட்டி வந்து [1]'இக்கடலை முடித்தல், அல்லது, இதனைக் கடத்தல் செய்யுமதற்கு மேற்பட இல்லை,' என்றது போன்று சூளுறவு செய்து வந்து புகுந்தான். 'ஆழ்வீர்! உம்முடைய பக்கல் இருப்போம்' என்றால், 'ஒட்டேன்' என்பரே? 'ஆகில் இங்கே இருக்கக் கடவோம்' என்று சூளுறவு செய்து வந்து புகுந்தான் ஆதலின், '**தான் ஒட்டி**' என்கிறார். என் தனி நெஞ்சை-இறைவனாலும் திருத்த ஒண்ணாதபடி தனக்குத்தானே உரியதாய், பிறர்க்கு உரியது அல்லாததாய் இருந்த நெஞ்சை. வஞ்சித்து - தன்னுடைய சீலம் முதலிய குணங்களாலும் வடிவழகாலும் தனக்கு உரியதாம்படி செய்து. 'பின்னைச் செய்தது என்?' என்னில், ஊன் ஒட்டி நின்று என் உயிரிற்கலந்து இதற்குச் 'சரீரத்தைப் பற்றி நிற்கிற என் உயிரிலே கலந்து என்கிறார்,' என்பாரும் உளர்; அவ்வாறு அன்றி, 'காதலி மாட்டு அழுக்கு உகப்பாரைப்போலே என்னுடைய சரீரத்தைப் பற்றி நின்று, பின்னர் என் பக்கல் விலக்காமை பெற்ற வாறே 'என் ஆத்துமாவோடே வந்து கலந்து' என்று **நஞ்சீயர்** அருளிச்செய்வர். [2]இயல்வான் - இப்படியைத் தன்மையாக உடையவன். அன்றி, 'இயல்வான்' என்பதற்கு, 'இப்படி எதிர்சூழல் புக்கு முயன்றவன்' என்று பொருள் கூறலுமாம். ஒட்டுமோ இனி என்னை நெகிழ்க்கவே - இப்படிக் காரணம் இல்லாமல் என்னை அங்கீகரித்தவன், நான் தன் பக்கல் நின்று நெகிழ்ந்து போவேன் என்றால் அவன் இசைவானோ? இனி, 'எனக்கு ஞானம் பிறத்தற்கு முயன்றவன், பிறந்த ஞானம் பயன் பெறும் அளவாகக் கொண்டு, நான் அகன்று போவேன் என்றால் உடன்படுவேனோ?' என்று கோடலுமாம். (7)

---

1. *ஸ்ரீராமா. யுத்.* 21 : 8.

2. *'இயல்வான்' என்பதற்கும், 'ஒட்டுமோ இனி என்னை நெகிழ்க்கவே' என்பதற்கும் அருளிச்செய்த இருவகைப் பொருள்களையும் நிரலே பொருத்திக்கொள்க.*

74

என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நல்நெஞ்சம்
தன்னை அகல்விக்கத் தானுங்கில் லான்இனிப்
பின்னை நெடும்பணைத் தோள்மகிழ் பீடுடை
முன்னை அமரர் முழுமுத லானே.

**பொ - ரை:** என்னைப் பிரித்தாலும் என்னுடைய குற்றம் அற்ற மனத்தினைப் பிரிப்பதற்குத் தானும் ஆற்றலுடையவன் அல்லன்; 'என்னை?' எனின், நப்பின்னைப் பிராட்டியாருடைய நீண்ட மூங்கில் போன்ற தோள்களை மகிழ்கின்ற பெருமை பொருந்திய முதன்மை பெற்ற - நித்தியசூரிகளுடைய எல்லாச் செயல்களுக்கும் காரணமாய் இருக்கின்ற - இறைவன் ஆதலால் என்க.

**வி - கு:** 'நெகிழ்க்கிலும்' என்ற உம்மை, இன்மை குறித்து நின்றது. 'கில்' என்பது முதனிலை. கிற்றல்-ஆற்றல் கொள்ளுதல். 'கிற்பன் கில்லேன்' (3. 2 : 6.) என்பர் மேலும். மகிழ்பீடு - வினைத் தொகை. 'பீடுடை முதலான' எனக் கூட்டுக.

**ஈடு:** எட்டாம் பாட்டு. [1]''நான் விடேன், அவன் விடான்' என்பன போன்று கூறுதல் எற்றிற்கு? இனி, அவன் தான் 'பிரிப்பன்' என்னிலும் அவனுடைய நற்குணங்களிலே அகப்பட்ட என் நெஞ்சை அவனாலும் பிரிக்கப் போகாது' என்கிறார்.

என்னை நெகிழ்க்கிலும் - மயர்வு அற மதிநலம் அருளப்பெற்ற என்னை அகற்றல் அரிது. இவ்வரிய செயலைச் செய்யிலும். என்னுடை நல்நெஞ்சம்தன்னை அகல்விக்க-[2] 'நெஞ்சே இயற்றுவாய் எம்மொடு நீ கூடி' என்றும், [3]'தொழுது எழு என் மனனே' என்றும் சொல்லலாம்படி அவன் பக்கலிலே உட்புகுந்த நெஞ்சந்தன்னை அகல்விக்க. தானும் கில்லான் சர்வ சக்தி என்ன, எல்லாம் செய்யப்போமோ? ஏன்? செய்து போந்திலனோ பல்நெடுங்காலம்?' என்ன, இனி-அவனும் இனி மேல் உள்ள காலம் மாட்டான். 'இனி' என்கிற 'உரப்பு எதனைப் பற்ற?' என்னில், அதற்குக் காரணம் அருளிச்செய்கிறார் மேல்: பின்னை நெடும்பணைத்தோள் மகிழ் பீடுடை முதலான்-நப்பின்னைப் பிராட்டியுடைய நெடிதாய்ச் சுற்றுடைத்தாய்ப்

1. 'என்னுடை நல் நெஞ்சந்தன்னை அகல்விக்கத் தானுங் கில்லான்,' என்றதனை நோக்கி, அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. பெரிய திருவந். 1.

3. திருவாய். 1. 1 : 1.

4. உரப்பு - உறுதி.

பசுமையையுடைத்தாயுள்ள மூங்கில் போன்று இருக்கின்ற தோளோடே அணைகையால் வந்த பெருமையையுடையவன். முன்னை அமரர் முழு முதலான் - [1] 'ஞானவான்களும் முன்னர்த் தோன்றியவர்களும் ஆதிமுதற்கொண்டே முதியராய் இருந்தும் புதியராய்த் தோன்றுகிறவர்களுமான நித்தியசூரிகள் எங்கு உள்ளார்களோ, அந்தப் பரமபதத்தில்' என்கிறபடியே, பழையராய் இருந்துள்ள நித்தியசூரிகளுடைய சொரூபம் ஸ்திதி முதலானவைகள் தன் அதீனமாம்படி இருக்கிறவன். ஆதலால், 'தானும் கில்லான்' என முடிக்க. எனவே, 'நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக நித்தியசூரிகள் ஓலக்கம் இருக்க அடிமை புக்கு அந்தப்புரப் பரிகரமான இவ்வாத்துமாவை அகற்றப் போகாது,' என்றபடியாம். இனி, [2] 'முதுமை நிறைந்த வானரங்களின் கூட்டத்தில் சூளுறவு செய்தான்' என்கிறபடியே, நித்தியசூரிகள் முன்னிலையில் சூளுறவு செய்தான்; நப்பின்னைப்பிராட்டி புருஷகாரம் அகற்றும்படி எங்ஙனே?' எனலுமாம். (8)

75

*அமரர் முழுமுதல் ஆகிய ஆதியை*
*அமரர்க்கு அமுதுஈந்த ஆயர் கொழுந்தை*
*அமர அழும்பத் துழாவிஎன் ஆவி*
*அமரத் தழுவிற்று இனிஅக லும்மோ?*

**பொ - ரை :** 'நித்தியசூரிகளுடைய செயல்களுக்கு எல்லாம் காரணனாய் இருக்கின்ற தலைவனை, தேவர்கட்கு அவர்கள் விரும்பிய அமுதத்தைக் கொடுத்த ஆயர்கட்குத் தலைவனை, என்னுடைய உயிரானது கிட்டிச் செறிந்து எங்கும் புக்கு அனுபவித்து ஒரே பொருள் என்று கூறலாம்படி கலந்தது; ஆதலால், இனிமேல், விட்டு விலகுமோ?' என்கிறார்.

**வி - கு :** 'துழாவி அமரத் தழுவிற்று,' என முடிக்க. முழு என்பது, முழுதும் என்ற பொருளில் வந்தது அதாவது, எல்லாச்செயல்களுக்கும் என்றபடி. 'முழுதுஎன் கிளவி எஞ்சாப் பொருட்டே,' என்பது தொல்காப்பியம். அகலும்மோ: ஓகாரம் எதிர்மறை.

**ஈடு :** ஒன்பதாம் பாட்டு. [3] 'தானும் கில்லான்' என்று கூறுதல்தான் எற்றிற்கு? ஒரே பொருள் என்னலாம்படியான இவ்வுயிரைப் பிரிக்கும்படி எங்ஙனே?' என்கிறார்.

---

1. யஜுர் வேதம்.
2. ஸ்ரீ ராமா. சுந். 5. 11 : 32.
3. 'அமரத் தழுவிற்று இனி அகலுமோ?' என்றதனை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

அமரர் முழு முதல் ஆகிய - நித்தியசூரிகளுடைய சொரூபம் ஸ்திதி முதலானவைகள் தன் அதீனமாம்படி இருக்கிறவனே. ஆதியை - [1] 'தன் பக்கலுள்ள பாவபந்தம் ஆத்துமாவை விட்டுப் பிரிக்க முடியாதது என்பதனை அறியாமல் இருக்கிறவர்கட்கும் தன்னை வழிபடுகைக்கு உறுப்பாகக் காரணங்களையும் உடல்களையும் கொடுக்குமவனே. 'ஆதியை' என்பது முதல் லீலா வீபூதியைப் பற்றியது. அமரர்க்கு அமுது ஈந்த - அவன் கொடுத்த கரணங்களைக்கொண்டு, 'எங்களுக்கு நீ வேண்டா; உப்புச்சாறு அமையும்,' என்பார்க்குக் கடலைக் கடைந்து அமிருதத்தைக் கொடுக்குமவனே. ஆயர் கொழுந்தை - 'அவ்வமிருதம் வேண்டா, நீ அமையும்,' என்பவர்கட்காக வந்து அவதரித்துத் தன்னைக்கொடுக்குமவனை. என் ஆவி அமர அழும்பத் துழாவி அமரத் தழுவிற்று-இப்படி [2] இரண்டு உலகங்களையுமுடையவனாய் இருக்கிறவனைக் கிட்டிச் செறிந்து எங்கும் புக்கு அனுபவித்து, எனது உயிரானது ஒரே பொருள் என்னலாம்படி கலந்தது. இனி அகலுமோ - இரண்டு பொருளாகில் அன்றோ பிரித்தல் இயலும்? 'ஆயின், சொரூபத்தால் ஐக்கியம் சொல்லுகிறாரோ?' என்னில், 'பிரகாரமும் பிரகாரியும் ஒரே பொருள் என்னும் புத்தி பிறந்தால் பிரிக்கப்போமோ?' என்கிறார்; 'ஆயின், சாதி குணங்களை அன்றோ பிரித்தல் இயலாது? உயிர் உடல்கள் ஆகிற இரு பொருள்களைப் பிரித்தல் இயலாது என்றல் பொருந்துமோ?' எனின், 'சாதி குணங்களைப் போன்று [3] பொருளுக்கும் நித்ய தத் ஆஸ்ரயத்வம் உண்டாகில் பிரிக்கப்போமோ?' என்றபடி. (9)

---

1. ''அமரர்க்கு முழுமுதல்' என்றவர், 'லீலா விபூதிக்கு ஆதியை' என்னக் காரணம் யாது?' எனின், 'தன் பக்கலுள்ள பாவபந்தம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதாவது, இவ்வுலகில் உள்ளார்க்கும் நித்தியசூரிகளைப் போன்று சம்பந்தம் உண்டாயிருக்கவும், இவர்கட்கு இச்சை இல்லாமையாலே, யோக்கியதையைப் பண்ணிக்கொடுக்குமளவே செய்கிறான் ஆதலின், 'ஆதியை' என்கிறார் என்றபடி. 'தன்' என்றது, ஈஸ்வரனை.

2. இத்திருப்பாசுரத்தில் 'அமரர் முழுமுதல்' என்றதனால் நித்திய விபூதியையும், 'ஆதியை' என்றது முதலியவற்றால் லீலா விபூதியையும் கூறினார் ஆதலின், ஈண்டு 'இரண்டு உலகங்களையும்' என்கிறார்.

3. 'நித்திய தத்ஆஸ்ரயத்வம் உண்டாகில்' என்றது, 'நித்திய தத்ஆஸ்ரயத்வ புத்தி பிறந்தால்' என்றபடி. நித்ய தத் ஆஸ்ரயத்வம்- எப்பொழுதும் ஒரு பொருளை மற்றொரு பொருள் சேர்ந்தே இருத்தல். ஈண்டு, விளக்கு, விளக்கின் ஒளி என்னும் இரண்டும், இரண்டு பொருள்களாய் இருப்பினும், 'ஒன்றனை விட்டு ஒன்றைப் பிரிக்க முடியாமல் இருப்பதனை நினைவு கூர்க.

76

அகலில் அகலும் அணுகில் அணுகும்
புகலும் அரியன் பொருஅல்லன் எம்மான்
நிகரில் அவன்புகழ் பாடி இளைப்பிலம்
பகலும் இரவும் படிந்து குடைந்தே.

பொ - ரை : உயிர்கள் அகன்று போக நினைப்பின், தானும் அகன்றே நிற்பன்; தன்னைச் சாரின், தானும் சார்ந்தே நிற்பன்; பகைவர்கள் கிட்டுதற்கும் அரியன்; அடியார்கள் தன்னைச் சார்கின்ற காலத்து ஒரு விதத் தடையும் இல்லாதவன்: இத்தன்மைகளால் எனக்குத் தலைவனாய் ஒப்பு இல்லாதவனாய் இருக்கின்ற இறைவனுடைய புகழ்களில், பகலும் இரவும் படிந்து குடைந்து, அவற்றைப் பாடிக் கொண்டு, பிரிவு இன்றியே இருப்போம்.

வி - கு: புகல் - விருப்பம்; அது, இங்கு விருப்பத்தாலாகும் கிட்டு தலுக்கு ஆயிற்று. இளைப்பு - தளர்ச்சி; அது, இங்குத் தளர்ச்சியால் உண்டாகும் பிரிவிற்கு ஆயிற்று, படிதல் கிட்டுதல். 'படிந்து, குடைந்து, பாடி, இளைப்பிலம்' எனக் கூட்டுக. இளைப்பிலம் - தனித் தன்மைப் பன்மை. இறைவனுடைய புகழினை '**நிகரில் புகழ்**' என்கிறார்; '**தாவாஃ விழுப்புகழ் மாயோன்**' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்; '**பொருள் சேர்புகழ்**' என்றார் திருவள்ளுவனார்.

ஈடு: பத்தாம் பாட்டு. [1] 'என்னோடு கலந்த எம்பெருமானுடைய நற்குணங்களைக் காலம் என்னும் ஒரு பொருள் உள்ள வரையிலும் அனுபவித்தாலும் மனம் நிறைவு பெற்றவன் ஆகின்றிலேன்,' என்கிறார்.

அகலில் அகலும் - [2] 'விபீஷணனே ஆயினும், அன்றி, இராவணன்தானே ஆயினும், இவனை அழைத்துக்கொண்டு வா,' என்கிற ஆசை உள்ளே கிடக்கவும் கண்ண நீரோடே கைவாங்கும். அதாவது, [3] 'நான் இரண்டு துண்டுகளாக வெட்டுப்படக்கடவேன்; அப்பொழுதும் வணங்க மாட்டேன்,' என்னும் உறுதியோடே நிற்கில், முடித்துவிடுவான் என்பதாம். அணுகில் அணுகும் - தன் பக்கலில் எதிர் முகம் ஆனால், [4] 'இராக்கதர்களுடைய பலாபலத்தை உள்ளவாறு எனக்குச் சொல்லுவாய்,' என்பான். அதாவது, இளையபெருமாள் நிற்க, நால் அடி வர நின்றவனான விபீஷணனை அன்றோ

1. 'அவன் புகழ் படிந்து குடைந்து பாடி இளைப்பிலம்' என்றதனை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ஸ்ரீராமா. யுத். 18 : 34.

3. ஸ்ரீராமா. யுத். 36 : 11.

4. ஸ்ரீராமா. யுத். 19 : 6.

'இராம காரியம் செய்யும்படி சொல்லீர்,' என்ருன்; என்றது, விபீஷணனை அரக்கர் குலத்தானுக நினைத்தல் இன்றி, இக்ஷுவாகு குலத்தவனுகவே நினைத்து, 'அரக்கர்களுடைய பலாபலம் சொல்லீர்' என்ருன் என்றபடி. இத்திருவாய்மொழியில் முதல் பாசுரம் 'அகலில் அகலும்' என்கிற இடம் சொல்லிற்று; இரண்டாம் பாசுரம் 'அணுகில் அணுகும்' என்கிற இடம் சொல்லிற்று. புகலும் அரியன் - உகவாதார்க்குக் கிட்ட அரியனுய் இருப்பன். அருச்சுனனும் துரியோதனனும் கூட வரச்செய்தே, அருச்சுனனுக்குத் தன்னைக் கொடுத்து, துரியோதனனுக்குப் பங்களத்தைக் கொடுத்துவிட்டான் அன்றே?

பொரு அல்லன் - அடியார்கள் தன்னைக் கிட்டுமிடத்தில் தடையுடையன் அல்லன். பொரு என்று ஒப்பாய், ஒப்பாவது நேர்நிற்குமதாய், அத்தால் தடையைச் சொல்லிற்ருய், தடையையுடையன் அல்லன் என்றபடி. [1]'கிருஷ்ணனும் அருச்சுனனும் திரௌபதியும் அழகுள்ள சத்தியபாமையும் எந்த இடத்தில் இருக்கிருர்களோ, அந்த இடத்தில்' புத்திரர்களும் புக ஒண்ணுத சமயத்திலே அன்றே சஞ்சயனை அழைத்துக் காட்சி அளித்தது? அம்மான் - இந்தத் தன்மைகளைக் காட்டி என்னைத் தனக்கே உரிமை ஆக்கினவன். நிகர் இல் அவன் புகழ் பாடி இளைப்பிலம் - அவனுடைய ஒப்பு இல்லாத நற்குணங்களைப்பாடி, ஒரு போதும் பிரிந்து தரித்து இரேன். 'ஆயின், எப்பொழுதும் இப்படி இருப்பீரோ?' என்ன, பகலும் இரவும் - எல்லாக்காலமும். 'ஆயின், விஷயத்தைக் குறைய அனுபவித்தோ?' எனின், படிந்து குடைந்து - எங்கும் கிட்டி விஷயத்தை அனுபவியாநிற்கச் செய்தே விட மாட்டுகிற்றிலேன். (10)

77

குடைந்துவண்டு உண்ணும் துழாய்முடி யானை
அடைந்த தென்குரு கூர்ச்சட கோபன்
மிடைந்த சொல்தொடை ஆயிரத்து இப்பத்து
உடைந்து நோய்களை ஓடுவிக் கும்மே.

பொ - ரை: வண்டுகள் உள்ளே சென்று தேனை உண்ணும்படியான திருத்துழாய் மாலையைத் தரித்த திருமுடியையுடையவனைப் பற்றுக்கோடாக அடைந்த அழகிய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபர், செறிந்த சொற்களால் தொடுத்த ஆயிரம் பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களும் நோய்களைத் தம் நிலை கெட்டு ஓடும்படி செய்யும்.

---

1. பாரதம், உத்தியோகபர். 49.

**வி - கு :** 'வண்டு குடைந்து உண்ணும் துழாய்' எனக் கூட்டுக. 'உடைந்து' என்னும் எச்சத்தை 'ஓடுவிக்கும்' என்பதன் முதனிலைத் தொழிலோடு முடிக்க. 'இப்பத்து ஓடுவிக்கும்,' என்க.

**ஈடு :** முடிவில், 'இத் திருவாய்மொழிதானே இதனைக் கற்றவர்களுடைய பலத்திற்குத் தடையாக உள்ளவற்றை வேரோடு அழித்து விடும்,' என்கிறார்.

குடைந்து வண்டு உண்ணும் துழாய் முடியானை - தேனைக்குடிப்பதற்கு இழிந்த வண்டுகளானவை பெருங்கடலிலே இழிந்தாரைப் போன்று உள்ளே உள்ளே இடங்கொண்டு குடித்தலை அன்றி, மது வற்றிக் கைவாங்க ஒண்ணாதபடி இருக்கிற திருத்துழாய் மாலையாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியையுடையவனை. அடைந்த தென் குருகூர்ச் சடகோபன் அம்மதுவிலே படிந்த வண்டுகள் விடமாட்டாதவாறு போன்று, பகவத்விஷயத்தை விடமாட்டாத ஆழ்வார் ஆயிற்று அருளிச்செய்தார். மிடைந்த சொல் தொடை ஆயிரத்து இப்பத்து உடைந்து நோய்களை ஓடுவிக்கும் - பகவத் அனுபவத்தால் உண்டான அன்பினால் பிறந்தவையாய் இருப்பினும் [1]சொற்கள் தாம் 'நாம் இங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தோம் ஆகவேண்டும்' என்று, 'என்னைக்கொள், என்னைக்கொள்' என்று மேல் விழுந்தன ஆதலின், '**மிடைந்த சொல்**' என்கிறார். ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தையும் கற்க வல்லவர்களுக்குச் செல்வமும் கைவல்யமும் உறுதிப்பொருள் என்கைக்கு அடியான [1]பாபங்கள் ஓடிப்போம். இவனை விட்டுப் போகும் போதும் திரளப் போகப் பெறுமல், [2]'வள்ளலே, உன் தமர்க்கு என்றும் நமன் தமர், கள்ளர்போல்' என்கிறபடியே, சிதறுண்டு தனித்தனியே ஓடச்செய்யும் என்பார், '**உடைந்து ஓடுவிக்கும்**' என்கிறார். இனி, இப்பாவங்கள் வேறு இடத்திற்சென்று சேரினும் (அதாவது, அசல் பிளந்து ஏறிடினும் என்றபடி) தத்தம் பயன்களைக் கொடுப்பதற்குத் தகுதியுடையன அல்லாதனவாகக் கெடும் என்பார், '**உடைந்து ஓடுவிக்கும்**' என்கின்றார் எனலுமாம்.

முதற்பாட்டில், கேவலரை நிந்தித்தார்; இரண்டாம் பாட்டில், வேறு பயனைக் கருதாத அடியார்களிடத்தில் அவன் இருக்கும்படியை

---

1. *'பாவங்களை ஓடுவிக்கும்' என்ன வேண்டியவர், காரண காரிய உபசாரத்தாலே 'நோய்களை ஓடுவிக்கும்' என்கிறார்.*

2. *பெரிய திருமொழி.* 8. 10 : 7.

அருளிச்செய்தார்; மூன்றும் பாட்டில், 'இவ்விரண்டு கோடியிலும் நீவிர் யாவிர்?' என்ன, 'உன்னை அனுபவியாநிற்க விரோதி கழிந் தவன் நான்,' என்றார்; நான்காம் பாட்டில், 'என்னை இவ்வளவாகப் புகுர நிறுத்தினவனை என்ன காரணத்தால் விடுவேன்?' என்றார்; ஐந்தாம் பாட்டில், 'திருவாய்ப்பாடியில் பெண்கள் கிருஷ்ணனை விடும் அன்று அன்றோ, நான் அவனை விடுவேன்?' என்றார்; ஆறும் பாட்டில், 'அவன் தான் விடிலோ?' என்ன, 'அவன் போக்கை இசையேன்,' என்றார்; ஏழாம் பாட்டில், 'நீர்தாம் விடிலோ?' என்ன, 'அவன் என்னைப்போக ஒட்டான்,' என்றார்; எட்டாம் பாட்டில், 'இந்நாள் வரை போக விட்டிலனோ?' என்ன, 'நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாகப் பற்றின என்னை இனி அவனாலும் விடப்போகாது,' என்றார்; ஒன்பதாம் பாட்டில், 'இவ்வார்த்தைகள்தாம் எற்றிற்கு? ஒரு நீராகக் கலந்ததை ஒருவராலும் பிரிக்க ஒண்ணாது,' என்றார்; பத்தாம் பாட்டில், 'அவனுடைய நற்குணங்களை எல்லாக்காலத்தும் அனுபவித்து வருத்தமுடையேன் அல்லேன்,' என்றார்; முடிவில், இத்திருவாய்மொழியைக் கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக் கட்டினார். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*'பிறவியற்று நீள்விசும்பில் பேரின்பம் உய்க்கும்*
*திறம்அளிக்கும் சீலத் திருமால்—அறஇனியன்*
*பற்றுமவர்க்கு,' என்று பகர்மாறன் பாதமே*
*உற்றதுணை என்றுஉளமே! ஓடு.* *(7)*

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

# எட்டாந்திருவாய்மொழி
# 'ஓடும் புள்'

## முன்னுரை

மேல் திருவாய்மொழியில் 'இறைவன் எல்லை இல்லாத இனியன்,' என்றார்; [1] அவனுடைய ஆர்ஜவ குணத்தைச் சொல்கிறார் இத்திருவாய்மொழியில். 'பத்துடை அடியவரில்' சௌலப்யமும், 'வளவேழ் உலகில்' சௌசீல்யமும் அருளிச்செய்தார்; இத்திருவாய்மொழியில் ஆர்ஜவகுணத்தை அருளிச்செய்கிறார்; 'இவற்றின் வேறுபாடு என்னை?' எனின், **சௌலப்யமாவது**, ஸ்ரீவைகுண்டத்தைக் கலவிருக்கையாகவுடையவன், அங்குநின்றும் சம்சாரிசேதனர் நின்ற இடத்தே வந்து அவதரித்து எளியனாகை. **சௌசீல்யமாவது**, இப்படித் தாழவிட்டால், 'சிறியார் அளவிலே நம்மைத் தாழவிட்டோமே!' என்று தன் திருவுள்ளத்திலும் இன்றிக்கே இருக்கை. **ஆர்ஜவமாவது**, இப்படிப் பொருந்தினால், நினைவும் சொல்லும் செயலும் ஒரு படிப்பட்டு இராமல், பல வகைப்பட்ட சேதநரோடு தான் [2] பரிமாறும் இடத்தில், அவர்கள் போன வழி தனக்கும் வழியாம்படி தான் அவர்களுக்குச் செவ்வியனாய்ப் பரிமாறுகை. '**சௌசீல்யம்**, **ஆர்ஜவம்**' என்னும் இரண்டும் ஒன்று போலக் காணப்படினும், வேறு வேறு என்பதே நம் பெரியோர்களுடைய திருவுள்ளம். **ஸ்ரீ ஆளவந்தார்** [3] '**குணவான்**' என்று சௌசீல்ய குணத்தை முன்னர் அருளிச்செய்து, பின்னர் '**ருஜு**' என்று ஆர்ஜவ குணத்தைப் பிரித்து வேறாக அருளிச்செய்தார்.

இத்திருவாய்மொழி [4] இறைவனுடைய பரத்துவத்தைக் கூறுகிறது என்பாரும், பரத்துவத்திற்கு உரிய இலக்கணங்களைக் கூறுகிறது என்பாரும், மேல் 'பாடி இளைப்பிலம்' என்றார், அப்படியே

---

1. *இத்திருவாய்மொழியில் வருகின்ற 'ஓடும் புள் ஏறி,' 'சூடும் தண்துழாய்', 'நீர் புரை வண்ணன்' என்ற திருப்பாசுரங்களை நோக்கி 'ஆர்ஜவ குணத்தைச் சொல்லுகிறார் இத்திருவாய்மொழியில்' என்கிறார்.*

2. *பரிமாறுதல் - கலத்தல்.*

3. *ஸ்தோத்திர ரத்தினம்,* 18.

4. *இத்திருவாய்மொழியில் வருகின்ற 'கண்ணுவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு' என்பது முதலான திருப்பாசுரங்களை நோக்கிப் 'பரத்துவத்தைக் கூறுகிறது' என்பர். 'ஓடும் புள் ஏறி', 'சங்கு சக்கரம் அங்கையிற் கொண்டான்' என்பன முதலான திருப்பாசுரங்களை நோக்கிப் 'பரத்துவத்திற்கு உரிய இலக்கணங்களைக் கூறுகிறது' என்பர். 'அம்மான் சீர், கற்பன் வைகலே' என்ற திருப்பாசுரத்தை நோக்கிப் 'பாடி அனுபவிக்கின்றார்' என்பர்.*

பாடி அனுபவிக்கின்றுர் என்பாரும் உளர். 'ஆயின்' [1] இறைவனுடைய ஆர்ஜவ குணத்தைச் சொல்லுகிறது என்பதுவே பட்டருடைய திருவுள்ளம். 'யாங்ஙனம்?' எனின், பத்தர் முத்தர் நித்தியர் என்னும் மூவகைச் சேதநரோடும் இறைவனுகிய தான் பரிமாறும் இடத்தில், அவர்களைத் தன் நினைவின் வண்ணம் வருமாறு செய்தல் இன்றி, நீர் ஏரு மேடுகளிலே விரகாலே நீர் ஏற்றுவாரைப் போன்று, தன்னை அவர்களுக்கு ஈடாக அமைத்துப் பரிமாறும் என்னும் அம் முறையிலே அவனுடைய ஆர்ஜவ குணத்தை அருளிச்செய்கிருர்.

78

ஓடும் புள்ஏறிச், சூடும் தண்துழாய்
நீடு நின்றுஅவை, ஆடும் அம்மானே.

**பொ - ரை:** *அம்மான், கருடப்பறவையின்மேல் ஏறி உலாவுதல் செய்வான்; குளிர்ந்த திருத்துழாய் மாலையினைச் சூடிக்கொள்வான்; அச்செயல்கள் எப்பொழுதும் நிற்க, அவற்றோடு கலந்து பழகுவான்.*

**வி - கு:** 'ஓடும், சூடும், ஆடும்' என்பன 'செய்யும்' என் முற்றுகள். நின்று - நிற்க. இது, செயவெனெச்சந்திரிபு. புள்ளும் துழாயும் உயர்திணையாய் இருப்பினும், சொல்லால் அஃறிணையாதலின், 'அவை' என அஃறிணைச்சொல்லால் அருளிச்செய்கிருர்.

இத்திருப்பதிகம், இருசீரடி நான்காய், ஒரு பொருள்மேல் மூன்று அடுக்காது தனித்து வந்த வஞ்சித்துறை.

**ஈடு:** முதற்பாட்டு. நித்திய விபூதியில் உள்ளாரோடு செவ்வியனுய்ப் பரிமாறும்படி சொல்லுகிருர் இப்பாசுரத்தில். 'ஆயின், அங்குள்ள அவர்களுக்குச் செவ்வைக்கேடு இல்லையே? அங்ஙனம் இருக்க, அங்கு ஆர்ஜவகுணம் எற்றிற்கு?' என்னில், அவர்கள் [2] பலராய் இருத்தலானும், அவர்கட்கும் ருசி பேதம் உண்டு ஆதலானும், அவர்கள் நினைவு அறிந்து பரிமாறுதற்கு அங்கும் ஆர்ஜவகுணம் வேண்டும்.

புள் ஏறி ஓடும்-பெரிய திருவடியை மேற்கொண்டு சஞ்சரியா நிற்பன். 'ஆயின், 'புள் ஏறி ஓடும்' என்றதில் ஆர்ஜவம் யாது?' என்னில், திருவடி 'இப்பொழுது அடியேன்மேல் எழுந்தருள வேண்டும்' என்று விரும்பிஞல், 'வேண்டா' என்னுது மேற்கொள்ளுகை

---

1. பட்டர் 'நீர் புரை வண்ணன்' என்பது முதலான திருப்பாசுரங்களைக் கடாக்ஷித்து, 'ஆர்ஜவ குணத்தைக் கூறுகிறது' என்று அருளிச் செய்வார்.

2. 59-ஆம் திருப்பாசுரத்தில், 'பிணங்கி அமரர் பிதற்றும், குணங்கெழு கொள்கையி ஞனே' என்ற அடிகட்கு அருளிச்செய்த வியாக்கியானத்தை ஈண்டு நினைவு கூர்க.

ஆர்ஜவமாம். 'ஆயின், தாங்குதல் வாகனத்துக்குத் துக்கத்தைத் தருவது அன்றோ?' என்னில், மனைவியை அணைதல் மனைவிக்கு இன்பினை அளித்தல் போன்று, தன்மேல் இறைவன் எழுந்தருளி இருத்தல் விருப்பமாய் இருக்கும் வாகனத்துக்கு. 'ஆயின், பெரிய திருவடியின்மேல் எழுந்தருளல் அங்கு உள்ளார்க்குக் காட்சி கொடுத்தற்காக அன்றோ?' எனின், பெரிய திருவடியை மேற்கொள்ளுமதுதான், அங்குள்ளார்க்குக் காட்சி கொடுக்கைக்கும், பெரிய திருவடியினுடைய சொரூப லாபத்துக்காகவும் இருக்கும். மற்றும், காமத்தில் இச்சையுடைய ஒரு பெண்ணிற்குப் [1]போக சின்னங்கள் தாரகமாய் இருத்தல் போன்று, திருவடிகள் உறுத்துகையால் வந்த தழும்பு இவனுக்குத் தாரகமாக இருக்கும். [2]'திருவடிகளால் நெருக்கி அழுத்தின தழும்பு தன்மேல் இருக்கக் கண்டு மகிழ்ந்து' என்றார் **ஸ்ரீ ஆளவந்தாரும்.**

சூடும் தண் துழாய்-திருத்துழாய் 'இப்போதே பறித்துத் திருக்குழலில் வளையமாக வையாது ஒழியில் செவ்வி அழிவேன்' என்னும் அளவில் அப்போதே பறித்துத் திருக்குழலிலே வைப்பன். 'ஆயின், துழாய்க்கு அறிவு உண்டோ?' எனின், [3]'மலர்மாலைகள், பீதாம்பரம், ஆபரணங்கள் முதலானவைகள் திருமாலினுடைய திருமேனிக்குத் தக்கவைகளாகவும், ஒப்பு அற்றவைகளாகவும், ஞானத்தோடு கூடினவைகளாகவும், வேறு ஒன்றன் துணையின்றித் தாமே பிரகாசிக்கின்றவைகளாகவும் இருக்கின்றன,' என்னும் **பௌஷ்கர சம்ஹிதை** இங்கு அறிதல் தகும். 'ஆயின், நித்ய சூரிகள் தாவரம் திரியக்குகளாய் இருப்பதற்குக் காரணம் என்னை?' எனின், ஒரு சிலர், துழாயாயும் புள்ளாயும் அங்குத்தைக்கு உறுப்பாக வசிக்கிறார்கள். 'அங்ஙனமாயின், தாவரம் முதலியவற்றிற்கு உரிய அறிவு இன்மை முதலிய தன்மைகள் இவற்றிற்கும் இருக்கவேண்டாவோ?' எனின், [4]அரசனுடைய சந்நிதியில் கூனர் குறளர்களாய்

---

1. *போக சின்னங்கள்-புணர்ச்சிக்காலத்துத் தனங்கள் முதலியவற்றில் உண்டாகும் வடுக்கள். 'இலங்குஒளி வயிரப் பைம்பூண் இளமுலை வடுக்கண்டு ஏங்கிப், பொலங்கொடி நாணி நேடும் பொய்த்துயில் கூர்ந்தாள் அன்றே' (நைடதம், மணம். 42.) என வருவது காண்க.*

2. *ஸ்தோத்திர ரத்நம், 41.*

3. *பௌஷ்கர சம்ஹிதை. இங்கு 'ஞானத்தோடு கூடினவைகளாயும்' என வருதல் ஓர்தல் தகும்.*

4. *'கூனும் குறளும் ஊமும் கூடிய, குறுந்தொழில் இளைஞர் செறிந்து சூழ்தர' (சிலப். வழக்.) என்னும் பகுதி ஈண்டு ஒப்பு நோக்கல் தகும்.*

வசிப்பது போன்று, விரோதியாய் உள்ள அறிவுத்தன்மையே கழியப் பெறுவர். அதாவது, அவ்வவ்விடங்கட்குத் தடையாயுள்ள அறிவு மட்டும் நீங்கப் பெறுவர் என்றபடி. ஆயின், தடையாகவுள்ள அறிவுகள் மட்டும் இருத்தல் கூடுவதாமோ?' எனின், கர்மம் காரணமாக வந்த சரீரங்கள் அல்லவே? இச்சையாலே மேற்கொண்டவைகள் ஆதலின், கூடுவதாம். 'ஆயின், இச்சையாலே, விரும்பிய சரீரங்களைக் கோடல் கூடுமோ?' எனின், இவ்வுலகத்தில் திரியக்குத் தாவரம் ஆமவை கர்மத்தாலேயாய் இருப்பனவாம்; பரமபதத்தில் மேற்கொண்ட சரீரங்கள், அவர்களுடைய இச்சைக்கு உரிமைப்பட்டவைகளாய் இருப்பனவாம்.

'நன்று; சம்சாரிகளுக்கு அன்றோ ருசி பேதமும் செவ்வைக்கேடும் உளவாம்? நித்தியசூரிகளுக்கு [1] விஷயம் ஒன்று ஆகையால் ருசி பேதமும் இல்லை, செவ்வைக்கேடும் இல்லையே? அவர்களுடன் செவ்வையனாய்ப் பரிமாறுகையாவது என்?' எனின், எல்லார்க்கும் விஷயம் ஒன்றேயாகிலும், அவ்விஷயந்தன்னில் [2] விருத்தி பேதத்தால் ருசி பேதம் உண்டாம். நீடு நின்று-கர்மத்தால் வந்தனவாயின் அழிவுறும்; சொரூபத்திற்குத் தக்கனவான பரிமாற்றங்கள் இவைதாம்; ஆகையாலே, நித்தியமாயிருக்குமாதலின் '**நீடு நின்று**' என்கிறார். இறைவன் இவர்களை ஒழியச் செல்லான்; இவர்கள் அவனை ஒழியச் செல்லார்கள் ஆதலின், '**நின்று**' என்கிறார். அவை-'புள்' என்றும், 'துழாய்' என்றும் சொல்லுகையாலே '**அவை**' என்ற அஃறிணைச்சொல்லால் அருளிச்செய்கிறார். ஆடும்-சர்வேஸ்வரனுக்கு அவர்களோடே அணைவது, விடாயர் மடுவிலே புக்கு ஆடியது போன்று இருக்கையாலே, அவற்றோடே 'பரிமாறும்' என்னுது, '**அவை ஆடும்**' என்கிறார். அம்மானே-'நித்தியசூரிகளோடு நித்திய சம்சாரிகளோடு வேற்றுமை அற எல்லாரினும் அறப் பெரியவனாய் இருந்தும் இப்படிப் பரிமாறுகிறான்' என்பார், '**அம்மான்**' என்கிறார்.

அம்மானாய்ப் பின்னும், எம்மாண்பும் ஆனான்
வெம்மாவாய் கீண்ட, செம்மா கண்ணனே.

பொ-ரை: கொடிய குதிரையினது வாயினைப் பிளந்த, சிவந்த, பெருமை பொருந்திய கண்களையுடைய கண்ணபிரான் அறப் பெரிய

---

1. இறைவன் ஒருவனேயாதலின், 'விஷயம் ஒன்று' என்கிறார்.

2. விருத்தி-ஈண்டுக் கைங்கரியம்; அவர் அவர்கள் செய்கின்ற வெவ்வேறு வகைப்பட்ட கைங்கரியங்களால் ருசிபேதம் உண்டு என்பது கருத்து.

வனுய் இருந்தும், அதற்குமேல் எல்லா அவதாரங்களேயும் உடையவன் ஆனுன்.

வி - கு: மாண்பு - அழகு. அஃது ஈண்டு அவதாரங்களுக்கு ஆயிற்று. 'கூந்தல் என்னும் பெயரொடு கூந்தல், எரிசினங் கொன்ருேய்' (பரி. 3) 'மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை, வாய் பகுத் திட்டு' (கலித். 103) என்பன ஈண்டு ஒப்பு நோக்கல் தகும்.

ஈடு: இரண்டாம் பாட்டு. இப்பாட்டு, நித்திய விபூதியில் நின்றும் வந்து அவதரித்து விரோதிகளேப் போக்கிச் சம்சாரிகளுடன் செவ்வையனுய்ப் பரிமாறும்படி சொல்லுகிறது.

அம்மானுய் - இப்படி எல்லாரினும் அறப்பெரியவனுய் இருந்தும். வெம் மா வாய் கீண்ட - வெவ்விதான கேசியினுடைய வாயைக் கிழித்துப் போகட்ட. கேசி, வாயை அங்காந்துகொண்டு வந்து தோற்றின போது கண்ட ஸ்ரீ நாரதபகவான், 'உலகமே அழியப் போகின்றது !' என்று கூவிக்கொண்டு வந்து விழுந்தான் அன்றே? அந்நாரதபகவானுக்கு அக்காலத்திற்பிறந்த பயம், அவ்வசுரன் இறந்து போகவும் நினைத்த காலத்திலேயே அஞ்சுகிருர் இவர்; ஆதலின், 'வெம்மா' என்கிருர். செம் மா கண்ணன் - விரோதி போகையால் வந்த பிரீதியாலே சிவந்து மலர்ந்த திருக்கண்களேயுடைய கிருஷ்ணன் பின்னும் எம் மாண்பும் ஆனுன் - அவ்வவதாரத்தோடு முடிவு பெறுதல் இன்றிப் [1]'பல படியாகப் பிறக்கிறேன்' என்கிற படியே, அதற்குமேல் பல அவதாரங்களே எடுத்தான். பரத்து வத்திலும் [2]மனித உருவத்தால் வந்த பரத்துவத்தினது அழகை, ஈண்டு 'மாண்பு' என்கிருர். (2)

80

**கண்ணுவான் என்றும், மண்ணேர்விண் ணேர்க்குத்**
**தண்ணூர் வேங்கட, விண்ணேர் வெற்பனே.**

பொ - ரை: நித்தியசூரிகள் தங்கியிருக்கின்ற குளிர்ச்சி பொருந்திய திருவேங்கடமலேயில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன், எக்காலத்தும் மண்ணேர்க்கும் விண்ணேர்க்கும் கண் ஆவான்.

வி - கு: கண் - பற்றுக்கோடு. வெற்பன் - வெற்பையுடையவன் வெற்பன்; வெற்பு - மலே.

---

1. ஸ்ரீ கீதை, 3: 5.

2. அதிமானுஷ செயல்கள் முதலியவைகளால் வந்த பரத்துவம், சௌலப்யம் முதலிய குணங்களோடே கூடியிருக்கையாவே, பரத்து வத்திலும் இது விஞ்சியிருக்குமாதலின், 'பரத்துவத்திலும் மனித உருவத்தால் வந்த பரத்துவத்தினது அழகு' என்கிருர்.

ஈடு: மூன்றும் பாட்டு. [1] இரட்டைக் குழந்தைகளைப் பெற்ற தாயானவள் இருவர்க்கும் பால் கொடுக்கத் தகுதியாக நடுவே கிடக்குமாறு போன்று, நித்தியசூரிகளுக்கும் சம்சாரிகளுக்கும் ஒக்க முகங்கொடுக்கைக்காகத் திருமலையில் நிற்கின்ற நீர்மையை அருளிச் செய்கிறார்.

கண்ணவான் - [2] 'விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் கண்' என்கிற சுருதி அர்த்தத்தை அருளிச்செய்கிறார். கண்ணுமவன் என்றபடி. இனி, இதற்குக் 'காப்பாற்றுகின்றவன்' என்று பொருள் கூறலுமாம். மண்ணோர் விண்ணோர்க்கு என்றும் கண்ணவான் - இதனால், தங்கள் காரியம் தாங்கள் செய்துகொள்ள மாட்டாமைக்கு, நித்தியசூரிகளோடு சம்சாரிகளோடு வாசி இன்மையைத் தெரிவிக்கிறார். தண்ணார் வேங்கடம் - இறைவனுக்குக் காத்தற்கு உரிய பொருள்கள் கிடையாமையால் வரும் தாபத்தையும் ஆற்றி, இவ்வுயிர்கட்குப் பாதுகாப்பவனைப் பெறுமையால் வரும் தாபத்தையும் ஆற்றி இரு திறத்தார்க்கும் குளிர்ச்சியை உண்டாக்க வல்லது ஆதலின், '**தண்ணார் வேங்கடம்**' என்கிறார். [3] 'குளிர் அருவி வேங்கடம்' என்பர் **ஸ்ரீ ஆண்டாள்**. விண்ணோர் வெற்பன் - [4] 'வானவர் நாடு' என்னுமாறு '**விண்ணோர் வெற்பு**' என்கிறார். கானமும் வானரமுமான இவற்றிற்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிற நீர்மையை நினைத்து, 'இது என்ன நீர்மை!' என்று ஈடுபட்டு இருக்கையாலே அவர்களுடையதே திருமலை என்கிறார். இதனால்,

---

1. *இருவினையும் இடைவிடா வெவ்வினையும்*
*இயற்றுதே இமையோர் ஏத்தும்*
*திருவினையு மிடுபதந்தேர் சிறுமையையும்*
*முறைஒப்பத் தெளிந்து நோக்கிக்*
*கருவினையது இப்பிறவிக்கு என்றுணர்ந்தங்*
*கதுகளையும் கடையில் ஞானத்து*
*அருவினையின் பெரும்பகைஞர் ஆண்டுளர்ஈண்*
*டிருந்துமடி வணங்கற் பாலார்.*

*முனிவரும் மறைவ லோரு முந்தைநாட் சிந்தை பூண்ட*
*வினைவரு நெறியை மாற்றும் மெய்யுணா வோரும் விண்ணோர்*
*எனைவரும் அமரர் மாதர் யாவரும் சித்தர் என்போர்*
*அனைவரும் அருவி நன்னீர் நாளும்வந் தாடு கின்றார்.*

*என்ற கம்பராமாயணச் செய்யுள்கள் இத்திருப்பாசுரத்தின் பொருளோடு ஒப்பு நோக்கத் தக்கன.*

2. *யஜுர் வேதம்.* 4. 6 : 8.
3. *நாய்ச்சியார் திருமொழி*, 8 : 3.
4. *திருவாய்.* 3. 9 : 9.

இறைவன் இரண்டு உலகத்தில் உள்ளார்க்கும் முகம் கொடுக்க வந்து நின்றுனேயாகிலும், திருமலைதான் நித்தியசூரிகளுடையது என்றபடி. (3)

81

வெற்பை ஒன்றுஎடுத்து, ஒற்கம் இன்றியே
நிற்கும் அம்மான்சீர், கற்பன் வைகலே.

**பொ - ரை :** கோவர்த்தனம் என்ற ஒரு மலையை எடுத்துத் தளர்ச்சியின்றியே நின்றுகொண்டிருந்த இறைவனுடைய நற்குணங்களை நாள்தோறும் சொல்லுவன்.

**வி - கு :** ஒற்கம் - தளர்ச்சி. வைகல் - நாள். 'எடுத்து நிற்கும் அம்மான்' எனக் கூட்டுக.

**ஈடு :** நான்காம் பாட்டு. அவனுடைய [1] ஆர்ஜவகுணம் அளவிலே பலித்தபடியை அருளிச்செய்கிறார்.

வெற்பை ஒன்று எடுத்து - பசுக்களும் ஆயரும் வருந்தும்படி மழை பெய்யப் புக்கவாறே, அதற்கு ஈடாய் இருப்பது ஒன்றை இட்டுக் காக்கப் பற்றுமையாலே, தோற்றிற்று ஒரு மலையை எடுத்துத் துயரை நீக்கினுன். 'இப்படி ஏழு வயதுடைய பாலன் ஒருபடிப்பட மலையை எடுத்துத் தரித்துக்கொண்டு நின்ற அளவில், இளைப்பு உண்டாயிற்று இல்லையோ?' என்னில், ஒற்கம் இன்றியே நிற்கும் - ஒற்கமாவது, ஒடுங்குதல்; அதாவது, இளைப்பு. 'ஏழு நாள் ஒரு படிப்பட மலையைத் தரித்துக்கொண்டு நின்ற இடத்தில் இளையாமைக்குக் காரணம் யாது?' என்னில், அம்மான் - வகுத்த ஸ்வாமி ஆகையாலே, இயல்பாகவே அமைந்த சம்பந்தத்தால் இளைப்பு இன்றியே இருந்தான். அதாவது, 'குழந்தையைப் பாதுகாப்பதில் தாய்க்கு இளைப்பு உண்டாகாது அன்றே?' என்றபடி. சீர் கற்பன் - அவன் மலையை எடுத்துக் காப்பாற்றத் தக்க பொருள்களை நோக்கின நேர்மையை நினைத்து, [2] 'குணங்களால் அடிமைப்பட்டேன்' என்று இளையபெருமாள் கூறியது போன்று, அவனுடைய நற்குணங்களை அந்த நற்குணங்களாலே தூண்டப்பட்டவனுகிச் சொல்லுவன். வைகலே - ஒருகால் இதனைச் சொல்லி, பின்னர் என் காரியத்திற்குப் போமவன் அல்லேன்; [3] 'எப்பொழுதும் துதித்துக்கொண்டிருக்

1. *தாம், வெற்பை எடுத்த சீரைக் கற்கைக்காக, இறைவன் வெற்பை எடுத்தான் என்னும் இவ்வழியாலே இங்கு ஆர்ஜவ குணம் சொனலிற்று கிறது.*

2. *ஸ்ரீ ராமா. அயோத்.* 3 : 19.

3. *இருக்கு வேதம்.*

கிருர்கள்' என்கிற நித்தியசூரிகளைப் போன்று நானும் இதுவே தொழிலாக இருப்பன். (4)

82

**வைகலும் வெண்ணெய், கைகலந்து உண்டான்**
**பொய்கல வாதுஎன், மெய்கலந் தானே.**

**பொ - ரை :** 'நாள்தோறும் வெண்ணெயை இரண்டு கைகளாலும் கலந்து உண்டவனை எம்பெருமான், பொய் இல்லாதபடி என் சரீரத்தில் கலந்தான்,' என்கிருர்.

**வி - கு :** உண்டான் - பெயர். பொய்யான சரீரத்தை 'மெய்' என்றது - மங்கல வழக்கு.

**ஈடு:** ஐந்தாம்பாட்டு. [1] 'நீர் அவன் நற்குணங்களைக் கற்றீராகில், அவன் தான் செய்கிறது என்?' என்னில், 'நான் அவனை விட்டு அவன் குணங்களை விரும்புவது போன்று, அவனும் என்னை விட்டு எனது சரீரத்தை விரும்புகிருன்,' என்கிருர்.

வைகலும் வெண்ணெய் கை கலந்து உண்டான்-வெண்ணெயில் உண்டான ஆசையால் இடக்கையாலும் வலக்கையாலும் வாங்கி உண்டான். இனி, இதற்கு, [2] 'தாரார் தடம் தோள்கள் உள்ளவுங் கைநீட்டி' என்கிறபடியே, 'கை நிறையுந்தனையும் வயிறு நிறையும்' என்னும் இளம்பருவத்தின் தன்மையாலே திருக்கைகள் உள்ளளவும் கலந்து உண்டான் எனலும் ஆம். அன்றி, 'கள்ளன்' என்று [3] சிலுகிட்டவாறே அவர்கள் தங்களோடே கலந்து உண்டான் என்று கூறலும் ஒன்று. 'கற்பன் வைகலே' என்கிறபடியே, எனக்கு அவன் குணங்கள் என்றும் தாரகமாக இருப்பது போன்று, அவனுக்கும் அடியார்கள் தீண்டிய பொருள்கள் என்றும் ஒக்கத் தாரகமாக இருக்குமாதலின், '**வைகலும்**' என்கிருர். 'எல்லாரினும் அறப்பெரிய இறைவன், நித்திய சம்சாரியாகப் போந்த இவருடைய சரீரத்தைத் திருவாய்ப்பாடியில் வெண்ணெயைப் போன்று ஆதரித்தான் என்ருல், இது பொருந்துமோ?' என்னில், பொய் கலவாது என் மெய் கலந்தான் - 'அவ்வெண்ணெயில் செய்த விருப்பம் பொய் இல்லாதது போன்று, என் சரீரத்துடன் கலந்த கலவியிலும் பொய் இல்லை,' என்கிருர். [4] '**அழுக்குடம்பு**' என்று யான் வெறுக்கும்

---

1. 'என் மெய் கலந்தானே' என்றதனை நோக்கி அவதாரிகை.

2. சிறிய திருமடல், கண்ணி. 32.

3. சிலுகு - கலகம். 'கைகலந்து' என்பதற்கு, மூன்று பொருள் அருளிச்செய்கிருர். மூன்ருவது பொருளில், கள்ளனுடைய ஆற்றல் பலனும்.

4. திருவிருத்தம், 1.

'இச்சரீரம் இறைவனுக்கு விரும்பத்தக்கது ஆவதே!' என்பார், 'என் மெய்' என்கிறார். இதனால், அவன் மேல்விழ மேல்விழத் தாம் பின் வாங்குகின்றமை தோன்றுகிறது. (5)

83

கலந்துஎன் ஆவி, நலம்கொள் நாதன்
புலன்கொள் மாணாய், நிலம்கொண் டானே.

பொ-ரை: என் உடலில் கலந்து உயிரினது நலத்தைக் கொண்ட இறைவன், இந்திரியங்களைக் கொள்ளை கொள்ளுகின்ற குறுகிய பிரமசாரியாகி, மகாபலியிடம் மூவடி மண்ணை வாங்கினான்.

வி-கு: 'கலந்து கொள் நாதன்' என முடிக்க. கொள் நாதன், வினைத்தொகை. 'கொள் மாணாய்' என்பதும் அது. 'மாணாய்க் கொண்டான்' என முடிக்க.

ஈடு: ஆறும் பாட்டு. [1]'இப்படிக் கலந்து செய்தது என்?' என்ன, 'சரீரத்து அளவிலே விரும்பி விட்டிலன்; என் ஆவி நலத்தையும் கொண்டான்,' என்கிறார்.

கலந்து என் ஆவி நலம் கொள் நாதன்-என்னோடே ஒரு நீராகக் கலந்து, பின்னர் என் ஆத்துமாவினுடைய இனிமையைக் கொண்டான். நாதன்-அவ்வளவேயோ? [2]'என்னை ஆளும் கொண்டு' என்கிறபடியே, நான் எனக்கு உரியேனாய் இருக்கிற இருப்பையும் தவிர்த்தான். 'இப்படி அகப்பட்டார் நீரேயோ?' என்ன, மகாபலியும் அகப்பட்டான். ஆயின், அவன் ஆவி நலம் கொடுத்திலன்; [3]கழஞ்சு மண் கொடுத்தான் இத்தனை. புலன்கொள் மாணாய் நிலம் கொண்டான் - இந்திரியங்கள் அனைத்தையும் கொள்ளை கொள்ளும் வடிவத்தை மேற்கொண்டு, அவன் 'என்னது' என்று அபிமானித்து இருக்கிற பூமியைக் கவர்ந்துகொண்டான். (6)

84

கொண்டான் ஏழ்விடை, உண்டான் ஏழ்வையம்
தண்தாமம் செய்துஎன், எண்தான் ஆனானே.

---

1. 'என் ஆவி நலம் கொள் நாதன்' என்ற பதங்களைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'என்நலனும் என்நிறைவும் என்சிந் தையும்
என்வளையுங் கொண்டுஎன்னை யாளும் கொண்டு
பொன்அலர்ந்த நறுஞ்செருந்திப் பொழிலி னூடே
புனல்அரங்கம் ஊர்என்று போயி னாரே!' (திருநெடுந். 25)

3. கழஞ்சு - நிறையளவுப்பெயர்.

பொ - ரை: ஏழ் எருதுகளையும் அடர்த்துக் கொன்றான்; ஏழு வகைப்பட்ட உலகங்களையும் புசித்தான்; குளிர்ந்த பரமபதத்தில் செய்யும் விருப்பத்தை என்னிடத்தில் செய்து என் எண்ணத்தின்படியே தான் ஆனான்.

வி - கு: தாமம் - இடம், 'தண்' என்ற அடைமொழி மோக்ஷ உலகத்தைக் குறிக்க வந்தது.

ஈடு: ஏழாம் பாட்டு. [1] 'ஆவி நலம் கொண்ட அளவேயோ? பரமபதத்தில் செய்யும் அன்பையும் என் பக்கலிலே செய்தான்,' என்கிறார்.

ஏழ் விடை கொண்டான் - நப்பின்னைப் பிராட்டியினுடைய சேர்க்கைக்குத் தடையாய் இருந்த இடபங்கள் ஏழனையும் வென்றான். 'இன்ன படைவீட்டை வென்றான்' என்று கூற வேண்டுவதனை 'இன்ன படைவீட்டைக் கொண்டான்' என்று கூறுவது போன்று [2] 'ஏழ்விடை கொண்டான்' என்கிறார். உண்டான் ஏழ் வையம் - பிரளய ஆபத்தில் பூமி தன் வயிற்றில் புகாவிடில் தரியாதது போன்று, தான் என் பக்கலில் புகுந்து அல்லது தரியாதவன் ஆனான். இவற்றால் 'தனக்குச் சிநேகிகளாய் இருப்பார்க்குச் செய்யுமதும் செய்தான்; தான் செய்யும் இரட்சணத்தை விலக்காதார்க்குச் செய்யுமதும் செய்தான்,' என்பனவற்றைத் தெரிவித்தபடி. அதற்குமேல், தண் தாமம் செய்து - குளிர்ச்சியையுடைத்தான பரமபதத்தில் செய்யும் விருப்பத்தையும் என் பக்கலிலே செய்தான். இனி, 'தண் தாமம் செய்து' என்பதற்கு, [3] 'இவ்வுலகில் இருக்கிற என்னைப் பரமபதத்தில் இருப்பவர்களுள் ஒருவனாக ஆதரித்து' என்று பொருள் கூறலுமாம்.

என் எண் தான் ஆனானே - நான் விரும்பியபடியே எனக்குக் கைபுகுந்தான். இனி, இதற்கு, 'என் விருப்பத்தைத் தான் கைக்கொண்டான்,' என்று கூறலுமாம். அதாவது, [4] 'மாகவைகுந்தம் காண்பதற்கு என்மனம், ஏகம் எண்ணும்', [5] 'கண்ணன் விண்ணூர் தொழவே சரிகின்றது சங்கம்,' என்கிறபடியே, 'வைகுண்டத்திற்குச்

---

1. 'தண்தாமம் செய்து' என்றதனை நோக்கி அவதாரிகை அருளிச் செய்கிறார்.

2. 'செருமலைந்து களங்கொள் மள்ளரின் முழங்கும் அத்தம்' (அகம். 227. 10-11.) என்ற இடத்துக் 'கொள்' என்பது இப்பொருளில் வருதல் ஒப்பு நோக்குக.

3. இப்பொருளில் 'தாமம்' என்பது இடவாகுபெயர்.

4. திருவாய். 9. 3 : 7.

5. திருவிருத்தம். 47.

சேறல்வேண்டும்' என்றும், 'அங்கே அனுபவிக்க வேண்டும்' என்றும் நான் ஆசைப்பட, 'திருநகரிக்குப் போகவேண்டும்; ஆழ்வாரை அனுபவிக்க வேண்டும்,' என்று அவன் பாரிக்கிருன்' என்றபடி. (7)

85

ஆனுன் ஆன்ஆயன், மீனோடு ஏனமும்
தான்ஆ னுன்என்னில், தானய சங்கே.

**பொ - ரை:** இறைவன், என்னிடத்தில், தனக்கு உண்டான அன்பினுல் பசுக்களுக்குத் தலைவனுய்ப் பிறந்தான்; அதற்கு மேல், மீனும் பன்றியுமாகவும் பிறந்தான்.

**வி - கு:** 'ஆனயன்' என்பதனை, 'ஆன் ஆயன்', 'ஆன் நாயன்' எனப் பிரிக்க. நாயன்-தலைவன். சங்கம்-அன்பு; அளவுப்பெயருமாம்.

**ஈடு:** எட்டாம் பாட்டு. [1]'என்னைக் கருதி அவன் பிறந்த பிறவிகளுக்கு ஒரு முடிவு இல்லை,' என்கிருர்.

ஆன் ஆயன் ஆனுன் - இடையனுய்ப் பிறந்து, பிறந்த [2]மெய்ப்பாட்டாலே, முடி சூட இராதே, சாதிக்குத் தக்கதான பசுக்களைக் காத்தலை மேற்கொண்டான். அவ்வளவிலேதான் விட்டானே? மீனோடு ஏனமும் தான் ஆனுன் - எல்லாரினும் அறப்பெரியனை தான், இவற்ரோடு ஒத்த சாதியன் ஆனுன். இறைவன் ஒவ்வொரு கால விசேடத்திலே முறைப்படி பிறந்திருந்தும், அனுசந்தானத்தின் பதற்றத்தாலே ஒரே காலத்தில் எடுத்த இரண்டு அவதாரங்கள் போன்று, '**மீனோடு ஏனம்**' என்று ஒருசேர அருளிச்செய்கிருர். வடிவும் செயலும் சொல்லும் அவ்வக்குலத்திற்கு அடுத்தவைபாய் இருத்தலின், '**ஆனுன்**' என்கிருர். [3]'இவைதாம் வித்தியா வதாரங்கள். [4]இவ்வவதாரங்களைப் பார்க்குமிடத்து, மேற்கூறிய

---

1. 'என்னில் தானய சங்கே' என்ற பதங்களை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. 'மெய்ப்பாட்டாலே, பசுக்களைக் காத்தலை மேற்கொண்டான்,' எனக்கூட்டுக. 'கன்று மேய்த்து விளையாட வல்லானை, தடம்பருகு கார்முகிலை' என்பதனை ஈண்டு ஒப்பு நோக்குக.

3. 'இவைதாம்' என்றது, இப்பாசுரத்தில் குறித்த மூன்று அவதாரங்களையும். இவ்வவதாரங்கள் மூலமாகப் 'பகவத்கீதை' முதலான சாஸ்திரங்களை வெளிப்படுத்தினுன் ஆதலின், 'வித்தியா அவதாரங்கள்' என்கிருர்.

4. மச்சம், வராகம் இவ்வவதாரங்களின் தாழ்வினைப் பார்க்குமிடத்தில், கிருஷ்ணவதாரம் செய்த சாதி, மிக மிக உயர்ந்தது என்பது கருத்து.

கிருஷ்ணுவதாரம் அயர்வறும் அமரர்கள் அதிபதியைப் போன்று இருப்பது ஒன்று அன்றே ? இவற்றிற்குக் காரணம் என் ?' என்னில், [1] தாஞய சங்கே-என்பக்கல் தனக்கு உண்டான அன்பின் மிகுதியே. இனி, இதற்கு, 'என்னைக் குறித்துத் தான் எடுத்த அவதாரங்கள் மகாசங்கம் என்னும் அளவே,' என்று கூறலுமாம். இனி, 'சங்கே' என்பதற்கு, 'மகாசங்கம் என்னும் அளவேயோ! முடிவு உண்டோ! [2] 'பல' என்னும் இத்தனை' என்று கூறலும் ஒன்று. (8)

## 86

*சங்கு சக்கரம், அங்கையில் கொண்டான்*
*எங்கும் தாஞய, நங்கள் நாதனே.*

**பொ - ரை:** *எல்லா இடங்களிலும் தாஞகவே இருக்கிற நம்முடைய பெருமான், பாஞ்சஜன்னியம் என்னும் சங்கையும் சுதரிசனம் என்னும் சக்கரத்தையும் அழகிய கையிலே தரித்திருக்கிருன்.*

**வி - கு:** *'அன்பினின் அவலித்து ஆற்ருது அழுவதும் எளிது நங்கள்' (சிங். 1932.) என்புழிக் 'கள்' அசைநிலையாயது போன்று, ஈண்டும் 'நங்கள் என்பதில் 'கள்' அசைநிலை.*

**ஈடு:** ஒன்பதாம் பாட்டு. [3] 'இறைவன் இப்படி அவதரிக்குமிடத்து இறைமைக்கு உரிய அடையாளங்களோடே வந்து அவதரிப்பான்,' என்கிருர்.

**சங்கு சக்கரம் அம் கையில் கொண்டான்** - [4] சிலரை வசீகரிக்க நினைத்தவர்கள், கையிலே மருந்து கொண்டு திரியுமாறு போன்று, அவதாரங்கள்தோறும் திவ்விய ஆயுதங்களோடே வந்து

---

1. 'தாஞய' என்பதற்கு இரு வகையான பொருள் அருளிச்செய்கிருர். முதற்பொருளில், பெயரெச்சம்; இரண்டாவது பொருளில், வினையாலணையும் பெயர். 'சங்கே' என்பதற்குக் கூறும் பொருள் வகையுள், முதற்பொருள், அன்பு என்பதாம்; இரண்டாவது பொருள், ஓர் எண்ணல் அளவுப்பெயர்; மூன்ருவது பொருளும் எண்ணல் அளவுப் பெயராயினும், ஏகாரத்திலே பொருள் நோக்கு.

2. ஸ்ரீ கீதை. 4 : 5.

3. 'சங்கு சக்கரம் அங்கையிற்கொண்டான், எங்கும் தாஞய' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

4. 'சிலரை வசீகரிக்க நினைத்தவர்கள்' என்றது, 'ஆட்கொள்ளத் தோன்றிய ஆயர்தங் கோவினை' என்கிறபடியே, அடிமை கொள்ளுதலைக் குறித்தது.

அவதரிப்பான். 'ஆயின், எல்லா அவதாரங்களிலும் திவ்விய ஆயுதங்கள் உளவோ?' எனின், எல்லா அவதாரங்களிலும் உண்டு; அரசர்கள் [1]கறுப்பு உடுத்துப் புறப்பட்டால், விரும்புகிற காலத்தில் முகங்காட்டுகைக்காக அந்தரங்கர் மறைந்து திரிவர்; அது போன்று, தோற்ருதேயும் நிற்பர்கள். [2]'கூரார் ஆழி வெண்சங்கேந்தி வாராய்' என்னும் இவர்களுக்கு அப்படியேயன்றே தோன்றுவது?' வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டுங்கைகளில் திவ்விய ஆயுதங்களைத் தரித்தான்,' என்பார், '**அம் கையில் கொண்டான்**' என்கிருர். எங்கும் தானுய – தேவர் மனிதர் முதலான வேறுபட்ட சாதிகள்தோறும் தான் வந்து தோன்றினவன். இனி, இதற்கு, 'ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப்போன்று தம்மை ஏற்றுக்கொள்ளுகைக்காக நிறைந்தபடியைச் சொல்லுகிருர்' என்று கோடலுமாம். நங்கள் நாதனே - நம்மை அடிமை கொள்ளுகையே பிரயோஜனமாகவுடைய தலைவன். (9)

87

**நாதன் ஞாலம்கொள், பாதன் என்அம்மான்**
**ஓதம் போல்கிளர், வேத நீரனே.**

**பொ - ரை:** *எல்லார்க்குந் தலைவன், பூமியை அளந்துகொண்ட திருவடிகளையுடையவன், எனக்குத் தலைவன், சமுத்திரம் போன்று கிளர்கின்ற வேதங்களால் பேசப்படும் [3] ஆர்ஜவ குணத்தையுடையவன்.*

**வி - கு:** *கிளர்தல் - மேன்மேல் வளர்தல். கிளர்வேதம் - வினைத் தொகை*

**ஈடு:** பத்தாம் பாட்டு. 'அவன் நீர்மையைப் பேசப் புக்கால் நம்மால் பேசப்போமோ! கடல் கிளர்ந்தாற்போலே வேதமே பேச வேண்டாவோ?' என்கிருர்.

நாதன் - எல்லாரையும் நியமிக்கின்றவன். ஞாலம் கொள் பாதன் - வசிஷ்டன் சண்டாளன் என்னும் வேற்றுமை அற எல்லார் தலைகளிலும் திருவடிகளைப் பரப்பினவன். என் அம்மான் - [4] இம் மேன்மையையும் நீர்மையையும் காட்டி என்னைத் தனக்கே உரிமை

---

1. *கறுப்புடுத்துப் புறப்படல் - நகரி சோதனைக்காக மாறு வேடங் கொண்டு புறப்படல்.*

2. *திருவாய்.* 6. 9 : 1.

3. *ஆர்ஜவம் - நேர்மை.*

4. *'இம்மேன்மையையும் நீர்மையையுங் காட்டி' என்றது, 'நாதன்' என்ற பதத்தாற்கூறிய மேன்மையையும், 'ஞாலங்கொள் பாதன்' என்ற தொடர்மொழியாற்கூறிய எளிமையையும் காட்டி என்றபடி.*

யாக்கினவன். இனி, நாதன் - இத்திருவாய்மொழியில் முதற்பாசுரத்தில் சொன்ன சேஷியாந்தன்மையையுடையவன். ஞாலங்கொள் பாதன் - இரண்டாம் பாசுரத்தில் சொன்ன அவதார எளிமையையுடையவன். என் அம்மான் - எனக்குக் கிட்டலாம்படி திருமலையிலே வந்து நின்று என்னை அடிமை கொண்டவன். மூன்றும் பாசுரத்தில் 'கண்ணுவான்' என்றவதனை நினைக்கிருர். ஓதம் போல் கிளர்வேத நீரன் - இவனுடைய இந்நிலைமைகளைப் பேசப்புகின், கடல் கிளர்ந்தாற்போலே கிளராநின்றுள்ள வேதத்தாலே கூறப்படுகின்ற நீர்மையையுடையவன். நீர்மையாவது, ஆர்ஜவகுணம். (10)

88

*நீர்புரை வண்ணன், சீர்சட கோபன்*
*நேர்தல் ஆயிரத்து, ஓர்தல் இவையே.*

**பொ - ரை :** *ஸ்ரீ சடகோபர் அருளிச்செய்த ஆயிரம் திருப்பாசுரங்களுள், நீரினது தன்மையினைப்போன்ற தன்மையினையுடைய இறைவன் சீராகிய ஆர்ஜவ குணத்தைப் பற்றிக் கூறிய இப்பத்துப் பாசுரங்களையும் ஓர்க.*

**வி - கு :** *'நீர் புரை வண்ணன்' என்பதற்குக் கருத்து, தண்ணீரானது மக்கள் காட்டின வழியே செல்லுந்தன்மையது; அது போன்று, இறைவனும் மக்கள் செல்லும் வழிகளிலேயே செல்லுந்தன்மையன் என்பது. வண்ணம் - தன்மை; நிறம் அன்று. ஓர்தல் - வியங்கோள். 'சடகோபன் நேர்தல் ஆயிரத்து நீர் புரை வண்ணன் சீராகிய இவை ஓர்தல்' எனக் கூட்டுக.*

**ஈடு:** முடிவில், 'இத்திருவாய்மொழி, எல்லாத் திருவாய்மொழிகளிலும் அவனுடைய ஆர்ஜவ குணத்தை ஆராய்ந்து சொன்ன பத்து' என்கிருர்.

நீர் புரை வண்ணன் சீர் - நீரோடு ஒத்த தன்மையையுடையவனுடைய ஆர்ஜவ குணத்தை. ஆர்ஜவகுணமாவது, சம்சாரிகள் விலங்கிப்போனது தனக்கு வழியாம்படி தான் செவ்வியனுகை. ஆக, இத்திருவாய்மொழியில் அருளிச்செய்தது சர்வேஶ்வரனுடைய ஆர்ஜவ குணம் என்பது போதரும். சடகோபன் நேர்தல் - இவைதாம், இவ்வார்ஜவ குணத்திற்கு இலக்கான ஆழ்வார் அருளிச்செய்தவை. இவைதாம் இவ்வர்த்தத்தைக் கடக்க நின்ற ஒருவரால் பாடப்பட்டவை அல்ல என்பார், '**சடகோபன் நேர்தல்**' என்கிருர்.

ஆயிரத்து இவை ஓர்தல் - ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு ஓர்ந்து அருளிச் செய்யப்பட்டவை. அதாவது, சம்சாரிகளுடைய செவ்வைக் கேட்டை நினைந்து, அத்தால் இழக்க வேண்டாதபடி அவனுடைய ஆர்ஜவகுணத்தை நினைத்து அருளிச்செய்யப்பட்டவை என்பதாம். இனி, 'இவை ஓர்தல்' என்பதற்கு, சம்சாரிகள் ஓரப்படுமவை என்று கூறலுமாம். (11)

முதற்பாட்டில், நித்திய விபூதியில் உள்ளாரோடு செவ்வைய னுய்ப் பரிமாறும்படியை அருளிச்செய்தார்; இரண்டாம் பாட்டில், லீலா விபூதியில் உள்ளாரோடு செவ்வையனுய்ப் பரிமாறும்படியை அருளிச்செய்தார்; மூன்றும் பாட்டில், இரண்டு உலகத்திலும் உள்ளார்க்கு முகங்கொடுக்கைக்காகத் திருமலையில் நிற்கிறபடியை அருளிச்செய்தார்; நான்காம் பாட்டில், அவ்வார்ஜவ குணம் தம் அளவிலே பலித்தபடியை அருளிச்செய்தார்; ஐந்தாம் பாட்டில், 'நான் அவன் குணங்களை விரும்புமாறு போன்று, அவனும் என் சரீரத்தை விரும்புகின்றுன்,' என்றுர்; ஆறும் பாட்டில், 'என் சரீரத்தின் அளவு அன்றிக்கே என் ஆத்துமாவையுங் கைக்கொண் டான்,' என்றுர்; ஏழாம் பாட்டில், 'அவ்வளவே அன்று; நித்திய விபூதியில் செய்யும் ஆசையை என் பக்கலில் செலுத்துகிருன்,' என்றுர்; எட்டாம் பாட்டில், 'என்னைக் குறித்து அவன் பிறந்த பிறவிகளுக்கு முடிவு இல்லை,' என்றுர்; ஒன்பதாம் பாட்டில், 'இப் படிப் பிறந்த பிறவிகள்தோறும் தன் இறைமைத் தன்மையோடே வந்து அவதரித்தான்,' என்றுர்; பத்தாம் பாட்டில், 'அவனுடைய ஆர்ஜவ குணத்தைப் பேசும்போது, வேதமே பேசவேண்டும்,' என்றுர்; முடிவில், 'இத்திருவாய்மொழி சம்சாரிகளுக்கு, எப்போதும் ஒக்க அநுசந்திக்கத் தக்கது,' என்றுர்.

## திருவாய்மொழி நூற்றந்தாதி

ஓடுமனம் செய்கைஉரை ஒன்றின்நில்லா தாருடனே
கூடிநெடு மால்அடிமை கொள்ளுநிலை—நாடுஅறிய
ஓர்ந்தவன்தன் செம்மை உரைசெய்த மாறன்என
ஏய்ந்துநிற்கும் வாழ்வாம் இவை. (8)

ஆழ்வார் எம்பெருமானுர் சீயர் திருவடிகளே அரண்.

# ஒன்பதாந்திருவாய்மொழி
# 'இவையும் அவையும்'

## முன்னுரை

மேல் திருவாய்மொழியில் இறைவனுடைய ஆர்ஜவ குணத்தை அநுசந்தானம் செய்தார்; இப்படி அநுசந்தித்தார்திறத்தில் சர்வேஶ்வரன் இருக்கும்படியை அருளிச்செய்கிறுர் இத்திருவாய்மொழியில். சர்வேஶ்வரனுய்த் திருமகள் கேள்வனுய்ப் பரம ரசிகனுய் இருக்கிற இறைவன், ஆழ்வார் பத்தியிலே துவக்குண்டு இவரோடே கலந்து இனிமையில் ஒன்று ஆனுன்; ஆழ்வாரானவர் மேற்கூறிய ஆர்ஜவ குண அநுசந்தானத்தால் இறைவன் பக்கல் பெரிய விடாயை உடையவர் ஆனுர்; இறைவன், 'இது நமக்கு நல்ல வாய்ப்பாய் இருந்தது' என்று பார்த்து, அருச்சுனன், 'விபூதி [2] சிரவணத்தாலே விபூதிமான் ஆனவனைக் காணவேண்டும்' என்று விரும்ப, 'அதற்கு உறுப்பாக [3] உனக்கு ஞானக் கண்களைக் கொடுக்கிறேன்' என்கிறபடியே, திவ்வியமான கண்களைக் கொடுத்து, உலகமே உருவமாக இருக்கும் தனது தன்மையைக் காட்டியது போன்று, இவ்வாழ்வார்க்கும் தன்னை அநுபவிக்கைக்கு ஈடான [4] விடாயைப் பிறப்பித்துப் பரம பதத்தில் உள்ளாரோடு பரிமாறுவது போன்று பரிமாறக்கோலித் தன்னை அநுபவிப்பிக்கிறுன். அதாவது, பிராட்டிமாரோடு பரிமாறுவது, தேவியர் என்னும் முறையாலே; திருவடியோடு பரிமாறுவது, வாகனம் என்னும் முறையாலே; திருவனந்தாழ்வாேடு பரிமாறுவது, படுக்கை என்னும் முறையாலே. இப்படி [5] அவர்களோடு ஒவ்வொரு முறையாலே பரிமாறும் பரிமாற்றங்கள் எல்லாம் இவர்

---

1. *இத்திருப்பதிகத்தில் வருகின்ற முதல் பாசுரத்தினை நோக்கி, 'சர்வேஶ்வரனுய்த் திருமகள் கேள்வனுய்ப் பரம ரசிகனுய்' என்கிறுர். 'தனிமுதல் எம்மான்', 'என் அமுதம் சுவையன்', 'திருவின் மணுளன்' என்பவற்றை நோக்குக.*

2. *விபூதி சிரவணம் - உலகம் முதலான செல்வங்களின் தன்மையைக்கேட்டல். விபூதிமான் - உலகமே உருவமான இறைவன்.*

3. ஸ்ரீகீதை. 11 : 8.

4. *விடாயைப் பிறப்பித்து - பத்தி ரூபாபந்ந ஞானத்தை விளங்கச் செய்து.*

5. *இத்திருப்பதிகத்தில், மூன்றும் பாசுரத்தின் 'ஒரு கதியின் சுவை தந்திட்டு' என்ற பகுதியின் வியாக்கியானத்தை ஈண்டு நோக்குக.*

ஒருவரோடு பரிமாறுகிருஞய், அதுதன்னையும் [1] குளப்படியிலே கடலை மடுத்தாற்போன்று அன்றி, பொறுக்கப் பொறுக்கப் பரிமாற, இவரும் அவனை [2] எல்லா இந்திரியங்களாலும் எல்லா உறுப்புகளாலும் தாம் விரும்பியவாறே நுகர்ந்து, அந்நுகர்ச்சியால் உண்டான பிரீதியாலே அவன் குணங்களைப்பேசி அனுபவிக்கிருர்.

89

இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
யவையும் யவரும் தன்னுள்ளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவையுள் தனிமுதல் எம்மான்
கண்ண பிரான்என் அமுதம்
சுவையன் திருவின் மணுளன்
என்னுடைச் சூழ லுளானே.

**பொ - ரை:** அண்மையிலுள்ளவையும் சேய்மையிலுள்ளவையும் நடுவிடத்துள்ளவையுமான அஃறிணைப்பொருள்கள் அனைத்தையும், அண்மையிலுள்ளவர்களும் சேய்மையிலுள்ளவர்களும் நடுவிடத்துள்ளவர்களுமான உயர்திணைப்பொருள்கள் அனைத்தையும், 'தான்' என்ற சொல்லுக்குள்ளே அடங்கி இருக்கும்படி அழித்தும், பின்னர் அவற்றை உண்டாக்கியும், உண்டாக்கிய பொருள்களைக் காத்தும், அவ்வவ்வுயிர்களுக்குள் உயிராய்த் தங்கியும் இருக்கின்ற ஒப்பற்ற காரணன், என் தலைவன், கண்ணனுய் அவதரித்தவன், எனக்கு அமிர்தம் போன்றவன், இன்பமயமானவன், திருமகள் கேள்வன் ஆன இறைவன் என் எல்லையில் இருக்கின்றவனுனன்.

**வி - கு:** 'இவையும் அவையும் உவையும் ஆகிய யவையும்' எனவும், 'இவரும் அவரும் உவரும் ஆன யவரும்' எனவும் கூட்டுக. 'யவை, யவர்' என்பன, 'யாவை, யாவர்' என்ற சொற்களின் விகாரம்.

---

1. குளப்படி-மாடு முதலியவற்றின் குளம்பு படிந்த சுவடு. 'என்னுடைச் சூழலுளான்', 'என்னருகலிலான்' என்பன போன்று அருளிச்செய்கிருர் ஆதலின் 'பொறுக்கப் பொறுக்க' என்கிருர்.

2. 'என் நெஞ்சினுளான்', 'என் கண்ணினுளான்' எனபனவற்றை நோக்கி, 'எல்லா இந்திரியங்களாலும்' என்கிருர். 'ஒக்கலையான்', 'நெற்றியுளான்' என்பனவற்றை நோக்கி, 'எல்லா உறுப்புகளாலும்' என்கிருர்.

'காக்கும் தனி முதல்' எனக் கூட்டுக. 'மணாளன்' என்பது 'மணவாளன்' என்பதன் விகாரம்.

ஈடு: முதற்பாட்டு. [1]'படைத்தல் முதலான முத்தொழில் கட்கும் காரணனாய் எல்லா உயிர்கட்கும் உள் உயிராய் இருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணனானவன் என்னுடைய எல்லையை விட்டுப் போக மாட்டாதபடி ஆனான்,' என்கிறார். 'ஆயின், இறைவனுடைய மேன்மை உருவம் குணம் இவற்றை அனுபவிக்கின்ற இவர், 'இவையும் அவையும்' என்பது முதலாக அவனுடைய செல்வங்களைப் பேசி அனுபவிப்பதற்குக் காரணம் என்னை?' எனின், இவர்க்கு அவனுடைய குணங்களை அனுபவிப்பதோடு விபூதியை அனுபவிப்பதோடு ஒரு வேற்றுமை இல்லை. [2]முதல் திருவாய்மொழியிலே பரக்க அனுபவித்த இவை வெளிப்படையாய் இருக்கையாலே இங்குத் திரள அனுபவிக்கிறார்.

இவையும்...யவரும் - இதனால் சித்தின் கூட்டத்தையும் அசித்தின் கூட்டத்தையும் தொகுத்துச் சொல்லுகிறார், தன்னுளே ஆகியும் - 'இவையும் அவையும்' என்று இங்ஙனம் பிரித்துப் பேச ஒண்ணாதபடி. [3]'அவன் ஒருவனே' என்கிறபடியே, தான் என்கிற சொல்லுக்குள்ளே ஆகும்படி தன் மேலே ஏறிட்டுக்கொண்டு தரித்து இருந்தபடியைச் சொல்லுகிறார். ஆக்கியும் - [4]'பல பொருள்களாக விரிகிறேன்' என்கிறபடியே, தன் பக்கலிலேநின்றும் பிரித்து, பெயர் உருவம் அடையத் தக்கவாறு அவற்றைச் செய்தும். காக்கும் - உண்டாக்கிய பொருள்களை ஈரக்கையால் தடவிக் காக்கின்றபடி. அவையுள் தனி முதல் - இதனால், உண்டாக்கிய பொருள்கள் தொழில் செய்தல் தொழில் செய்யாமைகட்குத் தகுதியாம்படி அவற்றுள் அந்தராத்துமாவாய் நிற்கும் நிலையைச் சொல்லுகிறார். 'ஆயின், அந்தராத்துமாவாய் நிற்கும் இந்நிலை 'ஆக்கியும்' என்று படைத்தலைக் கூறிய போதே அடங்காதோ?' எனின், [5]'படைத்து அவற்றுள் அநுப்பிரவேசித்தார்' என்கிறபடியே, அவை பொருளாதலுக்காகவும் பெயர் அடைதலுக்காகவும் பண்ணும் அநுப்பிர

---

1. 'அவையுள் தனிமுதல், கண்ணபிரான்' என்பவற்றை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. முதல் திருவாய்மொழியில் பரக்க அனுபவித்தது, 'நாமவன்' என்ற பாசுரத்திற்காண்க.

3. சாந். உப. 6. 2 : 1.

4. தைத்திரீய. ஆனந். 6.

வேசத்தைச் சொன்னர் அங்கு; இங்கு அவற்றிற்குக் கூறப்படும் பெயர் இறைவனுகிய தன் அளவில் வந்து முடியும்படியாக நிற்கும் நிலையைச் சொல்லுகிருர்; ஆதலின், அடங்காது என்க.

எம்மான் - தன் விபூதி விஷயமாகத் தனக்கு உண்டான [1] ஓரத்தைக் காட்டி, என்னைத் தனக்கே உரிமை ஆக்கினவன். கண்ணபிரான் - 'இப்படி இருக்கிறவன்தான் யார்?' என்னில், கிருஷ்ணன். இனி, கண்ணபிரான் என்பதற்கு, 'கண்களுக்குத் தோன்றித் திருவருள் செய்கின்றவன்' என்று கூறலுமாம். என் அமுதம் - [2] தேவர்கள் அதிகாரிகளாய் இருக்கிற அமிருதத்தில் வேறுபாடு. சுவையன்-பரமரசிகன்; அவ்வமிருதத்திற்குச் சுவையை நுகருந்தன்மை இல்லையே! திருவின் மணாளன் - [3] இவருடைய அமிருதம் ஒரு மிதுனம் ஆயிற்று. இதனல், மேற்கூறிய சுவைக்கு ஊற்றுவாய் அருளிச்செய்கிருர். என்னுடைச்சூழல் உளானே-பெரிய பிராட்டியார் [4] 'அகலகில்லேன் இறையும்' என்னப் பிறந்தவன், என் பக்கத்தில் வாழ்தல் தன் பேருக வாழ்கின்ருன். [5] 'எந்த இராமனுடைய திருவருளால் இம்மக்கள் எப்பொழுதும் தெளிந்த மனத்தையுடையவர்களாய் இருக்கின்ருர்களோ, அப்படிப்பட்ட இராமன் சுக்கிரீவனுடைய அருளை நல்ல மனத்துடன் விரும்புகிருன்,' என்றும், [6] 'தம்மை ஒழிந்தார்க்கு எல்லாம் நாதனுய் இருக்கும் ஸ்ரீராமர், சுக்கிரீவனை நாதனுக விரும்புகிருர்' என்றும், கூறப்படுகின்றவாறே, 'ஆகியும் ஆக்கியும் காக்கும் தனி முதல் எம்மான்' ஆகிய இறைவன், என்னை விட்டுப் பிரிதற்கு மனம் இன்றி என் அருகிலேயே தங்கி இருக்கிருன் என்பார், '**என்னுடைச்சூழலுளானே**' என்கிருர். (1)

---

1. *ஓரம் - பக்ஷபாதம்.*

2. *'என்' என்ற சொல்லில் நோக்கு.*

3. *'என் அமுதம் திருவின் மணாளன்' என்று கூட்டி, 'இவருடைய அமிருதம் ஒரு மிதுனம் ஆயிற்று' என்கிருர். மிதுனம்-இரட்டை. 'சுவையன் திருவின் மணாளன்' என்று கூட்டி 'இதனல் மேற்கூறிய சுவைக்கு ஊற்றுவாய் அருளிச்செய்கிருர்' என்கிருர்.*

4. *திருவாய்.* 6. 10 : 10. *'திருவின் மணாளன் என்னுடைச் சூழலுளான்' என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிருர் 'பெரிய பிராட்டியார்' என்ற வாக்கியத்தால்.*

5. *ஸ்ரீ ராமா.* கிஷ். 4 : 21.

6. *ஸ்ரீ ராமா.* கிஷ். 4 : 18.

90

சூழல் பலபல வல்லான்
    தொல்லை அம் காலத்து உலகைக்
கேழல்ஒன் றாகி இடந்த
    கேசவன் என்னுடை அம்மான்
வேழ மருப்பை ஒசித்தான்
    விண்ணவர்க்கு எண்ணல் அரியான்
ஆழ நெடுங்கடல் சேர்ந்தான்
    அவன்என் அருக லிலானே.

**பொ - ரை :** பற்பல அவதாரங்களை எடுக்க வல்லவன் அழகிய தான பண்டைக்காலத்தில் ஒப்பற்ற வராகமாகி இவ்வுலகைக் கோட்டாலே குத்தி மேலே கொண்டு வந்த கேசவன், என்னுடைய தலைவன், குவலயாபீடம் என்னும் யானையினது கொம்பை முரித்தவன், தேவர் கட்கு நினைக்கவும் அரியவன், ஆழமான நீண்ட கடலில் யோக நித்திரை செய்கின்றவன் ஆன அவ்விறைவன் என் அருகில் இருக் கின்றவன் ஆனான்.

**வி - கு :** 'என்றிவ் வூழிகளானே நெய்தலும் குவளையும் ஆம்ப லும் சங்கமும் கமலமும் வெள்ளமும் என எண் குறித்திட்ட பெயர்களது அளவிற்றாகிய காலவீட்டம் கழிந்த பின் உயிர்கள் உளவாதற் பொருட்டு அந்நிலத்தினை எடுத்திட்ட கேழற்கோலத்தால் திகழ்வரப் பெயர் பெற்ற இவ்வராக கற்பம் நின் செயல்களுள் ஒரு செயலின் பெயராமதனையுணர்த்துதலின், அச்செயல்கள் பலவற்றையும் செய் கின்ற நின் முதுமைக்குள்ள கற்பங்கள் யாவராலும் அறியப்படாத' (பரிபா. 2. பரிமே.) என்ற உரைப்பகுதி, இங்குத் 'தொல்லை அம் காலத்து' என்றவிடத்து ஒப்பு நோக்கல் தகும். 'அருகலில்' என்புழி 'இல்' ஏழாம் வேற்றுமை உருபு.

**ஈடு :** இரண்டாம் பாட்டு. 'என் சுற்றுப்புறத்தில் வசித்தவன், அது பொறுத்தவாறே என் அருகே வந்து நின்றான்,' என்கிறார்.

சூழல் பல பல வல்லான் - இங்குச் சூழல் என்றது, அவதா ரத்தை. சேதநரை அகப்படுத்திக்கொள்ளுமது ஆகையாலே அவ தாரத்தைச் '**சூழல்**' என்கிறார். சாதி பேதத்தையும் [1] அவாந்தர பேதத்தையும் நோக்கிப் '**பலபல**' என்கிறார். கர்மம் செய்ய வல்லது அன்று, அனுக்கிரகம் செய்ய வல்லது; ஆதலின், கர்மம் காரண மாகப் பிறக்குமவனுக்கும் முடியாத பிறவிகளை எடுப்பவன் ஆதலால்,

---

1. அவாந்தர பேதம் - ஒரே சாதியிலுள்ள வேறுபாடு.

'**வல்லான்**' என்கிறார். அவற்றுள், ஒரு சூழல் சொல்லுகிறார் மேல் : தொல்லை அம் காலத்து உலகைக் கேழல் ஒன்றாகி இடந்த கேசவன்- வராக கல்பத்தின் ஆதியிலே ஆதலில் '**தொல்லை**' என்கிறார். தன் வடிவைக் கண்ணுக்கு இலக்கு ஆக்கின காலமாதலின், '**அம் காலம்**' என்கிறார். 'ஒரு திருவடி, திருவனந்தாழ்வானுக்காகத் தான் இங்ஙனம் செய்தானே! [1] சங்கல்பத்துக்கும் பாத்தம் போராத பூமிக்காகச் செய்தான்,' என்பார், '**உலகை**' என்கிறார்; 'தன் மேன்மையோடு அணைந்து இருப்பது ஒரு வடிவைத் தான் கொண்டானே!' என்பார், '**கேழல்**' என்கிறார். பின்னர், சர்வ சத்தியான தானே 'இவ்வடிவைக் கொள்ளவேண்டும்' என்னிலும் ஒண்ணாதபடி இரண்டு அற்றதாய் இருந்தது ஆதலின், '**ஒன்றாகி**' என்கிறார். அதாவது, பூமி பிரளயத்தில் அகப்பட்டவாறே, நீருக்கும் சேற்றுக்கும் பின் வாங்காத வடிவைக் கொண்டான்; அது அவன் கொண்ட வடிவாகையாலே அழிவுக்கு இட்ட வடிவு தனக்கே ஆலத்தி வழிக்க வேண்டியிருக்கின்றது என்றபடி. [2] 'பன்றியாம் தேசு' என்பர் **சூடிக்கொடுந்த சுடர்க்கொடியார்**. பன்றியின் சாதிக்கு உள்ளது ஒரு குணமாயிற்றுச் செருக்கு. திருமகள் கேள்வன் அவ்வடிவைக் கொண்டால் செருக்குச் சொல்ல வேண்டாவே! ஆதலின், '**இடந்த**' என்கிறார். அதாவது, 'அண்டப்பித்தியிலே சேர்ந்த பூமியைப் புக்கு எடுத்துக்கொண்டு ஏறினான்,' என்பதாம். அப்போதைத் திருமேனியும் [3] உளை மயிருமாய் நின்ற நிலையினை நினைந்து, '**கேசவன்**' என்கிறார். கேசம் - மயிர்.

என்னுடை அம்மான் - சம்சாரப் பிரளயங்கொண்ட என்னை எடுத்தவன். வேழம் மருப்பை ஒசித்தான் - குவலயாபீடத்தினுடைய தந்தங்களை வருத்தம் இன்றி முரித்தவன். அப்படியே, என்னுடைய [4] மதகளிறுகளாகிய ஐம்பொறிகளையும் சேரி திரியாமல் செய்தவன் என்பதனைக் குறித்தபடி. விண்ணவர்க்கு எண்ணல் அரியான் - தனியே குவலயாபீடத்தோடே போர் செய்தவன், பிரமன் சிவன் இவர்கள் மனத்தின் எண்ணத்திற்கும் அப்பாற்பட்டவன். ஆழம் நெடுங்கடல் சேர்ந்தான் - அந்தப் பிரமன் முதலாயினாருடைய

---

1. *சங்கல்பத்துக்கும் பாத்தம் போராத பூமி - நினைப்பதற்கும் தரம் போதாத பூமி.*

2. *நாய்ச்சியார் திருமொழி*, 11 : 8.

3. *உளை - பிடரி மயிர்.*

4. *'வாரி சுருக்கி மதகளிறு ஐந்தினையும், சேரி திரியாமல் செந் நிறீஇ'* (*முதல் திருவந்.* 47.)

கூக்குரல் கேட்கத் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினவன். உறுத்தாமைக்கு ஆழமும், [1] 'தாளும் தோளும் முடிகளும் சமன் இலாத பல பரப்பி' வேண்டினபடி கண்வளர்ந்தருளுகைக்கு நெடுமையும் கூறுவார், '**ஆழ நெடுங்கடல்**' என்கிறூர். அவன் என் அருகலிலான் - 'பிரமன் சிவன் முதலானவர்கட்குப்போல, சேய்மையும் அணிமையும் இல்லாத நடுவிடத்திலும் நிற்கின்றுன் இலன், அருகில் இருக்கின்றுன்' என்பார், '**அருகலிலான்**' என்கிறூர். (2)

91

அருகல் இலாய பெருஞ்சீர்
அமரர்கள் ஆதி முதல்வன்
கருகிய நீலநன் மேனி
வண்ணன்செந் தாமரைக் கண்ணன்
பொருசிறைப் புள்உவந்து ஏறும்
பூமக ளார்தனிக் கேள்வன்
ஒருகதி யின்சுவை தந்திட்டு
ஒழிவிலன் என்னே டுடனே.

**பொ-ரை:** 'குறைதல் இல்லாத பெரிய நற்குணங்களையுடைய அழிவில்லாத தேவர்களுடைய செயல்களுக்கு எல்லாம் காரணனை தலைவன், மிகப்பெரிய நீலமணி போன்ற நிறம் பொருந்திய திருமேனியை யுடையவன், செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவன், மகிழ்ச்சியின் மிகுதியினுல் அடித்துக்கொள்ளுகின்ற சிறகுகளையுடைய கருடப்பறவையின்மேல் மகிழ்ந்து ஏறி வீற்றிருக்கும் தலைவன், திருமகளாருடைய ஒப்பற்ற கணவன் ஆன இறைவன், என்னேடு கூடி நின்று ஒரு வழியால் உண்டாகும் இனிமையைத் தந்து நீங்குகின்றுன் இலன்; அதாவது, பல வழிகளாலும் எனக்கு இன்பத்தைத் தருகின்றுன்,' என்கிறூர்.

**வி-கு:** 'பெருஞ்சீர்', முதல்வனுக்கு அடைமொழி. 'மேனி வண்ணன்' என்பதனை 'வண்ண மேனியன்' என விகுதி பிரித்துக் கூட்டுக. 'செந்தாமரைக் கண்ணன்' என்கிறூர்; 'தாமரைக்கண்ணுன்' என்றூர் திருவள்ளுவனாரும். 'ஏறும்' என்பதனைக் 'கேள்வன்' என்பதனுடன் முடிக்க. 'கேள்வன் என்னேடு உடன் ஒரு கதியின் சுவை தந்திட்டு ஒழிவிலன்,' எனக் கூட்டுக.

---

1. திருவாய். 8. 10: 8.

ஈடு: மூன்றும் பாட்டு. [1] 'திருவடி திருவனந்தாழ்வான் பிராட்டிமார் தொடக்கமானாரோடு ஒவ்வொரு வகையால் பரிமாறு மவன், என் அளவில் ஒரு வகையில் பரிமாறி விடமாட்டுகின்றிலன்,' என்கிறார்.

அருகல் இல் ஆய பெருஞ்சீர் அமரர்கள் ஆதி முதல்வன் - அருகல் - குறைதல்; அதாவது, கேடு. 'இல்' என்பது, இல்லாமை. ஆய-ஆன; கேடு இல்லாதான என்றபடி. ஆக, [2] ஹேயப் பிரத்திய நீகமுமாய்க் கல்யாண ஏகதானமுமான எல்லை இல்லாத குணங்களை யுடையனுமாய், அக்குணங்களை நித்தியசூரிகளை எப்பொழுதும் அனுபவம் பண்ணுவிக்குமவனுமாய், அவர்கள் சத்து முதலானவைகள் தன் அதீனமாம்படி இருக்கிறவன். கருகிய நீலம் நன்மேனி வண்ணன் - கறுத்து நெய்த்துப் பேச்சுக்கு நிலம் அல்லாதபடி வேறுபட்டு இருக்கின்ற திருமேனியில் நிறத்தையுடையவன். இனி, இதற்கு, 'வேறுபட்ட திருமேனியில் கறுத்து நெய்த்த நிறத்தை யுடையவன்' என்று கூறலுமாம். [3] ஆக, இதனால், நித்தியசூரிகளை எப்பொழுதும் அனுபவம் பண்ணி வைக்கும்போது [4] படி விடும்படியை அருளிச்செய்தாராயிற்று. செந்தாமரைக் கண்ணன் - அகவாயில் குணங்களுக்கு விளக்கங்களான திருக்கண்களையுடையவன். பொரு சிறைப் புள் உவந்து ஏறும் - சர்வேஸ்வரன் பெரிய திருவடியை மேற்கொள்ளுவதாக நினைத்து, 'வா' என்று அழைத்தால், அவனுடைய அங்கீகாரத்தால் உண்டான மகிழ்ச்சியினால், பெருக்காறு சுழித்தாற்போன்று தன்னில் தான் பொருகின்ற சிறகையுடை

1. 'பொருசிறைப் புள் உவந்து ஏறும் பூமகளார் தனிக்கேள்வன், ஒரு கதியின் சுவை தந்திட்டு ஒழிவிலன்,' என்றதனை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ஹேயம் - தள்ளத்தக்கவை; பிரத்தியநீகம்- மாறுபட்டவை; ஆக, தள்ளத்தக்கவைகட்கு மாறுபட்டவை என்றதனால், 'கொள்ளத்தக்கவை' என்பதாம். கல்யாண ஏகதானம் - மங்களங்கட்கெல்லாம் ஒரே இடம்.

3. 'கருகிய நீலம் நல் மேனி வண்ணன்' என்பதற்கு அருளிச் செய்யும் பொருள்கள் இரண்டனுள், முதற்பொருளில் 'கருகிய நீலம் நல்' இம்மூன்று சொற்களும் வண்ணத்திற்கு அடைமொழி. இரண்டாம் பொருளில், 'கருகிய நீலம்' என்னும் இரண்டும் வண்ணத்திற்கும், 'நல்' என்பது மேனிக்கும் அடைமொழிகள்.

4. இங்குப் 'படி' என்பது சிலேடை; 'ஜீவனமும், திருமேனியும்' என்பது பொருள். 'படி அளக்கிறானோ?' என்பது உலகவழக்கு. திருமேனி என்ற பொருளில் 'படிமை' என்பது சொல்.

5. 'அவன் மடிமேல் வலந்தது பாம்பு' (பரி. 4 : 43) என்ற பகுதியையும், 'இன்னும், அது கடவுட் கொடி' என்பது தோன்ற 'அவன்' என உயர்திணையாற்கூறினார்,' என்னும் பரிமேலழகர் உரையும் ஈண்டு நோக்கல் தகும்.

யவனுய்க்கொண்டு தோன்றுவான் ஆதலின், '**பொருசிறைப் புள்**' என்கிருர். இறைவனும் 'நாம் இவனை மேற்கொள்ளப் பெற்ருேமே!' என்று திருவுள்ளத்தில் பிரீதியோடே மேற்கொள்ளுவான் ஆதலின், '**உவந்து ஏறும்**' என்கிருர்.

பூ மகளார் தனிக்கேள்வன்-மலரில் மணம் வடிவு கொண்டாற் போன்று இருப்பாராய், இன்ப வடிவினரான பெரிய பிராட்டியார்க்கு வல்லபன். என்றது, 'இப்படிப்பட்ட ஐஸ்வரியத்துக்கு [1] இரண்டாம் விரலுக்கு ஆளில்லாதபடி இருக்கிறவன்' என்றபடி. ஒரு கதியின் சுவை தந்திட்டு ஒழிவு இலன்-அவர்களோடு பரிமாறுதலைப் போன்று [2] ஒருவழியால் வந்த சுவையைத் தந்து விடுகின்றிலன்; என் அளவில் நித்தியசூரிகள் எல்லார் பக்கலிலும் பண்ணும் விருப்பத்தை என் பக்கலில் பண்ணுநின்ருன் என்பதாம். உடனே - [3] 'இவன் ஒரு விபூதிமான், அங்யபரன்,' என்று தோன்ற இருக்கின்றிலன் ஆதலின், '**உடனே**' என ஏகாரங் கொடுத்து ஓதுகிருர். நித்தியவிபூதியில் கேள்வியும் இங்கே இருந்துகொண்டே செய்கிருன் என்றபடி. மேல் திருவாய்மொழியில் [4] 'தண் தாமம் செய்து' என்று நித்திய விபூதியில் செய்யும் விருப்பத்தைச் செய்தான் என்ருர்; இத்திருப் பாசுரத்தில், அந்த மோட்ச உலகத்தில் உள்ளாரோடு பரிமாறும் படியை எல்லாம் என் ஒருவனோடு பரிமாறுகிருன் என்கிருர். (3)

92

உடன்அமர் காதல் மகளிர்
திருமகள் மண்மகள் ஆயர்
மடமகள் என்றிவர் மூவர்
ஆளும் உலகமும் மூன்றே
உடன்அவை ஒக்க விழுங்கி
ஆல்இலைச் சேர்ந்தவன் எம்மான்
கடல்மலி மாயப் பெருமான்
கண்ணன்என் ஒக்கலை யானே.

பொ-ரை: உடனே அமரவேண்டும்படியான காதலையுடைய மனைவிமார்கள் பெரிய பிராட்டியாரும் பூமிப்பிராட்டியாரும் இடையர்

1. 276-ஆம் பக்கத்தின் அடிக்குறிப்பைப் பார்க்க.
2. இப்பதிகத்தின் அவதாரிகையை நோக்குக.
3. விபூதிமான் - செல்வன். அங்யபரன் - வேறு ஒன்றிலே நோக்கமுடையவன்.
4. திருவாய். 1. 8 : 7.

குலத்தில் அவதரித்த நப்பின்னைப்பிராட்டியாரும் என்னும் இவர் மூவருமாவர்; ஆளப்படுகின்ற உலகங்களும் மூன்றேயாகும்; அவ்வுலகங்களை எல்லாம் ஒருசேர ஒரே காலத்தில் விழுங்கி ஆலந்தளிரில் சேர்ந்து தங்கியிருந்தவன்; எனக்குத் தலைவன்; கடலைக்காட்டிலும் மிகப் பரந்த வியக்கத்தக்க குணங்களையும் செயல்களையுமுடையவன்; கிருஷ்ணனாய் வந்து அவதரித்தவன் ஆன இறைவன் என் மருங்கிலே தங்கியிருக்கின்றவன் ஆனான்.

வி - கு: 'இன்துணைப் பதுமத்து அலர்மகள் தனக்கும் இன்பன் நற்புவிதனக்கு இறைவன், தன்துணை ஆயர் பாவை நப்பின்னை தனக்கு இறை' (பெரியதிரு. 2. 3 : 5); 'ஆய்மகள் பின்னையாம் என்றாள்' (சிலப். ஆய்ச்.); 'நிலமகட்குக் கேள்வனும் நீணிரை நப்பின்னை, இலவலர்வாய் இன்னமிர்தம் எய்தினான் அன்றே?' (சிந். 482) என்பன ஈண்டு நினைவு கூர்க. ஒக்கலை - இடுப்பு, 'ஒக்கலை வேண்டி அழல்' (பழமொ. 220) என்ற இடத்தும் 'ஒக்கலை' என்பது இப்பொருட்டாதல் காண்க.

ஈடு: நான்காம் பாட்டு. [1]மேன்மை அது, அகடித கடநா சாமர்த்தியம் அது; இப்படி இருக்கிறவன், யசோதைப்பிராட்டி மருங்கிலே இருக்குமாறு போன்று என் மருங்கிலே வந்திருக்கை தனக்குப் பெரும் பேறாக நினைத்திருக்கின்றான் என்கிறார்.

உடன் அமர் காதல் மகளிர்-உடனே அமரவேண்டும்படியான காதலையுடைய பிராட்டிமார். [2]'அகலகில்லேன் இறையும்' என்று இருப்பவர்கள் ஆதலின், '**உடன் அமர் காதல் மகளிர்**' என்கிறார். 'அவர் யாவர்?' என்னில், திருமகள்-சர்வேஸ்வரனுக்குப் பிரதான மனைவியாய்ப் பட்டத்துக்கு உரியவளாய், [3]'குற்றம் செய்யாதவர் ஒருவரும் இலர்,' என்று இருக்கும் பெரிய பிராட்டியார். மண்மகள்-'குற்றம் பார்க்கக்கடவதோ?' என்று முதலிலேயே அவனுக்குப் பொறைக்கு [4]உவாத்தாய்ப் பொறை விளையும்படியான ஸ்ரீபூமிப் பிராட்டி. ஆயர் மடமகள்-அனுபவ சுகம் தானாய், தன் வடிவழகாலே துவக்கித் திருவுள்ளத்தில் குற்றம் படாதபடி இருக்கும் நப்பின்னைப் பிராட்டி. இனி, திருமகள் - அவன் ஐஸ்வரியம். மண்மகள் - அது

---

1. *'ஆலிலைச் சேர்ந்தவன் ஒக்கலை யானே,' என்ற பதங்களை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

2. *திருவாய்.* 6. 10 : 10.

3. *ஸ்ரீராமா. யுத்* 116 : 45.

4. *உவாத்தாய் - உபாத்தியாயையாய்; 'அரசன் உவாத்தியான் தாய் தந்தை தம்முன்' என்பது ஆசாரக்கோவை.*

விளையும் பூமி. ஆயர் மடமகள் - அத்தைப் புஜிக்கின்ற [1] போக்தா வானவள் என்று கூறலுமாம். இவர் மூவர்-மேன்மைக்கும் புருஷ காரத்திற்கும் தனித்தனியே அமைந்திருக்கிற இவர் மூவர். ஆளும் உலகமும் மூன்று-அவர்களுடைய [2] படுக்கைப்பற்று இருக்கிறபடி. இனி, இதற்குக் 'கீழும், மேலும், நடுவுமான உலகங்கள்' என்று பொருள் கூறலும் ஆம். இனி, உலகம் என்பதனை ஆகுபெயராகக் கொண்டு உலகத்தில் வாழ்கின்ற பத்தர், முத்தர், நித்தியர் என்னும் மூவகைச் சேதனர் என்று பொருள் கோடலும் ஒன்று.

உடன் அவை ஒக்க விழுங்கி-அவற்றுள் ஒன்றும் தப்பாதபடி ஒரே காலத்தில் திருவயிற்றிலே வைத்து. 'ஆயின், மேற்கூறிய மூவகைப்பட்ட ஆத்துமாக்களையும் விழுங்கினனோ?' எனில், அன்று; [3] 'அவை' என்ற சுட்டால் மூவகை ஆத்துமாக்களையும் பொதுவிற் கூறினரேனும், பிரளயத்தால் அழிக்கப்படுகின்ற பத்த ஆத்துமாக் களையே கொண்டு ஏனைய முத்தர் நித்தியர்களை நீக்குக. ஆல் இலை சேர்ந்தவன்-எல்லா உலகங்களையும் வயிற்றிலே சேர வைத்து ஆல மரத்தினது இளந்தளிரிலே சாய்ந்தருளினவன். அதாவது, [4] அகடித கடனா சாமர்த்தியத்தையுடையவன் என்றபடி. எம்மான்-அச்செய லாலே என்னை அடிமை கொண்டவன். [5] 'பத்திராலம்பனம் பண்ணி அடிமை கொண்டான்' என்பதாம். மேற்கூறிய அகடித கடனா சாமர்த்தியத்திற்கு மேலே ஒரு அகடித கடனா சாமர்த்தியமாயிற்று

---

1. போக்தாவானவள் - அனுபவிக்கின்றவள்.

2. படுக்கைப்பற்று - பெண்களுடைய சீமை; சீதனம்.

3. "பன்மையும் ஒருமையும் பாலறி வந்த" (தொ. சொ. 221.) என்ற சூத்திரத்து ஆசிரியர் தொல்காப்பியனார், உயர்திணைத்தெரிநிலை வினைக்கு ஓதிய ஈறுகளே குறிப்பு வினைக்கும் வரும் எனப் பொதுவிற்கூறி மாட்டெறிந்தாராயினும், தெரிநிலை வினைக்கு ஓதிய இருபத்து மூன்று ஈறுகளுள், காலங்காட்டுகிற பதினொரு ஈறுகளையும் நீக்கிக் காலங்காட்டா தனவான ஏனைய பன்னிரண்டு ஈறுகளையுமே அச்சூத்திரத்திற்குப் பொரு ளாகக் கொள்ளப்படுவது போன்று, ஈண்டும், 'அவை' என்ற சுட்டால் குறிக்கப்படும் மூவகை உயிர்களுள், பிரளயத்தால் அழிக்கப்படாத மோட்ச உலகத்துள்ள இருவகை உயிர்களை நீக்கிப் பிரளயத்தால் அழிக்கப்படு கின்ற பத்தர்களாகிய உயிர்களையே கோடல் வேண்டும்.

4. அகடித கடனா சாமர்த்தியம் - செய்தற்கு அரிய செயல்களையும் செய்து முடிக்கும் ஆற்றல்.

5. பத்திராலம்பனமாவது, ஆலிலையைப்பற்றுதல்; இங்கு ஆவண ஓலையைக் குறித்தது: அதாவது, அடிமை ஓலை என்றபடி.

இது. அதாவது, [1] ‘ஒருவர்க்கும் தலை வணங்கேன் என்று இருந்த என்னைத் தனக்கே உரிமையாக்கினான்’ என்றபடி. கடல் மலிமாயப் பெருமான் - திருப்பாற்கடலிலே குறைவு அற வந்து வசிக்கின்றவனாய், ஆச்சரியமான செயல்களையுடைய சர்வேஸ்வரன். இனி, இதற்குக் ‘கடலைக்காட்டிலும் மிக்க ஆச்சரியத்தையுடைய சர்வேஸ்வரன்’ என்று பொருள் கூறலும் ஆம். கண்ணன் - அந்த ஆச்சரியங்கள் எல்லாம் தன் பக்கலிலே காணலாம்படி இருக்கிற கிருஷ்ணன். என் ஒக்கலையானே - [2] யசோதைப்பிராட்டி மருங்கிலே இருக்குமாறு போன்று என் மருங்கிலே இராநின்றான். (4)

93

ஒக்கலை வைத்து முலைப்பால்
உண்என்று தந்திட வாங்கிச்
செக்கஞ் செகஅன்று அவள்பால்
உயிர்செக உண்ட பெருமான்
நக்க பிரானோடு அயனும்
இந்திர னும்முத லாக
ஒக்கவும் தோன்றிய ஈசன்
மாயன்என் நெஞ்சினு ளானே.

**பொ - ரை :** பூதனையானவள் ஸ்ரீ கிருஷ்ணனைத் தன் இடையிலே வைத்துக்கொண்டு, முலையினின்றும் வருகின்ற பாலை உண்ணுவாய் என்று கொடுக்க, அதனை வாங்கித் தன்னைக் கொல்ல வேண்டும் என்று நினைத்து வந்த அக்கொலை அவளோடே போகும்படி (அவள் இறக்க என்றபடி), அப்பொழுது அவள் முலைப்பாலின் வழியே உயிரும் போகுமாறு பாலைக்குடித்த பெருமையுடையவன்; சிவபெருமானோடு பிரமனையும் இந்திரனையும் மற்றும் எல்லாப் பொருள்களையும் ஒரே காலத்தில் உண்டாக்கிய தலைவன்; ஆச்சரியத்தையுடையவன் ஆன இறைவன் என் மனத்தில் தங்கியிருக்கிறான்.

**வி - கு :** செக்கம் - மரணம், செகு என்பது முதனிலை. செக-கொல்ல. நக்கன் - வஸ்திரம் இல்லாவன்; சிவன். அயன் - அஜன் - விஷ்ணுவிடம் தோன்றியவன். அ - விஷ்ணு. இந்திரன் - செல்வமுடையவன். ‘ தங்

---

1. ஸ்ரீராமா. யுத். 36 : 11.

2. ‘கண்ணன்’ என்றதனை நோக்கி, ‘யசோதைப்பிராட்டி மருங்கிலே இருக்குமாறு போன்று’ என்று அருளிச்செய்கிறார்.

திட வாங்கி உயிர் செக உண்ட' என்றும், 'செக்கம் செக உண்ட' என்றும், தனித்தனியே கூட்டுக.

ஈடு: ஐந்தாம் பாட்டு. 'மாற்றுரை மாறு அழிக்க வல்ல வனாய், எல்லாப் பொருளின் தோற்றத்திற்குங்காரணனாய் உள்ள இறைவன் என் மனத்தினன் ஆனான்,' என்கிறார்.

ஒக்கலை வைத்து - பரிவுடைய யசோதைப்பிராட்டியைப் போன்று தூக்கி எடுத்து மருங்கிலே வைத்து. முலைப்பால் உண் என்று தந்திட - 'முலைக்கண் நெரித்து வருத்தப்படா நின்றேன்; உண்,' என்று அதட்டிக் கொடுக்க; [1] 'இராமனைக் கொல்ல வரு கின்றான்' என்று கூறவேண்டிய இடத்தில், அவரைக் கொல்லு தலைத் தங்களைக் கொல்லும் கொலையாக நினைத்து, 'நம்மைக் கொல்ல வருகிறான்' என்று சுக்கிரீவன் முதலியோர் கூறியது போன்று, ஈண்டும், [2] கிருஷ்ணனுக்குக் கொடுத்த நஞ்சு தமக்குக் கொடுத்தது போன்று இருத்தலால் 'தந்திட' என்கிறார். இனி, [3] தருகை, கொடுக்கையாய் வழங்குகையாலே 'தந்திட' என்றார் எனலுமாம். வாங்கி - அவள் முலை கொடாவிடில் தரியாதாளாய்க் கொடுத்தாற்போன்று, இவனும் முலை உண்ணாவிடில் தரியாதானாய் உண்டான் ஆதலின், 'வாங்கி' என்கிறார். சொக்கம் செக-மரணம். இனி, இதற்கு, 'சீறின சீற்றம் அவள்தன் பக்கலிலே பலிக்கும்படி' என்று கூறலும் ஆம். செக்கம்—சிவப்பு; அதாவது, சீற்றம்:

---

1. ஸ்ரீராமா. யுத். 17 : 5.

2. 'கிருஷ்ணனுக்குக் கொடுத்த நஞ்சு தமக்குக் கொடுத்தது போன்று இருத்தலால் 'தந்திட' என்கிறார்' என்ற விசேட உரையை,

"அவற்றுள்,
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை யாயி ரிடத்த" (தொ. சொ. 29.)

என்ற சூத்திரத்தைத் திருவுள்ளத்திற்கொண்டு அருளிச்செய்கிறார். 'தந்திட' என்ற சொல் தன்மை இடத்திற்கு வரும்.

3. 'தருகை-கொடுக்கையாய் வழங்குகையாலே 'தந்திட' என்கிறார் எனலுமாம்' என்றது,

"செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்று மந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப" (தொ. சொ. 28.)

என்ற பொதுச் சூத்திரத்தைத் திருவுள்ளத்திற்கொண்டு என்க.

[1] 'இலங்கை செந்தீ உண்ணச் சிவந்து' என்று சீற்றத்தைச் சிவப்பாக அருளிச்செய்தார் திருமங்கைமன்னனும். இனி, செக்கஞ்செக என்றது - [2] செக்கச்சிவக்க என்றாய், 'முலை கொடுத்த உபகாரத்தின் நினைவாலே திரு அதரத்தில் பழுப்புத் தோற்றப் புன்முறுவல் செய்த' என்று பொருள் கோடலும் ஒன்று.

அன்று - உலகமே அழியப்புக்க அன்று; இனி, இதற்கு 'தனியிடத்தில் இவள் நலியப்புக்க அன்று' என்று பொருள் கூறலும் ஆம். அவள்பால் உயிர் - அவளுடைய தாழ்ந்த சரீரத்தைப் பற்றி நிற்கிற உயிர். பால் - ஏழனுருபு. செக - முடியும்படி. இனி, 'அவள் பால் உயிர் செக' என்பதற்கு, 'அவள் பாலும் உயிரும் முடியும்படி' என்று கோடலும் ஆம். [3] 'முலையூடு உயிரை, வற்ற வாங்கி உண்ட வாயான் வதரி வணங்குதுமே,' என்றார் திருமங்கை மன்னனும். 'முலை உண்டான்' என்றால் 'முலைப்பால் உண்டான்' என்று பொருள் படுமாறு போன்று, 'முலையூடு' என்ற இடத்தும் 'முலை' என்றது முலைப்பாலை. உண்ட பெருமான் - [4] 'முலையின் வழியே வருகின்ற விஷம் கலந்த பாலைக் குடித்து, அவளை முடித்து, உலகிற்கு எல்லாம் குருவாகிய தன்னைத் தந்தவன்' என்கிறபடியே, அவள் முலை உண்டு அவளை முடித்து, உலகிற்கு ஒரு சேஷியைத் தந்தவன். நக்கபிரானோடு அயனும் இந்திரனும் முதலாக ஒக்கவும் தோற்றிய ஈசன் - தன் கூட்டத்துக்கும் உபகாரகனாய்ப் பிரசித்தனாய் இருக்கிற சிவனோடேகூட, அவனுக்கும் தந்தையான பிரமனும், அவனுக்கு இப்பால் உள்ள இந்திரன் தொடக்கமாக இங்கேயுள்ள எல்லாரையும், அத்திக்காயில் [5] அறுமான் போன்று ஒன்றாக [6] அரும்பிக்கும்படி பண்ணின சர்வேஸ்வரன். மாயன் - உண்டாக்கிய உலகத்திலே [7] அநுப்பிரவேசம் முதலான ஆச்சரியமான செயல்களையுடையவன். என் நெஞ்சின் உளான் - என் சரீரத்தில் ஓரிடத்தைப்பற்றி நின்றான். (5)

---

1. பெரிய திருமொழி, 8. 6 : 6.

2. 'செக்கம் செக' என்ற இரண்டற்கும் சிவப்பு என்ற பொருளே கொண்டு 'மிகவும் சிவக்க' என்று பொருள் அருளிச்செய்கிறார்.

3. பெரிய திருமொழி, 1. 3 : 1.

4. ஸ்ரீ விஷ்ணு புரா.

5. அறுமான் - கொசுகு.

6. அரும்பிக்கும்படி - தளிர் வெடிக்கும்படி.

7. அநுப்பிரவேசம் - தொடர்ந்து புகுதல்.

94

[1] மாயன் என்நெஞ்சின் உள்ளான்
மற்றும் எவர்க்கும் அதுவே
காயமும் சீவனும் தானே
காலும் எரியும் அவனே
சேயன் அணியன் எவர்க்கும்
சிந்தைக்கும் கோசரம் அல்லன்
தூயன் துயக்கன் மயக்கன்
என்னுடைத் தோளிணை யானே.

**பொ-ரை:** ஆச்சரியமான குணங்களையும் செயல்களையுமுடையவன் என் நெஞ்சிலே தங்கியிருக்கிருன்; இது என்ன சேராச்சேர்த்தி? இதனை வேறு எவரேனும் பெற்ருர் உளரோ? எல்லா உடல்களும் எல்லா உயிர்களும் தானேயாவன்; காற்று நெருப்பு முதலான ஐம்பெரும்பூதங்களும் அவனேயாவன்; தன் முயற்சியால் காண இருப்பார்க்கு அண்மையில் இருப்பவன்; எத்துணைப் பெரிய ஞானமுடையார்க்கும் சிந்தையால் நினைப்பதற்கும் ஒண்ணுதவன்; யசோதை முதலானவர்கட்குப் பரம்பொருள் என்ற வாசனையும் இல்லாத தூய எளிமையினையுடையவன்; என்னோடு கலந்தவன் ஆன இறைவன் என் தோள்களில் இருக்கின்றவன் ஆனுன்.

**வி-கு:** 'அதுவே' என்பதன் ஏகாரத்தைப் பிரித்து 'எவர்க்கும்' என்பதுடன் கூட்டுக. கோசரம்-ஐம்பொறி மனம் இவற்றிற்கு விஷயமாதல். துயக்கன் – மனத்திரிவை உண்டுபண்ணுமவன். மயக்கன் - கலந்தவன்.

**ஈடு:** ஆரும் பாட்டு. [2] 'எல்லாப்பொருள்கட்கும் அந்தராத்துமாவாக இருப்பவன் என் தோளைப் பற்றி வாழ்கின்ருன்' என்கிருர்.

மாயன் என் நெஞ்சின் உள்ளான்-ஆச்சரியமான குணங்களையும் செயல்களையுமுடையவன் என்னுடைய மனத்தன் ஆயினுன். இது என்ன பெருப்பேறு? இது என்ன சேராச் சேர்த்தி? மற்றும் யாரேனும் நான் பெற்ற பேறு பெற்ருர் உளரோ? 'நீர் பெற்ற பேறு தான் என்?' என்னில், இது என்கிருர் மேல்: காயமும் சீவனும்

1. 'மாயன் என் நெஞ்சினிலுள்ளான்' என்பதும் பாடம்.

2. 'காயமும் சீவனும் தானே, என்னுடைத் தோளிணையானே' என்ற பதங்களை நோக்கி அவதாரிகை அருளிச்செய்கிருர்.

தானே - தேவ மனித முதலான சரீரங்களும் அவ்வச்சரீரங்களில் தங்கியிருக்கிற ஆத்துமாக்களும் அவன் இட்ட வழக்கு. காலும் எரியும் அவனே காற்றும் தீயும் அவன் இட்ட வழக்கு. ஐம்பெரும் பூதங்களில் இரண்டனைக் கூறியவதனால், [1] ஏனையவற்றையும் உபலக்ஷணத்தாற்கொள்க. சேயன் - தன் முயற்சியால் காண் பார்க்குத் தூரத்தில் இருப்பவன் ஆவன். அணியன் - அவனாலே அவனைக் கண்பார்க்குக் கைப்புகுந்து அணியனாய் இருப்பான். எவர்க் கும் சிந்தைக்கும் கோசரம் அல்லன் - எத்துணை மேம்பட்ட ஞான முடையவர்களுக்கும் கண்ணுக்கு விஷயம் ஆகாமையே அன்றி, மனத்தால் அறிவதற்கும் முடியாதவனாக இருப்பான். இதனால், தூரத்தனும்படிக்கு எல்லை கூறினார். தூயன்-இப்படி இருக்கிறவன் யசோதை முதலானவர்கட்கு [2] "நீ வல்லையாகில் போய்க் காணாய்" என்னலாம்படி இருப்பான். இதனால், அணிமைக்கு எல்லை கூறினார். துயக்கன் மயக்கன் - உகவாதார்க்கு ஐயம் திரிபுகளைப் பிறப்பிக் கின்றவன். இனி, இதற்கு [3] 'அருவினையேன்' என்று அகன்ற என் மனத்தைத் திரியவிட்டு, [4] 'உன் தேனே மலரும் திருப்பாதம் சேறுமாறு வினையேனே' என்னும்படி என்னுடனே கலந்தவன் என்று கூறலுமாம். என்னுடைத் தோளிணையானே-என் அளவில் [5] அங்ஙன் அன்றிக்கே, திருவடி திருத்தோளில் இருக்குமாறு போன்று, என் தோளில் இராநின்றான். (6)

95

தோளிணை மேலும்நன் மார்பின்
மேலும் சுடர்முடி மேலும்
தாளிணை மேலும் புனைந்த
தண்அம் துழாயுடை அம்மான்
கேளிணை ஒன்றும் இலாதான்
கிளரும் சுடர்ஒளி மூர்த்தி
நாளணைந்து ஒன்றும் அகலான்
என்னுடை நாவி னுளானே.

---

1. 'ஐம்பெரும்பூதங்களுள் மூன்றனைக் கூறியவதனால், ஏனை இரண்டனையும் உபலக்ஷணத்தாற்கொள்க' என்றனர் முன்னும். (பக். 100)

2. ஸ்ரீ விஷ்ணு புரா. 4. 6 : 15.

3. திருவாய் 1. 5 : 5.

4. திருவாய் 1. 5 : 5.

5. 'அங்ஙனன்றிக்கே' என்றது-ஐயம் திரிபுகளை உண்டாக்காமையே அன்றி என்றபடி.

பொ - ரை : இரண்டு தோள்களிலும் சிறந்த மார்பிலும் ஒலியையுடைய திருமுடியிலும் இரண்டு திருவடிகளிலும் அணிந்திருக்கின்ற குளிர்ந்த அழகிய திருத்துழாயினையுடைய தலைவன், தனக்கு உவமையாகப் பொருந்தத் தக்க பொருள் ஒன்றும் இல்லாதவன், மிக்க ஒளி பொருந்திய வடிவினையுடையவன், எப்பொழுதும் என்னைச் சேர்ந்து சிறிதும் அகலாதவன் ஆன எம்பெருமான் என் நாவினுள் இருக்கின்றவன் ஆனான்.

வி - கு : 'மேல்' என்பது ஏழனுருபு. கேள் என்பது கேழ் என்றதன் விகாரம். கேழ் - ஒப்பு; 'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா' (கம்பராமா.) என்றவிடத்து, 'கேழ்' இப்பொருட்டாதல் காண்க.

ஈடு: ஏழாம் பாட்டு. 'நான் உகந்தபடியே அலங்கரித்துக் கொண்டு வந்து என் நாவிலே கலந்தான்' என்கிறார். 'ஆயின், இவர் உகந்தபடியே இறைவன் வருதற்குக் காரணம் யாது?' எனின், தம்மால் காதலிக்கப்பட்டவர் இருக்கும் இடத்திற்குச் செல்லும் ஆடவர்கள், அவர்கள் விரும்புகிறவாறே பூசிப்புலர்த்தித் தம்மை அலங்கரித்துக்கொண்டு போமாறு போன்று, ஆழ்வார் இருக்கும் இடத்திற்குச் செல்லும் இறைவனும் ஆழ்வார் விரும்பியவாறே திருத்துழாயால் தன்னை அலங்கரித்துக்கொண்டு சென்றான். இவர் உகப்பதும் திருத்துழாயே, அவன் கொடுப்பதும் திருத்துழாயே அன்றோ? [1]'புள்ஊர்தி கள் ஊரும் துழாய்க் கொயல்வாய் மலர் மேல் மனத்'தையுடையராய் இருப்பர். 'எங்ஙனம்?' எனின், திருத்தாயார் கூறும் போதும் [2]'வண்டு திவளும் தண்ணம் துழாய் கொடீர்' என்பர். இவள் தானும் [3]'விரை மட்டுஅலர் தண் துழாய் என்னும்', [4]'கண்ணன் கழல்துழாய் பொன்செய் பூண்மென் முலைக்கு என்று மெலியும்'. இறைவனும், [5]'தன் மன்னு நீள்கழல் மேல் தண் துழாய் நமக்கு அன்றி நல்கான்' என்கிறபடியே, இவளுக்கு அன்றி நல்கான்.

---

1. திருவிருத்தம். 24.

2. திருவாய். 2. 4 : 5.

3. திருவாய் 2. 4 : 9. இப்பாசுரம் தாயார் கூற்றேயாயினும், 'என்னும்' என்று மகள் ஆசைப்படுவதாகக் கூறுவதால் மகள் கூற்று என்னக் குறையின்று.

4. திருவாய். 4. 2 : 10. இப்பாசுரமும் அத்தன்மையதேயாம். இத்துணையும் இவர் விரும்புவது திருத்துழாயே என்பதற்குக் காட்டிய மேற்கோள்கள்.

5. திருவாய். 6. 8 : 6. இது, 'இறைவன் கொடுப்பதும் திருத்துழாயே' என்பதற்கு எடுத்துக்காட்டு.

தோள் இணை மேலும் - 'அன்பினால் கெட்டியாக ஆலிங்கனம் செய்துகொண்டார்' என்கிறபடியே, அணைக்க விரும்புகிற திருத் தோள்களிலும், நன்மார்பின்மேலும் - அணைப்பிக்குமவள் இருக்கிற திருமார்பிலும். சுடர் முடி மேலும் - அணைத்துக்கொண்டு நின்று மேல் நோக்கிப் பார்த்தவாறே தன்னுடைய தலைமைக்குப் பிரகாசமா யிருக்கிற திருமுடியிலும். தாள் இணைமேலும் புனைந்த தண் அம் துழாயுடை அம்மான் தன்னுடைய இறைமையை நிலை நிறுத்துகின்ற திருவடிகளிலும் சாத்தின திருத்துழாயினையுடைய சர்வேஶ்வரன். இனி, இவ்வடிகட்குப் பட்டர் மிக அழகாகவும் ரசோக்தியாகவும் விசேடப்பொருள் அருளிச்செய்வர்; அப்பொருள் வருமாறு: வீரராய் இருப்பார் முற்பட ஆயுதத்திற்கு இடுவார்கள்; அப்படியே திருததோள்களுக்கு இட்டான். காதலர்களாய் இருப்பவர்கள் அன்புக்குரிய காதலிக்கு இடுவார்கள்; அப்படியே பெரிய பிராட்டியார் எழுந்தருளியிருக்கும் [2]கோயில் கட்டணத்துக்குக் கொடுத்தான்; ஆயுதத்திற்கும் காதலுக்கு உரியவர்களுக்கும் இட்டால், பின்னைத் தாம் தாம் அணிந்துகொள்ளுவார்கள் இத்தனையன்றோ? ஆதலின், தான் சூடினான்; சேஷம் பின்னர் அடியார் அன்றோ கைக்கொள்ளு வார்? ஆகையால், திருவடிகளுக்குச் சாத்தினான்; ஆபத்துக்குத் துணை செய்வார் அடியார் அன்றோ? தளர்ந்தும் முரிந்தும் சகட அசுரர் உடல் வேறாப் பிளந்து வீயப் பொருவார் அடியாரே அன்றோ? 'ஆயின், நம்முடைய ஆபத்துக்கு ஒழிய இறைவனுடைய ஆபத் துக்கும் திருவடி துணையாமோ?' எனின், நம்முடைய ஆபத்து களுக்குத் திருவடிகளே துணையாயினாற்போலே காணும் அவனுடைய ஆபத்துகளுக்கும் திருவடிகளே துணையாயினபடி.

கேள் இணை ஒன்றும் இலாதான் - கேள் என்ற இதனைக் 'கேழ்' என்றாக்கி, அதாவது, ஒப்பாய், இணை என்றும் ஒப்பாய், திரளவும் தனித்தனியும் ஒப்பு இல்லாதவன் என்றபடி. இனி, 'கேள்' என்று உறவாய், சேர்ந்த ஒப்பு இல்லாதவன் என்று கோடலும் ஆம். கிளரும் சுடர் ஒளி மூர்த்தி - ஆற்றுப் பெருக்குப் போன்று மேன்மேல் எனக் கிளராநிற்பதாய் எல்லை அற்ற ஒளி உருவமான திவ்விய மங்கள விக்கிரகத்தையுடையவன். 'சுடர், ஒளி' என்பன ஒரு பொருட்

1. ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 18 : 2.

2. கோயில் கட்டணம் - அந்தப்புரம்.

சொற்கள். 'மிக்க ஒளி' என்றபடி. இனி, ஒளி என்பதற்குப் பேரழகு என்று பொருள் கூறலுமாம். மேற்சொன்ன ஒப்பனையும் மிகை என்று கூறலாம்படியான வடிவையுடையவன் ஆதலின் 'மூர்த்தி' என்கிருர். நாள் அணைந்து ஒன்றும் அகலான் - நாள்தோறும் வந்து கிட்டுமத்தனை அல்லது கால்வாங்க மாட்டுகின்றிலன். என்னுடை நாவினுளான் - என்னுடைய துதிக்கு விஷயமானுன். இனி, இதற்கு 'வாக்கில் இருந்துகொண்டு வாக்கின் உள் இருக்கிறுன்,' என்கிற படியே, 'வாக்கு இந்திரியத்துக்கு அந்தர்யாமியாய் உள்ளவன்' என்று கூறலும் ஒன்று. (7)

96

நாவினுள் நின்று மலரும்
 ஞானக் கலைகளுக்கு எல்லாம்
ஆவியும் ஆக்கையும் தானே
 அழிப்போடு அளிப்பவன் தானே
பூவியல் நால்தடந் தோளன்
 பொருபடை ஆழிசங்கு ஏந்தும்
காவிநன் மேனிக் கமலக்
 கண்ணன்என் கண்ணி னுளானே.

**பொ - ரை :** நாவின் நுனியினின்றும் உண்டாகின்ற ஞானத்தைத் தருகின்ற எல்லாக் கலைகளுக்கும் உயிரும் உடலும் தானே யாவன்; அக்கலைகளை அழிக்கின்றவனும் அவற்றை அழியாமல் காக்கின்றவனும் தானேயாவன்; பூவின் தன்மையினையுடைய நான்கு திருத்தோள்களை யுடையவன்; போர் செய்கின்ற ஆயுதங்களாகிய சக்கரத்தையும் சங்கையும் தரித்திருக்கின்ற நீலோற்பலம் போன்ற நிறம் பொருந்திய திருமேனியினையும் தாமரை போன்ற திருக்கண்களையுமுடையவன் ஆன எம்பெருமான் என் கண்ணிலே தங்கியிருக்கிறுன்.

**வி - கு :** ஈண்டு 'ஆவி' என்றது, சொற்களால் அறியப்படும் பொருள்களை; 'யாக்கை' என்றது, சொற்களை. நால் - நான்கு.

**ஈடு:** எட்டாம் பாட்டு. [1] 'எல்லாக் கலைகளாலும் அறியப் படுகின்ற சர்வேஶ்வரன், பிரமாணங்களாலே காணக்கூடிய வடிவை என் கண்ணுக்கு விஷயமாக்கினுன்,' என்கிருர்.

---

1. 'கலைகளுக்கு எல்லாம் ஆவியும் ஆக்கையும் தானே' என்றதனை நோக்கி 'எல்லாக் கலைகளாலும் அறியப்படுகின்ற சர்வேஶ்வரன்' என்கிருர்.

நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கு எல்லாம்-நாவின் நுனியில் மலர்கின்ற ஞானத்திற்குக் கருவியான கலை விசேடங்களுக்கு எல்லாம். ஆவியும் ஆக்கையும் தானே - 'இப்பொருளை இச்சொல் காட்டக்கடவது' என்று நியமித்துவிட்டவன் அவன் என்றவாறு. ஆக, சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள சம்பந்தம் அவன் இட்ட வழக்கு என்றபடி. அழிப்போடு அளிப்பவன் தானே-சிற்றறிவினர்களான இம்மக்களுடைய நினைவின் குற்றங்களாலும், எழுதுங்காலத்து உண்டாகும் குற்றங்களாலும், பாடபேதங்களாலும், கலைகள் உருமாயும் அளவில் அழித்தும், விரும்புகிற காலத்தில் உண்டாக்கியும் செல்கின்றவன் தானே. இனி, இதற்கு, [1]'மற்றை அழித்தல் அளித்தல்களை அருளிச்செய்கிறார்' என்று பொருள் கூறுவாரும் உளர். பூ இயல் நால் தடம் தோளன் - [2]பூவால் அல்லது சொல்லாதபடி சுகுமாரமாய், கற்பகத்தரு பணைத்தாற்போன்று நான்காய், சுற்றுடைத்தாய் இருக்கிற திருத்தோள்களையுடையவன். இனி, 'பூ இயல் தோள்' என்பதற்குப் 'பூக்களால் அலங்கரிக்கப்பட்ட தோள்' என்று பொருள் கூறலுமாம். பொரு படை ஆழி சங்கு ஏந்தும்-பணைத்துப் பூத்த கற்பகத்தருப்போலேயாயிற்று, போருக்குக் கருவிகளான திவ்விய ஆயுதங்களைத் தரித்தால் இருக்கும்படி. போர் செய்வதற்குக் கருவிகளாய் இருத்தலின், '**பொருபடை**' என்கிறார். காவி நல்மேனி - அவ்வாயுதங்களாலே விரோதியைப் போக்கி அனுபவிப்பிக்கும் வடிவழகு. காவி, வடிவழகிற்கு உவமானமாக நேர் நில்லாமையாலே '**நன்மேனி**' என்கிறார். கமலக்கண்ணன் என் கண்ணினுளானே - திருமேனியின் அழகாகிய பெருவெள்ளத்திலே ஒரு சுழி போன்று திருக்கண்கள் இருத்தலின் '**நன்மேனிக் கமலக் கண்ணன்**' என்கிறார். வெளிப்பொருள்களை நுகர்ந்து போந்த இவருடைய கண்களுக்கு இறைவன் தன்னை விஷயமாக்கினன் ஆதலின், '**என் கண்ணினுளான்**' என்கிறார். இவர் கண் வட்டம் ஒழியப் புறம்பே போனால் [3]கண்வட்டக்கள்ளனும் ஆதலின், '**கண்ணினுளானே**' என ஏகாரங்கொடுத்து ஓதுகின்றார். (8)

---

1. 'மற்றை அழித்தல் அளித்தல்களை' என்றது, உலகை அழித்தல் காத்தல்களை.

2. பூக்களின் தன்மையான சௌகுமார்யத்தையுடைய தோள் என்பது பொருள்.

3. கண்வட்டக் கள்ளன் - சிநேகிதனுக்கு ஒன்று வேண்டியிருக்க, அதனைச் செய்யாவிடின், அவன் கண்முன் வரப் பயப்படுகின்றவன்.

97

[1] கமலக் கண்ணன்என் கண்ணின் உள்ளான்
காண்பன் அவன்கண்க ளாலே
அமலங்க ளாக விழிக்கும்
ஐம்புல னும்மவன் மூர்த்தி
கமலத்து அயன்நம்பி தன்னைக்
கண்ணுத லானொடும் தோற்றி
அமலத் தெய்வத்தோடு உலகம்
ஆக்கிஎன் நெற்றி யுளானே.

**பொ - ரை :** செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடைய இறைவன் என் கண்களுக்கு விஷயமானுன். யானும் அவனைக் காண்கின்றேன். நான் குற்றமற்றவன் ஆகும்படி அவன் தன் திருக்கண்களாலே நோக்குகிருன். ஐம்பொறிகளும் சரீரத்தைப் போன்று அவனுக்கு அடிமையாகிவிட்டன. தாமரைமலரில் வீற்றிருப்பவனும் எல்லாக் குணங்களும் நிறைந்தவனும் ஆன பிரமனைச் சிவபெருமானேடு படைத்து, பின், குற்றம் அற்ற ஏனைய தேவர்களோடு உலகங்களையும் படைத்த இறைவன், இப்பொழுது என் நெற்றியில் தங்கி இருக்கின்றவன் ஆனுன்.

**வி - கு :** விழிக்கும் - செய்யும் என் முற்று. 'தோற்றி' என்னும் எச்சத்தை 'ஆக்கி' என்னும் வினைப்பெயருடன் முடிக்க. ஆக்கி என்பது, 'நூற்றுவரைக்கொல்லி, சேர்ந்தாரைக்கொல்லி' என்பன போன்று வந்த வினைப்பெயர். ஆக்கி - உண்டாக்கினவன்.

**ஈடு :** ஒன்பதாம் பாட்டு. 'கண்ணிலே நின்ற நிலை பொறுத்தவாறே என் நெற்றியிலே வந்து நில்லாநின்ருன்,' என்கிருர்.

கமலக்கண்ணன் என் கண்ணின் உள்ளான் - புண்டரீகாக்ஷனனவன் என் கண்ணுக்கு விஷயமானுன். [1] 'இறைவன் கண்ணுக்குப் புலப்படுமவன் அல்லன்,' என்னும் மரியாதை குலைந்தது. 'அவன் அவ்வடிவை உம்முடைய கண்ணுக்கு விஷயமாக்கினுன் ஆகில், நீர் பின்னைச் செய்வது என் ?' என்னில், காண்பன் - நானும் கண்டு அனுபவியாநின்றேன். 'உலகத்திற்கே வேறுபட்ட இறைவனை நீர் கண்டு அனுபவிக்க வல்லீரானபடி எங்ஙனே ?' எனின், அவன் கண்களாலே அமலங்காக விழிக்கும் - அவன் தன் திருக்கண்

1. 'கமலக்கண்ணன் கண்ணினுள்ளான்' என்றிருத்தற்பாலது.

களாலே என் குற்றம் எல்லாம் கழிந்து நான் காண வல்லேனும்படி குளிர நோக்குகின்றான். 'ஆயினும், காண்கைக்குத் தடைகளாக இந்திரியங்கள் என்பன சில உளவே? அவை செய்வன என்?' என்ன, ஐம்புலனும் அவன் மூர்த்தி - காட்சிக்குத் தடைகளான ஐம்பொறிகளும் அவன் இட்ட வழக்காம்படி அவனுக்குச் சரீரத்தைப் போன்று உரிமைப்பட்டு அங்கேயே [1] படை அற்றன. கமலத்து அயன் நம்பிதன்னைக் கண்ணுதலானொடும் தோற்றி அமலம் தெய்வத்தோடு உலகம் ஆக்கி - திருநாபிக் மலத்தில் நேரே பிறந்து, எல்லாரிலும் வேறுபட்ட பிறவியையுடையவனாய், தனக்கு இப்பால் உள்ளவற்றைப் படைக்குமிடத்தில் சர்வேஸ்வரனைக் கேள்வி கொள்ள வேண்டாதபடி ஞானம் நிறைந்த நான்முகனை நெற்றிக் கண்ணனான சிவபெருமானோடு உண்டாக்கி, அவ்வளவில் முடிவு பெறாமல், சத்துவகுணம் மிக்குள்ள தேவர்களோடே உலகங்களை உண்டாக்கினவன். 'நெய்யுண்ணி' என்னுமாறு போன்று 'ஆக்கி' என்றது, 'ஆக்குந் தன்மையன்' என்றபடி. என் நெற்றியுளான் - [2] கர்மங்களுக்குத் தகுதியாக உலகத்தை உண்டாக்கிவிட்டான். [3] 'பிரயோஜனத்தில் விருப்பம் இல்லாமல் என் நெற்றியில் புகுந்து நின்றான்' என்பார், '**நெற்றியுளானே**' என ஏகாரம் கொடுத்து ஓதுகின்றார். (9)

98

நெற்றியுள் நின்றுஎனை ஆளும்
நிரைமலர்ப் பாதங்கள் சூடிக்
கற்றைத் துழாய்முடிக் கோலக்
கண்ண பிரானைத் தொழுவார்
ஒற்றைப் பிறைஅணிந் தானும்
நான்முக னும்மிந் திரனும்
மற்றை அமரரும் எல்லாம்
வந்துஎனது உச்சியு ளானே.

பொ - ரை : ஒரு கலையுடன் கூடின பிறைச்சந்திரனை அணிந் திருக்கின்ற சிவபெருமானும் பிரமனும் இந்திரனும் மற்றும் இருக்கின்ற

1. படை அறுதல் - அடிமைப்படுதல்.

2. மேலே வியஷ்டி சிருஷ்டி அருளிச்செய்கையாலே இங்குக் 'கர்மங்களுக்குத் தகுதியாக உலகத்தை உண்டாக்கிவிட்டான்' என்கிறார்.

3. அவ்வருகு போக்கு இல்லாமையாலே 'பிரயோஜனத்தில் விருப்பம் இல்லாமல்' என்கிறார்.

தேவர்கள் எல்லோரும், எனது நெற்றியிலே நிலைபெற்று என்னை அடிமைகொள்ளுகின்ற மலர்போன்ற இரண்டு திருவடிகளையும் தங்கள் தங்கள் தலைகளின்மீது அணிந்துகொண்டு, தொகுதியான திருத் துழாய் மாலையினைத் தரித்த திருமுடியையுடைய அழகிய கண்ண பிரானை வணங்குவார்கள்; அவர்கள் அவ்வாறு வணங்கிக்கொண் டிருக்க, அக்கண்ணபிரான் வந்து எனது உச்சியிலே புகுந்தான்.

வி - கு: 'ஆளும்' என்ற எச்சத்தைப் 'பாதங்கள்' என்னும் பெய ருடனும், 'சூடி' என்னும் எச்சத்தைத் 'தொழுவார்' என்னும் வினையுட னும் முடிக்க. தொழுவார், முற்று.

ஈடு: பத்தாம் பாட்டு. 'பிரமன் முதலான தேவர்கள் தன்னைப் பெறுகைக்குக் காலம் பார்த்துத் தடுமாறும்படி இருக்கிறவன் தான் [1] என்னைப் பெறுகைக்குக் காலம் பார்த்து வந்து என் உச்சியுள் ஆனான்,' என்கிறார்.

நெற்றியுள் நின்று எனை ஆளும் - நெற்றியுள் நின்று என்னை அடிமை கொள்ளுகின்ற. நிரை மலர்ப்பாதங்கள் சூடி - மலரை நிரைத்தாற்போன்று இருக்கின்ற திருவடிகளைத் தலைகளிலே சூடி. கற்றைத் துழாய் முடிக் கோலக் கண்ணபிரானைத் தொழுவார் - செவ்வி பெற்றுத் தழைக்கிற திருத்துழாயோடே கூடின திருமுடியை யுடையவனாய்க் காட்சிக்கு இனிய வடிவையுமுடைய உபகாரத்தைச் செய்கின்றவனான கிருஷ்ணனைத் தொழுகின்றவர்கள். ஒரு வாடல் மாலையைக் கொண்டு வந்து திருமுடியிலே வைத்தாலும், திருக் குழலின் சம்பந்தத்தால் செவ்வி பெற்றுத் தழையாநிற்குமாதலின் '**கற்றைத் துழாய் முடி**' என்கிறார். கற்றை - தழைத்தல். [2] 'தழைக்குந் துழாய்' என வருமாறுங்காண்க. ஒற்றைப்பிறை அணிந்தானும் - ஒரு கலையோடு கூடிய சந்திரனைச் சடையிலே தரித்துச் சுகத்தில் மிகுந்தவனாய் இருக்கிற சிவபெருமானும். நான் முகனும்-அவனுக்குத் தந்தையான பிரமனும். இந்திரனும்-தேவர்களை [3] மெய்க்காட்டுக் கொண்டிருக்கிற இந்திரனும். மற்றை அமரரும்

---

1. 'வந்து எனது உச்சியுளானே' என்றதனை நோக்கி, அவதாரிகை யில் 'என்னைப் பெறுகைக்குக் காலம் பார்த்து' என்று அருளிச்செய்கிறார்.

2. பெரிய திருவந்தாதி, 39. கற்றை என்பதற்குத் தொகுதி என்பது பொருள்; கருத்துப்பொருளாகத் தழைக்கும் என்று பொருள் அருளிச் செய்கிறார்.

3. மெய்க்காட்டு - நேரில் வந்து தோற்றுகை. 'தேவர்களைச் சனியும் புதனும் மெய்க்காட்டுக்கொண்டு அவர்கள் மிகுதி குறைகள் ஆராய்ந்து போருகிற இந்திரனும்' (ஈடு 3. 6 : 4.) என்ற இடத்தும் இப்பொருள் படுதல் காண்க.

எல்லாம் - மற்றும் உண்டான தேவர்களும் எல்லாம். எனது உச்சி யுளான் - தேவர்கள் தன்னைப் பெறுகைக்கு இப்படித் தடுமாறுநிற்க, என்னைப் பெறுகைக்கு அவற்றை எல்லாம் தான் பட்டு வந்து, என் உச்சியிலுள்ளவன் ஆகின்றான். இராசாக்கள் அந்தப்புரத்தில் ஒரு கட்டினின்றும் மற்றைக்கட்டு ஏறப்போகாநிற்க, அந்தரங்கர் நடுவே முகங்காட்டித் தம் காரியங்கொண்டு போமாறு போன்று, இறைவன் இவர் திருநெற்றியினின்றும் திருமுடி ஏறப் போகாநின்றால் பிரமன் முதலான தேவர்கள் நடுவே முகங்காட்டித் தங்கள் காரியம் கொண்டு போவர் ஆதலின், '**அமரரும் எல்லாம் தொழாநிற்க வந்து எனது உச்சியுளான்**' என்கிறார். (10)

99

*உச்சியுள் ளேநிற்கும் தேவ*
*தேவற்குக் கண்ண பிரானுக்கு*
*இச்சையுள் செல்ல உணர்த்தி*
*வண்குரு கூர்ச்சட கோபன்*
*இச்சொன்ன ஆயி ரத்துள்*
*இவையும்ஓர் பத்துஎம் பிராற்கு*
*நிச்சலும் விண்ணப்பம் செய்ய*
*நீள்கழல் சென்னி பொருமே.*

**பொ - ரை:** திருக்குருகூரில் அவதரித்த வள்ளலாரான ஸ்ரீ சடகோபர், தமது உச்சியுள்ளே எழுந்தருளியிருக்கின்ற, தேவர்கட்கு எல்லாம் தேவனான கண்ணபிரானுக்கு, அக் கண்ணபிரான் தம்மிடத்து வைத்துள்ள விருப்பத்தைத் தாம் அறிந்த தன்மையை அவன் திருவுள்ளத்திலே படும்படி உணர்த்தி, இவ்வாறு உணர்த்திய கருத்தோடு அருளிச்செய்த ஆயிரம் திருப்பாசுரங்களுள் ஒப்பற்ற இப்பத்துத் திருப்பாசுரங்களையும் இறைவன் திருமுன்னர் ஒருகால் கூறின், அவ் விறைவனுடைய நீண்ட திருவடிகள் கூறுகின்றவர்களுடைய தலைகளில் எப்பொழுதும் சேர்ந்திருக்கும்.

**வி - கு:** 'கண்ணபிரானுக்குச் செல்ல உணர்த்திச் சொன்ன இவையும் ஓர்பத்து' எனக் கூட்டுக. கூட்டி, 'இப்பத்தையும் எம்பிராற்கு விண்ணப்பம் செய்ய நீள்கழல் நிச்சலும் சென்னி போரும்' என இயைக்க. 'நிச்சல்' என்பது, 'நித்தல்' என்பதன் போலி.

ஈடு: முடிவில், ‘இத்திருவாய்மொழியை எம்பெருமானுக்கு விண்ணப்பம் செய்ய, அவர்கள் தலைகளிலே எம்பெருமான் திருவடிகள் நாடோறும் சேரும்,’ என்கிறார்.

தேவ தேவன் உச்சியுள்ளே நிற்கும் - இனி, ‘எங்கே போவதாக இருந்தான்?’ என்னில், ‘அமரர் சென்னிப் பூவான தான் என் சென்னிக்கு அவ்வருகு ‘கந்தவ்ய பூமி இல்லை’ என்று என் உச்சியுள்ளே வசிக்கின்றான். ‘அயர்வு அறும் அமரர்கள் அதி பதியாய் இருக்கும் இருப்பையும் நினைந்திலன்,’ என்பார், ‘**தேவ தேவன் உச்சியுள்ளே நிற்கும்**’ என்கிறார். இனி, அவ்வருகு போக்கு இல்லை என்பார், ‘**உள்ளே நிற்கும்**’ என்கிறார் எனலும் ஒன்று. இனி, இத்தொடரைப் பிரித்துக் கூட்டாது, உள்ளவாறே கொண்டு, ‘என் உச்சியுள்ளே நிற்கையாலே தேவ தேவன் ஆனான்’ என்று பொருள் கூறலுமாம். கண்ணபிராற்கு - உபகாரத்தைச் செய்யும் கிருஷ்ணனுக்கு. இச்சை உள் செல்ல உணர்த்தி-சர்வேஸ்வரனுக்குத் தம் பக்கல் உண்டான இச்சையைத் தாம் அறிந்தபடியை அவன் திருவுள்ளத்தில் படும்படி உணர்த்தி. வண் குருகூர்ச் சடகோபன் - சர்வேஸ்வரனுக்கு அறிவித்த அளவே அன்றி, சம்சாரிகளும் அறியும்படி செய்த உதாரரான ஆழ்வார். இச்சொன்ன ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து - இந்த எண்ணத்தோடு அருளிச் செய்த ஆயிரத்திலும் இவையும் ஓர் பத்து. எம்பிராற்கு விண்ணப்பம் செய்ய, நீள்கழல் சென்னி பொரும்-தனக்குப் பாங்கான சமயத்தில் ஒருகால் விண்ணப்பம் செய்ய, நாள்தோறும் ஆசை சிறிது உடையார் இருந்த இடத்திலே செல்ல வளரும் திருவடிகள் சென்னியோடே சேரும். இப்படிப் பொறுக்கப் பொறுக்கவும், இழவு மறக்கவும் அனுபவித்த உபகாரகன் ஆதலின் [1]‘**எம்பிரான்**’ என்கிறார். [2]ஆழ்வார் கிரமத்திலே ‘உச்சியுளானே’ என்ற பேறு. இது கற்றார்க்கு முதலடியிலே உண்டாம். பொரு என்பது ஒப்பு; ஒப்பாவது - சேர்தல்; ஆக, பொரு என்பதற்குச் சேர்தல் என்பது பொருளாம். ‘உச்சியுள்ளே நிற்கும்’ என்றதனால், இவர் பெற்றதுவே பேறுகக் கடவது.[3]

---

1. *‘கண்ணபிரான்’ என்கிற இடத்தில் எல்லாப்பொருள்கட்கும் செய்யும் உபகாரத்தையும், ‘எம்பிரான்’ என்கிற இடத்தில், தமக்குச் செய்த உபகாரத்தையும் தெரிவித்தபடி.*

2. *பகவானுடைய அங்கீகாரத்தைக்காட்டிலும், ஆழ்வாருடைய அபிமானத்துக்கு ஆதிக்கியம் உண்டு என்பதனைத் தெரிவிக்கிறார், ‘ஆழ்வார்’ என்று தொடங்கும் வாக்கியத்தால்.*

3. *இதனால், இது கற்றார்க்குப் பலத்தில் பேதம் இல்லை; ‘இவர்க்கு உள்ள பலமே பலம்’ என்கிறார்.*

முதற்பாட்டில், ‘என்னுடைய எல்லையிலே வந்து நின்றான்’ என்றார்; இரண்டாம் பாட்டில், ‘அது பொறுத்தவாறே அருகே நின்றான்’ என்றார்; மூன்றாம் பாட்டில், தம்முடன் கூட நின்றான் என்றார்; நான்காம் பாட்டில், ‘ஒக்கலையில் வந்து நின்றான்’ என்றார்; ஐந்தாம் பாட்டில், ‘நெஞ்சிலே வந்து புகுந்தான்’ என்றார்; ஆறாம் பாட்டில், ‘தோளிலே வந்திருந்தான்’ என்றார்; ஏழாம் பாட்டில் ‘நாவிலே வந்து புகுந்தான்’ என்றார்; எட்டாம் பாட்டில், ‘கண்ணுள்ளே நின்றான்’ என்றார்; ஒன்பதாம் பாட்டில், ‘நெற்றியிலே நின்றான்’ என்றார்; பத்தாம் பாட்டில், ‘திருமுடியிலே நின்றான்’ என்றார்; முடிவில், பலம் சொல்லித் தலைக்கட்டினார். இனி, தம்முடனே பொறுக்கும்படி கலக்கையாலே அவனைத் தலைமேற் கொண்டார் எனலுமாம். **(11)**

## திருவாய்மொழி நூற்றந்தாதி

இவைஅறிந்தோர் தம்மளவில் ஈசன்உவந் தாற்ற
அவயவங்கள் தோறும் அணையும்–சுவையதனைப்
பெற்றுஆர்வத் தால்மாறன் பேசினசொல் பேசமால்
பொற்றாள்நம் சென்னி பொரும். (9)

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே அரண்.

# பத்தாந்திருவாய்மொழி - ‘பொருமாநீள்’

## முன்னுரை

மேல் திருவாய்மொழியில், தமது எல்லா அவயவங்களிலும் இறைவன் சேர்ந்த சேர்க்கையை நினைத்து இன்புறுகின்றார் என்று மேல் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்வர் முன்புள்ள பெரியோர்கள். [1] இங்கு, மேல் எல்லா உறுப்புகளிலும் இறைவன் சேர்ந்த சேர்க்கையை அநுசந்தித்துப் பட்டர் அருளிச்செய்வதோர் ஏற்றம் உண்டு. அதாவது, மேல் திருவாய்மொழியில் ‘உச்சியுள்ளே நிற்கும்’ என்று அன்றே அருளிச் செய்தார்? பேற்றில் இனி, ‘இதற்கு அவ்வருகு ஏற்றமாகச் செய்து கொடுக்கலாவது [2] ஒன்றும் இன்று; இனி, இதனுடைய பிரிவின்மையைச் செய்து கொடுக்கையே உள்ளது; பேறு கனத்து இருந்தது. இது வந்த வழி என்னே?’ என்று ஆராய்ந்தார்; [3] இப்பேற்றின் கனத்துக்கு ஈடாக இருப்பது ஒரு நன்மை தம்மிடத்தில் இல்லாது இருந்தது; ‘ஏன் இல்லையோ?’ எனின், இத்தலையில் ஏதேனும் உண்டாகப் பார்த்தாலும், வெறுப்பின்மை எதிர் முகமாதல் என்னும் இவையே உள்ளனவாம்; இவற்றைத் தாம் பெற்ற பேற்றிற்கு ஒரு சாதனமாகச் சொல்லப்போகா; ‘என்னே?’ எனில், இத்தலையில் பரமபத்தி அளவாகப் பிறந்தாலும்

---

1. மேல் திருப்பதிகத்தில், ‘ஆழ்வார், தம்முடைய எல்லா அவயவங்களிலும் இறைவன் சேர்ந்த சேர்க்கையை நினைத்து இன்புறுகிறார்’ என்ற கருத்தில், முன்புள்ள பெரியோர்களுடைய திருவுள்ளத்தைப் பட்டர் அடி ஒற்றினாராயினும், ‘இறைவன், ஒருவிதக் காரணமும் பற்றாத திருவருளால் தம்முடைய எல்லா அவயவங்களிலும் சேர்ந்த சேர்க்கையை நினைத்து இன்புறுகிறார்’ என்று பட்டர் அருளிச்செய்யும் அழகு அறிஞர் கண்டு மகிழ்தற்குரியது. மேல் திருப்பதிகத்தில் பிறந்த ‘சர்வாங்க சம்ஸ்லேஷத்துக்கு ஏதுவாக, இத்திருப்பதிகத்தில் ஏதாவது ஒன்றைக் கூறியது உண்டோ?’ என்று ஆராய்ந்து பார்த்து, காணாமையாலே பட்டர் இங்ஙனம் அருளிச்செய்கிறார்.

2. ‘ஒன்றும் இன்று’ என்பது என்? பரமபதத்தில் கொண்டுபோய் அனுபவிப்பவிக்கிறது ஏற்றம் அன்றோ?’ என்ன, ‘அன்று’ என்கிறார் ‘இனி, இதனுடைய பிரிவின்மையைச் செய்து கொடுக்கையே உள்ளது’ என்பதனாலே. ஆதலால், பேறு கனத்திருந்தது என்று கூட்டுக.

3. ‘இப்பேற்றின் கனத்துக்கு ஈடாக இருப்பது ஒரு நன்மை தம்மிடத்தில் இல்லாதிருந்தது’ என்ற வாக்கியத்தை, ‘அங்ஙனமிருந்தும், நித்தியசூரிகள் பேற்றை, அநாதி காலம் உழன்று திரிந்த நமக்குத் தந்தான்’ என மேல் வரும் வாக்கியத்தோடே கூட்டுக.

பேற்றின் கனத்துக்கு இதனை ஒரு சாதனமாகச் சொல்லுதற்கு இல்லையே ; என் போல !' எனில், ஒருவன் ஓர் எலுமிச்சம் பழம் கொடுத்து இராச்சியத்தைப் பெற்றால் அதற்கு அது விலையாய் இராதே; மற்றும், சர்வேஸ்வரன் அடியாக வரும் பேற்றுக்கு இத்தலையால் ஒரு காரணத்தை நிரூபிப்பதற்கும் இல்லையே ? [1]'வரவாறு ஒன்று இல்லையால் வாழ்வு இனிதால்' என்னும் படியன்றே இருப்பது ? மற்றும், இவனை முதலிலே படைக்கிற போது 'இவன் தீய வழியைத் தப்பி நல்லவழி போக வேண்டும்' என்று உறுப்புக்களைக் கொடுத்துவிடுகையாலே, இவன் தலையால் பிறந்த நன்மைக்கும் காரணம் அவனாக இருப்பான்; இனி, புத்தி முதலான எல்லாப் பொருள்கட்கும் நிர்வாஹகன் ஆகையாலே, வெறுப்பின்மை தொடக்கமாகப் பரிகணனை நடுவாக, பரமபத்தி முடிவாகப் பிறப் பிப்பான் ஒருவனும் இறைவனேயாவன் ; ஆதலால், 'நித்தியசூரிகள் பேற்றை, அநாதி காலம் உழன்று திரிந்த நமக்குத் தந்தான், அவன் திருவருள் இருக்கும்படி என் ?' என்று, மேல் திருவாய்மொழியில் தலைமுடிவாகப் பிறந்த சேர்க்கையாலாய சுவையை நினைத்து இன்புறுகிறார் என்பது.

100

*பொருமா நீள்படை ஆழிசங் கத்தொடு*
*திருமா நீள்கழல் ஏழுல கும்தொழ*
*ஒருமா ணிக்குற ளாகி நிமிர்ந்தஅக்*
*கருமா ணிக்கம்என் கண்ணுள தாகுமே.*

**பொ-ரை:** பகைவர்களோடு போர் செய்கின்ற பெருமை பொருந்திய நீண்ட ஆயுதங்களான சக்கரம் சங்கு என்னும் இவற்றோடு, செல்வத்தைத் தருகின்ற பூஜிக்கத் தக்க நீண்ட திருவடிகளை ஏழுலகத் துள்ளாரும் தொழுது வணங்கும்படி, ஒப்பற்ற பிரமசரிய நிலையை யுடைய குட்டையனாகி, பின் வளர்ந்த அந்தக் கரிய மாணிக்கம் போன்ற இறைவன் என் கண்களில் இருக்கின்றவன் ஆனான்.

**வி-கு:** 'ஆழி சங்கத்தோடு கழலைத்தொழ ஆகி நிமிர்ந்த அக்கரு மாணிக்கம்' எனக் கூட்டுக. 'நீள்படை, நீள்கழல்' என்பன வினைத் தொகைகள். மாணி - பிரமசாரி. மாணிக்கம் என்பது சொல்லால் அஃறிணையாதலின், உளதாகும் என அஃறிணை முடிபு கொடுத்து ஓதி

1. *பெரிய திருவந்.* 56.

ஞர். 'என் கண்' என்பதில், கண் என்பது பெயர்ச்சொல். ஏழாம் வேற்றுமை யுருபாகக் கொள்ளினும் அமையும்.

இத்திருவாய்மொழி, துள்ளல் ஓசையில் வழுவி, நாற்சீர் நாலடி யான் வருதலின் கலி விருத்தம் எனப்பெறும்.

**ஈடு:** முதற்பாட்டு. இத்திருவாய்மொழியில் அருளிச்செய்கிற பொருள்களை எல்லாம் தொகுத்து அருளிச்செய்கிறூர். இப்பாசுரத்தில், மகாபலி, தன் வரவை நினையாதே இருக்க, அவன் பக்கலிலே இரப்பாளனுய்ச் சென்று தன்னுடைமையைத் தனது ஆக்கியது போன்று, நான் நினைவு இன்றிக்கே இருக்கத் தானே வந்து தன் வடிவழகை என் கண்ணுக்கு இலக்கு ஆக்கினுன் என்று அவன் தன்மையை நினைந்து இனியர் ஆகிறூர்.

பொரு - இத்தால், திரு உலகு அளந்தருளுகிற போது, திவ்விய ஆயுதங்கள் நமுசி முதலாயினுர்கள் மேலே பொருதபடியைச் சொல்லுகிறூர். இனி, திவ்விய ஆயுதங்கள் தாம் ஒருவரை ஒருவர் ஐயங்கொண்டு பொருகிறபடியைச் சொல்லுகிறூர் என்று கோடலுமாம். ஆயின், நமுசி முதலாயினுர்களோடே பொரும் என்ற பொருள் பொருந்துவதாம்; [1] 'இடங்கை வலம்புரி நின்றூர்ப்ப எரிகான்று, அடங்கார் ஒடுங்குவித்தது ஆழி-விடங்காலும், தீவாய் அரவணைமேல் தோன்றல் திசையளப்பான், பூவார் அடிநிமிர்த்த போது' என்றூர் பூதத்தாழ்வாரும். திவ்விய ஆயுதங்கள் தம்மில் தாம் பொருதல்

---

1. இடங்கை வலம்புரி நின்று ஆர்ப்ப-இடத்திருக்கையில் ஸ்ரீபாஞ்சஜன்யமானது அப்போது அப்போது பிறந்த வெற்றியை நினைத்து ஆரவாரித்தது; எரி கான்று அடங்கார் ஒடுங்குவித்தது ஆழி-அங்ஙனம் ஆர்ப்பதற்கு அவசரமின்றிக்கே, திருவாழி, நெருப்பை உமிழ்ந்து பகைவர்களை 'வாய், வாய்' என்று ஒடுங்கப்பண்ணியது; விடங்காலுந் தீவாய் அரவணை-திருவனந்தாழ்வான் பகைவர்கள் மேலே கிடந்த இடத்தே கிடந்து நெருப்பை உமிழ்ந்தான்; அவன், 'ஆங்கு ஆரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்கார் அரவணை'யாவன் அன்றே? அப்பரமபதத்திலும் இப்படிச் செய்யுமவன், பகைவர்கள் நிறைந்திருக்கும் இத்தேசத்தில் இப்படிச் செய்யச்சொல்ல வேண்டுமோ? ஆங்கு ஆரவாரமாவது, "அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத:" என்னும் ஆரவாரம். அஹமந்நம்-நான் பகவானுக்கு இனியன்; அஹமந்நாத:—நான் பகவானுகிற இன்பத்தை அனுபவிக்கிறவன். (தைத்திரீய உபநிடதம், பிரு. 10.) 'அங்கே அது கேட்டு அப்படிப் படுகின்றவர்கள் இத்தேசத்தில் இது கண்டால் சொல்ல வேண்டுமோ?' என்றபடி. 'இவர்கள் இப்படி அலமருகைக்கு அடி என்?' என்னில், அரவணைமேல் தோன்றல் திசையளப்பான் பூவார் அடி நிமிர்த்த போது-திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய சர்வேஸ்வரன் காடும் ஓடையும் அளக்கைக்காகப் புஷ்பஹாஸ சுகுமாரமான திருவடிகளை நிமிர்த்த போது, எல்லாம் படவேண்டாவோ அவன் இப்படி வியாபாரியாநின்றூல்?' (இரண்டாந்திருவந். 71.)

என்ற போது - [1] அஸ்தான பயசங்கையாலே ஒருவரை ஒருவர் ஐயங் கொண்டு பொருகிறார்கள் என்றபடி. [2] 'ஸ்ரீராகவனைச் சரணமாக அடைந்தேன்' என்ற விபீஷணனை அன்றோ 'கொல்லுங்கள்' என்றார்கள் ? [3] 'ஸ்ரீபரதனைக் கொல்லுவதில் பாவத்தை நான் பார்க் கின்றேன் இல்லை' என்றார் இளைய பெருமாள். மா - அவற்றின் வடிவின் பெருமையைச் சொல்லுகிறது. அன்றி, அடியார்கள் திறத்தில் இறைவனைக்காட்டிலும் அவர்களுக்கு உண்டான பக்ஷபாதத்தைச் சொல்லுகிறது என்று கோடலுமாம். ஆக, இதனால், [4] 'விஷ்ணுவை வழிபட்டு வணங்குகிற உயிர்களை, ஒன்று லும் தடுக்கப்படாதவைகளான சக்கரம் முதலிய ஆயுதங்கள் எல்லா ஆபத்துகளினின்றும் காப்பாற்றுகின்றன' என்கிறபடியே, [5] சர்வேஸ்வரன் எதிரியானாலும் அவன் கையிலே காட்டிக்கொடாமல் நோக்கும் பெருமையைச் சொல்லுகிறது.

நீள் படை ஆழி சங்கத்தொடு - நீள் படையான ஆழி சங்கத் தோடே கூட. 'ஆயிரங்காதம் பறப்பதன் குட்டி ஐந்நூறு காதம் சிறகடிக்கொள்ளும்' என்னுமாறு, படைகள் சர்வேஸ்வரன் அதிகரித்த காரியத்திலே அவன் தன்னிலும் முற்பட்டு இருப்பவை ஆதலின் '**நீள்படை**' என்கிறார். திரு மா நீள் கழல் ஏழ் உலகும் தொழ - செல்வத்திற்கு அறிகுறியானவையும், சிரமேற்கொள்ளத் தக்க வையும், ஆசை சிறிது உடையார் இருந்த இடம் எல்லையாக வளர் வனவும் ஆன திருவடிகளை ஒரு சாதந அனுஷ்டானம் பண்ணுதாரும் தொழும்படியாக. [6] 'நின் பாத பங்கயமே தலைக்கு அணியாய்' என்று ஆசைப்பட்டுக் கிடக்கும் திருவடியையன்றோ ஆசை

---

1. *அஸ்தானபயம்-இடமல்லாதவிடத்தில் உண்டாகும் பயம்.*

2. *ஸ்ரீராமா. யுத்.* 17 : 27.

3. *ஸ்ரீராமா. அயோத்.* 96 : 24.

*இந்த ஸ்ரீராமாயண சுலோகங்கள் இரண்டும் இடம் அல்லாத இடத் தில் உண்டாகும் பயத்திற்குக் காட்டப்படும் மேற்கோள்கள்.*

4. *விஷ்ணு தர்மம், அத்* : 78.

5. *திருவாழியாழ்வானும், இஷீகாஸ்திரமும், துர்வாசரையும் காகத் தையும் மெள்ள மெள்ளப் பின் தொடர்ந்தமை இங்கு நினைவு கூர்க. அவ் வாறு தொடர்ந்தமையாலன்றோ அவர்கட்குச் சரணாகதிக்கு அவகாசம் கிடைத்தது.*

6. *திருவாய்மொழி*, 9. 2 : 2.

இல்லாதார் தலைகளிலும் வைத்தான் என்பார், '**ஏழ் உலகும் தொழ**' என்கிறார். ஒரு - இவன் தானே இவ்வடிவை இன்னம் ஒருகால் கொள்ள வேண்டும் என்னிலும் வாயாதபடி இரண்டாவது இல்லாத தாய் இருக்கை. மாணி-திருமகள் கேள்வன் என்று தோன்றாதபடி இரப்பிலே தழும்பு ஏறுகை. குறளாகி-கோடியைக் காணியாக்கியது போன்று, பெரிய வடிவைக் கண்ணாலே முகக்கலாம்படி சுருக்கின படி. நிமிர்ந்த - அடியிலே நீர் வார்த்துக் கொடுத்தவாறே நிமிர்ந்த படி. வாசுதேவ தரு ஆதலின் '**நிமிர்ந்த**' என்கிறார், நிமிர்ந்த அக்கருமாணிக்கம் - நெய்தற்காடு அலர்ந்தாற்போலே ஆகாயம் முழுதையும் தன் வடிவழகாலே பாரித்தபடி. மயர்வற மதிநலம் அருளப்பெற்ற தம்மாலும் அளவிட்டு அறிய முடியாது இருத்தலின் '**அக்கருமாணிக்கம்**' என்று சுட்டுகிறார். என்கண் உளதாகும்-ஏழ் உலகத்துள்ளார் வாசி அறிந்திலர்; அவ்வாசி அறியுமவராகை யாலே '**என் கண் உளதாகும்**' என்கிறார். கண் என்று இடமாம், என்னிடத்தாகும் என்னவுமாம். மாணிக்கம் என்கையாலே, 'உளதாகும்' என்கிறார். (1)

101

*கண்ணுள் ளேநிற்கும் காதன்மை யால்தொழில்*
*எண்ணி லும்வரும் என்இனி வேண்டுவம்*
*மண்ணும் நீரும் எரியும்நல் வாயுவும்*
*விண்ணு மாய்விரி யும்எம்பி ரானையே.*

**பொ - ரை:** *பூமியும் தண்ணீரும் நெருப்பும் சிறந்த காற்றும் ஆகாயமும் ஆகிய இவற்றின் உருவமாக விரிகின்ற எம்பிரான், பரம பத்தியோடு வணங்கினால் வணங்குகிறவர்களுடைய கண்களிலேயே நிற்பான்; ஒன்று இரண்டு என்பன முதலாக எண்ணுமிடத்தும் வரு வான்; இறைவன் தன்மை இதுவான பின்னர், நாம் அவனிடத்தில் இரந்து வேண்டும் குறை யாது உளது?*

**வி - கு:** *'நிற்கும், வரும்' என்பன, செய்யுமென் முற்றுகள். எம் பிரானை என்பது 'எம்பிரான்' என்னும் பொருட்டு; வேற்றுமை மயக்கம்.*

**ஈடு:** இரண்டாம் பாட்டு. 'பரமபத்திக்கும் [1] பரிகணனைக்கும் ஒக்க முகங்காட்டுவான்' என்கிறார்.

காதன்மையால் தொழில் கண்ணுளே நிற்கும்-பரம பத்தி யுடையவர்களாகித் தொழுதால், அவர்கள் கண் வட்டத்துக்கு அவ்வருகு போகமாட்டாதே நிற்பான். தன்னை ஒழியச் செல்லா

---

1. *பரிகணனை-அளவிடுதல்; எண்ணுதல்.*

மையையுடையராய்க்கொண்டு தொழுதால், தானும் அவர்களை ஒழியச் செல்லாமையையுடையனுய் அவர்கள் கண் வட்டத்தி னின்றும் கால் வாங்க மாட்டாமல் நிற்பான் என்பார், '**கண்ணுளே**' என ஏகாரங் கொடுத்து ஓதுகிருர். எண்ணிலும் வரும் [1]'கடம், படம், ஈஸ்வரன்' என்ருல், 'நம்மை 'இல்லை' என்னுமல், இவற் ரேடு ஒக்க எண்ணினன் அன்றே?' என்று வரும். அன்றிக்கே, '**இருபத்து நான்காவது தத்துவம்-அசித்து, இருபத்தைந்தாவது தத்துவம் - ஆத்துமா, இருபத்தாருவது தத்துவம் ஈஸ்வரன்**' என்ருல், 'நம்முடைய உண்மையையும் இவற்றைப்போன்று இசைந் தான் அன்றே?' என்று வந்து முகங்காட்டுவான் என்று கூறலுமாம். அன்றிக்கே, 'இருபத்துநான்கு, இருபத்தைந்து, இருபத்தாறு' என்று எண்ணினுல், '**இருபத்தாறு யானே**' என்று வருவான் என்று பொருள் கூறலும் ஒன்று. [2]அன்றிக்கே, நம்முடைய எண்ணை மிஞ்சி வரும் என்று கோடலுமாம். வந்தால் நிற்குமது இல்லை; இவன் 'போ' என்ற போதும் அதற்கும் தகுதியாக வரும் என்பார் '**வரும்**' என்கிருர்.

என் இனி வேண்டுவம்-'பரமபத்திக்கும் எண்ணுதற்கும் ஒக்க முகங்காட்டுவானன பின்னர் எனக்கு ஒரு குறை உண்டோ?' என்கிருர். 'இறைவன், இவ்வாத்துமாப்பக்கல் வெறுப்பின்மைக்குக் காலம் பார்த்திருந்து முகங்காட்டுவானன பின்பு, இவனுக்கு நன்மை தரும் காரியங்களில் இவன் செய்ய வேண்டுவது ஒன்று உண்டோ?' என்றபடி. இப்படி இருக்கிற பகவானுடைய சொரூ பத்தைப் புத்தி பண்ணுகையே, இவன் பிரபந்நன் ஆகையாவது. இறைவன், தன்னுடைய சொரூபத்தை உபதேசித்து, [3]'உன்னல் வரும் இழவுக்கு அஞ்சவேண்டா '**மாசுச:**' என்றது போன்று, இவரும் இறைவனுடைய சொரூபத்தை நினைந்து, '**என் இனி வேண்டுவம்?**' என்கிருர். இவற்ருல், வெறுப்பின்மை ஒன்றுமே பேற்றுக்கு வேண்டுவது, அதற்குப் புறம்பான யோக்கியதை அயோக்கியதைகள் பயன் அற்றவை என்பது பெறுதும்.

**வேல்வெட்டிநம்பியார்**, '**நம்பிள்ளை**யைப் பார்த்துப் 'பெருமாள் கடலைச் சரணம் புகுகிற காலத்தில் கிழக்கு இருத்தல் முதலிய சில

1. '*எண்*' *என்பதற்கு எண்ணுதல் என்று பொருள் கொண்டு, அத்வைதிகள், வேதாந்திகள், வைசேஷிகர் இவர்கள் பேசும் முறையிலே மூன்று உதாரணங்களால் விளக்குகிருர், 'கடம், படம்' என்று தொடங்கி.*

2. *இங்கு 'எண்' என்பதற்கு எண்ணம் என்பது பொருள்.*

3. *ஸ்ரீகீதை.* 18 : 66. *மாசுச:-துக்கப்படாதே.*

நியமங்களோடே சரணம் புக்கார்; ஆதலின், இப்பிரபத்தி உபாயம், வேறு சாதனங்களைப் போன்று, சில நியமங்கள் வேண்டி இருக்கிறதோ?' என்று கேட்க, [1]'அரசரான இராகவர் கடலைச் சரணம் அடையத் தக்கவர்' என்று பெருமாளுக்கு உபதேசித்தான் ஸ்ரீவிபீஷணாழ்வான்; அவன் தான் பெருமாளைச் சரணம் புகுகிற இடத்தில், 'கடலில் ஒரு முழுக்கிட்டு வந்தான்' என்று இல்லை; 'ஆக, இத்தால் சொல்லிற்றாயிற்று என்?' என்னில், 'பெருமாள் இக்ஷ்வாகு குலத்தராய் ஆசாரத்தில் மேம்பட்டவராகையாலே, சில நியமங்களோடே சரணம் புக்கார்; ஸ்ரீ விபீஷணாழ்வான் இராக்கதர் குலத்தனாகையாலே, நின்ற நிலையிலே சரணம் புக்கான்; ஆகையாலே, யோக்கியனுக்கு அயோக்கியதை சம்பாதிக்க வேண்டா, அயோக்கியனுக்கு யோக்கியதை சம்பாதிக்க வேண்டா; ஆகையாலே, **சர்வாதிகாரம் இவ்வுபாயம்**,' என்று அருளிச்செய்தார். பகவானுடைய பிரபாவத்தை அறிந்த நன்ஞானமுடையார்க்கு 'இதுவே பொருள்' என்று தோன்றும்: 'கேவலம் கிரியாமாத்திரத்துக்கே பலத்தைக்கொடுக்கும் ஆற்றலுள்ளது' என்று இருப்பார்க்கு 'இப்பொருள் பொருத்தம் அன்று' என்று தோன்றும்.

மண்ணும் நீரும் எரியும் நல் வாயுவும் விண்ணும் ஆய் விரியும் எம்பிரானை - 'காரணமான ஐம்பெரும்பூதங்கட்கும் உள்ளீடாய் [2]நான் பலவாக விரிகிறேன்' என்கிறபடியே, தன் மலர்த்தியே ஆகும்படி இருக்கிற உபகாரகன். காற்று எல்லாவற்றையும் தரிக்கச்செய்வது ஆதலின், '**நல்வாயு**' என்கிறார். 'நான் பல பொருள்களாக விரிகின்றேன்,' என்பது சுருதியாதலின், '**விரியும்**' என்கிறார். எம்பிரான்-கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில், எண்ணிலும் வரும் என் இனி வேண்டுவம்?' [3]'தன்னை ஒழிந்த எல்லாப் பொருள்களும் தன் சங்கல்பத்தைப்பற்றி உளவாம்படி இருக்கிற சர்வேச்வரன், தன் பக்கல் ஆசை சிறிதுடையார் சங்கல்பத்தைப் பற்றித் தான் உளனாம்படி இருப்பானான பின்பு, இவவாத்துமாவிற்கு ஒரு குறையுண்டோ?' என்கிறார். (2)

---

1. *ஸ்ரீராமா. யுத்.* 19 : 31.

2. *தைத். ஆன.* 6. 91.

3. *இங்கு ஐம்பெரும்பூதங்களை அருளிச்செய்ததனால், எல்லாப் பொருள்களையும் உபலக்ஷணத்தாற்கொண்டு, 'தன்னை ஒழிந்த எல்லாப் பொருள்களும்' என்று தொடங்கும் வாக்கியத்தை அருளிச்செய்கிறார்.*

102

எம்பி ரானைஎந் தைதந்தை தந்தைக்குந்
தம்பி ரானைத்தண் தாமரைக் கண்ணனைக்
கொம்பு அராவுநுண் நேரிடை மார்பனை
எம்பி ரானைத் தொழாய்மட நெஞ்சமே!

**பொ - ரை:** எனக்கு உபகாரத்தைச் செய்தவனை, என் குடிக்கெல்லாம் உபகாரத்தைச் செய்தவனை, குளிர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடையவனை, பூங்கொம்பையும் பாம்பையும் போன்ற நுட்பமான மெல்லிய இடையையுடைய திருமகளைத் திரு மார்பில் உடையவனை, எம்பிரானை, மடமையையுடைய மனமே! வணங்குவாய்.

**வி - கு:** 'கொம்பராவு' என்பது, உம்மைத்தொகை. 'நேரிடை' என்பது, அன்மொழித்தொகை. 'மடம்' என்பது, கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை.

**ஈடு:** மூன்றும் பாட்டு. [1]'இறைவன் சொரூபம் இருந்தபடி கண்டாயே! நீயும் [2]உன் சொரூபத்துக்குச் சேர நிற்கப்பாராய்' என்கிறார்.

எம்பிரானை-மேல் பாசுரத்திற்கூறிய அவன் நீர்மையை நினைத்து 'என் **நாயகன்** ஆனவனை' என்கிறார். எந்தை தந்தை தந்தைக்கும் தம்பிரானை - தம்மளவிலேயாய் [3] அடியற்று இருக்கையன்றியே, தம் குடிக்கு நாயகன் ஆனவனை என்கிறார். இவர் இப்படித் துதித்த வாறே, [4]பிரயோஜநாந்தரபரருடைய பாசுரத்துக்கும் [5]அநந்யப் பிரயோஜனருடைய பாசுரத்துக்கும் வேற்றுமை அறியுமவன் ஆதலின், 'இப்படித் துதிக்கிறவர் யாவர்?' என்று குளிர நோக்கினான். '**தண் தாமரைக் கண்ணனை**' என்கிறார். 'ஆயின், [6]'என்னை வைகின்றவர்களையும், வெறுக்கின்றவர்களையும், கொடிய தன்மை

---

1. இறைவன் சொரூபம் - பரமபத்திக்கும் பரிகணனைக்கும் ஒக்க வந்து முகங்காட்டுதல்.

2. உன் சொரூபம் - பாரதந்திரியம்; இறைவனுக்கு அடிமை.

3. அடியற்று— முதல் அற்று.

4. பிரயோஜநாந்தரபரர் - வேறு பலன்களை விரும்புகின்றவர்.

5. அநந்யப்பிரயோஜனர் - இறைவனைத் தவிர வேறு பலன்களை விரும்பாதவர்.

6. ஸ்ரீ கீதை, 16 : 19.

களையுடையவர்களையும், தூய்மை அற்றவர்களையும், மனிதர்களுள் தாழ்ந்தவர்களையும் நான் சம்சாரத்தில் தள்ளுகிறேன்,' என்னுமவன் இப்படிக் குளிர நோக்குகைக்குக் காரணம் என் ?' என்று பார்த்தார் ; குளிர நோக்கும்படி செய்கின்றவர் அருகே இருக்கக் கண்டார்; கொம்பு அராவு நுண் நேர் இடை மார்பனை - கொம்பு போலவும் பாம்புபோலவும் இருப்பதாய், அது தானும் நுண்ணியதாய் இருந்துள்ள இடையையுடைய பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலேயுடையவனை என்கிறார். அரவு என்பது அராவு என வந்தது, நீட்டல் விகாரம்; [1] 'நச்சராவணை' என்பது போன்று. இனி, கொம்பராவு இடை என்பதற்குக் 'கொம்பை லக்ஷூகரியாநின்றுள்ள என்று பொருள் கூறலுமாம். எம்பிரானை - அச்சேர்த்திக்கு ஒருகால் 'எம்பிரானை' என்கிறார். தொழாய் - தொழப்படும் பொருள் - ஒரு மிதுனமாய் ஆயிற்று இருப்பது. மடநெஞ்சமே - 'தொழுது எழு' என்னலாம்படி பாங்கான நெஞ்சு ஆதலின் 'மட நெஞ்சமே' என்கிறார். மடம் - பவ்யம்; உரிமை. (3)

## 103

*நெஞ்சமே !நல்லை நல்லைஉன் னைப்பெற்றால்*
*என்செய் யோம்இனி என்ன குறைவினம்*
*மைந்த னைமல ராள்மண வாளனைத்*
*துஞ்சும் போதும்வி டாது தொடர்கண்டாய்.*

பொ - ரை : மனமே, நல்ல தன்மையையுடையை, நல்ல தன்மையை யுடையை ! உன்னைத் துணையாகப் பெற்றால் எந்தக் காரியத்தைத்தான் செய்யமாட்டோம் ? இனிமேல் என்ன குறைவினையுடையோம் ; எப்பொழுதும் மாறாத இளமைப்பருவத்தையுடையவனை, திருமகள் கணவனை நான் பிரிகின்ற காலத்தும் நீ விடாது அவனைத் தொடர் வாயாக.

வி - கு : இத்திருப்பாசுரம் இன எதுகையாய் அமைந்தது. நல்லை நல்லை - அடுக்குத்தொடர் ; மகிழ்வின்கண் வந்தது. 'குறை என்பது முடிக்கப்படுங்கால் முடிக்கப்படும் பொருள்,' என்பர் புறநானூற்று உரையாசிரியர். 'குறை-இன்றியமையாப்பொருள் ; அது, 'பயக்குறை

1. திருச்சந்த விருத்தம். 85. 'அரவுயர்கொடி, முழவுயர்தோள்' என இவை, குறியதனிறுதிச் சினை கெட்டு, வருமொழி உயிர்முதன் மொழியாய் வருதலின் வகர உடம்படுமெய் பெற்று உகரம் பெறாது முடிந்தன' என்று 'குறியதனிறுதி' (தொல். எ. 234.) என்ற சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர் எழுதுவதால் அவர் 'அரா' என ஆகார ஈறாகக் கொண்டனர் என்பது விளங்கும்.

*யில்லைத் தாம் வாழுநாளே ' என்பதனாலும் அறிக,' என்பர் பரிமேலழகர் (குறள், 612). துஞ்சுதல் - பிரிதல்.*

ஈடு: நான்காம் பாட்டு. [1] தாம் கூறிய போதே மேல் விழுந்து தொழுதவாறே நெஞ்சைக் கொண்டாடி, 'என் தாழ்மையை நினைந்து நான் பிரிகின்ற காலத்திலும் நீ' விடாதே கொள் என்கிறார்.

நெஞ்சமே நல்லை நல்லை - சொன்ன காரியத்தைச் சடக்கெனச் செய்த நல்ல புத்திரர்களை மடியிலே வைத்துக்கொண்டாடும் தாய் தந்தையர்களைப் போன்று, இவரும் நெஞ்சை [2] மார்விலே அணைத்துக் கொண்டாடுகிறார். [3] 'என் நெஞ்சினாரைக் கண்டால் என்னைச் சொல்லி அவரிடை நீர், இன்னம் சொல்லீரோ?' என்கிறபடியே, இவர்தாம் இறைவன் பக்கல் தூது விடுமாறு போன்று, நெஞ்சாகிய தனக்கும் தூது விடும்படி இவர்தம்மை விட்டு இறைவன் பக்கலிலே நிற்க வல்ல நெஞ்சு ஆகையாலே '**நல்லை நல்லை**' என அடுக்குத் தொடரால் கூறுகின்றார். கேட்ட நெஞ்சு, 'என்னை இப்படிக் கொண்டாடுதல் என்?' என்ன, 'உன்னைப் பெற்றால் என் செய்யோம்? நீ என்னோடு ஒரு மிடறான பின்பு, நமக்குச் செய்ய முடியாதது உண்டோ?' என்றபடி. 'ஆயின், பலம் கைப்புகுந்ததோ?' எனின், 'பலன் தருகைக்கு இறைவன் உளன்; விலக்காமைக்கு நீ உண்டு;

---

1. *'நெஞ்சமே, நல்லை நல்லை' என்றதனை நோக்கி, 'நெஞ்சைக் கொண்டாடி' என்கிறார். 'துஞ்சும்போதும் விடாது தொடர்' என்றதனை நோக்கி, 'நான் பிரிகிற காலத்திலும் விடாதே கொள்' என்கிறார்.*

2. *நெஞ்சு இருப்பது மார்பிலேயாகையாலே 'மார்விலேயணைத்து' என்கிறார்.*

3. *திருவிருத்தம், 30. இவ்விடத்து,*

*'ஆரி ருக்கிலுமென் நெஞ்ச மல்லதொரு வஞ்ச மற்றதுணை இல்லையென்று*
*ஆத ரத்திவனொடு தூது விட்டபிழை யாரி டத்துரைசெய் தாறுவேன்?*
*சீரி ருக்குமறை முடிவு தேடரிய திருவ ரங்கரைவ ணங்கியே*
*திருத்து ழாய்தரில்வி ரும்பி யேகொடு திரும்பி யேவருதல் இன்றியே*
*வாரி ருக்குமுலை மலர்ம டந்தையுறை மார்பி லேபெரிய தோளிலே*
*மயங்கி யின்புற முயங்கி என்னையும் மறந்து தன்னையும் மறந்ததே'*

*என்ற திவ்விய கவியின் திருதாக்கு ஒப்பு நோக்கல் தகும், (திருவரங்கக் கலம்பகம், 24.)*

இனிச் செய்ய முடியாதது உண்டோ? இனி என்ன குறைவினம் - [1]'உன்னைப் பெற்றால் என் செய்யோம்?' என்று சாத்தியாமிசம் உண்டாகச் சொன்ன இடம் தப்பச் சொன்னோம்; உன் பக்கல் விலக்காமையே பற்றாசாக அவன் காரியம் செய்வானாக இருந்தால், சாத்தியாமிசந்தான் உண்டோ? அதாவது, அவன் உபாயம் நித்தியமாய் ஒருவருடைய விருப்பத்தை எதிர் பாராததாய் இருக்கு மாயின், நாம் செய்யக்கூடிய காரியந்தான் யாது?' என்றபடியாம்.

'அங்ஙனம் ஆயின், நான் செய்ய வேண்டுவது யாது?' என்ன, 'செய்ய வேண்டுவது உண்டு,' என்கிறார்; நான் அவனைக் கிட்டும் போது, [2]'வளவேழ் உலகு' தலை எடுத்து அகலப் பார்ப்பது ஒன்று உண்டு; நீ அப்பொழுது அவனை விடாதேகொள்' என்கிறார்: மைந்தனை - நித்திய யௌவன சுபாவனை. [3]கெடுவாய், இவ் விஷயத்தைச் சிலரால் விடப்போமோ? மலராள் மணவாளனை - பெரிய பிராட்டியார் [4]'அகலகில்லேன் இறையும்' என்னும் விஷயத்தையன்றோ நான் உன்னை 'விடாதே கொள்' என்கிறேன்? துஞ்சும் போதும்-தாழ்ந்தவன் என்று அகலும் போதும். 'துஞ்சுதல்' என்பது, பிரிதல் என்னும் பொருளைக் காட்டுமோ?' எனின், பிரிதல் என்பது இறத்தலுக்குப் பரியாயம்; ஆதலின், காட்டும் என்க. [5]'உம்மைப் பிரிந்தாலே ஒரு முகூர்த்தகாலமும் பிழைத்திரேன்,' என்ற இளைய பெருமாளைப் போன்றவர் அன்றோ இவரும்? விடாது தொடர் கண்டாய் - நீ அவனை விடாதே தொடரப் பார். ஆக, இவ்வேப்பங்குடி நீரை அன்றோ நான் உன்னைக் குடிக்கச் சொல்லு கிறேன்? பிராட்டி 'அகலகில்லேன் இறையும்' என்கிற விஷயத்தை யன்றோ உன்னை நான் அனுபவிக்கச் சொல்லுகிறேன்? ஆதலால், நான் அவனை அகன்று முடியும் அன்றும் நீ விடாதே அவனைத் தொடருவதற்குப் பார்,' என்கிறார் என்பதாம். (4)

---

1. *'உன்னைப் பெற்றால் என்செய்யோம்?' என்றது, உபாசகர் கூற்று. 'இனி என்ன குறைவினம்?' என்றது, பிரபந்நர் கூற்று. 'அடியேன் நான் முயற்சியின்றி நின்னருளே பார்த்திருப்பன் நீசனேனே' என்கிறபடியே, பிரபந்நர் செய்ய வேண்டுவது இல்லையன்றே? 'வாழும் சோம்பர்' என்பர் தொண்டரடிப்பொடிகளும். சாத்தியாமிசம்—செய்யக் கூடிய காரியம்*

2. *'வளவேழுலகு' என்றது, 'வளவேழுலகு' என்ற திருப்பதிகத்தில் அருளிச்செய்த தன்மையை.*

3. *'கெடுவாய்' என்றது, வார்த்தைப்பாடு.*

4. *திருவாய்மொழி*, 6, 10 : 10.

5. *ஸ்ரீ ராமா. அயோத்.* 31 : 5.

104

**கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்றுஓர்**
**எண்தானும் இன்றி யேவந்து இயலுமாறு**
**உண்டானை உலகுஏ ழும்ஓர் மூவடி**
**கொண்டானைக் கண்டு கொண்டனை நீயுமே.**

பொ - ரை: மனமே, காரியங்கள் வந்து பலிக்குங்காலத்தில் நமது நினைவு சிறிதும் இல்லாதிருப்பினும், தாமாகவே பலித்ததனை இப்பொழுது பார்த்தாய் அன்றோ? பெருவெள்ளத்தால் அழியப் புக்க காலத்தில் அழியாதவாறு ஏழுலகங்களையும் உண்டு காப்பாற்றியவனை, ஏழுலகங்களையும் ஒப்பற்ற மூன்று அடிகளாலே அளந்து தனக்கு உரித்தாக்கிக்கொண்டவனை நீயும் கண்டு கொண்டாய்.

வி - கு: வாய்க்கின்று - வாய்க்குமிடத்து. இயலுதல் - பலித்தல். 'உலகேழும்' என்பதனைத் தாப்பிசைப் பொருள்கோளாக முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் கொள்க. 'ஒன்றை நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும், எனையாளும் ஈசன் செயல்,' என்பது ஈண்டு ஒப்பு நோக்குக.

ஈடு: ஐந்தாம் பாட்டு. மேல், 'எண்ணிலும் வரும்' என்ற எண்தானும் மிகையாம்படி கண்டாயே!' என்று அவன் படியை நெஞ்சுக்கு [1] மூதலிக்கிறார்.

கண்டாயே நெஞ்சே-நான் சொன்னபடியே பலத்தோடே நிறைவு பெற்றபடியைக் கண்டாயே. நெஞ்சே - ஞானம் செல்லுதற்கு வழியாகவுள்ள உனக்குச் சொல்ல வேண்டா அன்றே? கருமங்கள் வாய்க்கின்று - காரியங்கள் பலிக்குமிடத்தில். ஓர் எண்தானும் இன்றியே வந்து இயலுமாறு கண்டாயே - 'எண்ணிலும் வரும்' என்றதுதான் மிகையாம்படி வந்து பலித்துக்கொண்டு நிற்கிறபடி கண்டாயே. இதனால், பகவானுடைய பிரபாவம் சொல்லுவார் சொல்லும் அளவு அன்றுகாண் என்பது பெறுதும். இத்தலையில் எண் இன்றிக்கே இருக்கப் பலிக்கும் என்னுமிடத்துக்கு உதாரணம் காட்டுகிறார் மேல்: உலகு ஏழும் உண்டானை - பிரளயம் கொண்ட உலகத்துக்கு 'இறைவன் நம்மை வயிற்றிலே வைத்து நோக்குவான்' என்னும் நினைவு உண்டோ? உலகு ஏழும் ஓர் மூன்று அடி கொண்டானை - இறைவன் உலகத்தை முழுதும் அளக்கிற போது 'நம் தலையிலே திருவடியை வைக்கப்புகாநின்றான்' என்னும் நினைவு உண்டோ? இதற்கு உதாரணம் தேடிப் போக வேண்டுமோ ஒன்று?

---

1. மூதலித்தல் - நிரூபித்தல்.

கண்டுகொண்டனை நீயும் - விலக்குகைக்குப் பரிகரமுடைய நீயும் அன்றோ கண்டுகொண்டாய்? பிரளயத்தில் அகப்பட்ட உலகத்திற்குத் தடுப்பதற்கு வழி இல்லை; உலகத்தை அளக்கிற காலத்தில் அறிந்து தடுப்பதற்கு அங்குச் சமயம் இல்லை; அறிந்தால் விலக்கி இருப்பார்கள் அன்றே? [1] அசங்கிதமாக வருகையாலே பேசாதிருந்தார்கள் இத்தனை, அவ்வாறு அன்றி விலக்குதற்கு எல்லா வழிகளையும் பெற்றிருந்த நீ விலக்காதிருந்தமையே அருமை' என்பார், '**நீயும்**' என உம்மை கொடுத்து ஓதுகின்றார். (5)

105

*நீயும் நானும்இந் நேர்நிற்கில் மேல்மற்றோர்*
*நோயும் சார்கொடான் நெஞ்சமே! சொன்னேன்*
*தாயுந் தந்தையு மாய்இவ் வுலகினில்*
*வாயும் ஈசன் மணிவண்ணன் எந்தையே.*

**பொ - ரை :** *தாய்தந்தையர்களைப் போன்று பரிவுள்ளவனாய் இவ்வுலகத்தில் வந்து அவதரிக்கின்றவனாய் நீலமணி போன்ற நிறத்தையுடையவனாய் உள்ள என் தமப்பன், வணங்கு என்று கூறுதற்குத் தகுதியாகவுள்ள நீயும் வணங்கச்சொல்லுகிற நானும் ஓர் எண்தானும் இன்றி நிற்றலாகிய இம்முறையில் நின்றால், மேல் வருகின்ற காலத்தில் ஒரு வித நோயினையும் நம்மைச் சாரச் செய்யான்; நெஞ்சமே, சொன்னேன்.*

**வி - கு :** *'நாம் இந்நேர் நிற்குல் எந்தைமேல் ஓர் நோயும் சார் கொடான்,' எனக் கூட்டி முடிக்க.*

ஈடு : ஆறும் பாட்டு. [2] 'இப்படிச் சுலபன் ஆனவன் நம்மை விடான் அன்றே?' என்ன, 'நம் தாழ்மையை நினைத்து அகலாதொழியில் நம்மை ஒரு நாளும் விடான்' என்று திருவுள்ளத்துக்கு அருளிச்செய்கிறார்.

நீயும் நானும் - அந்தப் புள்ளின்பின் போன நீயும், உன்னைத் துணையாகவுடைய நானும். இந்நேர் நிற்கில் - பலத்தை அனுபவம் பண்ண இருக்கிற நாம் இப்படி விலக்காதே இருக்கில். இனி, இதற்கு [3] 'நான் ஒருவர்க்கும் உரியவன் அல்லேன்' என்னும் மாறுபட்ட எண்ணம் இன்றிக்கே ஒழியில் என்று கூறலுமாம். மேல்

---

1. *அசங்கிதம் - ஐயமில்லாத தன்மை; எதிர்பாராத வகையில் என்றவாறு.*

2. *'இந்நேர் நிற்கில் மற்றோர் நோயுஞ் சார்கொடான்' என்றதற்குத் தக அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

3. *ஸ்ரீராமா. யுத். 36 : 11.*

மற்று ஓர் நோயும் சார்கொடான் - [1] நிஷித்த அநுஷ்டானம் பண்ணி அகல விடுதல், தன்னை ஒழியப் பிரயோஜனத்தைக் கொண்டு அகல விடுதல், அயோக்கியதாநுசந்தானம்பண்ணி அகல விடுதல், வேறொரு சாதனத்தை மேற்கொள்ளச் செய்து அகலவிடுதல், முன்பு பண்ணின பாவத்தின் பலத்தை அனுபவம் பண்ண அகல விடுதல் செய்ய விட்டுக்கொடான்.

நெஞ்சமே சொன்னேன் - [2] 'திருக்கோட்டியூர் நம்பியைப் போலே, பகவத் விஷயம் பிறர் அறியலாகாது என்று போலேகாணும்' இவர் இருப்பது. உபதேசித்துவிட்டு [3] ''இந்தக் கீதையின் பொருள் தவமில்லாதவனுக்கு ஒருபோதும் சொல்லத் தக்கது அன்று,' என்றவனைப் போன்று படுகிறார். 'ஏன் ? முதல் முன்னம் அதிகாரி சோதனை செய்து உபதேசித்தால் ஆகாதோ ?' எனின், திரௌபதி குழல் விரித்துக் கிடக்கிற படியைப் பார்த்து, செய்வது காணாமல் சொல்லிக்கொண்டு நின்றான்; பின்னர், பொருளின் கனத்தைப் பார்த்து, **'கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே போகட்டோம்'** என்று [4] 'பதண் பதண்' என்றான் என்க. இனி, இதற்கு நெஞ்சே, சீரிய பொருளைச் சொன்னேன்; ஆதலால், உபதேசத்திற் குறை இல்லை; இனி, இதனை நினையாதார் இழக்குமித்தனை என்கிறார் எனலுமாம், இனி, தாயும் தந்தையுமாய் இவ்வுலகினில் வாயும் மணிவண்ணனாய் எந்தையான ஈசன், நீயும் நானும் இந்நேர் நிற்கில் மேல் மற்று ஓர் நோயும் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன், [5] 'சத்யம் சத்யம்' என்கிறபடியே, இது மெய் என்கிறார் என்றலும் ஒன்று.

---

1. *'நிஷித்த அநுஷ்டானம் பண்ணி அகல விடுதல்' முதலிய வாக்கியங்களால் 'ஓர் நோயும்' என்றதனை விவரிக்கிறார்.*

2. *'நெஞ்சமே, சொன்னேன்' என்பதற்கு மூன்றுவகையில் கருத்து அருளிச்செய்கிறார். இம்மூவகைக் கருத்தையும் முறையே காண்க. 'சார்கொடான்' என்னுதலே போதியதாக இருக்க, மேல் 'சொன்னேன்' என்று அருளிச்செய்வதனால் இங்ஙனம கருத்துக்கொள்ளவேண்டும் என்க.*

3. *ஸ்ரீகீதை, 18 : 67.*

4. *'பதண் பதண்' என்பன, பரிதபிக்கையைக் காட்டுவனவாம்; 'பதறினேன், பதறினேன்' என்றபடி.*

5. *இது, வியாச பகவான் கூற்று. 'வேத சாஸ்திரங்களைக் காட்டிலும் மேலான சாஸ்திரங்கள் இல்லை; அது போன்று, கேசவனைக் காட்டிலும் உயர்ந்த தெய்வம் பிறிது இல்லை; இது சத்தியம், மீண்டும் சத்தியம், மீண்டும் சத்தியம்' என்பது அந்தச் சுலோகத்தின் பொருள்.*

தாயும் தந்தையும் ஆய் - தாய் தந்தையர்களைப்போன்று அன்புள்ளவனாய். இவ்வுலகினில் வாயும் ஈசன் - அவர்கள் அளவு அன்றிக்கே, குழந்தை கிணற்றில் விழுந்தால் ஒக்கக்குதிக்கும் தாயைப் போலே, சம்சாரத்திலே ஒக்க விழுந்து எடுக்குமவன். 'அடையத்தக்கவன் ஆகையாலே 'இங்கு வந்து அவதரிக்கிறான்' என்பார். '**ஈசன்**' என்கிறார். இனி, 'இங்கு வந்து அவதரித்து ஈர் அரசு தவிர்க்கையாலே '**ஈசன்**' ஆனான்' எனலுமாம். மணி வண்ணன் எந்தையே-தன் வடிவழகைக் காட்டி இவரை முறையிலே நிறுத்தினான். சிற்றின்பங்களில் விருப்புள்ளவர் ஆகாதபடி இவரை மீட்டு நன்னெறியில் நிறுத்துவதற்கு இறைவனுடைய வடிவழகு காரணமாய் இருந்ததாதலின், அதனை '**மணிவண்ணன்**' என்ற சொல்லாற் குறித்தும், தன் சேஷித்துவத்தைக் காட்டி இவருடைய சேஷத்துவத்தை நிலை நிறுத்தினவன் ஆதலின், அவனை '**எந்தையே**' என்ற சொல்லாற்குறித்தும் தெரிவிக்கிறார். (6)

106

*எந்தையே என்றும் எம்பெரு மான்என்றும்*
*சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன்*
*எந்தை எம்பெரு மான்என்று வானவர்*
*சிந்தையுள் வைத்துச் சொல்லும் செல்வனையே.*

**பொ - ரை :** *'எந்தையே! எம்பெருமானே!' என்று நித்தியசூரிகள் தங்கள் மனத்திலே வைத்துத் துதிக்கும்படியான செல்வனை, மிக்க தீயவினைகளையுடைய யானும் 'எந்தையே!' என்றும், 'எம்பெருமானே!' என்றும் மனத்திலே வைத்துத் தியானிப்பேன், வாயாலும் சொல்லுவேன்; இஃது என்னே!' என்பதாம்.*

**வி - கு :** *எந்தை என்பது' என் தந்தை என்றதன் மரூஉ என்பர். வானவர் என்றது - நித்தியசூரிகளை.*

**ஈடு:** ஏழாம் பாட்டு. [1]மேல் இவர் அஞ்சியது போன்றே முடிந்தது; 'தாழ்ந்தவன்' என்று அகலுகிறார்.

எந்தையே என்றும் - என்னிடத்தில் அன்புடையவனே என்றும். எம்பெருமான் என்றும் - எனக்கு வகுத்த சுவாமியே என்றும். சிந்தையுள் வைப்பன் - எத்தனை விஷயங்களை நினைத்துப் போந்த

---

1. *'மேல் இவர் அஞ்சியது போன்றே முடிந்தது' என்றது, 'துஞ்சும்போதும் விடாது தொடர்கண்டாய்' என்றதனை நோக்கி.*

நெஞ்சிலே வைத்தேன். சொல்லுவன்-நான் அறிந்ததாக நெஞ்சிலே வைத்துத் தூஷித்த அளவேயோ? பிறர் அறியும்படி வைதேன். பாவியேன் - [1] விலக்ஷண போக்கியமான இப்பொருளை அழிக்கைக்கு நான் ஒரு பாவி உண்டாவதே! சத்துவ குணத்தையுடைய ஒருவன் தமோ குணத்தால் மேலிடப்பட்டவனாய் ஒரு வீட்டில் நெருப்பை வைத்து, சத்துவம் தலை எடுத்தவாறே வருந்துமாறு போன்று '**பாவியேன்**' என்கிறார். 'ஆயின், பகவானை நினைக்கையும் சொல்லுகையும் பாவத்தின் பயனோ?' என்னில், [2] புரோடாசத்தை நாய் தீண்டினாற்போன்று நித்தியசூரிகள் அநுபவிக்கும் பொருளை அழிக்கை பாவத்தின் பலம் அன்றோ? எந்தை எம்பெருமான் என்று வானவர் சிந்தையுள் வைத்துச் சொல்லும் செல்வனை-நினையாவிடில் அரைக்கணம் தரிக்கமாட்டாத நித்தியசூரிகள் நினைத்து அநுபவித்து அவ்வநுபவம் வழிந்து 'எங்களுக்குப் பரிவன் ஆனவனே! சுவாமி யானவனே!' என்று தங்கள் நெஞ்சிலே வைத்துச் சொல்லும்படியான செல்வத்தையுடையவனை நானும் சொன்னேன்; ஆதலால், இப் பொருளை ஒருவர் நம்பாதபடி அழித்தேன்,' என்கிறார். (7)

107

செல்வ நாரணன் என்றசொல் கேட்டலும்
மல்கும் கண்பனி நாடுவன் மாயமே
அல்லும் நன்பக லும்இடை வீடுஇன்றி
நல்கி என்னைவி டான்நம்பி நம்பியே.

**பொ - ரை:** *திருநாராயணன் என்னும் பெயரை வழியே செல்வான் ஒருவன் கூறக் கேட்ட அளவில் கண்கள் நீர் பெருகாநிற்கும்; யானும், 'எங்குற்றாய் எம்பெருமான்!' என்று தேடாநின்றேன். இது என்ன ஆச்சரியம்! எல்லாக் குணங்களும் நிறைந்த இறைவன், சிறந்த இராக் காலமும் சிறந்த பகற்காலமும் ஒழிவின்றி என்னைப் பெரியவனாக நினைத்து விரும்பி என்னை விட்டு நீங்காதவன் ஆகின்றான்.*

**வி - கு:** *திருவே செல்வமாதலின், திருநாரணனைச் 'செல்வ நாரணன்' என்கிறார். நாடுவன் என்ற முற்றிற்கு 'யான்' என்னும்*

---

1. *விலக்ஷண போக்யமான-வேறுபட்ட சிறப்பினையுடைய சுகானுபவத்திற்குரியதான.*

2. *புரோடாசம்-வேள்வித்தீயில் இடும் அரிசி மாவாலாகிய ஓமப் பொருள்.*

எழுவாய் வருவிக்க. 'நன்' என்னும் அடையினை 'அல்லு'க்கும் கூட்டுக. 'நம்பி' இரண்டனுள் ஒன்று பெயர்ச்சொல்; ஒன்று வினையெச்சம். 'நம்பி விடான்' என மாற்றுக.

ஈடு: எட்டாம் பாட்டு. [1] 'நாம் இதற்கு முன்பு நினைத்தும் பேசியும் தப்பச் செய்தோம், இனித் தவிருமித்தனை' என்று 'அவன் குணங்கள் நடையாடாதது ஓரிடத்தில் கிடக்க வேண்டும்' என்று போய், ஒரு குட்டிச்சுவரின் அருகில் முட்டாக்கு இட்டுக்கொண்டு கிடந்தார்; அங்கே, வழியே செல்கின்றான் ஒருவன், சுமை கனத்து '**ஸ்ரீமந் நாராயணன்**' என்றான்; அச்சொல்லைக் கேட்டுத் தம்முடைய கரணங்கள் அங்கே அன்புடைமையாகிறபடியைக் கண்டு ஆச்சரியப் படுகிறார்.

செல்வ நாரணன் என்ற சொல் கேட்டலும் கண் பனி மல்கும் நாடுவன் - திருநாரணன் என்ற சொல் செவிப்பட்ட அளவிலே, கண்ணானது என்றனை ஒழியவே நீர் மல்கப்புக்கது; நெஞ்சும் அவ்வளவிலே, 'எங்குற்றாய்?' என்று தேடப்புக்கது. [2] **ஆழ்வார் பரிசரத்திலே பிரமசாரி எம்பெருமான் பெயர் சொல்வார் ஒருவரும் இலராதலின்**, '**செல்வ நாரணன் என்ற**' என்கிறார். விஷத்தை நீக்கும் மந்திரம் போன்று, பொருள் உணர்வு வேண்டாதே அச் சொல்லே இவர் நோவுபடுகைக்குப் போதியதாய் இருத்தலின், '**சொல் கேட்டலும்**' என்கிறார். மாயமே - ஈது ஓர் ஆச்சரியம் இருந்தபடி என்? [3] பொருள் உணர்வு இன்றியே சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் கண் பனி மல்குகின்றது; நெஞ்சு தேடுகின்றது. ஆதலின், '**மாயமே**' என்கிறார். இனி, 'அல்லேன் என்று அகலுகைக்கு நான் வேண்டியிருந்தது, ஆவேன் என்று கூடுகைக்கு நான் வேண்டிற்று இல்லையாய் இருந்ததே' என்பார், '**மாயமே**' என்கிறார் எனலுமாம்.

'ஆயின், அவன் செய்கிறது என்?' என்னில், அல்லும் நன் பகலும் இடைவீடு இன்றி நல்கி நம்பி என்னை நம்பி விடான் - இரவு பகல் என்னும் வேறுபாடு அற என்னிடத்தில் அன்பு வைத்து,

---

1. *'கேட்டலும்' என்கையாலே, அசம்பாவிதமான இடத்தில் இருத்தல் சித்தம் என்று திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச் செய்கிறார்.*

2. *'வழியே செல்கின்றவன் ஸ்ரீமத்நாராயணன் என்பானேன்?' என்னும் வினாவிற்கு விடையாக 'ஆழ்வார் பரிசரத்திலே' என்று தொடங்கும் வாக்கியத்தை அருளிச்செய்கிறார். 'ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல் அவனுடைய பேருந் தார்களுமே பிதற்ற'* (6. 7 : 2,) *என்ற திருப் பாசுரம் ஈண்டு நினைவுகூர்க.*

3. *இங்கு 21ஆம் பாசுரத்தின் வியாக்கியானத்தைப் பார்க்க* (ப. 129.)

குணங்களால் நிறைந்த இறைவன், என்னைத் தன்னுடையவனுக நினைத்து, என்னை நீங்குதற்கு மனம் இல்லாதவன் ஆகின்றுன். மேல் [1] 'வெந்நாள்' என்பவர், ஈண்டு 'அல்லும் நன்பகலும்' என்கிருர்; தம்முடைய ஆசை எல்லாம் ஒழிய, தம்முடைய உறுப்பு களுக்குப் பகவானுடைய அனுபவமே யாத்திரையாம்படி இறைவன் மேல் விழுகிற காலம் ஆதலின். தாம் ஒருகால் தேடி விடாநிற்க, இறைவன் இடைவிடாதே விரும்புகிருன் ஆதலின், 'இடைவீடின்றி' என்கிருர். இனி, 'என்னை விடான் நம்பி நம்பியே' என்பதற்கு, 'என்னை - அபூர்ணனை என்னை, நம்பி - பெருமதிப்பனுக நினைத்து, விடான் - விடுகின்றிலன்' என்று பொருள் கூறலுமாம். 'சம்சாரி சேதனனைப்பெற்று, பெருப்பேறு பெற்றுனுய் இருக்கிற இவனையே உலகத்தார் பரிபூர்ணன் என்கிருர்கள்,' என்பார் '**நம்பியே**' என ஏகாரங்கொடுத்து ஓதுகிருர்.

'நம்பி, அல்லும் நன்பகலும் இடைவீடு இன்றி நல்கி, நம்பி என்னைவிடான்; மாயமே!' எனக் கூட்டுக. (8)

108

நம்பி யைத்தென் குறுங்குடி நின்றஅச்
செம்பொ னேதிக ழும்திரு மூர்த்தியை
உம்பர் வானவர் ஆதிஅம் சோதியை
எம்பி ரானைஎன் சொல்லிம றப்பனே.

பொ - ரை: *அழகிய திருக்குறுங்குடி என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற நம்பியை, அந்தச் செம்பொன் போன்று விளங்கு கிற அழகிய திருமேனியையுடையவனை, பரமபதத்தில் எழுந்தருளி யிருக்கின்ற நித்தியசூரிகளுடைய தொழில்கட்கெல்லாம் காரணனை பரஞ்சோதியை, எனக்கு உதவியைச் செய்தவனை நான் என்ன காரணத்தைக் கூறி மறப்பேன்?*

வி - கு: *''நம்பி' என்பது, 'நமக்கு இன்னர்' என்னும் பொருள்பட வருகின்ற சொல்' என்பர் சேனுவரையர். (தொ. சொ. 163.) மூர்த்தி-வடிவத்தையுடையயவன். உம்பர்-மேலிடம். 'மறப்பனே' என்பதில் உள்ள ஓகாரம் எதிர்மறை.*

ஈடு: ஒன்பதாம் பாட்டு. [2] 'நீர்தாம் இங்ஙனே கிடந்து வருந்தி உழலாமல், இறைவனை மறந்து சம்சாரிகளைப்போன்று உண்டு

---

1. *திருவாய்மொழி*, 3. 2 : 1.

2. *'என் சொல்லி மறப்பன்?' என்ற பதங்களை நோக்கி அவ தாரிகை அருளிச்செய்கிருர்.*

உடுத்துத் திரியமாட்டீரோ ?' என்ன, 'நான் எத்தைச் சொல்லி அவனை மறப்பது ?' என்கிறார்.

நம்பியை - நற்குணங்கள் எல்லாம் நிறைந்தவனை. தென் குறுங்குடி நின்ற - கலங்காப்பெருநகரத்தைக் கலவிருக்கையாக வுடையவன், அத்தை விட்டு என்னைப் பற்றத் திருக்குறுங்குடியிலே காலத்தை எதிர் நோக்கிக்கொண்டு நிலையியற் பொருள்போன்று நின்றவன். பரமபதத்தில் குணங்களுக்குச் [1] சத்பாவமே உள்ளது ஆதலானும், குணங்கள் நிறம் பெற்று நிறைவுடன் விளங்குதல் இங்கே ஆதலானும், 'குறுங்குடி நின்ற நம்பியை' என்கிறார். இதனால், 'குணங்களில் குறைவுள்ளவன், தூரத்திலேயுள்ளவன் என்று நினைத்து, நான் மறக்க வேண்டுமே,' என்பதனைத் தெரிவித்தபடி. அச்செம்பொனே திகழும் திருமூர்த்தியை - உபமானம் அற்றதாய், [2] ஓட்டு அற்ற செம்பொன் போன்று எல்லை அற்ற ஒளி உருவமாய், வாக்கு மனங்களால் அளவிட்டு அறிய முடியாத திவ்விய மங்கள விக்கிரகத்தையுடையவனை. இதனால் 'வடிவழகிலே குறையுண்டாய்த் தான் மறக்கவோ ?' என்பதனைத் தெரிவித்தபடி.

உம்பர் வானவர் ஆதி அம் சோதியை - உண்டாக்கப்பட்ட இங்கேயுள்ள தேவர்களைப் போன்று அன்றி, மேலான நித்திய சூரிகளுடைய சத்து முதலானவற்றிற்கும் தானே கடவனாய், அவர்களுக்கு அனுபவிக்கத் தகுந்த திவ்விய மங்கள விக்கிரகத்தை உடையவனை. இத்தால்: அவ்வழகை அனுபவிக்க இட்டுப் பிறந்த நித்தியசூரிகளைச் சொன்னபடி. எம்பிரானை-அவர்கள் அனுபவிக்கும் [3] படியை எனக்கு உபகரித்தவனை. என் சொல்லி மறப்பனோ - எத்தைச் சொல்லி மறப்பேன் ? [4] அபூர்ணன் என்று மறக்கவோ ? தூரத்திலே உள்ளவன் என்று மறக்கவோ ? வடிவழகு இல்லை என்று மறக்கவோ ? மேன்மை இல்லை என்று மறக்கவோ ? எனக்கு உபகாரகன் அலன் என்று மறக்கவோ ? எத்தைச் சொல்லி மறப்பேன் ?' என்றபடி. (9)

---

1. சத்பாவம்-இருப்பு.

2. ஓட்டு அற்ற பொன் - உருக்கிச் சுத்தம் செய்த பொன்.

3. படி என்றது-சிலேடை ; பிரகாரமும், திருமேனியும்.

4. 'அபூர்ணன் என்று மறக்கவோ ?' என்றது முதலான வாக்கியங்களால், மறக்க முடியாமைக்கு மேற்கூறியவற்றையெல்லாம் தொகுத்து அருளிச்செய்கிறார்.

109

மறப்பும் ஞானமும் நான்ஒன்று உணர்ந்திலன்
மறக்கும் என்றுசெந் தாமரைக் கண்ணொடு
மறப்ப றஎன்னுள் ளேமன்னி னான்தன்னை
மறப்ப னோஇனி யான்என் மணியையே?

பொ - ரை: மறப்பு என்பதனையும் ஞானம் என்பதனையும் நான் சிறிதும் அறிந்திலேன்; அறிவிற்கு அடைவு இன்றி இருந்த என் பக்கல் அறிவைப் பிறப்பித்தான்; பிறப்பித்தவன், நான் மறக்கக் கூடும் என்று நினைத்து, செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களாலே குளிர நோக்கிக்கொண்டு ஒருநாளும் மறக்க ஒண்ணாதபடி என்னுள்ளே வந்து நிலைபெற்று நின்றான்; அவ்வாறு நின்றவனை, எனக்கு மணியைப் போன்றவனை யான் இனி எங்ஙனம் மறப்பேன்?

வி - கு: உணர்ந்திலன்: எதிர்மறை. 'அற' என்னும் எச்சத்தை 'மன்னினான்' என்னும் வினையாலணையும் பெயருடன் முடிக்க. 'என் மணியை மறப்பனோ?' எனக் கூட்டுக.

ஈடு: பத்தாம் பாட்டு. ஆயினும், வருந்தியாகிலும் மறந்தாலோ?' என்ன, 'நெஞ்சில் இருளை அறுத்துக்கொண்டு எப்பொழுதும் வசிக்கின்றவனை மறக்க விரகு உண்டோ?' என்கிறார்.

மறப்பும் ஞானமும் நான் ஒன்று உணர்ந்திலன்-மறப்பு என்றும் ஞானம் என்றும் ஒன்றை நான் அறிந்திலேன். 'ஆயின், நான் 'ஞானம் என்பது ஒன்றனை உணர்ந்திலேன்' என்ற போதே 'மறப்பும் உணர்ந்திலேன்' என்பது தானே போதரும் அன்றே? அங்ஙனம் இருக்க, 'மறப்பும் ஒன்று உணர்ந்திலன்' என்றது என்னே?' எனின், [1]'நான் ஒரு சேதநனாய் நினைத்தேனாகில் அன்றே மறப்பது? நினைத்தேன் நான் ஆயின அன்று அன்றே மறந்தவனும் நான் ஆவேன்? அதாவது, ஞானத்திற்குப் பற்றுக்கோடாய் இருப்பது ஒன்றே அஞ்ஞானத்திற்கும் பற்றுக்கோடாய் இருக்கும்; ஆதலால், அறிவு அற்ற பொருளாய்க் கிடந்தேன்,' என்பதனைத் தெரிவித்தபடி. மறக்கும் என்று செந்தாமரைக் கண்ணொடு மறப்பு அற என்னுள்ளே

1. இப்பொழுது பகவானைப் பற்றிய ஞானம் இல்லையேயாயினும், காலம் அநாதி ஆகையாலே, முன்பு ஒரு காலத்தில் நினைத்திருந்து பின்னர் அதற்கு மறதி வந்திருக்கலாமன்றே? அதுவும் இல்லை என்கைக்காக 'மறப்பும் உணர்ந்திலன்' என்று அருளிச்செய்கிறார் என்றபடி.

மன்னினான்தன்னை - [1] இப்படி இருக்கிற நான் நினைத்தேனாகவும் [2] நினைவையும் என் தலையிலே ஏறிட்டு, 'பிறந்த ஞானத்துக்குப் பிரிவு வர ஒண்ணாது' என்று பார்த்து அழகிய திருக்கண்களாலே குளிர நோக்கிக்கொண்டு, தன்னைப் பற்றி எனக்கு வரும் மறதி போம்படி என் மனத்திலே நித்தியவாசம் செய்கிறவனை. 'புறம்பே வேறு ஒரு பொருளில் நோக்குள்ளவன்' என்று தோற்ற இருந்திலன் ஆதலின், **'மன்னினான்'** என்கிறார்.

மறப்பனோ இனி யான் என் மணியையே-மறவாமைக்குக் கருவி அவன் கையிலே உண்டாய் இருக்க, இனி மறக்க உபாயம் உண்டோ? மேல் அநாதி காலம் நினைக்க விரகு இல்லாமல் கழிந்தமை போன்று, இனி மேல் வருகின்ற காலமும் மறக்க விரகு இல்லை என்பதனைத் தெரிவித்தபடி. [3] 'மறந்தேன் உன்னை முன்னம்' என்கிறபடியே, அநாதி காலம் மறந்தே போந்தவர் ஆதலின், அது தோன்ற **'யான்'** என்கிறார். 'பெருவிலையனாய் முடிந்து ஆளலாம்படி கைப்புகுந்து புகழையுடைத்தான நீலமணி போலே இருக்கிற தன்னை எனக்கு அனுபவ யோக்கியமாம்படி செய்துவைத்தான்,' என்பார் **'என் மணியை'** என்கிறார். (10)

### 110

*மணியை வானவர் கண்ணனைத் தன்னதோர்*
*அணியைத் தென்குரு கூர்ச்சட கோபன்சொல்*
*பணிசெய் ஆயிரத் துள்இவை பத்துடன்*
*தணிவி லர்கற்ப ரேல்கல்வி வாயுமே.*

**பொ-ரை:** முன்றானையிலே முடிந்து ஆளலாம்படி சுலபனாய் இருக்கிறவனை, நித்தியசூரிகள் தலைவனை, தனக்குத்தானே ஆபரணம் போன்ற அழகினையுடையவனை, அழகிய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர் சொற்களைக்கொண்டு அடிமை செய்யும் ஆயிரம் திருப் பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களையும் கற்கவேண்டும் என்

---

1. 'ஞானத்திலும் மறதியிலும் தமக்கு ஸ்வாதந்திரியம் இல்லை என்றவர் இப்பொழுது 'மறக்கும்' என்றல் பொருந்துமோ?' என்னும் வினாவிற்கு விடையாக 'இப்படியிருக்கிற நான்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. 'நினைவையும் என் தலையிலே ஏறிட்டு' என்றதனால் 'மறப்பையும் என் தலையிலே ஏறிட்டான்' என்பது பெறுதும்.

3. பெரிய திருமொழி, 6. 2 : 2.

னும் ஆசை குறைவு இல்லாதவர்களாகிக் கற்பார்களேயாயின், கல்வி யின் பயனுன தொண்டு செய்தல் அவர்களுக்கு உளதாம்.

**வி - கு :** *தணிவிலர் - முற்றெச்சம். கல்வி என்பது அதன் பயனு கிய அறிவிற்காகி, அவ்வறிவு அதன் பயனுய தொண்டிற்கு ஆயிற்று; இருமடி ஆகுபெயர்.*

ஈடு : முடிவில், 'இப்பத்தைக் கற்றவர்கள் தன்னின் மேம் பட்டது இல்லாத புருஷார்த்தமான பகவானுடைய கைங்கரியத்தைப் பெறுவர்,' என்கிருர்.

மணியை - முன்தானையிலே முடிந்து ஆளலாம்படி கைப்புகுந் திருப்பான் என்று அவனுடைய சௌலப்பியத்தைச் சொல்லுகிருர். 'தென்குறுங்குடி நின்ற' என்கிற இடத்தில் சௌல்ப்பியம். வான வர் கண்ணனை - இதனுல், 'உம்பர் வானவர் ஆதியம் சோதி' என் கிற மேன்மையைச் சொல்லுகிருர். தன்னதோர் அணியை-இதனுல் 'அச்செம்பொனே திகழும் திரு மூர்த்தி' என்கிற வடிவழகை நினைக்கிருர். **இம்மூன்றுங்கூடின பசுங்கூட்டே பரத்துவம்** எனப்படுதலின், இவற்றை ஈண்டு ஒருசேர அருளிச்செய்கிருர். தென்குருகூர்ச்சடகோபன் சொல்பணி செய் ஆயிரம் - ஆழ்வார் அருளிச்செய்ததாய் 'நாம் இங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தோம் ஆக வேண்டும்' என்று, சொற்கள்தாம் 'என்னைக்கொள், என்னைக் கொள்' என்று [1]'மிடைந்தசொல்' என்கிறபடியே, சொற்கள் பணி செய்த ஆயிரம் பாசுரங்கள். இனி, 'சொல் பணி செய் ஆயிரம்' என்பதற்கு, 'சொற்களால் பணி செய்த ஆயிரம்; அதாவது, வாசிக மான அடிமையைச் சொல்லுகிருர்' என்று பொருள் கோடலுமாம்.

உடன் தணிவிலர் கற்பரேல்-அபிப்பிராயத்தோடு கற்பாராகில். தணிவு-முயற்சி அற்று இருத்தல்; அதாவது, 'வரில் போகடேன், கெடில் தேடேன்' என்றிருக்கை அன்றி, சிரத்தை மாருமல் கற்பரா கில் என்றபடி. கல்வி வாயும் - [2]'ஒண்தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு' என்கிறபடியே, ஞானமாகில் பகவத்விஷயத்தைப் பற்றியல்லது இராமையாலே, இதனைக்கற்க, இதற்குப் பலமாகத்தொண்டினை இது தானே தரும். இனி, இதற்குக் 'கல்விதானே பயன்' என்று பொருள் கூறலும் ஒன்று. (11)

---

1. *திருவாய்மொழி*, 1. 7 : 11.

2. *முதல் திருவந்தாதி*, 67.

இத்திருவாய்மொழியில், மேல் பரக்க அருளிச்செய்யப் புகும் பொருள்களை எல்லாம் சுருக்கமாக முதற்பாட்டிலே அருளிச்செய்தார்; இரண்டாம் பாட்டில் 'பரமபத்திக்கும் பரிகணனைக்கும் ஒக்க முகங் காட்டும்,' என்றார்; மூன்றாம் பாட்டில், 'கண்டாயே அவன் சொரூபம் இருந்தபடி; நீயும் உன் சொரூபத்துக்குத் தக்கபடி நிற்கப் பாராய்,' என்றார்; நான்காம் பாட்டில், சொரூபத்திற்குத் தகுதியாக நெஞ்சு தொழுதவாறே நெஞ்சைக் கொண்டாடினார்; ஐந்தாம் பாட்டில், மேல் 'எண்ணிலும் வரும்' என்றது, பலத்தோடே சேர்ந்து முடிவுற்றபடியை நெஞ்சுக்கு அருளிச்செய்தார்; ஆறாம் பாட்டில், 'நாம் இருவரும் இப்படி நிற்கப் பெறில் நமக்கு ஒரு கேடும் வாராது,' என்றார்; ஏழாம் பாட்டில், மேல் இவர் அஞ்சினபடியே விடிந்தபடி அருளிச்செய்தார்; எட்டாம் பாட்டில், திருநாமத்தைக் கேட்டவாறே தம்முடைய கரணங்களுக்குப் பிறந்த வேறுபாட்டைச் சொன்னார்; ஒன்பதாம் பாட்டில், 'வேறுபட்டவர் ஆகாதே மறந்தாலோ?' என்ன, 'என் மனத்திலே இருக்கிறவனை மறக்கப்போமோ?' என்றார்; முடிவில், கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார்.

முதற்பதிகத்தால், 'எல்லாரினும் அறப்பெரியன் இறைவன்' என்றார்; இரண்டாம் பதிகத்தால், 'வணங்கத் தக்கவன்' என்றார்; மூன்றாம் பதிகத்தால், 'அவன்தான் எளியவன்,' என்றார்; நான்காம் பதிகத்தால்,' எளியனானவன் குற்றங்களைப் பொறுப்பவன்,' என்றார்; ஐந்தாம் பதிகத்தால், 'அவன் சீலவான்,' என்றார்; ஆறாம் பதிகத்தால், 'எளிதாக ஆராதிக்கத் தக்கவன்,' என்றார்; ஏழாம் பதிகத்தால் 'எல்லை இல்லாத இனியன்,' என்றார்; எட்டாம் பதிகத்தால், அவனுடைய ஆர்ஜவ குணத்தை அருளிச்செய்தார்; ஒன்பதாம் பதிகத்தால், 'பொறுக்கப் பொறுக்க இன்பத்தினைக் கொடுப்பவன் என்றார்; பத்தாம் பதிகத்தால், 'இத்தன்மைகளையுடையவன் ஒருவன் இறைவன் ஆதலின், ஒருவிதக்காரணமும் இன்றியே உயிர்களை அங்கீகரிப்பவன்,' என்றார்; ஆகையாலே, 'அவன் துயரறு சுடரடி தொழுது எழு என்மனனே' என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்து தலைக்கட்டினார்.

ஆக, 'அடி தொழுது எழு' என்று தொடங்கி, 'கல்வி வாயும்' என்று முடித்ததனால், ஒரு மனிதன் விரும்பிப் பெறத் தக்க உயர்வு அற உயர்ந்த உறுதிப்பொருள், பகவானுக்குச்

செய்யும் கைங்கரியமேயாம் என்பதனை முதல் நூறு திருப்பாசுரங் களால் அறுதியிட்டு அருளிச்செய்தார் ஆயிற்று.

## திருவாய்மொழி நூற்றந்தாதி

பொரும்ஆழி சங்குடையோன் பூதலத்தே வந்து
தருமாறுஓர் ஏதுஅறத் தன்னைத்—திரமாகப்
பார்த்துஉரைசெய் மாறன் பதம்பணிக என்சென்னி;
வாழ்த்திடுக என்னுடைய வாய். (10)

முதற்பத்து ஈட்டின் தமிழாக்கம்
முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.
வடக்குத் திருவீதிப்பிள்ளை மலரடி வாழ்க!
நம்பிள்ளை நற்றாள் வாழ்க!
மாறன் மலரடி வாழ்க!



# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

பிற்சேர்க்கை-*II*

# பெரியோர் உரைத்த உரை நயங்கள்

## உள்ள இடங்கள்

1. ஸ்ரீ ஆளவந்தார்—பக்கம் 258.
2. திருமாலையாண்டான்—104, 195.
3. எம்பெருமானுர்—65, 104, 195.
4. திருக்குருகைப்பிரான் பிள்ளான்—143, 173, 210, 296.
5. எம்பார்—104, 126.
6. கூரத்தாழ்வான்—258.
7. பட்டர்—72, 119, 147, 265, 289, 306, 337, 346.
8. நஞ்சீயர்—173, 209, 215.
9. நம்பிள்ளை—210.
10. பிள்ளை திருநறையூர் அரையர்—191.
11. பிள்ளையமுதனுர்—233.

*பிற்சேர்க்கை-III*

வியாக்கியானத்தில் வந்துள்ள

# ஐதிஹ்யங்கள்

**பிள்ளைதிருநறையூர் அரையர்:** "ஒரு குருவி பிணைத்தபிணை ஒருவரால் அவிழ்க்கப்போகிறதில்லை; சர்வசக்தி கருமானுகுண மாகப் பிணைத்த பிணையை அவனையே கால் கட்டியவிழ்த்துக் கொள்ளுமித்தனைகாண்." பக். 14.

**ஆழ்வான்:** "ஆழ்வான் பிள்ளைப்பிள்ளையைப் பார்த்து நிர்க் குணமென்பார் மிடற்றைப் பிடித்தாற்போலே ஆழ்வார் 'நலமுடைய வன்' என்றபடி கண்டாயே." பக். 61.

**எம்பார்:** "ஆழ்வார் பிரபந்நரோ, பத்திநிஷ்டரோ?" என்று எம்பாரைச் சிலர் கேட்க, "ஆழ்வார் பிரபந்நர்; பத்தி இவர்க்குத் தேக யாத்ராசேஷம்," என்று அருளிச்செய்தார். 'எவ்வாறு?' எனின், நாமனைவரும் பிரபந்நர்களாகவிருப்பினும், ஓராண்டிற்கு அல்லது, ஆறு மாதங்கட்கு வேண்டும் உணவுப் பொருள்களை முன்னரே தேடிக்கொள்ளுகிறோமன்றோ? அது போன்று, 'உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணனே' ஆவன் இவர்க்கு. பக். 63.

**எம்பார்:** 'தொழில் செய்வதற்காயின் இறைவன் திருவருள் வேண்டும்; தொழில் செய்யாதிருப்பதற்கு அவன் அருள் வேண்டுமோ?' என்று எம்பாரைச் சிலர் கேட்க, 'சுவர்க்கத்தினின் றும் விழுகிற திரிசங்குவைச் சத்திமான் நிற்கச் சொல்ல நிற்க வேண்டிற்றுக் கண்டாயே! அப்படியே, நிவர்த்திக்கும் அவன் வேணுங்காண்,' என்று அருளிச்செய்தார். பக். 87.

**நஞ்சீயர்:** 'ஒருவனுக்கு வைஷ்ணவத்துவம் உண்டு இல்லை என்னுமிடம் தனக்கே தெரியுங்காண்,' என்று சீயர் பலகாலும் அருளிச்செய்வார்; அதாவது, பிறர் அனர்த்தம் கண்டால் 'ஐயோ!' என்று இரங்குவானாகில், அவன் 'நமக்குப் பகவத் சம்பந்தம்உண்டு' என்றிருக்க அடுக்கும்; 'இத்தனையும் வேண்டும் பட்டிடுவானுக்கு!' என்றிருந்தானாகில், அவன் 'நமக்குப் பகவத் சம்பந்தம் இல்லை' என்றிருக்க அடுக்கும்,' என்பதாம். பக். 107.

**பட்டர் :** சம்பந்த ஞானமே வேண்டும் என்கிறார் ; 'எங்ஙனம் ?' எனின், ஒரு வணிகன் தன் மனைவி கருவுற்றிருக்குங்காலத்தில் பொருள் தேடும் விருப்பினால் வெளி நாடு சென்றான் ; அவளும் கருவுயிர்த்தாள் ; மகனும் தக்க வயது அடைந்து தனக்கும் தமப்பனாருடைய வாணிகமே தொழிலாய்ப் பொருள் தேடப் போனான் ; இருவரும், தத்தமக்கு வேண்டிய சரக்குப் பிடித்துக் கொண்டு வந்து ஒரு பந்தலில் தங்கினார்கள் ; அஃது, அவ்விரு வருக்கும் இடம் போதாமையால் அம்பறுத்து எய்ய வேண்டும்படி விவாதமுண்டான சமயத்தில், இருவரையும் அறிவான் ஒருவன் வந்து, 'இவன் உன் தமப்பன் ; நீ இவன் மகன்,' என்று அறிவித் தால், கீழ் இழந்த நாள்களுக்குச் சோகித்து, இருவர் சரக்கும் ஒன்றாய், அவன் காப்பாற்றுகின்றவனாய், இவன் காப்பாற்றப்படும் பொருளாய்க் கலந்துவிடுவார்களன்றோ ? அது போன்று "சீவான் மாவும் பரமான்மாவும் சரீரமாகிற ஒரு மரத்தினைப் பற்றியிருந்தால் ஒருவன் இருவினைப் பயன்களை நுகராநிற்பவன் ; நாம் ஏவப்படும் பொருள் என்னும் முறையறியவே பொருந்ததலாமன்றே ! பக். 120.

'ஓர் அரசகுமாரன் பூங்காவொன்றினைக் கண்டு புக அஞ்சினால், 'இது உன் தமப்பனதுகாண்' என்னவே, நினைத்தபடி நடந்து கொள்ளலாமன்றோ ! ஆன பின்னர், 'அவனுடைய உடைமை இவை யெல்லாம்' என்னும் நினைவே வேண்டுவது, தானும் அதற்குள்ளே ஒருவனாகச் சேரலாம்,' என்கிறார். பக. 121.

**எம்பெருமானார் :** ஓர் அயநத்தினன்று குன்றத்துச் சீயர் எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே புக, அவருடைய சிறு பெயரைச் சொல்லி, 'சிங்கப்பிரான் ! இன்று அயநங்காண்' என்ன, திரு வுள்ளத்தில் ஓடுகிறது இன்னது என்று அறியாமையாலே அவர் பேசாதிருக்க, 'உயிர் உடலை விட்டு நீங்கும் அந்திம காலத்தில் பலம் கண்ணழிவற்ற பின்பு நடுவு விரோதியாய்ச் செல்லுகிற நாளில் ஓராண்டு கழியப்பெற்ற இது உனக்கு ஒன்றாய் இருந்த தில்லையோ !' என்றருளிச்செய்தார். பக். 126.

**ஆழ்வான் :** ஆழ்வான் இப்பாட்டளவு வரப் பணித்து, இப் பாட்டு வந்தவாறே 'இத்தையும் நும் ஆசிரியர் பக்கல் கேட்டுக் கொள்ளுங்கள்,' என்ன, பட்டரும் சீராமப்பிள்ளையும் எழுந்து போகப் புக்கவாறே, அவர்களை அழைத்து, 'இன்ன போது இன்னார் இருப்பார், இன்னார் போவார் என்று தெரியாது. இருந்து கேளுங்கள்,'

என்று திருமந்திரத்தை உபதேசித்து, இப்பாட்டைக் கூறி, 'இப் பாட்டை இதற்கு அர்த்தமாக நினைத்திருங்கள்' என்று பணித்தார். பக். 129.

**எம்பெருமானார் :** 'சர்வேஶ்வரன் அரியன் என்றால் சம்சாரத்தில் ஆள் பற்றாது என்று அவன் எளிமையை விவரமாகச் சொல்லிக்கொண்டு போந்தோம்; அதுதானே இவர்களுக்கு 'இத்தனை எளியனோ?' என்று விடுகைக்கு உடலாயிற்று; அவ் வெளிமைதானே பற்றுகைக்கு உடலாயிற்று உமக்கு ஒருவருக்குமே!' என்று எம்பாரைப் பார்த்து உடையவர் அருளிச்செய்தார். பக். 133.

**பட்டர் :** 'சர்வேஶ்வரனை அடைந்தானாகில் அவன் பலனைக் கொடுக்கிறான்; பிராட்டியைத் துணையாகப் பற்ற வேண்டுகிறது என்?' என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க, 'அவனையடையுமிடத்தில் இவன் குற்றம் பாராதே தன்னிழலிலே இவனை வைத்து, அவன் பக்கல் முகம் பெற்றவாறே குற்றத்தைப் பொறுப்பிக்கும் அவள் முன்னாகப் பற்றல் வேண்டும்' என்று கூறி, 'நாளும் நந்திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி,' என்னாநின்றது கண்டீரே!' என்றருளிச்செய்தார். பக். 167.

முற்காலத்தில் சிற்றறிஞன் ஒருவன், 'பற்றற்ற பரம ஞானிகளும் போற்றத் தக்கனவாக இருக்கின்றன; உண்மைப் பொருளை உள்ள வாறு கூறுகின்றன' என்று இத்திருவாய்மொழி அளவும் பாடங் கேட்டு, இத்திருவாய்மொழி வந்த அளவில் 'இது காமுகர் வாக்கியமாக இருந்ததே!' என்று கைவிட்டுப் போனானும்; 'இறைவன் கேட்கத்தக்கவன், நினைக்கத்தக்கவன், தியானம் செய்யத்தக்கவன், பார்க்கத்தக்கவன்' என்று விதிக்கிற பகவத் காமம் என்று அறிந்திலன், நல்வினை அற்றவனாதலாலே. பக். 178.

**பட்டர் :** 'சக்கரவர்த்தி திருமகன் திருவவதரித்த பின்பு வானர சாதி வீறு பெற்றாற்போலே காணும், ஆழ்வார்கள் திருவவதரித்த பின்பு திரியக் சாதி வீறு பெற்றபடி,' என்று ரசோக்தியாக அருளிச் செய்வர். பக். 182.

**தெற்காழ்வான் :** 'ஒரு முழுக்காலும் இரண்டு முழுக்காலும் போகாதுகாண்; தெற்காழ்வார் கையில் திருவாழியாலே வினையை அறுத்துக்கொண்டு போகில் போகும் அத்தனை ஒழிய, ஒன்றிரண்டு முழுக்கால் போகாதுகாண் நான் பண்ணின பாவம்!' என்று திருக் கோட்டியூரிலே தெற்காழ்வான் கோளரியாழ்வானுக்குத் தீர்த்தத்

துறையில் சொன்ன வார்த்தையை நினைவு கூர்வது. பக். 190.

**பட்டர் :** பட்டரை ஒரு தமிழ்ப் புலவர், 'கேட்டிரங்கி' என்னுது, 'கண்டிரங்கி' என்னப் பெறுமோ?' என்ன, 'அணைத்த கை நெகிழ்த்த அளவிலே வெளுத்தபடி கண்டால் பிரியத் தகாது என்றிருக்க வேண்டாவோ?' என்றருளிச்செய்தார்; கேட்ட புலவர், 'இவ்வாறு நிகழ்வதுமுளதோ?' என்ன, 'புல்லிக் கிடந்தேன்', 'காதலர் தொடுவுழித் தொடுவுழி' என்பன போன்ற தமிழ்ப்பாக்களை நீ அறியாயோ?' என்றருளிச்செய்தார். பக். 198.

**பட்டர் :** 'நம்பியேறு திருவுடையான் தாசர் திருநாட்டுக்கு நடந்தார்,' என்று பட்டர்க்கு விண்ணப்பஞ்செய்ய, பட்டர் துணுக் கென்று எழுந்து நின்று, 'அவர் ஸ்ரீவைஷ்ணவர்களுடன் பரிமாறும் படிக்குத் திருநாட்டுக்கு எழுந்தருளினுர் என்ன வேண்டுங்காண்,' என்றருளிச்செய்தார். பக். 204.

**பெரிய திருமலைநம்பி :** பெரிய திருமலை நம்பி, தமது இறுதிக் காலத்திலே, தமக்கு வெண்ணெய்க்காடும் பிள்ளையாயிற்றுத் திருவாராதனம்; அவர் திருமுன்பு திருத்திரையை வாங்கச் சொல்லி, 'சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான், இனியுனது, வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே,' என்றுராம். பக். 214.

**பட்டர் :** புகைபூவே - அகிற்புகை, கருமுகைப்பூ என்று விசேடித்துச் சொல்லாமையாலே ஏதேனும் புகையும், ஏதேனும் பூவும் அமையும். இவ்விடத்தில், பட்டர் 'செதுகையிட்டுப் புகைக்க அமையும், கண்டகாலி இடவும் அமையும்' என்றருளிச்செய்வர். இங்ஙனம், பட்டர் அருளிச்செய்தவாறே, 'இறைவனுக்குக் கண்டங் கத்தரிப்பூவை அருச்சித்தல் கூடாது' என்று சாஸ்திரங்கள் விதிக்கின்றனவே!' என்று நஞ்சீயர் கேட்க, 'அவனுக்கு ஆகாது என்கிறதன்று; பறிக்கிற அடியார் கையில் முள் பாயும் என்பதற் காகத் தவிர்த்தனகாணும்! 'கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார் முளரியும் ஆம்பலும்முன் கண்டக்கால்' என்று இறைவனுக்கே உரிய திருத்துழாயோடு அதற்கு வேறுபட்ட பூக்களையும் ஒரு சேர எடுத்துத் திருமங்கை மன்னன் அருளிச்செய் கிறது கண்டீரே! இதனுல், இறைவன் பொருளில் ஏற்றத்தாழ்வு பார்ப்பது இன்று என்பது விளங்குமே! மற்றும், பிரகிருதி சம்பந்த

மில்லாத பொருள்தான் வேண்டும் என்றிருந்தானாகில், 'புள்ளாய் ஓரேனமுமாய்' அவதரிப்பானோ? ஸ்ரீ வைகுண்டத்தில் இரானோ?[7] என்றருளிச்செய்தார். பக். 266.

**நம்பி திருவழுதி நாடு தாசர் :** நம்பி திருவழுதி நாடு தாசர், 'இத்தேவசாதி வெறுமரையோ, உப்புச்சாறு கிளருவது எப் போதோ?' என்று பார்த்துக் கிடப்பதே இவன் அழகையும் இனிமையும் விட்டு!' என்பராம். பக். 272.

**பட்டர் :** பட்டர் திருவோலக்கத்துக்குச் சாஸ்திரியாயிருப்பார் ஒரு பிராமணர் பல காலும் செல்வர்; அவரைக் கண்டால் பட்டர் 'வந்தாயோ, போனாயோ' என்று சாமான்யமாக வியவஹரித்து அருளிச்செய்வர்; ஒரு ஸ்ரீவைஷ்ணவர், பலகாலும் சேவிக்க எழுந் தருளுவர்; அவரைக் கண்டால் மிகவும் கிருபை பண்ணி ஆதரித்துக் கொண்டு எழுந்தருளியிருப்பார். இதனைப் பல காலும் கண்டிருப்பார் ஒருவர் வந்து, பட்டரைச் சேவித்து, 'ஸ்வாமீ, தேவரீர் திருவோலக் கத்துக்கு வருகிற சாஸ்திரி பிரசித்தராயிருக்கிறவர்; அவர் வந்தால் சாமான்யமாக வியவஹரித்தருளுகிறது, ஒருசாது ஸ்ரீவைஷ்ணவர் வந்தார் என்றால் அவரை மிகவும் பிரதிபத்தி பண்ணி அருளுகிறது காரணத்தை எனக்கு அருளிச்செய்ய வேண்டும்,' என்ன, 'ஆனால், எப்போதும் போலே நாளையும் அவ்விரண்டு பேர்களும் வருவார்கள்; அப்போது நீயும் எப்போதையும் போலே பார்த்திரு; காரணம் சொல்லுகிறோம்,' என்ன, அவரும் அப்படியே பார்த்திருக்க, அவரை எப்போதையும் போலே வினவியருளி, 'நீர் ஆரைத்தான் பரதத்துவம் என்று நினைத்திருக்கிறது?' என்ன, 'சில பிரமாணங்கள் பிரஹ்மாவே பரதத்துவம் என்று சொல்லுகின்றன; சில பிரமா ணங்கள் விஷ்ணுவே பரதத்துவம் என்று சொல்லுகின்றன; சில பிரமாணங்கள் சிவனே பரதத்துவம் என்று சொல்லுகின்றன; ஆகையினாலே, நம்மாலே நிச்சயிக்கப் போமோ?' என்ன, 'நன்று' என்று இருந்து, அவர் போனவாறே, ஸ்ரீ வைஷ்ணவர் எழுந்தருளிச் சேவிக்க, அவரையும் கிருபை செய்தருளி, 'தேவரீர் யாரைத்தான் பரதத்துவம் என்றிருப்பீர்?' என்ன, 'தேவரீர் ஶ்ரிய:பதி நாராயணனே பரதத்துவம் என்றருளிச்செய்யுமே! அஃதொழிய அடியேன் வேறு ஒன்றறியேன்,' என்ன, 'இன்னம் உமக்குத் தஞ்சமாக நினைத் திருப்பது என்?' என்ன, 'எம்பெருமானார் திருவடிகளே உபாயமும் உபேயமும் என்று பிரசாதித்தருளுமே, அத்தையே தஞ்சமாக நினைத்

திருப்பேன்,' என்ன, திருவுள்ளம் உவந்து, 'அபசாரத்தை க்ஷமித்தருள்க! திருமாளிகைக்கு எழுந்தருள்க!' என்றருளிச்செய்து பார்த்திருந்தவரைப் பார்த்து, 'கண்டீரே இருவர்க்கும் உண்டான தாரதம்யம்? ஆகையாலே, இவரை வணங்கவோ, அவரை வணங்கவோ? இப்படியன்றோ ஸ்வரூப ஸ்திதி இருந்தது?' என்றருளிச்செய்ய, அவரும் கிருதார்த்தரானார் என்ற ஐதிஹ்யம் 'துயக்கன் மயக்கன்' (பா. 95) என்ற பாசுரத்தில், ஜீயர் அரும் பதத்தில் காணப்படுகின்றது.

**வேல்வெட்டி நம்பியார் :** வேல்வெட்டி நம்பியார், நம்பிள்ளையைப் பார்த்து, 'பெருமாள் கடலைச் சரணம் புகுகிற காலத்தில் கிழக்கிருத்தல் முதலிய சில நியமங்களோடே சரணம் புக்கார்; ஆதலின், இப்பிரபத்தி உபாயம், வேறு சாதனங்களைப் போன்று, சில நியமங்கள் வேண்டியிருக்கிறதோ?' என்று கேட்க, 'அரசரான இராகவர் கடலைச் சரணம் அடைவதற்குத் தக்கவர்' என்று பெருமாளுக்கு உபதேசித்தான் ஸ்ரீ விபீஷணாழ்வான்; அவன் தான் பெருமாளைச் சரணம் புகுகிறவிடத்தில், 'கடலில் ஒரு முழுக்கிட்டு வந்தான்' என்றில்லை; 'ஆக, இத்தால் சொல்லிற்றாயிற்று என்?' என்னில், 'பெருமாள், இட்சுவாகு குலத்தராய் ஆசாரத்தில் மேம்பட்டவராகையாலே சில நியமங்களோடே சரணம் புக்கார்; ஸ்ரீ விபீஷணாழ்வான் இராக்கதர் குலத்தனாகையாலே, நின்ற நிலையிலே சரணம் புக்கான்; ஆகையாலே, யோக்கியனுக்கு அயோக்கியதை சம்பாதிக்க வேண்டா; அயோக்கியனுக்கு யோக்கியதை சம்பாதிக்க வேண்டா; ஆகையாலே, சர்வாதிகாரம் இவ்வுபாயம்,' என்றருளிச்செய்தார். பக். 351.

ஐதிஹ்யங்கள் முற்றின.

பிற்சேர்க்கை-IV

# வியாக்கியானத்தில் வந்துள்ள உவமைகள்

'ஆறு கிண்ணகமெடுத்தால் நேர் நின்ற மரங்கள் பறியுண்டு போய்க் கடலிலே புகும்; நீர்வஞ்சிக்கொடி முதலானவை வளைந்து பிழைக்கும்; அவை போல' பக். 58.

'சூரியன்முன் நட்சத்திரங்கள் போலவும், மஹாமேரு மலையினுச்சியில் நின்றவனுக்குக் கீழுள்ள கடுகு முதலியவை போலவும்' பக். 60. 'கண்ட இடமெங்கும் பயிர்பட்டிருக்கும் நன்செய் நிலம் போன்று' பக். 60. 'கரை கட்டாக் காவிரி போன்று' பக். 60.

'நாமனைவரும் பிரபந்நர்களாய் இருப்பினும், ஓராண்டிற்கு அல்லது ஆறு மாதங்கட்கு வேண்டும் உணவுப்பொருள்களைத் தேடிக்கொள்வது போன்று' பக். 63. 'மார்பின் கடுப்பாலே தரையிலே பாலைப் பீச்சுவாரைப்போன்று' பக். 63.

'யானைக்குக் குதிரை வைத்தல் போன்று' பக். 65.

'இருவர்கூடப் பள்ளியிலோதியிருந்தால், அவர்களுள் ஒருவனுக்கு உயர்வு உண்டாயின், மற்றையவன் அவனோடே ஒரு சம்பந்தத்தைச் சொல்லிக்கொண்டு கிட்டுமாறு போன்று' பக். 66.

'அருச்சுனன் பல முறை வணக்கங்கூறியது போன்று' பக். 67.

'நெற்செய்யப் புல் தேயுமா போலே' பக். 67.

'அணு அளவினதான ஆத்துமாவை அறியுமாறு போன்று' பக். 71.

'பிறவிக்குருடன் பொருள்களைப் பார்க்கின்றிலன் எனினும், தெளிந்த பார்வையினையுடையவனும் பார்க்கின்றிலன் எனினும், பார்க்கமாட்டாமையில் இருவரும் ஒப்பாதல் போல' பக், 71.

'இறைவனுகிய தான் உயிர்களைச் சரீரமாகக்கொண்டு தாரகனுய் எல்லாரையும் ஏவுகின்றவனுய் இருப்பது போன்று' பக். 73.

'அரசர்கட்கு நாடெங்கும் தமது ஆணை செல்லுமாயினும், தங்கள் தேவியரும் தாங்களுமாகப் பூந்தோட்டங்கள் சிலவற்றைக்

குடநீர் வார்த்து ஆக்குவது அழிப்பதாய் விளையாட்டின்பம் துய்க்குமாறு போன்று' பக். 75.

'செப்பிலே கிடந்த ஆபரணத்தை வாங்கிப் பூண்டு, பின்னையும் அவ்வாபரணத்தை வாங்கிச் செப்புக்குள்ளே இட்டு வைக்குமாறு போன்று' பக். 83.

'அய்யன் பாழியில் ஆனை போர்க்கு உரித்தாகாதது போன்று' பக். 86.

'ஆகிருதியினைச் சொல்லுகிற சொல்லானது வடிவிலே சென்று. முடிந்து நிற்குமாறு போன்று' பக். 87.

'குணத்தோடு கூடிய பொருள் தோன்றாநிற்கவும், செந்நிறம் என்னும் குணத்தையே முக்கியமாகக் கொள்வது போன்று' பக். 87.

'விருஷல விவாக மந்திரம் போலே' பக். 88.

'இச்சரீரத்துக்கு ஆத்துமா தாரகனாய் நியாமகனாய்ச் சேஷியாய் இருப்பது போன்று' பக். 90.

'பல தூண்களில் ஓர் உத்திரம் கிடப்பது போல' பக். 91.

'உளன் என்கிற சொல்லால் சொன்னால், உனக்கு விருப்பமான இல்லாமை சித்திக்காதது போன்று' பக். 97.

'ஓர் அண்டத்தைச் சமைத்து, அவ்வண்டத்தில் ஒருவனைத் தனியாக வைத்தது போன்று' பக். 99.

'**இச்செய் அடைய நெல்** என்றால், நெல்லை விளைக்குமது என்று காட்டுமாறு போன்று' பக். 103.

'சிறுகுழந்தை கையிலே பாம்பைப் பிடித்துக்கொண்டு கிடந்தால் போகடச்சொல்லி, பின்னர்ப் 'பாம்பு' என்பாரைப் போலவும், ஒருவன் வீட்டிற்குள்ளே கிடந்து உறங்காநிற்க, நெருப்புப் பற்றிப் புறம்பே எரிந்தால், 'வெளியே வா' என்று சொல்லி, பின்னர் 'நெருப்பு' என்பாரைப்போலவும்' பக். 109.

'சண்டாளர் இருப்பிடத்தைப் பிராமணர்க்கு ஆக்கும் போது அங்குள்ளவற்றுள் சிலவற்றைக் கொள்வதும் சிலவற்றைக் கழிப்பதும் செய்யார்; அது போன்று' பக். 109.

'அரசகுமாரன் அழுகு சிறையிலே கிடந்தால், முடி சூடி அரசு நடத்துவதிலும் சிறை விடுகைதானே பயனாக இருக்குமாறு போன்று' பக். 109.

'மிகத் தாழ்ந்த பொருளை உள்ளே வைத்து மெழுக்கூட்டினதைப்போன்று' பக். 110.

'திறந்து கிடந்த வாசல்கள்தோறும் நுழைந்து திரியும் பொருள் போன்று' பக். 112.

'கெடுமரக்கலம் கரை சேர்ந்தாற்போன்று' பக். 114.

'அங்கநா பரிஷ்வங்கம் போன்று' பக். 117.

'திரை மாறின கடல் போலே' பக். 119.

'கடல் அளவிடக் கூடாததாகவிருப்பினும் அதனுள்ளில் மீன் முதலிய பொருள்களுக்கு வேண்டினபடி புகலாமன்றே! அது போன்று' பக். 121.

'பாழிலே மேட்டிலே பாய்கிற நீரைப் பள்ளத்திலே பயிரிலே பாய்ச்சுவாரைப் போன்று' பக். 123.

'இன்பத்தில் இச்சையுடைய ஒரு பெண் தன் உடம்பில் அழுக்கினைப் போக்கித் தன் கணவனோடு இன்பம் நுகர்தற்குரிய காலத்தை எதிர் நோக்கிக்கொண்டிருத்தல் போன்று' பக். 125.

'இருகை முடவனை 'யானையேறு' என்றால் அவனால் ஏறப் போகாதது போன்று' பக். 133.

'அறவோர் சிலர் ஏரி கல்லினால், சேற்றிலே தலையை நொழுந்திப் பட்டுப்போகாநிற்பர் சிலர்; விடாயர் அதிலே முழுகி விடாய் தீர்ந்து போகாநிற்பர்.' பக். 134.

'ஒருவன் கறுத்திருக்க, ஒருவன் சிவந்திருக்கிறபடி கண்டாயே' பக். 140.

'கருமுகை மாலை போலே எடுத்து ஏறிட்டுக்கொண்டு போனான்' பக். 141.

'பெருமாளும் பிராட்டியும் பள்ளிகொண்டருளின இடத்தை ஸ்ரீகுகப்பெருமாள் நோக்கிக்கொண்டு கிடந்தாற்போன்று' பக். 145.

'பசியர்க்குத் தாந்தாம் உண்ணும் உணவினைப் பகுந்திடுவாரைப்போன்று' பக். 145.

'பழங்கள் நிறைந்த மரத்தைப் பறவைக் கூட்டங்கள் மொய்த்துக்கொண்டு கிடந்தாற்போன்று' பக். 145.

'மோஹித்துக் கீழே வீழ்ந்த ஸ்ரீபரதாழ்வானைப் போன்று'' பக. 146.

'சக்கரவர்த்தி நான்கு ஆஹுதி பண்ணி நான்கு இரத்தினங்களை எடுத்துக்கொண்டாற்போன்று' பக். 150.

'ஒருவன் ஒருவனை, 'உனக்கு ஒரு மாத ஜீவனத்துக்கு என்ன வேணும்?' என்றால், தன் மனைவி மக்களையுங்கூட்டிக்கொண்டு 'எனக்குக் கலநெல் வேணும்' என்பது போன்று' பக். 151.

'இலிங்கத்துக்கே உயர்வு தோற்றும்படியாய் இருப்பதொரு பிரபந்தம் செய்து தரல் வேண்டும் என்பாரைப் போன்று' பக். 160.

'சாலில் எடுத்த நீர் போன்று' பக். 163.

'பாரி மாண்டல்யம் முதலியவைகள் நித்தியமாக இருக்கவும், நித்திய பரதந்திரமாய் இருக்குமாறு போன்றும், இறைவனுடைய சொரூபத்தைப் போன்று அவன் குணங்களும் நித்தியமாக இருக்கவும், அக்குணங்கள் நித்திய பரதந்திரமாயிருக்குமாறு போன்றும்' பக். 165.

'பருவமல்லாத காலங்களில் கடல் தீண்டலாகாது என்னுமாறு போன்று' பக். 167.

'பால் குடிக்கும் குழந்தைகள், தாயின் மார்பினை அகலின் நாக்கு வரளுமாறு போன்று' பக். 169.

'சாமந்தர்கட்குப் புறம்பே நாடுகள் மிகுதியாக இருந்தாலும், மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்கட்கு மேன்மையாக நினைத்திருப்பதைப் போன்று' பக். 170.

'வேற்றரசர்களால் கலகங்கள் உண்டான காலங்களில் அடையவளைந்தானுக்குள்ளே குடி வாங்கியிருந்து, கலகம் நீங்கியவாறே புறம்பே புறப்பட்டாலும், 'இவ்விடம் இன்னார் பற்று; இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் தம் இடத்தைச் சொல்லி வைக்குமாறு போன்று' பக். 170.

'சிறையிலே இருந்த இராசகுமாரன் தலையிலே முடியை வைத்துப் பின்னைச் சிறையை வெட்டி விடுவாரைப் போன்று' பக். 176.

'இது மற்றொரு காரகம் என்னுமாறு போன்று' பக். 178.

'பசியில்லாத காலத்தில் உணவு நோயினைத் தருவதாம் எனப் படுதலால், நோயின் மூலத்தை அறியும் மருத்துவர்கள் 'உணவு உண்ணலாகாது' என்று விலக்குமாறு போன்று' பக். 179.

'தாமரை திருவடிகளுக்குப் போலியாக இருக்க, 'வையங்கொண்ட தடந்தாமரை' என்று தாமரையாகவே திருவடிகளைப் பேசுவது போன்று' பக். 180.

'சச்கரவர்த்தி திருமகன் திருவவதரித்த பின்பு வானரசாதி வீறு பெற்றுற்போன்று' பக். 182.

'குழந்தை தாயின் உறுப்புகள் எல்லாங்கிடக்க, மார்பிலே வாய் வைக்குமாறு போன்று' பக். 183.

'ஆசாரியனுடைய ஞானத்தை உத்தேசித்துச் சிஷ்யன் வணங்குவது போன்று' பக். 183.

'வழி பறிப்பார் கையிலே அகப்பட்டு நிற்கத் தாய் முகத்திலே விழித்தாற்போன்று' பக். 184.

'என்றும் சேவலைக் காரியங்கொள்ளுவார் பேடையை முன்னிட்டுப்போலேகாணும் காரியங்கொள்ளுவது' பக். 184.

'திருமகள் கேள்வன் என்பது போன்று' பக். 184.

'அரசகுமாரர்கட்கு உரிய அவ்வக்காலங்களில் வெள்ளிலை இடாத போது அவர்கள் வருந்துவார்கள்; அது போன்று' பக். 186.

'கடலேறி வடிந்தாற்போலே' பக். 189.

'கலவியாலுண்டான பரவசத்தன்மை அடங்கலும் நடையிலே தோற்றப் புறப்பட்டாற்போன்று' பக். 194.

'கோடியைக் கண்ணியாக்கியது போன்று' பக். 194.

'திருமுகம் மறுத்தவன் கடையீட்டுக்குக் கேட்காததைப் போன்று' பக். 199.

'விடாயன் தண்ணீர்ப்பந்தலில் வந்ததும் சால் உருண்டு கிடந்தது போன்று' பக். 200.

'கடலிலே ஏற்றமிட்டுத் தண்ணீர் அரிதாம்படியான பாவத்தைப் பண்ணியவர்களைப் போன்று' பக். 202.

'கள்ளிச்செடிக்கு மஹாவிருக்ஷம் என்று பெயரிருப்பதைப் போன்று' பக். 203.

'இராசாக்கள் இராசத்துரோகம் செய்தவர்களை நலிகைக்கு வேற்காரரை வரவிடுமாறு போன்று' பக். 221.

'பால் குடிக்க நோய் தீருமாறு போன்று' 221.

'யானைக்கு உதவ வந்து தோன்றியது போன்று' பக். 224.

'தார்மிகன் வைத்த தண்ணீர்ப்பந்தலை அழிப்பாரைப் போன்று', 'ஊருணியிலே கள்ளியை வெட்டி எறிவாரைப் போன்று,' அமிருதத்திலே விஷத்தைக் கலப்பாரைப் போன்று' பக். 225.

'திருவாய்ப்பாடியில் வெண்ணெயினைப் போன்று' பக். 226.

'விபீஷணனைச்சேர்த்துக்கொண்டாற்போலவும்', 'அருச்சுனனைப் போரினைச் செய்வித்தாற்போலவும்' பக். 226.

'தார்மிகனாய் இருப்பானொருவன் இராசத தாமத குணங்களால் மேலிடப்பட்டவனாய் வீட்டில் தியினை வைத்து, சத்துவம் தலையெடுத்தவாறே வருந்துமாறு போன்று' பக். 228.

'காட்டுப்பசுவினைக் கண்டவாறே வீட்டிலுள்ள பசு நினைவிற்கு வருதல் போன்று' பக். 229.

'சண்டாளன் 'வேதம் போகாது' என்று தான் சொல்லப்பெறுவனோ? அது போன்று' பக். 232.

'சூட்டுநன்மாலைகள் தூயன ஏந்தி' என்னுமாறு போன்று பக். 233.

'வேறு தேசத்தை அடைந்திருக்கிற புத்திரனை, தாய் தந்தைகள் நினைக்குமா போலவும்' பக். 233.

'இட்சுவாகு குலத்தினர் நடுவே வந்து அவதரித்து அவர்களோடே எண்ணலாம்படி இருக்குமாறு போன்றும், யாதவர்கள் நடுவே வந்து அவதரித்து அவர்களோடு ஒக்க எண்ணலாம்படி இருக்குமாறு போன்றும்' பக். 240.

'பெறுகைக்கு ஈடாக முன்னரே நோன்பு நோற்று வருந்திப் புத்திரனைப் பெற்ற தாயானவள் அவன் நடக்க வல்லனான சமயத்தில் 'வேறு தேசம் போவேன்' என்றால், விட்டு ஆறியிராதது போன்று' பக். 241.

'ஒரு பாட்டம் மழை விழுந்தாற்போன்று' பக். 242.

'மாம்பழத்தோடு ஒரு வித சம்பந்தமில்லாதிருக்கவும் ஒரு வகை வண்டு 'மாம்பழவுண்ணி' என்ற பெயரை அடைவது போன்று' பக். 242.

'எடுக்கப்பட்ட சாரத்தையுடைய பூப்போன்று' பக். 242.

'போம்பழியெல்லாம் அமணன் தலையோடே போமாறு போன்று' பக். 243.

'சுண்டுவில் நிமிர்க்குமாறு போன்று' பக். 244.

'மதுவாகிற அசுரனைப் போக்கியது போன்று' பக். 244.

'கலத்திலிட்ட சோற்றை விலக்குவாரைப் போன்று' பக். 245.

'சம்சாரிகளில் அறிவு கேடர் முற்றறிவினர் என்னுமாறு போன்று', ஆத்துமாவிற்கு ஞான ஆனந்தங்களைப்போன்று' பக். 248.

'விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாறு போன்று' பக். 256.

'ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப் போன்று பக். 256, 317.

'பிடிதோறும் நெய்யொழியச் செல்லாத சுகுமாரரைப் போன்று' பக். 258.

'ஸ்ரீ மதுரகவிகளையும் நாதமுனிகளையும் போல்வார்' பக். 528.

'கடலிலே முத்துப்பட்டது என்றுமாறு போன்று' பக். 259.

'செல்வக்கிடப்பு உண்டாயினும் மஹிஷி ஸ்வேதத்துக்கு ஆளிட ஒண்ணுதது போன்று' பக். 263.

'புறம்பே ஒருவனுக்கு ஒருவன் விருந்திடும் போது நெடுநாள் பச்சை தேடி விருந்திட்டால், 'இவன் உண்டு என்ன குறை சொல்லப் புகுகிருனே?' என்று நெஞ்சாறலோடே தலைக்கட்ட வேண்டி வரும்; மகன் தமப்பனுக்கு விருந்திட்டால், உண்டாகில் உள்ள குறை தமப்பனதாய் நெஞ்சாறல்படவேண்டாதே இருக்கலா மன்றே? அதுபோன்று' பக். 265.

'சன்னி சுரம் வந்தவர்களைப் போன்று', 'இரத்தினகரம் போலே' பக். 270.

'அவனை அடைவதற்கு முன்பு இடையிலே உள்ள நாள்கள் ஒரு கடல் போன்று தோன்றுதல் போன்று' பக். 274.

'கரும்பு தின்னக் கூலி போன்று' பக். 275.

'மாதாவைப் பேணுதல் அழகிது என்னுமாறு போன்று' பக். 279.

'சாணிச்சாற்றைப் போன்று சுத்தன் என்று கொண்டார்கள்' பக். 284.

'ஆடு அறுத்துப் பலியிட்டுப் பணப்பையாக்கி, தான் விரும்பிய காலத்தில் நுகர்தற்குச் சேமித்து வைக்கும் சேமநிதி போன்று' பக். 286.

'வேரிலே வெப்பந்தட்டிஞல் கொழுந்து முற்பட வாடுவது போன்று' பக். 289.

'செடி சீய்த்துக் குடியேற்றின படை வீடுகளை விடாதே இருக்கும் அரசர்களைப் போன்று' பக் 291.

'விளக்குத் தன்னையுங் காட்டிப் பொருளையும் காட்டுவது போன்று' பக். 293.

'நிலா, தென்றல், சந்தனம் பிறர்க்கேயாக இருக்குமாறு போன்று' பக். 295.

'பிரளயங்கொண்ட பூமியை நீருக்கும் சேற்றுக்கும் இருயாத வடிவைக் கொண்டு எடுத்தது போன்று' பக். 295.

'இக்கடலை முடித்தல் அல்லது, இதனைக் கடத்தல் செய்யு மதற்கு மேற்பட இல்லை என்றது போன்று' பக். 297.

'காதலிமாட்டு அழுக்கு உகப்பாரைப்போலே' பக். 297.

'தேனைக்குடிப்பதற்கு இழிந்த வண்டுகளானவை பெருங் கடலிலே இழிந்தாரைப் போன்று' பக். 303.

'வள்ளலே, உன் தமர்க்கு என்றும் நமன் தமர் கள்ளர் போல' பக். 303.

'மனைவியை அணைதல் மனைவிக்கு இன்பினை அளித்தல் போன்று' பக். 307.

'காமத்தில் இச்சையுடைய ஒரு பெண்ணிற்குப் போக சின்னங் கள் தாரகமாக இருத்தல் போன்று' பக். 307.

'அரசனுடைய சந்நிதியில் கூனர் குறளர்களாய் வசிப்பது போன்று' பக். 307.

'விடாயர் மடுவிலே புக்கு ஆடியது போன்று' பக். 308.

'இரட்டைக் குழந்தைகளைப் பெற்ற தாயானவள் இருவர்க்கும் பால் கொடுக்கத் தகுதியாக நடுவே கிடக்குமாறு போன்று' பக். 310.

'வானவர் நாடு என்னுமாறு போன்று' பக். 310.

'குணங்களால் அடிமைப்பட்டேன் என்று இளைய பெருமாள் கூறியது போன்று' பக். 311.

'எப்பொழுதும் துதித்துக்கொண்டிருக்கிருர்கள் என்ற நித்திய சூரிகளைப்போன்று' பக். 311.

'எனக்கு அவன் குணங்கள் என்றும் தாரகமாக இருத்தல் போன்று' பக். 312.

'வெண்ணெயில் செய்த விருப்பம் பொய்யில்லாதது போன்று' பக். 312.

'இன்ன படைவீட்டைக் கொண்டான் என்று கூறுவது போன்று' பக். 314.

'பிரளய ஆபத்தில் பூமி தன் வயிற்றில் புகாவிடில் தரியாதது போன்று' பக் 314.

'சிலரை வசீகரிக்க நினைத்தவர்கள் கையிலே மருந்து கொண்டு திரியுமாறு போன்று' பக். 316.

'அரசர்கள் கறுப்புடுத்துப் புறப்பட்டால், விரும்புகிற காலத்தில் முகங்காட்டுகைக்காக அந்தரங்கர் மறைந்து திரிவர்; அது போன்று' பக். 317.

'உலகமே உருவமாய் இருக்கும் தனது தன்மையைக்காட்டியது போன்று' பக். 320.

'குளப்படியிலே கடலை மடுத்தாற்போன்று' பக். 321.

'பெருக்காறு சுழித்தாற்போன்று' பக். 327.

'மலரில் மணம் வடிவு கொண்டாற்போன்று' பக். 328.

'நம்மைக் கொல்ல வருகிறான் என்று சுக்கிரீவன் முதலியோர் கூறியது போன்று' பக். 332.

'அத்திக்காயில் அறுமான் போன்று' பக். 333.

'தம்மால் காதலிக்கப்பட்டவர்கள் இருக்கும் இடத்திற்குச் செல்லும் ஆடவர்கள், தம்மை அலங்கரித்துக்கொண்டு போமாறு போன்று' பக். 336.

'கற்பகத்தரு பணைத்தாற்போன்று' பக். 339.

'பெருவெள்ளத்திலே ஒரு சுழி போன்று' பக். 339.

'நெய்யுண்ணி என்னுமாறு போன்று' பக். 341.

'இராசாக்கள் அந்தப்புரத்தில், ஒரு கட்டிலினின்றும் மற்றைக் கட்டில் ஏறப்போகாநிற்க, அந்தரங்கர் நடுவே முகங்காட்டித் தங்காரியம் கொண்டு போமாறு போன்று' பக். 343.

'ஆயிரங்காதம் பறப்பதன் குட்டி ஐந்நூறு காதம் சிறகடிக் கொள்ளும் என்னுமாறு போன்று' பக். 349.

'நெய்தற்காடு அலர்ந்தாற்போல' பக். 350.

'சொன்ன காரியத்தைச் சடக்கெனச் செய்த நல்ல புத்திரர்களை மடியிலே வைத்துக் கொண்டாடும் தாய் தந்தையர்களைப் போன்று' பக். 355.

'பகவத் விஷயம் பிறர் அறியலாகாது என்றிருக்கும் திருக்கோட்டியூர் நம்பியைப்போலே' பக். 359.

'குழந்தை கிணற்றில் விழுந்தால் ஒக்கக் குதிக்கும் தாயைப் போலே' பக். 360.

'சத்துவகுணத்தையுடைய ஒருவன் தமோ குணத்தால் மேலிடப்பட்டவனாய் ஒரு வீட்டில் நெருப்பை வைத்து, சத்துவம் தலையெடுத்தவாறே வருந்துமாறு போன்று' பக். 361.

'புரோடாசத்தை நாய் தீண்டினாற்போன்று' பக். 361.

'ஓட்டு அற்ற செம்பொன் போன்று' பக். 364.

'பெருவிலையனாய் முடிந்து ஆளலாம்படி கைப்புகுந்து புகழையுடைத்தான நீலமணி போல' பக். 366.

பிற்சேர்க்கை-V

# பெரியார்களைப் பற்றிய குறிப்பு

**அழகியமணவாளச்சீயர் :** இவர் பெரியவாச்சான் பிள்ளையினுடைய மாணுக்கர்; திருவாய்மொழிக்குப் 'பன்னீராயிரப்படி' என்னும் வியாக்கியானத்தை அருளிச்செய்தவர்; துறவறத்தை மேற்கொண்டவர்; பரசமயகோளரியாய் விளங்கினுராதலின், 'வாதி கேசரி' என்ற சிறப்புப்பெயரைச்சேர்த்து, 'வாதி கேசரி அழகிய மணவாளச்சீயர்' என்று இவர் வழங்கப்படுவர்; திருவரங்கத்தில் வாழ்ந்தவர். வரதராஜர், சுந்தரஜாமாத்ருமுனி என்பன இவருடைய வேறு திருப்பெயர்கள்.

**அனந்தாழ்வான் :** இவர் இராமாநுசருடைய மாணுக்கர்; எழுபத்து நான்கு சிம்மாசனுதிபதிகளுள் ஒருவர்; தம் ஆசாரியர் கட்டளைப்படி திருமலைக்குச் சென்று, அங்கு ஓர் ஏரியை வெட்டி, அதற்கு 'இராமாநுசன் புத்தேரி' என்ற பெயரை அமைத்து, ஒரு நந்தவனத்தைஉண்டாக்கி, அதிலிருந்து மலர்களைப் பறித்துத் திருவேங்கடமுடையானுக்கு நாடோறும் புஷ்பகைங்கரியம் செய்து வந்தவர். ஒரு நாள், மலர் பறிக்கையில் நல்லபாம்பு ஒன்று இவர் கையிலே தீண்ட, அதற்குப் பரிகாரம் ஒன்றும் செய்யாது மீண்டு, நீராடி, பின்னரும் சென்று மலர்களைப் பறித்து மாலை தொடுத்துத் திருவேங்கடமுடையானைச் சேவிக்கச் சென்ருர்; அவ்வளவில், இறைவனும் திருவாய் மலர்ந்து, 'விஷந்தீர்க்க வேண்டா என்றிருந்தது என்னை?' என்று கேட்டருள, இவரும் 'கடியுண்ட பாம்பு வலிதாகில் திருக்கோனேரியில் தீர்த்தமாடித் திருவேங்கடமுடையானைச் சேவிக்கிறேன்; கடித்த பாம்பு வலிதாகில் விரஜையிலே தீர்த்தமாடி ஸ்ரீ வைகுண்டநாதனைச் சேவிக்கிறேன் ஏன்றிருந்தேன்,' என்று பதில் இறுத்த பரமயோகி; திருவாய்மொழிக்கு 'ஏய்ந்த பெருங்கீர்த்தி' என்ற தனியனை அருளிச்செய்தவர். கூரத்தாழ்வானுக்குப் பின் பிறந்தவர் என்று இவரைக் கூறுவர்.

**ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் :** இவர் ஸ்ரீ ஆளவந்தாருடைய மாணுக்கர்; இராமாநுசருக்கு ஆசார்யர். இராமாநுசருக்குப் பெரியதிருமொழி மூலமும், திருவாய்மொழி மூலமும் கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானமும், துவயார்த்தமும் அருளிச்செய்தவர்; திருவரங்கத்தில் வாழ்ந்தவர்; திருவரங்கத்து இறைவன் முன்னர்த் திவ்வியப்பிரபந்தத்தை இசையோடு பாடி,

அபிநயித்துக் காட்டும் அரையர்களுள் தலைவர்; 'திருவரங்கப் பெருமாளரையர்' எனவும் வழங்கப்படுவர்.

**ஆழ்வான்:** இவர் காஞ்சிபுரத்திற்கு அண்மையிலுள்ள **கூரம்** என்ற ஊரில் அவதரித்தவராய், அத்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானுடைய 'ஆழ்வான்' என்ற திருநாமத்தை வகித்தவராதலால், **'கூரத்தாழ்வான்'** என்று வழங்கப்பட்டார். **'திருமறு மார்பன்'** என்பது இவரது திருப்பெயர். விழுமிய செல்வமும் உயரிய ஒழுக்கமும் சீரிய கல்வியும் படைத்தவர்; செல்வமனைத்தையுந்துறந்து, திருவரங்கத்தையடைந்து, தம் ஆசாரியரான இராமாநுசருடைய திருவடி நிழலில் ஒதுங்கி வாழ்ந்தவர்; இராமாநுசர் பிரமசூத்திரத்திற்கு ஸ்ரீ பாஷ்யம் செய்த காலத்தில் அவருக்கு உறுதுணையாய் இருந்தவர்; விஹித விஷயத்தையும் துறந்தவர்; சோழவரசன் அவைக்களத்தில் 'சிவத்துக்குமேற் பதக்கு உண்டு' என்று தீட்டினவர்; தரிசனத்திற்காகத் தரிசனத்தைக் கொடுத்தவர்; சிஷ்யலட்சணத்திற்கும் ஆசாரிய லட்சணத்திற்கும் எல்லை நிலமானவர்; பட்டருக்கும் சீராமப் பிள்ளைக்கும் தமப்பனுர்; அவர்கட்கு ஆசாரியருமாவார். ஆண்டாள் இவருடைய திருத்தேவியார். வானிட்ட கீர்த்தி வளர்கூரத்தாழ்வான்' என்பர் திவ்யகவி ஐயங்கார். 'மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்ச முக்குறும்பாம், குழியைக் கடத்தும் நம் கூரத்தாழ்வான்' என்பர் அமுதனுர். ஒரு நாள் இவர் 'நெடுமாற்கடிமை' என்ற திருவாய்மொழியை அநுசந்தித்துக்கொண்டிருக்க, பட்டர், 'ஐயா, 'ஆழ்வார் 'சிறுமாமனிசர்' என்று சிறுமை பெருமையாகிற பரஸ்பர விருத்த தர்மங்களிரண்டும் ஒரு பொருளிலே கிடக்கும்படி அருளிச் செய்கிருரே! இது என்?' என்று கேட்டருள, இவரும், 'நல்லீர், கேட்டபடி அழகிது! நீர் உபநயனம் ஆகாதவராகையாலே சாஸ்திரங்களைக்கொண்டு இசைவிக்கவொண்ணுது; கண்கூடாக உமக்குக் காட்டுகிறேம்; கேளீர்; திருமேனி சிறுத்து ஞானம் பெருத்திருக்கிற சிறியாச்சான், அருளாளப்பெருமாள் எம்பெருமானுர் போல்வாரை காணும் 'சிறு மா மனிசர்' என்கிறது' என்று அருளிச்செய்தவர். இவர் அருளிச்செய்த நூல்கள்: வரதராஜ ஸ்தவம், சுந்தரபாஹு ஸ்தவம், ஸ்ரீ வைகுண்ட ஸ்தவம், அதிமாநுஷ ஸ்தவம், யமக ரத்நாகரம், கத்யத்ரய வியாக்கியானம் என்பனவாம்.

**ஆளவந்தார்:** இவர், சிதம்பரத்தையடுத்த காட்டு மன்னர் கோவிலிலே ஆடி மாதத்திலே உத்திராட நக்ஷத்திரத்தில் ஈச்வர முனிகட்குப் புதல்வராய்த் தோன்றினவர். மணக்கால் நம்பிகள்

தம் ஆசாரியருடைய நியமனத்தின்படியே சென்று, இவர் பிறந்த பன்னிரண்டாம் நாள் இவருக்குச் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து, 'யமுனைத்துறைவர்' என்ற பெயரையும் வைத்து மீண்டனர். ஸ்ரீமந்நாதமுனிகட்குப் பௌத்திரர். இவர், இளமைப்பருவத்தில் மஹாபாஷ்யபட்டர் என்பவரிடத்தில் சாஸ்திராப்பியாசம் செய்தார். அக்காலத்தில், இராச புரோகிதனும் மகா வித்துவானுமான ஆக்கியாழ்வானோடு வாதஞ்செய்யத் தொடங்கிய போது இராசபத்தினியானவள், 'இவர் தோற்கமாட்டார்' என்று உறுதி கூற, அரசன் 'நம் ஆக்கியாழ்வான் தோற்றால் இவருக்குப் பாதி ராச்சியந் தருவேன்.' என்று சூளுறவு செய்ய, உடனே அங்கு நடந்த பல வகை வாதங்களிலும் யமுனைத்துறைவரே வெற்றியடைய, அது கண்டு, தனது சூளுறவு நிறைவேறினமைபற்றி மகிழ்ச்சி கொண்ட அரசபத்தினி, 'என்னை ஆள வந்தாரோ!' என்று கொண்டாடியதனால், அதுமுதல் இவர் '**ஆளவந்தார்**' என்ற திருப்பெயரால் வழங்கப்பட்டார். மணக்கால் நம்பிகளுடைய உபதேசத்தால் சரணாகதி தருமம் நெஞ்சிலே பட்டு ஆநுகூல்யம் மிகுந்து, அரசவாழ்வில் வெறுப்புற்று, அதனைத் துறந்து, துறவறத்தை மேற்கொண்டு, திருவரங்கத்திலேயே நித்தியவாசஞ்செய்தவர். இப்பெரியார்க்கு மாணாக்கர் பலர். அவர்களுள், திருமலையாண்டான், திருககோட்டி நம்பி, திருவரங்கப் பெருமாளரையர், திருமலை நம்பி, பெரிய நம்பி என்பவர்கள் தலைவர்கள். இவருடைய மாணாக்கர்களுள் 'மாறனேரி நம்பி' என்னுந் திருக்குலத்து அடியாரும் ஒருவராவர். 'ஆம்முதல்வன்' என்று இராமாநுசரை அபிமானித்தவர். அரசன் காரணத்தால் இராமாநுசர் மேற்கே எழுந்தருளின காலத்தில் அங்கு அவர் உபந்நியசித்த கட்டளை கேட்டு, ஆசார்யர்களெல்லாரும் ஆச்சரியப்பட, உடையவரும், 'என் பரமாசாரியரான ஆளவந்தார் வார்த்தை கொண்டு சொன்னேன் இது; ஆளவந்தார் கோஷ்டியிலே ஒரு நாளாகிலும் சேவிக்கப் பெற்றேனாகில் பரமபதத்திற்கும் இதற்கும் சுருளும் படியும் கட்டிவிடேனோ?' என்று அருளிச்செய்யும்படியான கல்வியின் பெருமை வாய்ந்த பெரியார். இவர் அருளிச்செய்த நூல்கள் ஆகமப் பிரமாண்யம், புருஷநிர்ணயம், ஆத்துமசித்தி, தோத்திர ரத்நம், கீதார்த்த சங்கிரகம், சதுஸ்லோகி என்பன.

**ஈஸ்வரமுனிகள் :** இவர் ஸ்ரீமந்நாதமுனிகளுடைய திருக்குமாரர்; ஸ்ரீ ஆளவந்தாருக்குத் தமப்பனார். திருவாய்மொழிக்குத் 'திருவழுதி நாடென்றும்' என்ற தனியனை அருளிச்செய்தவர்.

**எம்பார் :** இவர், ஸ்ரீபெரும்பூதூருக்கு அண்மையிலுள்ள மழலை மங்கலம் என்ற தலத்தில் இராமானுசருடைய சிற்றன்னையாரான பெரிய பிராட்டியார் என்பவருக்குப் புதல்வராய் அவதரித்தவர்; பெரிய திருமலை நம்பிகட்கு மருகர்; கோவிந்தப்பெருமாள் என்பது இவருடைய திருப்பெயர். இவர் இளம்பருவத்தில் இராமானுசரோடு சேர்ந்து யாதவப்பிரகாசரிடம் வேதாந்த பாடம் கேட்டவர்; அக் காலத்து நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியால் திருக்காளத்தி மலையிலுள்ள சிவபெருமானுக்கு அணுக்கத்தொண்டராய்ச் சில காலமிருந்தவர்; பின்னர், பெரியதிருமலை நம்பியால் திருத்திப் பணிகொள்ளப் பட்டவர்; பின்னர், இராமானுசருடைய வேண்டுகோளின்படி உதக தாரா பூர்வமாகப் பெரியதிருமலை நம்பியால் இராமானுசருக்குக் கொடுக்கப்பட்டவர்; அது முதல், இராமானுசர் மெய்யில் பிறங்கிய சீரும் அவர் குணனுபவமுமே காலக்ஷேபமாகச் செல்லாநிற்க, 'மாகாந்த நாரணனுர் வைகும் வகையறிந்தோர்க்கு, ஏகரந்தமில்லை இருளில்லை' என்கிறபடியே, வாழ்க்கை நடத்தி வந்தவர்; இரா மானுசருடைய திருவடி நிழலைப்போன்று அவரை நீங்காது சார்ந்து நிற்பவர். இராமானுசர் இவருடைய வைராக்கியத்தைக கண்டு, இவர்க்குச் சந்நியாச ஆச்சிரமத்தைத் தந்தருளித் தமது திருப்பெயர் களுள் ஒன்ருன 'எம்பெருமானுர்' என்ற பெயரை இவருக்குச் சார்த்த, இவர் அப்பெரும்பெயரைத் தாம் தாங்க விரும்பாதவரராய்த் 'தேவரீருக்குப் பாதச்சாயையாயிருக்கிற அடியேனுக்குத் தேவரீர் திருநாமச்சாயையே அமையும்' என்று விண்ணப்பஞ்செய்ய, இராமானுசரும் அப்பெயரைச் சிதைத்து, 'எம்பார்' என்று பெயரிட் டருளினுர். அது முதல் 'எம்பார்' என்ற திருப்பெயரே இவருக்கு வழங்கிவரலாயிற்று. இராமானுசருடைய நியமனத்தின்படி சென்று பட்டர்க்குத் துவய உபதேசஞ்செய்து, ஆசாரியராகி, அவர்க்குப் பஞ்ச சம்ஸ்கரரங்களையும் திருவாய் மொழி முதலிய கிரந்தங்களையும் அவற்றின் வியாக்கியானங்களையும் அருளினவர்.

**எம்பெருமானுர்:** இவர் ஸ்ரீபெரும்பூதூரிலே ஆசூரி வமிசத்திலே சித்திரை மாதத்திலே திருவாதிரை நக்ஷத்திரத்தில் கேசவப் பெருமாள் தீக்ஷிதருக்கும் ஸ்ரீ பூமிப்பிராட்டியார் என்னும் காந்திமதி யம்மையாருக்கும் புதல்வராய்த் தோன்றினுர். இவர் பிறந்த பன்னிரண்டாநாள், மாதுலரான பெரியதிருமலை நம்பிகள் இவருக்கு '**இளையாழ்வசர்**' என்ற திருப்பெயரைச் சூட்டினர். '**எம்பெருமானுர்**' என்பது ஆசாரியரான திருக்கோட்டியூர் நம்பிகளால் வைக்கப்பட்ட

பெயர். இவர் இளமைப்பருவத்தில் யாதவப்பிரகாசர் என்னும் ஏகதண்ட சந்யாசியாரிடம் வேதாந்த பாடம் கேட்டனர், பின்பு அவ் யாதவப்பிரகாசரே இவரிடம் திரிதண்ட சந்யாசாதிகளைப் பெற்றுக் 'கோவிந்த ஜீயர்' என்ற பெயரோடு இவருக்கு மாணுக்கராயினர். ஸ்ரீ ஆளவந்தார் இவருக்குப் பரமாசாரியர்; 'தூய்நெறிசேர், எதிகட் கிறைவன் யமுனைத்துறைவ னிணையடியாம், கதிபெற்றுடைய இரா மாநுசன்' என்பர் அமுதனர். ஸ்ரீ ஆளவந்தாருடைய மாணுக் கர்களான பெரிநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப்பெருமாளரையர், திருமலை நம்பி என்னும் ஐவரும் இவருக்கு ஆசாரியர்கள். இவர்களுள், பெரிய நம்பி, இவர்க்குப் பஞ்சசம்ஸ்காரம் செய்தருளித் திருமந்திரம் துவயம் சரமஸ்லோகம் இவற்றையும் உபதேசித்து '**இராமாநுசன்**' என்ற திருப்பெயரை வைத்து, முதலாயிரம், இயற்பா என்ற ஈராயிர மூலத்தையும் அருளிச் செய்தார். திருக்கோட்டியூர் நம்பி, இவர்க்குத் திருமந்திரார்த்தத் தையும் சரமஸ்லோகார்த்தத்தையும் அருளிச்செய்து, '**எம்பெரு மானர்**' என்ற திருப்பெயரை வைத்தனர். திருமாலையாண்டான், இவர்க்குத் திவ்வியப் பிரபந்த வியாக்கியானம் அருளிச்செய்து '**சடகோபன் பொன்னடி**' என்ற திருப்பெயரை வைத்தனர். திருவரங்கப் பெருமாளரையர், இவர்க்குப் பெரியதிருமொழி மூலம், திருவாய்மொழி மூலம், கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம், துவயார்த்தம் ஆகிய இவற்றை அருளிச்செய்து, '**லக்ஷ்மண முனி**' என்னும் திருப்பெயரை வைத்தனர். பெரியதிருமலை நம்பி, இவர்க்கு ஸ்ரீராமாயண வியாக்கியானம் அருளிச்செய்து, '**கோயில் அண்ணன்**' என்ற திருப்பெயரை வைத்தனர்.

இவர், ஸ்ரீ ஆளவந்தாருடைய மூன்று குறைகளையும் தீர்த்தவர்; 'பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்' என்கிற 'உபய விபூதி ஐஸ்வர்யத்தையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம்' என்று திருவரங்க நாதனுல் தரப்பெற்றவர்; திருவரங்கன் செல்வ முற்றும் திருத்தினவர்; செல்வப் பிள்ளையைக் கொணர்ந்து திரு நாராயணபுரத்தில் பிரதிஷ்டை செய்தவர்; உலகினருய்ய இவரால் செய்யப்பட்ட காரியங்கள் இன்னும் மிகப்பல. [4]பிடிக்கும் பரசமயக் குலவேழம் பிளிற வெகுண்டு, இடிக்கும் குரற்சிங்க ஏறனையான் எழுபாரு முய்யப், படிக்கும் புகழ் எம்மிராமாநுசன்' என்பர் திவ்விய கவி ஐயங்கார். 'பல்கலையோர் தாம் மன்ன வந்த இராமாநுசன்' என்பது அமுதனர் திருவாக்கு. இவர், தம் அந்திமகாலத்தில்

அருளிச்செய்தவை : (1) ஸ்ரீபாஷ்யத்தை வாசித்தும், வாசிப்பித்தும் போருதல் ; அதற்குத் தகுதியில்லாவிடில் (2) அருளிச் செயலை ஓதியும் ஓதுவித்தும் போருதல் ; அதற்கும் தகுதியில்லையாகில், (3) உகந்தருளின நிலங்களிலே அமுதுபடி, சாத்துப்படி முதலான வற்றையுண்டாக்கி நடத்திக்கொண்டு போருதல் ; அதற்கும் தகுதி யில்லையாகில், (4) திருநாராயண புரத்தே ஒரு குடில் கட்டிக் கொண்டிருத்தல் ; அதற்கும் தகுதியில்லையாகில் (5) துவயத்தை அர்த்தா நுசந்தானம் பண்ணிப் போருதல் ; அதற்கும் தகுதியில்லை யாகில், (6) என்னுடையவன் என்று அபிமானிப்பான் யாவனொரு பரம பாகவதன் அவனுடைய அபிமானத்திலே ஒதுங்கிப்போருதல். இவர் அருளிச்செய்த நூல்கள் :— ஸ்ரீ பாஷ்யம், வேதாந்தசாரம், வேதாந்த தீபம், வேதார்த்த சங்கிரகம், கத்யத்ரயம், உடையவர் நித்தியம், கீதாபாஷ்யம் என்பன. இப்பெரியார், இப்பூவுலகில் நூற் றிருபது வருடங்கள் பஞ்சபூதமயமான தம் திருமேனியோடு வாழ்ந் திருந்தனர்.

**குன்றத்தூச்சீயர் :** இவர் இராமாநுசர் காலத்திலிருந்தவர் ; அவருடைய மாணுக்கராகவும் இருத்தல் கூடும். பக். 162இல் காண்க.

**சொட்டை நம்பிகள் :** ஸ்ரீ ஆளவந்தாருடைய திருக்குமாரர் ; 'என்ஞச்சான்' என்பவருக்குத் தமப்பனுர். எழுபத்து நான்கு சிம்மாச ஞதிபதிகளுள் ஒருவர்; திருவாய்மொழிக்கு 'மனத்தாலும் வாயாலும்' என்ற தனியனை அருளிச்செய்தவர்.

**திருக்குருகைப்பிரான் பிள்ளான் :** இவர், பெரிய திருமலை நம்பியின் புதல்வர் ; இராமாநுஜருடைய மாணுக்கர் ; திருவாய் மொழிக்கு 'ஆருயிரப்படி' என்னும் வியாக்கியானத்தை அருளிச் செய்தவர் ; 'பிள்ளான்' என்பது இவருடைய இயற்கைப்பெயர். திருக்குருகைப்பிரான் என்பது நம்மாழ்வாருடைய திருப்பெயர் ; அவருடைய திருப்பெயரை, அவருடைய நினைவின்பொருட்டுத் தம் மாணுக்கரும் அபிமான புத்திரருமான இவருக்கு வைத்தனர் இராமாநுஜர். பின்னர், 'திருக்குருகைப்பிரான் பிள்ளான்' என்றே இவர் அழைக்கப்பட்டனர். திருவரங்கத்தில் வாழ்ந்தவர்; எழுபத்து நான்கு சிம்மாசனதிபதிகளுள் ஒருவர்.

**திருக்கோட்டியூர் நம்பி :** இவர் ஸ்ரீ ஆளவந்தாருடைய மாணுக்கர்; இராமாநுஜருக்கு ஆசாரியர். இராமாநுஜர், இவரிடமே திருமந்திரார்த்தத்தையும், சரமஸ்லோகார்த்தத்தையுங் கேட்டனர். திருக்கோட்டியூரில் அவதரித்தமையால் திருக்கோட்டியூர் நம்பி

எனப் பெயர் பெற்ருர். புதல்வர், தெற்காழ்வான். புதல்வியார், தேவகி பிராட்டியார். 'சாந்தீபன் பக்கலிலே கிருஷ்ணன் வேதாத்தியயனம் பண்ணிருற்போலேகாணும் உம்முடைய பக்கலிலே எம்பெருமானுர் திருவாய்மொழி கேட்கிறதும்; ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தமொழிய இவர்க்கு வேறே பிரகாசியாது என்றிரும்; இவர்க்கு நீர் அறிவின்மையைப் போக்குகிரேம் என்றிராதே கொள்ளும்,' என்று திருமாலையாண்டானிடத்தில் இராமாநுசருடைய பிரபாவத்தை அருளிச்செய்தவர்.

**திருமாலையாண்டான்:** இவர், ஸ்ரீ ஆளவந்தாருடையமாணுக்கர்; இராமாநுசருடைய ஆசிரியர் ஐவருள் ஒருவர். இவரிடமே திருவாய்மொழியைப் பாடங்கேட்டனர் இராமாநுசர். இவர் அவதரித்த ஊர் அழகர் கோவில்; வாழ்ந்த ஊர் திருவரங்கம். மாலாதரர், ஞான பூர்ணர் என்பன இவருடைய வேறு திருப்பெயர்கள்.

**தெற்காழ்வான், கோளரியாழ்வான்:** இவரிருவரும் பட்டர் காலத்தில் இருந்த அடியார்கள்; திருக்கோட்டியூரில் வாழ்ந்தவர்கள். (பக். 190 காண்க)

**நஞ்சீயர்:** இவர், பட்டருடைய மாணுக்கர்; நம்பிள்ளையின் ஆசாரியர்; திருவாய்மொழிக்கு 'ஒன்பதினுயிரப்படி' என்னும் வியாக்கியானத்தை அருளிச்செய்தவர்; 'வேதாந்தி' என்ற சிறப்புப் பெயரையுடையவர். இருபெருஞ்செல்வங்களாலும் நிறைவுற்று அவற்ருல் வீறுற்று மேல்நாட்டில் இருந்த இவர், பட்டரால் திருத்திப் பணிகொள்ளப்பட்டார். பின்னர்த் துறவறத்தை மேற்கொண்டதனுல் 'சீயர்' என்றும் பட்டரால் 'நம்முடைய சீயர்' என்று அபிமானிக்கப்பெற்றமையால் 'நஞ்சீயர்' என்றும் வழங்கப்பட்டனர். இவர் திருவாய் மொழிக்கு நூறுரு பொருள் கூறியருளினுர் எனின், இவருடைய ஞானத்திற்கும் ஆற்றலுக்கும் பிறிதொரு சான்றும் வேண்டுமோ? இவர் வாழ்ந்த ஊர் திருவரங்கம். இவர் அருளிச்செய்த வேறு உரைகள்: திருப்பாவைக்கு ஈராயிரப்படி, திருவந்தாதிகள் கண்ணிநுண்சிறுத்தாம்பு திருப்பல்லாண்டு இவைகட்கு வியாக்கியானம், இரஹஸ்யத்ரய விவரணமாக நூற்றெட்டுச் சரணுகதி கத்ய வியாக்கியானம் என்பன.

**நம்பி திருவழுதிநாடு தாசர்:** இவர் பட்டர் காலத்தவர். 'இத்தேவசாதி வெறுமரையோ, உப்புச்சாறு கிளருவது எப்போதோ?' என்று கவிழ்ந்து பார்த்துக்கிடப்பதே, இவன் அழகையும் இனிமையையும் விட்டு' என்று கூறினவர். (பக். 272 காண்க).

